ஓம்.

ஓம் தத் ஸத்.

ஸ்ரீமத் ஸ்காந்த புராணத்தில் அடங்கிய

# ஸ்ரீ ஸூத ஸம்ஹிதை.

தமிழ் மொழிபெயர்ப்பு.

என். எஸ். இராஜாராமய்யரால் வெளியிடப்பட்டது.

MADRAS:
PRINTED AT THE ADDISON PRESS.

1918.

உ

பரம சிவபக்தரும்

ஈசுவர கிருபையால் கிடைத்த ஐசுவரியத்தை

சிவகைங்கரியத்தில் உபயோகிப்பவரும்

இச்சைவ நூலை வெளியிடப் பொருளுதவி செய்தவரும்

எனது அன்பருமான

கனம் ஆண்டிப்பட்டி ஜமீன்தார்

சா. ரும. மு. சித. பெத்தாச்சி செட்டியார்

அவர்களுக்கு

இம்மஹா புண்ணியம் சேர்ந்து

ஈசுவர கடாக்ஷம் உண்டாகுக.

# முகவுரை.

பரமகாருண்ய மூர்த்தியாகிய ஸ்ரீவ்யாஸபகவான் லோகோப காரமாக வேதார்த்தங்களை எளிதில் அறியும்பொருட்டு பதினெட் டுப் புராணங்களைச் செய்தார். அவைகளில் சிவபக்த சிரோமணிக ளுக்கு மிகவும் உபயோகமுள்ளது ஸ்காந்தபுராணம். இந்த ஸூத ஸம்ஹிதை ஸ்காந்தத்தில் அடங்கியது. இதில் வேதார்த்த ரஹஸ் யங்கள் மிகத் தெளிவாகவும் எளிதில் புத்திக்கு விளங்கக்கூடிய தாகவும், சைவாகமத்தை பின்பற்றியதாகவும் இருக்கின்றன. மேலும் இதன் மஹிமை, "ஜகத்குரு ஸ்ரீமத் ஆதி சங்கரர் தான் வ்யாஸ ஸூத்ர பாஷ்யம் எழுதுவதற்குமுன் இந்த ஸம்ஹித யைப் பதினெட்டுத்தடவைகள் வாசித்தாரென்ற" பரம்பரா வச னத்தால் வெளிப்படுகிறது.

நமது தென்னாட்டில் அநேகமாய் சைவ ஸமயத்தைக் கொண் டாடுகிறார்கள். இந்த ஸம்ஹிதை பெரும்பாலும் க்ராமங்கள் தோறும் வித்வான்களாலும் ஸன்யாசிகளாலும் வடமொழியி லிருந்து தமிழ் பாஷையில் உபந்யாஸஞ் செய்யப்படுகிறது. மே லும் இதற்கு வேத பாஷ்யங்கள் இயற்றிய ஸ்ரீமத் வித்யாரண்ய ஸ்வாமிகள் 'தாத்பர்யதீபிகை' யென்ற பாஷ்யமும் எழுதியிருக்கி றார்.

இத்தகைய மேன்மையான க்ரந்தத்தை, இப்பொழுது நம் மதத்தில் உண்டாயிருக்கிற கவனத்தைக் கருதியும், வடமொழி பாஷை நன்றாகத் தெரியாதவர்களின் உபயோகத்திற்காகவும் மகா வித்வானாகிய பிரமஸ்ரீ ஆர். அனந்தகிருஷ்ண சாஸ்த்ரிகள் இதைத் தமிழில் மொழிபெயர்த்து ப்ரசுரிக்கும்படி என்னைத் தூண்டிவிட்டதும் தவிர, தான் மிகச்ரமத்துடன் எழுதிவைத் திருந்த தன் மொழிபெயர்ப்பையும் என்னிடம் கொடுத்தார்.

அதை ஆதாரமாக வைத்துக்கொண்டு இம்மொழி பெயர்ப் பை வெளியிடுகிறேன்.

இதில் மூலத்தின் மொழிபெயர்ப்பு பெரு எழுத்திலும், வ்யாக்யானத்தில் உள்ளதும் மற்றும் இதர விசேஷங்கள் சிறு எழுத்திலும் அமைக்கப்பட்டிருக்கின்றன.

லோகோபகார இச்சையால் இதில் ப்ரவிருத்தித்தபடியால் வித்வான்கள் இதிலுள்ள பிழைகளை மன்னித்து இந்த க்ரந்தத்தை ஆதரிக்கக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

சிதம்பரம்,
22–6–1913.

என். எஸ். இராஜாராம்.

# ஸூத ஸம்ஹிதை

## முதல் கண்டம்.

## (சிவ மாஹாத்ம்ய கண்டம்)

### அத்தியாயம் 1.

---

(கிரந்த வரலாறு).

**1–2.** ஐச்வரமாயும், அத்விதீய தத்வமாயும், அடி, இடை கடையற்றவராயும், ஸகல உலகங்களுக்கும் ஆதாரமாயும், தான் நிராதாரமாயும், விகாரமற்றதாயும், எல்லையற்ற சுக ஞானக்கடலாயும், அற்புதமான பராக்ரமத்தை யுடையதாயும், பார்வதீ பதியாயும், ஈசானனுயுமுள்ள (சிவனை) எப்பொழுதும் நான் நமஸ்கரிக்கின்றேன்.

(இதில் 2, 3 விசேஷணங்கள் நிர்குணத்தைக் குறிக்கின்றன; 4, 5, 6 ஜகத்ரூபமாயிருப்பதைக் குறிக்கின்றன; 1, 7, 8, 9, 10 ஜகத்தை ஆளும் தன்மையைக் குறிக்கின்றன; மேற்கூறிய பத்து விசேஷனங்களே ஈசம் முதல் பிஹத் அரண்யகம் வரையுள்ள பத்து உபநிஷத்துக்களில் வரிசையாகக் கூறியுள்ள லக்ஷணங்கள் என்றறிக).

(நமஸ்காரம் மூன்றுவிதம்; ஒன்று, தாழ்ந்தபடியிலிருந்து, தேகாதி உபாதி ஞானம் அருமல், கேவலம் கர்மத்தையேகைப்பற்றிக்கொண்டு, தான் அதற்கு தாஸன் என்ற ஞானத்துடன் செய்வது. இரண்டாவது, இதற்கு சற்று உயர்ந்தபடியான பக்தி மார்க்கத்தைக் கைகொண்டு, ஜீவ ஞானம் அருமல், தான் அதின் அம்சம் என்ற ஞானத்துடன் செய்வது; மூன்ருவது, உயர்ந்தபடி என்ற ஞானமார்க்கத்தைக் கைக்கொண்டு, 'அதுதான் நான்' என்று சொல்லும்படியான ஆத்ம ஞானம் அடைந்தவன் செய்வது; இவ்விதமாக அதிகாரிக்கு தக்கபடி நமஸ்காரம் மூன்றுவிதம் என்றறிக).

**3–4.** ஸத்ர யாகத்தின் முடிவில், மிகப் பரிசுத்த இருதயத்தைபுடையவர்களும், நைமிசாரண்யத்தில் வஸிப்பவர்களுமான ரிஷிகளின் மத்தியில் மகாத்மாவாயும், ரோமஹர்ஷரின் வம்சத்

தில் உதித்தவரும் புராணங்களைச் சொல்லுகிற ஸூதர் வருவ தைப் பார்த்து, அவருக்குத் தகுந்த உபசாரங்களைச் செய்து, தெளிவான மனஸ் இந்திரியங்களுடன் கூடிய (அந்த ரிஷிகள்) இந்த புண்ய ஸம்ஹிதையை தங்களுக்குச் சொல்லும்படி ஸூத ரைக் கேட்டார்கள்.

(வெகு பெயர்களுடனும், அதிக கால கர்மங்களுடன் செய்யும் யாகம் ஸத்ரயாகம்; இசனல் சித்த சுத்தி உண்டாகும்.

நைமிஷம் என்ற காடு; அதில் யாகம் செய்யப்பட்டது; நேமி என்றால் சக்கிரம், ஷ என்றால் அவிழ்த்தல், அதாவது, மனதிலுள்ள காமக் க்ரோ தாதி முடிச்சுகள் எவ்விடத்தில் நாசஞ் செய்யப்படுகின்றனவோ அவ்விடத் திற்கு நைமிஷம் என்று பெயர்).

**5–6.** இவ்விதமாக முனி ச்ரேஷ்டர்களால் ப்ரச்னம் செய் யப்பட்ட சூதர், எல்லா அர்த்தங்களையும் அளிக்கும் மகாதேவரை யும், மகாத்மாவான வ்யாஸரையும், பக்தி பூர்வமாக த்யானித்து, தெளிந்த மனதுடன் மூனீச்வரர்களைக் கண்ணுற்று வேதார்த் தங்களடங்கிய இந்த ஸம்ஹிதையைச் சொல்லத்தொடங்கினர்.

(கண்ணுற்று—சிஷ்யர்களின் பந்த மோக்ஷத்திற்காக குருக் கள் கடாக்ஷம் ஒரு தீக்ஷை.

இந்த ஸம்ஹிதைக்கு முதலில் 'ச்ருதி ஸம்ஹிதை' என்றுந் 'ருத்திர ஸம்ஹிதை' என்றும் நாமங்கள் வழங்கிவந்தன; இந்த ஸம்ஹிதையில் ஸூதருக்கு, மிக அபிமான மிருந்தபடியால், தனது குருவான வ்யாஸர் ஆஞ்ஞைப்படி ஸூதர் பெயரால் வழங்கி 'ஸூத ஸம்ஹிதை' என்ற பெயர் வந்தது).

**7–11.** ஸூதர் சொல்லுவதாவது:—

ஹே! முனி ச்ரேஷ்டர்களே! (i) ப்ரம்ம (ii) பத்ம (iii) விஷ் ணு (iv) சிவ (v) பாகவதம் (vi) பவிஷ்யத் (vii) நாரதீயம் (viii) மார்க்கண்டம் (ix) அக்னி (x) ப்ரம்ம வைவர்த்தம் (xi) லிங்கம் (xii) வராகம் (xiii) ச்லாக்கியமான ஸ்காந்தம் (xiv) வாமனம் (xv) கூர்மம் (xvi) மத்ஸயம் (xvii) காருடம் (xviii) ப்ரம்மாண்ட

என, நான்கு லக்ஷம் கிரந்தங்களடங்கிய, பதினெட்டு புராணங்களும், காமிகம் முதலிய ஆகமங்கள் பரமசிவனுல் அருளப்பட்டது போல், (நாராயண அவதாரமாகிய) வ்யாஸரால் செய்யப்பட்டன.

(புராணங்கள்:—இவை க்ருதயுகத்தில் நூறு கோடி கிரந்தங்களடங்கினவென்றும், த்ரேதாயுகத்தில் ஒரு கோடியென்றும், பிறகு த்வாபரத்தில் வ்யாஸரால் சுருக்கி நான்கு லக்ஷமாக செய்யப்பட்டன.

இதில் மூன்று லக்ஷம் கிரந்தங்களை பத்து புராணங்களிலடக்கி பரமசிவனைக் குறித்தும், ஐம்பது ஆயிரம் கிரந்தங்களை நான்கில் அடக்கி மகா விஷ்ணுவைக்குறித்தும், இருபத்தையாயிரம் கிரந்தங்களை இரண்டிலடக்கி ப்ரமதேவனைக் குறித்தும், பன்னிரண்டாயிரத்து ஐந்நூறு கிரந்தங்களை ஒன்றிலடக்கி சூர்யனைக் குறித்தும், பாக்கியிருக்கும் பன்னிரண்டாயிரத்து ஐந்நூறு கிரந்தங்களை, பாக்கி ஒன்றில் அடக்கி அக்னி தேவனைப்பற்றியும் சொல்லப்பட்டிருக்கின்றன; இப் பதினெட்டு புராணங்களும் அச்சிட்டிருக்கிறபடியால் சற்றேறக்குறைய நான்கு லக்ஷம் கணக்கு ஸரியாயிருக்கிறது).

12–24. இப்பதினெட்டு புராணங்களை ஸத்யவதீ புத்ராாகிய வ்யாஸரிடத்தில் கேட்டு, பல முனிகளால் உபபுராணங்கள் செய்யப்பட்டன. அவைகளாவன: (i) ஸநத்குமாரம் (ii) நரஸிம்மம் (iii) நந்தி (iv) சிவதர்மம் (v) துர்வாஸம் (vi) நாரதீயம் (vii) கபிலம் (viii) மானவம் (ix) உசநஸம் (x) ப்ரம்மாண்டம் (xi) வாருணம் (xii) காளி (xiii) பரமேச்வர ஸ்வரூபமான வாஸிஷ்ட்டலைங்க்யம் (xiv) ஸாம்பம் (xv) ஸெளரம் (xvi) பராசாம் (xvii) மாரீசம் (xviii) ஸமஸ்த தர்ம ஸாதகமான பார்க்கவம்; இவ்விதமாக ஸகல ஞானத்திற்கும் இருப்பிடமாக லக்ஷக் கிரந்தங்களடங்கிய இவைகள் முனிகளால் செய்யப்பட்டன.

இப்பொழுது ச்ருதியின் பொருளடங்கிய ஸ்காந்தத்தைப் பற்றி விவரமாய்ச் சொல்லுகிறேன். இது ஐன்பது கண்டங்களடங்கிய ஆறு ஸம்ஹிதைகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது;

அவைகளாவன—(i) ஸநத்குமார ஸம்ஹிதை. (ii) ஸூத ஸம்ஹிதை, (iii) சங்கர ஸம்ஹிதை, (iv) வைஷ்ணவ ஸம்ஹிதை, (v) ப்ரம்ம ஸம்ஹிதை, (vi) ஸௌர ஸம்ஹிதை.

ஹே! பண்டித உத்தமர்களே!

| | | | |
|---|---|---|---|
| முதல் ஸம்ஹிதையில் | ... | 55,000 | கிரந்தங்களும் |
| இரண்டாவதில் | ... | 6,000 | ,, |
| மூன்றாவதில் | ... | 30,000 | ,, |
| நான்கில் | ... | 5,000 | ,, |
| ஐந்தில் | ... | 3,000 | ,, |
| ஆறாவதில் | ... | 1,000 | ,, |

அடங்கியன.

25. இப்பொழுது ஸர்வபாபங்களை நசிக்கச் செய்யக்கூடியதும், முனிகள், தேவர்கள், கந்தர்வர்களால் பூஜிக்கத்தக்கதும், வெகு சோபனமுள்ளதுமான இரண்டாவது ஸம்ஹிதையை (ஸூத ஸம்ஹிதையை)ச் சொல்லுகிறேன்.

26-27. மிக பரிசுத்தமாயும் வேத ஸ்வரூபமாயுமிருக்கிற இந்த ஸம்ஹிதை நான்கு கண்டங்களாக (பாகங்களாக) வகுக்கப்பட்டிருக்கிறது; இவைகளாவன:—(i) சிவமகான்மிய கண்டம் (ii) ஸகல வேதார்த்தத்தைச் சொல்லும் ஞானயோக கண்டம் (iii) முக்தி கண்டம் (iv) யஞ்ஞவைபவ கண்டம்.

28-30. இவைகளில், முதல் கண்டத்தில் 700 கிரந்தங்களும், இரண்டில் 737 கிரந்தங்களும், மூன்றில் 563 கிரந்தங்களும், நான்காவதில் 4,000 கிரந்தங்களும் அடங்கியுள. இதில் கடைக் கண்டமானது பூர்வபாகம், உத்தரபாகமென்று இரண்டாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது.

31-32. முதல் கண்டத்தில் 13 அத்தியாயங்களும், இரண்டில் 20 அத்யாயங்களும், மூன்றில் 9 அத்யாயங்களும், நான்கில் 67 அத்யாயங்களும் உள.

இவ்விதமாக ஸகல வேதார்த்தங்களும் இந்த ஸம்ஹிதையில் அடங்கியுள என்பதில் ஸந்தேகமில்லை.

**33.** ஸர்க்கம் (ச்ருஷ்டி), ப்ரதி ஸர்க்கம் (ஸம்ஹாரம்), வம்சம், மன்வந்தரங்கள், வம்சங்களின் சரித்திரங்கள் இவ்வைந்தும் புராண லக்ஷணங்களாம்.

(ப்ரம்மத்தினிடமிருந்து அஞ்ஞானத்தால் ப்ரபஞ்சம் எப்படி உத்பத்தியாகிறதென்றும், ஞானம் வந்தவுடன் எப்படி அது லயமடைகிறதென்றும், அந்தப் ப்ரமத்திலிருந்து உத்பத்தியான ஜீவராசிகளின் லக்ஷணங்களையும், அந்தப் ப்ரம்ம ஸ்வரூபத்தை யடைவதற்கு வேண்டிய ஸாதனங்களான ப்ரணவம், காயத்ரீ, ஹம்ஸ மந்திரம், பஞ்சாக்ஷரம் முதலிய மந்திரங்களையும், எவ்விதம் அனுஷ்டித்து அதனால் எப்படி மோக்ஷத்தை யடைந்தார்கள் என்று சொல்லுவதே புராணத்தின் லக்ஷணமாகும்).

**34.** நான்கு வேதங்களைக் கற்றும் எந்த ப்ராமணன் புருஷார்த்தங்களைத் தெரிந்து கொள்ளாமல் இருக்கிறானோ அவனைக் கண்டு வேதம், தன்னை ஸரியாக அர்த்தம் சேய்யாமல் எங்கு கெடுத்துவிடுவானோவென்று, பயப்படுகிறது.

**35–39.** ஆகையால், இதிஹாஸ புராணங்களின் உதவியைக்கொண்டு வேதத்தின் சரியான அர்த்தத்தை யறியவேண்டியது; ஸ்வபாவமாகவே, (எல்லாவிஷயங்களிலும்) வேதங்கள் முக்கியப் பிரமாணமாகும்; பின்புதான், ஹே! முனிச்ரேஷ்டர்களே! ஸ்மிருதிகளும், புராணங்களும், பாரதமும் பிரமாணங்களாகும். மற்ற வெகுவிதமான (தர்க்கம் முதலிய) சாஸ்திரங்களும், வேதத்திற்கு விரோதப்படாமலிருந்தால், பிரமாணங்களாகும்; இல்லாவிடில் ஆகா. ஹே! ப்ராமணர்களே! வேதம் ஒன்றே! அதன் அர்த்தமும் ஒன்றே!. ஆகிலும், முனி ச்ரேஷ்டர்களே! (அனுஷ்டானம் செய்பவர்களின் ஸௌகரியத்தின்பொருட்டு) அனேக சாகைகளாக (ரிக்கு முதலியவைகளாக) பிரிக்கப்பட்டிருக்கிறது; இக்காரணத்தால், வேதம் அனந்தமென்றும், அதன் அர்த்தமும் அனந்தமென்றும் விளங்குகிறது.

மேற்கூறிய தோற்றமும் (பலவென்ற தோற்றம்), வேதத்தால் அறியப்படக்கூடியவரும், க்ஷேமத்தை யளிப்பவருமான பரம

சிவனுடைய மாயையாலன்றி, வாஸ்தவத்தில் நிஜமல்ல. இதுவே ஈச்வரனுடைய அத்புத சக்தியாம்.

40. ஹே! முனிகளே! மகேச்வரர் ப்ரம்மதேவனை முதலில் ஸ்ருஷ்டித்து, தன்னிடமிருந்த வேதங்களை அவருக்குபதேசித்தார்.

41. ஸகல லோக ஸ்ருஷ்டிகர்த்தாவான ப்ரம்மா, பரமாத்மாவான ருத்திரருடைய ப்ரஸாதத்தால் ஸ்மிருதி (தர்மசாஸ்திரம்) முதலிய எல்லாவற்றையும் ஞாபகப்படுத்திக்கொண்டார் (அதாவது இவருக்கு மனதில் உதயமாயிற்று).

42–43. விச்வேச்வரரான சிவனுடைய கட்டளையின்மேல் ஜகத் ரக்ஷகரான மகா விஷ்ணுவானவர் வியாஸர் என்ற நாமங் கொண்டு, என்னுடைய குருவாக அவதரித்தார்.

பிறகு தேவர்களுக்கெல்லாம் தேவரான பார்வதீபதியின் கிருபையால் அந்த மகாவிஷ்ணுவாகிய வ்யாஸர் வேதங்களை நான்காக வகுத்தார்.

44–46. அவைகளாவன:—(i) ரிக்கு, (ii) யஜுஸ், (iii) ஸாமம், (iv) அதர்வணம். ரிக்கு வேதத்திற்கு 21 சாகைகளும் (பாகங்கள்), யஜுர் வேதத்திற்கு 101 சாகைகளும், ஸாமத்திற்கு 1000 சாகைகளும், அதர்வணத்திற்கு 9 சாகைகளும் உள. இவ்விதமாக வேதங்களை விபாகஞ்செய்ததால் அம்முனிக்கு 'வ்யாஸர்' என்ற பெயர் கிடைத்தது. (வ்யாஸர் என்றால் வகுத்துக் கொடுப்பவர்).

47. (மேலும்) மகாயோகியும், ஸர்வஞ்ஞரும், ஈசனுமான இந்த வ்யாஸர், மிக ஆச்சரியமான மகாபாரதத்தை நிர்மானித்தார்.

48–49. இவருக்கு பைலர் முதலிய நான்கு ச்ரேஷ்டமான சிஷ்யர்கள் உண்டு (பைலர், வைசம்பாயனர், ஜைமினி, ஸுமந்து). அவர்களின்பொருட்டு நான்கு வேதங்களை வரிசைக்கிரமமாக (லோகத்தில்) பரவச்செய்யும்படி ஏற்பாடுசெய்தார்.

அவர்களால் பாவச்செய்யப்பட்ட அந்த அனுதியான ச்ருதியி னுலேயே வர்ணுச்ரமங்கள், ஆசாரங்களனைத்தும் ப்ரவிர்த்திக்கின் றன.

**50.** அந்த முனியானவர் (வியாஸர்) எனக்குப் புராணங் களைச் சொல்ல கட்டளையிட்டபடியால், ஹே! முனி சிரேஷ்டர் களே! நான் புராணத்தை உங்களுக்குச் சொல்லுகிறேன்.

**51–53.** ஹே! முனிகளே! பூர்ண ச்ரத்தையுடன் கேளுங் கள்!

இவ்விதமாக ஸூதர், சொல்லியதைக்கேட்டு, நைமிசாரண்ய ரிஷிகள் ஸூதரை நமஸ்கரித்து, ச்ரத்தையுடன் பூஜை செய்தார் கள்.

அந்த ஸூதர், ஸகலஜகத்திற்கு காரணரும், க்ஷேமத்தை யளிப்பவரும், அம்பிகாபதியும், ஈசனும், அளவற்ற ஆனந்த ஞா னக் கட்டியுமான பரமேச்வரனை நெடுநேரம் த்யானம் செய்து, பக்தியால் பரவசமடைந்து ஸ்தோத்திரம் செய்ததாவது.

**54.** "ஸோமராயும் (அஷ்ட மூர்த்திகளில் ஒருவர்), ருத்ர ராயும் (பக்தர்களின் துக்கத்தைப் போக்கடிப்பவர்), சங்காராயும், மகாத்மாவாயும், ப்ரம்மா, விஷ்ணு, இந்திரன் இவர்களுடைய த்யானத்தில் உதிக்கிரவாராயும், சூலத்தையுடையவராயும், வித் வான்களுக்கு (ஞானிகளுக்கு) ஆத்மாவாயும், ஸ்வானுபவத்தால் ப்ரஸித்தராயும் ஸர்வசாக்ஷியாயுமுள்ள உம்மை நமஸ்கரிக்கின் றேன்!"

---

## அத்தியாயம் 2.

---

### (பாசுபத வ்ருதம்).

**1–4.** நைமிசீயர்கள் (ரிஷிகள்) கேள்வி:—ஹே! கற்றறிந் தவரே (ஸூதரே)! எக்காரணத்தால் இந்த ஸமஸ்தமான ஜகத் தும் பலவித தோற்றங்களை யடைந்திருக்கிறது? எக்காரணத்தால் இவ்விதம் உற்பவித்த ஜகத் அநித்யமாயிருக்கிறது?. மேலும், பசுவாயிருக்கப்பட்ட (இந்த ஜீவன்) அஞ்ஞானியானபடியால்

இந்த ஜகத்தின் ஸ்ருஷ்டிக்கு காரணமாகான். ப்ரகிருதியும் (ஜடமாயிருப்பதால்) காரணமாகமாட்டாது. ஆதலால் வேறு ஒன்று ஜகத்தின் ஸ்ருஷ்டிக்கு காரணமாயிருக்கவேண்டும். அக்காரணத்தை ஹே! புண்யரே! எங்களுக்குச் சொல்லும்.

ஸூதர் சொல்லுகிறார்:—ஓர்காலத்தில் விஷ்ணு முதலான எல்லா தேவர்களும் சேர்ந்து, ஜகத்திற்கு காரணம் எதுயென்பதை விசாரித்தும், ஸம்சயம் (தீராமல்) நிறைந்த பக்தியுடன் மிகச் சுகத்தை யளிப்பவரும், சுத்தமாயுமுள்ள ருத்ரலோகத்தை (கைலாயத்தை) யடைந்தார்கள்.

5 ஹே! ப்ராமணர்களே! இவர்களின் மத்தியில், ஸம்ஸார துக்கத்தை நீக்குகிறவராயும், பரம காருண்யராயுமான மகாதேவரான ருத்ரமூர்த்தி தானுய் ஆவிர்பவித்தார் (தோன்றினர்).

6. விஷ்ணுமுதலிய தேவர்கள் (திடீரென்று தோன்றினபடியால்) இதுவரையிலும் பார்க்கப்படாமலிருந்த அந்த மகா தேவரைப் பார்த்து, நமஸ்கரித்து, 'நீர் எவர்'? யென்று கேட்டார்கள்.

7. அதற்கு அந்த ருத்ரபகவான் மறுமொழியளித்ததாவது:—"பசுக்களுக்கு (ஜீவராசிகளுக்கு) பதியாயும், ஈசுவரராயும், ஸர்வஞ்ஞராயும் தத்வங்களுக்கெல்லாம் தத்வமாயும், ஸனுதனராயும் உள்ளவன் நான்!"

8. "நான் ஜகத்தின் ஸ்ருஷ்டி கர்த்தாவாகிய ப்ரமதேவனைக்காட்டிலும் ஈச்வரனுயுள்ளவன். அப்படியே யிருக்கிறேன்; இருக்கவும் போகிறேன். என்னைத்தவிற வேறு யாதொருபதார்த்தமுங் கிடையாது."

9. "இந்தச் சராசரமான ஜகத் என் மாயாசக்தியால் சேர்க்கப்பட்டிருக்கிறது. (அதுவும் யோஜித்துப்பார்த்தால்) என்னைக் காட்டிலும் வேருக, பரமார்த்தத்தில், இல்லை."

10. "இவ்விதமாக என்னை வேத வாக்கியங்களால், ஆசாரியன் மூலமாக, எந்தப் பசு (ஜீவன்) அறிந்துகொள்ளுகிறுனே,

அவன் அந்த வேதாந்த வாக்கியங்களால் உண்டாகும் ஞானத்தினால் மோக்ஷமடைகிறான்.''

**11.** ருத்ர பகவான் இவ்விதம் சொல்லிவிட்டு தனது ஸர்வ வ்யாபகமான ரூபத்தையடைந்தார். (அந்தர்தானமடைந்தார்). அதன் பிறகு விஷ்ணு முதலிய தேவர்கள் அந்த ருத்ரரை பார்க்கவில்லை.

**12.** அதர்வ சிரஸாலும் (34 மந்திரங்களடங்கிய அதர்வ வேத உபநிஷத்தாலும்), அனேகவிதமான மந்திங்களாலும் (ஸ்ரீ ருத்ர ஸூக்தம் முதலியவை), பஞ்சாக்ஷரத்தாலும், கரங்களை தலைக்குமேல் கூப்பிக்கொண்டு, இந்த ருத்ரதேவரை தேவர்கள் ஸ்தோத்தரித்தார்கள்.

**13–18.** மறுபடியும், ஹே! முனிச்ரேஷ்டர்காள்! ஸாக்ஷாத் பரமசிவஞானத்தை யடையும்பொருட்டு, அக்னிஹோத்ரத்திலுண்டான பஸ்மத்தை, ச்ரத்தையுடன் எடுத்து, சுத்தமான பாத்திரத்தில்வைத்து ஜலத்தால் கால்களைக்கழுவி, இருமுறை ஆசமனம் செய்து, பவித்திரத்துடன், ஸமாதான மனதுள்ளவர்களாய், 'ஓம் ஆம்' என்று துவக்கப்படுகிற மந்திரம் முழுவதையும் உச்சரித்து, ஜலத்திற்கு அபிமான தேவதையான விஷ்ணுவைத் தியானஞ் செய்து, பிறகு, அந்த பஸ்மத்தை யெடுத்து, ஜலத்தில் குழைத்து, 'அக்னிரிதி பஸ்மம்' என்ற ஜாபாலோப நிஷத்திற் கூறிய ஏழு மந்திரங்களால், சாந்தமனதுடன், சுத்தர்களாயும் பரமசிவன் உமை இவர்களைத் தியாநித்து, உச்சிமுதல் உள்ளங்கால் வரையிலும் பூசி, பிர்மரூபமாக பாவித்திருக்கிற வெண்ணிறமான அந்த பஸ்மத்தால் நெற்றியிலும், மார்பிலும், வயிற்றிலும், இரண்டு தோள்களிலும், பிர்மா விஷ்ணு சிவாத்மகமாயுள்ள திரிபுண்டர தாரணஞ் செய்தார்கள்.

**19–21.** இவ்விதமாக அதர்வசிரஸ் என்ற உபநிஷத்திற் கூறிய விருதத்தைக் கொண்டாடி, சாந்தர்களாயும், தாந்தர்களாயும், விரக்தர்களாயும், கர்மங்கள் அனைத்தையும் விட்டுவிட்டு, இருதயபத்மகர்ணிகா மத்தியில் ரோமத்தின் நுணிபோல அதி ஸூக்ஷ்மமாயும், கூர்மையாயும், ஜகத்திற்கு ஈசனாயும், ஸ்வயம்

பிரகாசனும், சர்வஞ்ஞராயும், சர்வகர்த்தாவாயும், எல்லாவற்றிற்கும் ஆதாரமாயும், ஆச்சர்யகரமாயுமுள்ள ஈச்வரனை, பிரணவமந்திரத்தாலேயே பூஜித்தார்கள்.

**22–33.** பின்பு, அவர்களுக்கு பிரஸாதம் அளிக்கும்பொருட்டு, பசுபதியாயும், ஈசனும் உமையை பாதிசரீரமுள்ளவராயும், சந்திரசூடனும், நீலகண்டனும், நிராதாரனும், நிர்மலனும் துக்கமற்றவனும், பிர்மா, விஷ்ணு, ருத்ரர்களால் உபாஸிக்கத்தக்கவராயுமுள்ள பரமேச்வரனும், உள்ள சம்ஸாரபந்தத்தை போக்கடிக்கிறவர் (சிவன்), இவர்கள் முன்னல் தோன்றினர். ஸர்வஸாக்ஷியாயுள்ள எந்த ஸ்வரூபத்தை, வேதாந்தங்களால், எல்லோரும் பார்கிறார்களோ, அந்த சங்கரனை தேவோத்தமர்கள் எல்லோரும் பார்த்தார்கள். எது ச்ரௌதஸ்மார்த்தாசாரமில்லாத துர்நடத்தையுள்ளவர்களால் பார்க்கமுடியாதோ, அந்த ரூபத்தை இந்த தேவர்கள் பார்த்தார்கள். எதை யடையும்பொருட்டு, திவஜர்களால் சாந்தமனதுடன் வேதம் ஓதப்படுகிறதோ, அந்த ருத்திரரை இந்த தேவர்கள் பார்த்தார்கள். எதை ச்ரத்தையுடன் திவிஜோத்தமர்கள் பூஜிக்கிறார்களோ, அந்த உத்கிரிஷ்டமான தேவனை தேவர்கள் பார்த்தார்கள். பாபத்தை தஹிக்க யோகிகள் எந்த ஈசனை பார்க்கிறார்களோ, ஆனந்த ரூபியாயுள்ள அந்த ஈசனை தேவர்கள் பார்த்தார்கள். எவனுடைய பிரஸாதத்தால், பகவானன விஷ்ணு ஸமஸ்த ஜகத்திற்கு அதிபதி ஆயினரோ, அப்படிப்பட்ட ஈசனை தேவர்கள் பார்த்தார்கள். எவனுடைய பிரஸாதத்தால் பிர்மா ஸமஸ்த லோகத்திற்கு சிருஷ்டி கர்த்தா ஆயினரோ, அந்த ஸத்யமாயுள்ள ஈசனை இவர்கள் பார்த்தார்கள். பின்பு, தேவர்கள் சர்வபலத்தாயகராயும் ஸம்ஸாரமென்ற ரோகத்திற்கு மருந்தாயும் இருக்கிற ஸாம்பனை, ஆழ்ந்த கண்டத் தொனியுடன் ஸ்தோத்திரம் செய்தார்கள். பின்பு மகாதேவரான ஸாம்பர் தேவர்களால் ஸ்தோத்திரம் செய்யப்பட்டு எல்லா தேவர்களையும் பார்த்து (சொல்லுகிறார்).

**34–39.** (எல்லா தேவர்களையும் பார்த்து) 'ஸந்தோஷத்தை யடைந்தேன்' என்று கூறினர். மறுபடியும், விஷ்ணுமுதலான

தேவர்களைப்பார்த்து, கருணாநிதியான பகவான் கம்பீரவாக்குடன் சொன்னதாவது:—

"நான்தான் உயர்ந்த தத்வம்; ஜகத் என்னிடமிருந்து உண்டாகிறது; என்னிடமே யிருந்து லயமடைகின்றது. எனக்கு ஒப்பு, உயர்வு ஒருவருமே எப்பொழுதும் இலர்; என் ஸ்வரூபத்தைத் தெரிந்தால் மாத்திரமே அஞ்ஞானம் நீங்கும்; என்னுடைய விஷயமாயுள்ள ஞானம், வேதாந்த ச்ரவணத்தாலேயே முமுக்ஷுவாயும், விருதானுஷ்டானம் செய்பவனாயும், சாந்தனாயும், மகாத்மனாயும், ஸமஸ்தகாமங்களை விலக்கினவனாயும், பரமசிவத்தியானஞ் செய்கிறவனாயும், எக்ஞம், தானம் முதலியவைகளால் மகாபாபம் என்கிற சமுத்திரத்தைத் தாண்டினவனாயு முள்ளவனுக்கு உண்டாகும். இப்படி எவன் ஒருவன் என்னை அறிகிறானோ அவனே ஸகலத்தையும் அறிகிறான். வேறொருவரும் அறியமாட்டார்கள். இவ்விதமாக உங்களுக்கு ஹே ! தேவர்களே ! வேதாந்தஞானம் உபதேசிக்கப்பட்டது. பாசுபதவிருதம் (முன்னால் சொல்லப்பட்ட விருதம்) எந்த த்விஜ ச்ரேஷ்டர்களால், சிரத்தையுடன்செய்யப்படுகிறதோ, அவர்களுக்கே (வேதாந்த) உபதேசஞ் செய்யவேண்டுமென்பது சாஸ்திர சம்மதம்."

**40–43.** ஸூதர்—இவ்விதமாக பகவான் சொல்லிவிட்டு, அந்தர்தானம் (மறைவு) அடைந்தனர். பிறகு தேவர்கள், தேவாதிதேவனுடைய மகிமையை அறிந்து, அவர்தான் ஜகத்திற்கு காரணமென்று கசடறத்தெரிந்துகொண்டார்கள். ஆகையால் நீங்களும், ஹே! பெரியோர்காள்! ஸர்வக்ஞான பரமேச்வரனை ஜகத்திற்கு காரணம் என்று தெரிந்து, உபாஸியுங்கோள். ஸர்வ ஜகத்திற்கும் காரணனாயும், உமாபதியாயும், சந்திரசேகரனாயும் இருக்கிற ஈசன், பிரஸாதம் அளிக்கவேணுமென்ற எண்ணத்துடன், பிர்மா, விஷ்ணு முதலானவர்களை முன்னிட்டு உங்களுக்குப் பிரஸன்னமாவார்.

**44–45.** இவ்விதமாக நைமிசாரண்ய வாஸிகளான மகாத்மாக்கள், மகாதேவருடையவும், பாசுபதவிருத மகான்மியத்தைக்

கேட்டு, ஸந்தோஷ சித்தத்துடன், எல்லா வேதாந்த அர்த்தங்க ளுக்கு மிருப்பிடமாயுள்ள மகாத்மாவான சூதுரை நமஸ்கரித்து, ஞானத்தை யடையும்பொருட்டு பக்தியால் பூஜித்தார்கள்.

---

## அத்தியாயம் 3.

---

(நந்தீச்வர விஷ்ணு ஸம்வாதம்.—ஈச்வரத்தன்மை பிரதிபாத னம்).

**1–2.** நைமிசாரண்யவாஸிகள்.—ஹே! பகவான்! எல்லா விஷயங்களையும் யறிந்த பெரியவரே! எவர் (எந்த தேவர்) போ கத்தின் பொருட்டும் மோக்ஷத்தின் பொருட்டும் ஸமஸ்த தேவர் களாலும், அஸுர, ஸித்த, கின்னர, முனி, யக்ஷ, கந்தர்வ மற் றும் எல்லா ஜந்துக்களாலும் பூஜிக்கப்படுகிறாரோ அவரை எங்க ளுக்குச் சொல்லும்.

(சில தேவர்கள் போகத்தை மாத்திரம் அளிப்பார்கள்; சிலர் மோக்ஷத் தை மட்டும் கொடுப்பார்கள்; முன்னர் போகத்தையும், கிரமமாக மோக்ஷத் தையும் கொடுக்கும் தேவர் பரமசிவன் என்று கருதி இந்த கேள்வி கேட் டார்கள்).

**3.** ஸூதர் சொல்லுகிறார்:—ஹே! மஹாபுத்திமான்களே! முனிச்ரேஷ்டர்களே! நல்லது, நல்லது. ஜகத்திற்கு உபயோக முள்ள விஷயம் உங்களால் கேட்கப்பட்டது; அதை (போகத்தை யும், மோக்ஷத்தையும் தரும் தேவரை) உங்களுக்குச் சொல்லுகி றேன்; ச்ரத்தையுடன் கேளுங்கள்.

**4.** முன்னொரு காலத்தில், ஜகந்நாதராயும், புராதனராயும், புருஷோத்தமருமான விஷ்ணு ஸாக்ஷாத் பரமாத்மாவான சிவனு டைய மாயையால் மோகிக்கப்பட்டார்.

**5–6.** தானே ஜகத் கர்த்தாவென்றும், தன்னிடத்திலே ஜகத் இருக்கிறதென்றும், தனக்கு ஒப்பு உயர்வு ஒருக்காலும் இல்லையென்றும், தன் சக்திவிலாஸமே சராசரமாயுள்ள ஸமஸ்த ஜகத் என்றும், தானே எல்லா ஜந்துக்களால் எப்பொழுதும் பூஜிக்கத் தக்கவர் என்றும் (எண்ணங் கொண்டார்).

**7–11.** இவ்விதம் அகங்காரத்தால் மூடப்பட்டு அந்த விஷ்ணு, தன் ஸ்வரூபமாயும், அம்பிகாபதியாயும், அளவற்ற ஆனந்த சைதன்ய கட்டியாயிருக்கிற மஹேச்வரனை அறியாமல், பிரம்மாதி எல்லா தேவர்களை ஆழ்ந்து கட்டளையிட்டார்.

உடனே மகாதேவராயும், ஸர்வாத்மாவாயும், எல்லாவற்றையும் பிரகாசிப்பவருமான சங்கரர், விஷ்ணுவின் சக்தியை தான் இழுத்துக்கொண்டு, அவரை மோகப்படுத்தினர்; பிறகு விஷ்ணுவை முன்னிட்டு பிரம்மா முதலிய எல்லா பசுக்களும் அதிகமாக சம்புவின் மாயையால் மோகிக்கப்பட்டு ஸ்வதந்திரத்தை இழந்தார்கள்.

இச்சமயத்தில், சங்கர பக்தராயும், எல்லா ஞானத்திற் கிருப்பிடமாயும், கருணாநிதியாயுமுள்ள ஸ்ரீமான் நந்தி (இவர்களிடம்) வந்து, பிரம்மா, விஷ்ணு முதலான எல்லா தேவர்களையும் பார்த்து, சிவனுடைய பரமமான நிஜரூபத்தை உபதேசிக்கத் தொடங்கினர்.

**12–20.** நந்திகேச்வரர் சொல்லுகிறார்.—ஹே! விஷ்ணு! ஸமஸ்த ஜகத்திற்கு நாதராயும், பரமேச்வரராயும், ஸர்வ ஸாக்ஷியாயும், மஹா ஆநந்தராயும், ஸர்வாத்மாவாயும் இருக்கிறவர் சங்கரர் (ஒருவரே); அவரே எல்லா ஜந்துக்களுக்கு ஆத்மாவாயும், எல்லாவற்றையும் பிரகாசிப்பவராயும் இருக்கிறார். அவருடைய பிரஸாத லேசத்தின் திணையளவால் விஷ்ணுபதம் என்ற ஸ்தானத்தை நீர் அடைந்திருக்கிறீர் அன்றி வேறு காரணத்தால் அடையவில்லை. இன்னும் மற்ற தேவர்களுடைய ஸ்தானங்களும் அவ்விதமே இவருடைய பிரஸாதத்தால் அடையப்பட்டிருக்கின்றன; இவர் அன்றி ஜகத் ஸ்வயமாய் (ஸ்வதந்திரமாய்) நிலைபெறவில்லை. இவரே எல்லா வஸ்துக்களையும் எப்பொழுதும் போஷிக்கிறவர்; இவர்தான் எல்லாவற்றையும் படைத்தவர்; எவ்விதம் அக்னியின் சேர்க்கையால் இரும்பு சூட்டையும் பிரகாசத்தையும் அடைகிறதோ, அப்படிப் போல இவராலேயே எல்லா ஜகத்தும் ஸ்திதியையும், பிரகாசத்தையும் அடைகிறது. இவருடைய ஆனந்தத்தின் ஓர் லேசத்தை

எல்லா பூதங்களும் அடைந்து அதிக சந்தோஷமடைகின்றன. ஹே! பிரம்ம வித்துக்களே! இவருடைய ஆக்ஞையின் லேசத்தால் ஜகத் நித்யம் சரிவர நடைபெற்று வருகிறது.

இத்தகைய ஆத்ம ஸ்வரூபியா யுள்ளவரை நீர் அறியாமல், அதிக மோகத்தையும், கர்வத்தையும் அடைந்தவராயினீர்! உம்மால் ஜகத்தும் அவ்விதம் ஆயிற்று. ஆகையால் அந்த மோகத்தைத் தள்ளிவிட்டு, உம்முடைய ஆத்மாவாயும், மஹேச்வராயுமுள்ள அந்த உமாபதியை, மற்றதேவர்களுடன் சேர்ந்து, ச்ரத்தையுடன் பூஜைசெய்யும்.

**21–22.** ஸூதர் சொல்லுகிறார்.—ஹே! முனிகளே! இவ்விதமாக சங்கரபக்தரான நந்திகேச்வரர் உபதேசஞ் செய்துவிட்டு ரதத்தில் ஏறி கைலாஸம் சென்றார். பிறகு பிரம்மா, விஷ்ணு முதலான எல்லா தேவர்களும், பக்தியுடன், எல்லாவற்றிற்கும் பெரியவராயும், ஸர்வ ஸாக்ஷியாயும், மஹரிஷியாயும் (எல்லாவற்றையும் தானே பார்க்கிறவர், ஸர்வக்ஞர்) உள்ள ருத்திரமூர்த்தியை பூஜித்தார்கள்.

**23.** அவ்விதமே லக்ஷ்மீ முதலான தேவிகளும், மற்றும் எல்லா ஜந்துக்களும் கறுப்பும் தங்கவர்ணமும் உள்ள அந்த ஈச்வரனை பூஜித்தார்கள். (கண்டத்தில் விஷம் தரித்திருப்பதால் கறுப்பு வர்ணமும், இடது பக்கத்தில் உமாதேவியிருப்பதால் ஸ்வர்ண வர்ணமும் காணப்படுகிறது).

**24.** பிறகு, விருஷபத்திலேறிக்கொண்டு, அம்பிகாபதியும், ஸர்வக்ஞருமான சங்கரர் இவர்களுக்கு முன்பாக தோன்றினர்.

**25–26.** ஹே! பிரம்மவித்துக்களில் ச்ரேஷ்டர்களே! பிரம்மா விஷ்ணு முதலான எல்லா தேவர்களும் பசுக்களுக்கெல்லாம் பதியான அந்த ஈசனைப்பார்த்து கட்டைபோல் பூமியில் விழுந்து தண்டம் செய்து, தலையில் கைகளைக் கூப்பிக்கொண்டு, தெளிந்த இந்திரிய மனத்துடன், புக்தியையும் முக்தியையும் கொடுப்பவ

ரும், ஸம்ஸார வியாதிக்கு மருந்தாயுமுள்ள ஈசனை பக்தியுடன் ஸ்தோத்திரம் செய்தார்கள்.

**27–48.** தேவர்கள் (ஸ்தோத்ரம்) சொல்லியதாவது.—தேவ தேவனுயுள்ள உமக்கு நமஸ்காரம்; ஹே! கருணைக்கடலே உமக்கு நமஸ்காரம்; எல்லா ஜந்துக்களுக்கும் புக்தி முக்தி பலத்தைக் கொடுக்கிறவரே உமக்கு நமஸ்காரம். (இவ்விதம் அடியில்கண்ட விசேஷனங்களைச் சொல்லி, 'உமக்கு நமஸ்காரம்' என்று சேர்த்துக்கொள்ளவேண்டியது). எல்லா உகத்திற்கும் சிருஷ்டி, இருப்பு, ஸம்ஹாரத்திற்கு காரணமாயிருக்கிறவரே; ஸம்ஸாரத்தில் பயத்தை யடைந்தவர்களின் பயத்தை நாசஞ் செய்கிறவரே; பிராமண சிரேஷ்டர்களால் வேதம், வேதாந்தம் மூலமாய் அறியத் தகுந்தவரே; சூலத்தை கையில் உடையவரே; காத்தில் அக்னியை உடையவரே; விச்வத்திற்கு நாதராயிருப்பவரே; விச்வத்திற்கு காரணமானவரே; நீலகண்டரே; கஜத்தோலை வஸ்திரமாக உடையவரே; சந்திர, சூர்ய, அக்னி, ஜலம், பூமி, வாயு, ஆகாசம், ஆத்மாவான (எட்டு) மூர்த்திகளோடு கூடியவரே; ஸத்ய ஸ்வரூபராயும், அஸத்ய ரூபராயும்; ஞான, அக்ஞான ரூபராயும்; ஸாகாஸாக ரூபராயும்; பூர்ண பூர்ண ரூபராயும்; பிரம்ம ரூபராயும், அப்பிரம்ம ரூபராயும்; ஜீவ ரூபராயும், ஜீவனில்லாத ரூபராயும்; பிரகாசராயும், அப்பிரகாசராயும்; சப்த ரூபராயும், அசப்த ரூபராயும்; ஸ்பர்ச ரூபராயும், அஸ்பர்ச ரூபராயும்; ரூபமுள்ளவராயும், அரூபராயும்; ரஸரூபராயும், ரஸமில்லாத ரூபராயும்; கந்த ரூபராயும், அகந்த ரூபராயும்; தேக ரூபராயும், தேகமற்ற ரூபராயும்; பிராண ரூப்ராயும், அப்பிராண ரூபராயும்; (ஞானேந்திரியங்கள் ஐந்தான) மெய், வாய், கண், மூக்கு, செவி ரூபராயும், இவை அற்றவராயும், (கர்மேந்திரியங்களான) வாக், பாதம், கை, பாயு, உபஸ்த ரூபராயும், இவை அற்ற ரூபராயும்; மனே ரூபராயும், அசித்த ரூபராயும்; அளவு (பிரமாணம்), அளக்கத்தகுந்தது, அளக்கிறவர், அளக்குந்தண்மை ரூபராயும், எல்லாமற்ற ரூபராயும் இருக்கிற உமக்கு நமஸ்காரம்.

ஹே! மஹாதேவ! (எங்களை) ரக்ஷிக்க! ரக்ஷிக்க! ஹே! கருணைக் கடலே! பக்தர்களின் ஹிருதயத்தில் வஸிப்பவரே! பிரம்மா விஷ்ணு சிவஸ்வரூபரே! (எங்களை) மன்னிக்கவும்!.

49. ஸூதர் சொல்லுகிறார்.—இவ்விதமாக பிரம்மதேவர் முதலியவர்கள் ஸ்தோத்திரம் செய்து, தண்டஞ்செய்து, பரமசிவனிடத்தில் வைத்த பக்தியால் பரவசமடைந்தார்கள்.

50–51. தேவர்களுக்கெல்லாம் தேவராயும், ஸமஸ்தபூதங்களுக்கும் நன்மை செய்வதில் கருத்துள்ளவராயும், உமாபதியுமான ஈசன் பரவசமான தேவர்களை அனுக்கிரஹஞ்செய்து, அவர்களின் முன்பு நர்த்தனஞ்செய்து, தன்னுடைய உயர்ந்த நர்த்தன பாவத்தை காட்டும்பொருட்டு, பிரம்மா விஷ்ணுமுதலான தேவர்களுடன், வியாக்ரபுரம் என்ற சிதம்பர க்ஷேத்ரத்தை யடைந்தார். (நர்த்தன பாவம் என்பது சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், புக்தி, முக்தி இவ்வைந்தும் தன்னிடமிருப்பதை காட்டும்படியான ஓர் குறிப்பு).

52. ஹே! ரிஷிகளே! அவ்விடத்தில் எல்லா தேவர்களும், அகிலேசரும், புக்தி முக்தி அளிக்கும் ஈசனுடைய நர்த்தனத்தை சிரத்தையுடன் பார்க்கும்பொருட்டு, சென்று வஸித்தார்கள்.

53. நீங்களும், ஹே! முனிகளே! மஹாதேவரின் பிரஸாதம் அடைய பக்தியுடன் கருணாகரரான மஹா தேவனைப் பூஜியுங்கோள்!

54–55. (இவ்விதம்) நைமிசாரண்யத்தில் தவஞ்செய்து கொண்டிருந்த முனிகள் கேட்டு, தங்கள் ஆத்மாவிற்கு நன்மை செய்த ஸூதரை நமஸ்கரித்து, உமாபதியான சங்கரரே தேவர்களுக்கெல்லாம் (மேலான) தேவர் என்றும், எல்லா ஜந்துக்களால் அவரே எப்பொழுதும் பூஜிக்கத்தக்கவர் என்றும் அறிந்தார்கள்.

56. அவர்களுடைய சிஷ்யர்களும், சிஷ்யர்களின் சிஷ்யர்களும், மற்றுமெல்லா ஜந்துக்களும் மஹாதேவரே எப்பொழுதும், எல்லோராலும் பூஜிக்கத் தகுந்தவர் என்று அறிந்தார்கள்.

---

## அத்தியாயம் 4.

---

### (ஈச்வர பூஜை விதானம்).

---

1. நைமிசாரண்யவாஸிகள் கேட்டதாவது.—ஹே! பெரியோரே! தேவதேவராயும், சூலத்தையுடையவருமான நீலகண்டருடைய, புக்தியையும் முக்தியையும் கொடுக்கத்தக்க பூஜை விதியை, கிருபைகூர்ந்து, எங்களுக்குச் சொல்லுங்கள்.

2–12. ஸூதர் சொல்லுவது.—ஹே! பிராமணர்களே! புக்தியையும், முக்தியையும் அளிக்கும் பூஜாவிதியை நான் உங்களுக்குச் சொல்லுகிறேன். முதலில், சிரத்தையுடன் ச்ருதி ஸ்மிருதிகளிற் கூறிய (நித்ய) கர்மங்களைச்செய்து, ஸ்நாநம் (விபூதிஸ்நாநம்) செய்து, சுத்தமாயும், ஸமமாயும், கோமயத்தால் சுத்தி செய்யப்பட்டவிடத்தில், விசாரமற்று மௌனமாக வடக்கு முகமாக உட்கார்ந்துகொண்டு, ஹே! பிரம்மவித்துக்காள்! விசித்திரமான ஆஸனத்தில் அகஸ்த்ய சாஸ்திரத்தால் கூறப்பட்ட சிவலிங்கத்தை வைத்து, சாந்த மனஸுடனும் சிரத்தையுடனும் இருதயத்திலிருக்கிற ஈசனை ஓம்கார மந்திரத்தால் அந்த லிங்கத்தில் ஆவாஹனஞ்செய்து, பிறகு, பிரணவ மந்திரத்தாலும், பஞ்சாக்ஷரமந்திரத்தாலும் அர்க்கியம், பாத்யம், ஆசமனம் கொடுத்து, 'ஆபோஹிஷ்டா' என்கிற மந்திரத்தாலும், புருஷ ஸூக்தம், பஞ்சாக்ஷரம் என்கிற மந்திரங்களாலும் (மூலத்தில் 'ச'பதம் இருப்பதால் ருத்ரம் முதலானதும் சொல்லவேண்டியது) மஹாதேவ லிங்கத்திற்கு அபிஷேகஞ்செய்து, மறுபடியும் ஆசமனம் கொடுத்து, ஆஸனத்தில் எடுத்துவைத்து, பிரணவ மந்திரத்தால் சிரத்தையுடன் வஸ்திரம் தரித்து, பிறகு எக்ஞோபவீதம் (பூணூல்) ஆபரணங்கள் (விபூதி ருத்ராக்ஷம் முதலியவை) இவைகளைச் சாற்றி, கந்தம், புஷ்பம், தூபம், தீபம் இவைகளையும் கொடுத்து, பின்பு பிரணவத்துடன் கூடிய பஞ்சாக்ஷர மந்திரத்தால் ஜலத்துடன் நைவேத்யம் வைத்து, மறுபடியும் ஆசமனம் கொடுத்து,

லவங்கம் முதலிய வாஸனுதிரவியங்களுடன் தாம்பூலம் ஸமர்ப்பித்து, பிறகு புஷ்ப ஹாரம், சந்தனப் பூச்சுமுதலிய உபசாரங்களை கொடுத்து, பூமியில் நமஸ்கரித்து, லௌகிக வைதிக ஸ்தோத்திரங்களால் ஸ்துதித்து, பிரணவத்தால் ஸர்வக்ஞராயும், ஸர்வ காரணராயுமுள்ள மஹாதேவ லிங்கத்தை இருதயத்தில் விஸர்ஜனம் செய்யவேண்டும். (லிங்கத்தில் ஸ்திரலிங்கமென்றும் சர லிங்கமென்றும் இரண்டுவிதமுண்டு; அதில் சரலிங்கத்தில் மிருத்திகை, கோமயம், ஸ்படிகம், இரத்னம், பாணம், ரஸம் இவைகளால் செய்யப்பட்ட பலவிதங்கள் உள; பூஜைக்கு ரஸலிங்கம் மிக ச்லாக்யமானது. ஸாதாரண கற்களைக்காட்டிலும் பாணலிங்கம் நான்கு ஐந்து மடங்கு நிறையுள்ளதாயிருப்பது பாணலிங்கத்தின் லக்ஷணம்).

**13.** பிரம்மாசாரி, கிரஹஸ்தன், வானப் பிரஸ்தன் இம்மூன்று ஆச்ரமத்தி லுள்ளவர்கள் உமாபதியான சிவலிங்கத்தை தினந்தோறும் பூஜிக்கவேண்டும். (விருதானுஷ்டானம் செய்பவர்கள் ஆறு காலமும், இருவேளை போஜனஞ் செய்பவர்கள் இரண்டு காலமும், ஒருவேளை போஜனஞ் செய்பவர்கள் ஒரு காலமும் பூஜிக்கவேண்டும்).

**14.** ஸந்யாஸி பிரணவத்தாலேயே அந்த ஈசனை பூஜை செய்யவேண்டும்; ஸ்திரீகள் 'நம:' என்கிற சப்தத்தைக் கடையில் கூடிய பஞ்சாக்ஷரத்தால் (சிவாயநம:) பூஜைசெய்து வரவேண்டும் என்ற விதி ஏற்பட்டிருக்கிறது.

**15–16.** விரக்தர்களாயுள்ள சூத்ரர்களுக்கும் ஸ்திரீகளுக்கு கூறியவிதம் பூஜை விதி ஏற்பட்டிருக்கிறது. ஹே! முனிச்ரேஷ்டர்களே! மற்றெல்லா மனிதர்களுக்கும் (சங்கர ஜாதிமுதலானவர்களுக்கு) தேவாலயத்தை நோக்கி நமஸ்காரஞ்செய்வதே அவர்களுக்கு பூஜையாகும்; மேற்கூறிய விதங்களால் எவர்களால் பூஜிக்கப்படுகிறதோ அவர்களுடைய ஜன்மம் ஸபலமாகும்.

**17–19.** பூஜையினுல்தான் மனிதன் புக்தியையும், முக்தியையும் அடைகிறான். (இவ்விஷயத்தில் அடியில்கண்ட ஒரு கதை

சொல்லப்படுகிறது). முன்னொரு காலத்தில் மனிதர்களுக்குள் வெகு கெட்டவனும், மஹாபாபியுமான ஸுமந்து என்றபெயரை யுடைய ஒரு புல்கஸன் (சூத்ரனால் க்ஷத்திரிய ஸ்திரீக்குப் பிறந்த வன்) கோ பிராமணஹத்தி செய்து, பிராணிகளை ஹிம்ஸித்து, வழிப்பறிசெய்து, இரக்கமன்றி, பூமியில் தன்னிஷ்டப்படி ஸஞ்ச ரித்துவந்தான். இவனுக்கு வேச்யாபதியான ஒரு பிராமண னுடைய ஸ்நேகம் கிடைத்தது.

20. அந்த புல்கஸன் இப்பிராமணனுக்கு தனம் உதவி செய்தான்; அதனால் ஸந்தோஷமடைந்து அப்பிராமணன் இவ னுக்கு நல்ல புத்தியைக் கொடுத்தான்.

21. பிராமணன்.—ஹே! நண்பனே! துர்புத்தியுடையவ னே! இரக்கமற்றவனே! உன்னால் அளவற்ற பாபங்கள் செய்யப் பட்டு வருகின்றன. ஹே! மூடா! இதற்கு பலன் மிக அனுபவிக் கப் போகிறாயே!

22-30. இவ்விதமாக பலதடவைகளில் புல்கஸனை நோக் கிச் சொல்லிவந்தான். அந்த அந்தணனுடைய புத்திமதிகளை அடிக்கடி செவியுற்றதினால், சிலகாலஞ் சென்றபின், அவ்வயோ க்யனான புல்கஸன், ஜன்மாந்திரங்களில் செய்த புண்ணியவசத் தால், பரிதாபமடைந்து, அவ்வேதியனை நமஸ்கரித்து கேட்டான்.

புல்கஸன்.—ஹே! பிராமண நண்பனே! அநேக கொடிய பாபங்கள் பலதடவைகளில் என்னால் செய்யப்பட்டிருக்கின்றன; இவ்வுலகத்தில்அயோக்யனும் இரக்கமற்றவனும் இருக்கிறேன். நான் யாதுசெய்வேன்! இப்பொழுது என் மனஸில் அதிகபயம் உண்டாயிருக்கிறது.

பிராமணன்.—போதும், போதும், நீ சொல்வது ஸரியே! உனக்கு க்ஷேமம் உண்டாகும் வழியைக் கூறுகிறேன்; கேள்! பூமியில் புராதனமாயும், பரிசுத்தமாயும், முனிகள், ஸித்தர், கந் தர்வர்கள், தேவர்கள் இவர்களால் ஸேவிக்கப்பட்டதாயும், வியா க்ரபுரம் (சிதம்பரம்) என்ற ஒரு புண்ய க்ஷேத்ரத்தில் உமாபதி

நர்த்தனஞ்செய்து வருகிறார். பக்தியுடன் அவ்விடம் சென்று, சாந்த மனஸுடன், காலையில் ஸ்நாநஞ்செய்து, தூரத்திலிருந்து தப்ரஸபையை (அதி சூக்ஷ்மமான சித்ஸபை) நோக்கி தண்டம் ஸமர்ப்பித்து, அவ்விடத்திலுள்ள யோகிகள் (ஞானிகள்) போகிகள், கர்மிகள் முதலியவர்களுக்கு நீ ஸம்பாதித்த தனம் முழுவதையும் தானஞ்செய்தால் பாபம் நசித்துப்போகும். (கொஞ்சமேனும் தனம் பாக்கியானால் ஒருக்காலும் பாபம் போகாது என்பது குறிப்பு). உனக்கு மறணகாலம்வரையில் அவ்விடம் வஸி.

31. ஸூதர்.—இவ்விதமாக அந்த பிராமணனால் கூறப்பட்டதைக் கேட்டு அந்த நீசனான புல்கஸன் பரிசுத்தமான வியாக்ரபுரத்தை, சிரத்தையுடன், அந்த அந்தனனுடன் கூடவந்து சேர்ந்தான்.

32–34. ஹே! பிரமணர்களே! அந்த புல்கஸன் பரிசுத்தமான இந்த க்ஷேத்ரத்தை யடைந்தவுடன், ஸ்நாநஞ்செய்து, தன்னால் அடயப்பட்ட தனத்தையெல்லாம் யோகிகளுக்கும் மற்றவர்களுக்கும் தானஞ்செய்து, தினந்தோறும், அந்த சித்ஸபையை ஐந்து க்ரோசத்திற்கு தூரமிருந்து தர்சித்து, நமஸ்கரித்து, வெகு காலம் இம்மாதிரி வஸித்துவந்தான்.

35. இவ்விதமாக கொஞ்சகாலம் சென்றபின் இப்புல்கஸன் க்ஷேத்ர வாஸஞ்செய்த புண்ய மகிமையால் அப்புண்ய க்ஷேத்ரத்திலேயே மறணமடைந்தான்.

36–39. மறணத்திற்கு பிறகு அநேக போகங்களை (உத்தம ஜன்மங்களை) அனுபவித்து, உமாபதியான வியாக்ரபுரி ஈசனுடைய பிரஸாதத்தால் நிர்விக்னமாக உத்தமமான முக்தியை அடைந்தான். இவனுடைய நன்பனான பிராமணனும், தினந்தோறும் அந்த க்ஷேத்ரத்திலேயே காலஸ்நாநஞ்செய்து, அந்த உமாபதியான மஹேச்வரனை முன் கூறியவிதம் பூஜைசெய்து வந்தான். இவனுடைய பூஜையால் ஸந்தோஷப்பட்டு இவனுக்கும் அந்த வியாக்ரபுரீசர் முக்தியை யளித்தனர்.

40. இவ்விதமாக முற்கூறியவிதமான சிவலிங்க பூஜையால் கணக்கற்றவர்கள் ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுதலை யடைந்திருக்கின்றனர்.

41. சிலர் வாராணஸியை (காசியை) அடைந்து, முற்கூறிய படி அங்குள்ள மஹாத்மாவான மஹாதேவரை (விச்வேச்வரரை) பூஜித்து முக்தியடைந்திருக்கிறார்கள்.

42–45. சிலர் ஸோமநாத க்ஷேத்ரத்தை யடைந்தும், சிலர் அற்புதமான பதரிகேதாரத்தை யடைந்தும், சிலர் முக்யமான ஸ்ரீசைலத்தையடைந்தும், சிலர் விருஷபாத்ரியை யடைந்தும், சிலர் தக்ஷிணகைலாஸத்தை (காலஹஸ்தி) யடைந்தும், சிலர் அக்நீச்வர க்ஷேத்ரத்தையடைந்தும், சிலர் ஹாதீர்த்தத்தை யடைந்தும், சிலர் விருத்தாசலத்தை யடைந்தும், சிலர் அத்புதமான வல்மீகத்தை (திருவாரூர்) யடைந்தும், சிலர் ஹாலாஸ்யத்தை (மதுரை) யடைந்தும், சிலர் புண்ய க்ஷேத்ரமான இராமேச்வரத்தை யடைந்தும், சிலர் பக்தியுடன் காந்தாரத்தை (வேதாரண்யம்) அடைந்தும், முற்கூறியபடி சிவனை பூஜித்து, சிரமமில்லாமல் ஸம்ஸார பந்தந்தினின்று விடுதலை யடைந்திருக்கின்றனர்.

46. மற்றும் சிலர் தங்கள் வீட்டிலேயே தங்கள் சக்திக்கு தக்கபடி முற்கூறிய பிரகாரம் ஈசனை பூஜித்து மோக்ஷம் அடைந்தார்கள்.

47. இன்னும் சிலர் போகத்தைமட்டும் இச்சித்து முற்கூறியபடி தேவனை ச்ரத்தையுடன் பூஜித்து மஹா ஸுகத்தை (இஹலோக ஸுகத்தை) அனுபவித்திருக்கிறார்கள்.

48. ஹே! முனிகளே! இவ்விஷயத்தில் அதிகமாக சொல்லுவதில் என்னபயன்! கேளுங்கள்! எல்லா ஜந்துக்களுக்கும் போகமும், மோக்ஷமும் இவ்வித பூஜையாலேயே கிடைக்கவேண்டுமேயன்றி வேறொன்றாலுமில்லை.

49. ஆதலால், நீங்களும் முற்கூறியபடி புக்தி முக்தி பலத்தைகொடுக்கும் மஹாதேவரை பூஜிக்க.

50. இதைக்கேட்டு நைமிசாரண்யவாஸிகள் எல்லாவிஷயங்களுமறிந்த ஸூதரை நமஸ்கரித்து, சந்திரசேகரான சங்கரனைப் பூஜித்தார்கள்.

51. அவ்விதமே அவர்களுடைய புத்திரர்களும், பௌத்திரர்களும், பந்துக்களும், நண்பர்களும் இம்முனிகளால் உபதேசிக்கப்பட்டு ஈசனைப் பூஜித்தார்கள்.

52–54. பூஜையால் உண்டாகும் புண்யத்திற்கு ஸமம் மூன்று உலகங்களிலும் கிடையாது; பூஜையாலேயே மஹாதேவன், சங்கரன், நீலகண்டன், விரூபாக்ஷன், சிவன் இப்பெயர்களுடைய ஈச்வரன் பிரஸாதத்தை யளிக்கிறான். ஸர்வகாரணரும், அனாதியாயுள்ள அந்த தேவஈசனைப் பூஜித்தால் எல்லா தேவதைகளும் பூஜிக்கப்படுவார்கள் என்பது வேதாந்த நிச்சயமாயிருக்கிறது. இஹத்தில் போகத்தையும், பரத்தில் மோக்ஷத்தையும் அடைவார்கள் என்பதில் யாதொரு விசாரணையும் வேண்டுவதில்லை.

---

## அத்தியாயம் 5.

---

## (சக்தி பூஜை விதி).

---

1. நைமிசாரண்யவாஸிகள்.—ஹே! பகவானே! எல்லா சாஸ்திரங்களையும் உணர்ந்த சிரேஷ்டரே! பராசக்தியின் பூஜா விதியைச் சுருக்கமாகச் சொல்லுங்கள்.

2. ஸூதர்.—ஹே! ஆஸ்திக உத்தமர்களே! புக்தி முக்தியைக் கொடுக்கும் பராசக்தியின் பூஜாவிதியைச் சொல்லுகிறேன். மிகச் சிரத்தையுடன் கேளுங்கள்.

3. பராசக்தியின் பூஜை வெளி, உள் என்று இருவிதமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. அவைகளில் வெளிப்பூஜை இரண்டு விதம்.

4. அது வைதீகம், தாந்திரீகம் என்பவை; ஹே! பிராமணர்காள்! தாந்திரீகனுக்குத் தாந்திரீக பூஜையே என்றும் வைதீகனுக்கு வைதீக பூஜையே என்றும் ஏற்பட்டிருக்கிறது.

5. இவ்விதமே எல்லா தேவதைகளுக்கும் பூஜா வ்யவஸ்தை செய்யப்பட்டிருக்கிறது. இதையறியாமல் பிசகாக பூஜை செய்கிறவன் நாசமடைவான்.

6–8. ஆஸனம், ஆவாகனம், அர்க்யம், பாத்யம், ஆசமனம், ஸ்நானம், உத்திரீயத்துடன் வஸ்திரம், ஆபரணாதிகள், கந்தம், புஷ்பம், தூபம், தீபம், நைவேத்யம், ஹாரம், பூச்சு, நமஸ்காரம், (இருதயத்தில்) விஸர்ஜனம் இவைகளை, எல்லா மந்திரங்களுக்கும் காரண பூதமாயிருக்கிற மாதிருகா மந்திரத்தால் செய்யவேண்டும்; ஏனெனில் மாதிருகையன்றி வேறு மந்திரம் கிடையாது.

9. அந்த மாதிருகாமந்திரமும் (அதம, மத்யம, உத்தம அதிகாரிபேதத்தால்) ஸ்தூலம், ஸூக்ஷ்மம், ஸூக்ஷ்மதரம் என மூவகைப்படும். இவை குரு உபதேசத்தால் அறியவேண்டுமேயன்றி, அளவற்ற சாஸ்திரங்களாலும் அறியமுடியாது.

(மந்திரத்திற்கு பரா, பச்யந்தி, மத்யமா, வைகரி என்ற நான்கு ஸ்தானங்கள் உள. அவைகளில், பரா என்பது மந்திர உச்சாரணம் மூலாதாரத்தில் அதிக ஸூக்ஷ்மமாக தோன்றுவது; இதன் ஸ்வரூபம் ஜீவன் முக்தி தசையை யடைந்தவர்களுக்குத்தான் தெரியவரும். பச்யந்தி என்ற இரண்டாவது ஸ்தானம் நாபீகமலத்தில் யோகிகளால் அறியப்படும்; இதனால் தான் 'பச்யந்தி' பார்க்கப்படுகிறது என்ற பெயர் பெற்றது. மூன்றாவது ஸ்தானமாகிய ஹிருதயகமலத்தில் தோன்றும்பொழுது மத்யமா என்ற பெயர் பெறும். நான்காவது ஸ்தானமாகிய கண்டத்தில் வரும்பொழுது வைகரி என்ற பெயர் வழங்குகிறது. வைகரி என்ற ஸ்தானத்தால் எல்லோராலும் உச்சரிக்கப்படுகிறபடியால் அம்மந்திரத்தால் பூஜைசெய்வது ஸ்தூல பூஜையென்றும், மூன்றாவது ஸ்தானமாகிய மத்யமா என்றதால் செய்வது ஸூக்ஷ்ம பூஜையென்றும், பச்யந்தி, பரா என்ற ஸ்தானங்களால் செய்யப்படும் பூஜைக்கு ஸூக்ஷ்மதரம் என்றும் சொல்லப்படும்).

10. ஆனால் உட்பூஜைக்கு யோக்யதையுள்ள புத்திமான் வெளிபூஜையை (பாஹ்ய பூஜை) விலக்கி உட்பூஜையைச் செய்யலாம்.

11. அந்த உட்பூஜையும், ஸாதாரமென்றும், நிராதாரமென்றும் இரண்டுவிதமாயிருக்கிறது. இவைகளில் நிராதாரம் வெகு ச்ரேஷ்டம்.

12-13. இந்த ஸாதாரபூஜை மூலாதாரமுதலிய இடங்களிலும், நிராதாரபூஜை ஸம்வித்திலும் (ஞானத்தில்) ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. ஸாதாரபூஜை, மூலாதாரம் முதலிய ஏதாகிலும் ஒரு ஸ்தானத்தில், மாதிருகா மந்திரத்தால் கற்பிக்கப்பட்ட மூர்த்தியில், அதிக ஸந்தோஷத்துடன், பரதேவதையை பூஜிப்பது. மனோலயம் அடைவதே ஸம்வித்தில் ஏர்ப்பட்ட பூஜையாம்.

14. ஸம்வித் என்றால் யதார்த்தமான பராசக்தியேயன்றி வேறன்று. ஆதலால், ஹே! முனிசிரேஷ்டர்களே! ஸம்வித்தில் அந்த பராசக்தியை எப்பொழுதும் பூஜிக்கவேண்டும். (பூஜையென்றால் பேதமற்ற ஆத்மானுபவம்).

15. உலகத்தில் ஸம்வித்ரூபம்தவிர, எந்த ஆத்மாக்களுக்கு வேறு விதமாக பேதஞானம் தோன்றுகிறதோ, அந்த தோற்றத்திற்கே ஸம்ஸாரம் என்று பெயர். (பூஜை செய்பவன் வேறு, தேவதை வேறு, பூஜை திரவ்யங்கள் வேறு என்கிற பேதஞானம்).

16. ஆகையால், இந்த ஸம்ஸார நாசத்தின்பொருட்டு, இந்த பராசக்தியை ஸாக்ஷியாகவும், ஆத்மரூபமாகவும், பிரபஞ்ச பேதமற்றதாகவும் பூஜிக்கவேண்டும்.

17. புத்திமான், களங்கமற்று, துவக்கத்திலேயே, ஸம்வித்ரூபியாயுள்ள பராசக்தியை, இந்த ஸம்வித் வாசகத்தால் (பரமசிவனை ஓம்காரத்தாலும், பராசக்தியை ஹ்ரீம்காரத்தாலும்) ச்ரத்தையுடன் பூஜிக்கவேண்டியது.

18. முன்சொல்லிய அனைத்தையும் நீக்கி, தானே பூர்ணமாயிருக்கிற அந்த ஸம்வித்தை தனது ஆத்மாவில் அனுஸந்தானம் செய்யவேண்டும்; பிறகு இதையும் (த்யானம், த்யானம்செய்பவன், த்யானிக்கப்படும் வஸ்து வென்ற பேதத்தை) தள்ளவேண்டும்.

19. தன்னுடைய அனுபவத்தால், தானே தன்ரூபாமா யுள்ள அந்த மஹேச்வரியைத் த்யாநம் செய்யும் பூஜையே மோக்ஷத்தைக் கொடுக்கும்.

20. இவ்விதமாக வேதத்தில் மாத்திரம் சொல்லப்பட்ட பராசக்தியின் பூஜை உங்களுக்குச் சொல்லப்பட்டது. நீங்களும் முற்கூறியபடி உத்ஸாகத்துடன் பூஜிக்க ஆரம்பிக்கவும்.

(பூஜை மூன்றுவிதம்; i சிவ பூஜை, ii தேவி பூஜை, iii பக்தர் பூஜை. இதில் ஒவ்வொன்றும் வைதிக, தாந்திரிகமென்று இரண்டுவிதம்; வைதிகம் மூன்று பிரிவிகள் உள்ளது, ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்று; அதாவது, விக்கிரகாதியில் வெளிப்பூஜையும், மனதில் உட்பூஜையும், ஆத்மாவில் அனுபவமும்; மேலும் வெளிப் பூஜை மூன்றுவிதம்; சிவலிங்கத்தில் சிவ பூஜை; ஸாலக்ராமம் முதலிய விஷ்ணுபாதி பிம்பங்களில் சிவபூஜை; மூன்றாவது அந்தந்த தேவதைகளின் பிம்பங்களில் அந்தந்த தேவதைகளின் பூஜை. கலியுகத்தில் பரமசிவன் கிருபையால் எல்லா க்ஷேமங்களும் கிடைக்கும் என்று சாஸ்திரங்கள் முறையிடுகிறபடியால் சிவனையே சிவலிங்கத்தில் ஆராதிக்கவேண்டும்; இதற்கு ஏகலிங்கார்ச்சன விருதம் என்று பெயர்).

---

## அத்தியாயம் 6.

---

### (சிவபக்த பூஜை விதி).

---

1. நைமிசாரண்ணியவாசிகள் கேள்வி:—ஹே! பகவானே! சிவபக்தர்களினுடைய பூஜையானது எவ்விதம் சொல்லப்பட்டிருக்கிறது? அப்பூஜையின் பலன் என்ன? என்பதை எங்களுக்கு சொல்லுங்கள்.

2. ஸூதர் சொல்லுகிறார்:—ஹே! பிராமணர்களே! சிவனடியார்களின் பூஜையை நான் சொல்லுகிறேன். சிரத்தையுடன் கேட்டு, சிரமப்பட்டு அனுஷ்டிக்கவும்.

3. சிவனடியார்களுக்கு எந்த விதத்தால் மனஸ் திருப்தி உண்டாகுமோ அவ்விதம் செய்வதுதான் சிவனடியார்களின் பூஜையாகும்.

4. பரிசுத்தமான நீரால் சிவனடியார்களின் பாதங்களை பக்தியுடன் கழுவுவது முக்ய பூஜையாம்.

5–9. தைலாப்யங்கனம் செய்விப்பதும், அடியார்களின் கை கால்களைப் பிடிப்பதும், அன்னபானம் கொடுப்பதும், தனம், வஸ்திரம் தானம் செய்வதும், புஷ்ப சந்தனாதிகளால் அலங்கரிப் பதும், (பிரமசாரியாயிருந்தால்) கன்னிகாதானம், பூமிதானம், கோதானம், திலதானம், ஜலபாத்திரதானம், கிரஹதானம், விசிறி தானம், பாத்திரதானம், கொடை, பாதரக்ஷைதானம், படுக்கை தானம் முதலிய தானங்களை கொடுப்பது சிவனடியார் பூஜை யென்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள்.

10. முன்னொருகாலத்தில், ஹே! பிராமணர்களே! பூலோ கத்தில் மிகச்செல்வனாய் ஒரு வைசியன் இருந்தான். அவனுக்கு நான்கு புத்திரர்கள் இருந்தார்கள்.

11–14. அவர்களுள் மூற்றவன் ஸத்பவாதியாகவும், செல் வனாகவும், ஸகல பூத தயாபரனாயும், பிரம்மசரிய விருதத்தை யனுஷ்டித்தவனாயும், எப்பொழுதும் சிவபக்தி யுள்ளவனாயும், ஸந்தோஷமுடையவனாயும், ஆகாராதிகளில் நியமங்களை அனுஷ் டித்தவனாகவும் இருந்துகொண்டு, ஜனன மாரண பயத்தால் முக்தி யை அபேக்ஷித்தவனாக, பிரம்மா, விஷ்னு முதலான தேவர்களால் ஸேவிக்கப்பட்ட ஸ்ரீகாசியை யடைந்து, தன் தனத்தைச் சிவனடி யார்களுக்கு சிரத்தையுடன் கொடுத்து, சிவனடியார்களுக்குச் செய்த பூஜையால், கர்மபந்தத்திலிருந்து நிவர்த்தியடைந்து, மோக்ஷத்தை யடைந்தான்.

15–16. வைசியனுடைய இரண்டாவது புத்திரன் அதிக தனிகனாயிருந்தான். ஸர்வகாமத்தின் பலனைக்கொடுக்கும் மஹா க்ஷேத்திரமான ஸோமனாதத்தை தன் பார்யாளுடன் அடைந்து, எல்லா பொருளையும் சிவனடியார்களுக்கு கொடுத்து, பக்தியுடன் செய்துவந்த சிவனடியார்களின் பூஜையால் முக்தியடைந்தான்.

17–20. மூன்றாவதான வைசிய குமாரன் பந்துக்களை உதா ஸீனஞ்செய்து, நியாய விரோதமான வழியில் சிலகாலமிருந்து,

மிகத்தனவானுகி, ஜன்மாந்திரத்தில் செய்த புண்யத்தால் வியாக்ர புர க்ஷேத்திரத்தை யடைந்து, சிவனடியார்களுக்கு அன்னபானம், வஸ்திரம், சந்தினம், புஷ்பம், தாம்பூலம் முதலியவைகளைச் சிரத்தையுடன் கொடுத்து, மூன்று வருஷகாலம் சிவனடியார்களுக்குச்செய்த பூஜையால் கர்மபந்தத்திலிருந்து விடுபட்டு மோக்ஷத்தை யடைந்தான்.

21–22. நான்காவதான வைசிய புத்திரன் பிராமணர்களை இரக்கமன்றி வதைசெய்து, அவர்களுடைய திரவியங்களை அபகரித்து, அயோக்கியர்களுக்கும், கூத்தாடிகளுக்கும், பாடகர்களுக்கும், மூர்க்கர்களுக்கும் தனத்தைக் கொடுத்து எப்பொழுதும் வேசியாபரனுக விருந்தான்.

23–25. பிற்பாடு பலவித ரோகங்களால் பீடிக்கப்பட்டும், பிரம்மராக்ஷஸால் பிடிக்கப்பட்டான். இவ்விதமாக சிலகாலம் செல்லவே, மிகதனவானுன அவனுடைய பிதா, புத்திரவாஞ்சையால், எல்லா சாஸ்திரங்களையும் நன்ருய் உணர்ந்த ஓர் பிராமண ச்ரேஷ்டரை விரவில் அடைந்து, தண்டம்செய்து, காணிக்கை கொடுத்து தன் புத்திரனுடைய நடத்தை முழுவதையும் அறிவித்தான்.

26. அந்த நடத்தை முழுவதையும்கேட்ட அந்த அந்தணர், கொஞ்சநேரம் வித்வான்களான விபரர்களுடன் விசாரணைசெய்து, நிச்சியம் செய்துகொண்டு (அடியில் வருமாறு) சொன்னுர்.

27. எல்லோராலும் ஸேவிக்கப்பட்ட விருத்தாசலம் என்ற ஓர் ஸ்தானம் சங்கரால் எல்லாரோக நிவிருத்தியின்பொருட்டு சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறது.

28. பிரம்மா, விஷ்ணு முதலானவர்களால் இந்த ஸ்தலம் ச்ரத்தையுடன் ஸேவிக்கப்படுகிறது. ஒரு வருஷகாலம் வசித்து தர்சனம் செய்வதால் புக்தியும் முக்தியும் கிடைக்கும்.

29. இவ்விடத்தில் தினையளவு தானஞ்செய்தாலும் மஹாமேரு அளவு தானஞ் செய்த பலனுக்கு ஸமானமாகும்; பிரம்மஹத்தி, ஸுராபானம், ஸவர்ன திருட்டு முதலிய மகாபாபங்களை நாசஞ்செய்யும்.

30. முன்னொருகால் உலகத்தின் க்ஷேமத்தின்பொருட்டு அகஸ்தியரால் பூஜிக்கப்பட்ட இந்த க்ஷேத்திரம், ஸர்வ தீர்த்தங்களால் சூழப்பட்ட மணிமுக்தா நதிக்கரையில் இருக்கிறது.

31-33. ஹே! நண்பனே! உன் புத்திரனுடன் அவ்விடம் சென்று, அவ்விடம் ஓடும் நதியில் தினந்தோறும் ஸ்நானம்செய்து, அந்த விருத்தாசல ஈசனை நமஸ்கரித்து, 108 பிரதக்ஷிணங்கள் செய்து, அவருக்கு ஸந்தோஷம் உண்டாகும்படி நடந்து, அங்குள்ள பிராமணர்களையோ, மற்ற எந்தச் சிவனடியார்களையோ சிரத்தையுடன் உபசரித்து, அந்தச் சிவனடியார் பூஜையால் உன் புத்திரனை உத்தாரம் செய்.

34-38. ஸூதர் சொல்லுகிறார்:—இவ்விதமாக அந்த அந்தனரால் சொல்லப்பட்டவுடன், ஸந்தோஷமனதுடன், புத்திர மித்திர களத்திராதிகளுடனும், தன்னுடைய பெரிய செல்வத்துடனும், புண்ய க்ஷேத்திரமான விருத்தாசலத்தை யடைந்து, ஹே! முனிகளே! பாபங்களை போக்கும் மணிமுக்தா நதியில் நீராடி, அந்த விருத்தாசல ஈசனை பக்தியுடன் நாள்தோறும் 108 பிரதக்ஷிணங்கள் செய்து, அழகான மடம் ஒன்று கட்டி, அதை சிவனடியார் ஒருவருக்குத் தானஞ்செய்து, அதிக ஸந்தோஷத்துடன் சிவனடியார்களை தனம், தான்யம், எள்ளு, அரிசி முதலிய மனதிற்கு பிரியமுள்ள பலவித உபசாரங்களால் உபசரித்து வந்தான்.

39. இவ்விதமாக ஒருவருஷகாலஞ் செல்ல அவனுடைய குமாரனுக்கு எல்லா ரோகங்களும் நீங்கியன. அந்த அடியார் பூஜையால் புத்திரனை முன்பு பிடித்திருந்த பிரம்ம ரக்ஷஸும் விலகியது.

40. மறுபடியும் அவன் தன்னால் ஸம்பாதிக்கப்பட்ட திரவியம் முழுவதையும் சிவனடியார்களின்பொருட்டு உதவி, அவர்களுக்குச்செய்த முக்கிய கைங்கரியத்தால் அவ்விடத்திலேயே மோக்ஷபதவியை அடைந்தான்.

41-45. ஹே! தபஸ்விகளே! சிறந்த புத்தியுள்ள அவன் பிதாவும் அந்த க்ஷேத்திரத்தின் மகாத்மியத்தை யறிந்து, ஸந்

தோஷத்துடன் தன் தனம் முழுவதையும் சிவனடியார்களுக்கு கொடுத்து, தன் கர்மபந்தத்திலிருந்து விடுதலையடைந்தான்; அவனுடன் கூடவந்த பந்துக்களும் சிவனடியார்களுக்குச்செய்த கைங்கரியத்தால் சிரமமில்லாமல் ஸம்ஸார பந்தத்திலிருந்து முக்தியடைந்தார்கள். இந்த க்ஷேத்திரத்தில் ஒரு முஷ்டி அரிசியை தானஞ்செய்தாலும் அது அநந்தகோடியாகும் என்பதில் ஸந்தேகமில்லை. ஹே! முனிகளே! இந்த க்ஷேத்திரத்தில் ஒரு முஷ்டி கூட தானஞ் செய்யாமல் எவன் ஒருவன் ஜீவித்திருக்கிறானோ அவன் ஒருபொழுதும் ஸம்ஸார பந்தத்திலிருந்து விலகமாட்டான்.

**46–54.** அகஸ்த்யருடைய சீடனான ச்வேதன் என்ற பெயருடைய ஒரு தர்மிஷ்டமுனி இந்த வைச்யபுத்திரன், அவன் தகப்பன், பந்துக்கள் இவர்களடைந்த நல்ல கதியைக் கேட்டு, அகஸ்த்யரால் ஏவப்பட்டு, ஹே! முனிகளே! ச்ரத்தையுடன் அந்த விருத்தாசல க்ஷேத்திரத்தை யடைந்து, அங்கிருக்கும் மணிமுக்தா நதியில், உத்ஸாகத்துடன், நீராடி, ஞாயிற்றுகிழமை, அஷ்டமி, பர்வகாலம், ஆர்திரா நக்ஷத்திரம் முதலிய தினங்களில் விருத்தாசல மகாதேவனை மணிமுக்தாநதி ஜலத்தால் இந்த தர்மாத்மாவான ச்வேதமுனி அபிஷேகஞ்செய்தார். அந்த நதியும் இந்த ச்வேதனால் பூஜிக்கப்பட்டதால், பாபத்தைப் போக்கடிக்கும் இப்புண்ய நதி ச்வேதநதியென்ற பெயருடன் விளங்கிற்று. மறுபடியும் இந்த ச்வேதமுனி ச்ரத்தையுடன் சிவனடியார்களை பலவிதமாக பூஜித்துவந்தார். அந்த விருத்தாசல மகாதேவன் சிவனடியார் பூஜையால் அவருக்கு பிரத்யக்ஷமானார். உடனே அந்த விருத்தாசல ஈசனை பத்ரம், புஷ்பம், ஜலம் இவைகளால் பூஜித்தார். அங்ஙனமிருக்க ஹே! பிராமணர்களே, அந்த பரமாத்மாவான சிவனுடைய பிரஸாதத்தாலும், சிவனடியார்களின் முக்ய பூஜையாலும் அந்த ச்வேதமுனி உத்கிருஷ்டமான மோக்ஷத்தையடைந்தார்.

**55.** அதிகமாகச் சொல்லுவதில் என்ன பிரயோஜனம்! ஹே! வேதமுணர்ந்தவர்களே! சிவனடியார்களின்பூஜையால்தான் போகமும், மோக்ஷமும் கிடைக்குமேயன்றி வேறொன்றால் கிடைக்காது.

56. இவ்விதமாக நைமிசாரண்யவாஸிகளான மஹாத்மாக்கள்கேட்டு சிவனடியார்களை பலவிதமாக பக்தியுடன் பூஜித்தார்கள்.

57. இவர்கள் செய்துவந்த சிவனடியார் பூஜையை பரமேச்வரரான உமாபதி மெச்சி இவர்கள் முன்பு தன் நர்த்தனத்தைக் காண்பித்தார்.

58. அம்முனிகள் அந்த சங்கரரான சிவனுடைய ஆனந்த தாண்டவத்தைப் பார்த்து, ஸந்தோஷத்தால், பரவசமடைந்தார்கள்.

---

## அத்தியாயம் 7.

---

## (முக்தி ஸாதன் பிரகாரம்).

---

1. நைமிசாரண்யவாஸிகள் கேள்வி:—எல்லா தத்வங்களையுமறிந்த ஹே! பகவானே! சிலவிஷயங்களைக் கேட்க ஆவலுள்ளவர்களாக விருக்கிறோம்; சிலர் கேவலம் ஞானத்தையே மோக்ஷத்திற்கு ஸாதகம் என்று சொல்லுகிறார்கள்.

2–5. சிலர் ஞானமும் கர்மமும்சேர்ந்தது ஸாதகம் என்றும்; சிலர் தானம் ஸாதகம் என்றும், சிலர் விருதம் என்றும், சிலர் எக்ஞயம் என்றும், சிலர் தபஸ் என்றும், சிலர் பிரம்மசர்யம் என்றும், சிலர் கிரகஸ்தாச்ரமம் என்றும், சிலர் வானப்ரஸ்தம் என்றும், சிலர் ஸன்யாஸமென்றும், சிலர் தீர்த்தஸேவையென்றும், சிலர் வேதாத்யயநம் என்றும், சிலர் முக்கியமான சிவக்ஷேத்திரவாஸம் என்றும் பலவழிகளை முக்திக்கு ஸாதகமென்று சொல்லுகிறார்கள்.

6. ஹே! ஹிதத்தைச் சொல்லும் ஸூதரே! ஸகல ஜந்துக்களுக்கும் ஸுலபமான எந்த ஸாதனம் மோக்ஷத்தைக் கொடுக்கிறதோ அதை எங்களுக்குச் சொல்லும்.

7–9. ஸூதர் சொல்லுகிறார்:—கவனத்துடன் கேளுங்கள். பூர்வத்தில் வ்யாஸர் வைகுண்டவாசியான நாராயணனை பக்தியு

டன் நமஸ்கரித்து, இவ்விஷயத்தையே கேட்டார். லக்ஷ்மியுடன் கூடிய அந்த நாராயணன், வெகு ஸந்தோஷத்துடன், லக்ஷ்மி, பிரம்மா, தேவர்கள், வ்யாஸமுனி இவர்களுடன் கைலாஸ பர்வத மடைந்தனர்.

**10–13.** அவ்விடத்தில் தேவியுடன் வீற்றிருந்த நீலகண்டரும், உமாபதியும், நான்குவித புருஷார்த்தங்களை கொடுப்பவரும், தன் காந்தியால் ஸகலத்தையும் பிரகாசிப்பவரும், ஈசர்களுக்கு ஈசனும், பரமேச்வரனும், நாயகர்களுக்கு நாயகரும், தேவதேவனும், நினைத்தமாத்திரத்தில் எல்லோருடைய மனோபீஷ்டத்தை அளிப்பவரும், ஸத்ய ஞான ஆநந்தரும், பூர்ணரும், ஸர்வ சாக்ஷியுமான ஈசனை பக்தியுடன் நமஸ்கரித்து ஜகத்திற்கெல்லாம் க்ஷேமகரமான முன்கூறிய விஷயத்தைக் கேட்டார்கள்.

**14.** ஸர்வக்ஞான மகாதேவன் ஸர்வபூதங்களின் க்ஷேமார்த்தமாக, மதுரமான வாக்கினால் சொன்னார்.

**15.** ஹே! மஹாவிஷ்ணுவே! நீர் கேட்ட கேள்வியை மெச்சினேன்; மெச்சினேன்! முன்னொருகாலத்தில் ஜகன்மாதாவும், பரமேச்வரியான தேவியும், ஜனங்களின் க்ஷேமத்தின் பொருட்டு இதே கேள்வியை கேட்டிருக்கிறாள்.

**16.** ஆதலால், எல்லோருக்கும் க்ஷேமத்தைக் கொடுக்கும் விஷயமானதால் கிருபைகொண்டு சொல்லுகிறேன். ஞானமே ஹே! மஹாவிஷ்ணு! மோக்ஷத்திற்கு (முக்கிய) ஸாதனம்.

**17–20.** அந்த ஞானம் வேதசிரஸான உபநிஷத்தால் உண்டாகும் ஞானமன்றி வேறு அன்றென்பது நிச்சயம். முன் அநேக ஜன்மங்களில் சுத்திபெற்று, பிருகிருத ஜன்மத்தில் ச்ரௌத ஸ்மார்த்த கர்மங்களை அனுஷ்டித்து வருகிறவர்களுக்கு ஹே! ஹரியே! என் பிரஸாதத்தால் இந்த சிவஞானம் உதிக்கிறது. நிவிருத்தி தர்மத்திலிருக்கிற (ஸன்யாஸம்) பிராமணனே ஹே! தாமரைக்கண்ணா! ஞானாப்யாஸத்திற்கு முக்ய அதிகாரியாவான் என்று உனக்கு நான் கூறுகிறேன். மற்றப் பிரவிருத்தி தர்மத்திலிருக்கிற

பிராமணர்களும், க்ஷத்திரியர்களும், வைச்யர்களும் அவரவர்களுடைய யோக்யதைக்குத்தக்கபடி ஞானாப்யாஸத்திற்கு அதிகாரியாவார்கள். த்விஜ ஸ்திரீகளுக்கும் (பிரம்ம, க்ஷத்திரிய, வைச்ய ஸ்திரீகள்) வேத ஞானாப்யாஸத்தில் அதிகாரம் உண்டு.

**21.** ஊழியஞ்செய்கிற சூத்ரனுக்கு புராணத்தாலேயே ஞானம் உண்டாகவேண்டும். ஞாந அதிகாரவிஷயத்தில் ஸ்திரீகளை சூத்ரர்களுக்கு ஸமமாக சில வித்வான்கள் சொல்லுகிறார்கள். (ஸ்திரீ, சூத்ரர்கள், பெயரால் பிராமணர்களென்று சொல்லிக்கொள்ளுகிறவர்கள் இவர்கள் வேதார்த்தங்களை அறியச்சக்தியற்றவர்களானதால், அவர்களும் தெரிந்துகொள்ளும் பொருட்டு, வியாஸர் மகா பாரதத்தை இயற்றினார்).

**22.** மற்ற அனைவருக்கும் (கீழ்ஜாதியோருக்கு) பாஷாந்திரத்தால் ஞானப்யாஸம் விதிக்கப்பட்டிருக்கிறது. அந்தப் படிப்பும் அவர்களுக்கு நாளலவில் உதவியாயிருக்கும்.

**23.** எவர்களுக்கு (வாமதேவர் முதலான ரிஷிகளுக்கு) ஸாதனமன்றி ஞானோதயம் உண்டாயிற்றோ அவர்களால் ஜன்மாந்திரத்தில் அச்சாதனம் செய்திருக்கவேண்டும் என்று வித்வான்களால் நினைக்கத்தகுந்தது.

**24–25.** ஆனால், முக்யாதி காரிகளுக்கு யாதொரு தடையின்றி ஞாநம் உதயமாகும். மற்றவர்களுக்கு தடைப்பட்டு ஞாநம் உண்டாகிறது. அவ்வாறு தடைபெற்று உண்டாகிற ஞாநம் இந்த ஜன்மத்தில் முக்தியைக் கொடுப்பதில்லை. சுத்தமான பிரம்ம ஞாநம் சுத்தமாயுள்ள முக்யாதிகாரிக்கே உண்டாகிறது.

**26.** ஆகையால் எல்லா மனிதர்களுக்கும் முயற்சியன்றி முக்தி கிடைப்பது அரிது. எக்ஞம், தானம் முதலியவைகள் முக்திபெற நேர்காரணம் ஆகா.

**27.** ஆகையால் சிரமமன்றி, எல்லோருக்கும் எந்த வழியால் முக்திகிடைக்குமோ அவ்வழியை ஜகத்தின் நன்மையின் பொருட்டு சொல்லுகிறேன்; ஹே! மஹாவிஷ்ணு! கேளும்.

28. உலகத்தில் என்னுடைய முக்யமான க்ஷேத்திரங்கள் சிலவுள. அவைகளில் ஏதாகிலும் ஒன்றில்வாஸம் செய்தால் புக்தியும் முக்தியும் கிடைக்கும்.

29–30. வாராணஸி (காசி) என்ற, எனக்கு பிரியகரமான, புண்ய க்ஷேத்திரம் ஒன்றுண்டு; அந்த க்ஷேத்திரத்தில் மரணமடைகிறவனுக்கு, கிருபை புரிந்து, பிரம்மத்தை விளக்கும் தாரக மந்திரத்தை உபதேசஞ் செய்கிறேன். ஹே! மஹாவிஷ்ணு! அவ்விடத்தில் மரணமடைகிறவனுக்கு மோக்ஷம் கிடைக்கும்.

31. தக்ஷிண கைலாஸம் என்ற பெயருடையதும், எனக்குப் பிரியமானதுமான ஒரு ஸ்தலம் உண்டு. அவ்விடத்தில் எல்லா தீர்த்தங்களும் இருக்கின்றன.

32–33. அங்குள்ள பரிசுத்தமானதும், பாபத்தை நாசஞ் செய்ய வல்லதுமான ஸ்வர்ணமுகரி நதியில் மாதந்தோறும் வரும் வ்யதீபாதத்திலும், மாகமாஸ மகநக்ஷத்திர தினத்திலும், ஞாயிற்றுக்கிழமையிலும், அமாவாஸையிலும் ஒருவன் ஸ்நாநஞ்செய்து, காலஹஸ்தி ஈசனுன என்னைப் பூஜிக்கவேண்டும்.

34–35. எவன் ஒருவன் அந்த க்ஷேத்திரத்தில், பக்தியுடன், ஒரு வருஷம் வாஸஞ்செய்து, தினந்தோறும் தக்ஷிண கைலாஸவாஸியும்,கருணுநிதியுமான ஈசனை தரிசித்து போஜனம்செய்கிருனே ஹே! மஹாவிஷ்ணு! அவனுக்கு மோக்ஷத்தைத் தரும் ஞாநம் மரணகாலத்தில் உதிக்கிறது. அதனுல் முக்தனுகிருன்.

36. வ்யாக்ரபுரத்தில் (சிதம்பரத்தில்) யாரேனும் ஈசனை தினந்தோறும் நமஸ்கரித்து, ஸந்தோஷத்துடன், ஒரு வருஷகாலம் வஸிக்கிருனே அவனுக்கு முக்திகிடைப்பதில் ஸந்தேகமில்லை.

37–39. எவனுகிலும் விருத்தாசலத்தில் பக்தியுடன் இரண்டு வருஷகாலம் வஸித்து, அந்த விருத்தாசல மகாதேவனை, மும்முறை வலம்வந்து, நமஸ்கரிக்கிருனே அவனுக்கு முக்தி சிரமமில்லாமல் கிடைக்கும். இதில் ஸந்தேகமில்லை.

40. ஆதலால், ஒரு மனிதன் புண்ய ஸ்தலத்தில் வஸிப்பதால் ஸம்ஸார பெரிய பயத்தினின்றும் சிரமமின்றி கடைத்தேறுகிறான். ஆகையால் சிரமமில்லாமல் மோக்ஷ விருப்புள்ளவன் முன்சொன்ன ஸ்தலங்களுல் ஏதாகிலும் ஒன்றில் பக்தியுடன் பஜிக்கவேண்டும்.

41–45. ஸூதர் சொல்லுகிறார்:—இவ்விதம் பரமசிவன் சொல்லியதைக்கேட்டு லக்ஷ்மியுடன் மகாவிஷ்ணுவும், பிரம்மா முதலான தேவர்களும், வ்யாஸரும், பக்த பிரியரான ஈசனை நமஸ்கரித்து, அதிக பக்தியுடன் ஸர்வஜகத்பதியான விஷ்ணு, பிரம்மா தேவர்கள் வ்யாஸர் இவர்களுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டு, எல்லா க்ஷேத்ரங்களுள் உத்தமமானதும், பஞ்சயோஜனை நீளமும், பத்துயோஜனை அகலமும், பிரம்மா, ஸரஸ்வதி, இந்திரன், நீலா தேவி, ஸர்ப்பம், யானை, மற்றும் தேவ கந்தர்வ ராக்ஷஸ முனிகளால் பூஜிக்கப்பட்டதாயும், போகமோக்ஷத்தை கொடுக்கக்கூடியதாயுமுள்ள தக்ஷிண கைலாஸத்தை, லக்ஷ்மி ஸஹிதமாய் அடைந்தார்.

46. வேதமறிந்த பிரம்மா, பாபத்தை நாசஞ்செய்யும் விருத்தாசலத்தை ஸந்தோஷத்துடன், ஸரஸ்வதி ஸகிதராய் அடைந்தார்.

47–48. எல்லா ஞானத்திற்கும் இருப்பிடமான வேத வ்யாஸ முனி சிரத்தையுடன் ஸ்ரீகாசி க்ஷேத்திரத்தை யடைந்தார்.

49–50. மற்றெல்லா தேவர்களும், ஸந்தோஷத்துடன், போகமோக்ஷத்தையளிக்கும் வ்யாக்ரபுரத்தை பக்தியுடன் அடைந்தார்கள். அந்த க்ஷேத்திரத்தில் அம்பிகாபதியான தேவேசன் எப்பொழுதும் தாண்டவம் ஆடுகிறார்.

51–52. நான் வ்யாஸருடைய வார்த்தையின்பேரில், வெகு சிரத்தையுடன், தக்ஷின கைலாஸத்தில் ஒரு வருஷகாலம் வஸித்து, அதுபோலவே ஹே! முனிகளே! வ்யாக்ரபுரத்திலும், விருத்தாசலத்திலும், ஸ்ரீகாசியிலும் வஸித்து அதிக ரமணீயமாயுள்ள ஞானத்தையடைந்தேன்.

53. நீங்களும், உங்களுக்குள்ள சிரத்தையின் பிரகாரம், முற்கூறிய ஏதாகிலும் ஒரு க்ஷேத்திரத்தில் முக்தியடையும் பொருட்டு வாஸம்செய்யுங்கள். இவ்விதம் வஸித்ததில் அநேகர்கள் ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுதலை பெற்றிருக்கிறுர்கள்.

---

## அத்தியாயம் 8.

---

## (கால அளவும், அதைத்தாண்டிய ஸ்வரூபமும்)

---

1. நைமிசாரண்யவாஸிகள் கேள்வி:—ஹே! வித்வான்! காலத்தை யறிந்தவர்களால், காலத்தின் ஸங்க்யை எவ்விதம் சொல்லப்பட்டிருக்கிறது; காலத்திற் குட்படாதவர் யவர்? இதை தயவுசெய்து கூறவும்.

2. ஸூதர் சொல்லுகிறுர்:—காலத்தின் ஸங்கியயை கோடி ஜன்மங்களாலும் என்ஞல் சொல்லமுடியாது; மேலும், அநேக முனி ச்ரேஷ்டர்கள், தேவர்கள், அல்லது மகாத்மாவான சிவனுலேயும் சொல்லமுடியாது.

3. ஆயினும், உங்கள்மேல் உள்ள தயவால், சுருக்கமாய்ச் சொல்லுகிறேன். ஹே! பண்டிதர்களே! 15 காஷ்டைகள் உள்ளது ஒரு நிமேஷமாகும்.

4. 30 நிமேஷங்கள் ஒரு கலை; 30 கலைகள் ஒரு முகூர்த்தம்; 30 முகூர்த்தங்கள், இரவும் பகலும் சேர்ந்த, மனிதனுடைய ஒரு நாள் ஆகும்.

5–6. அப்படிப்பட்ட 15 நாட்கள் கொண்டது ஒரு பக்ஷம்; இரண்டு பக்ஷங்கள் ஒரு மாதம்; 6 மாதங்கள் அடங்கியது ஒரு அயநம்; தக்ஷிணம், உத்திரம் என்ற இரண்டு அயநங்கள் கூடியது ஒரு வருஷம்; இதில் தக்ஷிணுயநம், தேவர்களுக்கு இரவு; உத்திராயநம் பகல்.

7. மனிதர்களுக்கு ஒப்பு தேவர்களுக்கும் பக்ஷம், மாஸம், வருஷம் இவைகளின் கணக்கை வைத்துக்கொள்ளவேண்டும்.

8. தெய்வீகமான 12,000 வருஷங்கள் சேர்ந்தால் நான்கு யுகங்களாகும்; அதில் ஹே! பிராமணர்களே! கிருதயுகத்திற்கு 4000 வருஷங்கள் உள.

9. அதில் ஸந்தியென்றும், ஸந்தி அம்சம் என்றும் 800 வருஷங்கள் சேர்க்கவேண்டும். திரேதாயுகத்திற்கு தெய்வீகமான 3000 வருஷங்கள்; ஸந்தி, ஸந்தி அம்சம் 600 வருஷங்கள்.

10. த்வாபரத்திற்கு ஸந்தி, ஸந்தி அம்சம் சேர்ந்து 2400 வருஷங்கள்; கலியில் ஸந்தி, ஸந்தி அம்சம் உள்பட, 1200 வருஷங்கள்.

11. ஹே! முனி ச்ரேஷ்டர்களே! ஆக நான்கு யுகங்களும் சேர்ந்து 12,000 வருஷங்கள் ஆகின்றன.

12. இக்கணக்குள்ள 71 யுகங்கள் சேர்ந்து ஒரு மன்வந்திரம் ஆகும். அப்படி 14 சேரின் பிரம்மாவுக்கு ஒரு நாள் ஆகும்.

13. பிரம்மாவின் ஒரு பகலுக்கு வித்வான்களால் 'கல்பம்' என்று பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது; அவ்விதமே இரவுக்கும்.

14. கல்பங்கள் 360 சேர்ந்தால் பிரம்மாவுக்கு ஒரு வருஷம் ஆகும். இப்படி 100 வருஷங்களுக்கு 'த்விபரார்த்தம்' என்று பெயர்.

15. ஹே! முனிகாள்! இந்த பிரமாவினுடைய முடிவில் ஜகத் மாயையில் லயமடைகிறது. அவ்விதமே விஷ்ணுவும், ருத்ரரும் பிரகிருதியில் லயமடைகிறார்கள்.

16. பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் இவர்களின் பலவித மூர்த்திகள் அததன் காரணங்களில் லயமடைகின்றன.

17–18. அந்த மாயையும் பிரளயகாலத்தில், பரமாயும், பரமஈசராயும், ஸத்யம், ஞானம், ஆனந்தம், அநந்தம், பிரம்மா, ருத்ரா முதலிய நாமங்களால் கூறப்பட்டதில் (ப்ரம்மத்தில்) அபேதமாக லயமடைகிறது; இதற்கு காரணம் கண்டறிவது முடியாததாயிருக்கிறது; மாயை என்ற பெயர், வேறு விதமாகத் தோற்றுதலுக்குக் காரணமாதலால், வழங்கிவருகிறது.

**19–21.** ஆத்மதத்துவத்தை மறைக்கிறபடியால், வித்வான்களால், இதற்கு 'தமஸ்' என்றும்; வித்யயை நாசஞ்செய்வதால் 'அவித்யை' என்றும், ஸத் பதார்த்தத்திற்கு விலக்ஷணம் என்பதைப்பற்றி 'அஸத்' என்றும்; காரியத்தை உத்பத்தி செய்கிறதால் 'காரணம்' என்றும்; காரியம்போல் வ்யக்தமாக விராதபடியால் 'அவ்யக்தம்' என்றும், கூறப்படுகிறது. இந்த மகேச்வரீ என்ற சக்தியானது பரமாத்மாவைப்போல் ஸ்வதந்தரமன்று.

**22.** தேவதேவனும் பரமாத்மாவான சிவனுடைய இச்சக்தியால் முக்யமான இந்த காலம் உதித்தது; எல்லா ஜந்துக்களும் இக்காலத்திற்குள் அடங்கியுள்ளன.

**23.** அந்த காலமும், மஹா தேவரிடத்தில், மாயையால் எப்பொழுதும் கல்பிக்கப்பட்டிருக்கிறது; எல்லோரும் காலத்தினிடம் லயமடைகின்றார்கள்; காலம் எப்பொழுதும் லயமடைகிறதில்லை.

**24.** காலம், மாயை இவைகளினுடைய கார்யமும், சிவனால், வ்யாபிக்கப்பட்டிருக்கிறது; எவ்விதம் காலதத்வம் எல்லாவற்றையும் கடந்திருக்கிறதோ, அவ்விதமே சிவன் காலத்திற்குட்படாதவர்.

**25.** ஆயினும், காலம் அஸத்யமாதலால், மாயையுடன் லயமடைகிறது; ஹே! ப்ராமணர்களே! சிவன் ஸத்ய ஸ்வபாவமாகையால் லயமடைகிறதில்லை.

**26.** உண்டான பதார்த்தங்களுக்கும், நஷ்டமான பதார்த்தங்களுக்கும், இனி வரப்போகிற பதார்த்தங்களுக்கும் காலத்திற்குட்படாத சிவன் காரணம் என்று சொல்லப்படுகிறது.

**27.** இந்த தேவனுடைய ப்ரஸாதத்தால் பிரம்மா, விஷ்ணு முதலானவர்களுடைய ஸ்தானங்கள் என்றும், அவர் அதீனமே ஸமஸ்த ஜகத் என்றும், நித்யமான ச்ருதி கூறுகிறது.

**28.** ஹே! வித்வான்களே! கணக்கற்ற பிரம்மாக்கள் லயமடைந்தார்கள்; அப்படியே கணக்கற்ற விஷ்ணு, ருத்ரர், இந்திரன் முதலானவர்களும் லயமடைந்தார்கள்.

**29.** சிவன் ஒருவரே, ச்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை நடத்தும்பொருட்டு பிரம்மா, விஷ்ணு, ருத்ரர் என்ற கல்பனையால் விளங்குகிறார்.

**30–31.** பிரம்மா என்பவர், ரஜோகுணத்திற்குள்ளாகி, அக்குணத்தால், ஹே! பண்டிதர்களே! எல்லா ஜகத்திற்கும் சிருஷ்டி கர்த்தாவானார். விஷ்ணுவானவர், தமோகுணத்திற் குள்ளாகி, ஸத்வ குணத்தால் எல்லா ஜகத்திற்கும் ரக்ஷகர் ஆனார்.

**32.** ருத்ரர் ஸத்வகுணத்திற்குள்ளாகி, தமோகுணத்தால் ஜகத்திற்கு நாசகர் ஆனார்.

**33.** குணபேதத்தால் பிரம்மாவினிடமாக அளவற்ற மூர்த்திகள் உண்டானார்கள். விஷ்ணு, ருத்ரர்களிடமிருந்தும் அவ்வாறே உண்டானார்கள்.

**34.** ஸத்வகுண அதிகத்தால், சில மூர்த்திகள் உத்கிருஷ்டங்களானார்கள்; சில மூர்த்திகள் தமோகுண அதிகத்தால் நாசகரர் ஆனார்கள்.

**35–36.** ஹே! பிராமணர்களே! ஜகத்தின் க்ஷேமத்தின் பொருட்டு ஒரு குணம் ஜாஸ்தியாகவும், ஒரு குணம் குறைவாகவும் மூர்த்திகளில் அமைக்கப்பட்டிருக்கிறது. எல்லா மூர்த்திகளிலும் ஸத்யாதி லக்ஷணங்கள் பொருந்திய சிவன் நழுவுதலற்ற ஆத்மரூபமாக, எப்பொழுதும், இருக்கிறார்; அத்தகைய சிவனை எல்லா ஜந்துக்களும் 'தான்' என்கிற ஞானத்தால் அறிகிறார்கள்.

**37.** மாயையால் (தங்களை) சிவரூபமாக நினைக்கிறார்களில்லை; தேவதேவனுடைய பிரஸாதத்தால், ச்ருதியால் உண்டாகும் ஆத்மவித்யையாலும், அநேக ஜன்மங்களின் கடையில் வித்வான்கள் சிவனை அறியவே யறிகிறார்கள்.

**38.** பிரஸாதமடையாத பாபஜனங்கள் மாயையால் மோகிக்கப்பட்டு, ஜனன மரணங்களால் பீடிக்கப்பட்டு, தேவ ஈசனை எப்பொழுதும் அறிகிறதில்லை.

39. எந்த மூர்த்தியாயிருந்தாலும் அதை பிரம்மபாவனை யாக ஆராதிக்கும்பக்ஷத்தில் கிரமமாக சங்கரனை யடைகிறார்கள்.

40. ருத்ர மூர்த்தியை ஆராதித்தால், அவர் பிரஸாதத்தால், நேராக, சீக்கிரத்தில் எல்லாவற்றிலுமிருக்கிற சிவனை யடைகிறார் கள்.

41. சிவன் அதிகமாக எல்லா ருத்ரமூர்த்திகளிலும் விளங் குகிறார்; மற்றமூர்த்திகளில் சற்று ஏற்றகுறைவாக விளங்குகிறார்.

42. எவ்விதம் நிர்மலமான கண்ணாடியில் முகம் நன்றாகத் தோன்றுகிறதோ அவ்விதம் சுத்தமான மூர்த்திகளில் மஹா தேவன் நன்றாக விளங்குகிறார்.

43. ஹே! வேதமறிந்த பிராமணர்களே! சில வேத வாக் கியங்கள் ருத்ரமூர்த்தியை ஆச்ரயித்து பரமகாரணரான சிவனிடத் தில் முடிவுபெறுகிறது.

44–45. அப்படியே சில வேத வாக்கியங்கள் விஷ்ணு மூர்த்தியை ஆச்ரயித்தும், சிலது பிரம்மமூர்தியை ஆச்ரயித்தும், சிலது அக்நிமூர்த்தியையும், சிலது சூரியமூர்த்தியையும் ஆச்ர யித்து சிவனிடமே முடிவுபெறுகிறது.

46–49. சம்புவைக்குறித்து கூறும் புராணங்கள் பத்து; விஷ்ணுவைப்பற்றி நான்கு; பிரம்மாவைப்பற்றி இரண்டு; ஒன்று அக்னியைப்பற்றி; சூரியனைப்பற்றி ஒன்றும், இவ்விதமாக ஹே! முனிகளே! மூர்த்திகள் மூலமாக, மோக்ஷத்தையளிக்கும் ஸத் யாதி குணங்களையுடைய ஒரே சிவனே, அந்தந்த மூர்த்திகளில் பிரதிபாதிக்கப்பட்டும், பிரம்மா, விஷ்ணு, ருத்ரர்களால் உபாஸிக்க பட்டுமிருக்கிறார். இவரையன்றி மற்றவையெல்லாம் ஹே! பிரா மணர்களே! அநித்யம்; இவர்தான் நாசமற்றவர்.

50–52. இவர் ஆத்மவித்துக்களுக்கும் ஆத்மாவாகவும், அக்ஞானிகளுக்கும் ஆத்மாவாயும் இருக்கிறார். இவரிடமிருந்தே மாயா ரூபமான ஜகத் உண்டாயிற்று; இவரிடத்திலே இருந்து, நாசமடைகிறது; ஹே! முனிகளே! ஒவ்வொரு கல்பத்திலும்

பிரம்மா, விஷ்ணு முதலானவர்கள் இவரிடத்திலிருந்தே உண்டாகிறார்கள். அவ்விதமே இவரிடமே லயமடைகிறார்கள். இந்த ஒரே மகாதேவரே ஸர்வ ஸாக்ஷியாக இருக்கிறார்.

**53–55.** அம்பிகாபதியாயும், நீலகண்டராயும், முக்கண்ணராயும், சந்திரசேகரராயுமுள்ள ஹரன் வியாக்ரபுரத்திலும், ஸ்ரீ காசிக்ஷேத்திரத்திலும், ஸோமநாதத்திலும், விருத்தாசலத்திலும், வேதாரண்யத்திலும், வல்மீகத்திலும், க்ஷேத்திரங்களில் உத்தமமான தக்ஷண கைலாஸத்திலும் எப்பொழுதும் ஸான்யத்தியத்தை அடைந்தவர்.

**56.** மோக்ஷத்தை இச்சிக்கிற தேவாதி ஸகல பக்தர்களாலும் இவர் உபாஸிக்கத்தகுந்தவர்; ஸம்ஸாரத்தில் முழுகியவர்களுக்கு இவரையன்றி தூக்கிவிடும் பிரபு எவர் இருக்கிறார்?.

**57–58.** மகாதேவரைத்தவிற வேறு எவரும் உத்தரிக்க வல்லவர் இல்லையென்று ச்ருதிமுறையிடுகிறது. ஆதலால், ஸர்வ பிரயத்னத்தாலும், முனிகளான நீங்கள் காலபாசத்தை நிவர்த்திக்க சந்திரசேகரரான சங்கரனையே கேட்கத்தகுந்தது; அவரையே தியானஞ்செய்யத்தகுந்தது; பூஜிக்கத்தகுந்தது.

**59.** இவ்விதமாகக் கூறிய ஸூதர் வார்த்தையை நைமிசாரண்ணியவாஸிகள் கேட்டு, சிவன் காலத்திற்குட்படாதவர் என்று தெரிந்துகொண்டார்கள்.

---

## அத்தியாயம் 9.

---

### (பூமி கிளம்பிய விவரம்).

---

**1.** நைமிசாரண்யவாஸிகள் கேள்வி:—ஹே! எல்லாமறிந்த பகவானே! விஷ்ணுவால் பூமி ஜலத்திலிருந்து எப்படி உத்தரிக்கப்பட்டது? அதை எங்களுக்குச் சுருக்கமாக சொல்லுங்கள்.

**2.** ஸூதர்.—(கல்பாரம்பத்தில்) எல்லாம் ஒரே ஜலமாயும், பயங்கரமாயும், பிரிவற்றும், இருளடைந்தும், அக்னிமுதலியவை

அன்றியும் இருந்தது. அப்பொழுது ஒன்றும் தோன்ருமலிருந்தது.

3. இவ்விதம் ஒன்ருய் பரவியிருக்கும் ஜலத்தில் ஸ்தாவராதி ஜகத்தெல்லாம் ஆழ்ந்திருக்கும்பொழுது அந்தப் பிரளய ஜலத்தில் விஷ்ணு உதயமானுர்.

4. ஹே! வேதமறிந்தவர்களே! கணக்கற்ற நேத்திரங்கள், பாதங்கள், சிரஸ்கள் உடைய அந்தப் புருஷனுக்கு நாராயணன் என்று பெயர்.

5–6. அவர் அந்த ஜலத்தில் பரமகாரணராயும், ஸத்யராயும், நித்யராயும், பரப் பிரம்மமாயும், உமாபதியாயும், ஈசனுயும், ஊர்த்வ ரேதஸாகவும் (ஞானம் மேல் நோக்கியிருக்கிறவராகவும்), விருபாக்ஷனுயும் இருக்கிற சிவனே இருதயத்தில் த்யானஞ்செய்துகொண்டு, யோக நித்திரையி லிருந்தார். அந்த நாராயணனேக் குறித்த அடியில்கண்ட ச்லோகத்தைக் கூறுகிருர்கள்.

7. "அப்பு (ஜலம்) என்பதற்கு 'நாரம்' என்று பெயர்; ஏனெனில் நரனிடமிருந்து அப்பு உண்டாயிற்று; அது எவருக்கு அயநமாக (இருப்பிடமாக) ஆயிற்ருே அவருக்கு நாராயணன் என்று பெயர்."

8–12. அந்த நாராயணன் தேவதேவனும், பரமாத்மாவான சிவனுடைய கட்டளையின்பேரில், ஜலத்தில் மூழ்கிக்கிடக்கும் பூமியை உத்தாரணஞ் செய்யும்பொருட்டு, பெரிய மலேக்கு ஒப்பான வராக ரூபத்தை தரித்து அட்டஹாஸஞ் செய்துகொண்டு, ரஸாதலத்தையும் பிரவேசித்து, கோரப்பற்களால், ஜலத்தில் மூழ்கியிருந்த பூமியை தூக்கினுர். அவருடைய கோரபற்களின் நுனியில் அனுப்பிரமாணமாய் விளங்கிய பூமியை ஜநோலோகவாஸிகளான ஸித்தர்களும் பிரம்ம ரிஷிகளும் பார்த்து, ஸந்தோஷத்துடன், அதிக பராக்கிரமசாலியான அந்த ஹரியை சிரத்தையுடன் பின்வருமாறு ஸ்தோத்திரத்தார்கள்.

13–34. "புராண புருஷரே! பரமாத்மாவே உமக்கு நமஸ்காரம்; ஜனனம், மரணம், ரோகம் முதலியவை யற்றவரே; சுத்-

தாத்மாவே; ஜீவநாயகரே; ஜகன்நாதரே; லோகாலோக ஸ்வரூப ரே; லோகபதியே உமக்கு நமஸ்காரம். சங்கு, சக்கிரம், கதை, பத்மம் இவை தரித்தவரே, ஹே! விஷ்ணுவே, ஹிரண்ய கர்ப்பரே, லக்ஷ்மீபதியே, பூபதியே உமக்கு நமஸ்காரம். ஸ்வம்புவே, ஸூத்ராத்மா முதலானவரே, விராட் பிரஜாபதியை நேரே சிருஷ்டித்தவரே உமக்கு நமஸ்காரம். விச்வ, தைஜஸ, பிராக்ஞ ரூபரே உமக்கு நமஸ்காரம். ஜாக்ரித, ஸ்வப்ந, சுழுப்திரூபரே உமக்கு நமஸ்காரம். அவஸ்தைகளுக்கு சாக்ஷிரூபரே, அவஸ்தை யற்றவரே, அச்சுதரே, துரியரே, விசுத்தரே, துரியாதீதரே உமக்கு நமஸ்காரம். ஸகலத்திற்கும் ஆதியே, பரமாத்மாவே, ஓம்காரரூபரே, சிவனே, மங்களத்தை பயப்பவரே, ஹே! பிரபோ, உமக்கு நமஸ்காரம். ஸர்வக்ஞரே, ஞானத்தைக் கொடுக்கிறவரே, ஜகத்காரணரே, விச்வரூபரே, பிரம்மாவே உமக்கு நமஸ்காரம். நித்யசுத்தரே, புத்தரே முக்தரே, ஸுகரூபரே, வாக்கிற்கும் மனதிற்கும் எட்டாதவரே உமக்கு நமஸ்காரம். அப்ரமேயரே, சாந்தரே, ஸ்வயம் பிரகாசரே, ஸாக்ஷியே, புராண புருஷரே, நற்கதியடையக் காரணரே உமக்கு நமஸ்காரம். ஆகாசாதி பிரபஞ்சரூபரே, மாயா ரூபரே, மாயைக்கும் ஸத்தைக் கொடுப்பவரே, ஜனார்த்தனா உமக்கு நமஸ்காரம். வாஸுதேவ, பிரத்யும்ன, ஸங்கர்ஷண, அநிருத்த ரூபா உமக்கு நமஸ்காரம். யோகரூபியே, யோகத்தால் அறியப்பட்டவரே, யோகிகளுக்கு இஷ்டபூர்த்தி செய்பவரே உமக்கு நமஸ்காரம்; மத்ஸ்ய கூர்மரூபரே உமக்கு நமஸ்காரம். வராக, நாரஸிம்ஹ, வாமன, பரசுராம, ராம, பலராமரே உமக்கு நமஸ்காரம். கிருஷ்ண, ஸர்வக்ஞா, கல்கிரூபரே, கர்மிகளுக்கு பலரூபியே, கர்ம ரூபியே உமக்கு நமஸ்காரம். முக்குணங்களுடையவரே, நிர்குணரே, அற்புதரே, அமரேசரே, மங்கள காரணரே உமக்கு நமஸ்காரம். நக்ஷத்ர, சந்திர, சூர்ய, இந்திர ரூபரே உமக்கு நமஸ்காரம். பத்மநாபா, சாரங்கபாணி, விசாலநேத்திரா, ஸ்ரீதரா, நாயகா உமக்கு நமஸ்காரம். ஸம்ஸாரதாபத்தை போக்கடிப்பதில் முக்யகாரணரே, ச்ரௌத ஸ்மார்த்த கர்மானுஷ்டானிகளுக்கு சீக்கிரத்தில் மோக்ஷமளிப்பவரே உமக்கு நமஸ்காரம். மற்றவர்களுக்கு ஸம்ஸாரத்தைக்

கொடுப்பவரே, அஸுராந்தகா, வித்யாதரர்களால் பூஜிக்கப்பட்டவரே உமக்கு நமஸ்காரம். க்ஷீரஸமுத்ரத்தில் சயனித்திருப்பவரே, வைகுண்டவாஸியே உமக்கு நமஸ்காரம். ஆசையாகிற ஸமுத்ரத்தில் மூழ்கினவர்களுக்கு வைராக்கியமென்ற தெப்பக்கட்டையை அளிப்பவரே உமக்கு நமஸ்காரம்.''

35. ஸூதர்.—இவ்விதம் ஸநகாதி ஸித்தர்களாலும், பிரம்மரிஷிகளாலும் ஸ்தோத்திரஞ்செய்யப்பட்ட அந்த வராகரூபியான ஸ்ரீமஹாவிஷ்ணு அவர்களுக்கு அனுக்கிரகம் செய்தார்.

36. பிறகு, முன்னர்போல் பூமியை ஸ்தாபித்து, வராகரூபத்தை நீக்கி, பிரம்ம ஸ்வரூபமாயினர்.

37–38. அந்த பூமி, தோணியைப்போல், ஜலத்தின் மத்தியில் ஸ்தாபிக்கப்பட்டது. அந்த பூமியில், சிவ பிரஸாதத்தால் பிரஜாபதியான பிரம்மா, பூர்வகல்பத்தில் லயமடைந்திருந்த ஸகல பதார்த்தங்களையும் முன்போல் சிருஷ்டிக்க ஆலோசித்தார்.

39. இவ்விஷயத்தை நைமிசாரண்ய வாஸிகள் கேட்டு எல்லோருக்கும் நன்மையைப் பயக்கும் ஸூதரைப் பூஜித்தார்கள்.

---

## அத்தியாயம் 10.

## (பிரம்ம சிருஷ்டி வரலாறு).

---

1. நைமிசாரண்யவாஸிகள்:—ஹே! புண்ய ச்ரேஷ்டரே! பிரம்மா, எவ்விதம், சராசரமான ஸகல ஜகத்தையும் சிருஷ்டித்தாரோ, அதைச் சுருக்கமாக எங்களுக்குச் சொல்லுங்கள்.

2. ஸூதர்:—சிருஷ்டிக்க இச்சையுடைய அந்த பிரம்மாவிற்கு, ஹே! பிராமணர்காள்! உமாபதியின் கட்டளையால், முன் கல்பத்தைப்போல, அபுத்தி பூர்வகமாயும் தமோமயமாயுமுள்ள ஓர் சிருஷ்டி உண்டாயிற்று. (இச்சையன்றி தானே நித்திரையிலிருந்து எழுந்திருப்பதுபோல, பிராணிகளின் கர்மவசத்தால் அவ்யக்தம் அல்லது அவித்யை உண்டாயிற்று).

3–4. தமஸ், மோகம், மகாமோகம், தாமிஸ்ரம், அந்ததா மிஸ்ரம் இவ்வித ஐந்து கிளைகளாக அந்த பரபிரம்மத்தினிடமிருந்து அவித்யை உண்டாயிற்று. ஹே! த்விஜர்காள்! இந்த தாமஸ சிருஷ்டி ஐந்து விதமாக வகுக்கப்பட்டிருக்கிறது.

5. ஹே! வேதமறிந்தவர்களே! உள்ளும் வெளியும் பிரகாசமற்றதும், அசைவற்றதும், அறிவற்றதுமான இந்த (விருக்ஷாதி முக்ய சிருஷ்டி) உண்டாயிற்று.

6. ஸகலத்தையும் சிருஷ்டிசெய்ய இச்சைகொண்ட பிரம்மா, இதைப்பார்த்து, இது பிரயோஜனமற்றது என்று எண்ணி வேறு யோஜனை செய்தார்.

7. அப்படி யோஜனைசெய்த பிரஜாபதியான பிரம்மாவிற்கு துக்கத்துடன்கூடிய திர்யக் ஸ்ரோதஸ் (கீழ்ப்பிரவாகம்) சிருஷ்டி உண்டாயிற்று.

8. பசு முதலியவைகள் இந்த கீழ்ப்பிரவாக சிருஷ்டி என்றறிக. இதுவும் பிரயோஜனமற்றது என்று மறுபடியும் யோஜிக்கலாயினர்.

9. அவ்விதம் யோஜித்த அவருக்கு ஹே! த்விஜர்களே! ஸாத்விகமாயும், ஊர்த்வ ஸ்ரோதஸாயும் (மேல்பிரவாகமாயும்), அதிக சுகத்தைக் கொடுக்கிறதாயுமுள்ள ஒரு சிருஷ்டி உண்டாயிற்று.

10–12. இதற்குத் தேவ சிருஷ்டியென்று பெயர்; இதுவும் பிரயோஜனமில்லையென்று பிரம்மா நினைத்து, ராஜஸமாயுள்ள சிருஷ்டியைச் செய்ய உத்தேசித்தார். அப்படி யோஜிக்குமளவில், சிவனுடைய கட்டளையால், அர்வாக் ஸ்ரோதஸ் என்று சொல்லப்பட்ட மனித சிருஷ்டி உண்டாயிற்று.

13. மறுபடியும் யோஜித்த பிரம்மாவிற்கு, மகாதேவன் கட்டளையின்பேரில், பூதம் முதலிய (பிரேத, பிசாசம் முதலிய) சிருஷ்டி உண்டாயிற்று. இவ்விதமாக பிரம்மாவிடமிருந்து ஐந்து விதமான சிருஷ்டிகள் உண்டாயின.

14–15. பிரம்மாவின் சிருஷ்டிகளில் முதல் மகத்தத்வமும், இரண்டாவது பூததன்மாத்திரைகள் என்று, வேதமறிந்தவர்களே! அறியுங்கள். மூன்றுவது வைகாரிகம் என்று சொல்லப்பட்ட இந்திரியங்களின் சிருஷ்டி; இம்மூன்றும் பிராகிருத சிருஷ்டி யென்பதாம்.

16. நான்காவது, முக்ய ஸர்கங்கள் என்ற பெயருடைய ஸ்தாவர சிருஷ்டி; ஐந்தாவது திர்யக் ஸ்ரோதஸ் என்ற பசுஜாதிகளின் சிருஷ்டி.

17. ஆறுவது, தேவசிருஷ்டி; ஏழாவது அர்வாக் சிருஷ்டி யென்றது (மனுஷ்யசிருஷ்டி); எட்டாவது, ஹே! முனிகாள்! பூதப்பிரேதாதிகள்.

18–19. ஒன்பதாவது, பிராகிருதமாயும் வைகிருதமாயுமுள்ள கௌமார சிருஷ்டி; இவைகளுள் உட்பிரிவுகள் கணக்கற்றவையாதலால், பிரயோஜனமற்றவையென்று நான் விஸ்தரிக்கவில்லை.

20. பிரம்மா, முதலில், ஸநக, ஸநாதந, ஸநந்தன, ரிபு, ஸநத்குமாரர் இவர்களை சிருஷ்டித்தார்.

21. இந்த பிரம்மாவின் மானஸ புத்திரர்களான இவ்வைவரும், பிரம்மாவிற்கு ஸமாநமாகவும், அதிக வைராக்யமுள்ளவர்களாகவும் ஆனுர்கள்.

22. இந்த பிரஜாபதி புத்திரர்கள் அகர்த்தாவாயுள்ள ஆத்மாவை அனுஸந்தானம் செய்ததாலும், சிவத்யானத்தில் ஒரேமனஸுடன் இருந்ததினுலும் சிருஷ்டிகர்மத்தை இச்சித்தவர்களன்று.

23. பிரம்மாவோ உலகங்களை சிருஷ்டியாதியின் மூலமாக, அம்பிகாபதியின் மாயையால் (அறிவில்லாமல்) மோகமடைந்தார்.

24–25. அப்படியிருந்தவரைப்பார்த்து புருஷோத்தமரும், பிதாவாயுள்ள நாராயணன் புத்திரரான பிரம்மாவை எச்சரித்தார். ஜகத்காரணரான விஷ்ணுவால் எச்சரிக்கப்பட்ட நான்முகன் ஹரு

தநரான விஷ்ணுவை த்யாநஞ்செய்து கடுமையான தவத்தைச் செய்தார். இவ்விதம் சிலகாலம் தவஞ்செய்தும் ஒன்றையும் அடையவில்லை.

**26.** பிறகு பிரம்மாவிற்கு அதிக கோபம் உண்டாயிற்று; அக்கோபத்தால் கண்களிலிருந்து நீர் துளிகள் விழுந்தன.

**27.** இச்சமயத்தில் கருணாநிதியான பரமேச்வரன், தயையால், இந்த பிரம்மாவிற்கு உபதேசஞ்செய்தார்.

**28.** மறுபடியும் ஹே! விப்ரர்காள்! தேவதேவரான அம்பிகாபதியின் பிரஸாதத்தால் அந்த நான்முகன் அதிகோரமான தவஞ்செய்தார்.

**29–37.** சிருஷ்டி நிமித்தம், அந்தப் பிதாமகனுடைய புருவத்திற்கும் நாசிக்கும் மத்தியமான அவிமுக்தம் என்ற பிரதேசத்தினின்று, திருமூர்த்திகளில் ஒருவரும், நித்யரும், எல்லா தேவர்களால் நமஸ்கரிக்கப்பட்டவரும், கருணாநிதியுமான மஹாதேவன், அர்த்தநாரீச்வர ரூபத்துடன் வெளிப்பட்டார். அந்த அஜனாயும், சங்கரனாயும், ஒளிராசியாயும், உமாபதியாயும், சர்வக்ஞராயும் ஸர்வகர்த்தாவாயும், நீலலோகிதர் என்ற் பெயருடையவரை, பிரம்மா பார்த்து, பக்தியுடன் நமஸ்கரித்து, ஸந்தோஷத்துடன் ஸ்தோத்திரஞ்செய்து, அந்த தேவதேவரைப்பார்த்து 'அநேக பிரஜைகளை நீரே சிருஷ்டிசெய்யும்' என்று சொன்னார். இந்த பிரம்மதேவனுடைய வாக்கைக்கேட்டு அந்த ஈசன் தனக்குச் சமமாயுள்ள ருத்திரர்களைச் சிருஷ்டித்தார். அந்த ஈசனைப்பார்த்து ஜகத்பிரபுவான பிரம்மா 'ஜனன மரண பயத்துடன் கூடிய பிரஜைகளைச் சிருஷ்டிசெய்யும்' என்று சொன்னார். அதைக்கேட்ட கருணாநிதியான மகாதேவன், புன்சிரிப்புடன், 'மங்களமற்ற இந்த பிரஜைகளை நான் சிருஷ்டிக்கமாட்டேன்; துக்க ஸமுத்திரத்தில் மூழ்கிய இந்த பிரஜைகளுக்கு (தக்ஷிணாமூர்த்தி) குரு ரூபமாகி, வேதாந்த ஞானத்தைக்கொடுத்து உத்தாரணஞ் செய்வேன்; துக்கத்துடன் கூடிய இந்தப் பிரஜைகளை, ஹே! பிரஜாபதியே நீரே சிருஷ்டிசெய்யும்' என்றார்.

**38-41.** இவ்விதமாகத் திருவாய்மலர்ந்தருளிய அந்த நீல லோகிதரென்ற பகவான் மறைந்தார். பின்பு, அவருடைய பிர ஸாதத்தால் பிரம்மா கல்பம் முடியும்வரை ஜீவித்திருக்கும் பிரஜா சிருஷ்டியில் பிரவிருத்தித்த ருத்திரர்களை நிவர்த்தித்து, சப்தாதி பூதங்களை பஞ்சீகரணம்செய்து, அவைகளினின்றும் ஸ்தூலமான ஆகாசம், வாயு, அக்நி, ஜலம், பூமி, பர்வதம், ஸமுத்ரம், விருக்ஷம் முதலியவையும், கலைமுதல் யுகம் வரையிலுள்ள காலங்களையும், இன்னும் மற்றவைகளையும் அந்த பிரம்மதேவன் சிருஷ்டித்தார். மற்றும் பல ஸாதநங்களையும் சிருஷ்டித்தார்.

**42-44.** தன் நேத்திரங்களிலிருந்து மரீசி ரிஷியையும், ஹிருதயத்திலிருந்து பிருகுவையும், சிரஸிலிருந்து அங்கிரஸரை யும், உதாநவாயுவிலிருந்து புலஸ்தியரையும், வியாநவாயுவிலிருந் து புலஹரையும், அபாநத்திலிருந்து கிருதுவையும், பிராணனி லிருந்து தக்ஷப்பிரஜாபதியையும், காதுகளிலிருந்து அத்ரியையும், ஸமாநத்திலிருந்து வஸிஷ்டரையும், ஸங்கல்பத்திலிருந்து தர்மரை யும், இவ்விதமாக இந்த பிரம்மதேவன் உத்தம ஸாதகர்களை (ஒன் பது பிரஜாபதிகளை) சிருஷ்டித்தார்.

**45.** ஹே! பிராமணர்களே! மறுபடியும் பிரம்மதேவனு டைய கட்டளையின்பேரில், ஸங்கல்பத்திலிருந்து உத்பத்தியான தர்மர், மற்ற ஸாதகர்களின் (மரீசி முதலானவர்களின்) கோரிக் கைக்கிணங்கி, மநுரூபத்தையடைந்தார். (ஒன்பது பிரஜாபதிக ளின் ஸங்கல்பத்தின்பேரில் உத்பத்தியான தர்மமே மநுரூபமான தால், தர்மம் என்ற வேறு ஒரு பிரஜாபதி இல்லையென்று பாஷ் யத்தில் சொல்லப்படுகிறது).

**46.** பிறகு, நான்முகன் தன் பிருஷ்ட பாகத்திலிருந்து அஸுரர்களை சிருஷ்டித்து, உடனே அந்த சரீரத்தை தள்ளி வேறு சரீரத்தை யெடுத்தார்.

**47-50.** அந்த பிரம்மாவால் தள்ளப்பட்ட சரீரம் மனிதர்க ளுக்கு இரவாக உதவிற்று; நூதன சரீரத்தையெடுத்த அந்த பிரம் மாவின் அதிக ஸத்வத்துடன் கூடிய முகத்தினின்றும் தேவர்களை

சிருஷ்டித்து அந்த சரீரத்தையும் தள்ளிவிட்டார்; ஹே! முனிகளே! அது மனிதர்களுக்கு அழகான பகலாக உதவியது. பிறகு, நான்முகன், ஸத்வத்தோடுகூடிய ஒரு சரீரத்தை எடுத்து பிதுர்க்களை சிருஷ்டித்து, அந்த சரீரத்தை த்யாகஞ்செய்து, மற்றொரு சரீரத்தை எடுத்தார். இவ்விதமாக நான்முகன் தள்ளிவிட்ட சரீரம், சிவனுடைய கட்டளையால், (மனிதர்களுக்கு) ஸந்தியாக உதவியது.

**51–53.** பிரம்மாவின் ரஜோகுணம் நிறைந்த சரீரத்திலிருந்து மனிதவர்க்கத்தை சிருஷ்டித்து, அந்த சரீரத்தை த்யாகஞ் செய்து, வேறு சரீரமடைந்தார். அப்படி த்யாகஞ்செய்த சரீரம் நிலாவெளிச்சமாக உதவியது. ரஜஸூடன்கூடிய சரீரத்தினின்றும் பிரம்மா, பசிதாகத்தால் பீடிக்கப்பட்ட ராக்ஷஸர்கள், பன்னகர், பூதம், கந்தர்வர்கள் இவர்களை அதிக பலத்துடன் சிருஷ்டித்தார்.

**54–56.** பிரம்மா, மறுபடியும், வேறு சரீரமடைந்து பக்ஷிகள், கழுதை, குதிரை, யானை, கோவேறுகழுதை, மிருகங்கள், இன்னும் அநேக வர்க்கங்களை சிருஷ்டித்தார். அவ்விதமே ஔத்காத்ரம் (ஸாமம்), ரிக்கு, திருவிருத், ஸோமம், ரதந்தரம், அக்நிஷ்டோமம் முதலிய ஸகலத்தையும், அதனதன் அங்கங்களுடன், வேத சப்தத்தால் சிருஷ்டித்தார்.

**57.** ஹே! முனிகளே! பிரம்மாவால் முதலில் சிருஷ்டிக்கப்பட்ட பஞ்சீகாரணம் செய்யப்பட்ட மகாபூதங்கள் ஸகலத்திற்கும் காரணமென்று பிரம்மவாதிகளால் சொல்லப்படுகிறது.

**58.** இவ்விதமாக, ஜகத்திற்கு அந்தராத்மாவாயிருக்கிற பிரஜாபதி, இந்த விசித்திரமான சிருஷ்டியை ஸ்வப்னத்தோற்றம் போல் உண்டாக்கி, அந்த மகேசனுடைய பிரஸாதத்தால் மறுபடியும் தமோரூபத்தை யடைந்தார். (இந்த தமோரூபம் தத்வநிஷ்டை; லௌகிக திருஷ்டிக்கு விஷயமன்றாகையால் தமோரூபம் என்று சொல்லப்பட்டது).

---

## அத்தியாயம் 11.

## (ஹிரண்யகர்ப்பர் முதலான விசேஷ சிருஷ்டி).

1. நைமிசாரண்யவாஸிகள்கேள்வி:—இவ்விதமாக பிரம்மா ஸ்தாவர ஜங்கமங்களைச் சிருஷ்டித்த பிறகு, ஹே! பகவான்! அவர் ஏது செய்தார் என்பதைக் கூறுங்கள்.

2–3. ஸூதர்:—லயத்திற்கு காரணமான தமஸால் மூடப்பட்ட அந்தப் பிரம்மா, அந்த தமோரூபத்தை விலக்கி, சிருஷ்டிக்கப்பட்ட பதார்த்தங்கள் விருத்தியாவதற்கு, ஹிரண்யகர்ப்பர் என்ற பிரமத்தின் ரூபத்தை யடைந்தார். அந்த ஹிரண்யகர்ப்பரையும், மற்ற (ஸூத்ராத்மா) வையையும் குறித்து சொல்லுகிறேன்.

4. சப்த, ஸ்பர்சமுதலிய பஞ்சமகா பூததன்மாத்திரைகளுடன் ஸத்வகுணம் சேர்ந்து (ஐந்து) ஞானேந்திரியங்கள் உண்டாயின.

5. அவ்விதமே, தன்மாத்திரைகளுடன் ரஜோகுணம் சேர்ந்து (ஐந்து) கர்மேந்திரியங்கள் உண்டாயின.

6. பஞ்சமகா பூதங்களிலுள்ள ஞான சக்திகள் ஒன்றாகச் சேர்ந்து, எல்லாவற்றிற்கும் பொதுவான, மனோ இந்திரியம் உண்டாயிற்று.

7. திருமூர்த்திகளிலுள்ள பிரம்மா இந்த மனோ இந்திரியத்தை அபிமானிக்கும்பொழுது ஹிரண்யகர்ப்பர் என்று, சூக்ஷ்மத்தையறிந்த முனிகளால், சொல்லப்படுகிறார்.

8. ஹே! பிரம்ம வித்துக்களே! அவ்விதமே கர்மேந்திரியங்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து, ஈசன் கட்டளையால், பஞ்சப் பிராணங்களுக்கும் பொதுவாகிய பிராணன் உண்டாயிற்று.

9–10. அதற்கு அபிமான தேவதையான விஷ்ணு ஸூத்ராத்மாவென்று சொல்லப்படுகிறார். திரு மூர்த்திகளி லடங்கிய

ஈசன், மேற்கூறிய ஹிரண்யகர்ப்பர், ஸூத்ராத்மா இவர்களிருவருக்கும் அபிமானியாகி 'அந்தர்யாமி' என்ற நாமத்தால் வேதங்களில் புகழப்படுகிருர்.

**11–12.** ச்ருதியால் நிச்சயிக்கப்பட்ட ஹிருண்ய கர்ப்ப ரூபத்தையடைந்த அந்த பகவஞன பிரம்மா, மாயையால், தன் சரீரத்தை இரண்டு பாகங்களாக பிரித்து, பாதி புருஷனும், பாதி ஸ்திரீயுமானுர். இந்த ஸ்திரீயால் விராட்டை (ஸ்தூல பஞ்ச பூதங்களுடன் கூடிய பிரம்மாண்டத்திற்கு அபிமானியை) சிருஷ்டித்தார். மறுபடியும் பிரம்மா இந்த ஸ்திரீயால் ஸ்வராட்டையும் (பிரம்மாண்டத்திலடங்கிய லிங்க சரீராபிமானியையும்) சிருஷ்டித்தார்.

**13–14.** அப்படியே அந்த லோகநாயகர் ஸம்ராட்டையும் (மேற்கூறிய பிரம்மாண்டம், லிங்க சரீரம் இவ்விரண்டிற்கும் காரணபூதமான அவ்யாகிருதத்திற்கு அபிமானியையும்) சிருஷ்டித்தார். ஹே! விப்ர சிரேஷ்டர்களே! இம்மூவரும் பிரம்மாண்டத்தால் சூழப்பட்டிருந்தாலும், அந்த விராட் ஆத்மா முக்யமாய் பிரம்மாண்டாபிமானியாகிருர்; ஸ்வராட், ஸ்வரூபம் (ஸமஷ்டி லிங்க சரீரம்) இவ்விரண்டிற்கும் ஸம்ராட் அபிமானியென்று ச்ருதி கூறுகிறது.

**15.** ஹே! விப்ரர்காள்! அந்த விராட் ஸ்வாயம்பு மனுவையும், சதரூபாவென்ற தபஸியான ஒரு யோகினி ஸ்திரீயையும் சிருஷ்டித்தார்.

**16–18.** அழகான அந்த ஸ்திரீ மனுவால் கிரகிக்கப்பட்டு 'பிரிய விருத்தர்' என்பவரையும் 'உத்தானபாதர்' என்பவரையும், இரண்டு பெண்களையும் உத்பத்திசெய்தாள். உத்தானபாதருக்கு பிறந்த (பிரஸூதி என்ற) கன்னிகையை தக்ஷப்பிரஜாபதிக்கும், பரிசுத்தமான ஆகூதியென்ற பெண்ணை (ருசி என்ற) மானஸப் பிரஜாபதிக்கும், கொடுத்தார். ஆகூதியால் மானஸ பிரஜாபதிக்கு 'யக்ஞயன்' என்ற பிள்ளையும், 'தக்ஷிணு' என்ற பெண்ணும் உண்டானுர்கள்.

19. அந்த யக்ஞயனுக்கு (தக்ஷிணாவினால்) பண்ணிரண்டு புத்திரர்கள் உண்டானார்கள். தக்ஷப்பிரஜாபதிக்கு 24 பெண்கள் உண்டானார்கள்.

20. அவர்களில் சிரத்தைமுதலான பதிமூன்று கன்னிகைகள் தர்மருக்கு தக்ஷரால் கொடுக்கப்பட்டார்கள்; அவருடன்கூடி ஸுகமாய் வாழ்ந்துவந்தார்கள்.

21. மற்ற க்யாதிமுதலான பதினொன்று கன்னிகைகளை தக்ஷரைவிலக்கி பாக்கி எட்டு பிரஜாபதிகளுக்கும், சிவன், பிதிரு, அக்னி இவர்களுக்கும் முறையே ஒவ்வொரு கன்னிகையை விவாகஞ்செய்து கொடுத்தார். இவ்விதம் ஹே! த்விஜர்களே! பிராணிகளின் கர்மாநுஸாரமாக, அம்பிகாபதியின் கட்டளையால், கணக்கற்ற மனிதர்கள் உண்டானார்கள்.

22. எல்லாம் ஸ்வபாவத்தால் உண்டாகின்றது என்று சிலர் கூறுவது ஸித்திக்காது; ஏனெனில் தேசகாலம் முதலியவைகளை அனுசரித்து எல்லாம் உண்டாகிறது.

23. கர்மத்தால் ஸகலமும் உண்டாகிறது என்று சிலர் சொல்லுகிறார்கள்; ஹே! முனிகாள்! இது ச்ருதி, ஸ்மிருதி வசனங்களுக்கு விருத்தம்.

24–31. முன்னொருகாலத்தில் ஹிமயமலையின்சாரலில் வியாஸரும், ஸுமந்து, ஜைமினி, வைசம்பாயனர், பைலர், கபிலர், பதஞ்சலி, அக்ஷபாதர், கணாதர், அங்கிரஸர், முகுந்தர், மோசகர், மஹாகாலர், மஹாமதி, காலரூபர், கலாமாலீ, காமரூபர், கபித்வஜர், வேதக்ஞர், வைதிகர், வித்வான், வித்வேஷி, வேணுவாஹநர், பால்வலர், பகுலர், வன்னி, வச்சிரதண்டர், பாரந்தபர், பாபநாசர், பவித்திரர் முதலான அநேக மகரிஷிகள் சிரத்தையுடன் ஒருவருக்கொருவர் விசாரணை செய்துகொண்டு, ஸந்தேகம் நீங்காமல், மகத்தான தவஞ்செய்தார்கள். அந்த சமயத்தில் கருணாநிதியும், பரமேச்வரரான ருத்திரர், ஸந்தோஷத்துடன், அவர்கள்முன் தானே தோன்றினார். அதைப்பார்த்து எல்லா முனிகளும், பிரஸன்னமான இந்திரிய மனதுடன், முக்கண்ணரான பகவானை வெகு

பக்தியோடு நமஸ்கரித்து, அஞ்சலிபந்தத்துடன் எல்லோரும் (கேள்வி) கேட்டார்கள்.

**32–33.** தேவதேவரும், மகாதேவரும், ஸர்வக்ஞரும், கருணாநிதியும், கபர்தியும், நீலகண்டரும், காலகாலரும், மகேச்வரரும், சந்திரசேகாரும், உமாபதியுமான ஸோமஸூர்ய அக்னியுடன் கூடிய முக்கண்ணர் முனிகளுடைய சந்தேகத்தைத் தீர்க்கும்படியான மதுரமான வாக்யத்தை கூறினார்.

**34–36.** ஈச்வரன்:—ஹே! முனீச்வரர்களே! ஸ்வபாவத்தால் ஜகத்திற்கு உத்பத்தி, ஸ்திதி, நாசம் உண்டாகாது; என்னால் மாத்திரமும் முடியாது; கர்மத்தால் மாத்திரமும் முடியாது; (பின் எவ்விதத்தால் எனில்) பிராணிகளின் கர்மபரிபாகத்தாலும், என்னாலும் ஜகத்தின் உத்பத்தி, ஸ்திதி, நாசம் உண்டாகிறது. இவ்விதமாக கர்மானுரூபத்தாலும், என்னாலும் சேர்ந்து உண்டாகிற ஜகத்தின் உத்பத்தி முதலியவை நடபெறுகிற இந்த ஸ்வாபாவம் தான் வேதார்த்த நிர்ணயம்.

**37–39.** ஸூதர்:—இவ்விதமாக, ஸர்வக்ஞராயும், கருணாநிதியுமான மகாதேவன் சொல்லிவிட்டு, முனி ச்ரேஷ்டர்களை அனுகிரஹஞ்செய்து அந்த விடத்திலேயே மறைந்தார். அம்முனிகளும், பிறகு, ஒருவருக்கொருவர் ஸம்பாஷணைசெய்து, மிகப் பிரீதியை யடைந்து சென்றார்கள். நீங்களும், ஹே! முனிச்ரேஷ்டர்களே! பிராணிகளின் கர்மாநுஸாரமாக ஈசன் ஜகத்தை சிருஷ்டித்து ஸம்ஹாரம் செய்கிறார் என்று அறியுங்கள்.

**40.** இதைக்கேட்ட நைமிசாரண்ய தபஸிகளான முனி சிரேஷ்டர்கள் சந்தோஷ மனதுடனும், பக்தியுடனும் ஈசனை பூஜித்தார்கள்.

---

## அத்தியாயம் 12.

### (ஜாதி நிர்ணயம்).

**1.** நைமிஷீயர்கள்:—ஹே! பகவான்! எல்லா சாஸ்திரார்த்தங்களை அறிந்தவர்களுக்குள் மேலானவரே! வேதபிரமாணமுள்ள ஜாதிபேதங்களைப்பற்றி எங்களுக்குச் சொல்லும்.

2. ஸூதர்:—லோகோபகாரமாக, சிரத்தையுடன், ஜாதி நிர்ணயத்தைச் சொல்லுகிறேன். முன்னொருகாலத்தில் அகஸ்தியர் விருஷபவாகனரை (சிவனை) நமஸ்கரித்து (இதைக்) கேட்டார்.

3–4. பூர்வத்தில் ஹே! முனிகாள்! எல்லாம் பிரளயத்தில் லயமடைந்து, இருளால் மூடப்பட்டிருந்தபொழுது, பிரம்மத்தின் அம்சமாயும், மகாகாந்தியாயும், அநேக தலைகளோடுகூடிய நாராயணன் என்ற பெயருடைய விஷ்ணு க்ஷீரஸமுத்திரத்தில், ஈசனை சிந்தித்து, யோகநித்திரையிலிருந்தார்.

5. யோக நித்திரையிலிருந்த விஷ்ணுவினுடைய நாபியிலிருந்து பாலசூரியனுக்கொப்பான ஒரு பெரிய தாமரைமலர் உண்டாயிற்று.

6. அத்தாமரை மலரில், எல்லா ஜகத்திற்கும் பதியான ஹிரண்யகர்ப்பர் என்ற பெயருடைய பிரம்மதேவன், சிரேஷ்டமான ரூபத்தை வகித்து, தோன்றினார்.

7–8. ஹே! வேதமறிந்தவர்களில் பெரியவர்களே! மகாதேவருடைய ஆக்ஞையாலும், பூர்வகல்ப வாஸனைகளுடன்கூட, அந்த பிரம்மதேவனுடைய முகத்திலிருந்து ஹே! தபஸ்விகாள்! பிராமண ஸ்திரீகளுடன் பிராமணர்கள் உண்டானார்கள். அந்த பிரம்மாவின் புஜங்களிலிருந்து ஸ்திரீகளுடன் க்ஷத்திரியர்கள் உண்டானார்கள்.

9. சிவ ஆக்ஞையால் தொடைகளிலிருந்து ஸ்திரீகளுடன் வைச்யர்களும், பாதங்களிலிருந்து ஹே! வேதமறிந்தவர்களே! ஸ்திரீகளுடன் சூத்திரர்களும் உண்டானார்கள்.

10. அந்தந்த ஜாதியார் தங்கள் ஜாதி ஸ்திரீயுடன் கூடி, விதிபூர்வகமாய் உத்பத்தியான மனிதர்கள் அந்தந்த ஜாதியாராவர்கள். (பிதாவைக்காட்டிலும்) அடுத்த கீழ்பட்டஜாதி ஸ்திரீயால் உத்பத்தி செய்யப்பட்டவனுக்கு அனுலோமன் என்று பெயர்.

11. (பிதாவைக்காட்டிலும்) மேல்பட்டஜாதி ஸ்திரீயால் உத்பத்தியானவனுக்கு பிரதிலோமன் என்று பெயர். அனுலோம

னால் அனுலோம ஸ்திரீக்கு ஜனித்தவனுக்கு ஆந்தராளிகன் என்று பெயர் (நடுவில் உண்டானவன்).

12. பிரதிலோமனால் பிரதிலோமஸ்திரீக்கு ஜனித்தவன் 'விராத்யன்' என்று சொல்லப்படுவான். பிராமண சோரபுருஷனால் ஸுமங்கலி பிராமண ஸ்திரீக்கு உண்டானவன் 'குண்டன்' என்றும், விதவ பிராமண ஸ்திரீக்கு உண்டானவன் 'கோளகன்' என்றும் சொல்லப்படுவார்கள்.

13. பிராமணனால் க்ஷத்திரிய ஸ்திரீக்குப் பிறந்தவன் 'ஸவர்னன்' என்று சொல்லப்படுவான்.

14. க்ஷத்திரிய ஸ்திரீயிடத்தில் பிராமணனால் சோரத்தனத்தால் உண்டானவனுக்கு 'நக்ஷத்திரஜீவி' என்று பெயர். ஹே! வேதவித்தமர்களே! பிராமணனால் வைச்ய ஸ்திரீயிடம் பிறந்தவனுக்கு 'நிஷாதன்' என்று பெயர்.

15. இவளிடம் சோரத்தனத்தால் உண்டானவனுக்கு 'கும்பகாரன்' என்றும், 'ஊர்த்தவ நாபிதன்' என்றும் பெயராம்.

16. பிராமணனால் சூத்ரஸ்திரீயிடம் பிறந்தவனுக்கு 'பாரசவன்' என்றும், சோரத்தால் ஜனித்தவனுக்கு 'நிஷாதன் என்றும் பெயர்களாம்.

17. பிராமணனால் தௌஷ்யந்திக்கு (சூத்திர ஸ்திரீக்கு க்ஷத்திரியனால் உண்டானவள்) பிறந்தவன் 'ஆபீதன்' என்றும் பிராமணனால் ஆயோகஸ்திரீக்கு (சூத்திரனுக்கு வைச்ய ஸ்திரீயால் பிறந்தவள்) ஜநித்தவனுக்கு 'பிங்களன்' என்று பெயர்களாம்.

18. அறிந்தவர்கள், பிராமணஸ்திரீக்கு க்ஷத்திரியனால் பிறந்தவனுக்கு 'ஸூதன்' என்றும், சோரத்தனத்தால் உண்டானவனுக்கு 'ரதகாரன்' என்றும் சொல்லுவார்கள்.

19. சோரத்தனத்தால் க்ஷத்திரஸ்திரீயிடம் வைச்யனால் உண்டானவனுக்கு 'போஜன்' என்றும், வைச்யஸ்திரீயிடம் க்ஷத்திரியனால் உண்டானவனுக்கு 'மாஹிஷ்யன்' என்றும், 'அம்பஷ்டன்' என்றும் சொல்லப்படுவார்கள்.

20. சோரத்தனத்தால் (க்ஷத்திரியனுக்கு வைச்ய ஸ்திரீயால்) உண்டானவனுக்கு 'அவிரன்' என்று பெயர். க்ஷத்திரியனால் சூத்ரஸ்திரீக்கு உண்டானவன் 'தௌஷ்யந்தன்' எனப்படுவான்.

21. ஹே! த்விஜர்காள்! சோரத்தனத்தால் (க்ஷத்திரியனால் சூத்ரஸ்திரீக்கு) உண்டானவனுக்கு 'சூலிகன்' என்று பெயர்; வைச்யனால் பிராமணஸ்திரீக்கு உண்டானவன் 'க்ஷத்தா' வென்று சொல்லப்படுவான்.

22. சோரத்தனத்தால் (வைச்யனால் பிராமண ஸ்திரீக்கு) உண்டானவன் 'மிலேச்சன்' என்று சொல்லப்படுவான். வைச்யனால் க்ஷத்திரிய ஸ்திரீயிடம் உண்டானவனுக்கு 'சாலிகன்' 'மாகதன்' என்ற பெயர்களாம்.

23. சோரத்தனத்தால் (வைச்யனால் க்ஷத்திரிய ஸ்திரீக்கு) உண்டானவன் 'புளிந்தன்' எனப்படுவான்; வைச்யனால் வைச்ய ஸ்திரீயிடம் சோரத்தனத்தால் ஜநித்தவனுக்கு 'மணிகாரன்' என்று பெயராம்.

24. வைசியனால் சூத்ர ஸ்திரீயிடம் உண்டானவனுக்கு 'உக்ரன்' என்று சொல்லப்படும்; இவனிடம் சோரத்தனத்தால் உண்டானவனுக்கு 'கடகாரன்' என்று பெயர்.

25. சூத்ரனால் பிராமண ஸ்திரீக்கு ஜனித்தவன் 'சண்டாளன்' எனப்படுவான்; சோரத்தனத்தால் உண்டானவனுக்கு 'பாஹ்யதாஸன்' என்று பெயர்.

26. சூத்ரனால் க்ஷத்திரிய ஸ்திரீயிடம் உண்டானவன் 'வைதேஹன்' என்றும், 'புல்கஸன்' என்றும் சொல்லப்படுவான்; சோரத்தனத்தால் ஜனித்தவன் 'வேளவன்' எனப்படுவான்.

27. சூத்ரனால் வைச்ய ஸ்திரீயிடம் பிறந்தவனுக்கு 'பத்தநசாலிகன்' என்று பெயர்; சோரத்தனத்தால் ஜநித்தவனுக்கு 'சக்ரீ' என்றும் பெயர்.

28–30. சோரத்தனத்தால் சூத்ரனுல் சூத்ர ஸ்திரீயிடம் உண்டானவனுக்கு 'மாணவிகன்' என்று பெயர்; அம்பஷ்ட ஸ்திரீக்கு ஸவர்னனுல் (க்ஷத்திரிய ஸ்திரீக்கும் பிராமணனுக்கும் ஜனித்தவனுல்) உண்டானவனுக்கு 'ஆக்னேயன்' 'நர்த்தகன்' என்ற பெயர்கள். காணு ஸ்திரீயிடம் (சூத்ர ஸ்திரீயிடம் வைச்யனுல் உண்டானவன்) ஜனித்தவனுக்கு 'மாஹிஷ்யன்' முதலிய பெயராம். அவன் தொழில் தச்சு, ரதம்செய்கிறது, சில்பிவேலை, வர்த்தகம், லோகவேலை, கம்மாறவேலை.

31. பிராமண ஸ்திரீயிடம் உக்கிரனுல் உண்டானவனுக்கு 'தக்ஷவிருத்தி' என்று பெயர்; வைச்ய ஸ்திரீயிடம் உக்கிரனுல் உண்டானவன் 'ஸமுத்ரன்' என்று சொல்லப்படுவான்.

32. பிராமண ஸ்திரீயிடம் நிஷாதனுல் உண்டானவன் 'நாபிதன்' எனப்படுவான்; க்ஷத்திரிய ஸ்திரீயிடம் நிஷாதனுல் உண்டானவனுக்கு 'அதோநாபிதன்' என்று பெயர்.

33. விப்ர ஸ்திரீயிடம் நாபிதனுல் ஜநித்தவனுக்கு 'வேணுகன்' என்று பெயர்; க்ஷத்திரிய ஸ்திரீயிடம் நாபிதனுல் ஜனித்தவன் 'கர்மகாரன்' என்று சொல்லப்படுவான்.

34. தௌஷ்யந்தனுல் பிராமண ஸ்திரீயிடம் 'பாகலப்தன்' உண்டாகிறுன், நிஷாதனுல் வைச்ய ஸ்திரீயிடம் 'ஸூநிஷாதன்' ஜனிக்கிறுன்.

35. ஹே! பண்டித உத்தமர்காள்! பண்டிதர்களால் வைதேகனுல் பிராமண ஸ்திரீயிடம் உண்டானவன் 'ரஜகன்' என்று அறியவேண்டும்.

36. எல்லா சாஸ்திரமறிந்தவர்களால் சண்டாளன் முதலானவர்களால் பிராமண ஸ்திரீயிடம் பூமியில் பிறக்கிற புமான் 'ச்வபசன்' என்று அறியவேண்டும்.

37. ச்வபசனுல் பிராமண ஸ்திரீயிடம் ஜனித்தவனுக்கு 'குஹகன்' என்றும், சண்டாளனுல் வைச்ய ஸ்திரீயிடம் ஜனித்தவனுக்கு 'தந்தகவேளகன்' என்றும் பெயர்களாம்.

38. இவனால் (சண்டாளனால்) சூத்ர ஸ்திரீயிடம் உண்டானவன் 'ஆச்ரமகன்' எனப்படுவான்; சூத்ர ஸ்திரீயிடம் பிரதிலோம நிஷாதனால் உண்டானவன் 'பைரவன்' ஆகும்.

39. அறிந்தவர்கள் மாகதனால் சூத்ர ஸ்திரீயிடம் ஜநித்தவன் 'குகுந்தன்' என்றும், மாகதனால் க்ஷத்திரிய ஸ்திரீயிடம் ஜநித்தவன் 'கனகன்' என்றும் சொல்லுவார்கள்.

40. கனகனால் க்ஷத்திரிய ஸ்திரீயிடம் 'உத்பந்தன்' உண்டாகிறான்; அயோகனால் பிராமண ஸ்திரீயிடம் ஜநித்தவனுக்கு 'சர்மகாரன்' என்று பெயர்.

41. விப்ர விராத்யனால் பிராமண ஸ்திரீயிடம் ஜனித்தவன் 'பந்திகன்' என்றும், க்ஷத்திரிய விராத்யனால் க்ஷத்திரிய ஸ்திரீயிடம் ஜனித்தவன் 'கல்லன்,' 'மத்தன்,' 'மல்லகன்' என்றும் பெயர்களாம்.

42. பூமியில் மல்லனால் 'பிச்சலன்' என்றும், பிச்சலனால் 'நடன்' என்றும் ஜனிக்கிறார்கள். நடனால் 'கர்ணன்' என்றும், கர்ணனால் 'காமன்' என்றும் ஜனிக்கிறார்கள்.

43. அவனால் (கர்மனால்) க்ஷத்திரிய ஸ்திரீயிடம் 'த்ரமிலன்' ஜனிக்கிறான்; வைச்ய ஸ்திரீயிடம் வைச்ய விராத்யனால் 'ஸுதன்வா' உண்டாகிறான்.

44. ஸுதன்வாவினால் 'அவார்யன்' என்றும், 'பாருஷன்' என்றும் ஜனிக்கிறார்கள்; பாருஷனால் 'த்விஜன்மா'வும், இவனால் 'மைத்ரன்,' மைத்ரனால் 'ஸாத்வதன்' உண்டாகிறார்கள்.

45. மைத்ரனால் 'வைதேஹகன்,' 'மாதங்கன்' ஜனிக்கிறார்கள்; மாதங்கனால் 'ஸூதன்' உண்டாகிறான்; ஸூதனால் 'தஸ்யு' உண்டாகிறான்.

46. தஸ்யுவால் உண்டானவன் 'மாலாகாரன்'; பிரதிலோம நிஷாதனால் 'கைவர்த்தகன்' ஜனிக்கிறான்.

47. திலகாரி ஸ்திரீயிடம் அயோகனால் உண்டானவன் நீலம் முதலிய வர்ணங்களை விக்கிரயம் செய்பவனாவான்.

48. 'சாரு' என்ற பெயருடைய காருஜாதி ஸ்திரீயிடம் நிஷாதனால் 'சர்மஜீவி' ஜனிக்கிறான்.

49. என் ஸத்குருவின் கிருபையால், முன் அகஸ்த்திய ரிடம் நான் கேட்டபடி, சுருக்கமாக ஜாதி நிர்ணயம் உங்களுக்கு என்னால் சொல்லப்பட்டது.

50. எந்த மனிதன், தன் சக்திப்படி, தன் ஜாதி கர்மத் தைச் செய்கிறானோ அவனுக்கே ஸம்ஸாரத்திலிருந்து முக்தி உண்டென்று வேதத்தின் கட்டளை.

51. எவ்விதம் பசு முதலியவைகளுக்கு ஜன்மத்தால் ஜாதி யே ஒழிய வேறு ஒன்றாலும் இல்லையோ, அவ்விதம் எல்லோருக் கும் ஜன்மத்தால் ஜாதியேதவிர வேறு கோடி கர்மங்களாலும் ஆகாது.

52. அதுவும் (அந்தந்த ஜாதியும்) பஞ்சபூத ஸம்பந்தமான ஸ்தூல சரீரத்திற்கே ஒழிய ஆத்மாவிற்கு இல்லை. (ஆனால்) தேகத்தினிடம் அஹங்காராபிமானத்தால் ஆத்மா 'விப்ரன்' முத லான பெயர்களால் குறிக்கப்படுகிறது.

53–54. ஹே! பிராமணர்களே! ஆத்மாவிற்கு தங்கள் தங் கள் ஸ்வரூபத்தை அறியாமையால், தேகத்தில் அஹம்பாவம் உண்டாகிறது; அந்த அறியாமையும் ஆதியற்றிருக்கிறது; ஆனால் ஞானத்தால் அதற்கு நாசம் உண்டு; அந்த ஞானமும் வேதாந்தத் தால் உண்டாக வேண்டுமென்றது ஸத்குருவின் நிர்ணயம்.

55. எவனுக்கு வேதாந்த வாக்கியத்தால் அபரோக்ஷ ஞா னம் உண்டாகிறதோ அவனுக்கு விதி நிஷேதங்கள் ஒன்றும் கிடையாது என்று வேதார்த்த நிர்ணயம்.

56. வர்ண தர்மத்தை யனுஷ்டிப்பவனுக்கு சாஸ்திரமறிந்த வர்களால் ஆச்ரமதர்மம் விதிக்கப்பட்டிருக்கிறது; அந்த வர்ணா ச்ரம தர்மத்தில் இருப்பவர்கள் எப்பொழுதும் வேதத்திற் குட் படவேண்டியது.

57. எந்த ஸ்திரீக்காகிலும், புருஷனுக்காகிலும் பிரம்ம ஞானம் இருக்கிறதோ அவர்களுக்கு ஒருபொழுதும் வர்ணாச்ரம ஆசாரம் இல்லவே இல்லை.

58. ஹே! ஆஸ்திகர்களே! ஆத்மபாவத்தை அறியாமல் தன் வர்ணாச்ரமங்களை விடுகிறவன் மூடன்; அவன் பதிதன் என்ப தில் ஸந்தேகமில்லை.

59. ஆதலால், ஸர்வ பிரயத்தினத்தாலும், சிரத்தையுடன், எப்பொழுதும் வர்ணாச்ரம தர்மத்திலிருப்பவர்கள் மோக்ஷத்தின் பொருட்டு ச்ரௌத ஸ்மார்த்த வர்ன தர்மங்களை யனுஷ்டிக்க வேண்டும்.

60. இவ்விதமாக வேதஸம்மதமாயும், பரமாயும், ஸத்யா நந்த ஸுகத்தை பிரகாசிப்பதும், பிரம்மஞானத்தைக் கொடுப்ப தும், ஸம்ஸார ஸாகர கரையாயுமுள்ள ஸூதரால் உபதேசிக்கப் பட்ட இந்த ஜாதி நிர்ணயத்தைக் கேட்டு, அந்த முனீச்வரர்கள் ஸந்தோஷத்துடன், ஸத்யம், நல்லொழுக்கம், தயை, வினயம் முத லிய குணங்களுடன் கூடியவர்களாய் நன்றாக கூடியிருந்தார்கள்.

---

## அத்தியாயம் 13.

---

### (தீர்த்த மாஹாத்மிய கதனம்).

---

1. நைமிஷீயர்கள்:—ஹே! ஸகல சாஸ்திரார்த்தத்தையறிந்த உத்தமரே! கருணையுடன், பிராணிகளின் நன்மைக்காக, எங்க ளுக்கு தீர்தமகிமையைச் சொல்லுங்கள்.

2. ஸூதர்:—ஸகல சாஸ்திரங்களிலும் கூறிய தீர்த்தமாகாத் மியத்தை சுருக்கமாக உங்களுக்குச் சொல்லுகிறேன். சிரத்தை யுடன் கேளுங்கள்.

3-4. எல்லா தேவர்களால் ஸேவிக்கப்பட்ட 'கங்காத்வாரம்' என்று மகாதீர்த்தம் ஒன்றுண்டு; ஹே! முனிகாள்! சூர்யன் மேஷராசியில் அச்வினி நக்ஷத்திரத்தில் இருக்கும்பொழுது ஸ்நா

நம்செய்து, சிவனடியார் ஒருவருக்கு சிரத்தையுடன், சக்தியானு சாரம், தக்ஷிணைகொடுத்து, உபவாஸமிருந்தால் அந்த மனிதன் எல்லா பாபங்களிலிருந்தும் விடுபடுகிருன்.

**5-8.** மேற்கு ஸமுத்ரகரையில், ஒரு யோஜனை நீளமும் ஒரு யோஜனை அகலமுள்ளதும், ஸமஸ்த தேவர்களால் ஸேவிக் கப்பட்டதுமான 'ஸோமதீர்த்தம்' என்று ஸோமனுதர் ஸன்னிதி யில் இருக்கிறது; அதில் ஒருவன் பர்வகாலத்திலும், ஆர்த்திரா நக்ஷத்திர தினத்திலும், அஷ்டமியிலும், வ்யதீ பாதத்திலும், ஞாயிற்றுக்கிழமையிலும், சதுர்தசியிலும் ஸ்நாநஞ்செய்து, சிவ னடியாருக்கு அன்னமளித்து, சந்திர சேகரரான ஸோமநாதரை நமஸ்கரித்து, பஸ்மத்தால் சரீரத்தை அலங்கரித்துக்கொண்டு, ஓர் இரவு உபவாஸம் இருந்தால் அவன் ஸமஸ்த பாபங்களிலிருந்து விடுபட்டு, சங்கரரை யடைகிருன்.

**9-10.** ஸ்ரீ காசி க்ஷேத்திரத்தில் 'மணிகர்ணிகை' என்கிற மகாதீர்த்தத்தில், பக்தியோடு, காலையில் ஸ்நாநஞ்செய்து, கரு ணைக் கடலாகிய விச்வேச்வரரை தர்சித்து, சக்தியானுசாரம் அன்னபானுதிகளை ஒருவன் தானஞ்செய்தால் அவன் முக்தி யடைகிருன்.

**11-12.** ஸம்ஸார ரோகத்திற்கு மருந்தாகிய 'பிரயாகை' என்ற மகாதீர்த்தத்தில் பரணி, கிருத்திகை, ரோஹிணி, விசேஷ மாய் மேஷமாஸத்தில் ஒருவன் ஸ்நாநஞ்செய்து, தன்னுல் கூடிய தக்ஷிணை கொடுத்தால் அவன் மோக்ஷமடைகிருன்.

**13.** 'கங்காஸாகர ஸங்கமத்தில்' ஒருவன் ஆர்த்திரை, மிருக சீர்ஷதினத்தில் மத்தியாநம் ஸ்நாநஞ்செய்து தன்னுல் இயன்ற அளவு தக்ஷிணை கொடுத்தால், ஸர்வபாபங்களிலிருந்து விடுதலை யடைந்து சிவஸாயுஜ்ய பதவியடைகிருன்.

**14-15.** நரக பிரவேசத்தை நாசஞ்செய்கிறதும், பிரம்மா, விஷ்ணு, சங்கரரால் ஸேவிக்கப்பட்டதான 'நர்மதா' மகாதீர்த்தத்

தில் ஸ்நாநஞ்செய்து ஒருவன் ஆதரவுடன் தன் சக்திக்குதக்கபடி தனத்தைக்கொடுத்தால் அவன் பிரம்மலோகத்தை யடைவான் என்பதில் ஸந்தேகமில்லை.

**16-17.** யமனாலும் ஸேவிக்கப்பட்ட 'யமுனா' மகாதீர்த்தத்தில் விருஷப மாஸத்திலும், விசாக நக்ஷத்திர தினத்திலும், பானு வாரத்திலும் எவனொருவன் பக்தியுடன் ஸ்நாநஞ்செய்து பிராமணர்களுக்கு போஜனம் கொடுக்கிறானோ அவன் ஸர்வபாப விமுக்தனாய் சிவனுடன் கலந்து சேருகிறான்.

**18-19.** 'ஸாஸ்வதி' என்ற ஸர்வவரத்தையும் கொடுக்கக் கூடியதும், எப்பொழுதும் ஸாஸ்வதி தேவி வஸித்துக்கொண்டிருக்கும் நதியில் ஆர்த்திரா தினத்தில் ஸ்நாநஞ்செய்து, சிவனடியார் ஒருவருக்கு தக்ஷிணை ஒருவன் கொடுத்தால் புத்திராதிகளுடன் அவன் ஸ்வர்க்கத்தை யடைகிறான்.

**20-21.** 'கோதாவரி' என்று லொகத்தில் பிரஸித்தமான மகாநதியில் ஒருவன் ஸூர்யனும் பிரஹஸ்பதியும் ஸிம்ஹ ராசியில் சேரும்பொழுது ஸ்னானஞ்செய்து, சக்திக்குத் தக்கவாறு தக்ஷிணைகொடுத்தால் கங்கையில் 12 வருஷங்கள் தினம் ஸ்நாநஞ் செய்த பலனை யடைகிறான்.

**22-25.** உலகத்தில் பிரஸித்தியாயும், எல்லா யோகீச்வரர்களால் ஆராதிக்கப்பட்டதும், ஸஹ்ய மலையிலிருந்து வருவதாயும், இந்திர நீலகிரியை கரையில் உடையதுமான 'கிருஷ்ணவேணீ' என்ற மகாநதி ஒன்றுண்டு; அதில் தினந்தோறும் விஷ்ணுவாதி தேவர்களுடன் மஹாதேவர் ஸ்நாநஞ்செய்து, அப்பர்வதத்தில் உமாதேவியுடன் வஸித்துவருகிறார்; அவ்விடத்தில் ஒருவன் பர்வ காலத்தில் ஸ்நாநஞ்செய்து, உபவாசமிருந்து, சக்தியானுசாரம் தக்ஷிணை கொடுத்தால் ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுதலை யடைகிறான்.

**26-32.** 'ஸுவர்ணமுகரி' என்ற, ஸம்ஸாரத்தை நீக்கக் கூடியதும், எல்லா பிராணிகளுக்கும் போக மோக்ஷத்தைக் கொடுப்பதற்காக கேவலம் கருணையால் பரமாத்வாவான சிவனால்

சிருஷ்டிக்கப்பட்ட நதியில் மாகமாஸம் மகா நக்ஷத்திரத்தில் ஸ்நாநஞ் செய்யவேண்டும்; அந்த நதிதீரத்தில் உள்ள தக்ஷண கைலாஸம் என்ற ஓர் பர்வதத்தில், மகாதேவனும், சந்திரசேகரரான சங்கரன் உமையுடன் ஸுவர்ணமுகரி நதியை பார்த்துக்கொண்டு இருந்துவருகிறார்; அதில் எல்லாபாபங்களைப் போக்கடிப்பதற்காக எல்லா தீர்த்தங்களும் சேர்ந்திருக்கின்றன; அதில் ஒருவன் மகா நக்ஷத்திரம்கூடிய மாகமாஸத்தில், பக்தியுடன், ஸ்நாநஞ்செய்து, யதாசக்தி சிரத்தையுடன் ஓர் சிவனடியாருக்கு தக்ஷிணைகொடுத்து, அந்த காலஹஸ்தி பர்வதத்திலுள்ளவரும், மனிதர்களுக்கு மங்களத்தை யளிப்பவரும், இந்திரனால் பூஜிக்கப்பட்டவரும், தக்ஷிண கைலாஸவாஸியான சிவனை பக்தியுடன் நமஸ்கரித்தால் ஸகல பாபத்திலிருந்தும் விடுதலையடைகிறான்; மேலும், மகா நக்ஷத்திரம்கூடிய மாகமாஸத்தில் பக்தியுடன் ஒருவன் ஸ்நாநஞ் செய்தால் ஸகல பாபத்திலிருந்து நீங்கி சிவஸாயுஜ்யத்தையும் அடைகிறான்.

**33-37.** பிரம்மதேவனால் நிர்மாணிக்கப்பட்ட 'கம்பா' என்ற புண்ய நதியில் ஹே! பிராமணர்களே! ஒருவன் ஸ்நாநஞ்செய்து சசிசேகரரான சங்கரரை பக்தியோடு தர்சித்தால் அந்த மனிதன் உடனே ஸம்ஸார பந்தத்திலிருந்து முக்தியடைகிறான்; அந்த நதியில் ஸ்நாநஞ் செய்து, ஆதிலிங்கத்தில் உத்பவித்திருக்கிற மஹேச்வரரை மஹாவிஷ்ணு பூஜித்து, அந்த ஈசன் ஸந்நிதியில் நதியையும் பார்த்துக்கொண்டு வீற்றிருக்கிறார்; அதில் பானுவாரத்திலும், ஹஸ்தநக்ஷத்திரத்திலும், உத்தரபல்குனி நக்ஷத்திரத்திலும், பர்வகாலங்களிலும் சிரத்தையுடன் ஒருவன் ஸ்நாநஞ்செய்து பிராமணர்களுக்கு அன்னமுதலியது கொடுத்தால் அவன் ஸ்வர்க்கமடைகிறான்.

**38-45.** 'குடிலை' என்று உலகத்தில் பிரஸித்தியான மகா நதியில், 'வீரா' என்று பெயருடைய மகாவிருதத்தை யனுஷ்டித்து வருபவளான பத்ரகாளி, ச்ராவண பௌர்ணமியில் சூர்யனால் நிர்மாணிக்கப்பட்டதும், தேவர்கள், அஸுரர்கள், அப்ஸரஸ்களால் சூழப்பட்டதும், அழகாயுள்ள 'அதிகா' என்று பெய

ருள்ள ஓர் பட்டணத்தை யடைந்து, அவ்விடத்தில் தேவர்களுக்கெல்லாம் ஆதிபூதரான மகேச்வரனை ஸ்தாபித்து, இந்த நதிஜலத்தால் சிரத்தையுடன் அபிஷேகஞ்செய்து, கிருபாநிதியான தேவ தேவனைப் பிரார்த்தனைசெய்ததாவது:—'எவன் ஒருவன், ஹே! தேவதேவ! இந்த நதியில் சிரத்தையுடன் ச்ராவண பௌர்ணமியில் ஸ்நாநஞ்செய்து, உம்மை தர்சித்து, நமஸ்கரித்து, ஸ்தோத்திரஞ் செய்து, சிவனடியாருக்கு சக்தியானுசாரம் வஸ்திரம், தனம், தான்யத்தை கொடுக்கிறானோ அவனுக்கு போகத்தையும், மோக்ஷத்தையும், ஹே! எல்லோருக்கும் நாயகரே! நீர்கொடுக்கவேண்டும். இவ்விதமாக வீரையால் பிரார்த்திக்கப்பட்ட தேவன், கம்பீரமான வசனத்தால் 'அப்படியே ஆகுக' என்று சொன்னார். அந்த நதியில் பானுவாரத்தில், சிரத்தையுடன், ஸ்நாநஞ்செய்து, தனம் அல்லது வேறுயாதாகிலும் தானஞ்செய்தால் அந்த மனிதன் முக்தியடைவதில் சந்தேகமில்லை.

**46–54.** மஹா தேவரால் 'மணிமுக்தா' என்ற ஓர் திவ்ய நதி நிர்மாணிக்கப்பட்டிருக்கிறது; அதில் பிரம்மா, விஷ்ணு, ருத்திரர், அக்நி, வாயு, விச்வேதேவர்கள், வஸுக்கள், சூர்யன், இந்திரன் இவர்கள் தனுர்மாஸம் ஆர்த்திரா நக்ஷத்திரத்தில், சிரத்தையுடன், ஸ்நானஞ்செய்து, தானம்கொடுத்து, விருத்தாசலேச்வரரை நமஸ்கரித்து, லோகக்ஷேமத்தின்பொருட்டு அந்த ஈசனை பிரார்த்தித்தார்கள்; "துர்விருத்தனானாலும், நல்ல நடத்தையுள்ளவனானாலும், மூர்க்கன் ஆனாலும், பண்டிதன் ஆனாலும், பிராமணன், சூத்திரன், சண்டாளன் ஆகிலும், எவனாகிலும் இந்த நதியில் மேற்கூறிய தினத்தில் சிரத்தையோடு ஸ்நானஞ்செய்து, சக்தியானுசாரம் விருத்தாசல ஈச்வரன்பொருட்டு சிவயோகிக்கு தனமாகிலும், தான்யமாகிலும், வஸ்திரமாகிலும் கொடுத்து, உபவாஸமிருந்து, பிராதகாலத்தில் விருத்தாசல ஈசனை நமஸ்கரிக்கிறானோ அவனுக்கு நல்லகதியை நீர்கொடுக்கவேண்டும்." இவ்விதமாக மேற்கூறியவர்களால் பிரார்த்திக்கப்பட்ட அந்த விருத்தாசல ஈசன், ஸந்தோஷத்துடன், கம்பீரமான வாக்கால், 'அப்படியே ஆகுக' என்றார். ஆகையால், மேற்கூறிய ஆர்த்திரா தினத்தில்

எவன் ஒருவன் சிரத்தையுடன் ஸ்நானஞ்செய்கிறானோ அவனுக்கு ஸம்ஸார பந்தம் நீங்கும் என்பதில் ஸந்தேகமில்லை.

**55-60.** மஹா லக்ஷ்மியால் சேவிக்கப்பட்ட ரம்யமான ஸ்ரீ வியாக்ரபுரத்தில் (சிதம்பரத்தில்) 'சிவகங்கை' என்ற பரிசுத்த மான தீர்த்தமுள்ள ஓர் தடாகம் உண்டு; அதன் தென்கரையில் சந்திரசேகரான ஸ்ரீ சங்கார், பரமானந்தத்தை அனுபவித்துக் கொண்டு நர்த்தனஞ்செய்கிறார்; அந்த தடாகத்தில் பிரம்மாமுத லான ஸகலதேவர்களும், முனீச்வரர்களும் தினந்தோறும் ஸ்நா னஞ்செய்து, உமையுடன் நர்த்தனஞ்செய்கிற சிவனை பக்தியுடன் ஸம்ஸாரரோகநிவர்த்திக்காக நமஸ்கரிக்கிறார்கள்; அந்த தடாகத் தில் உமையோடுகூடிய மகாதேவன், பிரம்மா விஷ்ணுவாதிகளு டன், மாகமாஸம் மகாநக்ஷத்திரத்தில், பிராணிகளை ரக்ஷிப்பதற் காக, ஸ்நாநஞ்செய்கிறார்; அத்தகைய தடாகத்தில் எவனொருவன் பத்தியுடன் ஸ்நாநஞ்செய்து, சிரத்தையுடன் தானம்செய்கிறானோ அவன் எல்லோருக்கும் ஸமமாகி பிரம்மத்தையடைகிறான்.

**61-71.** இந்த வியாக்ரபுரத்திற்கு வடகிழக்கில். ஸமுத்ரத் தில், 'குஹ்ய' தீர்த்தமென்று, ஒரு யோஜனை நீளமும், ஒரு யோ ஜனை அகலமும் உள்ளதும், பிரம்மா விஷ்ணு ருத்திரர்கள் முத லான எல்லா தேவர்கள், முனிகள் இவர்களால் ஸேவிக்கப்பட்ட பிரஸித்தமான ஓர் தீர்த்தம் உண்டு; ஹே! வேத்வித்துக்களே; முன்னொருகாலத்தில் ஜலத்திற்கு அதிபதியான வருணன், அறி யாத்தனத்தால் ஓர் பிரம்மவதைசெய்து, அப்பாவத்தை நிவர்த்தி செய்துகொள்ள வியாக்ரபாதருடைய வசனத்தால், சீக்கிரம், குஹ்ய தீர்த்தத்தையடைந்து, மாகமாஸம் மகநக்ஷத்திரத்தில் பக்தியுடன் ஸ்நாநஞ்செய்து, தன் பாபத்தை ஒழித்தான்; இச் சமயத்தில் உமாபதியான நீலகண்டர், வருணனிடம் கிருபை கூர்ந்து, பிரஸாதமளித்தார்; தர்மாத்மாவான வருணன், கேட் டதையளிக்கும் மஹாதேவனை, உலகத்தின் க்ஷேமத்தின் பொ ருட்டு கேட்டுக்கொண்டதாவது:—"ஹே! தேவ! எவன் மாக மாஸம் மகா நக்ஷத்திரத்தில் என்னைப் பூஜித்து, இந்த தீரத்தில்

சிரத்தையுடன் ஸ்நாநஞ்செய்கிறனே, பிராமணன் ஆகிலும் அல்லது கீழ்பட்ட ஜாதியாய் இருந்தாலும், அவனுக்கு சீக்கிரம் முக்தியை கொடுக்கவேண்டும்;'' இப்படி கேட்டுக்கொண்ட வருணனுக்கு, வாக்கிற்கும் மனதிற்கும் எட்டாத தேவதேவரான மஹாதேவன், கம்பீரமான வாக்கால், 'அப்படியே ஆகுக' என்றூர்; இந்த தீர்த்தத்தில் எவன் பர்வகாலத்தில் ஸ்நாநஞ்செய்து, தானம் கொடுக்கிறனே அவன் ஸகலபாபங்களிலிருந்தும் விடுதலையடைந்து நல்ல கதியையடைகிறன்; ஹே! முனிகள் அநேகர் பர்வங்கள்தோறும் ஸ்நாநஞ்செய்து, எல்லாப் பாபங்களிலிருந்து விடுபட்டு, ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுதலையடைந்திருக்கிறூர்கள்.

**72–75.** 'பிரம்மதீர்த்தம்' என்று பிரம்மாவால் உண்டாக்கப்பட்ட ஓர் தடாகம் பிரம்மபுரத்தின் மத்தியில் (வ்யாக்ரபுரமத்தியில் என்று சிலபாடம்) இருக்கிறது; அதில் ரோமசர் என்ற ரிஷி தினந்தோறும், பக்தியுடன் ஸ்நாநஞ்செய்து, மகத்தான தவஞ்செய்தார்; மேலும் அதில் கல்பத்தின் ஆரம்பத்தில் பிரம்மா, லோகங்களின் ஸ்ருஷ்டிஸ்திதியின் பொருட்டு ஸ்நாநஞ்செய்து, ஆதரவுடன் பரமேச்வரனை பூஜித்தார்; அதில் ஒருவன் பாநுவாரம், கிரஹணம், பர்வம் இவைகளில் ஸ்நாநஞ்செய்து, பக்தியுடன் தானஞ்செய்தால் அவன் பரமேச்வரனை யடைகிறன்.

**76–85.** 'சூர்யபுஷ்கரிணீ' என்று ஓர் அழகான தீர்த்தம் பிரம்மபுரத்திற்கு (வ்யாகரபுரத்திற்கு என்று முள்ளது) மேற்கில் இருக்கிறது; அதில் பாநுவாரம், சந்திர சூர்யகிரஹணகாலங்கள், விஷுவத்கள், அயநங்கள், பர்வங்கள், ஆர்த்திரை இவைகளில் சூர்யன், ஸ்நாநஞ்செய்து, தக்ஷயாகத்தில் இழந்த பற்களையடைந்து ஸந்தோஷமாயிருந்தான்; முன்னொரு காலத்தில், இலங்கேசனுடைய புத்திரனுன இந்திரஜித், எல்லா உலகங்களையும் ஜயித்து, ரதமேறி, கர்வத்துடன் ஆகாசமார்க்கமாக வெகுவேகத்துடன் இலங்கையை நோக்கிச்செல்லும்பொழுது, இந்த தீர்த்தத்தின் தென்கரையில் அந்த ரதம் நின்றுவிட்டது; புத்திமானுன இந்திரஜித் இதைப்பார்த்து, நெடுநேரம் ஆலோசித்து, அவ்விடத்திலே

யே பரமேச்வரனை சிரத்தையுடன் பூஜித்தான்; தேவதேவரான மஹாதேவர் உமையுடன் அவ்விடத்திலேயே ராக்ஷஸர்களுக்கெல்லாம் குலதெய்வமாக நின்றுவிட்டார்; இந்திரஜித், மறுபடியும், அந்தலிங்கத்தைப் பெயர்க்கப்பார்த்தும் முடியவில்லை; மறுபடியும் நெடுநேரம் யோஜித்து, அந்த பரமேச்வர லிங்கத்தை மும்முறை பிரதக்ஷிணம் வந்து, அந்த ரதத்திலேறி வாடினமுகத்துடனும், மனவருத்தத்துடனும் இலங்கையை யடைந்தான்; இதில் எவனொருவன் பர்வகாலத்தில் ஸ்நாநஞ்செய்து, பிராமணர்களுக்கு போஜனம் செய்துவைக்கிறானோ, அவன் எல்லா பாபங்களிலிருந்தும் விடுபட்டு சிவலோகத்தை யடைகிறான்.

86. ஹே! வேதமறிந்தவர்களே! எவனொருவன் 'காவேரியும் ஸமுத்திரமும் ஸங்கமமாகிற' இடத்தில் ஸ்நானஞ்செய்கிறானோ அவனுடைய எல்லாபாபங்களும் நசித்துப்போவதில் ஸந்தேகமில்லை.

87–90. ச்வேதாரண்யத்திலும், கும்பகோணத்திலும், மத்யார்ஜுனத்திலும், ஆம்ரதீர்த்தத்திலும், ஹிருதிஸ்தானத்திலும், மங்களவம்சகத்திலும், திருகோடிகையில் காவேரி எல்லா காமத்தையும் அளிக்கிறபடியால் அதிலும், எவன் பர்வங்களிலும், பாநுவாரத்திலும் காவேரியில் ஸ்நாநஞ்செய்து, (அங்கங்குள்ள) பரமேச்வரனை நமஸ்கரித்து, ஏதாகிலும் தானஞ்செய்தால் மகாபாபங்களிலிருந்து விடுதலையடைகிறான்; பாபியானாலும், யோக்கியனானாலும் மேற்கூறிய ஸ்தானங்களில் மரணமடைந்தால் முக்தியடைவதில் ஸந்தேகமில்லை; மேற்கூறிய ஏழுஸ்தாநங்களில் மரணமடைந்து அநேகர் முக்தியடைந்திருக்கிறார்கள்.

91–95. வல்மீகக்ஷேத்திரமத்தியில், ஸம்ஸாரரோகத்திற்கு மருந்தாயும், பாபத்தை நாசஞ்செய்வதாயும், கோரியதைகொடுப்பதாயுமுள்ள 'க்ஷீரகுண்டம்' என்ற ஓர் திவ்யதீர்த்தமிருக்கிறது; அதில் பங்குனி உத்திரத்தில், பிரம்மா, விஷ்ணு ருத்திரர்கள், தேவர்கள் முனிகள் இவர்களாலும், ஸகலஜந்துக்களாலும், சந்திர சூரியர்களாலும் ஸ்வர்கத்திலிருந்துவந்த இந்த தீர்த்தம் பூஜிக்கப்

பட்டது; பங்குனி உத்திரத்தில் எவனொருவன் சிரத்தையுடன் ஸ்நானஞ்செய்கிருனே அவனுடைய எல்லாபாபங்களும் நசிக்கின்றன; எவனொருவன் வ்யதீபாதத்தில் இதில் ஸ்நானஞ்செய்து, சிரத்தையுடன் தானம்கொடுக்கிருனே அவனுக்கு பிரயாஸமன்றி முக்திகிடைப்பதில் ஸந்தேகமில்லை.

96–100. க்ஷீரகுண்டத்திற்கு மேல்புரத்தில் 'தேவதீர்த்தம்' என்று ஓர் தீர்த்தமுண்டு. அதில் பூர்வகாலத்தில் இந்திரன் பர்வங்கள்தோறும் ஸ்நானஞ்செய்து, வருஷமுடிவில் வல்மீக க்ஷேத்திரவாஸியான மஹாதேவனை, பக்தியுடன் மும்முறை பிரதக்ஷணம் செய்து, நமஸ்கரித்து, தேவராஜன் என்றபதவியை தியாகஞ்செய்து கர்மபந்தத்திலிருந்து மோக்ஷமடைந்தான்; எவனொருவன் பங்குனி உத்திரத்தில் இதில் ஸ்நாநஞ்செய்து வல்மீகவாஸரான ஈசனை மும்முறை வலம்வந்து, ஏதாகிலும் கொஞ்சம் தானஞ்செய்கிருனே அவன் ஸம்ஸார பந்தத்திலிருந்து மோக்ஷமடைகிருன்; பாநுவாரத்திலும், ஆர்த்திரா நக்ஷத்திரத்திலும், முக்கியமாக கிருஷ்ணாஷ்டமியிலும் எவன் இந்த தேவதீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்கிருனே அவன் உத்தமகதியடைகிருன்.

101–111. ஸேது மத்தியில் 'கந்தமாதனபர்வதம்' என்ற ஓர் மகாதீர்த்தம் உண்டு; அதில் ஸ்ரீராமன், ஸீதை, லக்ஷ்மணன், ஸுக்ரீவன் முதலான ஸ்நேகிதர்களுடனும், முனி, தேவர்கள், கந்தர்வர்கள், யக்ஷர்கள், வித்யாதரர்களுடனும், பக்தியோடு, ஸ்நாநஞ்செய்து, இராவண ஸம்ஹாரத்தால் உண்டான பிரம்மஹத்தி பாபத்தை நீக்கிக்கொண்டு, இராமேச்வரன் என்ற மகாதேவனை பிரதிஷ்டைசெய்து, தீர்த்தமகாத்மியத்தையறிந்து வெகுதனங்களை தானஞ்செய்தார்; இந்த தீர்த்தத்தில் வ்யதீபாதத்திலும், சந்திர சூர்ய கிரஹணகாலங்களிலும், பாநுவாரம், சுக்கிரவாரம், பருவங்கள், ஆர்த்திரை தினம், விஷு, அயநம், ஷடசீதிமுகம் அர்த்தோதயம் அல்லது மற்ற நல்லதிநங்களில் ஸ்நாநஞ்செய்து, யதாசக்தி தக்ஷிணையுங்கொடுத்து, இராமேச்வரரை தரிசித்து, வைதிக லௌகிக ஸ்தோத்திரங்களால் அவரைஸ்துதித்து, மூன்று

பிரதிக்ஷணங்கள் செய்கிறவன் பிரம்மஹத்தியாதி மகாபாபங்களி னின்றும் விடுதலையடைகிறான்; இவ்விடத்தில் மரணமடைகிற நன்றியற்றவன் கூட மோக்ஷமடைகிறான்; இதில் ஒருவன் பக்தி யுடன் மூன்றுமாதங்கள் தினந்தோறும் ஸ்நானஞ்செய்து, இரா மேச்வரனை தர்சித்து, சிரத்தையுடன் (நிஷ்கம்) அணுமாத்திர ஸ்வர்னத்தை தானஞ்செய்து, பர்வமுடிவில் ஓர் இரவு பட்டினியா யிருந்தால் பிரம்மஹத்தி, ஸுராபானம், ஸ்வர்னஸ்தேய முதலிய மனப்பூர்வமாய் செய்த பாபங்களினின்றும் அவன் விடுபடுவான் என்பதில் ஸந்தேகமில்லை; ஹே! பிராமணர்காள்! இதில் ஸ்நான மாத்திரத்தில் அநேகர் கிருதார்த்தர்களாயிருக்கிறார்கள்.

112. வேதங்களிலும், சாஸ்திரங்களிலும், சிவாகமங்களி லும் கூறப்பட்ட முன்சொல்லிய தீர்த்தங்களை உமாபதியான தே வன், கிருபையால், உமையின்பொருட்டுச் சொன்னார்.

113. அந்த சங்கரீதேவி இதை (தன் புத்திரரான) குஹ ருக்குச் சொன்னாள்; குஹர் நான்முக பிரமாவிற்கும், பிரம்மா என் குருவுக்கும் (வ்யாஸர்) சொன்னார்கள்; கிருபாஸமுத்ரமான என் குரு ஜகத்தில் பரவும்பொருட்டு எனக்கு கூறினர்.

114. ஹே! விப்ரர்களே! பரமகிருபையாலும், ஜகத்திற்கு நன்மையை கருதி நான் உங்களுக்குச் சொன்னேன்; பரமசிவ பிரஸாதமடையும்பொருட்டு நீங்கள் இதை சிஷ்யர்களுக்கு எப் பொழுதும் ஸந்தோஷத்துடன் சொல்லவேண்டும்.

115. எவன் இந்த தீர்த்தமகாத்மியத்தை நல்ல முகூர்தத் தில் படிக்கிறானோ அவன் ஸகல பாபங்களிலிருந்தும் விடுதலை யடைந்து மேலான கதியையடைகிறான்.

116. எவன் இதை நித்தியமாவது நல்ல முகூர்த்தத்திலா வது கேட்கிறானோ அவன் ஸர்வபாப விநிர்முக்தனாய் சிவலோகத் தில் மகிமையடைகிறான்.

117. தீர்த்தங்களிலும், சிராத்த காலங்களிலும் எவன் இதை சந்தோஷத்துடன் கேட்கச் செய்கிறானோ அவன் ஸகல தரித்திரியத்திலிருந்தும் விலகி மகா தனவானாகிறான்.

**118.** எவன் இதைக் கேட்டுக்கொண்டு ஸந்தோஷத்துடன் தேவதாபூஜை செய்கிருனே அவனுக்கு பிரம்மா, விஷ்ணு, ருத்திரர்களுடைய பிரஸாதம் கிடைக்கும்.

**119.** எல்லா பூதங்களுக்கும் நன்மை செய்வதில் இன்பமுள்ள பகவான் தேவகீபுத்திரர் (ஸ்ரீ கிருஷ்ணன்) மகாதேவ பிரஸாதமடையும்பொருட்டு இதை தினந்தோறும் படித்துவருகிருர்.

**120.** ஆதலால் ஈசனுடைய பிரஸாதமடைய நீங்களும், ஹே! முனிகாள்! தினந்தோறும் மிகசிரத்தையோடு இதை படித்து வரவேண்டும்.

**121–124.** இவ்விதமாக முனீந்திரர்களுக்கு உபதேசித்த பிறகு, எல்லா அர்த்தமும் அறிந்த ஸூதர், வெகு பிரீதியுடன் சந்திரசேகரரும், உமையுடன் கூடியவரும், ஸர்வக்ஞரும், ஸர்வ கர்த்தாவும், ஸம்ஸாரரோகத்திற்கு மருந்தும், ஸுராஸுர முனிகளால் நமஸ்கரிக்கப்பட்ட பாதபங்கஜமுடையவருமான ஈசனை தன் ஹிருதயகமலத்தில் தியானஞ்செய்து, பக்தியால் தெளிவான மனம் இந்திரயங்களுடன் கூட ஜகத்குருவான மஹாதேவரையும் ஸம்ஸார ஸமுத்திரத்தை தாண்ட தெப்பக்கட்டையாயிருக்கிற வேதவ்யாஸரையும் நமஸ்கரித்து, நைமிசாரண்யவாஸிகளான முனிகளை விட்டு விடைபெற்றுகொண்டு, கைலாஸபர்வதம் வந்தடைந்தார்.

முதல் கண்டம் முற்றிற்று.

---

## இரண்டாம் கண்டம்.

# ஞான யோக கண்டம்.

### அத்தியாயம் 1.

---

(ஞானயோக ஸம்பிரதாய பரம்பரை).

**1-15.** அழகாயும், பற்பல ரத்தினங்கள், புஷ்பங்கள், கிழங்குகள், பலங்கள், ஜலங்கள், கொடிகள், மிருகங்கள், விருக்ஷங்கள் யோகிகள், சித்தர்கள், முனிகள், தேவர்கள், சாரணர்கள், யக்ஷர்கள், கந்தர்வர்கள் இவைகளோடுகூடிய கைலாஸ பர்வதசிகாத்தில் சுகமாய் வீற்றிருந்த பிரஸன்னரும், ஸுநேத்திரரும், புன்சிறிப்புள்ளவரும், சுசியும், தன் தேஜஸால் எல்லா ஜகத்தையும் பிரகாசிப்பவரும், பயத்தைப் போக்கடிப்பவரும், எல்லா சாஸ்திரார்த்தங்களின் உண்மையை யறிந்தவரும், வேதவேதாந்தங்களின் கரைகண்டவரும், விபூதி பூசிய அங்கங்களுடையவரும், நெற்றியில் திருபுண்டரம் தரித்தவரும், ருத்திராக்ஷமாலை யணிந்தவரும், சடைக் கூட்டங்களால் அலங்கரிக்கப்பட்டவரும், இந்திரியம், கோபம் இவைகளை அடக்கியவரும், ஜீவன் முக்தரும், ஜகத் குருவும், வியாஸருடைய பிரஸாதத்தை யடைந்தவரும், வியாஸரைப்போல் ஆசையற்றவரும், எப்பொழுதும் வேதமார்க்கத்தி லிருப்பவரும், வேதமார்க்க பிரவர்த்தகரும், நிமிர்ந்திருக்கப்பட்ட உடல், கழுத்து, சிரஸ் இவைகளை யுடையவரும், மூக்கு நுனிப்பார்வையுள்ளவரும், தானே தன் ரூபத்தைத் தியானஞ் செய்பவரும், புத்திமான்களுல் சிரேஷ்டராயுள்ள ஸூதரை—விஷ்ணுவிருத்தர், விசாலாக்ஷர், வத்ஸர், குண்டின ஆருணி, ஜாபாலர், ஜமதக்னி, ஜர்ஜரர், ஜங்கமர், ஜயர், பக்வர், பாசதரர், பாரர், பாரகர், பண்டிதோத்தமர், மஹாகாயர், மஹாக்ரீவர், மஹாபாஹு, மஹோதரர், உத்தாலகர், மஹாஸேநர், ஆர்த்தர், ஆமலகபிரியர், ஏகபாதர், த்வி

பாதர், திரிபாதர், பத்மநாயகர், உக்ரவீர்யர், மஹாவீர்யர், உத்தமர், அனுத்தமர், படு, பண்டிதர், கருணர், காலர், கைவல்யர், கலாதரர், கல்பாந்தர், கங்கணர், கண்வர், காலர், காலாக்னிருத்திரர், ச்வேதபாஹு, மஹாபிராக்ஞர், ச்வேதாச்வதரர் இவர்களும், இவர்களுடைய சீடர்களும், சீடர்களின் சீடர்களும், ஸம்ஸார பாசத்தை அறுக்கமுயன்றவர்களாக, வேதார்த்தத்தை விசாரித்து (அது நன்றாய் புளப்படாததால்) விசனத்துடனும், மனவருத்தத்துடனும் ஸமாதியிலிருந்த ஸூதரை நமஸ்கரித்து, அந்த மஹாத்மாவை ஸ்துதித்து வித்வான்களாகிய இம்முனிகள் அவரை (அடியில் வருமாறு) கேட்டார்கள்.

**16-18.** உம்மால் எல்லா விஷயங்களும் சுருக்கமாகவும், விஸ்தாரமாகவும் சொல்லப்பட்டன. இப்பொழுது ஸாதனத்தோடு கூடிய ஞானயோகத்தைக்கேட்க விரும்புகிறோம். நீர் ஜகன்னுதரான விஷ்ணு ரூபமாயிருக்கிற வியாஸ குருவினிடமிருந்து ஞானயோகத்தை யடைந்தவரா யிருக்கிறீர்; உம்மைத் தவிற உலகில் அறிந்தவர் வேறில்லை; ஆகையால் சுருக்கமாக, கருணைகொண்டு, எங்களுக்குச் சொல்லவேண்டும்.

**19-23.** இவ்விதம் முனிசிரேஷ்டர்களால் கேட்கப்பட்ட பௌராணிகரான ஸூதர், ஸர்வேச்வரனும், ஸாம்பனும், ஸம்ஸார ரோகத்திற்கு மருந்தாயும், ஸர்வக்ஞனும், ஸர்வ வியாபியாயும், எல்லாமாயும், எல்லா பூதங்களுக்கு நன்மையை கொடுப்பவராயும், புலித்தோல் யணிந்தவராயும், வேத தத்துவார்த்தத்தைக் கூறுகிறவராயும், விபுவாயும், நான்கு கைகளுள்ளவராயும், சரத் கால சந்திரனைப்போல் வெண்ணிறமானவராயும், கங்காதரனும், விரூபாக்ஷனும், சந்திரமௌளீ ஜடாதாரியாயும்,நீலகண்டரானவராயும் உள்ள சிவனை நெடுநேரம் ஸ்மரித்து, அளவற்ற தேஜஸுடைய வியாஸரையும் தியானஞ்செய்து, ஸந்தோஷத்துடன், பக்தியால் பரிபூர்ணமனோரதத்துடன் கூடியவராய், வைதிக லௌகிக ஸ்தோத்திரங்களால் மஹேசனை ஸ்துதித்து, நமஸ்கரித்து, சாந்தமனதுடன் சொல்ல ஆரம்பித்தனர்.

24. ஸூதர்—ஹே! பாக்கியவந்தர்காள்! எல்லோரும் கவனமாய்க் கேளுங்கள்; இந்த விஷயத்தையே, பூர்வத்தில், பிரஹஸ்பதி மஹேச்வரரைக் கேட்டார்.

25. அந்த தேவரும், தேவியை கருணை சித்தத்துடன் பார்த்துக்கொண்டு, கம்பீரமான வாக்கால் அந்த பிரஹஸ்பதிக்குச் சொன்னார்.

26. தேவியினுடைய மடியில் வீற்றிருந்த ஸ்கந்தரும் அப்பொழுது அதைக் கேட்டார்; ஸ்கந்தரிடமிருந்து பூர்வ ஜன்ம தபோபலத்தால் இதை வஸிஷ்டர் அடைந்தார்.

27. அவரிடமிருந்து சக்திருஷியும், சக்தியிடமிருந்து பாராசரும், பாராசரிடமிருந்து பகவான் வியாஸரும் பெற்றார்கள்.

28. ஜன்மாந்திரத்தில் செய்த தபோபலத்தால் வியாஸரிடமிருந்து எந்தப்பிரகாரம் கேட்டேனோ அந்த பிரகாரம் வேதமறிந்த உங்களுக்குச் சொல்லுகிறேன்.

---

## அத்தியாயம் 2.

---

### (ஆத்மாவால் ஸிருஷ்டி நிரூபணம்).

1. ஈச்வரர்—இந்த விக்ஞானம் சொல்ல முடியாததாயும், அதிரகஸ்யமாயும், வெகு உத்தமமாயும், வேதாந்தத்தாலேயே ஸித்திக்கக் கூடியதாயும், எல்லா துக்கங்களையும் நாசஞ் செய்வதாயும் இருக்கிறது.

2. அளவற்ற ஆநந்தமான மோக்ஷம் என்ற பிரம்மத்தையடைவதற்கு முக்கிய ஸாதநமாயும், எல்லா ஆச்ரமிகளாலும் ஸேவிக்கப்பட்டதாயும், எட்டு அங்கங்களுடன் சேர்ந்ததாயுள்ள இதை கருணைகொண்டு ஹே! பிரஹஸ்பதி! சொல்லுகிறேன்; அதைக் கேளும்.

3-4. இந்த ஜகத், சிருஷ்டிக்குமுன், தமோமாத்திரமாக ஆத்மாவிற்கு வேறாகாதபடி இருந்தது; பிறகு ஸத்வகுணத்தின்

அசைவால் மகத்தத்துவம் உண்டாயிற்று; மறுபடியும் ஒரே சிவனாகவிருந்தவர் மும்மூர்த்தி ஸ்வரூபமாயினார்.

**5-6.** ரஜோகுணத்தைக் கைப்பற்றி சிருஷ்டி காரணரான பிரம்மாவானார்; ஹே! பிரஹஸ்பதி! ஸத்வகுணத்தால் ரக்ஷணையின்பொருட்டு விஷ்ணுவானார்; ஸகலத்தையும் ஸம்ஹாரஞ் செய்யும்பொருட்டு தமோ குணத்தால் கால ருத்திரர் ஆனார். குண தாரதம்யத்தால் உத்தமம், அதமமாக இம்மூர்த்திகளிடமிருந்து அளவற்ற மூர்த்திகள் உண்டானார்கள்.

**7-9.** சப்தகுணம் முதலான பஞ்ச பூதங்களும், காதுகள் முதலிய ஞானேந்திரியங்கள் ஐந்தும், கர்மேந்திரியங்கள் ஐந்தும், பிராணாதி வாயுக்கள் ஐந்தும், மனஸ், புத்தி, அகங்காரம், சித்தம் என்ற நான்கும் இவையெல்லாம் அவ்யக்தத்தினின்றும் கால பரிபாகத்தால் தனித்தனி உண்டாயின; மேற்கூறியவையெல்லாம் காலத்திற் குட்பட்டன, காலம் ஒன்றிற்கும் உட்பட்டதல்ல.

**10.** மாயை ஆத்மா இவ்விரண்டின் ஸம்பந்தத்தால் காலம் எல்லாவற்றிற்கும் ஸாதாரணமாயிருக்கிறது; ஹிரண்யகர்ப்பர் (முன்சொல்லிய சூக்ஷ்மபூத இந்திரிய காண உபாதியுடையவர்) என்ற பகவான் பிரஜாபதியாக உத்பவித்தார்.

**11-12.** அவர்தான் முதல் சரீரத்தையுடையவர்; அவரையே புருஷன் என்று சொல்லுகிறார்கள். அவரிடமிருந்துதான் பிரம்மாண்டம் உண்டாயிற்று; அதன் மத்தியில் ஹே! பிரஹஸ்பதி! எல்லா உலகங்களும், தேவர்களும், கணக்கற்ற ஸ்தாவர ஜங்கமங்களும், வர்ணாச்ரமங்களும் உள.

**13-14.** ஸர்வேச்வரரான ஸாம்பரை தியானித்து அவர் பிரஸாதத்தால் அந்த பிரம்மா (இவைகளை) சிருஷ்டித்தார்; பிரஸாதமில்லாமல் தேவர்களும், மனிதர்களும், உலகங்களும் ஸித்திக்கமாட்டா; தேவதேவனுடைய பிரஸாதத்தால் பிரம்மா பிரம்ம பட்டத்தையும், விஷ்ணு விஷ்ணுபதவியையும், ருத்திரர் ருத்திரபதவியையும் அடைந்தார்கள்.

**15-16.** மகேச்வரனுடைய பிரஸாதத்தை யடையும்பொருட்டு வருணுச்ரமத்தோடுகூடிய புருஷன் அவரை பூஜிக்கிறுன்; துர்நடையுள்ளவர்கள் ஒருக்காலும் ஆராதிக்கிறதில்லை. அவர் பிரஸன்னமாகுங் காலத்தில் எல்லோர்க்கும் எல்லா பலன்களும் உண்டாகின்றன.

**17-21.** அஹோ! (ஆச்சரியம்) மாயையால் அவரை மறந்து லோகத்தார்கள் காரியங்களைச் செய்துவருகிறுர்கள். ஈசன் பிரம்மசரியாச்ரமத்திலிருக்கிறவர்களுக்கும், விசேஷமாக யதிகளுக்கும், வாநப்பிரஸ்தர்களுக்கும், கிரஹஸ்தர்களுக்கும் வசமாயிருக்கிறுர். வர்ணுச்ரம தர்மங்களை நன்ருய் அனுஷ்டிப்பதின்பேரில், பரமேச்வரன் பிரஸன்னமாகுங்கால், உடனே அவர் விஷயமான ஞானம் உண்டாகிறது. ஞானத்தால் அஞ்ஞானத்திற்கு நாசமுண்டு; கர்மத்தால் உண்டாகாது. அஞ்ஞானம் உள்ளவரையில் ஸம்ஸாரம் உண்டு; ஞானேதயமானுல் அது விலகும். ஆகையால் ஹே! மூனியே! அஞ்ஞானம் நசித்து, ஞானத்தால் முக்திகிடைக்கும். ஹே! வேதமறிந்தவரே! என்னுல் எல்லாம் சுருக்கமாக சொல்லப்பட்டது; ஆகையால் நீர் வர்ணுச்ரம தர்மங்களைக் கைக்கொண்டவராகவிரும்.

**22.** ஸூதர்—ஹே! முனிசிரேஷ்டர்களே! இதைக்கேட்டு பிரஹஸ்பதி பரமேச்வரனை நமஸ்கரித்து, அந்த ஈசனுடைய பிரஸாதமடையும்பொருட்டு (அடியில்வருமாறு) ஸ்தோத்திரஞ்செய்ய ஆரம்பிவித்தார்.

**23-31.** பிரஹஸ்பதி—ஹரனும், தேவனும், முக்கண்ணனும், மூன்று சூலியாயும், தபஸியாயும், மஹேசராயும், தத்துவ ஞாநத்தைக் கொடுப்பவராயும், அன்னத்தைக் கொடுக்கிறவராயும், வெண்ணிறமுள்ளவராயும், காருண்ய மூர்த்தியாயும், தேவர்களுக்கெல்லாம் தேவராயும், வேதாந்த மறிந்தவராயும் இருக்கிற உமக்கு நமஸ்காரம்; பரனும் ருத்திரராயும், எல்லோருமடையும் கரையாயும், விச்வமூர்த்தியாயும். மகேசனும், விச்வத்தை தரிக்கிறவராயுமிருக்கிற உமக்கு நமஸ்காரம்; பகதர்களின் ஸம்ஸாரத்தைப் போக்கடிப்பதற்குக் காரணராயும், சுத்தாத்மாவாயும், காலரூபரா

யும், காலனுக்கு காலனுயும், காலத்தைத் தாண்டினவராயுமிருக்கிற உமக்கு நமஸ்காரம்; ஜிதேந்திரியனுயும், நித்யனுயும், கோபத்தையடக்கினவராயும், பாஷண்டர்களை தண்டிப்பவராயும், பாபத்தைப் போக்கடிக்கிறவராயுமுள்ள உமக்கு நமஸ்காரம்; பர்வதராஜ புத்திரியின் பதியாயும், யோகாநந்த ரூபியாயும், யோகரூபியாயும், யோகிகளுக்கெல்லாம் பதியாயுள்ள உமக்கு நமஸ்காரம்; பிராணுயாமம் செய்கிறவர்களுடைய பிராணனை காப்பாற்றுகிறவராயும், மூலாதாரத்தில் பிரவேசித்தவராயும், மூலதார ஒளி ரூபியாயுமுள்ள உமக்கு நமஸ்காரம்; நாபிகந்தத்தில் பிரவேசித்தவராயும், ஹிருதயத்தில் வாஸம் செய்பவராயும், ஸத்சித் ஆநந்த பூர்ணராயும், ஸாக்ஷாத் பர்மாத்மாவான உமக்கு நமஸ்காரம்; சிவனுயும், ஆச்சரியமான சரீரத்தை யுடையவராயும், அத்புத சக்தியை யுடையவராயும், அகிலநாயகராயும், மோக்ஷ காரணராயுமுள்ள உமக்கு நமஸ்காரம்.

32. ஸூதர்—இந்த ஸ்தோத்திரத்தை எவனொருவன் பக்தியுடன் ஒவ்வொரு நாளும் பிரயத்தினத்துடன் படிக்கிருனே அவனுக்கு, சங்கரரை ஸந்தோஷப்படுத்திய காரணத்தால், முக்தி கைக்கெட்டினதாகும்.

33. வித்யார்த்தி வித்யையும், கல்யாணத்தை இச்சித்தவன் ஸம்ஸாரத்தையும், வைராக்கியத்தை இச்சித்தவன் ஸம்ஸார தாரகமான வைராக்கியத்தையும் அடைவார்கள்.

34. ஆகையால், நீங்களும் தினந்தோறும் பக்தியுடன் பவநாசத்தின்பொருட்டு இந்த ஸ்தோத்திரத்தை படித்துவாருங்கள்; இது பவபயத்தை நாசஞ்செய்யும்.

---

## அத்தியாயம் 3.

---

### (பிரம்மசரிய ஆச்ரமவிதி).

1. ஈசுவரன்—ஹே! நல்ல விருதத்தையுடைய பிரஹஸ்பதியே! வேதத்தில் கூறப்பட்டிருக்கிற பிரம்மசரிய ஆச்ரமத்தைப் பற்றி சொல்லுகிறேன்; சிரத்தையுடன் கேளும்.

**2-3.** உபநயனம் பெற்ற த்விஜன் சிரத்தையுடன் வேதங்களை படிக்கவேண்டும்; தன் ஸூத்திரத்தில் சொல்லிய வழிப்படி தண்டம், பூநூல், அரைக்கயிர், மான்தோல், காஷாயம் அல்லது வெண்மை வஸ்திரம், இவைகளை மந்திர உச்சாரணத்துடன் தரித்துக்கொள்ளவேண்டும்.

**4-5.** பிக்ஷை எடுத்து புசித்துக்கொண்டும், எப்பொழுதும் குரு கைங்கரியத்தில் கவனமாயிருக்கவேண்டும்; பலாசம், பில்வம், அரசு இவைகளில் ஒரு தண்டத்தை தன் தலை உயரம் அளவுள்ளதாகவும், கோணலில்லாததாகவும், அழகானதும், காயமில்லாததாயும், பட்டையுடனிருப்பதாகவும் தரித்துக்கொள்ளவேண்டியது; காலையும் மாலையும் பக்தியுடன் ஸந்தியை உபாஸிக்கவேண்டும்.

**6.** ஆசை, கோபம், லோபம், மோகம் இவைகளைத் தள்ளிவிடவேண்டியது; அந்த த்விஜன் அக்னி உபாஸனைகளை தன் ஸூத்ரவிதிப்படி காலையிலும் மாலையிலும் செய்யவேண்டும்.

**7-10.** இந்த உத்தம பிராமணன் ஸ்நாநஞ்செய்து தேவ, ரிஷி, பிதிருக்களுக்கு தர்ப்பணம் கொடுக்கவேண்டியது; சிவாக்னியிலிருந்து உண்டானதும், விரஜா ஹோமத்தாலுண்டானதும், அக்னிஹோத்திரத்தி லுண்டானதுமான பஸ்மத்தை 'அக்னி' என்று ஆரம்பிக்கப்பட்ட ஆறு அல்லது ஏழு மந்திரங்களை உச்சரித்து, ஜலத்தால் குழைத்து, எல்லா அங்கங்களிலும் பூசிக்கொண்டு, பிறகு, நெற்றியிலும், வயிற்றிலும், கைகளிலும், கழுத்திலும் 'மேதாவி' முதலான மந்திரங்களைச் சொல்லிக்கொண்டும், பரிசுத்தமாயிருந்துகொண்டு, சிவனையும், பார்வதியையும் தியாநஞ்செய்துகொண்டு மூன்று புண்டரதாரணஞ் செய்துகொள்ளவேண்டியது.

**11.** 'திரியாயுஷம் ஜமதக்னி' என்ற மந்திரத்தாலும் செய்துகொள்ளலாம்; புஷ்பம், பத்ரம் அல்லது வேறு எவைகளினாலாவது (அக்ஷதை, சந்தனம்) மஹாதேவ பூஜை செய்யவேண்டும்,

**12.** தினந்தோறும் மாதா, பிதா, வயோதிகர், தமயன், ஸ்வகுரு, ஆத்மஞானி இவர்களை சிரத்தையுடன் நமஸ்காரஞ் செய்யவேண்டும்.

**13-14.** தான் இன்ன பெயருடையவன் என்று சொல்லி ஸாஷ்டாங்க நமஸ்காரம் செய்யவேண்டும்; நமஸ்காரம் செய்யப் பட்டவன் 'தீர்க்காயுஸுடன், ஹே! யோக்யா இரு' என்று அவன் பெயரின் கடை எழுத்தை தீர்க்கமான குரலுடன் உச்ச ரித்து ஆசீர்வாதம் செய்யவேண்டும்; மாறு கரங்களால் குருவின் பாதங்களை பிடித்துக்கொள்ளவேண்டியது.

**15-17.** வலது கையால் அவரது வலது காலையும், இடது கையால் அவரது இடது காலையும் தொடவேண்டும்; லௌகிகம், வைதிகம், ஆத்மஞானம் இவைகளை எவரிடமிருந்து அடைந்தனனோ அவர்களை முதலில் நமஸ்கரிக்கவும்; மாதா பிதாக்களின் வம்சஸ்தாரையும், குரு வம்சஸ்தாரையும், குணத்திற் சிறந்தவரை யும், மனோவாக்குக்காயத்தால் பக்தியோடு ஆதரிக்கவேண்டியது; குருவைக்காணின் நமஸ்கரித்து கைகூப்பி நிற்கவும்.

**18.** அவருடைய உத்திரவின்மேல் (அவர் நேரில் உட்கா ராமல்) பக்கங்களில் உட்காரவேண்டும்; எப்பொழுதும் ஸத்தியத் தையே சொல்லவேண்டும்; படித்ததை மறவாமலிருக்கவேண்டும்.

**19.** நித்திய, நைமித்திக கர்மங்களை மோக்ஷ விருப்பாலா வது அல்லது சாஸ்திரங்களில் விதிக்கப்பட் டிருக்கிறதென்ற புத் தியாலாவது, சாந்தனாய் இருந்துகொண்டு, அனுஷ்டிக்கவேண்டி யது.

**20.** தினந்தோறும் பிரம்மசாரி, பிராமணர்களிடமிருந்து பிக்ஷையைக்கிரகித்து, அப்படி கிடைக்காவிடில் வர்ணாந்திரங்க ளிடமிருந்து யெடுத்து, குருவினிடம் நிவேதனஞ்செய்து புஜிக்க வேண்டும்.

**21-22.** உபநயனம் செய்யப்பட்ட த்விஜன் 'பவதி' சப்தத் தை முதலிலும், க்ஷத்திரியன் நடுவிலும், வைச்யன் கடையிலும்

உச்சரித்து பிக்ஷையெடுக்கவேண்டும் ('தாயே பிக்ஷகொடு,' 'பிக்ஷையை தாயே கொடு,' 'பிக்ஷை கொடுத்தாயே'); நிந்திக்கப் பட்ட வீடுகளில் பிக்ஷையெடுக்கக்கூடாது; கிழக்கு நோக்கியா வது, அல்லது சூரியனை நோக்கியாவது புஜிக்கவேண்டும்.

23. கை கால்களை சுத்திசெய்து, இரண்டுதரம் ஆசமனஞ் செய்து 'பிராணாயஸ்வாஹா' என்ற பிராண ஆஹுதி மந்திரங்க ளால் பிராணாஹுதிசெய்துகொண்டு புஜிக்கவேண்டும்.

24-25. வேதாப்யாஸம் தவிர வேறு மந்திரங்களை உச்சரிக் கக்கூடாது; இப்படி நடந்து வரும்பொழுது வைராக்யம் உண்டா கும் பக்ஷத்தில், மோக்ஷ இச்சையால் ஸந்யாஸத்தையாவது, அல் லது எப்பொழுதும் பிரம்மசரியத்தையாவது, அல்லது கிரஹஸ் தாச்ரமத்தையாவது தன்தன் இஷ்டப்படி கைக்கொள்ளலாம்.

---

## அத்தியாயம் 4.

### (கிரஹஸ்தாச்ரமவிதி).

1-4. ஈச்வான்—இப்பொழுது கிரஹஸ்த தர்மத்தைச் சுருக் கமாக உனக்குச் சொல்லுகிறேன்; முற்கூறிய பிரகாரம் எல்லா வேதங்களையும் ஓதி, குருவின் கட்டளையின்மேல் ஸமாவர்த்தனம் செய்து கிரஹஸ்தாச்ரமத்தை யடையவேண்டும்; அனுகூலமான தும், தனது கோத்திரம் பிரவாம் முதலிய இல்லாத வம்சத்தில், தனது சூத்திரப்பிரகாரம், எல்லா லக்ஷணமுள்ளவளும் பதிவிரு தையாயுமுள்ள நல்ல குலஸ்திரீயை வரிக்கவேண்டும்; மற்றவர் களை தள்ளிவிடவேண்டும்; நக்ஷத்திரம், நதி, விருக்ஷாதிகளின் பெயரை வகித்த பெண்ணைத் தள்ளிவிடவேண்டும்; இந்திரியங் களை தன் வசப்படுத்தியவனாய் தினந்தோறும் அவளுடன் தர்மத் தை யனுஷ்டிக்கவேண்டும்.

5. ருதுகாலத்தில், தெரிந்த புத்திமான், மந்திர உச்சார ணத்துடன் அவளைச் சேரவேண்டும்; தேவர்கள், அக்னி, அதிதி களின் பொருட்டு பிக்ஷை கொடுப்பதற்காக அன்றி தங்களுக்காக பக்வம் செய்யக்கூடாது.

6-8. தனக்காக எவன் பாகம் செய்கிருனே அவன் நரகமடையும்பொருட்டு ஜீவிக்கிருன்; எவர்களுடைய ஜீவனம் தர்மத்தின்பொருட்டு, மைதுனம் ஸந்தானத்தின்பொருட்டும் உள்ளதோ அவர்கள் ஸம்ஸாரத்திலிருந்து விடுதலையடைவார்கள்; மற்றவர்களுக்கு எப்பொழுதும் நரகமே; யாகம் செய்துவைப்பதாலும், வேதம் சொல்லிவைப்பதாலும், சுத்தர்களிடமிருந்து தானம் பெறுவதாலும், பிராமணன் யாகத்திற்காவது, யாத்திரையின்பொருட்டாவது பணத்தைச் சேகரிக்கலாம்; ஜனமில்லாதவிடத்திலும், பயமில்லாதவிடத்திலும் மலஜலங்களை விஸர்ஜனம் செய்யவேண்டும்.

9. துர் நாற்றம் முதலியவைகளை போக்கடிக்க பிரஷ்டபாகம், ஆண்குறி, கை கால் இவைகளை மண் ஜலங்களால் சுத்தி செய்யவேண்டும்.

10. மனஸ் சுத்தியடையும்வரை சௌசம் விதிக்கப்பட்டிருக்கிறது; பிறகு ஆசமனம் செய்து குச்சிகளைக்கொண்டு தந்த சுத்தி செய்யவேண்டும்.

11-14. பிறகு இருமுறை ஆசமனஞ்செய்து ஸ்நானஞ்செய்து, மற்ற கர்மங்களை நடத்தவேண்டியது: மூன்று பிராணுயாமங்கள் செய்து வித்வான் காயத்ரீ ஜபம் செய்யவேண்டும்; பிறகு உபஸ்தானம் செய்யவும்; இப்பிரகாரமே உச்சி காலத்திலும் செய்யவேண்டியது; வேத பாராயணம் செய்து பிரம்ம யக்ஞயம் செய்துவரவும்; இன்னும் மற்ற கர்மங்களான அக்னி கர்மங்கள், பலிகர்மாதிகள் (பஞ்ச யக்ஞயம்) இவைகளைச் செய்யவும்; நித்திய சிராத்தம், தானம், அசக்தர்களின் ரக்ஷணை, எல்லா பூதங்களிடமும் தயை இவைகளை கிரஹஸ்தன் நடத்திவரவும்.

15-17. அன்னபான முதலியவைகளால் ஸந்யாசிகளை எப்பொழுதும் ரக்ஷிக்கவும்; எதியும், பிரம்மசாரியும் பாகம் செய்யப்பட்ட அன்னத்திற்கு உரியவர்கள்; அப்படியிருக்க அவர்களுக்கு அன்னம் அளிக்காமல் புஜிப்பவன் சாந்திராயண விருதம் (தோஷ நிவர்த்திக்காக) அனுஷ்டிக்கவேண்டும்; எதியின் கையில் முதலில் ஜலம் விட்டு, பிக்ஷை கொடுத்து, பின்னும் ஜலம் கொடுக்கவேண்

டும்; அந்த பிக்ஷை மேருக்குச் சமமாயும், அந்த ஜலம் ஸமுத்தி ரத்திற்கு ஒப்பாகவும் சொல்லப்பட்டிருக்கின்றன; கிரஹஸ்தன் ஒருவேளை புஜிப்பதே உத்தமம்.

18. அங்ஙன முடியாவிடில் இரண்டு வேளை புசிக்கலாம்; கோழிமுட்டை அளவுள்ள 32 கபளங்களை சந்தோஷமும் துக்க மும் இல்லாமல் புஜிக்கவேண்டும்.

19. ஹோமம், ஜபம், ஊண், ஆசமனம் இவைகளைச் செய் யும் பொழுதும், குரு பெரியோர்கள் முதலியவர்களை உபசரிக்கும் காலத்திலும் யக்ஞயோபவீதனுப் இருக்கவேண்டும்; வேறு வித மாக விருக்கக்கூடாது.

20. மூங்கில்கழியும், ஜலத்துடன் கூடிய கமண்டலமும், விபூதிப்பூச்சும், முற்கூறிய பிரகாரம், எப்பொழுதும் கைக்கொள் ளவும்.

21. 'திரியம்பகம்' என்ற மந்திரத்தாலும், 'ஓம்'காரத்தோடு கூடிய பஞ்சாக்ஷரத்தாலும் கிரஹஸ்தன் தினந்தோறும் திரிபுண் டரத்தை தரிக்கவும்.

22. எந்த விப்ரன் நெற்றியில் பஸ்மத்தால் திரிபுண்டரம் உளதோ அவனுக்கு அத்யயநம் செய்த பலனும், எல்லா கர்மங்க ளைச் செய்த பலனும் உண்டாகும்.

23. பக்தியுடன் திரிபுண்டரத்தை எப்பொழுதும் தரித்துக் கொள்ளவும்; மனஸால்கூட அசட்டை செய்யக் கூடாது; ச்ருதி யில் விதித்திருக்கிறபடியால் அதைத் தியாகம் செய்பவன் பதித னுவான்.

24. ருத்திராக்ஷத்தைத் தரிக்கவேணுமென்று ச்ருதியிருப் பதால் அதை எப்பொழுதும் தரித்துக்கொள்ளவும்; மகேசனுன தேவதேவனை எப்பொழுதும் லிங்கத்தில் பூஜிக்கவும்.

25. அக்னி ஆதானமும், விதிபூர்வகமாக யக்ஞபங்களும் செய்யவேண்டும்; யக்ஞபங்களால் எல்லா பாபங்களும் நாசமடை வதில் ஸந்தேகமில்லை.

**26.** ஸகல பாப நாசத்தால் அந்தக்கரணம் சுத்தியடைந்தவனுக்கு தேவதேவனான ஈசனை அறிய இச்சையுண்டாகிறது.

**27.** ஸ்வர்க்க இச்சையுள்ள பிராமணன் யக்ஞயம் செய்வதால் ஸ்வர்க்கம் அடைகிறான்; பிதிருக்களின் கடனைச் செலுத்த தன் சொந்த ஸ்திரீயினிடம் புத்திரோத்பத்தி செய்யவும்.

**28-29.** ஹிதமாயுள்ள ஸத்யத்தை எப்பொழுதும் கைக்கொள்ளவும்; ஸர்வ பூதங்களிடத்திலும் எப்பொழுதும் பச்சாத்தாபம் அடையவும்; இவ்வித மனுஷ்டானமுள்ள விப்ரன், கிரஹஸ்தாச்ரமத்தில் விரக்தியடைந்தால், எல்லா கர்மங்களையும் விட்டுவிட்டு, வேதாந்த அப்யாஸத்தில் யெத்தனம் செய்யவும்; வேதாந்த சிரவணம் இல்லாவிடில் பதிதனவது நிச்சயம்.

**30.** விரக்தனும், முமுக்ஷுவாயுமுள்ள கிரஹஸ்தன் குடீசகன், பகூதகன், ஹம்ஸன் என்கிற ஸந்யாஸ ஆச்ரமங்களில் யாதேனும் ஒன்றைக் கைக்கொள்ளவும்.

**31.** விரக்தியற்ற கிரஹஸ்தன் அந்திகாலத்தில் வானப்பிரஸ்தாச்ரமத்தைக் கைக்கொள்ளலாம்; அல்லது ஆயுள் பரியந்தமும் கிரஹஸ்தனகவே இருக்கலாம்.

**32.** எல்லா ஆச்ரமங்களும் கிரஹஸ்தனல் நன்ருக காப்பாற்றப்படுகிறபடியால், விரக்தியடையாத கிரஹஸ்தன் எப்பொழுதும் கிரஹஸ்தனகவே இருக்கலாம்.

---

## அத்தியாயம் 5.

### (வானப்பிரஸ்தாச்ரமவிதி).

**1-2.** ஈச்வரன்—ஹே! முனியே! உங்களுக்கு இப்பொழுது வானப்பிரஸ்தா ச்ரமத்தைப்பற்றிச் சொல்லுகிறேன்; தனது பார்யையை புத்திரன் வசம் ஒப்புவித்தாவது, அல்லது கூடக் கூட்டிக்கொண்டு சாந்த மனஸுடன், உத்திராயணத்தில், சுக்லபக்ஷத்தில் நல்ல வாரத்தில் சுபநக்ஷத்திரத்தோடு கூடிய நல்ல முஹூர்த்தத்தில் கிரஹஸ்தன் வனத்தையடையவும்.

3. யமம் முதலியவைகளுடன் கூடி (இந்திரிய நிக்கிரகம்), சுத்தனும், சாந்தனும் இருந்து, தவஞ்செய்து, கந்தமூல பதார்த்தங்களை புசித்து ஈசனை பூஜிக்கவும்.

4. அல்லது புத்திமானுகிய வானப்ரஸ்தன் கிராமத்திலிருந்து பிக்ஷையெடுத்து பதினறு கவளங்கள் புஜித்துவரவும்; எப்பொழுதும் சடை தரிக்கவும்; நகங்களையும் ரோமங்களையும் எடுக்கக்கூடாது.

5. வீண்வார்த்தைகளை விட்டு சாந்தமனஸுடன் எப்பொழுதும் வேதாப்பாஸம் செய்யவும்; அக்னிஹோத்திரம், பஞ்சயக்யங்கள் செய்துவரவும்.

6. மரவுரி தரித்துக்கொள்ளவும்; மூன்றுகால ஸ்நாநமும், ஸர்வ பூதங்களிடம் தயையும் கைக்கொண்டு யாசக விருத்தியன்றி இருக்கவும்.

7. பூமியிலும் ஜலத்திலும் கிடைக்கிற மாம்ஸங்களையும், மதுவையும் தள்ளி ஓரேவேளை போஜனம் செய்துவரவும்; இரவு முழுவதும் தியாநத்தில் இருக்கவும்.

8. கோபம், இந்திரியங்களை ஜயித்தும், ஆத்மவிசாரணையிலிருந்துகொண்டும், இரவில் பூமியில் சயனித்தும் காயத்திரி ஜபத்தை எப்பொழுதும் ஜபிக்கவும்.

9. கோபம், கோள்சொல்லல், நித்திரை முதலியவைகளை தூரமாக விலக்கவும்; மாதந்தோறும் வானப்பிரஸ்தன் கிருச்சிர சாந்திராயண விருதங்களை யனுஷ்டிக்கவும். [கிருச்சிரவிருதம்—விருத ஆரம்பமுதல் மூன்று தினங்களில் காலையில் மாத்திரம் புஜிக்கவும்; அடுத்த மூன்று தினங்களில் ஸாயங்காலத்தில் புஜிக்கவும்; அடுத்த மூன்று தினங்களில் யாசகமன்னியில் கிடைத்ததை புஜிக்கவும்; கடை மூன்று தினங்களில் உபவாஸமிருக்கவும். சாந்திராயணம்—மாஸத்தின் கிருஷ்ணபக்ஷம் முதல் தினத்தில் ஆரம்பித்து, முதல் தினத்தில் 14 கபளமும், மறுதினங்களில் ஒவ்வொரு கபளமாகக் குறைத்து, அமாவாசையில் உபவாஸ

மிருந்து, திரும்பவும் சுக்லபக்ஷத்தில் ஒரு கபளம் முதல் துவக்கி, ஒவ்வொரு கபளமாக அதிகப்படுத்தி பௌர்ணமியில் முடிப்பது விருதம்].

10. கிரீஷ்ம காலத்தில் (வெய்யில் காலத்தில்) பஞ்சாக்னி மத்தியிலும், வருஷா காலத்தில் (மழை காலத்தில்) துறந்த வெளியிலும், பனிகாலத்தில் ஈரவஸ்திரத்துடனும் கிரமமாக தபஸை விருத்திசெய்துவரவேண்டும். (பஞ்சாக்னி—உட்கார்ந்திருக்கும் நான்கு பக்கத்திலும் அக்னி, தலைக்குமேல் சூரியன்).

11. மூன்று காலங்களிலும் ஸ்நாநஞ்செய்து தேவ பிதிருக்களுக்கு தர்ப்பணம் செய்துவரவும்; ஸம்வத்ஸர மத்தியில் ஒற்றைக் காலால் நிற்பதும், வாயு ஆகாரமும் அனுஷ்டித்து வரவேண்டும்.

12. சுக்லபக்ஷத்தில் பாலையும், கிருஷ்ணபக்ஷத்தில் கோமயத்தையும் குடிக்கவேண்டியது; அல்லது உளர்ந்தயிலைகளை சாப்பிட்டாவது, கிருச்சிர விருதத்தை அனுஷ்டித்துக் கொண்டாவது இருக்கவேண்டும்.

13. யோகாப்பியாஸத்தைக் கைக்கொண்டு பசுபதியான சிவனை தியானித்து வரவும்; மான்தோல், உத்தரீயம் (மேல்வேஷ்டி), வெளுப்பான எக்ஞயோபவீதம் இவைகளைத் தரித்துக்கொள்ளவும்.

14. அல்லது, அக்னிகளை ஆத்மாவில் ஆவாகனஞ்செய்து (அக்னிகாரியங்களை ஒழித்துவிட்டு) ஈச்வரதியானத்துடன் அக்னியற்றவனாகவும், ஸ்தானமற்றவனாகவும் மோக்ஷ பானாகவும் இருக்கவும்.

15. எப்பொழுதும் சாந்த மனதுடன் உபநிஷத்துக்களை அப்பியாஸம் செய்துவரவும்; கிரகஸ்தனுக்குக் கூறியுள்ள மந்திரங்களால் விபூதிப்பூச்சும், திருபுண்டர தாரணமும் செய்யப்படவேண்டியது.

16. வைராக்கியம் உண்டானால் அப்பொழுது மோக்ஷாபேக்ஷையுடன் பகூதகம், ஹம்ஸம், பரமஹம்ஸம் என்ற ஸந்யாஸ ஆச்ரமங்களில் ஒன்றை அடையலாம்.

17. ஹே! பிரகஸ்பதியே! எல்லாம் சுருக்கமாகவும் தெளிவாகவும் உமக்கு சொல்லப்பட்டது; ஆகையால் ஸர்வ பிரயத்தினத்துடனும் சிரத்தையுடனும் இதை நன்றாக அறி.

---

## அத்தியாயம் 6.

---

### (ஸந்யாஸ விதி நிரூபணம்).

1. ஈசுவரர்—ஹே! முனிச்ரேஷ்டரே! இப்பொழுது ஸந்யாஸத்தைச் சொல்லுகிறேன்; நடைபேதத்தால் நான்குவிதமான ஸந்யாஸிகள் அறியப்படவேண்டும்.

2. குடீசகன், பகூதகன், ஹம்ஸன், பரமஹம்ஸன்—இவர்களின் விருத்தியை (இருப்பை) கூறுகிறேன்.

3-5. குடீசகன் ஸந்யாஸம் பெற்று தன் வீட்டிலாவது அல்லது தன் பந்துக்களின் வீட்டிலாவது பிக்ஷையெடுத்து புஜித்துவரலாம்; சிகை, எக்ஞயோபவீதம், திரிதண்டம், கமண்டலம், பவித்திரம், காஷாய வஸ்திரம் இவைகளுடன் எப்பொழுதும் காயத்ரியை ஜபித்துவரவும்; ஸர்வாங்கங்களிலும் விபூதிபூச்சும், திரிகாலத்திலும் திருபுண்டரதாரணமும், தினந்தோறும் சிரத்தையுடன் சிவலிங்க பூஜையும் செய்துவரவேண்டும்.

6. பகூதகன் என்பவன் ஸந்யாஸம் வகித்தவுடன், பந்து புத்திராதிகளை நீக்கி, ஏழு கிரகங்களில் பிக்ஷையெடுத்து புஜிக்கவும்; ஒரு வீட்டு அன்னம் கூடாது.

7-10. பசுவின் வால் நுனியிலுள்ள மயிரால் கட்டிய திரிதண்டமும், உரி ஒன்றும், ஜலபாத்திரமும், ஜலசுத்தி வஸ்திரம் ஒன்றும், கௌபீனம், கமண்டலம், மேல்வேஷ்டி, பாதரக்ஷை, கொடை, பவித்திரம், கிருஷ்ணஜினம், இடுப்புக்கயிர், ஊசி, சிறுகத்தி, யோகபட்டம், அதற்கு மேல்வஸ்திரம், மண்வெட்டி ஆயுதம், எப்பொழுதும் விபூதிதாரணம், திரிபுண்டரம், சிகை, யக்ஞயோபவீதம் இவைகளுடன் ஒரேவிடத்திலிருந்துகொண்டு தேவதாபூஜை அத்யயனம் நடத்திவரவும்.

**11-12.** ஸந்தியா காலங்களில் காயத்திரீ ஜபஞ்செய்து கர்மானுஷ்டானம் நடத்திவரவும். ஹம்ஸன் கமண்டலம், உரி, பிக்ஷாபாத்திரம், துணி, கௌபீனம், மேல்வஸ்திரம், கீழ்விரிப்பு வஸ்திரம், ஒரு மூங்கில்கழி இவைகளை சிரத்தையுடன் கைக்கொள்ளவும்.

**13.** திரிபுண்டரம், விபூதிதாரணம், சிவலிங்க பூஜைகளைக் கைக்கொள்ளவும்; எட்டுக்கபளம் புஜிக்கவும்; சிகைவைத்துக் கொள்ளவும்.

**14-18.** ஸந்தியா காலங்களில் காயத்திரீ ஜபமும், ஆத்ம சிந்தனையையும், தீர்த்தபாத்திரை, கிருச்சிர சாந்திராயண விருதங்களையும் கைக்கொண்டு கிராமத்திற்கு ஓர் இரவாகக் கிரமமாக வஸிக்கவும். பரமஹம்ஸன் திருதண்டம், பசுவின் ரோமத்தால் செய்யப்பட்ட கயிறு, உரி, ஜலசுத்தி வஸ்திரம், பவித்திரம், கமண்டலம், சிறுகத்தி, தோல், ஊசி, மண்வெட்டி, கத்தி, சிகை, யக்ஞோபவீதம், நித்தியகர்மம் இவைகளைத்தள்ளி கௌபீனம், மேல்வஸ்திரம், குளிர்சகிக்கத்துணி, யோகபட்டம், மேல்வஸ்திரம், பாதகுறடு, குடை, அக்ஷமாலை, காயமில்லாத மூங்கில்தடி இவைகளை கிரகிக்கவும்.

**19.** 'அக்னிரிதி' என்ற மந்திரத்தால் ஸந்தோஷத்துடன் எப்பொழுதும் விபூதி தாரணமும், 'ஓம்' என்று மும்முறை சொல்லி திருபுண்டர தாரணமும் செய்யவும்.

**20.** மண்பாத்திரம், வெங்கலப்பாத்திரம், மரப்பாத்திரம், மூங்கிற்பாத்திரம், கையையே பாத்திரமாக உபயோகித்தல், அல்லது வயிற்றையே பாத்திரமாகப் பாவித்தல் இவைகளில் யாதாமொன்றை உபயோகிக்கவும்.

**21.** பஹூதர்களுக்கும் ஹம்ஸர்களுக்கும் கை அல்லது வயிறுகளில் ஒன்றைப் பாத்திரமாக வைத்துக்கொள்ள வேண்டியது; வெங்கலப்பாத்திரம் கூடாது; சுருதியில் மண்பாத்திரம் சொல்லப்பட்டிருக்கிறது.

22. பரமஹம்ஸன் மாதுகரவிருத்தியால் (தேன் ஈக்கள் அநேக புஷ்பங்களிலிருந்து தேனைக் கொஞ்சம் கொஞ்சமாக சேர்ப்பதுபோல) ஜீவிக்கவும்; மிதமன்றி புஜிப்பதும், அல்லது அடியோடு ஆகாரத்தைத் தள்ளுதலும் யோகத்திற்குத் தடைகளாக யேற்படும்.

23. ஆகையால் யோகத்திற்கு அனுகூலமாக பரமஹம்ஸன் ஆகாரம் செய்யவேண்டும்; நிந்திக்கப்பட்ட வீடுகளைவிட்டு எல்லா வர்ணங்களிலேயும் பிக்ஷை வாங்கலாம்.

24. மேல்ஜாதிகளில் பிக்ஷைகிடைக்கும் பக்ஷத்தில் கீழ் ஜாதிகளைத் தள்ளவும்; குருசேவையால் ஆத்மஞானத்தை எப்பொழுதும் அப்பியாஸம் செய்யவும்.

25-26. ஸ்நானம், சுசி, தியானம், ஸத்யம், பொய் சொல்லாமை, காமக் குரோதாதித்தியாகம், கோபம் ஸந்தோஷமில்லாமை, லோபமோகத்தியாகம், டம்பம் கொழுப்பு முதலியன இல்லாமை, சாதுர் மாஸ்யம் இவையனைத்தும் மேற்கூறிய நான்குவித ஸந்யாஸிகளுக்கும் உண்டு என்று பிரம்மவாதிகள் சொல்லுகிறார்கள்.

27. குடீசகன், பகூதகன், ஹம்ஸன் இவர்கள் மோக்ஷத்தையுத்தேசித்து காயத்திரீ மந்திரத்தை மாத்திரம் ஜபிக்கவேண்டும்.

28. மூன்று வேதங்களும் பிரணவத்தில் யடங்கியிருப்பதால் பரமஹம்ஸன் எப்பொழுதும் அந்தப் பிரணவத்தையே ஜபிக்கவேண்டும்.

29. ஸந்தியாகாலங்களில் சுத்தமும் தெளிவுமான மனதுடன் பிரணவத்தால் ஆறு பிராணாயாமங்கள் செய்து நூற்றெட்டு பிரணவஜபம் செய்யவேண்டும்.

30. ஸந்யாஸிகளுக்குள் உயர்ந்தவன் ஏகாந்த ஸ்தலத்தையடைந்து, ஸுகமாய் உட்கார்ந்துகொண்டு, கவலையற்று, சக்தியானுஸாரம் ஸமாதியை அனுஷ்டித்துவரவும்.

31. வித்துவான் கிரமமாகவோ அல்லது கிரமமில்லாமலோ உத்தம விருத்தியை அடையவும்; உத்தம விருத்தியை யடைந்த பிறகு நீச விருத்தியை யடையக்கூடாது.

32. உத்தம விருத்தியையடைந்து நீச விருத்தியைக் கைக்கொண்டவன் (ஸங்யாஸம் அடைந்து அதை விட்டுவிட்டால்) எல்லா தர்மங்களினின்றும் நீக்கப்பட்டவனுய் ஆரூடபதிதன் (ஏறி விழுந்தவன்) ஆகிருன்.

33. ஸங்யாஸம் பெற்றுக்கொள்ளுகிற துவிஜனைப்பார்த்து, சூரியன், தன் மண்டலத்தைப் பேதித்து பிரம்மலோகம் போகிருன் என்று நினைத்து, தன் ஸ்தானத்திலிருந்து நடுங்குகிருன்.

34. மூர்த்திகள் சரம் என்றும் அசரம் என்றும் இரண்டு விதம்; அதில் ஸங்யாஸி ரூபம் சரம் என்றும், மண்முதலியதால் செய்யப்பட்டு ஸ்தாபிக்கப்பட்டது அசரம் என்றும் சொல்லப்படும்.

35. ஹே! முனிசிரேஷ்டர்களே! எவனுடைய வீட்டில் ஒரு ஸங்யாஸி எப்பொழுதும் இருக்கிருனே அவனுக்கு மூன்று உலகங்களிலும் அடையக்கூடாதது ஒன்றும் இல்லை.

36. கெட்ட நடத்தையுடையவனுனுலும், நல்ல நடத்தையுள்ளவனுனுலும், மூர்க்கனுனுலும், பண்டிதனுனுலும் வேஷம் மாத்திரம் பூண்ட ஸங்யாஸியை ஈசுவரனைப்போல் பூஜிக்கவேண்டும்.

37-38. பிரம்மசரியத்தி லுள்ளவர்களுக்கு பிரம்மா தேவர் என்றும், கிரகஸ்தர்களுக்கு எல்லோரும் தேவர்கள் என்றும், எதிகளுக்கு மசேசுவரன் தேவர் என்றும், வானப்பிரஸ்தனுக்கு சூரியன் தேவர் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது; ஆகையால் எப்பொழுதும் ஸங்யாஸிகளுள் சிரேஷ்டனை (பரமஹம்ஸனை) பூஜிக்கவும்.

39. அவன் இறந்தால் தகனம் செய்யக்கூடாது; புதைக்க வேண்டியது; அவனுக்கு தீட்டும், தர்ப்பணமும் கிடையாது.

40. அந்தவிடத்தில் கிரியைசெய்பவனால் அரசமரம் ஸ்தாபிக்கப்படவேண்டியது; அதனால் மகேசுவரனை ஸ்தாபித்ததாகும்.

41-42. அந்த அரசமரத்தை தொடுவதாலும், தெரிசிப்பதாலும் எல்லா பாபங்களும் நாசமாய்விடும். மற்ற ஸந்யாஸிகளை முதலில் புதைத்து, பிறகு, தகனமும் செய்தால் அச்வமேத பலன் கிடைக்கும்; ஸ்நாநத்தால் சுத்தி (தீட்டும், தர்ப்பணமும் கிடையாது).

43. இவையெல்லாம் புத்திமானும் சீடனுயுமுள்ள உனக்கு (பிரகஸ்பதிக்கு) சுருக்கமாகச் சொல்லப்பட்டது. ஆகையால் வேதாந்தார்த்தத்தைப் பிரகாசம்செய்கிற இதைத் தெறிந்து கொள்.

---

## அத்தியாயம் 7.

---

### (பிராயச்சித்தவிதி நிருபணம்).

1. ஈசுவரன்—இப்பொழுது எல்லா பூதங்களிலிருக்கிற தயையால் சுருக்கமாகப் பாபங்களை நீக்கும் பரிகாரங்களைச் சொல்லுகிறேன்.

2. பிராமணனைக் கொலைசெய்கிறவன், கள் குடிக்கிறவன் தங்கத்தை திருடுகிறவன், குருபத்னியிடம் சேருகிறவன் இவர்கள் ஹே! வேதமறிந்தவர்களில் சிரேஷ்டனே! மகாபாபிகள் என்று சொல்லப்படுவார்கள்.

3-8. இந்நால்வருடன்கூட எவன் ஒருவருஷம் வஸிக்கிறானோ அவனும் மகாபாபி. பிரம்மஹத்தி செய்தவன், ஜனமில்லாத காட்டில் குடிசை கட்டிக்கொண்டு, பன்னிரண்டு வருஷங்கள் பிக்ஷையெடுத்து, எப்பொழுதும் பரிதாபத்துடன் தான்செய்த பாபத்தை எல்லோரிடமும் சொல்லிக்கொண்டு ஜிதேந்திரியனாய் இருக்கவேண்டும்; அல்லது கந்தமூல பதார்த்தங்களை புஜித்துக் கொண்டும், ஒரு சவத்தின் தலையோட்டைக் கையில் ஏந்திக்கொண்டு மிருந்தால் பண்ணிரண்டு வருஷங்கள் சென்றவுடன் பிரம்மஹத்தியினின்று விடுதலையடைகிறான்; இது அறியாமல்செய்த

பாபத்திற்கு பரிகாரம்; அறிந்துசெய்தால் பிராணத்தியாகம் செய்துகொள்ளுவதே முடிவாகும்; அல்லது, தன் பாபத்தைப் போக்கடிக்க ஒரு கிராமத்திலிருந்து அக்னியைக் கொண்டுவந்து அதில் பரிதாபத்துடன் பிரவேசிக்கவும்; அல்லது பட்டினியாகக் கிடந்து, தர்மயுத்தத்திலாவது, அக்நியிலாவது, ஜலத்திலாவது, மகாப்பிரஸ்தான யாத்திரையிலாவது, பிராம்மணனுடைய விஷயத்திலாவது, கோவிஷயத்திலாவது அடியோடே பிராணத்தியாகஞ் செய்துகொள்ளவும்.

**9-11.** ஸுராபானம் முதலிய தோஷங்களும் முற்கூறிய விதத்தால் பரிகாரமாகும்; நெருப்பு நிறமாயும், சூடாயும், பிராணனை நாசஞ்செய்யக் கூடியதாயுமுள்ள மத்யத்தை பானஞ்செய்தவன் பிராணனை இழந்துவிடுவதே பரிகாரமாம்; அல்லது கோமூத்திரம், நெய், ஜலம், சாணிப்பால் இவைகளை நன்றாகக் கொதிக்க வைத்து, குடித்து, மாணமடைவதே அதர்க்குப் பரிகாரம்.

**12-14.** தங்கம் திருடினவன், நேராக இராஜாவையடைந்து, தான்செய்த திருட்டை உறைத்து, தன்னைத்தெண்டிக்கச் சொல்லவும்; உடனே அந்த அரசன் அக்கெட்டவனை கூர்மையுள்ள ஒரு இரும்பு உலக்கையை எடுத்து, ஒரே அடியில் அவனைக் கொல்லவும்; அதனால் அக்குற்றவாளியின் பாபம் நீங்கும்; இராஜாவுக்கும் அவனைக்கொன்ற தோஷமில்லை.

**15-16.** குருபத்னி கமனம் செய்தவன் இரும்பால் செய்யப்பட்ட ஒரு ஸ்திரீபொம்மையைப் பழுக்கக்காய்ச்சி அதை ஆலிங்கனம் செய்யவும்; அல்லது தானே தன் ஆண் குறியையும், பீஜத்தையும் பிடுங்கிக் கையில் வைத்துக்கொண்டு மாணம்வரும் பரியந்தம் தெற்கு திசையை நோக்கிச் செல்லவும். இப்படிச் செய்வதால் குருபத்னி கமனதோஷம் நீங்கும்.

**17-18.** இம்மகா பாதகர்களுடன் ஸகவாஸம் செய்தவன் ஒரு 'வருஷம் சிரத்தையுடனும், வருத்தத்துடனும் 'தப்தகிரிச்சிரம்' அனுஷ்டிக்கவும். (தப்தகிருச்சிரம்—முதல் மூன்று தினங்கள் வெந்நீரும், அடுத்த மூன்று தினங்கள் சூடான பாலும்,

அடுத்த மூன்றுநாள் சூடானநெய்யும் பானஞ்செய்து, கடை மூன்றுநாள் காற்றை ஆகாரஞ்செய்து வருதல்). மாதாவையும், மாதாவுக்கு ஸமானமான ஸ்திரீயையும், ஸகோதர புத்திரியையும், மாதாவின் ஸகோதரிகளேயும் புணர்ந்தால் இரண்டுதடவை 'கிருச்சிராதி கிருச்சிரமும்' (21 தினங்கள் ஜலத்தைப் பாணஞ்செய்தல்), 'சாந்திராயணமும்' செய்வதே இப்பாபத்திற்குப் பரிகாரமாகும்.

19. ஸகோதரியுடனுவது, குமாரத்தியிடமாவது புணர்ந்த பாபத்திற்கு 'ஸாந்தபனம்' என்கிற கிருச்சிரம் தோஷ நிவர்த்திக்காக செய்யவேண்டியது. (ஸாந்தபனம்—முதல்தினம் கோமூத்திரம்; இரண்டாம்தினம் கோமயம்; மூன்ருவது பால்; நான்காவது தயிர்; ஐந்தாவது நெய்; ஆருவது தர்ப்பைஜலம்; ஏழாவது உபவாஸம் அனுஷ்டிப்பது).

20. ஸகோதர மனவியுடன் புணர்ந்த பிராமணன் வருத்தத்துடன் நான்குமுறை சாந்தராயணம் செய்வதே பாபபரிகாரம்.

21. அத்தைபெண், அம்மான்பெண் இவர்களுடன் தெரிந்தும் தெரியாமலும் புணர்ந்தால் ஒரு சாந்திராயணம் செய்யவும்.

22. முற்கூறியவர்களைத்தவிற மைற்ற பிராமண ஸ்திரீகளுடன் சேர்ந்தால் ஒரு கிருச்சிரானுஷ்டானம் அப்பாபத்திற்கு சாந்தியாகும்.

23. பிராமணன் க்ஷத்திரிய வைசிய ஸ்திரீகளிடம் ஒருமுறை புணர்ந்தாலும், மைற்ற ஸ்திரீகளிடம் பலமுறை புணர்ந்தாலும் கிருச்சிர அனுஷ்டானமே பரிகாரமாகும்.

24-25. பிரம்மசாரி ஒரு ஸ்திரீயை தெரிந்து புணர்ந்தால் ஒரு வருஷம் பிக்ஷையெடுத்து கழுதைத் தோலை உடுத்திக்கொண்டு, தான்செய்த பாபத்தை வெளியிட்டுக்கொண்டு, மூன்றுவேளையும் ஸ்னனஞ்செய்வதே பரிகாரமாகும்; தெரியாமல் செய்ததற்கு ஆறு மாதத்தில் பரிகாரமாம்.

26-29. அக்னிகாரியம் செய்யாமலும் வீர்யத்தை வெளிப்படுத்திய ஒரு பிரம்மசாரி சிரத்தையுடன் ஸ்னனஞ் செய்து பிர

ணவ வியாஹிருதியுடன் (பூ, புவ, ஸ்வ:) காயத்திரியையும், அதன் சிரஸையும் (ஓம் ஆப:) 10,000 தடவை மௌனமாய் ஜபிக்கவும். ஸன்யாஸிகள் தங்கள் வீர்யத்தை வெளிப்படுத்தினால், ஸ்நானஞ் செய்து, சிரத்தையுடன் பரமாத்மரூபமான பிரணவத்தை 10,000 ஜபிக்கவும்; ஸன்யாஸி பிராம்மண ஸ்திரீயை புணர்ந்தால் ‘அவகீர்ணி’ விருதம் செய்யவேண்டும்; மைற்ற ஸ்திரீகளுடன் தெரிந்து புணர்ந்தால் ‘தப்த கிருச்சிரம்’ செய்யவும்.

30. க்ஷத்திரிய வைசிய சூத்திரர்களை ஒரு பிராமணன் கொன்றால் பிரம்மஹத்தியாவிருதத்தை முறையே ஆறு, மூன்று, அறை மாதம் அனுஷ்டிப்பதே பரிகாரம்.

31-32. விதித்ததைச் செய்யாமலும், நிந்தித்ததை அதிகமாகக் கைக்கொள்ளுவதும், வேதத்தைப் படியாததும், குருத்துரோகம் முதலிய கெட்டகாரியங்களைச் செய்வதற்கும் ஒருவன் தப்தகிருச்சிரம் செய்தால் அப்பாபத்திலிருந்து அவன் விடுதலையடைவான்.

33-34. அல்லது எல்லா பாபங்களையும் விலக்க சாந்தமனதுடன் வேதாந்த அப்யாஸம் செய்தவர்களுக்கு எப்பொழுதும் ஊழியஞ்செய்து, சிரத்தை விநயத்துடன் கூடி, உள் வெளி இந்திரியங்களை யடக்கிக்கொண்டு ஞானம் உண்டாகிறவரையிலும் வேதாந்தார்த்தம் விசாரம் செய்துவரவும்; ஞானத்தைக்காட்டிலும் பாபங்களைத் தகிப்பதற்கு வேறு ஸாதனம் கிடையாது.

35-36. ஹே! ஸூவிருதரே! சில்லரை பாபங்கள் (அந்த ஞானத்தால்) மூன்று மாதங்களில் நாசமடையும்; உபபாதகங்கள் ஆறு மாதங்களிலும், மகாபாதகங்கள் நித்தியம் வேதாந்த அப்பியாஸம் செய்தால் ஒரு வருஷத்திலும் நாசமடையும்; இது ஸத்யமாய் சொல்லப்படுகிறது.

37. எவன் சிரத்தையுடன் தினமும் வேதாந்த ஞானம் அப்பியஸிக்கிறானோ அவன் சிரவணத்தினாலேயே மோக்ஷமடைகிறான் என்ற சுருதியின் கட்டளைப்படி ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபடுகிறான்.

**38-39.** இப்படி அப்பியாஸஞ்செய்து வருங்கால் மத்தியில் விக்னம் உண்டானல் (மரணமடைந்தால்) அநேக புண்ணிய லோகங்களை யனுபவித்து, திரும்பவும் பூமியில் விப்ரனுகப் பிறந்து, நல்ல லக்ஷணங்களோடும், சாந்தனுயும், ஸத்தியத்தைக் கைக்கொண்டு, முன் வாஸனையால், மறுபடியும் ஒரு வித்வானை உபாஸிக்கிருன்.

**40.** அவனுடைய சேர்க்கையால் தன் ஆத்மாவை பிரத்தியக்ஷமாகவறிந்து தன் ஸம்ஸாரமான ஸமுத்திரத்தினின்றும், தூக்கத்திலிருந்து எழுந்ததுபோல, விடுதலையடைகிருன்.

**41.** ஆகையால் முக்கிய பிரயத்தினத்துடன் மோக்ஷத்தையடைவதற்கு ஹே! பிரஹஸ்பதியே! ஸகலத்தையும் விலக்கி எப்பொழுதும் வேதாந்த சிரவணம் செய்க.

---

## அத்தியாயம் 8.

---

(தானதர்ம பலனைக் கூறுதல்)

**1.** ஈசுவரன்:—ஹே! முனியே! தானதர்மத்தின் பலனைச் சொல்லுகிறேன். எல்லா தானங்களைக்காட்டிலும் வித்தியாதானம் சிரேஷ்டமானது என்று சொல்லப்பட்டிருக்கிறது.

**2-5.** வித்தையால் பிராணிகளுக்கு மோக்ஷம் கிடைப்பதால் அதுவே உத்தமதானமாயிருக்கிறது.

பூதானம், கோதானம், அர்த்ததானம், கன்னிகாதானம், அன்னதானம் இவை தானங்களில் முக்கியமாகும்.

தன தானியத்தோடுகூடிய பூமியை எவன் ஒரு பிராமணனுக்கு கொடுக்கிருனே அவன் இஹத்தில் சுகமாக வாழ்ந்து பரலோகத்தில் அளவற்ற சுகத்தையடைகிருன். ஒரு சாண் அளவுள்ள பூமியையாகிலும் ஒரு பிராமணனுக்குக் கொடுத்தால் எல்லா பாபங்களினின்றும் விலகி ஸம்ஸார பந்தத்தைத் தாண்டுகிருன்.

**6-7.** யோக்கியனுய் தன்னிடம் விரும்பிவந்த ஒரு பிராமணனுக்கு எவன் சிரத்தையோடு வைதிக வித்தையை கொடுக்கிருனே அவனுக்கு மறு பிறப்பு இல்லை.

ஸந்யாஸியின்பொருட்டு சிரத்தையுடன், சக்தியானுஸாரம், தினந்தோறும் அன்னமளித்தால் பிரம்ம லோகத்தையடைந்து மறுபடியும் பூமியில் ஜனிக்கமாட்டான்; ஸந்யாஸிக்கு ஒரு மடம் தானங் கொடுத்தால் அவனும் மறுபடியும் ஜனிக்கமாட்டான்.

**8-9.** ஹே! முனிசிரேஷ்டா! அஸூயையற்ற ஒரு பிராமணனுக்கு மஹாதேவனை உத்தேசித்து சாந்த மனதுடன் அமாவாஸைதினம் ஒருவன் அன்னமளித்தால் அவன் நாசமற்ற பலனை யடைந்து மஹாதேவனுக்குச் சமமாகிறான்.

**10-12.** எவன் கிருஷ்ண சதுர்தசியில், சிரத்தாபக்தியுடன் பிராமணன் மூலமாக மகாதேவனை ஆராதிக்கிறானோ அவன் மோக்ஷமடைகிறான். திரயோதசி தினத்தில் ஸ்நானஞ்செய்து ஸந்தோஷத்துடன் பிராமணனுக்கு போஜனமளித்தால் அவன் பிரம்மாவுடன் (கல்பமுடிவில்) மோக்ஷமடைகிறான். த்வாதசியில் எந்தப் பிராமணன் ஸ்நானஞ்செய்து விஷ்ணுவை யுத்தேசித்து, பக்தியுடன், யோக்கியரான பிராமணனுக்கு சாந்த மனஸுடன் அன்னம் கொடுக்கிறானோ அவன் எல்லா பாபங்களிலிருந்தும் விடுபட்டு விஷ்ணுலோகத்தை யடைகிறான்.

**13-24.** இருபக்ஷ ஏகாதசியில் உபவாஸமிருந்து த்வாதசியன்று வாஸுதேவனை யுத்தேசித்து பிராமணர்களுக்கு அன்னங் கொடுத்தால் ஏழு ஜன்மங்களில் செய்த பாபம் அந்த க்ஷணமே நாசமடையும்.

தசமியில் இந்திரனை யுத்தேசித்து எவன் யோக்கியரான ஒரு பிராமணனுக்கு அன்னம் அல்லது அரிசியை கொடுக்கிறானோ அவன் தேவேந்திரனை யடைகிறான்.

நவமியில் தர்மராஜாவை உத்தேசித்து யோக்கியமாயுள்ள பிராமணனுக்கு தன்னால் இயன்ற அளவு அன்னம் கொடுத்தால் அவன் தர்மராஜாவின் பிரஸாதத்தை யடைகிறான்.

அஷ்டமியில் சங்கரனைப் பூஜித்து பிராமண போஜனஞ் செய்துவைத்தால் எல்லா பாபங்களிலிருந்தும் விடுபட்டு சிவஸாயுஜ்யத்தை யடைகிறான்.

ஸப்தமியில் சந்திரனை யுத்தேசித்து பிராமண போஜனம் செய்துவைத்தால் சந்திரலோகம் அடைவான் என்பதில் ஆக்ஷேபணையில்லை.

ஷஷ்டியில் சூரியனை யுத்தேசித்து பிராமண போஜனம் செய்துவைத்தால் சூரிய லோகத்தை யடைந்து நித்திய சுகத்தை யனுபவிக்கிருன்.

பஞ்சமியில் பார்வதி தேவியை உத்தேசித்து பிராமண போஜனம் செய்துவைத்தால் ஸகல பாபங்களினின்றும் நீங்கி நல்ல ஞானத்தை யடைகிருன்.

சதுர்த்தியில் மஹாலக்ஷ்மியை உத்தேசித்து யோக்கியமான பிராமணனுக்கு போஜனம் செய்துவைத்தால் ஸகல தரித்திரமும் நீங்கி செல்வந்தன் ஆகிருன்.

திரிதியையில் ஸ்நானம்செய்து பிராமண போஜனம் செய்துவைத்தால் அவனுக்கு பிரம்மா, விஷ்ணு, ருத்திரர்கள் வசமாகிருர்கள்.

நல்ல த்விதியையில் பிராமண போஜனம் செய்துவைத்தால் அவன் நாக்கில் எல்லா வேதங்களும் நர்த்தனஞ்செய்கின்றன; அவன் எல்லா பாபங்களினின்றும் விடுபட்டு நல்ல ஞானத்தை யடைகிருன்.

பரிசுத்தமாயுள்ள பிரதமையில் பிரம்மார்ப்பணமாக சிரத்தா பக்தியுடன் பிராமண போஜனம் செய்துவைத்தால் அவன் எல்லோருக்கும் ஸமமாகி ஸநாதனமான பிரம்மத்தை யடைகிருன்.

**25-26.** ஸந்தோஷத்துடன் பிராமணனுக்கு வெந்நிறமுள்ள பசுவை தானங் கொடுத்தால் ஸர்வ பாபங்களினின்றும் விடுதலை யடைந்து நோக பிரமத்தை யடைகிருன்.

எவன் ஒரு பரிசுத்தமான கன்னிகையை ஆடையாபரணங்களுடன் பிராமணனுக்கு தானங்கொடுக்கிருனோ அவன் எல்லா பாபங்களினின்றும் விடுதலையடைந்து சிவலோகத்தை யடைகிருன்.

27. எந்தப் பிரகாரமாகவாவது எந்த எந்த தேவதையைப் பூஜிக்கிருனே அந்தந்த தேவதையை அடைகிருன் என்பதில் ஆக்ஷேபமில்லை.

28. எங்கெந்த லோகத்தையடைய விரும்புகிருனே அந் தந்த லோக தேவதையை பக்தியுடன் நினைத்து ஆத்மாவை யறிந்தவனை பூஜிக்கவேண்டுமென்று சுருதி கூறியபடி ஒரு ஆத்ம ஞானியை நித்தியம் பூஜிக்கவும்.

29. நாற்கால் பிராணிகள் சிறுபுழு, பெரும்புழு, பக்ஷிகள் இவைகளைவிட சிரேஷ்டமானதுகள்; அவைகளைக்காட்டிலும் மனி தர்கள் மேலானவர்கள்; அவர்களைக்காட்டிலும் பிராமணன் மே லானவன்.

30. பிராமணர்களைக்காட்டிலும் வித்வான்கள் மேலானவர் கள்; இவர்களைவிட ஆராய்ச்சியுள்ள புத்திமான்கள் சிரேஷ்டர் கள்; இவர்களைவிட அனுஷ்டானம் செய்கிறவர்கள் மேலானவர் கள்; இவர்களைக்காட்டிலும் ஸந்யாஸிகள் மேலானவர்கள்.

31-32. இவர்களில் குடீசகனும், இவனைக்காட்டிலும் பகூ தகனும், இவனைவிட ஹம்ஸனும், அவனைவிட பரமஹம்ஸனும் மேலானவர்கள். பரம ஹம்ஸனைக்காட்டிலும் மிக யோக்கியமான ஆத்மஞானி கிடையாது; ஆகையால் ஆத்மஞானியை ஸகல ஜந் துக்களும் எப்பொழுதும் பூஜித்துவரவேண்டும்.

33-35. பிரம்ம வர்ச்சஸை இச்சிக்கிறவன் பிரம்மாவையும், ஆரோக்கியத்தை விரும்புகிறவன் சூரியனையும், பலத்தை இச்சிக் கிறவன் வாயுதேவனையும், கீர்த்தியை இச்சிக்கிறவன் அக்னியை யும், புத்தியை விரும்புகிறவன் ஸரஸ்வதியையும், ஞானத்தை இச்சிக்கிறவன் மஹாதேவனையும், ஸித்தியை இச்சிக்கிறவன் கணபதியையும், போகத்தை இச்சிக்கிறவன் சந்திரனையும், மோ க்ஷத்தை இச்சிக்கிறவன் சங்கரனையும், வைராக்கியத்தை இச்சிக் கிறவன் வித்வானையும், புஷ்டியை இச்சிக்கிறவன் இந்திரனையும் பூஜிக்கவேண்டும்.

**36.** விருதங்களை சிரத்தாபக்தியுடன் அனுஷ்டித்து சுத்த னாகிறவனுக்கு, பாபங்கள் பரிகாரம் ஆகின்றன என்று சுருதி கூறியபடி, எல்லா பாபங்களும் நாசமாகிவிடுகின்றன்.

**37.** ஜ்யோதிஷ்டோமாதி கர்மங்களை எவன் விதிப்படி செய்கிறானோ அவன் தேவத்வத்தை யடைகிறான் என்பதில் ஸந் தேகமில்லை.

**38-40.** எவன் சிரத்தையுடன் தினந்தோறும் ருத்திரஜபம் செய்கிறானோ அவன் தீயிடல், கள்ளுண்டல், கெட்ட நடத்தை இவைகளால் உண்டாகும் பாபங்களினின்றும், பிரம்மஹத்தியி னின்றும் விடுதலையடைகிறான் என்று கைவல்ய சாகை கூறுகின் றது; அநேக சாகைகளிலும் உத்தமமான ருத்திர ஜபத்தைக் கூறியிருக்கிறபடியால் அந்த ஜபத்தினாலேயே ஸகல பாபங்களும் நிவர்த்தியாகும். 'சமக' மந்திரத்தையும் வித்வான் ஸகலபாப பரிகாரத்தின்பொருட்டு ஜபிக்கவும்.

**41-43.** புருஷ ஸூக்தத்தையும், 'சிவ சங்கல்பம்' என்ற மந்திரத்தையும், ஸம்ஸாரத்தை தாண்டச்செய்யும் சக்தியையுடைய பிரணவத்துடன்கூடிய பஞ்சாக்ஷரத்தையும் ஜபித்தால் இருபத் தோரு குலங்களை உத்தாரஞ்செய்து சிவலோகத்தில் மகிமை யடைகிறான்; அவ்விடத்தில் அநேக போகங்களை யனுபவித்து, அக்கர்மம் க்ஷயமானவுடன் பூலோகத்தில் பிறந்து, ஞானம் உதிக் கிறவரையில் புண்ணியமோ, பாபமோ செய்துகொண்டு, ஜனித் தும் மறித்தும் வருகிறான்.

**44.** அசுகமாயுள்ள விஷயத்தில் சுகத்தை ஆரோபித்துக் கொண்டு, அக்ஞானத்தால் எல்லா கர்மங்களையுஞ்செய்து, அதன் பலனை ஸ்வதந்திரமன்றி அனுபவிக்கிறான்.

**45.** அஹோ! (கஷ்டம்)! இந்த மாயைக்குள் அகப்பட்ட இந்த உலகம், ஆத்மானந்தமான ஸமுத்திரத்தையறியாமல், அல்ப சுகத்தில் ஸ்வதந்திரமில்லாமல் ஸந்தோஷப்படுகிறார்கள். அவர்க ளைக்குறித்து நான் என்ன சொல்வேன்!

**46.** ஆகையால் மாயாமயமாயும், அஸாரமாயுமுள்ள எல்லா போகத்தையும் மனிதன் தள்ளி சுத்தமாயும் நித்தியமாயுமுள்ள ஆத்மானந்தத்தைக் கைக்கொள்ளவும்.

**47.** நான் எல்லாவற்றையும் சுருக்கமாகவும் சிநேகத்துடனும் உனக்குச் சொன்னேன்; ஆகையால் நீ எல்லாவற்றையும் தள்ளி ஆத்மானந்தத்தையடைய சிரமப்படவேண்டும்.

---

## அத்தியாயம் 9.

---

### (பாப கர்மபல நிரூபணம்).

**1-3.** ஈசுவரன்:—ஹே! முனியே! பாபகர்மத்தின் பலனைச் சொல்லுகிறேன்; பிரம்மஹத்தி செய்தவன் கழுதை, ஒட்டகம், பன்றி, ஆடு, வெள்ளாடு, யானை, குதிரை, மிருகம், பக்ஷி, சண்டாளன், புல்கஸன் இந்த ஜன்மங்களைக் கிரமமாகயடைகிறான்; ஸுராபானஞ்செய்த பிராமணன் திருடர்களுடையவும், அமேத்தியம்திங்கும் ஜந்துக்களுடையவும், சிறுபுழு, பெரியபுழு, கழுக்கள் இவைகளின் ஜன்மத்தை அடைகிறான்; பலதடவைகள் தங்கம் திருடினவன் ராக்ஷஸ பிசாசுகளின் ஜன்மத்தையடைகிறான்.

**4.** குருபத்னி கமனம் செய்தவன் மாம்ஸபக்ஷணி, சாகபக்ஷணி, கொடுங் கர்மங்களைச் செய்கிறவன் ஜன்மத்தையடைகிறான்.

**5.** பிராமணனுடைய தனம், பூமி, இவைகளை அபகரிக்கும் கெட்ட மனிதன் பிரம்ம ராக்ஷஸனாக நூறாயிரம் தடவைகள் ஜனிக்கிறான்.

**6-10.** தானியத்தைத் திருடினவன் எலியாயும், ஜலத்தை திருடினவன் தெப்பக்கட்டையாகவும், வெங்கலம் திருடினவன் ஹம்ஸமாயும், ரஸத்தைத் திருடினவன் நாயாகவும், நெய்யைத் திருடினவன் கீரிப்பிள்ளையாயும், பாலைத் திருடினவன் காக்கையாகவும், மாம்ஸத்தைத் திருடினவன் கழுகாயும், உப்பைத் திருடினவன் சக்கிரவாக பக்ஷியாயும், எண்ணெய் திருடினவன் கொக்

காகவும், பட்டைத் திருடினவன் தூக்கணங்குருவியாயும், மற்றொரு ஜாதிப்பட்டைத் திருடினவன் ஓனாகவும், இலை கறி காய்களைத் திருடினவன் மயிலாகவும், அன்னத்தை அபகரித்தவன் நாயாகவும், புஷ்பம் திருடினவன் குரங்காகவும், வாஹனத்தைத் திருடினவன் ஒட்டையாகவும், பசுவைத்திருடினவன் யானையாயும், சுவமாம்ஸத்தைத் திருடினவன் (க்ரூர) ராஜாவாயும், அமேத்தியத்தைச் சாப்பிடுகிறவன் வைசியனாயும், ச்யேந பக்ஷியைத் தின்கிறவன் சூத்திரனாகவும், இரக்தத்தைக் குடிக்கிறவன் அட்டையாகவும் ஜனிக்கிறான்.

11. ஹே! பிராமண! பாபகர்மங்களின் பலன் இவ்வளவு மட்டும் அல்ல; அதிக கோரமாயும், க்ரூரமாயுமுள்ள நரகத்திலும் தண்டனையுண்டு.

12. கைகள் இரண்டும் சங்கலியால் இறுகக் கட்டப்பட்டு, எரிகிற நெருப்பில் சூரியன் சந்திரன் உள்ள பரியந்தம் வீசி எரியப்படுகிறான்.

13. பிராணி ஹிம்ஸை செய்தவன் எமகிங்கரர்களால் பழுக்க காச்சப்பட்ட கொழுவுகளினால் கோடிகல்பங்கள் தண்டத்தால் அடிபடுகிறான்.

14. ஹே! முனியே! எண்ணெய் திருடினவன் சுடவைத்த எண்ணெய் அண்டாவில், கைகால்கள் கட்டப்பட்டு, எமதூதர்களால் வீசப்படுகிறான்

15. பொய் சொல்லுகிறவனை எமகிங்கரர்கள் சுடவைத்த தாம்பர அண்டாவில் வீசியெறிந்து நான்கு பக்கங்களிலும் அவனைச் சூழ்ந்துகொண்டு அவனுடைய நாக்கைப் பிடுங்குகிறார்கள்.

16. ஸுராபானம் செய்தவனை எமதூதர்கள் கொதிக்கவைத்த தாம்பிர பாத்திரத்திலுள்ள ஜலத்தைக் குடியென்று க்ரூரமான இருப்பாயுதங்களுடன் ஹிம்ஸிக்கிறார்கள்.

17. குருபத்நிகமணம் செய்தவனை வெட்டிவெட்டி, சுட்டு, பிண்டமாக்கி, அமேத்தியத்தோடுகூடிய தொட்டியில் எறிகிறார்கள்.

**18-19.** மாதா, பிதா, அண்ணன், குரு, ஆத்மஞானி, மஹாதேவர், வேதம், விஷ்ணு, பிரம்மா, சந்திரன், சூரியன், அக்னி, வாயு இவர்களை எவன் நிந்திக்கிறானோ அவனை நரகத்தில் தெய்வீகமாயுள்ள கல்பகோடி பரியந்தம் தள்ளுகிறார்கள்.

**20.** ஸன்யாசி கையில் அன்னமும் ஜலமும் கொடாத கெட்ட மனிதர்கள், ஆலையில் கரும்பைப்போல, ஹிம்ஸிக்கப் படுகிறார்கள்.

**21.** பணம் திருடினவனுடைய கால், தலை, பக்கங்கள், கொப்புள் ஆண்குறி, பிரஷ்டபாகம், கண் இவை சூட்டுக்கோலால் ஹிம்ஸிக்கப்படுகின்றன.

**22.** பரதாரகமனம் செய்தவனை, பழுக்க காய்ச்சப்பட்ட இரும்பு பெண் பொம்மையை நன்றாக ஆலிங்கனம் செய்துகொள்ளும்படிச் செய்கிறார்கள்.

**23-27.** அவ்விதமே சோரபுருஷனுடன் கூடிய ஸ்திரீயை பழுக்க காய்ச்சப்பட்ட இரும்பு ஆண்பொம்மையை நன்றாக ஆலிங்கனம் செய்துகொள்ளும்படி செய்கிறார்கள். ச்ரௌத ஸ்மார்த்த கர்மங்களை நீக்கி கெட்ட கர்மங்களில் பிரவர்த்திப்பவர்களை குரூரமாயுள்ள நரகத்தில் கோடிகல்பம் தள்ளுகிறார்கள். சிவன் கோவில், நந்தவனம், கிணறு, தடாகம், மடம் இவைகளுக்குக் தீங்கு செய்கிற பாபிகளும், அதில் ரமிக்கிற ராஜர்களும், மற்றும் கொழுப்பால் அவ்விடங்களில் குஸ்தி, மல்யுத்த அப்பியாஸம், எண்ணெய் ஸ்நாநபானுதிகள், வனபோஜனம், விளையாட்டு, புணர்தல், சொக்கட்டான் ஆடுதல் முதலியதை நடத்தும் மனிதர்களும் அநேக குரூரமாயுள்ள கரும்பாலை முதலியவைகளால் ஹிம்ஸிக்கப்பட்டு, நரகாக்கினியில் சந்திர சூரியர்கள் உள்ளபரியந்தம் தள்ளப்படுகிறார்கள்.

**28.** வேத மார்க்கத்தை யனுஷ்டிக்கும் குருவை நிந்தனை செய்வதை எவன் கேட்கிறானோ அவனுடைய காதில் தாம்பிரம் உருக்கப்பட்டு நிரப்பப்படுகிறது.

**29-35.** அவரவர்கள் பாபானுசாரம் சிலர் கோரம் என்ற நரகத்திலும், சிலர் ஸுகோரத்திலும், சிலர் அதிகோரத்திலும், சிலர் மஹா கோரத்திலும், சிலர் கோரரூபத்திலும், சிலர் காாளத்திலும், பயாநகத்திலும், காளராத்திரியிலும், பயோத் கடத்திலும், சண்ட கோலாஹலத்திலும், பிரசண்டத்திலும், பத்மத்திலும், பத்மவத்தியிலும், பீமத்திலும், காறத்திலும், விகாறத்திலும், திருகோணத்திலும், பத்மகோணத்திலும், நீண்ட வர்த்துளத்திலும், ஸப்தபௌமத்திலும், அஷ்ட பௌமத்திலும், ரௌரவத்திலும், ஸ்வதந்திரமன்றியில் நன்ருகத் தள்ளப்படுகிறுர்கள். ஐயோ! ஹே! மஹாபுத்திமானே! பாபகர்மத்தின் பலன் கஷ்டம்.

**36.** இவ்விதமாக பாபத்தின் பலத்தையறிந்து ஹே! முனியே! ஞானத்தில் இச்சைகொள்! ஞானுக்னியானது எல்லாக் கர்மங்களேயும் சாம்பலாக்கிவிடும்.

**37.** ஐயோ! ஜனங்கள் மாயையால் மோகிக்கப்பட்டு, ஸ்வப்னத்திற்கு ஸமமாயுள்ளதில் ஆசையடைந்து, துக்கத்துடன் நரகத்தில் விழுகிறுர்கள்.

**38.** இவ்விதமாக பாபத்தின் பலனே யனுபவித்து, திரும்பவும் பூமியில், கர்மஸாம்யம் இருந்தால், மனித ஜன்மத்தை மஹாதேவன் பிரஸாதத்தால் அடைகிறுன்.

---

## அத்தியாயம் 10.

---

### (பிண்டோத்பத்தி வரலாறு).

**1.** ஈசுவரன்:—ஹே! முனியே! இப்பொழுது தேகத்தின் உத்பத்தியைப்பற்றி சொல்லுகிறேன்; வைராக்ய மடையும்பொருட்டும், ஆத்மசுத்தியின் பொருட்டும் நன்ருகக்கேள்.

**2.** மனிதன் புண்யத்தால் தேவத்வத்தையும், பாபத்தால் ஸ்தாவரத்வத்தையும், புண்ணியபாபம் ஸமமாளுல் மானுஷ்யத்தையும் அடைகிறுன்.

**3-4.** ஹே! முனிசிரேஷ்டரே! இவ்விஷயத்தில் ஆஹூதியால் சூரியன் தினமும் விருத்தியடைகிருன்; சூரியனின்று மழையும், அதனின்றும் கிரமமாக ஓஷதிகளும், அவைகளினின்றும் அன்னமும் உண்டாகிறது; இந்த பஞ்சபூதாத்மகமாயுள்ள அன்னத்தை மனிதன் புஜிக்கிருன்; புஜித்தவுடன் அந்த அன்னம் கிட்டம் என்றும், ஸாரம் என்றும் இரண்டாகப் பிரிகிறது.

**5.** மறுபடியும் அந்த ஸாரமானது ஸ்தூலம், ஸூக்ஷ்மம் என்ற பேதத்தால் இரண்டாகப் பிரிகிறது; கிட்டம் என்பது மூத்திரம், அமேத்தியம், எலும்பு, மேதஸ், ஸ்னுயுவாக ஆகும்.

**6-8.** மூத்திரம் (ஜலம்) புரீஷம் (மலம்) இவைகளை வாயுவானது கிரமமாக வெளிப்படுத்துகிறது; இரண்டாகப் பிரிபட்ட ஸாரத்தின் ஸ்தூலபாகமாயுள்ள தாதுக்கள் எல்லாம் பஞ்சபூதாம்சங்களால் கிரமமாக விருத்தியடைகின்றன; அதில், ஆகாசத்தால் தாதுவிருத்தியும், வாயுவால் பலமும், அக்கினியால் மஜ்ஜையும், ஜலத்தால் இரக்தமும், பிருதிவியால் மாம்ஸவிருத்தியும் இப்பிரகாரமாக தாதுக்கள் விருத்தியடைகின்றன.

**9-12.** பிருதிநின்ற ஸூக்ஷ்மமாயுள்ள ரஸாம்சமும் ஸத்வகுணத்தாலும் ரஜோகுணத்தாலும் இரண்டாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. அதில் இந்த ஸத்வகுணமானது பிருதிவி அம்சத்தால் கிராணேந்திரயமும், அபானமும் எப்பொழுதும் விருத்தியடைகின்றன; அவ்விதமே உபஸ்தமும், ஜிஹ்வாவும் ஜலாம்சத்தாலும் த்வக்கும் கைகளும் வாயு அம்சத்தாலும், பாதமும் சுரோத்திரமும் ஆகாசாம்சத்தாலும், எல்லா அம்சங்களும் சேர்ந்து அந்தக்கரணம் பிராணன் இவைகளை விருத்திசெய்கின்றன.

**13-17.** விசேஷமாக பிருதிவி அம்சமானது மனஸையும், ஜலாம்சம் பிராணனையும், அக்நி வாக்கையும், வாயு கைகளையும், ஆகாசம் பாதத்தையும் விருத்திசெய்கின்றன; அவ்விதமே ரஜோகுணத்துடன்கூடிய ரஸாம்சமானது காலகர்மத்தால் இரக்தமாயும், இந்த ரக்தம் மாம்ஸமாயும், இது மேதஸாயும், இது ஸ்னுயுவாயும், இது அஸ்தியாயும், இதனின்றும் மஜ்ஜையும், பலமும், இரக்தத்

துடன் சேர்ந்த அப்பலத்தினின்றும் ஜனங்களுடைய காலபரிபாகத்தால் ரிதுகாலத்தில் நிர்தோஷமாயுள்ள ஆண்வீர்யம் ஸ்திரீகளின் யோனியில் சேருங்கால், சில ஸந்தர்ப்பத்தால், வாயுவினால் ஸ்திரீ வீர்யமான சுரோணிதத்துடன் ஐக்கியமாகிறது.

**18-20.** அந்த சுக்லம் சுரோணிதம் சேர்ந்த பதார்த்தமானது முதலில் கலலமாயும், புத்புதமாயும், பிறகு கெட்டிப்பட்ட பிண்டமாயும், அவ்விதமே சிரஸும், பிறகு கால்களும், அப்படியே விரல்களும், இடுப்பும், வயிறும், பிரஷ்டபாகத்திலுள்ள எலும்பு, ஸந்திகள், கண், மூக்கு, காது இவ்விதமாக, கிரமமாய், அங்கங்கள் பூர்த்தியாகி, ஒன்றுமுதல் ஏழுராத்திரிகளிலும், அப்படியே பதினைந்தாவது நாளிலும், ஒன்று, இரண்டு, மூன்று மாதங்கள் ஆக கிரமமாக விருத்தியடைகிறது.

**21-32.** இவ்விதம் விருத்தியடைந்த கர்ப்பம் முன் கர்மவசத்தால், ரௌரவாதி நரகத்தில் அடையப்படும் துக்கத்தைப்போல மகத்தான துக்கத்தையடைந்து, பூர்வஞானம் பெற்று சொல்வதாவது—'நான் முன்னர் அநேக ஆயிரம் ஜன்மங்களையடைந்தேன்; வெகுவித ஆஹாரங்களைப் புஜித்தேன்; எவ்வளவோவிதமான ஸ்தன்யபானம் ஆகிருக்கிறது; ஐயோ! இந்த துக்கஸமுத்திரத்தில் மூழ்கியிருக்கிறேன்; இதனின்றும் மீளும்வழியைக் காணேனே! ஜனித்தபின் மஹேசுவரனைப் பஜிப்பேன்; குருஸேவைசெய்து எப்பொழுதும் ஸாங்கத்துடன் வேதாத்யயனமும், நித்தியநைமித்திக கர்மங்களும் செய்வேன்; பிறகு விவாகம்செய்துகொண்டு சித்த சுத்தியடையும்பொருட்டு யாகங்கள் செய்வேன்; அந்த யாகங்களால் பாபமெல்லாம் போக்கடித்து ஸம்ஸாரத்தை நீக்க எத்தனித்து, அதிக வைராக்கியத்தால், மோக்ஷ இச்சையுடன், ஸமஸ்த கர்மங்களையும்தள்ளி, சாந்தனும், இந்திரிய நிக்கிரகத்துடனும், விரஜா ஹோமம்செய்த அக்னிஹோத்திர பஸ்மாவை எடுத்து, அதர்வண சாகையில்கூறிய அக்னி என்று துவக்கப்படும் மந்திரங்களால் குழைத்து, கால்முதல் சிரஸ்பரியந்தம் அங்கங்களுக்கெல்லாம் எப்பொழுதும் பக்தியுடன் பூசி, ஆசார்யனை நமஸ்க

ரித்து, ஆத்மஞானத்தால் கோரமான என் ஸம்ஸாரஸாகரத்தை தாண்டுவேன்' என்று கர்ப்பத்திலிருக்கிறவன் ஸ்மரித்துக்கொண்டிருக்குங்கால் யோனியந்திரத்தின் பாதையால் வாயுவினுல் தள்ளப்பட்டு, விஷ்ணுமாயையால், (முன்சொல்லியதை) மறந்துபோகிருன்; அக்ஞானம் வந்தவுடன், இச்சை முதலானவைகளும், அவைகளின் மூலமாக தர்மாதர்மங்களும், அவைகளின் மூலமாக மனிதர்களின் சரீரம் உண்டாகிறது. இந்த அக்ஞானம் ஞானத்தால் அன்றி கர்மத்தால் நிவர்த்தியாகாது.

33. ஆத்மா இயற்கையாக அழுக்குள்ளதாயும், கர்த்தாவாயும், போக்தாவாயும் இருக்கிறபக்ஷத்தில் கோடி ஜன்மமானுலும் ஸம்ஸாரத்தினின்றும் அதற்கு விடுதலைகிடையாது.

34. இந்த ஆத்மா கேவலனுயும், களங்கமற்றவனுயும், சாந்தனுயும், ஸூக்ஷ்மமாயும், ஸனுதனனுயும், எல்லாவற்றிலும் இருக்கிறவனுயும், ஸாக்ஷியாயும், சின்மாத்திரனுயும், ஆநந்தரூபியாயுமிருக்கிருன்.

35. இவனே பகவானுயுள்ள ஸ்வயம் ஜ்யோதிரூபனுயும், நித்தியனுயுமுள்ள ஈசன்; இவனிடமிருந்தே ஜகத் உண்டாகியும், இவனிடமே லயத்தையும் அடைகிறது.

36. இவனே பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், இந்திரன், பிரஜாபதி, வாயு, அக்நி மற்றுமெல்லா தேவர்களாகவு மிருக்கிருன்.

37. இவ்விதமாயுள்ள ஆத்மாவை எவன் வேறுவிதமாக நினைக்கிருனே அந்த ஆத்மாவை அபஹரிக்கிற திருடன் வேறு எந்த பாவத்தைச் செய்யமாட்டான்.

38. இந்த உலகத்தில் பிராமணனுயும் பிறந்து, ஊமை, செவிடு இல்லாமலிருந்து ஸம்ஸாரத்திலிருந்து விலகாமலிருந்தால் அவன் நிச்சயமாக பிரம்மத்தைக் கொன்றவனுவான்.

39. ஆத்மாவை எந்தமனிதன் தான் என்று அறிகிருனே, அவன் எதை இச்சித்து, எந்த விருப்பத்திற்காக சரீரத்தை வருத்தப்படுத்துவான்.

40. ஹே! நல்ல விருதமுடையவனே! அந்த ஆத்மாவைப் பார்த்தமாத்திரத்தில் அவனுடைய ஹிருதய முடிச்சுகள் (காமங்கள்) அவிழ்ந்துபோகின்றன; எல்லா ஸந்தேகங்களும் சிதறிப்போகும்; கர்மங்களும் நசிக்கின்றன.

41. எவ்விடத்தினின்று வாக்கும் மனமும் எட்டாமல் திரும்பிவருகின்றனவோ, அந்த பரமானந்தமாயுள்ள ஆத்மாவையறிகிறவன் எதில் நின்றும் பயப்படுவான்; ஒன்றிலுமில்லை.

42. ஆகையால் மிகப் பிரயத்தினத்தினலும், சிரத்தை குருபக்தியுடன், பிராகிருத ஞானத்தைவிட்டு, 'சிவோஹம்' என்று பாவனை செய்யவும்.

43. பிராமணர்களுக்கு விசேஷமாக இதுதான் ஜன்மம் எடுத்ததற்குப் பலன்; இதையடைந்த பிராமணனே கிருதகிருத்யனுகிறனேதவிற வேறுவிதமாகவில்லை.

44 ஹே! பிரஹஸ்பதியே! எல்லா வேதாந்தத்தின் ஸாரத்தையும் உனக்குச் சொன்னேன். சிரத்தையால் இதை நன்றாக அறியவும்; ஏனெனில் சிரத்தையே எல்லாவற்றிற்கும் காரணம்.

45. ஸூதர்—ஹே! நைமிசியர்களே! இதை பிரகஸ்பதி சாந்தமனதுடன் கேட்டு, முக்கண்ணனை தேவதேவனை, பக்தியோடு, ஸ்தோத்திரிக்க முயன்றான்.

46-55. பிரஹஸ்பதி—'சிவனையும், ஸோமனையும், புத்திரர்களோடு கூடியவனையும், திரிசூலியாயும், பிரதான புருஷர்களுக்கு ஈசனையும், ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரத்திற்கு காரணனையும், ஸர்வக்ஞனையும், சிரேஷ்டனையும், சங்கரனையும், துக்க நிவர்த்தகனையும், வேதாந்த வேத்யனையும், சின்மாத்திரனையும், மஹாத்மாவாயும், தேவதேவனையும், தேவனையும், விச்வேச்வரனையும், நித்தியனையும், ஸத்யனையும், பரப்பிரம்மனையும், புருஷனையும், கிருஷ்ண பிங்களனையும், ஊர்த்த ரேதஸுள்ளவனையும், விருபாக்ஷனையும், விச்வரூபனையுமுள்ள உமக்கு நமஸ்காரம்; நீர் ஸமஸ்தன், ஸகலத்திற்கும் மேலானவன்; ருத்திரன், விச்வமூர்த்தி, விருஷபத்துவஜன், நிஜஞானி, ஹிருதயாகாச மத்தியிலுள்ளவன், அத்தகைய

உமக்கு நமஸ்காரம்; நீரே சந்திரன், சூர்யன், இந்திரன், அக்நி, எமன், நிர்ருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன்; முற்கூறிய ஸ்தூலமாயுள்ள மகேசன் மூர்த்தியால் இந்தஜகத் வியாபிக்கப்பட்டிருக்கிறது; எவனுடைய பிரஸாதலேசத்தால் தேவர்கள் தேவபட்டத்தை யடைந்தார்களோ அப்பேர்க்கொத்த ஒருவராலும் ஜயிக்கமுடியாத ஸர்வக்ஞனுயுள்ள மகேசனை நமஸ்கரிக்கிறேன். திக்குகளை வஸ்திரமாகவுள்ள உமக்கு நமஸ்காரம்; அம்பிகாபதியான உமக்கு நமஸ்காரம்; உமக்கு அடிக்கடி நமஸ்காரம்; ஓம்காரமாயும், சூக்ஷ்மமாயும், மாயாதீதனுயுள்ள உமக்கு நமஸ்காரம்; காரணத்திற்கெல்லாம் காரணமாயுள்ள உமக்கு நமஸ்காரம், மங்களத்திற்கெல்லாம் மங்களாத்மாவாயுள்ள உமக்கு நமஸ்காரம்; வேதாந்தத்தை யறிந்த புத்திமான்களால் உபாஸிக்கப்பட்ட உமக்கு நமஸ்காரம், நமஸ்காரம்.

---

## அத்தியாயம் 11.

---

### (நாடீசக்கிர நிரூபணம்).

1. ஈசுவரன்:—ஹே! வாசஸ்பதி! இப்பொழுது முக்கியமான நாடீ சக்கிரத்தைப் பற்றிச் சொல்லுகிறேன்; சிரத்தையுடனும், குருபக்தியுடனும் அறியும்.

2. சுருதியில் கூறியபடி மனிதர்களுக்கு சரீரம் தங்கள் தங்கள் விரல் அளவால் 96 அங்குலங்களுற்றது.

3. தேக மத்தியத்தில் உருக்கின தங்கக் காந்தியுடையதும், முக்கோணமாயுமுள்ள ஒரு அக்நிஸ்தானம் இருக்கிறதென்று நிச்சயமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. (மூலாதாரம்).

4. குதத்திற்கு இரண்டு அங்குலங்களுக்கு மேலும், ஆண்குறிக்கு இரண்டு அங்குலங்களுக்கு கீழும் உள்ள இடத்தை மனிதர்களின் தேகமத்தியம் என்றறிக.

5. மூலாதாரத்திலிருந்து ஒன்பது அங்குலங்களுக்குமேல், நான்கு அங்குலங்கள் நீளமும், அகலமுமுள்ள, கந்தஸ்தானம் ஒன்று இருக்கிறது.

6. அது கோழிமுட்டை ஆகாரமுள்ளது; த்வக் முதலிய வைகளால் சூழப்பட்டது; அதன் மத்தியே நாபி என்று வே தார்த்தம் தெரிந்தவர்களால் சொல்லப்படுகிறது.

7. அந்த கந்த நடுவிலிருக்கிற நாடிக்கு ஸுஷும்ணை என்ற பெயர்; அதைச் சுத்திலும் 72000 நாடிகள் இருக்கின்றன.

8-10. அவைகளில் முக்கியமானவை ஸுஷும்ணை, பிங்க ளா, இடா, சரஸ்வதி, பூஷா, வாருணீ, ஹஸ்திஜிஹ்வா, எசஸ் வினி, அலம்புஷா, குஹூ, விச்வோதரா, பயஸ்வனி, சங்கினி, காந்தாரி என்ற பதினுங்கும்; இவைகளிலும் சிரேஷ்டமாயுள்ளது மூன்று; இவைகளிலும் முக்கியமானது பிரம்ம நாடி (ஸுஷும் ணை) என்று வேதாந்த மறிந்தவர்களால் சொல்லப்படுகிறது.

11-12. அச்சுஷும்ணு நாடி பின்பாகத்தில் வீணுதண்டம் போல் இருக்கிற நரம்புகளுடன் தலைபரியந்தம் வியாபிக்கப்பட்டு நன்ருக அமைக்கப்பட்டிருக்கிறது.

13-14. நாபி கந்தத்திலிருந்து இரண் டங்குலங்களுக்கு கீ ழுள்ள ஸ்தானம் குண்டலி ணீயுடையதாகும். அந்தக் குண்டலீ எட்டு பிரகிருதி ரூபமாயிருந்து, கிரமமாக வாயு சேஷ்டையையும், ஜலம், அன்னம் முதலியவைகளையும் எப்பொழுதும் அந்தக் கந்த ஓரங்களின் சுற்றிலும் வாாமல் தடுத்து, எப்பொழுதும் தன் முகத்தால் பிரம்மரந்திர வழியைச் சுற்றிக்கொண் டிருக்கிறது. (மூல பிரகிருதி, மகத், அகங்காரம், பஞ்சமகா பூதங்கள் என்ற எட்டு பிரகிருதிகள்).

15. ஸுஷும்ணைக்கு இடதுபக்கம் இடாநாடியும், வலது பக்கம் பிங்களையும், அதன் இரண்டு ஓரங்களிலும் ஸரஸ்வதியும், குஹூவும் இருக்கின்றன.

16-18. இடாவின் பூர்வபாகங்களில் காந்தாரி, ஹஸ்தி ஜிஹ்வைகளும், பிங்களையின் பின்பாகங்களில் பூஷா, யசஸ்வினிக ளும், குஹூ ஹஸ்தி ஜிஹ்வைகளின் நடுவில் விச்வோதரியும்,

யசஸ்வனி குஹூக்களின் நடுவில் வாருணியும், பூஷா சரஸ்வதிக ளின் மத்தியில் பயஸ்வனியும், காந்தாரை சரஸ்வதிகளின் மத்தி யில் சங்கினியும் இருக்கின்றன.

19. கந்த மத்தியிலிருந்து குதம்வரை அலம்புஷா இருக் கிறது; ஸுஷும்ணைக்கு பூர்வ பாகத்தில் குஹூ என்பது ஆண்குறி பரியந்தம் வியாபித்திருக்கிறது.

20-24. வாருணீ என்பது மேலும் கீழும் எங்கும் வியாபித் திருக்கிறது; பிங்களா நாடி வலது மூக்கு பரியந்தமும், இடா நாடி இடது மூக்கு பரியந்தமும் வியாபித்திருக்கிறது. எசஸ் வினீ வலதுகால் கட்டைவிரல் பரியந்தமும், பூஷா வலது கண் வரையிலும், பிங்களைக்குப் பின்பக்கமாகவும் வியாபித்திருக்கிறது; யசஸ்வினி வலது காதுவரையிலும், சரஸ்வதி மேல்நோக்கி நாக்கு பரியந்தமும், ஹஸ்தி ஜிஹ்வா இடதுகால் கட்டைவிரல் வரையி லும், சங்கினி இடது காது பரியந்தமும், காந்தாரி இடது கண் பரியந்தமும் வியாபித்திருக்கிறதென்று வேதாந்த மறிந்தவர்கள் சொல்லுகிறார்கள்.

25-26. விச்வோதரா என்று பெயருள்ள நாடி கழுத்து மத்தியில் ஸ்தாபிக்கப் பட்டிருக்கிறது; பிராண, அபான, வியான, ஸமான, உதான, நாக, கூர்ம, க்ரிகா, தேவதத்த, தனஞ்ஜய என்ற பத்து வாயுக்களும் எல்லா நாடிகளிலும் சஞ்சாரம் செய்கின்றன.

27. இவைகளில் முற்கூறிய பிராணன் முதலிய ஐந்தும் முக்கியமானவை; இவ்வைந்திலும் பிராணனும் அபானனும் முக் கியமானவை; இவ்விரண்டில் பிராணன் பூஜிக்கத்தகுந்தது.

28. முகத்திலும், நாஸிகைமத்தியிலும், நாபிமத்தியிலும், ஹிருதயத்திலும் ஹே! முனிசிரேஷ்ட! பிராணனென்று பெய ருள்ளது எப்பொழுதும் சஞ்சரிக்கிறது.

29. அபானவாயு குதத்திலும், ஆண்குறியிலும், தொடைச் சந்திகளிலும், வயிற்றிலும், பீஜங்களிலும், பின்பாகத்திலும், கொப்புளிலும், முட்டுகளிலும் எப்பொழுதும் சஞ்சரிக்கிறது.

30. வியானவாயு கண் காதுகளின் மத்தியிலும், கண்யிமை கை கட்டவிரல், மூக்கு, கழுத்து இவைகளில் சஞ்சரிக்கிறது.

31. உதானவாயு கைகால்களின் எல்லாச் சந்துகளிலும், ஸமானவாயு தேகத்தின் எல்லா பாகங்களிலும் வியாபித்திருக்கின்றதென்பதில் ஸந்தேகமில்லை.

32-36. ஹே! பிரஹஸ்பதியே! நாகாதி ஐந்து வாயுக்களும் த்வக், அஸ்திகளில் இருக்கின்றன; இவைகளில் நாகன் வாந்தியெடுப்பதிலும், கூர்மன் கண்மூடுவது முதலியதிலும், க்ரிகரன் எச்சில் துப்புவதிலும், தேவதத்தன் சோம்பலிலும், தனஞ்ஜயன் சோகம் முதலிய கர்மத்திலும் இருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது; பிராணனுடைய கர்மம் உள்மூச்சு, வெளிமூச்சு, இருமல் முதலியவைகளிலும், அபானன் ஜலமல விஸர்ஜனத்திலும், ஸமானன் எல்லா வேலைக்கும் ஸகாயமாயும், உதானன் மேல் சுவாஸத்திலும், வியானன் விவாதத்திலும் இருப்பதாக வேதாந்தமறிந்தவர்களால் சொல்லப்படுகிறது.

37-41. ஸுஷும்ணு நாடிக்கு சிவனும், இடைக்கு ஹரியும், பிங்களைக்கு பிரம்மாவும், ஸரஸ்வதிக்கு விராட்டும், பூஷாவுக்கு திக்கு தேவதையும், வாருணிக்கு வாயுவும், ஹஸ்தி ஜிஹ்வைக்கு வருணனும், யசஸ்வினிக்கு சூரியனும், அலம்புஷைக்கு வருணனும், கூஹுவுக்கு பூமிதேவதையும், காந்தாரி சங்கினிகளுக்கு சந்திரனும், பயஸ்வினிக்கு பிரஜாபதியும், விச்வோதரைக்கு அக்னியும் அதிஷ்டான தேவதைகள்.

42-47. எப்பொழுதும் இடாநாடியில் சந்திரனும், பிங்களையில் சூரியனும் சஞ்சரிக்கிறார்கள்; பிங்களையிலிருக்கிற வாயு இடா நாடியில் எப்பொழுது சேருகிறதோ அதற்கு வேதமறிந்தவர்களால் உத்தராயனம் என்று சொல்லப்படுகிறது; இடாநாடியிலிருக்கிற பிராணன் பிங்களையில்சேரும்பொழுது, சுருதியில் கூறியபடி, தக்ஷிணாயனம் என்று சொல்லப்படுகிறது. இடை பிங்களைகளின் ஸந்தியை பிராணன் அடையுங்கால் தேகத்திற்கு அமாவாஸ்யை என்றது சொல்லப்படும்; பிராணன் எப்பொழுது மூலாதாரத்தை யடைகிறதோ அதற்கு முதல் விஷு (சித்திரை)

என்று பெரியோர்களால் கூறப்படுகிறது; அந்தப் பிராணன் எப்பொழுது மூர்த்தாவை யடைகிறதோ அதற்கு கடை விஷு (ஐர்ப்பசி) என்று சொல்லப்படுகிறது; அப்படியே உள்மூச்சு வெளிமூச்சுகளின் கணக்குப்பிரகாரம் மாஸங்களின் சங்கிராந்தி சொல்லப்படும்.

48. இடாநாடியிலிருந்து பிராணன் எப்பொழுது குண்டலீ ஸ்தானத்தைச் சேருகிறதோ அப்பொழுது சந்திரக் கிரஹனம் என்று சொல்லப்படுகிறது.

49. அப்படியே பிங்களையிலிருந்து பிராணன் குண்டலி ஸ்தானத்தைச் சேரும்பொழுது சூரியகிரஹனம் என்று சொல்லப்படும்.

50-51. ஸ்ரீபர்வதம் சிரஸ் ஸ்தானத்திலும், கேதாரம் நெற்றியிலும், புருவம் மூக்கு இவைகளின் ஸந்தியில் வாராணஸீயும், ஜாபால சுருதியில் கூறியபடி இருக்கின்றனவாகும்; குருக்ஷேத்திரம் மார்பும், பிரயாகை இருதயமும், சிதம்பர இருதயமத்தியும், கமலாலயம் மூலாதாரமாகவும் ஆகின்றன.

52. இவ்விதமாக தன்னிடத்திலிருக்கிற தீர்த்தங்களைத் தள்ளிவிட்டு வெளியிலிருக்கிற தீர்த்தங்களுக்கு எவன் அலைகிறானோ அவன் கையிலிருக்கிற விலையுயர்ந்த ரத்னங்களைத் தள்ளிவிட்டு காக்கைப் பொன்னைத் தேடுபவனுக்கு ஒப்பாவான். (தீர்த்தம் என்றால் ஸம்ஸாரத்தைக் கடைத்தேற்றுவது).

53. பாவனை வித்தியாஸத்தால் எப்படி பெண்டாட்டியையும், பெண்ணையும் தழுவுகிறானோ அப்படியே எல்லாக் கர்மங்களிலும் பாவனாதீர்த்தம் முக்கியதீர்த்தம் என்பதற்கு பிரமாணமாகும்.

54. தீர்த்தங்களெல்லாம் ஸாதாரண ஜலம் என்றும், தேவர்கள் எல்லாம் கட்டை முதலியவைகளால் செய்யப்பட்டனவென்றும் ஆத்மஞானமுள்ள யோகிகள் அறிகிறார்கள்.

55. ஹே! மஹாமுனியே! வெளித்தீர்த்தங்களைக் காட்டிலும் உள்தீர்த்தம் சிரேஷ்டம்; அதைக்காட்டிலும் ஆத்மதீர்த்தம் முக்கியதீர்த்தம்; மற்ற தீர்த்தங்கள் பிரயோஜனமற்றவை.

56. உள்ளிருக்கிற கெட்டுப்போன மனம் வெளித்தீர்த்தங்களால், கள்பாத்திரம் அநேகம் தடவைகள் கழுவப்பட்டாலும் எப்படி சுத்தியாகாதோ அப்படி சுத்தமாகாது.

57. விஷு, அயனம், கிரகணம் முதலான காலங்களில் வாராணஸி முதலிய இடங்களில் ஸ்நானத்தால் மனிதன் சுத்தமடைகிறான்.

58 அக்ஞானிகளுக்கு, பாபசுத்தியும்பொருட்டு, ஞானயோகத்தை யனுஷ்டிக்கிறவர்களுடைய பாதப் பிரக்ஷாளனஞ்செய்த ஜலம் தீர்த்தமாக ஆகும்.

59. தீர்த்தத்திலும், தானம், தவம், யக்ஞம், கட்டை, கல் இவைகளில் மூடன் எப்பொழுதும் சிவனைப் பார்க்கிறான்; சிவன் தேகத்தில் இருக்கிறார்.

60. எல்லாவிடங்களி லிருப்பவரும், சாந்தரான சங்கரரை ஞானக்கண் அற்றவர்களானபடியால் பார்க்கின்றார்களில்லை; ஐயோ! முனியே, இது மாயையின் பலம்.

61. தன்னிடத்திலிருக்கிற சிவனைவிட்டு வெளியில் இருக்கிறதாக சிவனை பூஜிக்கிறவர்கள் கையிலிருக்கிற கபளத்தை நழுவவிட்டு புறங்கையை நக்கினதற்கு ஒப்பாகும்.

62. யோகிகள் சிவனை தங்களிடத்தில் பார்க்கிறார்கள்; பிரதிமைகளில் பார்க்கிறார்கள் இல்லை; அக்ஞானிகளுடைய பாவனைக்காக பிரதிமைகள் கல்பிக்கப்பட்டிருக்கின்றன.

63. முன்பின்னற்றவரும், ஸத்தியரும், இரண்டற்றவரும், பிரக்ஞானகட்டியும், ஆனந்தமாயுமுள்ள பிரம்மத்தை தன் ஆத்மாவாக எவன் பார்க்கிறானோ அவனே பார்க்கிறவன்.

64. எல்லா பூதங்களில் இருக்கிறதாயும், ஸத்திய ஞான ரூபியான ஆத்மாவைத் தன்னிடத்தில் பாராமல் வெளிப்பதார்த்தங்களில் பார்த்தாலும் அவன் பார்க்கிறவன் ஆகமாட்டான்.

65. தன்னைக்காட்டிலும் வேறாக எந்தப்பெரிய தேவதையை எந்த நரன் உபாஸிக்கிறானோ அவன் (தனக்கு) வேறாக உபாஸிக்கிறான் என்ற சுருதிப்படி பரதத்வத்தை யறிகிறான் இல்லை.

66. நாடிக் கூட்டமாயும், எப்பொழுதும் அஸாரமாயுமுள்ள இந்த மனித சரீரத்தை, ஹே! முனியே! விட்டு, ஆத்மாவைத் தான் என்று ஆத்மாவினால் நிச்சயஞ்செய்.

67. சரீரமத்தவரும், சரீரங்களிலிருக்கிறவரும், பெரியவரும், விபுவும், ஆனந்தராயும், நாசரகிதராயுமுள்ள இந்த ஈசனை தீரன் நேருக அறிந்தால் துக்கத்தை யடையமாட்டான்.

68. பேதத்தைச்செய்யும் அக்ஞானம் ஞானபலத்தால் நாசமடைந்தால், தனக்கும் பிரம்மத்திற்கும் இல்லாமலிருக்கிற பேதத்தை எவன் செய்வான்.

69. இவ்விதம் எல்லாம் சுருக்கமாக தயவுடன் ஹே! முனிசிரேஷ்டரே! சொல்லப்பட்டது; ஆகையால் மாயாமயமான தேகத்தைவிட்டு தன் ஆத்மாவைப் பார்.

70. ஸூதர்:—இதை பிரஹஸ்பதி பக்தியுடன் கேட்டு, பரவசமடைந்து, அம்பிகாபதியான அத்புத தேவனை ஸ்தோத்திரஞ் செய்யத்தொடங்கினர்.

71-78. பிரஹஸ்பதி:—ஹே! தேவ உமக்கு ஜயம்; பரமானந்தரே உமக்கு ஜயம்; சித்ஸத்திய ரூபரே, ஸம்ஸார ரோகத்தைக் கொல்லுகிறவரே, பாபத்தை நாசஞ்செய்யும் பிரபுவே, பூர்ணரே, மஹாதேவரே, தேவர்களின் சத்துருக்களைக் கொல்லுகிறவரே, கல்யாணரே, தேவேசரே, திரிபுரமர்த்தரே, அகங்காரமாகிய சத்துருவை கொல்லுகிறவரே, மாயையாகிய விஷத்தை அபகரிக்கிறவரே உமக்கு ஜயம்; வேதத்தால் அறியத்தகுந்தவரே, வாக்குக்கு எட்டாதவரே, ஆசையைக் கொல்லுகிறவரே, சிரேஷ்டரே, த்வேஷத்தை அடக்குகிறவரே, ஆதியில் இருக்கிறவரே, ஸாம்பரே, நல்ல ஆசாரத்தோடு கூடினவரே, எல்லோருக்கும் ஸமமாக உள்ளவரே, அத்புதரே, பிரம்மாதிகளால் பூஜிக்கத்தகுந்தவரே, விஷ்ணுவே, உத்கிருஷ்டமோக்ஷமே உமக்கு ஜயம்; வித்தைக்கு மஹேசரே, எப்பொழுதும் வித்தையை அளிக்கிறவரே, எல்லா அங்கங்களோடு கூடியவரே; நாகபூஷணரே, பிரம்மவித்துக்களால் அடையத்தகுந்தவரே, போக மோக்ஷத்தை அளிப்பவரே உமக்கு ஜயம்;

காமஹர, பிராக்ஞா, காருண்ய மூர்த்தியே, பஸ்மரூபியே, மஹா தேவ, பஸ்மதாரணு, பஸ்மதாரர்களுடைய பாசத்தை அறுப்பதில் முயற்சியுள்ளவரே, ஸந்யாஸிகளால் ஹிருதயகமலத்தில் எப்பொழுதும் பூஜிக்கப்பட்டவரே உமக்கு ஜயம்.

79-83. ஸூதர்:—பிரஹஸ்பதி இவ்விதமாக மஹாதேவனை ஸ்துதித்து, நமஸ்காரஞ்செய்து, கிருதார்த்தராயும், துக்கங்களிலிருந்து விடப்பட்டவராயும் பக்தியில் பரவசமானுர்; எவன் இதை காலை மாலை இருவேளைகளிலும் எப்பொழுதும் படிகிறுனே அவன் பக்தியின் கரையை யடைந்து பரமாயுள்ள பிரம்மத்தை யடைகிறுன். அவனுக்கு வாக்குத் தாட்டி கங்காப் பிரவாகம் போல் விருத்தியாகிறது; புத்தியில் பிரஹஸ்பதிக்கு ஸமானனுயும், குருபக்தியில் எனக்குச் சமானமாயும் ஆகிறுன்; புத்திர இச்சையுள்ளவன் புத்திரனையும், கன்னிகாபேக்ஷயுள்ளவன் கன்னிகையையும், பிரம்மவர்ச்சஸ் இச்சையுள்ளவன் அதையும் அடைகிறுன் என்பதில் ஸந்தேகமில்லை. ஆகையால் ஹே! முனிகளே! நீங்கள் இரண்டு ஸந்திகளிலேயும் இந்த தேவதேவருடைய புண்யமான ஸ்தோத்திரத்தை பக்தியுடன் ஜபிக்கவும்.

---

## அத்தியாயம் 12.

### (நாடி சுத்தி).

1-10. ஈசுவரன்:—இப்பொழுது நாடி சுத்திசெய்தலைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன்; விதித்த கர்மத்தைச் செய்துகொண்டும், காமஸங்கல்ப மில்லாமலும், யமம் முதலிய அஷ்டாங்கங்களோடு கூடியும், சாந்தனுயும், ஸத்யத்தைக் கைக்கொண்டும், குரு ஸேவையுடன் மாதாபிதாக்களின் ஸேவைசெய்துகொண்டும், தன் ஆசிரமத்தில் இருந்துகொண்டு, நல்ல ஞானிகளால் உபதேசிக்கப்பட்டு, ஒரு மலையின் உச்சியிலாவது, நதீதீரத்திலாவது, பில்வமரத்தடியிலாவது அல்லது ஓர் காட்டிலாவது, மனேஹரமாயும், சுத்தமாயும், வேதகோஷத்துடன் கூடியதாயும், கந்தமூல ஜலங்களோடு கூடியதான ஓர் பிரதேசத்தில் ஒரு அழகான கெட்டி மடம் கட்டிக்கொண்டு, அதில் மூன்று காலங்களிலும் ஸ்நானஞ்

செய்துகொண்டும், சிரத்தையுடன், தெளிவான மனஸுடன், விரஜாஹோமஞ் செய்த அக்னிஹோத்திர பஸ்மத்தை யெடுத்து 'அக்னி' என்று ஆரம்பமாகிற ஜபால சுருதியில் சொல்லப்பட்ட ஏழு மந்திரங்களினுல், ஹே! முனியே! அல்லது அதர்வணத்தில் சொன்ன ஆறு மந்திரங்களினுலாவது பஸ்மாவை பூசிக்கொண்டு, பின்பு நெற்றியிலும், மார்பிலும் கைகளிலும் திரிபுண்டரதாரணம் பக்தியுடன் தரித்துக்கொண்டு, தேவதேவனையும், சரஸ்வதி, ஸ்கந்தன், விக்னேசன், குரு, சந்திரன், சூரியன், வாயு, அக்னி இவர்களை நமஸ்கரித்து, ஆசனத்தின்மேல் கிழக்கு அல்லது வடக்கு முகமாக உட்கார்ந்துகொண்டு, மார்பு கழுத்து தலை இவைகளை நிமர்த்தி வைத்துக்கொண்டு, அசைவில்லாமல், வாயை மூடிக் கொண்டு, மூக்கு நுனியில் சந்திர பிம்பமானது 'வம்' என்ற மந்திரத்துடன் அமிருதத்தை பெருக்குகிறதாக சாந்த மனதுடன் கண்களால் பார்க்கவும்.

**11-15.** இடா நாடியால் வாயுவை உள்ளே இழுத்து வயிற்றை நிறப்பி, பிறகு தேகமத்தியில் ஜ்வாலையோடுகூடிய அக்னியைத் தியானஞ் செய்து பிந்துநாதத்துடன் கூடிய அக்னிபீஜத்தையும் (ரம்) தியானஞ் செய்துகொண்டு, பிறகு பிங்களா நாடியில் புத்திமான் மெதுவாக அந்தவாயுவை வெளியாக்கவும்; மறுபடியும் பிங்களையால் அந்த அக்னிபீஜத்தை ஸ்மரித்து வாயுவை உள் இழுத்து, திரும்பவும் மெள்ளமெள்ள இடாநாடியால் வெளியாக்கவும்; இவ்விதமாக மூன்று நான்குவருஷங்கள் அல்லது மாதங்கள் தினம் ஆறுதடவை திரிகாலத்திலும் ரகசியமாக யனுஷ்டித்தால் சிலமுக்கிய அடையாளங்களைக் காண்பிக்கிற நாடிசுத்தியை அடைகிறுன்.

**16** (அவைகளாவன) சரீரம் லகுவாயிருத்தல், ஜாடராக்கினிப் பிரகாசம், அனுஹதநாதத்வனி இவை யோகசித்தியைக் காட்டும் அடையாளங்களாம்.

**17.** மேற்கூறிய அடையாளங்களைக் காணும் பரியந்தம் யோகானுஷ்டானஞ் செய்துவரவும்; பிறகு இதைத் தள்ளிவிட்டு தன் ஆத்மசுத்தி செய்யத்துவக்கவும்.

18. ஆத்மா எப்பொழுதும் சுத்தனும், நித்யனும், சுகரூபி யும், ஸ்வயம்பிரகாசனுமாக விருக்கிறன். அக்ஞானத்தால் மலின னுக விளங்குகிறன்; ஞானத்தால் சுத்தமாகப் பிரகாசிக்கிறன்.

19. எவன் அக்ஞானமாகிற மலச்சேற்றை ஞானமாகிற ஜலத்தால் சுத்திசெய்கிறனே அவன்தான் எப்பொழுதும் சுத் தன்; கர்மத்தில் பிரியமுள்ள அக்ஞானி ஒருக்காலும் சுத்தியா கான்.

20. கர்மத்தில் சார்ந்த அக்ஞானிகளின் புத்தியை, அறிந்த வன், சஞ்சலப்படுத்தாமல் கர்மத்தைச் செய்யவேண்டுமென்றே உபதேசஞ் செய்யவும்

## அத்தியாயம் 13.

### (யமவிதி நிரூபணம்).

1-2. ஈசுவரன் :—ஹே ! ஸாங்க்ருதரே ! உனக்கு இப்பொ ழுது (யோகத்தின்) எட்டு அங்கங்களையும் சொல்லுகிறேன்; ஹே ! முனியே ! (அவைகளாவன) யமம், நியமம், ஆஸநம், பிரா ணயாமம், பிரத்தியாஹாரம், தாரண, தியாநம், ஸமாதி என்ற எட்டுமாம்.

3. அஹிம்ஸை, ஸத்தியம், சோரத்தன்மை இல்லாமை, பிரம்மசரியம், தயை, விநயம், க்ஷமை, தைரியம், மிதஆஹாரம் சௌசம் என்று யமம் பத்து விதமாம்.

4. வேதத்திற் கூறியதைத்தவிர மனோவாக்குக் காயங்களி னுல் ஹிம்ஸை செய்யாமல் இருப்பதற்கு அஹிம்ஸை என்று பெயர்.

5. ஆத்மா எங்கும் பரவியவன், வெட்டமுடியாதவன், தகிக்கப்பட முடியாதவன் என்ற புத்தி எவனுக்கு உண்டாகிற தோ அப்புத்தியே முக்கிய 'அஹிம்ஸை' என்று வேதார்த்த மறிந்தவர்களால் சொல்லப்படுகிறது.

6. தோஷமில்லாத இந்திரியங்களால் பார்த்ததையும் கேட் டதையும் உள்ளபடி சொல்லுவது 'ஸத்தியம்' என்று சொல்லப் படும்.

7. எல்லாம் ஸத்தியரூபமாயுள்ள பரப்பிரம்மமேதவிர வேறு ஒன்றும் இல்லை என்ற புத்தியே வேதாந்த மறிந்தவர்களால் முக்கியமான ஸத்தியம் என்று கூறப்பட்டிருக்கிறது.

8. அன்னியனுடைய திருணம், இரத்தினம், தங்கம், முத்து இவைகளில் மனதினுலுங்கூட பிரவிருத்தி யில்லாமலிருப்பதை வித்வான்கள் 'அஸ்தேயம்' என்று சொல்லுவார்கள்.

9. ஆத்மாவை அனாத்மாவென்று திருடாமல் இருப்பதை மஹாத்மாக்களான ஆத்மாவை யுணர்ந்தவர்களால் 'அஸ்தேயம்' என்று சொல்லப்படுகிறது.

10. மனோவாக்கு காயங்களால் பரஸ்திரீகளை நீக்குதலும், சொந்தஸ்திரீயினிடம் ருதுகாலமாத்திரத்தில் புணர்வதுமே பிரம்ம சர்யமாம்.

11-15. பிரம்ம பாவத்தில் மனதின் சஞ்சாரம் முக்கியமான பிரம்மசரியமாகும்; தன்னைப்போல் (எண்ணி) எல்லாபூதங்களிடத்திலும் மனோவாக்குகாயங்களால் பச்சாத்தாபம் அடைதல் தயையென்று சொல்லப்பட்டிருக்கிறது; புத்திர, மித்திர, களத்திரம், சத்துரு இவர்களிடத்தில் ஒரே மாதிரியாக எப்பொழுதும் இருத்தல் 'விநயம்' என்று சொல்லப்படுகிறது; சத்துருக்களால் ஹிம்ஸிக்கப்பட்டாலும் மனோவாக்கு காயங்களால் மனவருத்தமடையாமை 'க்ஷமை' என்று சொல்லப்படுகிறது; வேதத்தாலேயல்லாது வேறு ஒன்றுலும் ஸம்ஸாரத்திற்கு மோக்ஷம் உண்டாகாது என்ற ஞானத்தின் உதய்மானது, வேதமுணர்ந்தவர்களால், 'தைரியம்' என்று சொல்லப்படுகிறது. 'நான் ஆத்மாவே, மரணமற்றவன்,' என்ற சஞ்சலமற்ற புத்தியானது வேதமறிந்த ஞானிகளால் முக்கியமான தைரியம் என்று சொல்லப்படும்.

16. குறைவாயாவது அதிகமாகவாவது சாப்பிடுகிற ஆஹாரத்தால் யோகம் ஒருபொழுதும் சித்தியாகாது.

17-18. ஆகையால் யோகத்திற்கு அனுகுணமாக மித போஜனமே செய்யவேண்டும்; தன்னுடைய தேகத்திலிருக்கிற

மலத்தைப்போக்க மண்ணாலும், ஜலத்தாலும் சுத்திசெய்தல் வெளிசுத்தியென்றும், மனச்சுத்தியானது 'நான் எப்பொழுதும் சுத்தன்' என்று மனதில் தியானஞ்செய்வது ஞானசுத்தியென்று பண்டிதர்கள் கூறுகிறார்கள்.

19. தேகமுழுவதும் அழுக்குள்ளது; தேகி எப்பொழுதும் மலமில்லாதவன்; இவ்விரண்டின் தத்துவத்தைத் தெறிந்தவனுக்கு சௌசம் ஏது.

20. ஞான சௌசத்தைவிட்டு வெளி சௌசத்தில் எவன் இன்புற்றவனாக விருக்கிறானோ அந்த மூடன் தங்கத்தைத் தள்ளிவிட்டு ஓட்டை கிரகிப்பதற்கு ஒப்பாவான்.

21. ஞான ஜலத்தால் சுத்தனாயும், கிருதகிருத்யனாயுமுள்ள யோகிக்கு இந்த உலகத்தில் செய்யத்தகுந்தது ஒன்றுமில்லை; அப்படியிருப்பதாயிருந்தால் அவன் தத்வத்தை யறிந்தவனன்று.

22. ஆத்மாவை யறிந்தவனுக்கு இம்மூன்று உலகங்களிலுஞ் செய்யத்தகுந்தது கொஞ்சங்கூட ஒன்றுமில்லை; 'இஹசேத்' என்ற சுருதிப்பிரகாரம் இவ்விடத்திலேயே ஜீவன்முக்தனாகிறான்.

23. ஹே! முனியே, ஆகையால் சர்வப் பிரயத்தினத்துடன் அஹிம்ஸை முதலிய ஸாதனங்களுடன், வேதத்தால் உண்டாகும் ஞானத்தால், அக்ஷரமான ஆத்மாவை பிரம்மம் என்று அறி.

---

## அத்தியாயம் 14.

---

### (நியம நிரூபணம்).

1-2. ஈசுவரன்:—ஹே! முனிசிரேஷ்டரே! நியமங்களைச் சொல்லுகிறேன்; தவம், ஸந்தோஷம், ஆஸ்திக்கியம், தானம், ஈசுவரபூஜை, ஸித்தாந்த சிரவணம், லஜ்ஜை, மதி, ஜபம், விருதம் (இப்பத்தும்) மஹாத்மாக்களான யோகமறிந்தவர்களால் நியமம் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

3-5. இவைகளைக் கிரமமாகச் சொல்லுகிறேன்; சிரத்தையுடன் கேட்பீராக; வேதங்களிற்கூறியபடி கிருச்சிரம் சாந்திரா

யணம் முதலியவைகளால் சரீரத்தை சோஷணஞ்செய்வது 'தவம்' என்று வித்வான்கள் சொல்லுகிறார்கள். 'நான் யார்,' 'மோக்ஷம் எவ்விதமிருக்கும்,' 'எவ்விதம் ஸம்ஸாரத்தை யான் அடைந்தேன்' என்று யோசிப்பதை 'தவம்' என்று விஷயமறிந்த பண்டிதர்கள் சொல்லுகிறார்கள்.

6–7. பிரயத்தினமன்றி கிடைப்பதால், எப்பொழுதும், எந்த மனிதனுக்கு பிரீதியுண்டாகிறதோ அதைச் சந்தோஷம் என்று அறிந்தவித்வான்கள் சொல்லுகிறார்கள்; பிரம்மலோக முதலிய உலகங்களில் விரக்தியடைந்தவனுக்கு பரமாத்மாவிடத்தில் உண்டான பிரியத்தை உத்கிருஷ்டமான சந்தோஷம் என்று வித்வான்கள் கூறுகிறார்கள்.

சுருதியிலும் ஸ்மிருதியிலும் சொல்லப்பட்ட கட்டளைகளில் உண்டாகும் விசுவாசத்திற்கு ஆஸ்திகம் என்று பெயர்.

8. நியாயமாய் ஸம்பாதிக்கப்பட்ட தனம், அன்னம் முதலியவைகளை சிரத்தையுடன் வைதிகனாகவுள்ள பிராமணனுக்கு கொடுத்தால் அதற்கு 'தானம்' என்று என்னால் சொல்லப்படுகிறது.

9. அவைதிகனான பிராமணனுக்கு கொடுக்கப்பட்டதானது ஹே! முனிசிரேஷ்டா! சாம்பலில்செய்த ஆஹுதியைப்போல் பிரயோஜனப்படாது.

10. பிரம்மா, விஷ்ணு, ருத்திரர்களை வைசிய, சூத்திர, பிராமணர்கள் மூலமாக கிரமமாக பக்தியுடன் சக்திக்குத்தக்கவாறு பூஜைசெய்தல் ஈசுவரபூஜையாகும்.

11. மனம் காமக்குரோதாதிகளுடன் கூடாமலும், வாக்கு பொய் முதலியவைகளால் கெடாமலும், காயம் பரஹிம்ஸை செய்யாமலும் இருப்பது ஈசுவரபூஜையாகும்.

12–14. ஸத்தியம், ஞானம், அனந்தம், பரமானந்தம், நித்தியம், சிரேஷ்டம் என்று பிரத்தியக் ஆத்மாவை அறிகிற பரியந்தம் கேட்பதை, வித்வான்கள், 'ஸித்தாந்த சிரவணம் என்று துவிஜர்களுக்கு சொல்லுகிறார்கள்; விரக்தர்களாகவுள்ள சூத்திரர்களுக்

கும், ஸ்திரீகளுக்கும் ஹே! முனியே! புராண சிரவணமே வித்வான்களால் ஸித்தாந்தசிரவணம் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

15-16. வைதிக லௌகிக மார்க்கங்களில் நிந்திக்கப்பட்ட கர்மத்தில் விருப்பமில்லாமைக்கு லஜ்ஜை என்று பெயர்; எல்லா வைதிக காரியங்களிலும் சிரத்தையுடன் புத்தி உண்டாவதும், குருவால் உபதேசிக்கப்பட்டும், ஆகமாதிகளின் ஸம்பந்தமில்லாமல் வேதோக்தமாயுள்ள மார்க்கங்களாலேயே மந்திராப்பியாஸஞ் செய்வதற்கு 'ஜபம்' என்று பெயர்.

17. கல்பம், ஸூத்திரம், வேதம், தர்மசாஸ்திரம், புராணம், இதிஹாஸம் இவைகளைப் படிப்பதற்கும் என்னுல் ஜபம் என்று சொல்லப்படுகிறது.

18. வேதத்திற்கு விரோதமாயுள்ள ஸ்மிருதிகள், இன்னும் யாதொரு குயுக்தியாகிற கிரந்தங்கள் இவைகள் எல்லாம் பிரயோஜன மற்றவையாகையால் இவைகளை யனுஷ்டிக்கிறவனை இவை பிறகு தமஸில் கொண்டுபோய்ச் சேர்க்கும்.

19. ஸ்வதர்மமானது குணமற்றதாயிருந்தாலும் நன்ருக அனுஷ்டிக்கப்பட்ட பரதர்மத்தைக்காட்டிலும் சிலாக்கியம்; ஸ்வதர்மத்திலிருந்து மரணமடைவது சிரேஷ்டம்; பரதர்மம் பயத்தைக்கொடுக்கும்.

20. ஆதலால் எல்லாபிரயத்தினத்துடன் வேதமந்திரத்தை எப்பொழுதும் ஜபிக்கவேண்டும்; வாசக, மானஸ பேதத்தால் ஜபம் இருவிதமாம்.

21. அந்த வாசகஜபம் இறைந்தும் மெதுவாகவும் சொல்வதினுல் இரண்டுவிதமாகவும், மானஸஜபம் மனனம், தியானஞ், செய்கிறபேதத்தால் இரண்டுவிதமாகும்.

22. இறைந்து ஜபம் செய்வதைக்காட்டிலும் மெதுவாக ஜபம் செய்வது ஆயிரம்மடங்கு பலனுகும்; அதைக்காட்டிலும் மானஸ ஜபம் ஆயிரமடங்கு பலனுகவும் சொல்லப்படுகிறது.

23. இறைந்து சொல்லுகிற ஜபம் எல்லோருக்கும் அதில் கூறியபலனைக்கொடுக்கும்; ஆனால் சமீபத்திலிருக்கிற ஹீனஜாதிகள் காதுகளில் விழக்கூடாது; விழுந்தால் நிஷ்பலமாகும்.

24-26 மனிதன், ரிஷி, சந்தஸ், தேவதை இவைகளைத் தியானம்செய்துகொண்டு ஜபிக்கவும்; ஸித்திபெற்ற குருவால் முதலில் உபதேசிக்கப்பட்டு அவர்கட்டளையின்பேரில் தர்மத்தின்பொருட்டும், ஆத்மஸித்தியின்பொருட்டும் ஒரு வழியைக் கைக்கொள்வது விருதமாகும்; அல்லது அதர்வணவேதத்தில் சொல்லிய மந்திரங்களால் வெளுப்பாயுள்ள பஸ்மத்தை யெடுத்து, எல்லா அங்கங்களிலும் பூசிக்கொண்டு இருப்பது புத்திமான்களால் விருதம் என்று சொல்லப்படுகிறது. இதை வேதசிரஸில் உள்ளவர்கள் 'பாசுபதவிருதம்' என்று சொல்லுகிறார்கள்.

27. இதை சிலர் (யாஜுஷர்கள்) அத்யாசிரமமென்றும், சிலர் (அதர்வணவேதிகள்) சிரோவிருதம் என்றும், சிலர் (ருக்வேதிகள்) விருதம் (சாம்பவம்) என்றும், மற்றும் சிலர் (ஸாமவேதிகள்) ஐச்வரவிருதம் என்றும் சொல்லுகிறார்கள். (அதர்வணவேதிகள் இந்த ஒரேவிருதத்திற்கு நான்குபெயர்கள் என்று சொல்லுகிறார்கள்).

28. இந்த விருதத்தின் மகாத்மியம், எல்லாப்பாபங்களையும் அபகரிப்பதாயும், புண்ணியமாயும், நல்லஞானத்தை பிரகாசிக்கச்செய்வதாயும் அநேக வேதங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

29. எந்தப் பசுவானவன் இந்த விருதத்தால் தன் பசுத்தன்மையை நாசஞ்செய்யவில்லையோ அவனை நாசஞ்செய்வதால் பாபமில்லை என்பது வேதாந்த நிர்ணயம்.

30. எல்லா நியமமும் சுருக்கமாக ஹே! முனியே! சொல்லப்பட்டது; இவ்விதிப்பிரகாரம் அனுஷ்டிக்கிறவன் பஸ்மஜ்யோதியாக ஆவான்.

---

## அத்தியாயம் 15.

(ஆஸந விதி)

**1-2.** ஈசுவரன்:—ஹே! பிருஹஸ்பதியே! இப்பொழுது ஆஸநங்களை பிரித்துச் சொல்லுகிறேன்; கேளும்; ஸ்வஸ்திகம், கோமுகம், பத்மம், வீரம், ஸிம்ஹாஸனம், பத்ரம், முக்தாஸநம், மயூரம், ஸுகாஸனம் என்று ஆஸனம் ஒன்பதுவிதமாம்.

**3.** இரண்டு தொடைகளின் நடுவில் இரண்டு பாதங்களை வைத்துக்கொண்டு நிமிர்ந்தகழுத்தும் சிரஸுடனும் இருப்பதற்கு ஸ்வஸ்திகம் என்று பெயர்.

**4.** இடது பிருஷ்டபாகத்தில் வலது குதிக்காலையும், அவ் விதமே வலது பிருஷ்டபாகத்தில் இடது குதிக்காலையும் வைத் துக்கொள்வதற்கு கோமுகம் என்று பெயர்.

**5.** தொடைகளின்பேரில் இரண்டுபாதங்களை வைத்துக் கொண்டு கைகளால் பின்பக்கம்வழியாக கால்கட்டை விரல்களை மாற்றிப் பிடித்துக்கொண்டிருப்பதற்கு பத்மாஸநம் என்றும், அது பாபம், ரோகம், பயம் இவைகளைப் போக்கடிக்கின்றது என்றும் சொல்லப்படுகிறது.

**6.** வலது கால்நுனியை இடது தொடையிலேயும் அப்படி யே மற்றதையும் போட்டு நிமர்ந்து ஸுகமாக விருப்பதற்கு வீரா ஸநம் என்று பெயர்.

**7–8.** இரண்டு குதிக்கால்களையும் பீஜத்திற்கு அடியிலிருக் கிற நரம்பினுடைய இரண்டு பக்கங்களிலும் மாற்றிவைத்து, இர ண்டு கைகளையும் முட்டுகளின்பேரில் வைத்து விரல்களை விரித் துக்கொண்டு மூக்கு நுனியைப் பார்த்து இருத்தலுக்கு ஸிம்ஹா ஸனம் என்று பெயர்.

**9–10.** இரண்டு குதிக்கால்களையும் பீஜத்தின் அடியிலிருக் கிற நரம்பினுடைய இரண்டு பக்கங்களிலும் வைத்து, பாதங்களை கைளால் நன்ருகப்பிடித்து சலனமின்றி இருப்பதற்கு பத்ராஸநம் என்றும், அது விஷத்தையும், ரோகத்தையும் நாசஞ்செய்கிற தென்று சொல்லப்படுகிறது.

9

11–12. சூக்ஷ்மமாயுள்ள நரம்பை இரண்டு குதிக்கால்களா லும் அமுக்கி, மாற்றி இருப்பதற்கு முக்தாஸநம் என்றும், ஆண் குறிக்குமேல் இடது குதிக்காலேயும் அதற்குமேல் மற்றகாலேயும் வைத்து இருப்பதற்கும் முக்தாஸநம் என்று பெயர்.

13-14. இரண்டு உள்ளங்கை பக்கங்களே கொப்புற் பக்கத் தில் வைத்துக்கொண்டு கைகளின் மற்றபாகத்தை பூமியில் விரித் துவைத்துக்கொண்டு, ஏகாக்கிரசித்தத்துடன் தலையையும் காலே யும் உயர்த்திக்கொண்டு கம்பைப்போல் ஆகாசத்தில் இருப்பதற்கு மயூராஸநம் என்றும், அது எல்லாபாபத்தையும் நாசஞ்செய்யும் என்றும் சொல்லப்படுகிறது.

15. எது எவ்விதமாவது ஸுகம், தைரியம் இவைகளே உண் டாக்குகிறதோ அதற்கு ஸுகாஸநனம் என்றும், சக்தியற்றவன் அதை அநுஷ்டிக்கலாம் என்றும் சொல்லப்படுகிறது.

16. எவனுல் ஆஸனம் ஜயிக்கப்பட்டதோ அவனுல் மூன்று உலகங்களும் ஜயிக்கப்பட்டது; எல்லா ஆஸநங்களும் சொல்லப் பட்டன.

17. இவ்விதியோடு கூடி எப்பொழுதும் நீர் பிராணுயாமம் செய்யவேண்டும்.

---

## அத்தியாயம் 16.

### (பிராணுயாம விதி நிரூபணம்.)

1. ஈசுவரன்—இப்பொழுது விதிப்பிரகாரம் பிராணுயாமத் தைச் சொல்லுகிறேன்; ரேசக, பூரக, கும்பகங்களால் செய்யப் படுவதே பிராணுயாமம் என்று சொல்லப்படுகிறது.

2. ரேசக, பூரக, கும்பகங்கள் மூன்று எழுத்துக்களுடன் கூடியிருப்பதாக சொல்லப்படுகிறது; அதுவே பிரணவமென்றும், பிராணுயாமம் பிரணவமயம் என்றும் சொல்லப்படுகிறது.

3. இடா நாடியால் வாயுவை இழுத்து, பதினுறு மாத்தி ரைகளால் மெதுவாக வயிற்றை நிறப்பி, அவ்விடத்தில் ‘அ’கா ரத்தை ஸ்மரிக்கவும்.

4. பிறகு அந்த நிறைந்தவாயுவை அறுபத்திநான்கு மாத்திரைகளால் 'உ'கார மூர்த்தியை ஸ்மரித்து அப்பொழுது பிரணவத்தை ஜபிக்கவும்.

5–6. அல்லது தன்சக்தித்தகுந்தபடி ஜபத்துடன் மூச்சையடக்கி பிறகு புத்திமான் 'ம'காரத்தால் மெதுவாக பிங்களையால் முப்பத்திரண்டு மாத்திரைகளால் வாயுவை வெளிப்படுத்தவும்; இதுதான் பிராணுயாமம்; இதை இப்படி அநுஷ்டிக்கவும்.

7–9. மறுபடியும் பிங்களையால் 16 மாத்திரைகளால் பூரகம் செய்து, 'ம'கார (ருத்திர) மூர்த்தியை ஏகாக்ரமனதுடன் சிந்தித்து, கும்பகத்தில் 40 பிரணவங்களை ஜபித்து, 'உ'கார ரூபியான விஷ்ணுவை ஸ்மரித்து, பிறகு இடாநாடியால், 'அ'கார (பிரம்ம) ரூபியை ஸ்மரித்து, ரேசகஞ்செய்யவும்; இவ்விதமாகவே மறுபடியும் இடா நாடியால் புத்திமான் பூரகஞ்செய்யவும்.

10–14. இவ்விதமாக யதீச்வரன் பிராணுயாமத்தை தினந்தோறும் அப்யாஸஞ்செய்யவும்; அல்லது, பிராணவாயுவை இழுத்து பூரகஞ்செய்து, வயற்றை நிறப்பி, பிரணவத்துடனும் வியாஹிருதியுடனும் கூடிய காயத்ரீயை மும்முறை கும்பகத்தில் ஜபிக்கவும்; கிரஹஸ்தன் மூன்றுசந்திகாலங்களிலும் மும்முறை இப்படிசெய்யவும்; பிர்மசர்யாச்ரமத்தி லிருக்கிறவர்களுக்கும், வானப்பிரஸ்தர்களுக்கும் ஹே! முனியே! வேதாந்தமறிந்தவர்களால் பிரரணயாமம் முற்கூறிய இரண்டுவழிகளில் ஒன்று ஏற்பட்டிருக்கிறது. பிராமணனைப்போல க்ஷத்திரயனுக்கும், விரக்தர்களாகவும் விவேகிகளாயுமுள்ள வைச்யர், சூத்திரர், ஸ்திரீகளுக்கும் பிராணுயாமஞ் சொல்லப்பட்டிருக்கிறது.

15. சூத்திரர்களுக்கும் ஸ்திரீகளுக்கும் 'நம' என்றதை முடிவில் கூடிய சிவமந்திரத்தையும், வைஷ்ணவமந்திரத்தையும் (பஞ்சாக்ஷரம், அஷ்டாக்ஷரமந்திரங்கள்) தவிர வேறுமந்திரங்கள் இல்லாமல், அவைகளால் தினந்தோறும் 16 பிராணுயாமங்கள் செய்யவும்.

**16–18.** ஒரு மாதம் அப்யாஸஞ்செய்தால் பிரம்மஹத்தி முதலிய பாபங்களிலிருந்து விடுதலையடைகிறான்; ஆறு மாதம் அப்யஸித்தால் ஞான இச்சை விப்ரர்களுக்கு உண்டாகும்; ஒரு வருஷம் அப்யாஸத்தால் பிரம்மத்தை யறிகிறவனுவான்; ஆகையால் தினந்தோறும் அப்யாஸஞ் செய்யவேண்டும், நித்தியம் யோகாப்யாஸத்திலிருக்கிறவனும், தன்ஸ்வதர்மத்தை நடத்துகிறவனும் பிராணுப்யாஸத்தாலேயே ஞானமடைந்து முக்தனுகிறான்.

**19.** வெளியிலிருக்கிற வாயுவை வயிற்றில் அடைப்பதற்கு பூரகம் என்றும், நிறைந்த கும்பம்போல் வாயுவை அடக்கிவைப்பதற்கு கும்பகமென்று பெயர்; வயிற்றிலிருந்து வாயுவை வெளிப்படுத்துவதற்கு ரேசகம் என்று சொல்லப்படுகிறது.

**20.** பிராணுயாமங்களில் வியர்வை உண்டாவது கீழ்பட்டதென்றும், நடுக்கம்கொடுப்பது மத்தியமம் என்றும், மேற்கிளம்புதல் உண்டாவது உத்தமம் என்று சொல்லப்படும்.

**21.** உத்தமமடைகிறவரையில் முந்தியுள்ளதை அனுஷ்டித்து வரவும்; உத்தமமடைந்த பிறகு புத்திமான் பிராணுயாமத்தில் சுகத்தையடைவான்.

**22.** ஹே! ஸூவிருதரே? பிராணுயாமத்தால் சித்தம் சுத்தமாகிறது; சித்தம் சுத்தியானுல் மனஸ் பிரத்யக் ஜ்யோதியில் ஸ்தாபிதமாகிறது.

**23–25.** பிராணன் சித்தத்துடன் சேர்ந்ததாய் பரமாத்வாவில் இருக்கிறது; இந்த பிராணுயாம பரனுயிருக்கிற மஹாத்ம புருஷனுடைய தேகம் உயரக்கிளம்புகிறது; அதனுல் கொஞ்சம் ஞானத்தாலேயே முக்தியடைகிறான்.

ரேசகம் பூரகத்தை விட்டுவிட்டு கும்பகத்தைமாத்திரம் நித்தியம் அப்யாஸிக்கவேண்டும்; அதனுல் எல்லா பாபங்களிலிருந்தும் விடுதலையடைந்து திருடஞானத்தை யடைகிறான்; மனோஜயத்தை யடைகிறான்; நிறைமுதலானது நசிக்கும்.

26. பிராணுயாமத்திலேயே இருப்பவனுக்கு ஒன்றும் துர்லபம் இல்லை; ஆகையால் எவ்வித பிரயத்தினத்தாலும் பிராணுயாமத்தை அப்யாஸஞ் செய்யவேண்டும்.

27-30. பிராணுயாமத்தை யனுஷ்டிக்கிற காலத்தையும், அதன் பலத்தையும் சொல்லுகிறேன்;

இரண்டு ஸந்திகளிலும், பிரம்மகாலத்தும் (விடியற்கால வேளை) மத்தியாந்நத்திலும், அல்லது எப்பொழுதும் வெளிப் பிராணவாயுவை உள்ளிழுத்து வயிற்றில் நிரப்பி, மூக்கு நுனியிலாவது, நாபி நடுவிலாவது, கால் கட்டவிரலிலாவது தாரணைசெய்ய வேண்டும்; அப்படிச் செய்வதால் எல்லா ரோகத்திலிருந்தும் நிவிருத்தியாகி நூறு வருஷங்கள் ஜீவித்திருப்பான்.

மூக்கு நுனியில் தாரணைசெய்வதால் வாயுவை ஜயித்தவனுகிருன்; நாபிமத்தியில் செய்தால் எல்லாரோகங்களும் நாசமாகின்றன; கால்கட்டவிறலில் செய்தால் தேகத்திற்கு இலகுத்வம் உண்டாகும்.

31. நாக்கு நுனியினுல் எப்பொழுதும் வாயுவை இழுத்து உட்கொண்டால் சிரமம், தாகம் முதலியதிலிருந்து நீங்கி ரோகமற்ற தன்மையை யடைவான்.

32. நாக்கால் வாயுவை இழுத்து, நாக்கின் அடியில் வைத்துக்கொண்டு, அங்குள்ள அமிருதத்தை மெள்ள பானஞ்செய்தால் எல்லா சௌக்கியத்தையும் அடைகிருன்.

33. இடாநாடியால் வாயுவை இழுத்து நெற்றிமத்தியில் தடுத்துவைத்து அங்குள்ள சுத்தமான அமிருதத்தை பாணஞ் செய்பவன் வியாதிகளற்றவனுகிருன்.

34. இடையாலும், பிங்கலையாலும் வாயுவை இழுத்து நாபியில் தடுத்தால் வியாதியற்றவனுகிருன்.

35-41. ஒருமாதம் மூன்று வேளைகளிலும் நாக்கால் வாயுவை இழுத்து, அமிருதத்தை பானஞ்செய்து, நாபியில் மெள்ள மெள்ள அதை நிறுத்தினுல் வாதபித்ததோஷங்கள் நசிக்கும்.

இடா பிங்களைகளால் வாயுவை இழுத்து இரண்டு கண்களில் நிறுத்தினால் நேத்திரரோகங்களும், அப்படியே காதுகளில் தடுத்தால் அந்தரோகங்களும் நாசத்தையடையும்; அப்படியே வாயுவை இழுத்து தலையில் ஸ்திரமாக நிறுத்தினால் சிரோரோகங்கள் நசிக்கும், என்று, ஹே! பிரஹஸ்பதியே, ஸத்தியமாய் சொல்லப்படுகிறது.

ஸ்வஸ்திகாஸனத்தில் இருந்துகொண்டு, அடக்கப்பட்ட மனஸுடன் அபானவாயுவை மெள்ள மெள்ள பிரணவத்துடன் மேல் எழுத்து, இரண்டு கைகளாலும் காது முதலானவைகளை மூடிக்கொண்டு, அதாவது, இரண்டு கட்டைவிரல்களால் இரண்டு காதுகளையும், ஆள்காட்டி விரல்களால் இரண்டு கண்களையும், நடுவிரல்களால் மூக்குத் துவாரங்களையும் அடைத்து, ஆனந்தம் உண்டாகும் வரையில் தலையில் பிராணனை தாரணை செய்வதால் அந்தப் பிராணன் ஹே! முனியே! பிரம்ம ரந்திரத்தை பிரவேசிக்கிறது.

42–43. பிரம்ம ரந்திரத்தை அந்த வாயுவடைந்தவுடன் நாதம் உத்பத்தியாகிறது; ஹே! பாபமற்றவனே! முதலில் அந்த நாதம் சங்கநாதத்திற்கு ஒப்பாயும், பிறகு மத்தியில் மேக நாதம் போலும் அந்த வாயு தலைநடுவை யடைந்தவுடன் மலைகளிலிருந்து ஓடுகிற அருவிகளைப்போலும் உண்டாகிறது. பிறகு ஹே! மகாப்பிராக்ஞரே! மனது நேராக ஆத்மாவுக்கு எதிரில் செல்லுகிறது.

44–47. பிறகு ஆத்மஞானம் உதயமாகிறது; அதனால் ஸம்ஸார நாசமுண்டாகிறது.

இடது வலது குதிக்கால்களால் பீஜத்தின் நரம்பை புத்திமான் அமுழ்த்தி, தொடையடியிலிருக்கிற ஸந்தியையும் அப்படியே அமுழ்த்தி, முக்கண்ணனான தேவனையும் விநாயகன், ஸரஸ்வதி இவர்களை ஸ்மரித்து, பிங்கநாளத்திலிருந்து வாயுவை மெள்ள இழுத்து, பிந்துவுடன் கூடிய அக்னி பீஜத்துடன் (ரம்) சேர்த்து, பிரணவத்தால் புத்திமான் மூலாதாரத்தின் நடுவில் நிறுத்தவும்.

48. அப்படி நிறுத்திய வாயுவால் பிரகாசத்துடன் அக்னி குண்டலியை தகிக்கிறது; பிறகு ஸுஷும்ணு வழியாக அக்னி யுடன் அந்த வாயு திரும்பிப்போகிறது.

49–50. இப்படி அப்பாஸஞ் செய்பவனுல் வாயு நிச்சிய மாக ஜயிக்கப்படுகிறது; அதற்கு அடையாளம், முதலில் வியர்வை யும், இரண்டாவது நடுக்கலும், மூன்ருவது சரீரத்தின் கிளம்புத லும் உண்டாகும்; இப்படி அப்பாசஞ் செய்கிறவனுக்கு மூல ரோகம் நாசமாகும்.

51. பங்கதரம் வியாதியும் நசிக்கிறது; பாக்கிவியாதிகளும், கெட்ட கொடிய பாபங்களும் நசிக்கின்றன.

52. பாபம் நாசமானுல் சித்தக்கண்ணுடி சுத்தமாகிறது; பிறகு பிரம்மாதி லோகங்களில் மனதில் வைராக்கியம் உண்டா கிறது.

53. ஸம்ஸாரத்திலிருந்து விரக்தியடைந்தவனுக்கு மோக்ஷ ஸாதனம் ஞானம், அதனுல் பாசங்கள் நசித்துப்போகும், இந்த ஆத்மதேவனை யறிந்தால் என்று சுருதி சொல்லுகிறது (ச்வே தாச் வேதரோப நிஷத்தில்).

54. கெட்ட மனிதர்கள் இந்த ஞான அமிருதத்தைத் விட்டு விட்டு, மாயையால் மோகமடைந்தவர்களாக, எப்பொழுதும் ஸார மற்ற ஸம்ஸாரத்தில் சுற்றிக்கொண் டிருக்கிருர்கள்! ஆச்சரியம்!.

55. எவனுல் ஞானமிருதமானது ஒருதரம் அனுபவிக்கப் பட்டதோ அவன் எல்லாக் காரியங்களையும் விட்டுவிட்டு அதி லேயே இருக்கிருன்.

56. எவன் இதை விட்டுவிட்டு துர்புத்தியுடன் மற்றவை களில் ரமிக்கிருனே அவன் அநேகமாய் ஞானமிருதத்தை ருசித் திருக்கமாட்டான்.

57. புத்திமான்கள் இந்த ஜகத்தை ஞானஸ்வரூபமாகவே சொல்லுகிருர்கள். மற்ற துர்புத்திமான்கள் அக்ஞானத்தால் அதை அர்த்தஸ்வ ரூபமாகப் பார்க்கிருர்கள்.

58. யக்ஞங்களால் தேவத்வமும், தபஸால் பிரம்மபதமும், தானங்களால் போகங்களும், ஞானத்தால் பிரம்மத்தையும் அடைகிறான்.

59. ஹே! முனிசிரேஷ்டரே! கர்மத்தால் சிலர் மோக்ஷத்தையடைய இச்சிக்கிறார்கள்; அவர்கள், இவை தெப்பக்கட்டைக்கு ஸமானமென்று சுருதி கூறியிருப்பதால், மூடர்கள்.

60. ஸகல ஜகத்தையும் பண்டிதர்கள் ஆத்மாவென்றே அறிகிறார்கள்; அக்ஞானத்தால் மூடப்பட்ட மானிடர்கள் சங்கரனை அறிகிறதில்லை.

61. புருஷன் அக்ஞான பாசத்தால் கட்டுப்பட்டதால் அமுக்தன் என்று சொல்லப்படுகிறான்; ஞானத்தால் அந்த அக்ஞானத்திற்கு, பிரகாசத்தால் இருளுக்குப்போல், நிவிருத்தி உண்டாகிறது.

62-63. ஆத்ம ஸ்வரூப ஞானத்தால் அக்ஞானத்திற்கு நாசமும், அந்த அக்ஞான நாசத்தால் ராகம் முதலியவைகளுக்கு நாசமும், ராகமற்றால் புண்ய பாபங்களுக்கு அழிவும், அவையழிவதால் மறுபடியும் சரீரத்தை யடையாமல் இருக்கிறான்.

64. அசரீரமற்ற மஹானுகும்பொழுது ஸுகதுக்கங்களால் பாதிக்கப் படுகிறதில்லை; அப்படி கிலேசமற்று பிரஸன்னனு யிருக்கிறவனை முக்தன் என்று அறிந்தவர்கள் சொல்லுவார்கள்:

65. ஆகையால், தேகிகளுக்கு எல்லா துக்கங்களும் அக்ஞான மூலமாயிருக்கிறது; அதற்கு ஞானத்தால் நிவிருத்தி உண்டாகிறது, கர்மத்தால் இல்லை.

66. ஞானத்தைக்காட்டிலும் பரிசுத்தமாயும் பாபத்தை நாசஞ்செய்யக் கூடியதும் வேறொன்றுமில்லை; ஸம்ஸாரத்தை அறுப்பதற்கு அதைவிட வேறு அப்பியாஸங் கிடையாது.

67. ஹே! மகாமுனியே, உனக்காக ஸ்நேகத்தினுல் எல்லாம் சுருக்கமாகச் சொல்லப்பட்டது. இந்த வேதாந்தப் பொருளை நீ ரகஸியமாக காப்பாற்றவேண்டும்.

---

## அத்தியாயம் 17.

(பிரத்யாஹார விதான நிரூபணம்).

1–2. ஈசுவரன் சொல்லுகிறுர்:—ஹே! மஹாமுனியே! இப்பொழுது பிரத்யாஹாரத்தைச் சொல்லுகிறேன்; விஷயங்களில் ஸ்வபாவமாக சஞ்சரிக்கிற இந்திரியங்களை பலமாய் உள் இழுப்புதல் பிரத்யாஹாரமாம்; அடக்கப்பட்ட மனதுடன் எதை எல்லாம் பார்க்கிருனே அதை எல்லவற்றையும் பிரம்மமாக பார்ப்பது பிரத்யாஹாரம்.

3–7. பிரம்மவித்துக்களால் இது முதலில் பிரத்யாஹாரம் என்று சொல்லப்படுகிறது.

மரணபரியந்தம் சுத்தமானுலும் அசுத்தமானுலுஞ் செய்யப்பட்டதை பிரம்மத்தின்பொருட்டு அர்ப்பணஞ்செய்வதும் பிரத்யாஹாரம் என்று சொல்லப்படுகிறது.

அல்லது நித்திய கர்மங்களையும், காமிய கர்மங்களையும் பிரம்ம ஆராதன புத்தியால் செய்வது பிரத்யாஹாரம் ஆகும்.

அல்லது வாயுவை உள்ளிழுத்து அந்தந்த ஸ்தானத்தில் நிற்கச்செய்வது பிரத்யாஹாரமாகும்; வாயுவை தந்தமூலத்திலிருந்து கண்டத்திலும், கண்டத்திலிருந்து மார்பிலும், மார்பிலிருந்து வாயுவை இழுத்து நாபிகந்தத்திலும், நாபிகந்தத்திலிருந்து இழுத்து குண்டலியில் நிறுத்தவும்; குண்டலிதேசத்திலிருந்து வித்வான் மூலாதாரத்தில் நிறுத்தவேண்டும்.

8–9. அவ்விதமே அபானத்திலும், கடி இரண்டிலும், இரண்டு துடைகளின் நடுவிலும், மூட்டுகளிலும், குதிக்கால்களிலும் விரல்களிலும் வாயுவை தடுத்தல் பிரத்யாஹாரம் என்று பிரத்யாஹார மறிந்தவர்களால் முன் சொல்லப்பட்டிருக்கிறது.

இப்படி அப்பியாஸஞ்செய்கிற மஹாத்மாவான புருஷனுக்கு எல்லா பாபங்களும் பவரோகமும் நசிக்கின்றன.

10–11. அன்றியும் மற்றொருவிதமான பிரத்யாஹாரம் உனக்குச் சொல்லுகிறேன்; நாடிகளால் வாயுவை உள்ளிழுத்து

ஸவஸ்திகாஸனத்தில் ஸ்திரமாக உட்கார்ந்துகொண்டு, வித்வான் கால்முதல் தலைபரியந்தம் வாயுவை நிறப்பவும்;

**12–13.** பிறகு இரண்டு பாதங்களிலும், மூலாதாரத்திலும், நாபிகந்தத்திலும், ஹிருதயமத்தியிலும், கழுத்துக்குழியிலும், கன்னங்களிலும், புருவமத்தியத்திலும், நெற்றி நடுவிலும், அப்படியே தலையிலும் நிறுத்தவும்.

**14–18.** 'அ'கார, 'உ'கார, 'ம'கார, 'ந'கார, 'ம'கார, 'சி'கார, 'வ'கார, 'ய'காரங்களையும், அப்படியே பிரணவத்தையும் ஜபிப்பது பண்டிதர்களால் பிரத்யாஹாரம் என்று சொல்லப்படுகிறது.

அல்லது, மற்றொரு பிரத்யாஹாரஞ் சொல்லுகிறேன்; தேகாத்மபுத்தியை தடுத்து, சாந்தமனதுடன் வித்வான் இரட்டையற்றதாயும், நிர்விகல்பமாயுமுள்ள ஆத்மாவில் தடுப்பதற்கு வேதாந்தத்தை நன்றாக அறிந்தவர்களால் பிரத்யாஹாரம் என்று சொல்லப்படுகிறது. இவ்விதம் அப்பியாஸஞ் செய்பவனுக்கு கிடைக்கக்கூடாதது ஒன்றுமில்லை; அவனுக்கு புண்ணியமாவது பாபமாவது ஸத்தியமாய் கிடையாது; இப்பேர்ப்பட்டவன் பிரம்மவித்துகளுக்குள் சிரேஷ்டன், ஸாக்ஷாத் தேவேச்வரனாயிருக்கிறான்.

**19.** இப்படி ஹே! மஹாமுனியே! பிரத்யாஹாரஞ் சுருக்கமாக சொல்லப்பட்டது; இது இரகசியங்களுக்கெல்லாம் ரகசியமாதலால் நித்யம் உன்னால் காப்பாற்றப்படவேண்டியது.

---

## அத்தியாயம் 18.

### (தாரணை விதி நிரூபணம்).

**1–3.** ஈசுவரன் சொல்லுகிறார்:—இப்பொழுது ஹே! ஸூவிருத! ஐந்து தாரணைகளைச் சொல்லுகிறேன்; தேகத்திற்குள்ளிருக்கிற ஆகாசத்தில் வெளி ஆகாசத்தை (தாதாத்மியமாக புத்தியை தரிப்பது) தரிப்பதும், பிராணனில் வெளிவாயுவையும், வயிற்றிலிருக்கிற அக்கினியில் வெளி அக்கினியையும், உள்ளிருக்கிற ஜலபாகத்தில் வெளிஜலத்தையும், பூமிபாகத்தில் பூமியையும் தரித்து, ஹ, ய, வ, ர, ல என்கிற அக்ஷர மந்திரத்தை வரிசையாக

உச்சரித்தல் ஸமஸ்தபாபங்களையும் சுத்திசெய்கிற தாரணையென்று என்னால் சொல்லப்படுகிறது.

4–6. முழங்கால் மூட்டுபெரியந்தம் பிருதிவிபாகமென்றும், அதற்குமேல் குதம்வரையில் ஜலபாகமென்றும், ஹிருதயம்வரையில் அக்னிபாகமென்றும், புருவமத்தியம்வரையில் வாயுபாகமென்றும், தலைபரியந்தம் ஆகாசபாகமென்றும் சொல்லப்படும்; பிரம்மாவை பூமிபாகத்திலும், விஷ்ணுவை ஜலபாகத்திலும், ருத்திரனை அக்னி அம்சத்திலும், ஈசுவரனை வாயு அம்சத்திலும், ஸதாசிவனை ஆகாசாம்சத்திலும் தாரணைசெய்யவேண்டும்.

7–10. அல்லது வேறொருவித தாரணை சொல்லுகிறேன்; மனதில் சந்திரனையும், காதில் திக்குதேவதையும், நடப்பதில் விஷ்ணுவையும், பலத்தில் இந்திரனையும், வாக்கில் அக்னியையும், அபானத்தில் எமனையும், உபஸ்தத்தில் பிரஜாபதியையும், த்வக்கில் வாயுவையும், நேத்திரத்தில் சூரியமூர்த்தியையும், நாக்கில் வருணனையும், மூக்கில் பூதேவதையும், புருஷனிடத்தில் ஸர்வேச்வரராயும் சிதானந்த மயமாயுமுள்ள சிவனையும், எல்லாப் பாபங்களையும் போக்க, தினமும் தாரணைசெய்தல், யோக சாஸ்திரிகளால் தாரணையென்று சொல்லப்படுகிறது.

11–12. பிரம்மாமுதலான காரியரூபமா யிருக்கப்பட்டதை தத்தம் காரணத்தில் லயப்படுத்தி, ஸர்வகாரணமாயும், நிரூபிக்கக் கூடாததாயும், சேதனமற்றதாயுமுள்ள அவ்யக்தத்தை (மாயையை) ஸம்பூரணமான ஆத்மாவிடத்தில், பிரயாஸையுடன், தரிக்கவேண்டும்; இந்த தாரணையே மேலானதென்று தார்மிகர்களான வேதமறிந்தவர்களால் சிரேஷ்டமென்று சொல்லப்படுகிறது.

13. இந்திரியங்களை இழுத்து, மனஸால் ஆத்மாவிடம் கொஞ்சகாலம் தாரணைசெய்வது, 'பூஜிதா' தாரணையென்று சொல்லப்படும்.

14. 'எப்பொழுதும் வேதத்தாலேயே தேவர்கள், மனிதர்கள், லோகங்கள், மகேச்வரன் எல்லோரும் வேத சப்தத்தாலே

யே சிருஷ்டிக்கப்பட்டார்கள்,' என்று சித்த வ்யவஸ்தை யெது வோ அதற்கு தாரணையென்று பெயர்.

**15–16.** 'நான் எப்பொழுதும் பிரம்மம், தேவனல்ல, யக்ஷ னல்ல, நரனல்ல, தேக இந்திரிய புத்திமுதலியதும் அல்ல, மா யையுமன்று, மற்று யாதொரு தேவதையுமல்ல' என்ற புத்தி வியவஸ்தையும் தாரணையென்று சுருதி சொல்லுகிறது.

**17.** ஸமஸ்தமும் சுருக்கமாக சொல்லப்பட்டது; வேதாந் தத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிற இந்த விஷயஸித்தியில் நீ எப் பொழுதும் இருக்கவேண்டும்.

---

## அத்தியாயம் 19.

---

### (தியான விதி நிரூபணம்).

**1–4.** ஈசுவரன் சொல்லுகிறார்:—இப்பொழுது ஸம்ஸாரத் தை நாசஞ்செய்யும் தியானத்தைச் சொல்லுகிறேன்.

(தாரண அப்யாஸத்தால் மனஸின் சாபல்யம் நீங்கியபிறகு தியானயோக்கியதை ஸித்திக்கிறது; ஸகுண, நிர்குண பேதத்தால் தியானம் இருவிதம்; முதலில் ஸகுணத்தியானஞ் சொல்லப்படுகி றது).

ஆகாசத்தில் நிர்மலமாயும், சுத்தமாயும், பிரகாசமுள்ளதா யும், குளிர்ச்சியுள்ளதாயும், பூர்ணமாயும், சலமற்றதாயும், பார் வைக்கு கோசரமாயுமுள்ள சந்திரமண்டலத்தை தியானித்து, அதன்மத்தியில் மஹாதேவனும், பரமானந்த விக்கிரகமாயும், பார்வதியை பாதிதேகத்தில் வகித்துக்கொண்டிருப்பதாயும், வரத் தைக் கொடுப்பவராயும், உத்பத்தி இருப்பு இல்லாதவராயும், சுத்த ஸ்படிகத்திற்கு ஒப்பானவரும், சந்திரரேகையை தலையில் தரித் திருப்பவரும், முக்கண்ணரும், சதுர்புஜங்களை யுடையவரும், நீலகண்டராயுமுள்ள பராத்பரமான மஹாதேவனை நித்யம் எப் பொழுதும் 'நான் அவரே' என்று தியானிக்கவேண்டும், ஹே! பிரம்மவித்துக்களுள் சிரேஷ்டரே!

**5–7.** அல்லது ஆகாசமத்தியிலிருக்கிறதும், பிரகாசஞ்செய் கிறதும், அழகாயும், பூர்ணமாயும், லக்ஷயோஜனை விஸ்தாரமுள் ளதுமான ஆதித்தியமண்டலத்தில் எல்லாலோக சிருஷ்டிகர்த்தா வும், ஈசுவரரும், ஸுவர்ணரூபியும், தங்கநிறமுள்ள மீசை, தலை, நகங்களையுடையவரும், குரங்கின் பிரஷ்டபாகத்திற் கொப்பான வர்ணமுள்ள முகத்தையுடையவரும், நீலகண்டரும், ரக்தவர்ண ரும், ஆகோபால பிரசித்தராயும், உமையை பாதிசரீரமாக யுடைய வருமான மஹாதேவனை 'நானே அவர்' என்று எப்பொழுதும் அல்லது ஸந்தியாகாலங்களில் தியானிக்கவேண்டும்.

**8–11.** அல்லது வேதோக்தமாயும் சுத்தமாயுமுள்ள அக்னி ஹோத்திராதிகளின் மத்தியில் ஆத்மாவாயும், ஜகத் ஆத்மாவா யும், எப்பொழுதும் ஆனந்தானுபவராயும், கங்காதரராயும், விரூ பாக்ஷராயும், விச்வரூபராயும், விருஷபக்கொடி யுடையவராயும், சதுர்புஜராயும், ஆஸநத்திலிருப்பவராயும், சந்திரமவுலியாயும், ஜடாதரராயும், ருத்திராக்ஷமாலை பூண்டவராயும், உமாபதியாயும், ஈசுவரராயும், பசுவின்பால்போல் வெண்ணிறமுள்ளவராயும், ரகசி யங்களுக்கெல்லாம் ரகசியருமான ஆச்சரியவானுயும் ஒப்பற்றவ ராயுமுள்ள பரசிவத்தை 'நான்' என்கிற புத்தியால் தியாநிக்கவும்.

**12–21.** அல்லது 'நான்' ஸாக்ஷாத் ஸர்வக்ஞராயும், புரு ஷோத்தமராயும், ஆயிரம் தலை, கை, கால்களோடு கூடியவராயு முள்ள ஹரியாயும், விச்வனுயும், நாராயணனுயும், தேவனுயும், நாசமற்றவராயும், பரமபிரபுவாயுமுள்ள விஷ்ணுமூர்த்தி என்று தியானித்து, திரும்பவும் அந்தரூபமுள்ள தன்னுடைய தாமரை போன்ற ஹிருதயத்தின் மத்தியில் பிராணுயாமத்தால் மலர்ந்ததா யும், எட்டு ஐச்வரியதளங்களுள்ளதாயும், வித்தையாகிற கேஸரி யுடன் கூடியதும், ஞானமாகிற நாளம், மகத்துவமாகிற கந்தத்து டன்கூடியதும், பிரணவத்தால் நன்ருய் விகஸிதமான பரமேச்வர கிரஹத்தில், (சொல்லப்பட்ட ஹிருதய கமலமத்தியிலிருக்கிற ஸு ஷும்ணைக்குள் காரணபூதமாயும், மூலாதாரத்திலிருப்பதுமான வைச்வா நரனைச்சொல்லுகிருர்), எல்லாப் பக்கங்களிலும் பிரகா சிக்கிறதாயும், ஜ்வலிக்கிறதாயும், பெரிய அக்னியாயும், நான்கு

பக்கத்திலும் பரவியதாயும், வைச்வாநரனுயும், ஜகத்காரணராயும், மயிர்நுனிபோல் அதிஸூக்ஷ்மமாயும், ஈசுவரனுயும், தன்சரீரத்திற்கு கால்முதல் தலைபரியந்தம் உஷ்ணமுண்டாக்குகிறவராயும், காற்றில்லாதவிடத்தில் பிரகாசிக்கும் தீபம்போல் பிரகாசிக்கிற தீபமாயும், அக்கினியாயும், நீலமேக மத்தியிலிருந்து பிரகாசிக்கிற மின்னல்கொடிபோலுள்ளவரும், நீவாரநுனிபோல் கூர்மையுள்ளவரும், ஸ்வர்னரூபமாயுள்ள வைச்வநராக்னியை தியானஞ்செய்ய வேண்டும்.

அந்த அக்னியின் சிகரமத்தியத்தில் பரமகாரணரும், பரமாத்மாவாயும், ஈசுவரனுயும், ஆனந்தமாயும், பரமாகாசமாயும், ருதமாயும், ஸத்தியமாயும், பரமாயும், பிரம்மமாயும், ஸாம்பனுயும், ஸம்ஸாரவைத்தியராயும், ஊர்த்துவரேதஸாயும், விரூபாக்ஷராயும், விச்வரூபராயும், மகேச்வரராயும், நீலகண்டராயும், தன்னுத்மாவைப் பார்க்கிறவராயும், பாபநாசராயும், பிரம்மா விஷ்ணு ருத்திரர்களால் தியானிக்கப்பட்டவராயும், தனக்கு தியானிக்க வஸ்துவில்லாதவராயுமான சிவனை யோகி 'நானே அவர்' என்று ஆதரவுடன் தியானிக்கவும்.

**22–24.** மோக்ஷத்திற்கு இதுதான் வேதாந்தத்திற்குள்ளிருக்கிற பெரிய மார்க்கமாயிருக்கிறது;

(விஷ்ணுமூர்த்திபோல் தானே பிரம்மமூர்த்தியாகவிருந்து தன்ஹிருதயத்தில் சிவனை தியானஞ்செய்யவேண்டுமென்று சொல்லுகிறுர்).

அல்லது, ஹே! முனிசிரேஷ்டரே! நான் லோகபிதாமஹரான பிரம்மாவென்று ஸ்மரித்து, தன் ஹிருதயமத்தியத்தில், மோக்ஷத்தின்பொருட்டு, பரமகாரணராயும், வேதாந்தத்தாலேயே அறியக்கூடியவரும், ஸாம்பரும், ஸம்ஸாரநாசகரும், நாசரகிதராயுமுள்ள ஈசானனை 'நான்' என்ற புத்தியால் தியானிக்கவேண்டும்.

**25–28.** (இனி நிஷ்கலவிஷயஞ்சொல்லுகிறுர்) அல்லது ஸத்யமாயும், ஈசானராயும், ஞானமாயும், ஆனந்தமாயும், அத்வயமாயும், அநன்தமாயும், அமலமாயும், நித்தியமாயும், அடிநடுவற்றதா

யும், அப்படியே ஸ்தூலமற்றதும், அணுகாசமானதும், ஸ்பர்சமற்றதும், கண்களில்லாததும், ரஸகந்தமில்லாததும், அபிரமேயமும், ஒப்பற்றதும், எல்லாவற்றிற்கு ஆதாரமாயும், ஜகத்ரூபமானதும், மூர்த்தம் அமூர்த்தமானதும், நாசமற்றதும் பார்க்கத்தகுந்ததும், காணத்தகாததும், உள்ளும்வெளியிலுமிருப்பதும், நான்கு பக்கங்களிலும் வியாபித்திருப்பதும் பலதிக்குகளில் கைகால்களையுடையதும், எல்லாக்காரணங்களுக்கும் காரணமாயிருப்பதும், எல்லா ஞானம் முதலியவைகளோடு கூடியதுமானவஸ்துவை 'நான்' என்றே சிந்திக்கவும்.

ஹே! முனிசிரேஷ்டரே! இந்த மார்க்கமானது நேராக ஸம்ஸாரத்தை நாசஞ்செய்யும்.

**29–32.** அல்லது ஸச்சித் ஆனந்தமும், அனந்தமும், தியானத்திற் கெட்டாததுமான பிரம்மத்தை, மோக்ஷத்தின்பொருட்டு, 'நான்' என்று தியானிக்கவும். இம்மாதிரி என்று தேவேசனை ஒருக்காலும் தியானிக்கக்கூடாது; பிரம்மத்திற்கு சாக்ஷிரூபமானதாலும், எது உபாஸிக்கப்பட்டாலும் அது பிரம்மமன்றென்று சுருதி சொல்லுகிறபடியாலும் 'இது' என்று பிரம்மத்தை தியானிக்கக்கூடாது.

இப்படி தியானஞ்செய்கிறவன் ஸாக்ஷாத் சிவனேதவிற வேறன்று; இவனுக்கு ஒப்பானவன் உலகில் கிடையாது. நிச்சேஷமாய் பாபமற்றவனுக்கு ஞானத்திலும் தியானித்திலும் புத்தியுண்டாகும்; பாபத்திற்குட்பட்ட புத்தியுள்ளவர்களுக்கு இந்த வார்த்தைகூட துர்லபமாயிருக்கும்.

**33–35.** அல்லது, அவ்யக்தமாயும், ஆதாரமாயும், தேவநாயகராயும், சங்குசக்கிர முடையவராயும், தேவராயும், பீதாம்பர முடையுடையவராயும், ஹரியாயும், ஸ்ரீவத்ஸ மணியையுடையவராயும், விஷ்ணுவாயும்; பூர்ணசந்திர காந்தியையுடையவராயும், தாமரைப்பூபோன்ற உதட்டை யுடையவராயும், பிரஸன்னராயும், புன்சிரிப்புள்ளவராயும், சுத்த ஸ்படிகவர்ண முள்ளவராயுமான விஷ்ணுவை 'நான்' என்று தியானஞ் செய்யவும்.

இது, யோகசாஸ்திரமறிந்தவர்களால், கிடைப்பது அறிது என்று சொல்லப்பட்டிருக்கிறது.

36-37. அல்லது, தேவதேவ ஈசனும், பரமேஷ்டியாயும்' அக்ஷரமாலாதரராயும், தேவராயும், கமண்டலத்தை தாமரைபோன்ற கையிலுடையவராயும், வரத அபயஹஸ்தமுள்ளவராயும், எப்பொழுதும் ஸரஸ்வதி தேவியுடன் கூடியிருப்பவராயும், சங்கபுஷ்பத்தைப்போன்ற வெண்ணிறமுள்ளவருமான பிரம்மாவை 'நான்' என்றே சிந்திக்கவும்.

38-39. அல்லது, அக்கினியையும், அப்படியே சூரியனேயும், அல்லது சந்திரனேயும், அல்லது வேறு தேவதையையாகிலும், வேதோக்த மார்க்கமாய், 'நான்' என்றே சிந்திக்கவும்.

40. இப்படி அப்பியாஸத்தோடுகூடிய மகாத்மாவான புருஷனுக்கு கிரமமாக வேதாந்தஞானம் உண்டாகும் என்பதில் ஸந்தேகமில்லை; அந்த ஞானத்தால் அக்ஞான நாசமாகிறது; அதுதான் அவனுக்கு முக்தியெனப்படும்.

41. எல்லா வேதாந்த ஸங்கிரகமும் சுருக்கமாக என்னல் சொல்லப்பட்டது; என் பிரஸாதத்தால் அறிந்துகொள்; ஒருக்காலும் ஸந்தேகப்படவேண்டாம்.

---

## அத்தியாயம் 20.

### (ஸமாதி விதி).

1. ஈசுவரன் சொல்லுகிறார்:—இப்பொழுது ஸம்ஸாரத்தை நாசமாக்கும் ஸமாதியைச் சொல்லுகிறேன்; ஸமாதியென்றால் ஞான உத்பத்தி (மகாவாக்கிய லக்ஷிய ஸ்வரூபத்தின் ஸாக்ஷாத்காரம்), பரமும் ஜீவனும் ஒன்று என்ற புத்தி.

2. ஹே! ஸூவிருத! பரத்தைக்காட்டிலும் ஜீவன் வேருக விருந்தால் அது காரியரூபத்தை யடைகிறது, அசித்வத்தையும் (ஜடத்தன்மையையும்) கடம்போல் அடைகிறது.

3-4. 'இரண்டாவது பதார்த்தத்தால் பயம் உண்டாகிறது; என்று சுருதியிருப்பதால் விநாசத்தன்மையையும் பயத்தையும் அடைகிருன்; இந்த ஆத்மா நித்தியமாயும், ஸர்வகதமாயும், கூடஸ்தமாயும், தோஷமற்றதாயும் இருக்கிறது; எப்பொழுதும் ஒன்ருகவேயிருக்கிறதேதவிற பிரபஞ்சமும் ஸம்ஸாரமும் இல்லே; இந்த ஒன்றே மாயையாலும், பிராந்தியாலும் அநேகமாக ஆகிறது; ஸ்வரூபமாக பேதமில்லை.

5. எப்படி ஒரே ஆகாசம் கடாகாசமென்றும், மஹாகாச மென்றும் சொல்லப்படுகிறதோ, அப்படியே இந்த ஒரே ஆத்மா ஜீவன் என்றும், ஈசுவரன் என்றும் பிராந்தர்களால் இரண்டாக சொல்லப்படுகிறது.

6-9. நான் தேகமன்று, பிராணனுமன்று, இந்திரியங்களுமன்று, அப்படியே மனமன்று, புத்தியல்ல, சித்தமுமன்று, அஹமுமன்று, நான் பிருதிவியன்று, ஜலமன்று, நெருப்பு இல்லை, வாயுவன்று, ஆகாசமுமன்று, சப்தமன்று, ஸ்பர்சமுமன்று, ரஸமுமன்று, கந்தமுமன்று, ரூபமுமன்று, மாயையுமன்று, ஸம்ஸாரமுமன்று (ஆனல்) நான் எப்பொழுதும் ஸாக்ஷிஸ்வரூபமானதால் கேவலம் சிவமாயிருக்கிறேன்; இந்த புத்திக்கு ஹே! முனிசிரேஷ்டரே! ஸமாதி என்று சொல்லப்படுகிறது.

10-12. அல்லது, விவேகமாகிற அக்னியால் ஹே! முனியே, பஞ்சபூதங்களாலுண்டான இந்த அண்டத்தை பூததன் மாத்திரையாக தகித்து, மறுபடியும் ஸ்தூலாதி பூதங்களை ஸூக்ஷ்ம பூதங்களில் லயப்படுத்தி, பிறகு புத்திமான் அவைகளையும் மாயாமாத்திரமாக ஒடுக்கி, அந்தமாயையையும் பிரதக் ஆத்மாவாக ஒடுக்கி, அந்த ஆத்மாதான் நான், பிரம்மம், ஸம்ஸாரியன்று, என்னைத்தவிற வேருென்றுமில்லை என்று இப்படி தன் ஆத்மாவை அறியவேண்டும்; இதுதான் ஸமாதியென்று சொல்லப்படுகிறது.

13. அல்லது, யோகசிரேஷ்டரே! பிரணவ சரீரியான ஈசுவரனை 'அ'காராதி கிரமமாக மூன்று வர்ணங்களாக அறியவும்.

14. ரிக்குவேதம் 'அ'காரம், யஜுர்வேதம் 'உ'காரம், ஸாமவேதம் 'ம'காரம், அதர்வனம் நாதம். (இப்படி பிரணவம் வேத சதுஷ்டயமாயிருக்கிறது).

15. 'அ'காரம் பகவான் பிரம்மாவாகவும், 'உ'காரம் ஸ்வயம் ஹரியாகவும், 'ம'காரம் பகவான் ருத்திரமூர்த்தியாகவும், நாதம் காரணமாகவும் இருக்கிறது.

16. அப்படியே நான்கு அக்னிகளும், உலகங்களும், அவஸ்தைகளும், ஆவஸதைகளும் (நாபி, ஹிருதய, கண்டம், தலை பிரிவுகளும்), உதாத்த முதலான ஸ்வரங்களும், காலமும் மூன்று வர்ணஸ்வரூபமாகவே இருக்கிறது.

17. இவ்விதமறிந்து, மறுபடி எல்லாவற்றையும் மூன்று மாத்திரைகளில் ஒடுக்கி, துவந்தமற்ற 'அ'காரத்தை 'உ'காரத்தில் ஒடுக்கவும்.

18. 'உ'காரத்தை 'ம'காரத்திலும், அதை மஹா நாதத்திலும், அதை மாயையிலும், அதை ஜீவரூபத்திலும் ஒடுக்கவும்.

19. அந்த ஜீவனையும் ஈசுவரபாவத்தால் 'அதுதான் நான்' என்று நிச்சியமாக அறியவும். இந்த புத்தியும் வித்வான்களால் ஸமாதி என்று சொல்லப்படுகிறது.

20. ஸமுத்திரத்திலிருந்து கிளம்பும் நுறை, அலைகள் எப்படி மறுபடியும் அதிலேயே லயமடைகிறதோ அப்படி ஜகத் என்னிடமே லயமடைகிறது.

21. ஆகையால் 'என்னைத்தவிற எப்பொழுதும் வேறாக ஜகத்தும் மாயையும் இல்லை' என்கிற புத்தியை ஸமாதியென்று சுருதிசொல்லுகிறது.

22. எவனுக்கு இவ்விதமாக இந்த பரமாத்மா தனக்குள் பிரத்யக்பூதமாக பிரகாசிக்கிறதோ அவன் பரமஸ்வரூபத்தையடைகிறான, அவனே ஸாக்ஷாத் பராமிருதமாயிருக்கிறான்.

**23.** எப்பொழுது மனதிலிருக்கிற சைதன்யம் எப்பொழுதும் எல்லாவிடத்திலும் தடங்கலன்றிப் பிரகாசிக்கிறதோ அப்பொழுது அந்த யோகி ஸ்வரூபத்தையடைகிறான்.

**24.** எப்பொழுது எல்லாபூதங்களை தன்னிடத்திலும், ஸமஸ்த பூதங்களில் தன்னையும் அறிகிறானோ அப்பொழுது பிரம்மத்தையடைகிறான்.

**25.** எப்பொழுது ஸமாதியிலிருந்து எல்லா பூதங்களையும் பார்க்கிறதில்லையோ, பரத்தோடு ஒன்றாக விருக்கிறானோ அப்பொழுது அவன் கேவலமாகவிருக்கிறான்.

**26.** எப்பொழுது இவன் ஹிருதயத்திலுள்ள காமங்களெல்லாம் நழுவுகின்றனவோ அப்பொழுது இவன் அமிருதனாகவும் பண்டிதனாகவுமாகி க்ஷேமத்தை யடைகிறான்.

**27.** எப்பொழுது பூதங்களின் தனிப்பட்ட ஸ்திதியை ஒரே யிடத்திலிருப்பதாகவும், பிரமத்திலிருந்தே விஸ்தாரத்தை யடைவதாயும் அறிகிறானோ அப்பொழுது அவன் பிரம்மத்தையடைகிறான்.

**28.** கேவலமாயும், பரமார்த்தமாயும் தன் ஆத்மாவை எப்பொழுது அறிகிறானோ, ஜகத் மாயாமாத்திரம் என்றும் எப்பொழுது அறிகிறானோ அப்பொழுதுதான் இவனுக்கு ஸம்ஸார நிவிருத்தியுண்டு.

**29.** எப்பொழுது இவனுக்கு ஜன்மம், ஜரை, துக்கம், வியாதி இவைகளுக்கு ஒரே மருந்தாயுள்ள கேவலம் பிரம்மஞானம் உண்டாகிறதோ அப்பொழுதுதான் இவன் சிவனாகிறான்.

**30.** ஆகையால் விக்ஞானத்தாலேயே முக்தியுண்டாகிறது; கர்மகோடிகளால் கிடையாது; ஒருக்காலும் கர்மத்தால் ஸாதிக்கக்கூடியதற்கு நித்தியத்வம் ஸித்திக்காது.

**31.** வேதாந்த விக்ஞானமே ஞானமாகும், மற்றதெல்லாம் அக்ஞானம்; ஹே! முனியே! ஞானத்தின் மகிமை என்னால் சொல்லமுடியாது; ஆச்சரியமாயிருக்கிறது.

32. வெளிச்சம் சிறிதாயிருந்தாலும் எப்படி பெரும் இருளைப் போக்கடிக்கிறதோ அப்படி ஞானப்யாஸம் கொஞ்சமாயிருந்தபோதிலும் மகாபாபங்களை நாசஞ்செய்யும்.

33. எப்படி பெரியநெருப்பு காய்ந்தவும் ஈரமானவும் கட்டைகளை எரித்துவிடுகிறதோ அப்படி ஞானக்னி சுபமாயும் அசுபமாயுமுள்ள கர்மங்களை க்ஷணத்தில் நாசஞ்செய்கிறது.

34. எப்படி தாமரை ஜலத்திலிருந்தும் அதனால் ஒட்டப்படுகிறதில்லையோ அப்படி சப்தாதி விஷயங்களால் ஞானி ஸம்பந்தப்படமாட்டான்.

35. ஞானியின் பாபங்கள் க்ஷணத்தில் மந்திர மூலிகை பலத்தால் பக்ஷிக்கப்பட்ட விஷம் எப்படி ஜரித்துப்போகிறதோ அப்படி ஜீரணமாகின்றன.

36-38. பார்க்கும்பொழுதும், கேட்கும்பொழுதும், தொடும்போதும், முகரும்போதும், புஜிக்கும்போதும் நடக்கும்பொழுதும், தூங்கும்பொழுதும், மூச்சுவிடும்போதும், கிரகிக்கும்போதும், கண்மூடித் திறக்கும்பொழுதும், 'நான் கர்த்தாவன்று. போக்தாவன்று, நான் அஸங்கன், பரமேசுவரன், என் ஸந்நதியில் இந்திரியங்களெல்லாம் தொழில் நடத்துகின்றன' என்ற ஞானத்துடன் கூடியவனாய், சேர்க்கையற்று, காரியங்களை எவன் செய்கிறானோ அவன் தாமரை இலையின் ஜலம்போல பாபத்துடன் ஸம்பந்தப்படமாட்டான்.

39. எந்த நராதமன் மஹாத்மாக்களான ஞானவான்களை த்வேஷிக்கிறானோ அவன் தனியாய் ரௌரவாதி நரகத்தில் கல்ப காலம் கஷ்டப்படுவான்.

40. நல்ல நடத்தையுடையவனானாலும், கெட்ட நடையுள்ளவனானாலும், மூர்க்கனானாலும், பண்டிதனானாலும் ஞானப்யாஸத்தில் இருப்பவன் பூஜிக்கத்தகுந்தவன்; ஞானவானைப்பற்றி சொல்லவேண்டாம்.

**41–49.** அபேக்ஷையற்றவனாயும், முனியாயும், சாந்தனாயும், விரோதமற்றவனாயும், ஸமதர்சியாயுமுள்ளவனை, அவன் பாத தூளிகளால் சுத்தமாகுவேன் என்று நித்யம் பின்தொடருகிறேன்; ஹே! முனிசிரேஷ்டரே! எப்படி ஒரு ராஜா எல்லா ஜனங்களாலும் பூஜிக்கப்படுகிறானோ அப்படி தேவர்களாலும் முனிகளாலும் ஞானி எப்பொழுதும் பூஜிக்கப்படத் தகுந்தவன்; எவனுடைய வீட்டை உத்தேசித்து ஞானி போகிறானோ அவனுடைய பிதிருக்கள் நல்லகதி யடையப்போகிறோம் என்று ஸந்தோஷப்படுகிறார்கள்; எவனுக்கு அனுபவபரியந்தம் புத்தி தத்வத்தில் இருக்கிறதோ அவன் பார்வைக்குள்பட்டதெல்லாம் பாபத்திலிருந்து விடுபடும்; எவனுடைய மனோவியாபாரமானது கறையற்ற ஸத்சித் ஆனந்த ஸமுத்திரத்தில் எப்பொழுதும் லயமாயிருக்கிறதோ அவனுடைய குலம் சுத்தப்பட்டும், பெற்றவள் கிருதார்த்தையாகவும், பூமி புண்யவதியாகவும் ஆகிறது; ஞானியாகிய மகாத்மாவைப் பார்ப்பதால் ஒருவன் ஸௌரேச்வரத்தை சீக்கிரம் அடைகிறான்; இதை விட்டுவிட்டு, பாபபலத்தால் ஸம்ஸாரமாகிய பெரிய ஸமுத்திரத்தில் மனிதர்கள் ரமிக்கிறார்கள்; பாலகன் ஒரு பெரிய நிதியை விட்டுவிட்டு, அதை அறியாமல், மோகபலத்தால் விருதாவாக சேஷ்டை செய்வதுபோல, மானிடர்கள் மோகத்தால் ஈசுவரேச்வரனை ஞானியை விட்டுவிட்டு சஞ்சரிக்கிறார்கள்; ஆச்சரியம்! பரமார்த்தமறிந்த ஒரு மகானை விட்டுவிட்டு, மாயையால் மோகிக்கப்பட்ட ஜனங்கள், தங்கள் ஹிதத்தின்பொருட்டு, ஹே! முனியே, அமிருதத்தைவிட்டு விஷத்தைக் குடிப்பதுபோல, சஞ்சரிக்கிறார்கள். ஜாஸ்தியாய் சொல்வதில் என்ன பிரயோஜனம்; எல்லாம் உனக்கு ஸங்கிரகமாய் வேதாந்தம் சொல்லப்பட்டதை சிரத்தையோடும், குருபக்தியுடனும் அறிந்துகொள்.

**50.** எவனுக்கு ஈசுவரனிடத்தில் பரமான பக்தியும், அதுபோல குருவிடத்திலும் இருக்கிறதோ அவனுக்கு இப்பொழுது சொல்லப்பட்ட அர்த்தங்கள் பிரகாசமாகும் என்பதில் ஸந்தேகமில்லை!

**51-60.** ஸூதர்:—இப்படிச் சொல்லிவிட்டு பகவான் மகேசுவரன், சொல்வதற்கு பாக்கியில்லாததால், சும்மாயிருந்துவிட்டார். பிரஹஸ்பதியும் மறுபடியும் வேதாந்த சிரவணத்தால் ஆநந்தத்தால் நிறைந்த ஸர்வாங்கத்துடன் ஆத்மாநந்த வசமாயினர். நீங்களும் ஹே! மஹாபிராக்ஞர்களே! என்னிடமிருந்து கிடைத்த ஆத்மஞானத்தால் கிருதகிருத்யர்கள் ஆனீர்கள்; இதில் ஒருக்காலும் ஸந்தேகம் வேண்டாம். இந்த மார்க்கத்தை பெரிய பிரயத்னத்தினலேனும் ஸ்தாபிக்கவும்; வைதிக மார்க்கம் ஸ்தாபிக்கப்பட்டால் எல்லாம் நன்கு ஸ்தாபிக்கப்பட்டதாகும். எவன் இதை ஸ்தாபிக்கசக்தியிருந்தும் மோகத்தால் அதைச் செய்யாமலிருக்கிறனே அவனைக் கொல்லுகிறவன் பாபியாகமாட்டான் என்று வேதாந்த நிர்ணயம்; எவன் சிரத்தையுடன் இதை நிலைநிறுத்த உத்தேசிக்கிறனே அவன் ஸாமர்த்திய மற்றவனுயிருந்தாலும் ஸர்வபாபவிமுக்தனுய் ஸாக்ஷாத் ஞானத்தையடைகிறன். எவன் தன் வித்யா கர்வத்தால் வேதமார்க்கத்தை நிலைநிறுத்துகிறவனை மோசடிமுதலியவைகளால் ஜயிக்கிறனே அவன் மகாபாதகனுகிறன்.

எவன் இந்த ஞானயோக கண்டத்தை சிரத்தையுடன் நல்ல முகூர்த்தத்தில் படிக்கிறனே அவன் மறுபடியும் ஜனிக்கிறதில்லை; ஞானத்தை விரும்புகிறவன் ஞானத்தையும், ஸுகத்தை விரும்புகிறவன் ஸுகத்தையும், வேதஞானத்தை இச்சிக்கிறவன் வேதஞானத்தையும், ஜயத்தை விரும்புகிறவன் ஜயத்தையும், ராஜ்யத்தை இச்சிக்கிறவன் ராஜ்யத்தையும், பொருமையை விரும்புகிறவன் பொருமையையு மடைகிறன்.

ஆகையால் எல்லாக்காலங்களிலும் புத்திமான்களால் இது படிக்கத்தகுந்தது.

இரண்டாம் கண்டம் முற்றிற்று.

---

## மூன்றும் கண்டம்.

# முக்தி கண்டம்.

### அத்தியாயம் 1.

---

(முக்தி, முக்தி உபாயம், மோசகம், மோசகப் பிரதம் என்ற நான்குவித பிரச்னங்களின் நிரூபணம்).

1–8. சாந்தமாயும், மகேச்வராயும், கலப்பு அற்ற ஸத்திய விக்ஞானமாயும், அத்வயமாயும், ஸம்ஸார ரோகத்திற்கு மருந்தாயுமுள்ள பரமவஸ்துவை ஸந்தோஷத்துடன் நமஸ்கரிக்கிறேன்; எவருக்கு சக்தியாக வேதஸ்வரூபமாயும் ஜகன்மாதாவாயுமுள்ள உமாதேவியிருக்கிறளோ அந்த சங்கரனை நான் மகாமாயை நிவிருத்தியின்பொருட்டு நமஸ்காரஞ் செய்கிறேன்; எவருக்கு விக்னேச்வரர் முதல் புத்திரராகவும், வீர்யமுள்ள ஸ்கந்தரும் புத்திரரோ அந்த எல்லா தேவர்களாலும் நமஸ்கரிக்கப்பட்ட மஹாதேவரை நமஸ்கரிக்கிறேன்; எவருடைய வெகு அற்ப பிரஸாதத்தால் மனிதன் முக்தனுகிறனே அந்த பரமேசுவரனை நமஸ்கரிக்கிறேன்; எவருடைய லிங்கத்தை அர்ச்சனை செய்ததால் வியாஸர் எல்லா விஷயங்களேயும் நன்ருக அறிந்தாரோ அந்த கிருபாநிதியான பரமேச்வரனை நமஸ்கரிக்கிறேன்; எவருடைய பார்வையை முன்னிட்டு மாயாமயமான ஸர்வ ஜகத்தும் உண்டாயிற்றே அந்த ஒளிக்கூட்டமாயும், உமாபதியாயும், ஈசனுயுமுள்ள சிவனை நமஸ்கரிக்கிறேன்; எவர் சேதனுசேதனமுள்ள ஸமஸ்தலோகத்திற்கும் ஸாக்ஷியாயும், அந்தர்யாமியாயும், (தான்) ஸ்வரூபியாயுமிருக்கிருரோ அந்த ஸாம்பரான ஈச்வரனை நமஸ்கரிக்கிறேன்; எவரை சிஷ்டர்களாகவும் சாந்தர்களாகவுமுள்ள ஜனங்கள் வேதாந்த சிரவணத்தால் (தங்கள்) ஆத்மாவாகவே அரிகிறுர்களோ அந்த ஸத்தியமாயும், சித்தாகவும், சுகமாகவுமுள்ள வஸ்துவை நான் நமஸ்கரிக்கிறேன்.

**9–32.** ஈசபக்தராயும், சிவபூஜையில் முக்கிய கருத்துள்ள வரும், அம்பிகை ஈசுவர சரணங்களில் வாஞ்சையுள்ளவருமான ஹிரண்யாக்ஷர், கிலாந்தர், கிலேசஹரர், ஈசுவரபூஜையில் கருத் துடைய கிலீபர், ஓங்கார வல்லபர், லுப்தர், லோலுபர், லோல லோசனர், மஹாபிராக்ஞர், மஹாதீமான், மஹாபாகு, மஹோத ரர், சக்திமான், சக்திதர், சங்கு, சங்குகர்ணர், சனைச்வரர், பக வான், பக்னபாபர், பவர், பவபயாபஹர், பக்னதர்ப்பர், பவபிரீ தர், பாகஞர், பங்குராசுபர், அக்கினிவர்ணர், ஜபாவர்ணர், பந் தூக குஸுமச்சவி, விரக்தர், விரஜர், வித்வான், வேதபாராயண ரதர், ஸமசித்தர், ஸமக்கிரீவர், ஓடு, கல்லு, தங்கம் இவைகளை ஸமமாக பார்க்கிறவர், சாகத்தை புஜிக்கிறவர், கந்தமூலங்களை புஜிக்கிறவர், சத்துருமித்திரு இல்லாதவர், காலரூபர், கலாமாலர், காலதத்துவவிசாரதர், அணிமாண்டர், முனிசிரேஷ்டர், ஸோமநா தர், புத்திமான்களிடம் பிரியமுள்ளவர், வேதவித், வேதவித்துக் களுள் சிரேஷ்டர், வித்வான் பாதங்களில் ஸேவைசெய்கிறவர், விசால ஹிருதயர், விச்வர், விச்வவான், விச்வதண்டதிருதர், பவித்திரர், பரமர், பங்கு, தாமரைப்போன்ற சிவந்த கண்களுடை யவர், தொங்குகிற காதுகளையுடையவர், மஹாதேஜர், தொங்கும் மஞ்சள் ஜடையுடையவர், கிராஹ்யான புத்திரர், கிரீஷ்மர், முத லையைக் கொல்லுவதில் தீரர், லோகாக்ஷி புத்திரனிடம் உண்டா னவர், லோகயாத்திரையில் சிரந்தவர், ஜைகீஷவ்யபுத்திரர், பிரா தஸ்நாயி, ஜிதேந்திரியர், வத்ஸபுத்திரர், முனிசிரேஷ்டர், வம்ச காண்ட பிரபுவாகிய முனி, ஊர்த்துவரேதஸ், உமாபக்தர், ருத்திர பக்தர், மரவுரியுடையவர், ஆச்வலாயன புத்திரர், பிரம்மவித்தை யில் சிறந்தமுனி, முகுந்தர், மோசகர், முக்கியர், முஸலர், மூல காரணர், ஸர்வக்ஞர், ஸர்வவித், ஸர்வர், எல்லா பிராணிஹிதத்தில் பிரியமுள்ளவர், அத்புக்கிரர், அதிப்பிரஸன்னர், பிரமாண ஞான வர்த்தகர், ஆருனேயர், மஹாவீரர், ஆருணி உபநிஷத்தில் சிறந்த வர், ஆத்மவித்தையில் பிரியர், ஸ்ரீமான், ச்வேதாச்வேதர புத்தி ரர், ச்வேதாச்வேதர சாகையில் சிரத்தையுடன் பிரவர்த்திக்கிறவர், சதருத்திரர், சதருத்திரத்தில் பக்தியுள்ளவர், பஞ்சப்பிரஸ்தான

காரணத்தை யறிந்தவர், பஞ்சாக்ஷரபிரியர், சிவசங்கல்ப மந்திரத்தில் பிரியமுள்ளவர், சிவஸூக்த பிரவர்த்தகர், லிங்கஸூக்தத்தில் பிரியமுள்ளவர், கைவல்யோபநிஷத்தில் பிரியமுள்ளவர், ஐந்து ஜாபால உபநிஷத்தை அத்யயநஞ்செய்து பாபங்களத்தவர், புராணர், புண்ணியகர்மர், புருஷார்த்த பிரவர்த்தகர், மைத்திராயண சுருதிசிநேகர், மஹா மைத்திராயணமுனி, பாஷ்கலா அத்யயநத்தில் பிரீதியுள்ளவர், சாகலாத்யயநத்தில்ரதர், ஸர்வசாகையிலும் பிரீதியுடையவர், இவர்களும், ஸங்கமர் முதலான மஹாரிஷிகள் 84,000 பெயர்கள் சமதமங்களோடு கூடியும், சிவபக்திபாராயணர்களும், 'அக்னி' என்று துவக்கப்படும் மந்திரங்களால் பூசிய பஸ்மசரீரிகளும், ருத்திராக்ஷமாலை தரித்தவர்களும், திருபுண்டரத்தோடுகூடிய நெற்றியுடையவர்களும், அளவற்ற தேஜஸ் உடைய சிவனுடைய லிங்கார்ச்சனையை தினமும் செய்தவர்களுமான இந்த ரிஷிகள், ஸத்திரயாகமுடிவில், மேருவின் சாரலில், ஸமர்த்தர்களான இவர்கள் சேர்ந்து, ஒருவருக்கொருவர் வெகுகாலம் சிரத்தையுடன் யோஜித்து, முக்தி, முக்தி உபாயம், மோசகர், மோசகபிரதம் இவைகளையறிய, சங்கரனைக்குறித்து சிரத்தையுடன் தவஞ்செய்தார்கள்.

33-40. பரமாத்மாவாயும் ருத்திராயுமுள்ள சிவனுடைய பிரஸாதத்தால் வியாஸ சிஷ்யராயும், மஹா புத்திமானாயும், பௌராணிக சிரேஷ்டராயுமுள்ள ஸூதர் அந்த மஹாத்மாக்களின் மத்தியில், எல்லாம் அறிந்தவராகையால், தோன்றினர்; அம்முனிகளும் அந்த ஸூதரைப் பார்த்து, எழுந்து, பரபரப்புடனும், ஸந்தோஷத்துடனும், தகைத்த கண்டத்துடனும், பக்தியுடன் அநேகமுறை தண்டஞ்செய்து, பாத பிர்க்ஷாளனம் முதலியவைகளால் சிரத்தையுடன் பூஜைசெய்து, சிறுநேரம் சும்மாவிருக்கும்படி செய்து, பிரஸந்நராயும், கருணாநிதியாயும், ஸர்வக்ஞராயும், ஸகல ஜகத்திற்கும் மோக்ஷத்தைக் கொடுப்பவருமான ஸூதரை முக்கியமான முக்தியையும், முக்தி உபாயத்தையும், மோசகரையும், மோசக பிரதரையும், இன்னும் சிலவற்றையும் குறித்து வினயத்துடன் கேட்டார்கள்; முனிகளின் அவ்வாக்கியத்தைக்கேட்டு முக்

கியமான லோகஹிதத்திற்காக ஸூதபுராணிகர் முக்கண்ணனை ஸாம்பனையும், வேதாந்தங்களை அறிந்தவர்களுள் சிரேஷ்டரான வேதவியாஸரையும் தியானஞ்செய்து, நமஸ்கரித்து, பக்தியால் பரவசமாகி, ஸமஸ்த பூதங்களின் க்ஷேமத்திற்காக சொல்லத் தொடங்கினர்.

## அத்தியாயம் 2.

### (முக்தி பேதங்களைக் கூறுதல்).

**1–8.** ஸூதர்:—ஹே! வேதவித்துக்களில் முக்கியர்காள்! ஸூவிருதர்களே! (நான் சொல்லுவதை) சிரத்தையுடன் கேளுங்கள்; முன்னொருகாலத்தில் ஸ்ரீமானும், ஸமஸ்த பூதங்களின் க்ஷேமத்தை கருதினவராயும், கிரீடகேயூரம் தரித்தவரும், ரத்ன குண்டலரும், சுவர்ணவஸ்திரம்தரித்தவரும், விசாலமான நேத்திரமுடையவரும், சங்குசக்கிரங்களுடையவரும், குந்தபுஷ்பம்போல் ஆகாரமுடைவரும், எல்லா ஆபரணங்களும் பூண்டவரும், முனிகள் தேவர்கள் கந்தருவர்களால் உபாஸிக்கப்பட்டவருமான நாராயணர் உத்திர கைலாஸம் என்கிற பர்வதங்களில் சிரேஷ்டமான பர்வதமாயும், ஸ்மரித்த மாத்திரத்தில் பாபத்தை நாசஞ்செய்வதாயும், அநேக ஜன்மங்களில் ஸித்தியடைந்து ச்ரௌத ஸ்மார்த்த கர்மங்களில் பிரியமுள்ளவர்களும் மஹா புத்திமான்களான சிவ பக்தர்களாலே மட்டும் அடையக்கூடியதும், பெரியதும், வைதிக மற்றவர்களாலும் பாபிகளாலும் வேதநிந்தனையில் பிரியமுள்ளவர்களாலும் மற்றும் தேவநிந்தனை செய்கிறவர்களாலும் அடையத்தகாததும், அதிமனோஹரமாயும், அநேககோடி கல்பங்களாலும் என்னாலாவது என்குருவாலாவது அல்லது பிரம்ம விஷ்ணு ருத்திரர்களாலாவது அல்லது எந்த வித்வான்களாலாவது வர்ணிக்கமுடியாததுமான பர்வதத்தை அடைந்து, ஸமஸ்த லோகத்திற்கும் ஈசுவரரும் ஹரியாயுமுள்ள மஹா விஷ்ணுவானவர் அவ்விடத்தில் மூன்று வருஷகாலம் அதிக கடுமையான தவஞ்செய்தனர்.

**9–24.** பிறகு பக்தபிரயரான ஸமஸ்த உலகங்களில் சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹார காரணராயும், ஸர்வக்ஞராயும், எல்லாம் அறிகிறவ

ராயும், எல்லாவற்றிற்கும் சாக்ஷியாயும், பரமார்த்தராயும், பரானந்த ராயும், பரஞானகனராயும், அத்வயராயும், சிவராயும், சம்பு, ருத்திரன், பிரஹ்மா, மஹேச்வரன், ஸ்தாணு, பசுபதி, விஷ்ணு, ஈசன், ஈசானன், ஈசுவரன், பரமாத்மா, பரன், பரரன், புருஷன், பரமேச்வரன், புராணன், பரமன், பூர்ணன், தத்வம், பரமான முடிவு, பதி, தேவன், ஹரன், அபஹரிக்கிறவன், ரக்ஷிக்கிறவன், சிருஷ்டிக்கிறவன், புராதனன், மஹாக்ரீவன், மஹாதாரன், புசிப்பவன், ஜகத்தைக்காட்டிலும் மேலானவன், பிரபு, மஹரிஷி, பூதபாலன், அக்நி, ஆகாசன், ஹரி, நாசமற்றவன், பிராணன், ஜ்யோதி, புமான், பீமன், அந்தர்யாமி, ஸநாதனன், அக்ஷரன், தஹரம், அபரோக்ஷன், ஸ்வயம்பிரபு, அஸங்கன், ஆத்மா, சுகதுக்கங்களற்றவன், பிரதயக் ஆத்மாமுதலிய நாமங்களை யுடையவரும், உமையுடன் கூடியவரானவரும், பகவானும், நீலகண்டரும், முக்கண்ணரும், பிரம்மா விஷ்ணு ருத்திரர்களால் எப்பொழுதும் ஹிருதயத்தில் தியானிக்கப்பட்டவரும், ஸர்வாத்மாவும், ஸகல வஸ்துக்களினின்றும் விடுதலையடைந்தவரும், விச்வமூர்த்தியும், விருஷபக்கொடியுடையவருமான பகவான் கேவலம் கிருபையால் விஷ்ணுவை அனுக்கிரகஞ்செய்து, ஹே! பிராமணர்களே! மதுரமான வாக்கால் சொன்னதாவது:—"ஹே! விஷ்ணு! எதற்காக வெகுகாலம் கடுமையான தவஞ்செய்தீர்? உன்னிடத்தில் அத்யந்தம் பிரீதியடைந்திருக்கிறேன்! ஹே! பாபமற்றவரே! அதைச்சொல்லும்." விச்வ ஜகத்மயரான இந்த விஷ்ணு சங்கரரால் இவ்விதம் கேட்கப்பட்டவுடன் மும்முறை வலம்வந்து, தண்டஞ்செய்து, பலமுறை நமஸ்காரஞ்செய்து பக்தியுடன் பரவசமடைந்தார்; ஸாம்பராயும், பரமானந்த கடலாயுமுள்ள சிவனை அந்த புருஷோத்தமன் கண்களால் கழுத்துபரியந்தம் கொஞ்சகாலம் நன்றாக தியானித்து, ஹே! திவிஜசிரேஷ்டர்களே! பரமசந்தோஷத்தால் சங்கரனைத்தவிர வேறு ஒன்றையும் அறியவில்லை; பிறகு விழித்துக்கொண்டு பகவானை கமலக்கண்ணன் ஜகத்பதியாயும், கிருபாமூர்த்தியாயும், ஈசனுயுமுள்ள தேவனை கேட்டதாவது.

விஷ்ணு:—ஹே! பகவன்! சென்றதையும் வருவதையும் அறிந்தவரே! பவானீபதியே! சங்கரா! முக்தியையும், முக்திக்கு உபாயத்தையும், மோசகரையும், மோசகம் அளிப்பவரையும், மற்றுமுள்ளதையும் சிரத்தையுடனிருக்கிற எனக்குச் சொல்லும்.

25–26. ஸூதர்:—இவ்விதமாக ஜகத்காரணரான விஷ்ணுவால் மஹாதேவர் கேட்கப்பட்டு, ஸகலத்திற்கும் ஈசுவரியாயுள்ள உமாதேவியை ஸந்தோஷத்துடன் பார்த்து, புன்சிரிப்புடன் பகவானும், உமாஸகிதனும், ஸமஸ்த தேவர்களுக்கும் ஈசனுமான ஹரன் விஷ்ணுவைப்பார்த்து ஹே! முனிசிரேஷ்டர்களே! சொன்னதாவது.

27. ஈசுவரன்:—க்ஷேமம்! க்ஷேமம்! ஹே! மஹாவிஷ்ணு! ஜகத்திற்கு க்ஷேமகரமானது உம்மாற் கேட்கப்பட்டது; அதைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன்; சிரத்தையுடன் கேளும்.

28–35. ஹே! ஸமர்த்தரே! வேதாந்தங்களில் முக்தி அநேக பிரகாரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது; ஒன்று ஸாலோக்கிய ரூபமென்றும், இரண்டாவது ஸாமீப்பிய ரூபமென்றும், மூன்றாவது ஸாரூப்யமென்றும், நான்காவது ஸாயுஜ்யரூபமென்றும், (மற்றும் ஐந்தாவது) சுகதுக்கமற்றதாயும், ஆறு விகாரங்களற்றதாயும் (உண்டாகிறது, இருக்கிறது, பரிணமிக்கிறது, விருத்தியாகிறது, குறைகிறது, நசிக்கிறது என்று ஆறு பாவவிகாரங்களற்றதாயும்), நல்லது கெட்டது அற்றதாயும், ஸர்வ த்வந்த நிர்முக்தமாயும், ஸத்ய விக்ஞான ரூபமாயும், கேவலம் பிரம்ம ரூபமென்று சொல்லப்பட்டதும், எப்பொழுதும் சுகலக்ஷணமுள்ளதும், விலக்கல் கூடுதலற்றதாயும், காணப்படாததாயும், கேட்கப்படாததாயும், ருசிக்கக்கூடாததாயும், யுக்திக்கெட்டாததாயும், ஸர்வ ஆவரண நிர்முக்தமாயும், அறிவுக்கெட்டாததாயும், பிடிப்பற்றதாயும், வாச்சிய வாச்சக நிர்முக்தமாயும், லக்ஷிய லக்ஷணமற்றதாயும், எல்லா பிராணிகளுக்கும் ஸாக்ஷாத் ஆத்மபூதமாயும், ஸ்வயம்பிரகாசமாயும், எப்பொழுதும் பரமார்த்தமாக பிரதி பந்தங்களற்றதாயும், தன்மாயையால் விசார தசையற்றபொழுது கட்டுப்பட்டதாயும்,

முக்கியமாயுமுள்ள இந்த முக்தி வேதமறிந்தவர்களால் பரமா முக்தியென்று சொல்லப்படுகிறது.

36. (முன்கூறிய நான்கு) மற்ற எல்லா முக்திகளும் கீழ்ப் படி என்றும், பிறப்பு இறப்படன் கூடியதென்றும், ஏற்றத்தாழ்வு உள்ளதென்றும், எப்பொழுதும் அஸூயையுடன் கூடியதென் றும், பரதந்திரம் என்றும் சொல்லப்படுகிறது.

37–39. இம்முக்திகளில் சுகம் ஜாஸ்தியாகவும் சிரேஷ்ட மாகவுமிருந்தாலும் எப்பொழுதும் துக்கத்துடன் கலந்திருக்கி றது; கிரமமாகப்போகிற அதிகாரிகளுக்கு இவை இளைப்பாறுவ தற்கு இடங்களாகவிருக்கின்றன: அத்தியந்த சித்தசுத்தியடைந்த மனிதர்களுக்கு இம்முக்திகள் போகத்தின் பொருட்டாகின்றன; அவை சுவர்க்கலோகங்கள்போல நச்வரங்கள்; இவை பலவிதமாக பின்னங்கள் என்று ஹே! தாமரைக்கண்ணு! அறி.

40–48. சில சிவஸாரூப்பிய முக்தியென்றும், சில விஷ்ணு ஸாரூப்பியமுக்தியென்றும், சில பிரம்ம ஸாரூப்பியமென்றும், சில பிரம்மா விஷ்ணு ருத்திரர்களுடைய கீழ்ப்பட்ட ரூபங்களுக்கு ஸமம் என்றும் சொல்லப்பட்டிருக்கின்றன; சில ஸதாசிவன் ரூபத் திற்கு ஸமம் என்றும், சில மற்றதேவர்களுக்கு ஸமம் என்றும், சில சிவ ஸாமீப்யமென்றும், சில விஷ்ணு ஸாமீப்பமென்றும், சில பிரம்ம ஸாமீப்யமென்றும், சில அவர்களின் அம்ச ரூபங்களுடைய ஸாமீப்யமென்றும், அவ்விதமே சிவ ஸாலோக்பம், விஷ்ணு ஸா லோக்யம் பிரம்மஸாலோக்கியம் என்றும், இவர்களுடைய அம்ச ரூபங்களின் ஸாலோக்கியமென்றும் அநேகவிதமான முக்திகள் உளவென்று அறியத்தகுந்தது.

இவைகளில் அசுத்த சித்தமுடையவர்களுக்கு எப்பொழு தும் இச்சையுண்டாகிறது.

சித்த சுத்தர்களான மனிதர்களுக்கு கிரமமுக்தியில் ஆசை யுண்டாகிறது; அவர்கள் உத்தமகதியை யடையவும் அடைகிறார் கள்.

49. அதிக சித்தசுத்தி யடைந்தவர்களுக்கு என் பிரஸா தத்தால் ஹே! ஹரியே! ஸாயுஜ்ய முக்தியில் நன்ருக இச்சை யுண்டாகிறது.

50–51. என்னுடைய பிரஸாதமற்றவர்களுக்கு முக்தியில் இச்சையுண்டாகமாட்டாது; வேதமார்க்க நிஷ்டையுள்ளவர்க ளும், என்பக்தர்களாயுமுள்ள மஹாத்மாக்களுக்கு, முக்தியில் நேராக பிரவிருத்தியடையுமட்டும், சிரத்தையுண்டாகிறது.

அந்த ஸாயுஜ்ய ரூபமாயுள்ள முக்தி சிரேஷ்டமாயும், ஜீவ பரமாத்மாக்களின் ஐக்யரூபமாயுமுள்ளது.

52. பரமார்த்மாக ஐக்யரூபமாயிருந்தாலும் முமுக்ஷுக்க ளுக்கு அக்ஞான நாசத்தால் (இந்த ஐக்கியம்) நன்ருக புலப்படு கிறதென்று வேதாந்த நிர்ணயமாயிருக்கிறது.

53. எவனுக்கு இந்த சிரேஷ்டமான முக்தியானது ஸ்வ பாவமாக விருக்கிறதோ அவனுக்கு 'நான்தான் அது' என்று புலப்படுகிறதென்று என்னுடைய நிச்சயமான கருத்து.

54. எவனுக்கு இநதமுக்தி தனது ஆத்மாவின் விஷயங்க ளெல்லாவற்றையும் விளக்குகிறதாகப் புலப்படுகிறதோ அவனுக்கு பிராரப்தகர்மம் முடியும்வரையில் 'ஜீவன்முக்தன்' என்ற பெயருள் ளது.

55. ஹே! மஹா விஷ்ணுவே! அக்ஞானம் நீங்கியவுடன் ஸ்வதஸித்த ஆத்மாவாயிருக்கப்பட்ட முக்தியின் பிரகாசம் உண் டாகும்பொழுது, பந்தமானது, எரிந்தவஸ்திரம்போல், இல்லாமல் போகும்.

56–62. பிரபஞ்சம் தோற்றுவதால் அவனுக்கு ஜீவனம் (வாழ்வு, ஜீவதசை) நடந்துவருகிறது; அதுவும் பிராரப்த கர்மத் தின் பல போகத்தால் நாசமடையும்பொழுது அந்தப் பிரபஞ்சத் தின் தோற்றமும் நிவர்த்தியாவதில் ஸம்சயமில்லை; எவனுக்கு காணப்படுகிற பிரபஞ்சத்தின் தோற்றம் ஸ்வப்னம்போல் நிவர்த்தி யாகிறதோ அவன் முக்தன் என்பதில் ஸம்சயமில்லை;

முன்கட்டுபட்ட எண்ணத்தை அனுசரித்து அவன் முக்தன் என்று என்னுல் சொல்லப்படுகிறது; ஆனுல் (வாஸ்தவமாக) அவன் முக்தனுமல்ல, பக்தனுமல்ல முமுக்ஷுவுமல்ல, வேறு ஒருவனு மன்று.

இவ்விதமாக ஆத்மாவை ஆத்மாவால் நிச்சயமாக எவன் அறிகிருனே அவன்தான் உத்தமஞானி; மாயையால் கட்டுப்பட்ட மற்றெருருவரும் ஞானி ஆகார்;

'இவ்விதமாக நன்ருக அறிகிறேன்' என்று எவன் சொல்லுகிருனே அவன் மூடன், ஞானவஞ்சகன், என்பதில் ஸந்தேகமில்லை.

முக்தியின் ஸ்வபாவம் வேதாந்தத்தாலாவது, என்னுலாவது, ஸ்வானுபவத்தாலாவது சொல்லமுடியாது; இதில் மௌனமே சரியானது.

இவ்விதமாக ஹே! விஷ்ணு! வெகு சிரத்தையுடன் உனக்கு முக்திசொல்லப்பட்டது; நீரும் சிரத்தையுடன் இஹபர க்ஷேமத்தின் பொருட்டு அறியும்.

63-65. ஸூதர்:—பகவனுகிய விஷ்ணு இந்த உத்தமமான வேதாந்தத்தைக்கேட்டு ஸர்வக்ஞரும், ஸர்வபூதங்களுக்கு நன்மை பயப்பவரும், உமாவோடுகூடிய ஹரனை மும்முறை வலம்வந்து, பக்தியுடன் ஸம்ஸாரத்தை நாசஞ்செய்கிற சிவனை தண்டஞ்செய்து, ஸ்தோத்திரித்து, அந்த மஹாதேவனை பூஜித்தார்.

---

## அத்தியாயம் 3.

### (முக்தி உபாயத்தைச் சொல்லுதல்).

1. ஈசுவரன்:—ஹே! தாமரைக்கண்ண! இப்பொழுது சுருக்கமாக முக்தி உபாயத்தைச் சொல்லுகிறேன்; சிரத்தையுடனும், பக்தியுடனும் அறிந்துகொள்.

2. ஆத்மாவின் முக்கியமான முக்தி ஞானத்தினுல் அல்லாது கர்மத்தால் அன்று; ஞானம் வேதாந்த வாக்கியங்களான 'தத்வமஸி' முதலிய மஹாவாக்கியங்களின் தாத்பரிய நிர்ணயத்தால் உண்டாகிறது.

3. ஹே! தாமரைக்கண்ணு! அவ்விதமாக மகத்தான மனோ விருத்தி உண்டாகுங்கால், விசாரணையால், இந்த ஆத்மாவே பிரம்ம மாக பிரகாசிக்கிறது.

4. இதனாலேயே ஆத்மாவின் அக்ஞானமானது ஆத்மாவி லேயே லயமடைகிறது; அப்படி ஸ்வாத்ம அக்ஞானம் லயமடைந் தால் த்வைதவஸ்து நாசமடையும்.

5. த்வைதவஸ்து நசித்தால் நல்லது கெட்டது என்ற புத்தி நசிக்கிறது; புத்தி நாசத்தால் விருப்பும் வெறுப்பும் நாசமடைகின் றன.

6–7. இவைகளின் நாசத்தால் ஹே! மஹாவிஷ்ணு! தர்ம அதர்மங்கள் நாசமடைகின்றன; தர்மாதர்மங்களின் நாசத்தால் தேகமும், விஷயமும், இந்திரியங்களும் நசிக்கின்றன என்பதில் ஸந்தேகமில்லை; 'ஞாத்வாதேவம்' என்ற ச்ருதி வசனமிருப்பதால்.

லோகத்தில் கடத்தினுடைய அக்ஞானமானது கடஞானத் தால் எப்படி நாசமாகிறதோ அப்படி ஆத்மஞான மாத்திரத்தால் ஆத்மாவின் அக்ஞானம் நசிக்கிறது.

8–10. எப்படி பழுதையின் அக்ஞான நாசத்தால் அதில் தோன்றுகிற ஸர்ப்பம் நாசமடைகிறதோ அப்படியே ஆத்ம அக் ஞான நாசத்தால் ஸம்ஸாரம் நாசமடைகிறது.

ஆகையால் அக்ஞான மூலத்தையுடைய ஸம்ஸாரத்தின் நா சம் ஆத்மதத்வ ஞானத்தால் உண்டாகிறது; அந்த தத்வம் கேவ லம் பிரம்மமே;

எப்படி ஸர்ப்பம் என்கிற இந்த அம்சத்திற்கு கம்பு முதலி யது ஆதாரமோ அப்படியே இந்த ஸம்ஸாரிக்கு கேவலம் பிரம்ம மே ஆதாரம்.

11. 'இதைச் செய்கிறவன்' 'இது செய்யப்படவேண்டியது' என்ற ஞானத்தால் அக்ஞானமூலம் ஏற்படுகிறது.

12–13. அக்ஞானத்தைக் கர்மம் பாதிக்கமாட்டாது; கர்மத் தால் முக்கிய முக்தி ஸித்திக்கும்பக்ஷத்தில் அது ஸ்வர்க்கம்போல்

நசிக்கிறது என்பதில் ஸந்தேகமில்லை; ஆதலால் கர்மத்தால் கோடி கல்பங்களானாலும் முக்திபெற முடியாது.

14. கர்மத்தால் கீழ்ப்பட்ட முக்தி உண்டாகலாம்; அது கேவலம் ஞானத்தால்மட்டும் உண்டாகாது; கர்மமும் இரண்டு விதமாகவிருக்கிறதென்று ஹே! ஸமர்த்தரே! அறி.

15. ஒன்று ஆந்தர கர்மமென்றும், மற்றொன்று பாஹ்யம் என்றும் அறி; வாக்கு காயத்தால் பாஹ்யகர்மமும், மனஸால் ஆந்தரகர்மமும் உண்டாகின்றன.

16. இதில் (ஆந்தர கர்மத்தை) எல்லாம் பரப்பிரம்மமே தவிர வேறொன்றுமில்லையென்று எவன் சிரத்தையுடன் நித்தியம் உபாஸிக்கிறானோ அவன் நல்ல ஞானத்தையடைகிறான்.

17–18. எந்த புருஷன் தேவதேவ ஈசனையும், முக்கண்ணனையும், சந்திரசேகரனையும், உமார்த்த விக்ரஹனையும், சுத்தனையும், நீலகிரீவனையும், மஹேச்வரனையும், குணமூர்த்திகளான பிரம்மா விஷ்ணு மஹாதேவர்களால் உபாஸிக்கத் தகுந்தவரான பரமேச்வரனை உபாஸிக்கிறானோ அவனுக்கும் பரமேச்வரனுடன் ஸம்பந்தப்பட்ட ஞானம் உண்டாகிறது.

19–20. அல்லது சித்தகல்மஷமிருந்தால் சிவஸாரூப்யமடைந்து, மகாபோகங்களை அனுபவித்து, ஈசுவரஞானமடைந்து பரமமான கதியையடைகிறான்.

21–22. எவன் குணமூர்த்திகளில் சிவனை உபாஸிக்கிறானோ அவன் ருத்திர ஸாரூப்யத்தையடைந்து கிரமமாக ஞானத்தால் மோக்ஷமடைகிறான். எவன் ருத்திரனுடைய கீழ்ப்பட்ட மூர்த்தியை சிரத்தையுடன் உபாஸிக்கிறானோ அவன் ருத்திர ஸாரூப்யத்தையடைந்து, அதிக பிரியமுள்ள போகங்களை யனுபவித்து சித்த பரிபாகத்திற்கு தகுந்தபடி சிவஸாரூப்யத்தையும், சிவஞானத்தால் சிவஸாயுஜ்யத்தையும் அடைகிறான்.

23–26. எவன் ஈசனுடைய மிகக் கீழ்படியான மூர்த்தியை உபாஸிக்கிறானோ அவன் ருத்திர ஸாலோக்யத்தையடைந்து

அநேக போகங்களை யனுபவித்து, கிரமமாக ருத்திர ஸாரூபத்தை யும், ருத்திர ஸாமீபத்தையும், ஞானத்தால் ஸாயுஜ்யத்தையும் அடைகிறான்.

அல்லது விஷ்ணுலோகம் முதலியவைகளையடைந்து, அங்குள்ள மகாபோகங்களை யனுபவித்து, புவியில் நல்ல பிராமணர்களின் வம்சத்தில் ஜனிக்கிறான்.

**27–32.** எவன் எப்பொழுதும் சிரத்தையுடன் உன்னை (விஷ்ணுவை) உபாஸிக்கிறானோ அவன் சித்தசுத்தனாய் உன்னை யடைந்து கிரமமாக என்னையுமடைந்து, போகங்களையும் அனுபவித்து, ஞானத்தையடைந்து முக்தியை யடைகிறான்.

அல்லது மனதில் கல்மஷமிருந்தால் விஷ்ணு சாரூப்யமும், சாமீப்யமும் அல்லது ஸாலோகத்தை யடைகிறான். எவன் உன்னுடைய கீழ்ப்பட்ட மூர்த்தியை சிரத்தையுடன் உபாஸிக்கிறானோ அவன் உன்னுடைய ஸாமீப்யத்தையடைந்து கிரமமாக முக்தி யடைகிறான்.

எவன் மிகக் கீழ்படியாயுள்ள உன்மூர்த்தியை உபாஸிக்கிறானோ அவன் உன் ஸாலோக்கியம், ஸாமீப்யம், அல்லது ஸாரூப்யத்தை அடைந்து திரும்பவும் சித்தபரிபாகத்துக்கு தகுந்தபடி என்னையடைந்து ஞானத்தினால் முக்தியடைகிறான்.

அல்லது சித்தத்தில் கலக்கமிருந்தால் பிரமன்முதலிய லோகத்தையடைந்து, அங்கு மகாபோகங்களை யனுபவித்து கிரமமாக பூமியில் ஜனிக்கிறான்.

**33–38.** எவன் தன் ஹிருதயத்தில் பிரமனை அக்ஷமாலை தாரியாகவும், வெண்ணிறமுள்ளவனாகவும், கையில் கமண்டலம் தரித்தவராகவும், வரத அபய ஹஸ்தராகவும், சரஸ்வதியுடன் கூடியவராகவும், ஈசுவரனாகவும் உபாஸிக்கிறானோ அவன் பிரம்ம ஸாரூப்யத்தையடைகிறான்.

சுத்தசித்தனானால் உன்னையடைந்து, பின்பு என்னையும், அடைந்து, அத்வய ஞானமடைந்து அதனால் மோக்ஷமடைகிறான்.

அபக்வசித்தனுயிருந்தால் பிரம்மலோகத்தில் மஹாசுகங்களை யனுபவித்து மிகபுத்திசாலியாக, பூமியில் நல்ல ஆசாரகுலத்தில் ஜனித்து, பூர்வ வாஸனையால் பிரம்மதியானத்தில் முக்தியடைகிருன்.

பிரம்மாவின் உத்கிருஷ்டமான மூர்த்தியை எவன் உபாஸிக்கிருனே அவன் பிரம்ம ஸாமீப்யத்தை யடைகிருன்; இதில் விசாரிக்கவேண்டிய காரியமில்லை.

39–44. அந்த மனிதன் சித்தசுத்தியடைந்து கிரமமாக என்னையடைகிருன்; சித்தசுத்தியில்லாவிடில் கிரமமாக பூமியில் ஜனிக்கிருன்;

பரமேஷ்டியான பிரம்மாவின் மிகக்கீழ்பட்ட மூர்த்தியை உபாஸிப்பவன் ஸாலோகத்தையும், சுத்தனுனல் மோக்ஷத்தையும், அசுத்தனுனல் அதிக துக்கங்களையு மனுபவித்து கிரமமாக பூமியில் ஜனிக்கிருன். எவன் சிரத்தையுடன் எந்த தேவதையையாவது நித்தியம் உபாஸிக்கிருனே அவன் சித்தபரிபாகத்திற்கு தகுந்தபடியும், மூர்த்தியின் உத்கிருஷ்ட பலத்தினுலும் ஸாலோக்கிய முதலிய பதங்களையடைந்து பிற்பாடு பிரம்மபதத்தையும், விஷ்ணு பதத்தையும், உத்தமமாயுள்ள என்பதத்தையுமடைந்து, என்னுல் ஞானத்தையும், அதனுல் இந்த பந்தத்திலிருந்து மோக்ஷத்தையுமடைகிருன்.

அல்லது, அழுக்கடைந்தவனுயிருந்தால் அநேக போகங்களை யடைந்து, பூமியில் ஜனிக்கிருன் என்பதில் ஸந்தேகமில்லை.

45–49. எவன் எல்லா மூர்த்திகளிலும் நான் இருக்கிறதாக அறிந்து பக்தி சிரத்தையுடன் உபாஸிக்கிருனே அவன் அந்த மூர்த்தி உத்கிருஷ்டத்தினுலும், சித்தபரிபாகத்திற்குத் தகுந்தபடி சீக்கிரமாகவாவது,மெதுவாகவாவது, என்னுடைய ஸர்வோத்தமமாயுள்ள உத்கிருஷ்ட மூர்த்தியையடைந்து என்னுல் சிவ ஞானத்தையும், அதனுல் உத்தமகதியையும் அடைகிருன்.

இவ்விதமாகவே கிரமமாக ஹே! விஷ்ணு! பாஹ்யகர்ம கிரமத்தால் என்னையடைந்து சிவஞானத்தையும் அதனுல் முக்தியையுமடைகிருன்.

சுத்தியடையாதவனுயிருந்தாலும் பாஹ்யகர்மத்தால் அங்க்ங்கு ஸாலோக்யாதி பதங்களையடைந்து புண்யகர்மத்திற்கு நாசம் வருங்கால் பூமியில்ஜனித்து திரும்பவும் முன்போல் கர்மத்தைச் செய்கிறுன்.

**50.** பாஹ்ய கர்மத்தால் கிரமமாக கொஞ்சகாலத்தில் முக்தி ஸித்திக்கிறது; ஆந்தரத்தால் சீக்கிரமாக முக்திகிடைக்கிறது.

**51.** எப்படி ஆந்தர உபசாரத்தால் மனிதர்களுக்கு ஸ்திரீகள் பிரியமோ அப்படியே ஆந்தரதியாநத்தால் மனிதர்கள் எனக்கு பிரியமுள்ளவர்கள்.

**52–54.** பாஹ்யகர்மம் ஹே! மஹாவிஷ்ணு! ஞான இச்சையை உண்டாக்கும்;

'இஹைவ' 'நல்ல ஞானத்திற்கு அங்கங்கள் ஆகின்றன' என்று நித்தியமான ச்ருதி கூறிபடிய கர்மங்களை தியாகஞ்செய்தலும், சமதமாதிகளும் அவ்விதமே ஞான இச்சையைப்பயக்கும்.

என் ஸம்பந்நமானதும் உத்தமமான வாராணஸி முதலிய ஸ்தலங்களில் வாஸம்மாத்திரமே மரணத்திற்கு பிறகு திவ்யமான ஞானத்தைக் கொடுக்கும், என்று ஸத்தியமாய்ச் சொல்லுகிறேன்.

**55.** தினந்தோறும் 12000 பிரணவத்தை எவன் ஜபிக்கிருனே அவன் மரணத்திற்குமேல், என் அருளால், என் ஞானத்தை யடைகிருன்.

**56–57.** எவன் பிரணவத்தோடுகூடிய பஞ்சாக்ஷரத்தை தினந்தோறும் 12000 சிரதையுடன் ஜபிக்கிருனே அவன் மரணத்திற்கு பிறகு சிரேஷ்டமான என் ஞானத்தை என்னுல் அடைந்து அதனுல் பரமாகிய முக்தியை யடைகிருன் என்பதில் ஸந்தேகமில்லை.

**58–60.** எந்த மனிதன் சிரத்தையுடன் 'சதருத்திரத்தை' தினந்தோறும் ஜபிக்கிருனே அவன் மரணத்திற்கு பிறகு ஞானமடைந்து அதனுல் பரமகதியை யடைகிருன்.

ஹே! அச்சுத! எந்த பாஹ்யகர்மங்கள் மரணாந்தரம் என்னு டைய ஞானத்தைக் கொடுக்கிறதென்று உனக்கு என்னால் சொல் லப்பட்டதோ அவை நல்ல நடையுள்ளவர்களுக்கேதவிற மற்றவர் களுக்கன்று.

61. சிரத்தை யில்லாமலும் பாபிகளாயு முள்ளவர்களுக்கு ஹே! ஜனார்தனா! சிவக்ஷேத்திர வாஸமே மரணாந்தரம் முக்தி யளிக்கும்.

62–65. பூர்வகாலத்தில் கோலாஹலன் என்ற பெயருடைய ஒரு சூத்திரன், தலை விதியால், காமத்தால் பீடிக்கப்பட்டவனாய் தன் பிதாவைக்கொன்று மாதாவை மோகத்தால் கூட்டிக்கொண்டு ஹே! கேசவ! வேதாரண்யத்தில் தன் இச்சைப்படி சஞ்சரித்து மரணமடைந்தான்; அந்த ஸ்தலத்தில் வாஸஞ்செய்த மாத்திரத்தில் அக்கொடிய மனிதன் தன்பாபத்தைப் போக்கடித்து, சுத்தசித்த னாகி வேதாரண்ய ஈசனான என் பிரஸாதத்தால் வேதாந்த ஞானத் தையடைந்து மோக்ஷத்தையடைந்தான்.

ஆகையால் மோக்ஷ இச்சையுள்ளவர்களுக்கு முக்கியமான சிவக்ஷேத்திரங்களில் என்பக்தியுடன் வஸிப்பதே நலம்.

66. சூதர்:—இவ்விதமாக ஈசனால் சொல்லப்பட்ட புருஷோ த்தமன் அவரை நமஸ்கரித்து மிகபக்தியுடன் மறுபடியும் கேட்ட தாவது.

67. விஷ்ணு:—ஹே! சங்கர! காருண்யமூர்த்தி! வேதா ரண்ய மகாத்மியத்தை கேட்க விரும்புகிறேன்; எனக்கு பகவா னே! அதை இப்பொழுது சொல்லும்.

68–74. ஈசுவரன்:—ஹே! விஷ்ணு! வேதாரண்யத்தின் வைபவத்தை உனக்குச் சொல்லுகிறேன்; அதிக சிரத்தையுடன் ஜகத்திற்கு நன்மையான இதை கேள்!

ஸ்ரீமத் வல்மீகம் என்று பெயருள்ள என் ஸ்தானத்திற்கு தெற்கே ஸமுத்திரக்கரையில் என்பக்தர்களால் எப்பொழுதும் சூழப்பட்டதான ஒரு ஸ்தலம் இருக்கிறது;

முன் சிருஷ்டியில் எல்லாம் லயமடைந்தபோது என்னிடத்தில் நித்தியமாயுள்ள வேதங்களெல்லாம் ஸம்ஸ்காரரூபமாயிருந்து, பூர்வம்போல் கல்பாரம்பத்தில் விமலமான அந்த வேதங்கள் மறுபடியும் என்னிடமிருந்து வெளிப்பட்டு ஸமஸ்தலோக ரக்ஷார்த்தம் சரீரத்தோடு கூடியதாய் சிரத்தையுடன் வேதாரண்யம் என்ற மஹத்தான க்ஷேத்திரத்தையடைந்து, வேததீர்த்தம் என்று பெயருடையதும், ஸமுத்திரத்தில் அரையோஜனை நீளம், கால் யோஜனை அகலமுமுள்ள இடத்தில் பாநுவாரம் பர்வங்களில் ஸ்நானஞ்செய்து வேதாரண்ய நாயகனை பூஜித்தன.

75. உமாபதியான அந்த வேதாரண்ய நாதரும் தேவியுடன் அந்த வேதங்களுக்கு பிரஸாதம் அளித்தார்.

76-77. என் புத்திரனுன ஸ்கந்தரும் அந்த மகத்தான தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, வேதாரண்ய நாதரை ஆராதித்து, அவர் பிரஸாதத்தால் மஹாவீர்ய பராக்கிரமமுடைய தாரகாசுரனைக் கொன்று ஸர்வலோகத்திற்கும் சுகத்தைக் கொடுத்தார்.

78-79. இவ்விடத்திலேயே நாரதமுனி பர்வங்களில் ஸ்நானஞ்செய்து வெகு சிரத்தையுடன் வேதாரண்ய நாதனை ஆராதித்து ஸர்வக்ஞான ஸநத்குமாரரிடம் ஸம்ஸாரத்தைப் போக்கடிக்கும் ஆத்மஞானத்தைப் பெற்றுர்.

80-81. இந்த தீர்த்திலேயே ஸ்நானஞ்செய்து யாக்ஞிய வல்கியமுனி பர்வகாலத்தில் காலவேளையில் வேதாரண்ய ஈசுவரனை ஆராதித்து அவர் பிரஸாதமாத்திரத்தால் சீக்கிரமாக யோகீசுவரரானுர்.

82-84. அப்படியே கார்கியும், மைத்திரேயியும் அந்த வேததீர்த்தத்தில் பர்வகாலத்தில் ஸ்நானஞ்செய்து, லிங்கரூபியான அந்த வேதாரண்ய நாதரை மும்முறை வலம்வந்து, பூமியில் நமஸ்கரித்து, அவருடைய பிரஸாதத்தாலேயே யாக்ஞிய வல்கியரிடம் முக்தியைக்கொடுக்கும் ஞானயோகத்தை யடைந்தார்கள்.

85-86. ச்வேதகேது முனியும் அவ்விடத்தில் ஸ்நானஞ்செய்து வேதாரண்யாதிபதியான ஹரனை மும்முறை வலம்வந்து,

பரமமான பக்தியுடன் தண்டம்போல் நமஸ்கரித்து ஸர்வ ஸம்ஸார காரணமான அக்ஞான நாசத்தைச்செய்யும் ஸாக்ஷாத் ஆத்மஞானத்தை பிதாவான உத்தாலகரிடமிருந்து அடைந்தார்.

**87–88.** வருணனும் இந்த வேததீர்த்தத்தில் பர்வத்தில் சிரத்தையுடன் ஸ்நாநஞ்செய்து வேதாரண்ய மகாதேவரை ஆராதித்து, அவர் பிரஸாதத்தால் ஆத்ம தர்சனமடைந்தார்.

**89–90.** அவர் புத்திரரான பிருகுவும் அந்த தீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்து வேதவேதாந்த நாயகரான வேதாரண்ய ஈசனை வலம்வந்து, சங்கரனை பூஜித்து, அவர் பிரஸாதத்தால் தன் பிதாவினிடமிருந்து பிரம்மாத்ம ஐக்கியத்தை பிரகாசிக்கும் அபரோக்ஷ ஞானத்தை யடைந்தார்.

**91–92.** திருசங்குவும் இந்தவேத தீர்த்தத்தில் பர்வங்களில் ஸ்நாநஞ்செய்து, வேதாரண்ய ஈசுவரனை ஆராதித்து திரடமாயும் ஸர்வதுக்கங்களைப் போக்குவதான பரமஞானத்தை யடைந்தார்.

**93–95.** இந்த அதிசோபனமான வேதாரண்யத்தில், இந்த வேததீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்து, அம்பிகாநாதராகிய ஸ்ரீவேதாரண்ய நாயகரைத் தரிசித்து, பிரதக்ஷினஞ்செய்து, அவர் பிரஸாதத்தால் வெகுபேர்கள் முக்தியடைந்திருக்கிறார்கள்.

**96–98.** இவ்விடத்தில் பூதானஞ்செய்கிறவன் ருத்திரலோகத்தில் மகிமையடைகிறான்; வீடுதானஞ்செய்கிறவன் ஸம்சயமின்றி ருத்திரபதமடைகிறான்; தனதான்யம் கொடுப்பவன் குபேரஸமனாகிறான்; அன்னதானஞ்செய்கிறவன் ரோகமற்றவனாகிறான்; திலதானத்தால் மகாபாபங்களினின்றும் விடுதலையடைவதில் ஸந்தேகமில்லை; கன்யாதானத்தால் பார்வதீலோகத்தை யடைகிறான்; வஸ்திரதானத்தில் ஸந்தேகமின்றி தேவேந்திரனாகிறான்;

**99–101.** விஷு அயனம், சந்திரசூர்ய கிரஹணங்கள், வ்யதீபாதம், பர்வங்கள், ஆர்த்திரா நக்ஷத்திரம், இந்து வாஸரம் முதலான தினங்களில் இந்த வேததீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, எவனொருவன் சிரத்தையுடன் வேதாரண்ய நாயகரை மும்முறை

வலம்வந்து, தண்டஞ்செய்து, தீபதானமும், ஒரு நிஷ்கமாத்திரம் தனமும் சிரத்தையுடன் ஒரு சிவயோகிக்கு கொடுத்து உபவாஸமிருக்கிறானோ அவன் முக்தன் என்பதில் ஸந்தேகமில்லை.

102–105. நல்ல முகூர்த்தத்தில் எவன் இதில் ஸ்நாநஞ்செய்து, மகேசனை தரிசித்து, சிவயோகிகையில் ஒரு பணமாவது சந்தோஷத்துடன் கொடுக்கிறானோ அவன் பிரம்மஹத்தியாதி பாபங்களிலிருந்து விடுதலையடைகிறான் என்பதில் ஸந்தேகமில்லை.

இதில் மரணமடைந்தால் நிச்சயமாக முக்தியடைகிறான்; பக்தியுடன் கூடியவர்களுக்கு ரோகங்களை அபகரிப்பதும், என்னாலும், என்தேவியாலும், என்முக்கிய பக்தர்களாலும் பூஜிக்கப்பட்டதும், போகமோக்ஷத்தைக் கொடுக்கிறதுமாக இந்த ஸ்தலம் இருக்கிறது.

106. ஸர்வவேதாந்த ஸங்கிரஹமான முக்தி உபாயம் என்னால் சொல்லப்பட்டது; ஹே! அச்யுதா! இதை நீ சிரத்தையற்ற மனிதனுக்கு சொல்லக்கூடாது.

107. ஸூதர்:—இந்த மஹேச்ரவனுடைய வாக்கியத்தை ஹரிகேட்டு, ஈசனை நமஸ்கரித்து, வெகு திருப்தியடைந்தார்.

---

## அத்தியாயம் 4.

---

### (மோசக கதனம்).

1. ஈசுவரன்:—இனி இப்பொழுது ஹே! புருஷோத்தம! மோசகனைச் சொல்லுகிறேன்; வேதமொன்றாலேயே சொல்லப்பட்ட இதை சிரத்தையோடும் பக்தியோடும் அறி.

2–7. முன்னொருகாலத்தில் ஸமஸ்தவித்தைகளுக்கு இருப்பிடமாயும், மனோஹரமாயும், அகாரமுதல் க்ஷகாரம்வரையிலுள்ள அதிநிர்மலமாயிருக்கிற அக்ஷரங்களால் ஆக்கப்பட்ட ஸ்வரூபத்துடனும், ஞானமுத்திரையை தரித்தவளும், பரையாயும் அக்ஷமாலை தரித்தவளும், தங்கக் கமண்டலத்தை தரித்தவளும், எல்லா ஞான ரத்னங்களுக்கு இருப்பிடமாயும், புஸ்தகத்தை வைத்துக் கொண்டிருப்பவளும், குந்த இந்து புஷ்பத்திற்கு சமான நிற

முடையவளும், காதில் இரண்டு குண்டலங்கள் அணிந்தவளும், புன்சிரிப்புடனும் அழகுடனும் விசித்திரமான கையாபரணங்க ளால் ஜ்வலித்துக்கொண் டிருப்பவளும், ஜடையோடு கூடினவ ளும், அர்த்த சந்திரனால் சோபிக்கப்பட்ட கிரீடத்தை யுடையவ ளும், தாமரை புஷ்பத்தில் வீற்றிருப்பவளும், நீலமான கழுத் துடையவளும், முக்கண்ணுடையவளும், ஸர்வலக்ஷணங்களும் ஸர்வாபரணங்களும் பொருந்தியவளும், தேவகந்தர்வ ராக்ஷஸர்க ளால் ஸேவிக்கப்பட்டவளுமான ஸரஸ்வதிதேவி பக்தியுடன் என் னை நமஸ்கரித்து இந்த கேள்வி கேட்டாள்.

8. நானும் ஹே! புருஷோத்தம! பரமமான கிருபையுடன் எல்லாப் பிராணிகளுக்கும் ஹிதத்தின்பொருட்டு மோசகனை ஸரஸ் வதிதேவிக்கு சொன்னேன்.

9. பிரமன்முதல் ஸ்தாவரம்பரியந்தம் பசுக்கள் என்று சொல்லப்படுகின்றன; அவைகளுக்கு தேவனாயுள்ள யான் பதி யானபடியால் என்னை வித்வான்கள் பசுபதி என்று கூறுவார்கள்.

10. இந்த பசுக்களை ஹே! ஸரஸ்வதி! மாயாபாசத்தால் கட் டுகிறேன்; அந்த பசுக்களை எல்லாம் விடுதலைசெய்கிறவன் நானே.

11. என்னையே மோசகன் என்று நித்யமாயும் ஸாத்வீயாயு முள்ள சுருதி சொல்லுகிறது; பிரமாணங்களுக்குள் சுருதி பல முடையதென்று சொல்லப்படுகிறது.

12–13. ஏனெனில் அந்த சுருதிக்கு தன்னாலாவது மற்ற வைகளினாலாவது ஒருக்காலும் தோஷம் ஸம்விக்கிறதில்லை; நேத் திரமுதலான இந்திரியங்களால் உண்டாகும் மற்ற பிரமாணங்க ளுக்கெல்லாம் அவித்தையால் தோஷத்தன்மை இருக்கவே செய் கிறது; அதனால் அவைகளுக்கு வேதவாக்கியத்துடன் விரோத முண்டாகுங்கால் பிராமாண்யம் கிடையாது.

14–16. ஸ்மிருதிகளும், புராணங்களும், பாரதமுதலான தும் ஹே! ஸுந்தரி! வேதத்தை மூலமாகவுடையன; ஆகையால் மூலத்துடன் விருத்தம் வருங்கால் அவைகளுக்கு பிரமாணம் ஸித் திக்கிறதில்லை.

பாஞ்சராத்திரம்முதலிய மார்க்கங்களுக்கு வேதம் ஆதாரமன்று; அவை ஸ்வதந்திரங்கள்; ஆகையால் யோசிக்குங்கால் பிராந்திமூலமாய் இருக்கின்றன; ஆனாலும் இந்த மார்க்கங்களில் எந்த அம்சம் வேதத்துடன் விரோதப்படுகிறதில்லையோ அது சில அதிகாரிகளுக்கு பிரமாணம் என்று சொல்லப்படும்.

**17–19.** வேதமார்க்கத்தினின்று அடியோடேவிலகிய பிராணிகளுக்கு பாஞ்சராத்திரம்முதலிய மார்க்கங்கள் காலகிரமத்தில் உபகாரஞ்செய்யும்; தந்திரங்களை அனுஷ்டிப்பவர்களுக்கு ஹே! தேவி! நான் நேரில் காணப்படமாட்டேன்; கொஞ்சகாலத்தில் அந்தந்த தேவதைவழியாக நான் அடையப்படுகிறேன்.

**20.** அதிலும் கர்ம நிஷ்டர்களைக்காட்டிலும் ஞான நிஷ்டர்களுக்கு சுலபமாக காணப்படுகிறேன்; ஞானிக்கும் நான் காணப்படுகிறதில்லை; அவர்களுடைய கேவலம் ஆத்மாவாக நான் இருப்பதால் (நான் வேருக அடையப்படுகிறதில்லை).

**21.** ஆத்மரூபமாயுள்ள நானே எல்லோருக்கும் ஸம்ஸார மோசகனுயிருக்கிறேன்; என்னைவிட வேருெருவரும் இல்லை; 'மனிதன் அறியாதவனன்று' என்று நித்தியமான ச்ருதிசொல்லுகிறது.

**22.** ஸாம்பனுயும் ஈசனுயுமுள்ள என்னைத்தவிர வேறு மோசகன் கிடையாது; நான் ஸம்ஸாரத்தை யடைந்தவனல்ல; ஸ்வபாவமாக ஸர்வக்ஞனுயிருக்கிறேன்.

**23.** என்னைக்காட்டிலும் மற்ற ஜீவராசிகள் ஆத்மஞானமற்றவர்களாகவும், மாயையால் சூழப்பட்டவர்களாகவும், எப்பொழுதும் ஸம்ஸாரிகளாகவும், மோச்சியர்களாகவும் (விடுதலைக்குப் பாத்திரமாகவும்) இருக்கிருர்கள்; பிரகிருதியோ கேவலம் ஜடமாகவுமிருக்கிறது. (அதனல் அதுவும் மோசகமாகமாட்டாது).

**24.** ஆகையால் ஸமஸ்த பசுக்களினுடைய ஸம்ஸார மோசகன் நானே; என்னைத்தவிற வேறுபுமான் இல்லை, இது ஸத்யம் என்று சாச்வதமான ச்ருதிகூறுகிறது.

25. ஹே! மஹாவிஷ்ணு! ஜகன்மாதவாயும், வேத ச்வரூபி யாயுமுள்ள ஸரஸ்வதி இவ்விதமாக என் வாக்கியத்தைக்கேட்டு என்னை பக்தியுடன் பூஜித்தாள்.

26. நீயும் அத்யந்த கல்யாணகுணத்தோடும் விசேஷமாக என் பக்தனாயுமிருக்கிறாய்; உனக்குச் ஸமமக இந்த உலகில் ஒருவனும் கிடையாது.

27–28. ஆதலாலே உனக்கு என்னால் ஸம்ஸார மோசக விஷயஞ்சொல்லப்பட்டது; வேதமார்க்கத்தி லிருக்கிறவர்களாயும், தார்மிக்கர்களாயும், அஹங்கார மற்றவர்களாயும், சுத்தர்களாயும் இருக்கப்பட்ட என் பக்தர்களான த்விஜர்களுக்கு என்னால் சொல்லப்பட்ட அர்த்தத்தை நீ உபதேசிக்க வேணுமேயன்றி மற்றவர்களுக்கு உபதேசிக்கக் கூடாது.

29. ஸூதர்:—புருஷோத்தமன் இதைக்கேட்டு, ஆதியாயும், உமாஸஹாயனும், வெண்ணிறமான சந்திரகலையை சிரஸில் பூஷணமாக தரித்தவராயும், எல்லா தேவர்களாலும் யோகிகளாலும் பூஜிக்கத் தகுந்தவராயும் உள்ளவரை ஸம்ஸார மோசகன் என்று பக்தியுடன் அறிந்தார்.

30. சிரேஷ்டம், தாழ்மை என்ற பேதஞான மற்று, ஸத்யமாயும், நித்தியமாயும், அத்வயமாயும், 'சிவன்' என்ற நாமம் பூண்டதாயும், ஸர்வ நாதனாயும் இருப்பவரை நமஸ்கரித்து, சிஷ்டர்களால் ஆதரிக்கப்பட்டவரும், மங்களத்தை தருவருமான சிவனை சிரத்தையுடன் நல்ல வாக்கால் ஸ்துதித்து, அந்த தாமரைக் கண்ணன் பரவசமானார்.

31. ஹே! முனிசிரேஷ்டர்களே! கேளுங்கோள்! மோசகனையடைய ஸாதகமாயிருக்கிற ஒரு விஷயஞ் சொல்லுகிறேன்.

32–47. முன்னொருகாலத்தில் ஒரு த்விஜசிரேஷ்டர் சிரத்தையுடன் வைதிக கர்மங்களைச்செய்து, அதனால் பாபங்களை தகித்து, சுத்தமனதுடன் கூடியவராய், ஜனன மரணங்களுக்கு மிகப் பயந்து கிரமமாக எல்லா தேவர்களும் தன் ஸம்ஸாரத்தை மோசகஞ்செய்வார்கள் என்று நினைத்து பூஜித்தார்; அவர்களும் ஜனன

மரணங்களோடு கூடியவர்களென்று விசாரணையினால் அறிந்து, அவர்களை நீக்கி, பகவானையும், முக்கண்ணனையும், தொங்குகின்ற ஜடாமுடிகளுடன் கூடியவராயும், சந்திரசேகரனும், நீலகண்டரும், சரத்கால சந்திரகிரணம்போன்ற வெண்ணிறமுள்ளவனும், பசுவின் பாலைப்போன்ற வெளுத்த ஆகாரமுள்ளவனும், சந்திர பிம்பம்போன்ற முகத்தையுடையவனும், புன் சிறிப்போடும் ஸந்தோஷத்தோடு கூடியவனும், தன் ஆத்மதத்வத்திலேயே முக்கியமாக இருக்கப்பட்டவனும், கங்காதரனும், மங்களகரனும், சாந்தமூர்த்தியும், ஸர்வாபரண பூஷிதரும், ஸர்வ லக்ஷணங்களோடு கூடினவரும், வீராஸனத்தில் வீற்றிருப்பவரும், வேதமாகிய யக்ஞோப வீதத்தை தரித்தவரும், பஸ்மதாரையால் மனோக்கியராயுள்ளவரும், நாகாபரண பூஷிதரும், புலித்தோலை யணிந்தவரும், சுத்தரும், ஸூக்ஷ்மமான யோகபட்டத்துடன் கூடியவரும், எல்லா பிராணிகளின் ஆத்மாவிலிருக்கிற அக்ஞானமாகிற அபஸ்மார வியாதியினுடைய பின்பாகத்தை மிதித்துக்கொண்டிருக்கிற (தன் இடது) காலையுடையவரும், தெளிவான ஞானமுத்திரையை உடையவரும், ஹரனும், ஸமஸ்த ஞானரத்னங்களுக்கெல்லாம் இருப்பிடமான புஸ்தகத்தை கையில் வைத்துக்கொண் டிருப்பவரும், ஸகல தத்வங்களாகிற அக்ஷமாலையையும் கமண்டலத்தையும் உடைத்தானவரும், ஸ்வரூபமாயுள்ள பரமானந்தமாகிற பராசக்தியை பாதி சரீரமாக உடைத்தானவரும், தர்மரூபமான விருஷப வாகனத்தோடு கூடியவரும், தர்மிகர்களாலும் வேதத்தின் கரையைக் கண்டவர்களுமான முனிகளால் சூழப்பட்டவரும், மனோஹரனும், ஸமஸ்த வித்தைகளுக்கு ஈசனும், ஈச்வரர்களுக்கெல்லாம் ஈச்வரனும், நாசமற்றவரும், பிறப்புமுதலியவைகளினின்று அடியோடே நீங்கியவரும், ஓங்காரமென்ற தாமரைப்பூவில் வீற்றிருப்பவரும், தன் ஆத்மவித்தையை அளிப்பதால் எப்பொழுதும் ஸம்ஸாரமோசகரும், ருத்திரனும், மிகக்கிருபையால் எல்லாப் பிராணிகளின் நன்மையில் பிரீதியுள்ளவரும், எல்லா உபாஸகர்களுடைய மனோபீஷ்டத்தைப் பூராவாக அளிக்கப்பட்டவரும், ஜகத்சிருஷ்டி முதலியவைகளுக்குக் காரணருமான தக்ஷிணாமூர்த்தி தேவனை

யடைந்து, மகாபக்தியுடன் அநேகம்தடவை நமஸ்கரித்து, சக்தியானுசாரம் பூஜித்து 'ஹே! ருத்திரனே! உன்னுடைய தெற்கு நோக்கிய முகத்தால் என்னை ரக்ஷியும்' என்று சொல்லி, மறுபடியும் மறுபடியும் அந்த தேவனை பக்தியோடு பூஜித்தார்.

**48–51.** அதன்மேல் மஹாதேவனும் ஈசனுமுள்ள தக்ஷிணாமூர்த்திதேவன் தன் ஆத்மஞானத்தை அந்த விப்ரனுக்கு உபதேசித்து, அவனுடைய ஸம்ஸார பாசத்தை அந்த உமாபதி அறுத்தார்; அநேக ஜந்துக்கள் தக்ஷிணாமூர்த்திப் பிரஸாதத்தால் சிரமமில்லாமல் ஸம்ஸாரத்தினின்றும் விடுதலையடைந்தார்கள்.

நீங்களும் மஹா ஆனந்த ஸ்வரூபமாயுள்ள மஹாதேவனே ஸம்ஸார மோசகன் என்று அறிந்து முக்கியகருத்துடன் பஜிக்கவும்; இவரைப் பூஜிப்பதாலேயே எல்லாம் ஸித்திக்கும் என்பதில் ஸந்தேகமில்லை.

**52.** இதைக்கேட்டு எல்லாத்விஜர்களும் பரம சிரத்தையுடன் அத்புதனும் ஸர்வக்ஞனுமுள்ள ஸூதரை நமஸ்கரித்து பூஜித்தார்கள்.

---

## அத்தியாயம் 5.

### (மோசக பிரத கதனம்).

**1.** ஈசுவரன்:—ஹே! தாமரைக்கண்ணா! இனி உனக்கு மோசக பிரதனைப்பற்றி சொல்லுகிறேன்; அதிக சிரத்தையுடன் கேளும்!.

**2.** ஆசார்யரே ஸம்ஸார மோசகபிரதர் என்று சொல்லப் படுகிறார்; வேதாந்த விசாரத்தால் அடையப்பட்ட ஞானமுடையவன் ஆசார்யன் என்று சொல்லப்படுகிறான்.

**3.** ஹே! புருஷோத்தம! அந்த ஆசார்யனும் அநேகவிதம் என்று அறி; உத்தமன், மத்தியமன், அதமன் என்றும் அறிந்து கொள்.

**4.** எல்லா சாஸ்திரமறிந்தவர்களால் உத்தமன் பிராஹ்மணன் என்றும், மத்தியமன் க்ஷத்திரியன் என்றும், அதமன் வைச்யன் என்றும் சொல்லப்படுகிறது.

**5–7.** அதமன் வைச்யருக்கும் சூத்திரனுக்கும் குருவாவன்; மத்யமன் தன் ஜாதிக்கும், வைச்யனுக்கும், ஊழியஞ்செய்யும் சூத்திரருக்கும் குருவாவன்; உத்தமன் பிராஹ்மணனுக்கும் க்ஷத்திரியனுக்கும், வைச்யனுக்கும், ஊழியஞ்செய்யும் சூத்திரனுக்கும் குருவென்றும் என்னால் சொல்லப்படுகிறது; ஸ்திரீகளுக்கும் சூத்திரர்களுக்கும் குருத்வம் ஒருபொழுதும் கிடையாது.

**8.** வைச்யனுக்கும் க்ஷத்திரியனுக்கும் வித்தையின் உத்கர்ஷபலத்தால் தன்னைவிட மேல்ஜாதிகளுக்கு குருத்வம் உண்டென்று சிலர் சொல்லுகிறார்கள்.

**9–10.** அந்த உத்தம குருவும் ஐந்துவிதமாக ஆத்மஞானிகளால் வகுக்கப்பட்டிருக்கிறான்; பிரஹ்மசாரி, கிரஹஸ்தன், வானப்பிரஸ்தன், யதி, அதிவர்ணாச்ரமி என்றும், அவர்களுள் கிரமமாக மேல்பட்டவர்கள் குருவென்றும், சிரேஷ்டமில்லாதவர்களுக்கு சிரேஷ்டமுள்ளவர்கள் குருவென்றும் சொல்லப்படுகிறது.

**11.** கிரஹஸ்தன், வானப்பிரஸ்தன், யதி இவர்களுக்கு வித்தையின் கௌரவ பலத்தால் பிரஹ்மசாரி குருவாகலாமே ஒழிய வேறுவிதமாக ஆகாது.

**12.** கிரஹஸ்தன்கூட வித்யோத்கர்ஷ பலத்தால் வானப்பிரஸ்தனுக்கும் ஸந்யாஸிக்கும் குருவாகலாமேதவிற வேறுவிதமாக ஆகான்.

**13.** வானப்பிரஸ்தனும் வித்யோத்கர்ஷ பலத்தால் ஸந்யாஸிக்கு குருவாவன்; வேறுவிதமாக ஆகான்.

**14.** அதிவர்ணாச்ரமி எல்லா அதிகாரிகளுக்கும் குருவாவான்; நான் எவ்விதம் ஒருவருக்கும் சிஷ்யன் ஆகிறதில்லையோ அப்படி அவன் ஒருவனுக்கும் சிஷ்யன் ஆகிறதில்லை.

**15.** அதிவர்ணாச்ரமி குருக்களுக்கெல்லாம் குருவென்று சொல்லப்படுகிறது; அவனுக்கு ஸமமாவது, மேலாவது இந்த லோகத்தில் ஒருவரும் இல்லையென்பதில் ஸந்தேஹமில்லை.

16-20. எவனொருவன் சரீரம் இந்திரியங்கள் முதலியவை களைக் காட்டிலும் வேறாயும், ஸர்வசாக்ஷியாயும், பரமார்த்தமான ஞான சுகமாயும், ஸ்வயம்பிரகாசமாயுமிருக்கிற ஆத்மாவான பர தத்வத்தை அறிகிறானோ அவன்தான் அதிவர்ணாச்ரமியாவான்.

எவன் வேதாந்த மஹாவாக்கிய சிரவணத்தினாலேயே ஆத் மாவை ஈசுவரனாக அறிகிறானோ அவனே அதிவர்ணாச்ரமி ஆவான்.

எவன் மூன்று அவஸ்தைகளில்லாததும், மூன்று அவஸ்தை களுக்கு சாக்ஷியாயுமுள்ள மஹாதேவரை அறிகிறானோ அவன் தான் அதிவர்ணாச்ரமியாவான்.

வர்ணாச்ரமங்கள் மாயையால் தேகத்தில் கல்பிக்கப்பட்டிருக் கின்றனவென்றும், ஞானரூபமாயுள்ள தன் ஆத்மாவில் அவை இல்லையென்றும் வேதாந்தங்களால் அறிகிறவன் அதிவர்ணாச்ரமி யாவான்.

21-23. சூர்யனுடைய ஸந்நிதியில் எப்படி ஜனங்கள் தாங் களே சேஷ்டைசெய்கிறார்களோ அப்படி என் ஸந்நிதியில் ஸகல ஜகத்தும் சேஷ்டிக்கிறது, என்று வேதாந்தத்தால் அறிகிறவன் அதிவர்ணாச்ரமியாவான். தங்கத்தில் மாயையால் கழுத்து சங் கிலி, கிரீடம், காப்பு, கைவளை முதலியவை எப்படி கல்பிக்கப்பட் டிருக்கின்றனவோ அப்படி ஜகத் என்னிடத்தில் எப்பொழுதும் கல்பிக்கப்பட்டிருக்கிறதாக எவன் வேதாந்தத்தால் அறிகிறானோ அவனே அதிவர்ணாச்ரமியாவான்.

24-27. சிப்பியில் வெள்ளி எப்படி மாயையால் கல்பிக்கப் பட்டிருக்கிறதோ அப்படி மஹத்முதலான மாயாமயமான ஸகல ஜகத்தும் என்னிடத்திலேயே கல்பிக்கப்பட்டிருக்கிறது என்று எவன் வேதாந்தத்தால் அறிகிறானோ அவனே அதிவர்ணாசிரமி யாவான்.

சண்டாளனுடைய சரீரத்திலும், பசுமுதலியவைகளின் சரீ ரத்திலும், பிராஹ்மண சரீரத்திலும் மற்றும் எல்லாவற்றிலும் தாரதம்மியமாய் இருக்கின்ற இவைகளில் ஆகாசம்போல் எப்பொ ழுதும் வியாபித்துக்கொண்டும், ஸகலஸம்பந்தமு மில்லாமலும்

ஒரே ரூபமாகவிருக்கிற மஹாதேவனே பரமாயும் நித்தியமாயு முள்ள நான் என்று எவன் வேதாந்தத்தால் அறிகிறானோ அவன் தான் அதிவர்ணாசிரமியாவான்.

**28-30.** ஒருவனுக்கு திக்குபிரமை நாசமானாலும் முன் போல் எப்படி திக்குதோன்றுமோ அப்படியே ஞானத்தால் நாச மடைந்திருந்தாலும் ஜகத் எனக்கு தோற்றுகிறது; ஆனால் அது உண்மையல்ல என்று எவன் வேதாந்தத்தால் அறிகிறானோ அவ னே அதிவர்ணாசிரமி.

எப்படி ஸ்வப்ந பிரபஞ்சம் என்னிடத்தில் மாயையால் உண் டாகித் தோன்றுகிறதோ அப்படியே ஜாக்கிரத பிரபஞ்சமும் அந்த ஈசுவரனுடைய மாயையால் உண்டாகி விளங்குகிறதென்று எவன் வேதாந்தத்தால் அறிகிறானோ அவன் அதிவர்ணாசிரமி.

**31.** தனது ஆத்ம தர்சனத்தால் வர்ணாசிரம ஆசாரங்கள் நழுவிவிடுகின்றனவோ அவன் எல்லாவர்ணாசிரமங்களைக் கடந்து ஆத்மாவில் ஸ்திதியுள்ளவன்.

**32.** எந்த மனிதன் தனது வர்ணாசிரமங்களைத் தாண்டி ஆத்மாவிலேயே இருக்கிறானோ அவனை அதிவர்ணாசிரமி என்று எல்லா வேதாந்த முணர்ந்தவர்கள் சொல்லுகிறார்கள்.

**33-34.** (சொல்லப்பட்ட அதிவர்ணாசிரமியின் அனுபவமும் விவரிக்கப்படுகிறது). ஆத்மா தேகமல்ல, இந்திரியமன்று, பிரா ணனன்று, மனஸன்று, புத்தியுமன்று, அகங்காரமுமன்று, சித்த மல்ல, மாயையுமன்று, மேலும் ஆகாசாதி ஜகத்தும் அன்று, கர்த் தாவன்று, போக்தாவன்று, புஜிப்பிக்கிறவனுமன்று; (ஆனால்) உண் மையில் கேவலம் சித்தாயும் ஸதாநந்தமாயுமிருக்கிற பிரஹ்மமே.

**35.** எப்படி ஜலத்தின் அசைவால் அதில் (பிரதிபிம்பித்து) இருக்கிற சூரியனும் அசைவதாகத் தோன்றுகிறதோ அப்படியே அகங்கார ஸம்பந்தத்தால் ஆத்மாவுக்கு ஸம்ஸாரம் தோன்றுகிறது.

**36.** ஆகையால் வேறு பதார்த்தத்தின் குணமாயிருக்கிற வர்ணாசிரமங்கள் ஹே! கேசவ! பிராந்தியினால் ஆத்மாவில் ஆரோ

பிக்கப்பட்டிருக்கின்றன; அப்படியிருக்கிறவர்கள் ஆத்மவித்துக்க ளன்று.

**37.** விதியாவது, நிஷேதமாவது, தள்ளத்தக்கதாவது, தள்ளத்தகாததாவது அப்படியே லோகவியாபாரத்தா லுண்டா கும் வேறு எதாவது ஆத்மஞானிகளுக்கு கிடையாது.

**38.** ஈசுவர ஸம்பந்தமான இந்த ஆத்மஞானிகளின் இருப் பை மாயையால் மோகமடைந்த மாணிடர்கள் ஒருபொழுதும் அறியமாட்டார்கள்.

**39.** இந்த பிரஹ்மவிக்ஞான நிஷ்டை மாம்ஸமயமான கண் ணால் பார்க்கமுடியாது; ஹே! கேசவா! இது வித்வான்களுக்கு தானக ஸித்தமாக விருக்கிறது.

**40.** எந்த தத்வஸ்வரூபத்தில் ஜனங்கள் எப்பொழுதும் உறங்குகிறார்களோ அதில் வித்வான் விழித்துக்கொண்டிருக்கி றான்; எதில் (திருசிய பிரபஞ்சத்தில்) ஜனங்கள் விழித்துக்கொண் டிருக்கிறார்களோ அதில் வித்வான் சுழுப்தனுயிருக்கிறான்.

**41-42.** இவ்விதமாக ஆத்மாவை த்வந்துவமற்றதாயும், விகல்பமற்றதாயும், களங்கமற்றதாயும், நித்தியமாயும், சுத்தமா யும், ஆபாஸமற்றதாயும், ஞானமாத்திரமாயும், அமிருதமாயும் எவன் வேதாந்தத்தாலும், தன் அனுபத்தாலும் நிச்சியத்து அறி கிறானே அவனுக்கு அதிவர்ணாசிரமி என்று பெயர்; அவனே உத்தம குரு.

**43-44.** அவன்தான் வேதவித்தமன்; அவனே மோசக பிரதன்; அவனே ஸர்வகாரணன்; அவனே ஸத்தியமாயும் சை தன்யக் கட்டியாயுமிருக்கிறான்; அவனே உயர்ந்த முக்தி; அவன் தான் எல்லோருக்கும் முக்தியளிப்பவன்; அவன்தான் எல்லாம் என்று சொல்லப்படுகிறது.

**45.** இவ்விதமாக எல்லா வேதங்களாலும் ஸித்தித்த உண் மையானது, பரமகிருபையால், பிரார்த்தித்த உனக்காக், ஸகல முனி தேவதை மனிதர்களுக்கு நேரே முக்தியடைய பரம புரு ஷார்த்தமென்று சொல்லப்பட்டது.

46-50. ஸூதர்:—இதைக்கேட்டு ஜகன்மயனும் பகவானுமுள்ள வாஸுதேவன் பரமாத்மாவான சிவனுடைய பாதங்களை தன் சிரஸில் வைத்து, வேதாந்தத்தால் சொல்லப்பட்டதும் முக்தியைக் கொடுப்பதாயுமுள்ள பிரஹ்மஞானத்தை யடைந்து, மகாபக்தியுடன் பரவசனாய், தகைந்த கண்டத்துடன், பலமுறை நமஸ்கரித்து, நீர்த்தளும்பிய கண்ணுடன் ஈசன் பிரஸாதத்தால் கிருதார்த்தரானார்.

ஹே! த்விஜர்களே! நீங்களும் இவ்விதம் சிரத்தையுடன் மோசகபிரதரை அறிந்து, அவருக்கு எப்பொழுதும் ஸேவை செய்யுங்கோள்!

எவனுக்கு ஈசுவரனிடத்தில் உத்கிருஷ்டமான பக்தியிருக்கிறதோ, தேவரிடத்தில்போல குருவினிடத்திலும் பரமான பக்தியிருக்கிறதோ மஹாத்மாவான அவனுக்கு ஹே! த்விஜர்களே! சொல்லப்பட்ட அர்த்தங்கள் நன்றாக விளங்கும்.

---

## அத்தியாயம் 6.

---

### (ஞான முண்டாகாமலிருப்பதற்கு காரணம்).

1. ஈசுவரன்:—ஹே! கேசவ! இனி இப்பொழுது ஞானம் உண்டாகாததற்குக் காரணஞ்சொல்லுகிறேன்; அவைகளை விலக்குவதற்காக நீ சிரத்தையுடன் கேள்.

2-3. விக்ஞான உத்பத்தியில்லாமலிருப்பதற்கு சிவதுரோகம் மூலகாரணமாகும்; சிவபக்தர்களின் அபராதமும், சிவஞான நிந்தனையும், திருபுண்டர தாரணம் பூசுதலில் துவேஷமும், அதை அனுஷ்டிக்காமல் நீக்குவதும், ருத்திராக்ஷ தாரணமில்லாமலிருப்பதும் ஞானமுண்டாகமலிருப்பதற்கு காரணம்.

4. ஹே! ஜநார்தன! உன் துரோகமும், உன் அடியார்களின் நிந்தனையும், அவர்களின் தனத்தில் விருப்பும் ஞானமுத்பத்தியாகாததற்கு காரணம்.

5. பிரஹ்மத்துரோகமும், அவரடியார்களின் துவேஷமும், அவர்களின் தனத்தில் வாஞ்சையும் ஞான முண்டாகாததற்கு காரணம்.

6. காமம், க்ரோதம், லோபம், மோஹம், டம்பம், சோம்பல், மாத்ஸர்யம் இவை ஞானமுண்டாகாததற்கு காரணம்.

7. தர்மம், அதர்மம், ஈசுவான் இவர்களின் இருப்பில் ஸந்தேகமும், அவைகளில்லை என்ற புத்தியும் ஞானமுத்பத்தி யில்லாமலிருப்பதற்கு காரணம்.

8. ஹே! கேசவ! மாதாவை ரக்ஷிக்காமலிருப்பதும், மாதிரு துரோகமும், மாதாவுக்கு துக்கத்தை யுண்டுபண்ணுவதும் ஞானோத்பத்திக்கு விரோதம்.

9. வேதவேதாந்தங்களில் துவேஷமும், அதைப் படிக்காமலிருப்பதும், பிராஹ்மண அபாதமும் ஞானமுத்பத்தியில்லாமலிருப்பதற்கு காரணம்.

10–11. வேதாங்கங்களில் துவேஷமும், அப்படியே ஸ்மிருதிகளிலும், புராணங்களிலும், பாரதத்திலும் துவேஷமும், அவைகளை படிக்கிறவர்களிடத்தில் துவேஷமும், அவர்களுக்கு பாதை உண்டாக்குவதும், அவர்களின் தனத்தை அபஹரித்தலும் ஞானமுண்டாகாததற்கு காரணம்.

12–21. வைதிகமல்லாத வாமம், பாசுபதம், பாஞ்சாாத்ர முதலிய மார்க்கங்களை கைக்கொள்ளுதலும், சிஷ்டர்களிடத்தில் தூஷணை கல்பித்தலும், சிஷ்டர்கள் ஸங்கமற்றிருப்பதும், சிஷ்டமில்லாத நடத்தையும், கெட்ட ஸம்ஸர்க்கமும், கெட்டவர்களை போஷிப்பதும், கெட்ட நடத்தையும், பிதிரு துரோகமும், பிதிரு ஸேவை இல்லாமலிருப்பதும், பிதாவுக்கு வருத்தமுண்டாக்குவதும், பசுக்களின் இரக்ஷணை இன்மையும், கோஹிம்ஸையும், மாடுகள் சஞ்சரிக்கும் மார்க்கத்தை தடுத்தலும், அவ்விதமே மனித சஞ்சார இடத்தை அடைத்தலும், அவர்களுக்கு பாதைசெய்வதும், அவர்கள் போகுமிடத்தில் முள்ளைப்போடுதலும், மழை காற்று வெய்யில்களால் பாதிக்கப்பட்டு கிருகத்திற்கு வந்தவர்களைத் தடுத்தலும், அவர்களை ரக்ஷியாமலிருப்பதும், கிணறு, தடாகம், குளம் முதலியவைகளுக்குப் போக இடங்கொடாமல் தடுப்பதும், அந்த ஜலத்தைக் கெடுதிசெய்தலும், அவ்விதமாகவே அந்த

ஜலத்தை திருடுதலும், புலி திருடன் முதலியவைகளிலிருந்து பயந்துவந்தவனை ரக்ஷியாமல் இருப்பதும், ஸாதுக்களுக்கு பயத்தையுண்டாக்குதலும், வசியம், ஆகர்ஷணம், துவேஷம், ஸ்தம்பம், உச்சாடனம், அபிசார கிரியைகளைச் செய்தலும் ஞானமுத்பத்தி இல்லாமலிருப்பதற்கு காரணம்.

22-27. சூதாட்டத்தில் காலம் கழித்தலும், நடன ஸங்கீதத்தில் மோகமும், கெட்டவார்த்தை உபயோகப் படுத்துவதும், வர்ணாசிரம சிஷ்டர்களை அவமானப்படுத்துவதும், அவர்களின் ஸேவையில்லாமலிருப்பதும், புத்திரன், மித்திரன், கிரகம், க்ஷேத்திரம், பிராதாக்கள், பந்து ஜனங்களிடத்தில் இன்பமும், குருபாதத்தில் இன்பமற்றிருப்பதும், பக்ஷிக்கக்கூடாததை பக்ஷிப்பதில் சிரத்தையும், அப்படியே பக்ஷிக்கிறதும், அவைகளைத் தொட்டுக்கொண்டிருப்பதும், பரஸ்திரீ தர்சனத்தில் சிரத்தையும், அவர்களைப் புணர்வதில் பிரியமும், அவர்களைப் புணர்தலும், ஸ்வஸ்திரீயைப் பார்ப்பதில் துவேஷமும், அவர்களைப் பாராமலிருப்பதும், அவர்களைத் துன்பப்படுத்தலும் ஞானமுண்டாகாததற்கு காரணம்.

28-36. குருவுக்கு இஷ்டமில்லாததைச் செய்தலும், அவருக்கு இஷ்டத்தை செய்யாமலிருப்பதும், அவர்களின் ஸேவையற்றிருப்பதும், ஈசுவரன், குரு, வேதம், ஞானம் இவைகளில் பக்தி இல்லாமலிருப்பதும், அப்படியே தன் குருவம்சத்தாரிடம் பக்தியற்றிருப்பதும், தன் குருவின்பொருட்டு மகாபக்தியுடன் தன் தேகத்தை அர்ப்பணஞ் செய்யாமலிருத்தலும், மற்றவர்களுக்கு அர்ப்பணஞ்செய்தலும், குருநிந்தையை காதுகொடுத்து கேட்பதும், குருஹிம்ஸையைப் பார்த்துக்கொண்டிருப்பதும், குருவுடன் வாதஞ்செய்தலும், அவரை ஈசுவரன் என்று நினையாமலிருத்தலும் அவரை அலக்ஷியஞ்செய்தலும், அவர் சொல்வதை மறந்துபோவதும், ஆசார்யனிடத்தில் பாலன் என்ற புத்தியும், அப்படியே மனிதன் என்ற புத்தியும், சிஷ்டரல்லவென்ற புத்தியும், அசக்தர்களை ரக்ஷிக்காமலிருப்பதும், அசக்தர்களை அபராதம் செய்தலும், அவர்களை நிந்தித்தலும், ஏழையை நிந்தித்தலும்,

அவனை ஹிம்சித்தலும், அவன் சங்கோசத்தைக்கண்டு சந்தோஷப்படுதலும், ரூபமில்லாதவனை நிந்திப்பதும், அவனை ஹிம்ஸித்தலும், அவனுடைய குரூபத்தில் ஸந்தோஷப்படுவதும் இவையெல்லாம் ஞானமுண்டாகாமலிருப்பதற்கு காரணங்கள்.

37. ஸூதர்:—இவ்விதமாக மஹேசுவரனிடத்திலிருந்து விஷ்ணு ஞானம் உண்டாகாமலிருப்பதற்குள்ள காரணங்களைக் கேட்டு வெகுபக்தியுடன் நமஸ்காரஞ்செய்தார்.

38. நீங்களும் சிவஞான முண்டாகும்பொருட்டு முன்சொன்னவைகளை அடியோடு நீக்கிவிடுங்கள்.

---

## அத்தியாயம் 7.

---

### (குரு ஸேவையின் மகிமை).

1. ஈசுவரன்:—இனி இப்பொழுது உனக்கு நான் ஹே! புருஷோத்தம! வித்வான்களை ஸேவை செய்வதின் பலத்தைச் சொல்லுகிறேன்; சிரத்தையுடன் கேள்.

2. முன்னொருகாலத்தில் பாகயக்ஞன் என்பவனுடைய புத்திரனான சசிவர்ணன் என்ற ஒரு பிராஹமண சிரேஷ்டன் பாபகர்மங்களைச் செய்பவனாயிருந்தான்.

3. அவன் அக்ஞானத்தால் மூடப்பட்ட சித்தத்துடனும், பிரஹ்மஞான தூஷகனாகவும், வேதநிந்தையில் பரனாயும், பிராணி ஹிம்ஸையில் பரனாயும் அதமனாயுமிருந்தான்.

4. அவன் எப்பொழுதும் சிவநிந்தை செய்பவனாயும், எல்லா தேவதா தூஷாதனாகவும், தர்ம நிந்தை செய்பவனாயும், தர்மஞ் செய்பவர்களுக்கு அபராதஞ் செய்பவனாயுமிருந்தான்.

5. வர்ண தர்மங்களை விட்டவனாகவும், ஆசிரம தர்மங்களற்றவனாகவும், மாதாவதை, பிதாவதை செய்பவனாகவும், தனக்கு பலமுள்ளவரையில் பிராதாக்களை துரோகஞ் செய்பவனாயுமிருந்தான்.

6. கோஹத்தி செய்பவனாயும், நன்றியறிதலற்றவனாயும், நாஸ்திக புத்தியால் அதிக கர்வமடைந்தவனாயும், பரஸ்திரீ, பரபொருள்களை அபகரிப்பனாகவும் விஷம் நெருப்பு இவைகளை வைப்பவனாகவுமிருந்தான்.

7. சண்டாள ஸ்திரீக்கு புருஷனாகவும், மதுமாம்ஸ பக்ஷியாகவும், வெகுதைரியத்துடன் மகாபாபங்களைச் செய்துகொண்டு பூமியில் சஞ்சரித்துக்கொண்டிருந்தான்.

8. அந்த மூர்க்கனுடைய பிதிருக்கள் பிரஹ்மலோக ஸ்வர்க்கலோக மடைந்திருந்தாலும் (இவனுடைய பாபகர்மத்தால்) நரகத்தில் வீழ்ந்தார்கள்.

9. சில காலத்திற்கு பிறகு சசிவர்ணனும் வியாதிகளால் பீடிக்கப்பட்டு பிசாசு, அபஸ்மாரம் முதலிய கிரகங்களால் பீடிக்கப்பட்டான்.

10–12. என்னுடைய பக்தனான அவனுடைய பிதாவான பாகயக்ஞன் புத்திரனுடைய கிலேசத்தைக் கேள்விப்பட்டு, பிராணனற்றதுபோல் பூமியில்விழுந்து அதிகதுக்கத்தால் அழுதுகொண்டிருந்தான்.

இதைப்பார்த்து எல்லாமறிந்த தேவபக்தர் என்ற ஒரு முனி கிருபையால் அந்த பாகயக்ஞனைப்பார்த்து ஒரு நல்ல வாக்கியத்தைச் சொன்னார்.

"சிவபிரயனாகிய பாகயக்ஞரே! எழுந்திரும்! எழுந்திரும்! பயப்படவேண்டாம்! உன் புத்திரன் க்ஷேமமடைய ஒரு ஸாதனஞ் சொல்லுகிறேன்."

13–15. சிவனையடைய முக்கிய ஸாதனமாயும், பதினாறு குரோசம் அகலமும் நீளமு முள்ளதானதும், மிகரம்யமாயும் சிரேஷ்டமாயுமுள்ள கோபர்வதத்தில் சிவசக்தியான உமாதேவி கோபர்வத ஈசனை சிரத்தையுடன் பூஜித்து, அந்த பரமேச்வரீயான பவனுசிநீ தன் பெயரையுஞ்சேர்த்து சக்தீசுவரன் என்ற பெயரை அளித்தாள்.

16. பிரஹ்மதேவன் அந்தவிடத்தில் சக்தீசுவரனை பக்தியுடன் சக்தியானுஸாரம் பூஜித்து, அவர் பிரஸாதத்தால் ஜகத்சிருஷ்டியில் சக்திமானானார்.

17–19. அவ்விடத்தில் இந்திரன் சக்தீசுவரரை பூஜித்து தேவர்களுக்கு அதிபதியானான்.

தாரக அஸுரனும் அவ்விடத்தில் சக்தீசுவரரை பூஜித்து பூமியில் பலவானானன்.

ஊர்வசீ அந்த இடத்தில் பூஜித்து இந்திரனுக்கு பிரியமுள்ளவளானள்.

பிரகஸ்பதிதேவன் அவ்விடத்தில் சக்தீசுவரனை பூஜித்து ஸாக்ஷாத் தேவந்திரனுடைய குருவானர்.

20. இந்தவிடத்தில் சுக்கிரன் சக்தீசுவரரை தென்மேற்கில் வந்த ஆர்த்திரா நக்ஷத்திரத்தில் பூஜித்து நேரே அசுரர்களுக்கு குருவானர்.

21. இந்தவிடத்தில் எவனெருவன் பர்வகாலத்தில் சக்தீசுவரரை தர்சித்து தனமாவது வேறு யாதாகிலும் தானஞ்செய்தால் அவன் சிவனையடைகிறான்.

22–25. இதில் புண்யகாலங்களில் சிரத்தையுடன் ஒருவன் பரமேசுவரனை நமஸ்கரித்து சிவனடியார்களுக்கு நல்ல தானஞ்செய்தால் அந்த சக்தீசுவரன் பிரஸாதத்தால் அவன் முக்தியடைகிறான்; அந்த இடத்தில் சக்தீசுவர மஹாதேவனை தரிசித்து ஸந்தோஷத்துடன் தானஞ்செய்தால் நல்ல போகங்களையும் ஜயத்தையும் அந்த மனிதன் அடைகிறான்; அந்தவிடத்தில் சக்தீசுவரனை ஸங்கல்பத்துடன் நித்யம் தரிசித்து அரிசி, மாவு, நெல் இவைகளில் ஏதாகிலும் ஒன்றை ஒரு முஷ்டி மாத்ரம் பிரஹ்மஞானிக்கு தானஞ்செய்தால் அவன் முக்தியடைகிறான்.

26. எல்லா மகாபாபங்களைச் செய்தவன்கூட அங்கு மரணமடைந்தால் அந்த நரன் சக்தீசுவரன் பிரஸாதத்தால் மூக்தியடைகிறான்.

27–34. அந்தவிடத்தில் மகாயோகியாயும், ஸர்வவேதாந்தக் கரைகண்டவரும், மகா ஆநந்தத்தில் மூழ்கியவருமான மஹாகாருனிகர் என்று பெயருள்ள ஒருவர் வஸிக்கிறார்; வேத வித்சிரேஷ்டராகிய அவரை ஹே! பாகயக்ஞ! உன் புத்திரனுடன் அடைந்து, அவரை தரிசித்து, மகாபக்தியுடன் நமஸ்கரித்து, அவருக்கு தினந்தோறும் ஸேவைசெய்துவந்தால் இந்த துக்கம் நிவிருத்தியாகும்.

இவ்விதமாக தேவபக்த முனியால் உபதேசிக்கப்பட்ட பாக யக்ஞன் என்ற பிதா, சசிவர்ணன் என்ற தன் புத்திரனைக் கூட்டிக்கொண்டு வெகு சந்தோஷத்துடன் கோபர்வதம் சென்று சக் தீசுவரரை தன்புத்திரனுடன் பர்வங்களில் தரிசித்து நூற்றெட்டு பிரதக்ஷணங்கள் சிரத்தையுடன்செய்து, அவர் பிரஸாதத்தால் ஸர்வக்ஞராயும், ஜீவன்முக்தராயும், ஜகத்குருவாயும், அதிவர்ணாசிரமியாயும், தீரனும், வெகு ஆனந்தத்தில் மூழ்கிய அந்த மகா யோகியை தூரத்திலிருந்தே பார்த்து, தன் புத்திரனுடன் அடிக்கடி பூமியில்விழுந்து தண்டஞ்செய்து அந்த பாகயக்ஞயன் கை கூப்பி தனது சகல விஷயங்களையும் அவருக்கு அறிவித்தான்.

35–37. ஹே! அச்சுயுத! மகா காருண்யரான அந்த மகா யோகியும் தன் ஆத்மானந்தத்தை தியானஞ்செய்து ஸந்தோஷத்துடன்கூடி அந்த பாபியான சசிவர்ணன் என்ற புத்திரனை நன்ருகப் பார்த்து, பிரஹ்மவித்தையின் பலத்தால் சீஷனாக செய்து கொண்டார்; அவருடைய பார்வையினாலேயே அந்த சசிவர்ணனுடைய சில பாபங்கள் நாசத்தையடைந்தன; அவனை சீஷனாக கிரகித்த காரணத்தால் இன்னும் சில பாபங்களும் விலகியபடியால் அவன் வியாதியற்றவனானன்,

38. மேலும் விரகு, புல், ஜலம், கந்தமூல பலங்களை தினந் தோறுஞ்சேகரித்து சந்தோஷத்துடன் குருவுக்கு கொடுத்துவந் தான்.

39. அவர் பசுமாட்டையும் சசிவர்ணன் சாந்தமனதுடன் காப்பாற்றிவந்தான்; அதனால் அவனுடைய அநேக பாபங்கள் நாசமடைந்தன.

40. மேலும் ஹே! அச்சுயுத! அந்த குருவுக்கு ஸேவையும், கை கால் பிடித்தலும், எண்ணெ தேய்த்தலும், வேஷ்டி துவைத்துப்போடுதல் முதலிய வேலைகளைச் சந்தோஷத்துடன் செய்துவந்தான்.

41. இக்காரணத்தால் சசிவர்ணனுடைய அநேக கொடிய பாபங்கள் நாசமடைந்தன.

42. பிறகு ஸர்வக்ஞரும் மஹாயோகீசுவரருமான அந்த குரு பிரஸன்னராய் பிரியத்துடன் கருணேயோடு தான் புஜித்த உச்சிஷ்டத்தை சசிவர்ணனுக்குக் கொடுத்தார்.

43. அந்த உச்சிஷ்ட அமிருதத்தை பானஞ்செய்ததினுல் எல்லா பாபங்களும் சாந்தமடைந்தவனுய் குருவை ஆதரவுடன் நமஸ்கரித்து எப்பொழுதும் அவருக்கு ஸேவையை உத்ஸாகத்துடன் செய்துவந்தான்.

44-46. பிறகு பிரியத்துடன் கூடிய வித்வானுன அந்த குரு, பாபம் நீங்கியவனும் பரிசுத்த சித்தனுமான சசிவர்ணனே தன் சிஷ்யனுக கிரகித்து வெண்ணிறமான பஸ்மத்தால் அவன் சரீரத்தை பூசி, அவனுக்கு இந்த மகாத்மா வேதாந்தத்தால் நிச்சியக்கப்பட்டிருக்கிற அர்த்தத்தை உபதேசித்தார்; அந்த சிஷ்யனும் என் பிரஸாதத்தால் என்னே பிரத்யக்ஷமாக தன் ஆத்மாவாக அறிந்து முக்தியடைந்தான்

அவனுடைய பிதாவும் என் பிரஸாதத்தால் அதைக்கேட்டு, அந்த ஆச்சரியமான குருஸேவையால் ஞானத்தையடைந்து சீக்கிரத்தில் முக்தியடைந்தான்.

47. இந்த சசிவர்ணனுடைய பிதுருக்களும் இவனுடைய ஆத்மஞானத்தால் நரகத்தினின்றும் மீண்டார்கள்; இவனுடைய வம்சமும் பரிசுத்தமாயிற்று; பூமியும் விசேஷமாய் புண்யவதியாளுள்.

48. அவனுல் முன் அனுபவிக்கப்பட்ட சண்டாள ஸ்திரீயும் ஸ்வர்க்கலோகமடைந்தாள்; இவனுடைய கெட்ட சிநேகிதர்களும் இவன் ஞானபலத்தால் சுவர்க்கலோகத்தை சௌக்கியமாக அடைந்தார்கள்.

49. இன்னும் சந்தோஷத்துடன் உமக்கு ஆச்சரியகரமாயும், பிரஹ்மவித்தாயும், மகாத்மாவான ஸத்குரு ஒருவருக்கு சரீரஸேவை செய்ததினுல் உண்டான மகாபயனேச் சொல்லுகிறேன்; கேளும்.

**50–52.** முன்னொருகாலத்தில் மகாபாபத்தின் பலத்தால் ஸூபகை என்ற ஒரு வேசி முன் தான்வைத்துக்கொண்டிருந்த அநேக பதிகளை அவர்களிடமிருந்து மிகுந்த தனத்தை அபகரிப்பதற்காக கொன்று, அந்தப் பணத்தை எடுத்துக்கொண்டு, தன் பந்து, வேலைக்காரர்கள், புத்திரர்களுடன் மகாசுகத்தை அனுபவித்துவந்தாள்.

பிறகு பெரிய வியாதிகளாலும் பிசாசுகளாலும் பீடிக்கப்பட்டு நித்திரையில்லாமல் தன் வர்க்கங்களுடன் வெகு கஷ்டதசையையடைந்தாள்.

அவளுடைய வீட்டில் ஒரு அதிவித்வான் பசியால் பீடிக்கப்பட்டவனுப் பரவசமாகி பிரவேசித்தான்.

**53–54.** அநேக ஜன்மங்களில்செய்த புண்யகர்மத்தால் தன் வீட்டிற்கு வரப்பெற்ற ஆச்சரியகாமான அந்த பிரஹ்ம நிஷ்டனைப்பார்த்து, பூமியில்விழுந்து, நமஸ்கரித்து, தாமரைப் புஷ்பத்தைப்போன்ற இரண்டு பாதங்களை சீதளமாயும் வாசனையோடு கூடிய ஜலத்தால் கழுவி, அந்த புண்யஜலத்தை சிரத்தையுடன் எடுத்து உட்கொண்டவுடன் அந்த ஸூபகை ஸமஸ்த ரோகங்களினின்றும் பிசாசு பாதையினின்றும் விடுதலைபடைந்தாள்.

**55–56.** வெகு சந்தோஷத்துடன் அந்த ஸூபகை பிராசாந்தராயும் பரமார்த்தத்தை அறிந்தவருமான அந்த மகானுபாவரை வடை முதலிய விசித்திர அன்னங்களால் போஜனஞ் செய்வித்து, சந்தனம், குங்குமம், மெல்லிய வஸ்திரம், வாசனை புஷ்பங்கள், தாம்பூல முதலியவைகளால் பக்தியுடன் ஆராதித்து அந்த பரமாத்ம நிஷ்டனை பிரார்த்தித்தாள்.

**57.** உம்முடைய தரிசனத்தால் எல்லாரோகங்களினின்றும் என் சரீரம் விடுதலையடைந்து நிர்மலமாய் ஆனேன்; ஆகையால் என்னை மரணபரியந்தம் அனுபவித்துக்கொள்ளும்; நான் எப்பொழுதும் தங்களுக்கு ஊழியஞ்செய்து வருவேன்.

**58.** இவ்விதமாக அவளால் நன்றாக பிரார்த்திக்கப்பட்ட பிறகு சந்தோஷத்துடன், தன் பிராரப்த கர்மத்தால் ஏவப்பட்ட அந்த வித்வான் அப்படியே எண்ணங்கொண்டார்.

59. சுபகையும் தினந்தோறும் மிகச் சிரத்தையுடன் தன்னுலும் தன் பணத்தாலும் இயன்றமட்டும் அவரைப் பூஜித்து வந்தாள்.

60. இவ்விதமாக மூன்று வருஷங்கள் அந்த மகாத்மாவுக்கு பூஜைசெய்து, ஞானமடைந்து, அந்த ஸுபகை மோக்ஷமடைந்தாள்.

61. அவளுடைய புத்திரர்கள், பௌத்திரர்கள், சுற்றத்தார், வேலைக்காரர்கள், மாதா எல்லோரும் ஸ்வர்க்க லோகத்தை யடைந்தார்கள்.

62–64. அனேகர் பிரஹ்ம நிஷ்டனை சக்தியானுசாரம் ஆதரித்து, அதனுல் வேதாந்த அர்த்தத்தையடைந்து, முக்தியைக் கொடுக்கும் பிரஹ்மாத்ம ஐக்கிய ஞானத்தை பிரத்யக்ஷமாய் அடைந்து ஸம்ஸார பந்தத்திலிருந்து சீக்கிரம் முக்திபெற்றிருக்கிருர்கள்; எந்தவிடத்தில் எப்பொழுதும் ஞானி வசிக்கிருனே அங்கு நான் எப்பொழுதும் இருக்கிறேன். ஈச்வர ஸம்பந்தமான பக்தர்கள் எங்கு இருக்கிருர்களோ அங்கு தூரமாயிருந்தாலும் சென்று சிரமத்துடனுவது அவர்களைத் தரிசிக்கவேண்டியது.

65. ஹே! ஹரியே! ஒரு நிமிஷமாவது, அதில் பாதியாவது எந்தவிடத்தில் ஞானியிருக்கிருனே அவ்விடத்தில் எல்லாத் தீர்த்தங்களும் இருக்கின்றன வென்பதில் ஸந்தேகமில்லை.

66. எவன் பிரஹ்ம நிஷ்டனுக்கு தெரியாமையினுலாவது தீங்கு செய்கிருனே அந்த மூடன் எனக்கே தீங்கு செய்கிருன் என்பதில் ஸந்தேகமில்லை.

67. ஞானி எப்பொழுதும் ஹே! ஹரி! எனக்கும் உமக்கும் வெகு பிரியனுகிருன்; எப்பொழுதும் எல்லோரும் வெளியிலிருப்பவர்களாகவும், ஞானி எப்பொழுதும் என் ஆத்மாவாகவே இருப்பவனுகவுமிருக்கிருர்கள்.

68. ஆத்ம நிஷ்டனை எனக்கு பின்னமாக எவர்கள் நினைக்கிருர்களோ அவர்கள் மூடர்களே! இதில் விசாரிக்கவேண்டிய காரியம் இல்லை.

69. ஆகையால் ஆத்மவித்துக்கள் விசேஷமாக எல்லோரா லும் பூஜிக்கத்தக்கவர்கள்.

இவ்விதமாக ஸாரபூதமாயுள்ள வேதவேதாந்த வாக்கியங்க ளின் அர்த்தமானது சுருக்கமாய் உனக்கு என்னால் சொல்லப்பட் டது; மற்றவிஷயங்கள் கிரந்தவிஸ்தாரமே.

70. மேதாவியானவன் சாஸ்திரங்களைப் படித்து, அவை களை குருவினிடம் அப்பியஸித்து தானியத்தில் இச்சையுள்ளவன் எப்படி உமியை விலக்கி விடுகிறானோ அப்படி எல்லாக் கிரந்தங் களையும் அடியோடு விட்டுவிடவேண்டும்.

71. பூமண்டலம் ஜலத்தால் நிறைந்திருக்கும்பொழுது தாக முள்ளவனுக்கு ஒரு தடாகம் எவ்வளவு பிரயோஜனப்படுமோ அவ்வளவே அறிந்த பிராஹ்மணனுக்கு எல்லாவேதங்களிலும் பிரயோஜனம். (சத்வ வித்துக்களுக்கு வேதத்தாலாவது அதில் விதிக்கப்பட்ட கர்மங்களிலாவது பிரயோஜனம் ஒன்றுமில்லை).

72–73. கிடைக்க அறிதான மனுஷ்ய சரீரத்தை யடைந்து, அதிலும் பிராஹ்மண சரீரத்தையும் கர்மத்தையுமடைந்து, வே தாந்த சிரவணங்களால் சத்சித் ஆனந்தமாயும், அத்வயமாயும், அதிவர்ணாசிரம ரூபமாயுமுள்ள பிரஹ்மத்தை (தன்னை) எவன் அறியவில்லையோ அந்த மூடன் எப்பொழுதுதான் முக்தியையடை வான்.

74. எப்பொழுது எந்த மனிதன் ஆகாசத்தை தோல்மாதிரி சுற்றிக்கட்ட இச்சிக்கிறானோ அப்பொழுது அவன் சிவனையறியா மல் துக்கத்தின் முடிவை (மோக்ஷத்தை) யடைவான். (அதா வது அடையமாட்டான்).

75. அநேக ஜன்மங்களின் முடிவில் மகா புண்ணியவான் களுக்கு என் பிரஸாதத்தால் வேதாந்த வாக்கிய ஞானம் நன்றாய் உண்டாகிறது.

76. எந்த சரீரத்தில் திருடமான பிரத்யக்ஷ ஞானம் உண் டாகிறதோ அந்த சரீரம் நாசமடையும் வரையில்தான் ஸம்ஸாரத் தோற்றமிருக்கும்.

77. முன்னும் (ஞானத்திற்கு முந்தியும்) பரமார்த்தமாக ஸம்ஸார தர்சனம் இல்லை (விப்பிரம மாத்திரத்தால் தோற்றம்); தேக நாசத்திற்கு பிறகு அந்த தோற்றம் எப்படியிருக்கும்.

78. ஆகையால் என் பிரஸாதத்தால் ஹே! அச்யுத! சுத்தமானதும், முக்தியைக் கொடுப்பதுமான திருட பிரஹ்ம விக்ஞானம் கடைசி சரீரத்தில் உண்டாகிறது.

79. ஸூதர்:—ஹே! த்விஜசிரேஷ்டர்களே! இவ்விதமாக பரமேச்வரரும், வேதஸ்வரூபரும், மனிதர்களுக்கு இஷ்டபலம் அளிப்பவரும், முக்கண்ணரும், உமாஸகரும், கிருபாகரரான ஹரன் உபதேசித்து, பிறகு மௌனமாகவிருந்தார்.

80. அச்சுதனும் இந்த வேதார்த்த முழுவதையும் கேட்டு சந்திரசேகரனுயும், ஹரனுயுமுள்ள சம்புவை நமஸ்காரஞ்செய்து ஆஸ்திகரான அந்த ஹரி அவர் பாதபத்மங்களை இரண்டு கைகளால் சிரஸில் வைத்துக்கொண்டார்.

81-82. சிவனுடைய பிரசாதத்தால் அந்த கேசவன் ஸமஸ்த ஸம்ஸாரத்தினின்றும் விடுதலையடைந்தார். அந்த தேவனும் விஷ்ணுவின்முன் நர்த்தனஞ்செய்து, பிறகு எல்லா தேவர்களால் சூழப்பட்டவராய் புண்டரீகபுரத்தை (சிதம்பரக்ஷேத்திரத்தை)யடைந்து புஷ்ப வர்ஷங்களால் இரவும் பகலும் சந்தோஷத்துடன் பகவான் ஸபாபதி பூஜிக்கப்பட்டார்.

83–84. இவ்விதமாக ஸூதர் வசனத்தைக்கேட்டு வேதவித்தமர்களான முனிகள் ஸர்வக்ஞரும் கருணாநிதியுமான ஸூதரை நமஸ்கரித்து, அவருடைய ஸேவையில் சாந்தமனதுடன் புத்தியைச் செலுத்தினர்கள்.

---

## அத்தியாயம் 8.

### (சிதம்பர க்ஷேத்திரத்தில் தேவர்களுக்கு உபதேசம்).

1. முனிகள்:—ஹே! கிருபாமூர்த்தியே! இவ்விதமாக ஸநாதனரான விஷ்ணு மகேசுவரனிடமிருந்து ஞானத்தை யடைந்த பிறகு என்ன செய்தார்; அதைச் சொல்வீராக.

**2.** ஸூதர்:—நல்ல விருதமுடையவர்களே! கேளுங்கள்! அதைச் சொல்லுகிறேன்; மகாதேவரை நமஸ்கரித்து விஷ்ணு வியாகிரபுரமடைந்தார்.

**3-6.** வைதிக லௌகிக ஸ்துதிகளால் ஸ்தோத்திரஞ்செய்து விடைபெற்றுக்கொண்டு, கருடன்மீது ஏறி, எல்லா தேவர்களால் ஸ்துதிக்கப்பட்டு அந்த மகாவிஷ்ணு வைகுண்டமடைந்தார்.

பிற்பாடு ஸர்வலோகேசனும், சங்குசக்கிர கதாதராயும், ஸ்ரீபதியும் பூபதியுமான ஹரியை, பிரஹ்மாவை முன்னிட்ட தேவர்களெல்லோரும் நமஸ்கரித்து, பரமபக்தியுடன் கைகூப்பியவர்களாக (அடியில் வருமாறு) கேட்டார்கள்.

தேவர்கள்:—ஹே! பகவன்! அச்சுதா! ஈச்வரரிடத்திலிருந்து உம்மால் கேட்கப்பட்ட வைகளையெல்லாம் சுருக்கமாக நாங்கள் கேட்கவிரும்புகிறோம்; எங்களுக்கு சொல்லுங்கள்!.

**7-13.** விஷ்ணு:—உங்களால் கேட்கப்பட்ட விஷயம் எல்லா மனிதர்களுக்கும் உபகாரமாயுள்ளது; ஆனால் அதை நான் சொல்லமாட்டேன்; சிவனே சொல்லுவார்;

நீங்கள் புண்டரீகபுரம் என்று பெயருடையதும், ஸ்வராட் என்ற பெயருடைய ஈசனுடைய ஹிருதய கமலமத்தியிலிருப்பதும், தினந்தோறும் அல்லது பக்ஷந்தோறும் அல்லது மாதந்தோறும், அல்லது ஆறுமாத முடிவிலாவது, வருஷ முடிவிலாவது அல்லது மரணத்திற்கு முந்தியாவது எந்தப் பிராணி சிரத்தையுடன் தரிசிக்கிறானோ அவனுக்கு முக்தியைக்கொடுப்பதுமானதும், சீக்கிரத்தில் பாபத்தைப் போக்கடிக்கிறதும், போகத்தை இச்சிப்பவர்களுக்கு போகத்தை யளிப்பதாயுமுள்ள அந்த முக்கிய ஸ்தலத்தை சீக்கிரமடைந்து, கஷ்டமான தவத்தைச்செய்து, ருத்திராத்யாயமத்தியில் எப்பொழுது முள்ளதும், எல்லாமந்திரங்களுள் சிரேஷ்டமானதும், ஸர்வசக்தியை யளிப்பதுமான ஓம்காரத்துடன் கூடிய பஞ்சாக்ஷரத்தை தினம் லக்ஷமுறை ஜபித்து, ஆகாச ஸபாபதியை தரிசித்து, பிரணவ பஞ்சாக்ஷரத்தால் பூஜிக்கவும்.

**14–23.** உங்களுக்கு கருணாகரரான (அடியில்கண்ட விசேஷணங்களுடன் கூடிய) ஹரன் ஸந்தோஷத்துடன் எல்லா ஞானத்தையும் உபதேசஞ் செய்வார்.

(ஹரனுக்கு விசேஷணங்கள்) உமாபதி; ஆனந்தமகா தாண்டவத்தில் பண்டிதர்; எல்லாவற்றிற்கும் ஆதாரமாயுள்ள (மாயையாகிற) ஆலமரத்தின் நிழலில் உட்கார்ந்திருப்பவர்; பஸ்மதாரி; சந்திரசேகரர்; மனோஹரன்; சந்திரன், சூரியன், அக்னி இவைகளைக் கண்களாகவுடையவர்; சடையுடையவர்; விஷத்தைக் கண்டத்தில் தரித்தவர்; வேதமாகிய எக்ஞோபவீதத்தைத் தரித்தவர்; கங்காதரன்; வரமளிப்பவர்; புன்சிரிப்புடையவர்; நாகபூஷணர்; நீண்ட கைகளையுடையவர்; விசாலமான கண்களையுடையவர்; துந்தபந்தமுடையவர்; ஹாரம், மாலை, கொத்துமாலை, கிரீடம் கைவளை, கால்வளை இவைமுதலியவைகளால் அலங்கரிக்கப்பட்டவர்; பஸ்மதாரையையுடையவர்; குண்டலமணிந்தவர்; பரிசுத்தமான கைகளையுடையவர்; பகவான்; புலித்தோலையணிந்தவர்; கிங்கிணி சத்தத்துடன்கூடிய இடையாபரணமணிந்தவர்; ஸர்வாபரண முடையவர்; ஸர்வலக்ஷணமுடையவர்; பசுவின் பாலுக்கு ஸமமான வெண்மையுள்ளதும் குந்தேந்து புஷ்பத்திற்கு ஸமமான காந்தியையுமுடையவர்; ஸம்ஸாரபயத்தால் அருண்டவர்களுக்கு அபயத்தை யளிப்பவர் (அபயஹஸ்தமுள்ளவர்); மற்றகையால் ஸகல பக்த ஜனங்களை அனுகிரஹிப்பவர்; வேறொரு கையால் நன்றாக டமருக நாதம் உண்டாக்குவர்; இடதுபக்கம் மேல்கையில் நன்றாய் ஜ்வலிக்கும் அக்னியைத்தரித்தவர்; கிருபையாலேயே தன்மாயையாலுண்டான கோரமான அபஸ்மாரத்தை காலால் மிதித்துக் கொண்டிருப்பவர்; தனது ஸ்வரூபமான மகாநந்தத்திலிருப்பவர்; பிரபு;

**24–28.** ஸூதர்:—எந்தவிடத்தில் அம்பிகாபதியும், எல்லோருக்கும் நாயகரான சந்திரமௌளி நர்த்தனஞ்செய்கிறாரோ அந்த புண்டரீகபுரத்தை, ஸந்தோஷத்துடன், ஆஸ்திகர்களான தேவர்களெல்லாமடைந்து, விபூதி பூஷணத்துடன் விருதம் தானம்

தவம் இவைகளைக் கைக்கொண்டு, ஸர்வ ஜகத்பிரியத்தில் ரதர்க ளாய் எல்லாவேத வேதாந்த ஸாரமாயும், அதிசோபனமாயும், பரமமந்திரமமான பிரணவ பஞ்சாக்ஷரத்தை ஜபித்து, அம்பிகேச னை தரிசித்து, பரமகுருவான மகேசுவரனை பக்தியோடுபூஜித்து, மகேசுவரன் என்று பெயருள்ளவரும், சுத்தரும், முக்தி புக்தி யைக் கொடுப்பவரும், சக்தியுடன் கூடியவரும், மந்தஹாஸத்தை யுடையவரும், நித்தியாநந்தரும், நிரன்ஜனரும், அமிருதரும், பிர ஹ்மஞான அனுபவத்தால் எப்பொழுதும் நர்த்தனஞ்செய்பவரும், பக்தியால் அடையக்கூடியவரும், சிரேஷ்டருமான பசுபதியை லௌகிக வைதிக வசனங்களால் பிரஹ்மா இந்திரன் முதலான தேவர்கள் ஸ்தோத்திரஞ் செய்தார்கள்.

**29–32.** எல்லாதேவர்களுக்கும் நாயகரான மகேசுவரன் தனது பார்வையால் ஸமஸ்த பாவங்களை நீக்கி, அனுக்கிரகித்து, ஸமஸ்தவேத சாஸ்திர ஸாரபூதமாயும், உத்தமோத்தமமாயும், முக்தியைக்கொடுப்பதாயும், சிரேஷ்டமாயுமுள்ள தன் நர்த்தனத் தை அந்த மகேசுவரரான நடேசர் ஸமஸ்த தேவர்களுடைய எதி ரில் காண்பிவித்து, எல்லா உலகத்திற்கு ரக்ஷகமாயும் மகாத்மாக் களின் ஹிருதயத்திலிருப்பதுமான அந்த நர்த்தனத்தை, ஈசனு யும் ஸபாபதியாயுமுள்ள அந்த சிவன் அவர்களுக்கு தோற்றும் படிச் செய்தார்.

அந்த பசுபதியின் ந்ர்த்தன தர்சனத்தால் தேவர்கள் வெகு சந்தோஷத்துடன் பரவசர்களாகியும், சேஷ்டையற்றவர்களாகி யும், பரிசுத்தர்களாகியும், திரும்பவும் பிரியமுகத்துடன்கூடிய மகேசுவரனை நமஸ்கரித்து, விநயத்துடன், உமாபதியும், பசுபதி யும், ஸர்வக்ஞரும், ஸர்வேசுவரரும், சசிதரரும், கங்காதரரும், ஸூந்தரருமான பரமேசுவரனை தேவர்கள் சுருதிகதமாயும், ஸம் ஸாரதுக்கத்தை நீக்குவதுமான விக்ஞானத்தைக்குறித்துக் கேட் டார்கள்.

த்வந்துவ மற்றவராயும், சிவனும், குருக்களுக்கெல்லாம் குருவாயுமுள்ள பகவான் கருணைகொண்டு உத்திரஞ்சொன்னார்.

**33.** ஈசுவரன்:—ஹே! தேவசிரேஷ்டர்களே! உங்களுக்கு பரமமாயும் ரகஸ்யமாயுமுள்ள விக்ஞானத்தைச் சொல்லுகிறேன்; சிரத்தையுடன் கவனமாய் கேளுங்கோள்!

**34.** ஹே! தேவர்களே! ஆத்மா என்பது ஒன்று இருக்கிறது; (முக்கிய பிரமாணம் என்னவெனில்) அது தன்னால் அறியத் தகுந்தது; அது நிராதாரமாயிருக்கிறது (இது ஆத்மாவின் அஸாதாரணரூபம்; மாயை அதன் காரியங்களெல்லாம் ஆத்மாஸ்பதம், ஆத்மாவோ தன்மகிமையிலேயே பிரதிஷ்டிதம், வேறு ஆஸ்பதமில்லை); அது ஆனந்தமாயும், பூர்ண சைதன்யமாயும், எப்பொழுதும் நானே அதாகவும் இருக்கிறது; இதில் சந்தேகமில்லை.

(இதில் இருக்கிறது என்பதால் ஆத்மாவின் ஸத்யத்வமும், தன்னாலேயே அறியத்தகுந்ததால் ஞானத்வமும், பூர்ணம் என்பதால் அநந்தத்வமும், ஆனந்த பதத்தால் ஸுகத்வமும், அது நான் என்பதால் பிரத்யக்த்வமுமாகிய ஐந்துரூபம் சொல்லப்பட்டது; இதனால் அநிருத, ஜட, அந்தத்வ, துக்கங்களில் ஆத்ம பிரமத்தைத்தள்ளி அகண்ட ஏகாஸமான ஸ்வரூபம் காட்டப்பட்டதென்று அறியவும்).

**35.** அந்த ஆத்மாவுக்கு மாயை என்று பெயருடைய மோஹத்தை யுண்டாக்குவதான ஒரு சக்தி இருக்கிறது; விசாரிக்குங்கால் அதுவும் ஆத்மாவாகுமேதவிற வேறு ஆகாது.

**36.** ஜகப்பிரளய காலத்தில் அந்த ஆத்மா மாயையுடன் அபேதமாகவே இருக்கிறார்; ஹே! தேவர்களே! அவரிடத்தில் ஸம்ஸ்காரரூபமாக (ஸூக்ஷ்மமாக) இந்தப்பிரபஞ்சம் இருக்கிறது. (இதுவே மறுபடியும் ஜகத் உத்பத்திக்கு பீஜமாயிருக்கிறது).

**37–43.** இந்த வாஸனையும் ஸ்வபாவமாகவே (பரிபாகமடையப்பட்ட) கர்மத்தால் அசைக்கப்படுகிறது (அதாவது, காரியாபிமுகமாகிறது); பிற்பாடு அந்த அசைவுடன்கூடிய ஆத்மா ஸ்வபாவமாகவே தான் விகாரமற்றதாயிருந்தபோதிலும் காலதத்வத்தை அசைத்து, திரும்பவும் காலத்துடன்கூடியதாய், முந்திய கல்பங்களில்போல் பார்வையால் (ஞானத்தால்) பிரஹ்மா முத

லான ஸகல ஜகத்தையும் சிருஷ்டித்து, அதில் பிரவேசித்து, மோகத்தால் ஜ்ஞேய, ஜ்ஞாதா முதலியவைகளுடன் கூடியவனுய் அசுத்தமானதும் ஸ்வப்ன துல்யமாயுமுள்ளதும் மஹத்தானதும் ஆதியந்தமற்றதுமான ஸம்ஸார மண்டலத்தில் ஸ்வதந்திரமற்றவனுகி, கர்மத்திற்கு தக்கவாறு ஸுகதுக்கங்களால் பீடிக்கப்பட்ட விசித்திரமான யோனிகளையடைந்து, பூர்வ ஜன்மத்தில்செய்த புண்ய பாவத்தால் பூமியில் மனுஷ்யனுக ஜனித்து, என் பிரஸாதத்தால் வேதோக்தமான கர்மத்தைச்செய்து, சித்தசுத்தியடைந்து, எல்லாவற்றையும் துக்கத்தை முன்னிட்டதென்றும், அநித்யமென்றும், ஸாரமற்றதென்றும் விசாரித்து விரக்தியடைந்து, மோக்ஷ இச்சையுள்ளவனுய், மகத்தரமாயும் வேதத்தால் காட்டப்பட்ட மோக்ஷஸாதனத்தை என் பிரஸாதத்தால் நன்ருக அடைந்து ஆத்மமாத்திரமாகவிருக்கிற பரமமான முக்தியை தானேயடைகிருன்.

44. எல்லோருக்கும் ஆத்மவிஜ்ஞானத்தாலேயே முக்தியே ஒழிய வேருென்றினுலும் கிடையாது; ஹே! தேவர்களே! ஜ்ஞானத்தைதவிர மற்றதெல்லாம் விஜ்ஞானத்திற்கு ஸாதனங்களாயிருக்கின்றன.

45–46. சாந்தி முதலியவையெல்லாம் இந்த ஜன்மத்திலேயே ஜ்ஞானஸாதனமாகும்; ஹே! தேவர்களே! யோக்கியர்களுக்கும் அயோக்கியர்களுக்கும் மாணத்திற்கு பிறகு சுத்தமான பிரஹ்மவித்தையை யடைவதில், சுத்தமான வாராணஸிமுதலிய என் க்ஷேத்திரங்களில் மரணமடைவது ஸாதனமாகும்.

47. மந்திரங்களுக்குள் ஸ்ரீமத் பஞ்சாக்ஷரமும், மார்க்கங்களில் வேதமார்க்கமும், அடையத்தகுந்தவைகளில் மோக்ஷமும் உத்தமோத்தமமாயிருக்கின்றன.

48. தேவதைகளுள் நான் முக்கியன்; ஸ்தானங்களுள் என் க்ஷேத்திரங்கள் முக்கியமானவை; அவைகளில் வாராணஸி முக்கியம்.

49. ஸ்ரீகாலஹஸ்தியும், விருத்தாசலமும், புண்டரீகபுரமும், வல்மீகபுரமும் உத்தமமானவை.

50. ஹே! தேவர்களே! வேதாரண்யமென்று பெயருள்ள ஸ்தானமும் முக்கியமானது; இவைகளில் வாரணஸி முக்கிய தமமென்று சொல்லப்படுகிறது.

51. ஹே! தேவர்களே! புண்டரீகபுரம் எனக்கு அதிப்பிரியமானது என்றறியுங்கள்; அது மனிதர்களுக்கு சீக்கிரத்தில் புக்தி முக்தியைக் கொடுப்பதும், பக்தியால் யடையக்கூடியதும், எப்பொழுதும் அதிக சோபனமாயுமுள்ளது.

52. ஹே! ஸுரர்களே! எங்களால் அத்புதமான விக்ஞானம் உங்களுக்கு காட்டப்பட்டது; பரமாயும் ஸாத்வியாயுமிருக்கிற சுருதி மோக்ஷத்தின்பொருட்டு மனிதர்களாலும், முனிசிரேஷ்டர்களாலும், ஸர்வார்தத்தை யடைந்தவர்களாலும், என் பக்தர்களாலும் இந்த அதிசோபனமான புரம் (சிதம்பரம்) ஸேவிக்கப்படவேண்டியது என்று சொல்லுகிறது.

53–54. ஸூதர்:—இவ்விதமாக மகேசுவரனும், ஆகாசஸபாபதியும், தேவதேவனும், ஜகந்நாதரும், பசுபாச விமோசகரும், வேதத்தாலேயே அறியத்தகுந்தவரும், எல்லாவற்றிற்கும் எப்பொழுதும் சாக்ஷியாயிருக்கப்பட்டவரும், அம்பிகா ஸஹிதரான ஸ்ரீமான் பரமேசுவரன் உத்தமமான ஞானத்தைச்சொன்னார்.

55–56. தேவர்களும் வேதாந்தத்தால் உண்டாகிறதும், முக்தியைக் கொடுப்பதாயுமுள்ள பிரஹ்மஞானத்தைக்கேட்டு, அந்த சர்வேசுவரனை பூமியில்விழுந்து நமஸ்கரித்து லௌகிக வைதிக ஸ்தோத்திரங்களால் பக்தியுடன் ஸ்துதித்து, ஸ்ரீபஞ்சாக்ஷர மந்திரத்தால் பூஜித்தார்கள்.

---

## அத்தியாயம் 9.

---

### (ஈசுவர நிருத்திய தர்சனம்).

1–3. முனிகள்:—தங்களால் எல்லா விஷயமும் சுருக்கமாகவும் விஸ்தாரமாகவுஞ் சொல்லப்பட்டது; ஹே! புத்திமானே!

தங்களுடைய பிரஸாதத்தால் எங்களாலும் அறியப்பட்டது. தேவதேவராயும், சிவனும், பரமாத்மாவாயும், விச்வத்திற்கு மேலானவராயும், ருத்திரராயும் ஸர்வஸாக்ஷியாயு மிருக்கப்பட்ட பிரஹ்மமாயும், அம்பிகாபதியாயுமான சங்காருடைய நர்த்தனத்தைப் பார்க்கவிரும்புகிறோம்; ஆகையால் கிருபைகொண்டு எங்களுக்கு அதற்கு அத்புதமான உபாயத்தைச்சொல்லும்.

4–5. ஸூதர்:—ஹே! வேதவித்தமர்களே! சிரத்தையுடன் கேளுங்கோள்! அதைச்சொல்லுகிறேன்; முன்னொருகாலத்தில் தீமானாகிய சௌனகமுனி நந்திகேசுவரனைக் கேட்டார்; அந்த ஸ்ரீமான் நந்தியும், கிருபாநிதியான மகாதேவரை நமஸ்கரித்து, சௌனகருக்கு கருணையால் சொன்னார்.

6. நந்திகேசுவரர்:—கைலாஸத்தில் இரண்டு ஸந்தியா காலங்களிலும் சம்பு ஆனந்த நர்த்தனஞ்செய்கிறார். அதை உமை மாத்திரம் பார்க்கிறாள், மற்றவர்கள் அவ்விடத்தில் பார்க்கிறதில்லை.

7. ஹே! சௌனகரே! புண்டரீகபுரத்தில் பகவான் ருத்திரர் ஸ்ரீமத் அப்ரஸபாமத்தியில் ஆனந்த நர்த்தனம் எப்பொழுதும் செய்கிறார்.

8. அவ்விடத்திலும் அம்பாள், ஸ்கந்தர், விக்னேச்வார், க்ஷேத்திரபாலர் இவர்கள் என்னுடன்கூட பார்க்கிறார்கள்; மற்றுமுள்ளோர் பார்க்கிறதில்லை.

9. (ஆனால்) ஹே! சௌனக! எவர்களுக்கு ஈசுரனுடைய பிரஸாதம் ஜாஸ்தியாக விருக்கிறதோ அவர்கள் அவ்விடத்திலேயே ஈசனுடைய மகாநர்த்தனத்தை பார்க்கிறார்கள்.

10–17. ஆகையால் அந்த பிரஸாதத்தையடைய சிரத்தையுடன் புண்டரீகபுரஞ்சென்று, சூரியன் தனுர்ராசியில் வரும்போது ஆருத்திரா நக்ஷத்திர தினத்தில் காலையிலேயே சுத்தமாயிருந்து, தெளிந்தமனதுடன், சிவகங்கையென்ற முக்கிய தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, சக்தியானுசாரம் தனம் தான்ய முதலானதுகளை அஸூயை யில்லாதவர்களுக்குக் கொடுத்து, ஒருதினம்

உபவாஸமிருந்து, ஸ்ரீமூலஸ்தானத்திலிருக்கும் நாயகரை பக்தியுடன் பிரதக்ஷிணஞ்செய்து, பூமியில் தண்டம்போல் விழுந்து நமஸ்கரித்து, சிரத்தையுடன் பதினுயிரம் பஞ்சாக்ஷர மந்திரத்தை ஜபித்து, தினந்தோறுமாவது வருஷமுடிவிலாவது முன்போல் ஸ்நாநஞ்செய்து, மூலஸ்தான நாயகரான தேவனை நமஸ்கரித்து, மேலும் தினந்தோறும் மகாபக்தியுடன் ஸ்ரீமத் தப்ரஸபாபதியை மும்முறை பிரதக்ஷிணஞ்செய்து, தண்டம்போல் நமஸ்கரித்து, முன்போல் பஞ்சாக்ஷரமந்திரத்தை ஜபித்து, வருஷக்கடையில் யதா சக்திதனங்கொடுத்து ஸபாபதிக்கு பூஜையை பஞ்சாக்ஷரத்தால் சிரத்தையுடன் செய்; ஹே! சௌனக! உனக்கு அவர் பிரஸாதம் கட்டாயம் உண்டாகும்.

18. அநேகர் அவர் பிரஸாதத்தால் தேவதேவனுடைய நர்த்தனத்தை அங்கேபார்த்து தங்கள் கோரிக்கைகளை முழுவதையும் யடைந்திருக்கிறுர்கள்.

19–23. ஸூதர்:—இவ்விதமாக நந்திகேசுவாருடைய வார்த்தையை அந்த சௌனகர் கேட்டு சிரத்தையுடன் எல்லாவற்றையும் கிரமமாக அனுஷ்டித்து, அந்த மகேசன் பிரஸாதத்தால் எல்லா சித்தியையும் கொடுக்கிற உமையுடன்கூடிய் நர்த்தனத்தை தப்ரஸபை நடுவில்தரிசித்து, அந்த சௌனகர் வெகு சந்தோஷமடைந்து, ஸ்துதிசெய்து, கொஞ்சநேரம் பக்தியால் பரவசமாகி, திரும்பவும் அந்த நர்த்தனஞ்செய்கிற தேவனுயகனை தரிசித்து, ஸந்தோஷத்தினுல் தானும் தண்ட நர்த்தனஞ் செய்தார்; தேவதேவரும் சௌனகரிடம் ஸந்தோஷமடைந்து கம்பீரமான வாக்குடன் அவருக்கு சொன்னுர் (அடியில் வருமாறு).

24. "ஹே! மகாமுனியே! என் கட்டளையால் வேதங்களுக்கெல்லாம் ஆதியாயிருக்கிற ருக்வேதத்திற்கு, அதிலும் விசேஷமாய் சாகல்ய (சாகை)த்திற்கு நிர்வாஹகனுயிரு;" என்று. (ரிக்வேதத்தில் மகாவிருதத்தில் ஹோதாபிரயோக நிர்வாகஞ் சௌனகரால் செய்யப்பட்டது; சாகல்யர்செய்த பதவிபாகானுஸாரமாய் சௌனகர் ரிக்விதானஞ்செய்தார்).

25. இவ்விதமாக சிவனால் கட்டளையிடப்பட்டு பகவான் சௌனகர் அப்படியே நிர்வாஹஞ்செய்தார்.

26–28. அவருடைய சிஷ்யரான ஆசுவலாயனரும் சௌனகர் வாக்கியத்தால் முற்கூறிய வழியாகவே பகவானும், முக்கண்ணனும், தேவநாயகருமான சிவனுடை நர்த்தனத்தை அந்த தப்ரஸபையில் தரிசித்து, நமஸ்கரித்து, அவர் பிரஸாதத்தால் மேதாவியாகி, சாகல்ய சாகைக்கு ஸூத்திரக்காரர் ஆனார்.

29. இவ்விதமாக முற்கூறிய வழிப்படி பல ஜனங்கள் சிரத்தையுடன் தப்ரஸபாமத்தியில் சங்கரனுடைய நர்த்தனத்தை தரிசித்து, உடனே கிருதார்த்தர்களாகிவிட்டார்கள்.

30. ஆகையால் நீங்களும் முன்சொல்லிய மார்க்கத்தால் உமையால் பார்க்கப்பட்ட சிவனுடைய நர்த்தனத்தை தரிசித்து, மகேசனும், சூலதாரியாயுமான ஹரனுடைய பிரஸாத மாத்திரத்தால் முக்தியடைந்தவர்களாக ஆகுங்கள்.

31. இவ்விதமாக பரமதத்வத்தை யடையத்தக்கவழி என்னால் உங்களுக்குச் சொல்லப்பட்டது; முன்னொருகாலத்தில் குருசிரேஷ்டர்களில் உத்தமராயும், உத்தமகுணங்களுக்கு இருப்பிடமாயும், விஷ்ணு அம்சபூதமாயுமுள்ள வியாஸர் எனக்கு சிரத்தையுடன் இந்த ரகஸ்யத்தைச் சொன்னார்.

32. புராணிக உத்தமரான ஸூதர் முனீந்திரர்களுக்கு இவ்விதம் சொல்லிவிட்டு சிரத்தையுடன் கிருஷ்ணத் வைபாயன வியாஸரை ஸ்மரித்தார்.

33–35. அந்த ஸமயத்தில் ஸ்ரீமானும், மகா காருண்யருள் சிரேஷ்டராயும், மான்தோல் உத்தரீயம் ஆஷாடம் இவைகளால் விளங்கப்பட்டவராயும், வெண்ணிறமான திரிபுண்டிர தாரியாயும், ருத்திராக்ஷமாலை யணிந்தவராயும், பஞ்சாக்ஷரத்தை எப்பொழுதும் ஜபித்துக்கொண்டிருக்கிறவரும், இவ்விதமான சிஷ்யர்களுடன் சூழப்பட்டவரும் மகானுமான வியாஸர் அவ்விடத்தில் தோன்றினார்.

-36-39. ஸூதர் அவரை தரிசித்து, மிகப் ப்ரீதியுடன் பூமியில் தண்டம்போல் விழுந்து நமஸ்கரித்து, தன்னுடைய சிஷ்யர்களான முனிகளுடன் வியாஸருடைய பாதங்களிரண்டையும் தலை, கண், ஹிருதயங்களில்வைத்து (ஒத்திக்கொண்டு), சந்தோஷத்தால் தகைந்த கண்டத்துடன் பாதபிரக்ஷாலனஞ்செய்து, அந்த பரிசுத்த ஜலத்தைப் பானஞ்செய்து, தக்கபடி சிஷ்யர்களோடுகூடிய வியாஸரை நன்ருய்ப்பூஜித்து, அவர் வாக்கியத்தை வேதம்போல் ஸத்தியமென்று தன் சிஷ்யர்களுக்கு அறிவித்து, பின்பு வியாஸர் சூதருடனும் மற்றுமுள்ள எல்லோருடனும் புருஷார்த்தத்தை தருவதான திவ்வியமான வியாக்கிரபுரத்தை யடைந்தார்.

40-46. அதற்குமேல் வேதவியாஸர் முன்னிட்ட எல்லா முனிசிரேஷ்டர்களும் சூரயன் தனுஸில் இருக்கும்பொழுது, ஆர்த்திரா நக்ஷத்திர தினத்தில் சிரத்தையுடன் சிரேஷ்டமான சிவகங்கையென்று பெயருள்ள மகாதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, வித்வான்களான பிராஹ்மணர்களுக்கு சக்தியானுஸாரம் தனத்தைக் கொடுத்து, ஒருநாள் உபவாஸமிருந்து, ஸ்ரீமூலநாதரை மூன்று பிரதக்ஷிணஞ்செய்து, பூமியில் நமஸ்கரித்து, ஆறு அக்ஷரமுள்ள மந்திரத்தால் பதினுயிறந்தடவை ஸ்ரீமூலஸ்தான நாயகரை ஆராதித்து, உத்தமமான பஞ்சாக்ஷர மந்திரத்தை ஜபித்து, ஒரு வருஷமுடிவில் இந்த மகத்தான தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, தானங்கொடுத்து, மூலஸ்தான நாயகரை பூஜித்து, பிறகு தினந்தோறும் ஸபாபதியை நித்தியம் பூமியில் விழுந்து நமஸ்கரித்து, ஷடக்ஷர மந்திரத்தை பதினுயிரம் தடைவைகள் ஜபித்து, வருஷமுடிவில் பிராஹ்மணர்களுக்கு தானங்கொடுத்து, பிரணவ பஞ்சாக்ஷரத்தால் மகேசுவரான ஸபாபதியை அத்யந்தம் சிரத்தையுடன் பூஜைசெய்தார்கள்.

47. அதற்குமேல் பகவான் மகேசுவரன் பிரஸன்னராகி, அந்தமுனீசுவர்களுக்கு நேரில் தென்பட்டு அந்த அம்பிகாபதியும், ஸமஸ்தவேதாந்த ஸபாபதியான சிவன் நர்த்தனஞ்செய்தார்.

48–49. வியாஸர்முதலான வேதவித்துக்களில் சிரேஷ்டர்களான முனிகளெல்லாம் நூறுகோடி கோடிசூர்யர்களின் ஸமான தேஜஸ் உள்ளவரும், வெகு நிர்மலரும், விசால மார்பையுடையவரும், துக்கத்தைபோக்குவருமான ஹரனைப்பார்த்து, அவருடைய பிரஸாதத்துடன் அடிக்கடி பூமியில் விழுந்து நமஸ்கரித்து, பக்தியுடன் ஸ்துதித்து, பரவசர்களாய், சேஷ்டையற்றவர்களாய் பந்தத்தினின்றும் நிவிருத்தியடைந்தார்கள்.

50. அப்பொழுது மிகுதியான புஷ்பவர்ஷமும், ஸ்வஸ்தி வசனம் முதலிய நல்ல வாக்குகளும், பேரிவாத்திய முதலானதுகளால் முழங்கப்பட்ட ஜகத்தும், தேவர்கள், அசுரர்கள், மனிதர்கள் எல்லோரும் ஸந்தோஷமடைந்தார்கள்.

51–54. தேவாசுரர்களும், மனிதர்களும், இன்னும் உத்தமமான வெகுபெயர்களுடன் அப்ஸரஸ் ஸ்திரீகளும் அங்கு வந்திருந்தார்கள்; பகவானும், ஸபாபதியாயுமான சங்கரரும், ஸர்வலோக ஹிதகாமியான அம்பிகையுடன் வேதமந்திரத்தால் ரக்ஷாபந்தனஞ்செய்து, அந்த ஸமஸ்த புவன நாதரும், நீலகண்டரும், முக்கண்ணுடையவருமான பரமேசுவரன் ஸகல ஜனக்கூட்டத்தால் ஸேவிக்கப்பட்டவராய், தன் பக்தர்களாலும், இரண்டு புத்திரர்களாலும், ஆனந்தமுடைய நந்தியாலும் சூழப்பட்டவராய் அந்த மஹோத்ஸவ விநோதத்தின்பொருட்டு அந்த திவ்யமான புண்டரீகபுரத்தை பிரதக்ஷிண கிரமமாக சுற்றிவந்து, சிவகங்கையில் அந்த தாண்டவ மண்டிதரான சம்பு ஸ்நாநஞ்செய்து எல்லாப் பிராணிகளுக்கும் அந்த ஹரன் தீர்த்தம்கொடுத்தார்.

55–57. அவர் ஸந்நிதியில் ஸுராஸுரர்கள் முதலியோர் அந்த சிவகங்கையில் பக்தியுடன் ஸ்நாநஞ்செய்து, சக்தியானுஸாரம் சிவபக்தர்களுக்கு தனம், தான்யம், வஸ்திரம், எள்ளு, பசு, பூமி இவைகளை தானங்கொடுத்து நீலகண்டரான சங்கரனை ஸுரர் முதலியவர்கள் ஸ்தோத்திரஞ் செய்தார்கள் (அடியில் வருமாறு).

58–72. "ஹே! ருத்திர! உம்முடைய கோபத்திற்கு நமஸ்காரம்; உம்முடைய அம்புக்கு நமஸ்காரம்; உம்முடைய பாணங்

கைகளுக்கு நமஸ்காரம்; உம்முடைய சிவமாயும் சாந்தமாயுமுள்ள மூர்த்திக்கு நமஸ்காரம்; நீலகண்ட, ஆயிரங் கண்டங்களுடையவரே, அநேக கைகளையுடையவரே, இச்சைகளை பூர்த்திசெய்கிறவரே, சடைமுடிகளுடன் கூடியவரே, காலரூபரே, உருவின கத்தியுடனிருப்பவரே, சூலபாணியே, ஸ்வர்நத்தை கையில் உடையவரே, ஸ்வர்னபதியே, விருக்ஷரூபியே, பொன்நிறமான கேசத்தையுடையவரே, பசுபதியே, மார்க்கங்களுக்கெல்லாம் பதியே, (வாக், ஞான, சரீர, இந்திரிய, கிரஹ, தனதான்ய முதலிய பத்து) புஷ்டிகளுக்கு பதியே, க்ஷேத்திரங்களுக்கு பதியே, ஜகத்தை ரக்ஷிக்கும்பொருட்டு பாணத்தை தனுஸில் தொடுத்துக்கொண்டிருக்கிற மூர்த்தியே, வனங்களுக்கு பதியே, மந்திரமூர்த்தியே, நின்றுகொண்டு ரக்ஷிப்பவரே, விருக்ஷங்களுக்கு பதியே, மந்திரியாயுள்ளவரே உமக்கு நமஸ்காரம்; பயங்கரமாயுள்ள கக்ஷங்களுக்கு பதியே, இரைச்சலான சப்தத்துடன் செய்யும் ஸ்துதியில் இன்புற்றவரே, படைகளுக்கு பதியே, பெரிய கணங்களுக்கு பதியே, தனங்களுக்கு பதியே, ஸகித்துக்கொள்ளுகிறவரும், சாந்தரும், சங்காருமான உமக்கு நமஸ்காரம்; சரீரவியாதிகளுக்குப் பதியே, மனோவியாதிக்குபதியே, திக்வாஸியே, அம்பாத்தூணியுடன் கூடியவரே, திருடர்களுக்கெல்லாம் பதியே, மோசக்காரர்களுக்கு பதியே, வழிப்பறிசெய்பவர்களுக்கு பதியே, பாபஹாரியே, எங்கும் சுற்றிக்கொண்டு கபடவேஷம் பூண்டு திருடுகிறவர்களுக்கு பதியே உமக்கு நமஸ்காரம்; காடுகளில் திருடி சஞ்சாரஞ்செய்யப்பட்டவர்களுக்கு பதியே, தலைப்பாகுடன் கூடியவரே, பரமாத்மாவே உமக்கு நமஸ்காரம்; விஸ்தாரமாக வியாபித்திருப்பவரே, உட்கார்ந்திருப்பவரே, படுத்துக்கொண்டிருப்பரே, தூங்குகிறவரே உமக்கு நமஸ்காரம்; நன்றாய் விழித்துக்கொண்டிருப்பவரே, ஸ்திரமான பரமாத்மாவே உமக்கு நமஸ்காரம், ஸபாரூபியே, ஸபாபதியே உமக்கு நித்தியம் நமஸ்காரம்; சிவனே, ஸாம்பனே, பிரஹ்மமே, ஸர்வ ஸாக்ஷியே நமஸ்காரம்."

**73.** ஸூதர்:—இவ்விதமாக தேவாஸுரர்களாலும், மற்றுமுள்ளவர்களாலும் சங்கரன் ஸ்துதிக்கப்பட்டு அவர்களுக்கும் மறுபடியும் பிரஸாதமளித்து அங்கேயே மறைந்துபோனார்.

**74.** எந்த மகாத்மாவுக்கு இந்த தீர்த்தத்தின் மாகாத்மியமும், ஸபாபதியின் இந்த ஸ்தானத்தின் மாகாத்மியமும் அறியப்படுகிறதோ அவனுக்கு முக்தி ஸித்தமாயிருக்கிறது.

**75.** எவன் இந்த முக்திகண்டத்தை எப்பொழுதும் படிக்கிருனே அல்லது கேட்கிருனே அவன் ஸபாபதி பிரஸாதத்தால் ஸாக்ஷாத் முக்தியை யடைகிருன்.

**76.** எனக்கு விக்ஞாத்தைக்கொடுத்த குருவான வியாஸருக்கு நமஸ்காரம்; சிவனும், ஸோமனும், ஸாக்ஷியாயுமிருக்கிற பிரத்யக் ஆத்மாவுக்கு நமஸ்காரம்.

மூன்ரும் கண்டம் முற்றிற்று.

---

## நான்காம் கண்டம்.

# யக்ஞ வைபவ கண்டம்.

### பூர்வபாகம்

---

### அத்தியாயம் 1.

---

(ஸர்வ வேதார்த்த பிரசினம்).

**1.** ஈசுவர ஸம்பந்தமாயும், ஆதி அந்த மற்றதாயும், அதி சோபனமாயும், ஸம்ஸார விஷத்திற்கு மருந்தாயுமுள்ள ஸாம்ப மூர்த்தியை ஆதாவுடன் நமஸ்கரிக்கிறேன். (இது வியாஸர் வசனம்).

**2–11.** ஸத்திர யாகத்தின்முடிவில் சிரேஷ்டர்களான ஸர்வ கோத்திர ரிஷிகள் வியாஸ பிரஸாதமடைந்தவரும், ஸகல ஞானக் கடலும், விசுவத்மாவை யறிந்தவரும், பவவனத்தை நேரே அழித்தவரும், உத்தமருமான மகாத்மாவான ஸூதரை ஸ்மரித்து பக்தியுடன் ஸ்தோத்திரஞ் செய்தார்கள்; ரிஷிகளுக்கு விசேஷணங்கள்:—ஸகல வேதார்த்தத்தை யறிவதில் ஆயத்தர்களும், ஸர்வ லோக ஹிதத்தை கருதியவர்களும், இது ஸாரம் இது அஸாரம் என்ற பகுத்தறிவுடையவர்களும், வேதாத்தியயநத்திலிருப்பவர்களும், கவலையற்றவர்களும், நல்ல நிச்சயத்துடன் கூடியவர்களும், எல்லா துக்கங்களினின்று நீங்கியவர்களும், சத்துருக்களற்றவர்களும், சிரமத்துடன் வந்த அதிதிகளுக்கு பிரியமான வார்த்தை யளிப்பவர்களும், ஸ்நேகபாவம், கருணை இவைகளுடையவர்களும், கெட்ட புத்தியுள்ளவர்களை தள்ளிவிடுகிறவர்களும், அன்னியர்களுடைய செழுப்பில் ஸந்தோஷமுடையவர்களும், ஞான கர்வமற்றவர்களும், கோக்களை ஆதரிப்பவர்களும், குரு ஸேவையில் பிரியமுள்ளவர்களும், விருத்தஸேவையில் பிரியமுள்ளவர்களும், வேதவித்துக்களின் பூஜையில் பிரியமுள்ளவர்களும்,

நேர்மார்க்கத்திலிருப்பவர்களும், மிருதுவான நடத்தையுடைய வர்களும், கவலையற்று சுகதுக்கங்களற்றவர்களும், ருத்திராக்ஷ மாலையணிந்தவர்களும், ஜடாவல்கலத்துடன் கூடியவர்களும், நித்யம் சிவலிங்க பூஜையில் கவனமுள்ளவர்களும், திருபுண்டரதாரிகளும், அளவற்ற காந்தியுடையவர்களும், சிவனிடத்தில் அபிமானமுள்ளவர்களும், சிவபக்தர்களும், சிவ சப்த ஜபத்தால் பாபங்களை விளக்கியவர்களும், ஸம்ஸார விஷவிருக்ஷத்தின் மூலமான அக்ஞானத்தை நீக்குவதில் கவனமுள்ளவர்களும், சிரௌத ஸ்மார்த்த நல்ல ஆசாரங்களை யுடையவர்களுமான ரிஷிகள்.

**12–15.** இச்சமயத்தில் ஸ்ரீமானும், வெகு கருணையுடையவரும், ஸர்வக்ஞரும், ஸகல ஜகத்திற்கும் இஷ்ட பலத்தை யளிப்பவரும், பிரபுவுமான மகாதேஜஸுடன் கூடிய ஸூதர், இரவில் சூரியன் உதித்தாற்போல, அவர்களின் மத்தியில் தோன்றினர்.

அவரைப்பார்த்து எல்லாமுனிகளும் தகைந்த கண்டத்துடன் பூமியில்விழுந்து நமஸ்கரித்து, முக்கிய ஆஸனத்தில் உட்காரச்செய்து, சிரத்தையுடன் பாதங்களைக் கழுவி, அந்தப் புண்ணியவானை சந்தனம் புஷ்பங்களால் பூஜித்து, கொஞ்சநேரம் இளைப்பாற்றி, பிரஸந்நமுகத்தோடுகூடிய அவரை, மகாபாக்கியத்தால் சாந்தமனதுடன், ஸர்வ வேதார்த்தத்தைக் கேட்டார்கள்.

**16–18.** அந்த ஸூதரும் தன் குருவையும், ஜகத் குருவான சம்புவையும், ஸர்வ வித்யாதேவியையும், ஸாக்ஷாத் விக்னநாயகரையும், எப்பொழுதும் சுத்தமான ஷண்முகரையும் ஸ்மரித்து, பூமியில் நமஸ்கரித்து, கைக்கூப்பி, நல்ல விருதமுடைய முனிகளை நோக்கி, உத்தமமான ஸர்வ வேதார்த்தையும் சொல்ல ஆரம்பித்தார்.

**19.** மகேசுவரனையும், ஸர்வ ஜகத்தை பிரகாசிப்பிக்கிறவராயும், பிரஸித்தியான காந்தியுடைய சூரியன்முதலானவர்களுக்கும் காணப்படாதவராயும், ஸம்ஸாரவிஷத்திற்கு மருந்தாயுமுள்ள சிவனை எப்பொழுதும் பக்திபுரஸ்ஸரமாக நமஸ்கரிக்கிறேன்.

20. மேலான அனுபவஸ்வரூபியாயும், பவபாசத்தை நாசஞ் செய்பவளும், ஸதாசிவனுக்குக்கூட அதிக சோபனத்தை யளிப்பவளும், உமையென்று பெயருள்ளவளும், உத்தம சித்தவிருத்தியை கொடுப்பவளுமான அநேகவித லோக வைபத்துடன்கூடிய மகேசுவரியை நமஸ்கரிக்கிறேன்.

---

## அத்தியாயம் 2.

---

(பர, அபார என்ற வேதார்த்த பிரிவுகள்).

1. ஸூதர்:—ஹே! த்விஜர்களே! இப்பொழுது வேதார்த்தத்தைச் சொல்லுகிறேன்; சிரத்தையுடன் கேளுங்கள்; சிரத்தையற்ற எதுவும் ஒருக்காலும் பலத்தையடையாது.

2. வேதார்த்தம் பரம் அபரம் என்று இரண்டு விதமாக வகுக்கப்பட்டிருக்கிறது; ஸகலமாயுள்ள பரத்தைக்காட்டிலும் மேலான நிஷ்கலமான பரம் ஸாக்ஷாத் வேதார்த்த பரமாயிருக்கிறது.

3. (அபரம் இரண்டு விதம்; அதில்) பரத்தையடைவதற்கு ஸாதனம் தர்மம் என்ற பெயருள்ள அபரம்; முனிகளால் சிலவிடங்களில் நீக்கும்பொருட்டு, வேதார்த்தமாக, அதர்மம் (என்ற அபரம்) முக்கியமில்லாததாக சொல்லப்பட்டிருக்கிறது.

4–5. அதர்ம பரிஹாரத்தால் தர்மம் களங்கமற்றிருக்கும்; களங்கமற்ற தர்மத்தை சிரத்தையுடன் அநுஷ்டிப்பதால் ஸாக்ஷாத் வேதார்த்த பரம் அடையப்படும் என்பதில் ஸந்தேகமில்லை.

6–7. (வேதார்த்த பரத்தின் அடைவில்லாமலிருக்க காரணம் யாது எனில்) இந்த வேதார்த்த பரமாயுள்ள (நித்தியமுக்த, ஸ்வபிரகாசமான) ஆத்மா தன்னை ஆச்ரியித்த அபரமான (மாயா) சக்தியால் கட்டுப்பட்டவன்போல் விளங்குகிறான்; (கட்டுப்பட்ட ஸம்ஸாரிகள் அனேகமாய் இருப்பதால் பந்தஹேதுவான இம் மாயாசக்தியும் அனேகமோவென்றால்) நிகழக்கூடாததை உண்டாக்கும் ஒரே மாயாசக்தி, சிவத்தை ஆசிரியித்ததாயும் சிவ விஷயமாயும் இருந்துகொண்டு, பலரூபமாக விளங்குகிறது; அது

அவருடைய வித்யையால் நாசமாகிறது; எது நசிக்கிறதோ அந்த மாயை சித்மாத்திரமாயுள்ள ஆத்மாவில் கல்பிக்கப்பட்டிருக்கிறது.

8. அதிஷ்டான மிச்சமாயிருப்பதே கல்பிதவஸ்துவின் நாசம்.

(ஆனால்) இருக்கிறது என்ற பதார்த்தத்திற்கு இல்லாமலிருப்பது நாசமாயிருக்கிறது; (அப்படியே) இல்லாமலிருக்கிற வஸ்துவுக்கு நாசமானது இருப்புளதாயிருக்கிறது (இவ்விரண்டு வஸ்துக்களுக்கும் நாசமானது தனது மற்றொன்றின் அஸத்ரூபமாயிருக்கிறது; அப்படியிருக்க கல்பிதமாயைக்கு நாசமானது அதிஷ்டானமீதம் என்று எவ்விதம் கூறலாமெனின்) கல்பிக்கப்பட்ட மாயையானது இருப்பு இல்லாமை என்ற ஸ்வாபாவங்களுக்கு வேறு அன்றோ! (ஆகையால் அதிஷ்டான மீதமாயிருக்கிறது இதன் நாசம்).

9. (கல்பித வஸ்துவின் நாசம் அதிஷ்டானமீதம் எனில் அதிஷ்டான நாசம் எதின்மீதம் எனின்) அதிஷ்டானம் எப்பொழுதும் ஸத்தியமாயிருப்பதால் அதற்கு நாசம் என்பது இல்லை, (இப்படி) ஸர்வத்திற்கும் அதிஷ்டானமாயுள்ள ஈசனை அறிகிறவனே முக்தியடைகிறான்.

10. இந்த ஈச விஷயமான ஞானம் வேதாந்த சிரவணமுதலியவைகளால் முக்கியாதி காரியாயிருக்கப்பட்ட பரமஹம்ஸ சன்னியாஸிக்கு உண்டாகிறது.

11. மற்ற ஆசிரமங்களி லிருக்கப்பட்டவர்களுக்கு (இவ்விதம்) உண்டாகிறதில்லை; (ஆனால்) கிரமமாக உண்டாகிறது.

12. (அந்தக்கிரமம் எதுவெனில்) வானப்பிரஸ்தனும் எப்பொழுதும் பிரம்மசரியத்தை யனுஷ்டிப்பவனும் பிரம்மலோகத்தையும், கிரஹஸ்தன் பிதிருலோகத்தையும், (பரம ஹம்ஸன் தவிர மற்ற) ஸன்யாஸி சிவஞானத்தையும் அடைகிறார்கள்.

13. (நான்கு ஸந்யாஸிகளில்) முதல் ஸந்யாஸி (குடீசகன்) ஞானவிருப்புக்கு பிரதிபந்தகமான மகா பாபத்தினின்றும் சிரமமன்றியில் விடுதலையடைகிறான்.

14. இரண்டாவதான பகூதகன் ஞானத்திற்கு அங்கமா யுள்ள சமதமாதிகள் வேண்டுமென்ற இச்சையை யடைகிருன். மூன்ருவதான ஹம்ஸன் எல்லா வேதார்த்தத்தையும் கேட்க வேண்டுமென்கிற இச்சையை யடைகிருன்.

15. நான்காவதான பரமஹம்ஸன் வேதாந்த சிரவணத்தி ஞலேயே ஞானத்தை யடைகிருன்; பரமஹம்ஸத்தை ஆசரியித்த இவன்தான் கர்மஸன்யாஸி; மற்றவர்கள் காமியகர்மத்தை தியா கஞ்செய்ததிஞல் பிக்ஷுகர்கள் என்று சொல்லப்படுகிருர்கள்.

16. குருமூலமாக, வேதத்தில் சொல்லப்பட்டபடி, உபதே சிக்கப்பட்டு உண்டாகும் பரோக்ஷ பிரஹ்மஞானம், அக்னிபோல், புத்திபூர்வமாய்செய்யப்பட்ட எல்லாப்பாபத்தையும்தகித்துவிடும்.

17. வேதத்தால் அறியப்பட்ட மிகவும் உயர்ந்த பிரத்யக்ஷ பிரஹ்மாத்மஞானம், இருட்டை பகல்சூரியன்போல, ஸம்ஸாரத் தை நாசஞ்செய்கிறது.

18. ஆகையால் ஞானமடையும்பொருட்டு த்விஜன் பரம ஹம்ஸஞகவேண்டும்.

19–20. குடீசக, பகூதக, ஹம்ஸமென்ற சன்யாஸத்தை யடைய விருப்பமுள்ளவர்கள் பிராஜாபத்யம் என்ற யாகத்தையும், பரமஹம்ஸமடைய விரும்புவோர்கள் ஆக்னேய இஷ்டியையுஞ் செய்யவேண்டியது; பிறகு எல்லோரும் மௌன விருதத்துடன் திரைதாவி என்ற இஷ்டியை செய்யவும்.

21–25. ஆஹிதாக்னி இல்லாத விப்ரர்களுக்கு இஷ்டி விதிக் கப்படாமையால் அவர்கள் தங்கள் தங்கள் அக்னியில் விரஜா வென்கிற மகாமந்திரங்களால் நெய்யுடன்கூடிய ஹவிஸால் ஓமஞ்செய்து, நெய்யுடன் கூடிய மீதமான ஹவிஸை புஜித்து, ஆசமனஞ்செய்து, நெய்யால் பிரணவத்துடன் கூடிய ஸ்வாஹா மந்திரத்தால் மறுபடியும் பூர்ணஹுதிசெய்து, ‘அயம் தே யோநி’ என்ற மந்திரத்தால் அந்த அக்னியை மோர்ந்து (ஆத் மாவில் சேர்ப்பித்து) சிரத்தையுடன் பிரேஷோச்சாரணஞ் செய் யவும்; ஸங்யாஸ அத்வர்யுவால் கொடுக்கப்பட்ட தண்டத்தை

யும் காஷாயத்தையும் கிரகித்து, சிரத்தையுடன் குருபாதத்தை நமஸ்கரித்து, ஞானத்தையடைய அந்த ஸந்யாஸ சிரேஷ்டர்கள் வேதாந்த சிரவணஞ்செய்யவேண்டும்.

26. விலக்கப்பட்ட கர்மபலத்தில் தோஷம் இருப்பதுபோல காம்யகர்மபலத்திலும் தோஷத்தையறிந்து அந்த கர்ம்மிய கர்மத்தை தள்ளுகிறவன் பலவிஷயத்தில் ஸந்யாஸிக்கு ஒப்பாவான்.

27. பரம ஹம்ஸனுக்கு வேதஸாரமான பிரணவ மந்திரத்தைத்தவிர வேறு ஜபிக்கக்கூடிய மந்திரங்கள் ஒருக்காலமும் இல்லையாகையால் அந்த மந்திரத்தை சாந்தமனதுடன் எப்பொழுதும் ஜபிக்கவும்; அதைவிட்டு வேறு மந்திரங்களை ஜபித்தால் அவன் எப்பொழுது முக்தியடைவான்!

28. ஓம்காரம் எல்லா மந்திரங்களுக்குள்ளும் உத்தமம் என்று சொல்லப்பட்டிருக்கிறபடியால், ஓம்காரமாகிய தோணியால் ஸம்ஸாரமாகிய சமுத்திரத்தைக் கடக்கவேண்டும்.

29. (சிவத்திற்கு இரண்டு ரூபங்கள்; ஒன்று ஸகலம், மற்றொன்று நிஷ்கலம்; அதில் ஸத்யாதி லக்ஷணமுள்ள நிஷ்கலம் பிரணவத்திற்கு முக்கியார்த்தம்).

ஸம்ஸாரத்தை தாண்டக் காரணமான பிரணவத்தின் அர்த்தமானது உமையை பாதிசரீரத்திலுடையவரும், ஸத்யாதி லக்ஷணரும் தேவனுமான ருத்திரன் என்று சொல்லப்படும்.

30. விஷ்ணுமுதலான தேவர்களும் இந்த ருத்திரரிடம் சேர்ந்திருப்பதால் பிரணவத்திற்கு அர்த்தமாக ஆகின்றார்கள், முக்கியமாக ஆகமாட்டார்கள்.

31. ஞானஸித்தியின்பொருட்டு யதிகளால் மகத்தான அவிமுக்தம் என்ற ஸ்தானம் ஸேவிக்கவும் சிந்திக்கவும் தகுந்தது. (அவிமுக்தம் காசிக்ஷேத்திரம், அல்லது புருவமத்தியிலுள்ள ஸ்தானம்).

32. அந்த அவிமுக்தத்தில் மகாதேவராயும் விசுவேச்வராயுமுள்ள பிரபு உபாஸிப்பவர்களுக்கு சந்தோஷத்துடன் நேரே ஞானத்தைக் கொடுக்கிறார்.

33. அவிமுக்தத்தில் மகாதேவனை உபாஸியாமல் மோக்ஷ முயற்சிசெய்கிறவன் கொஞ்சம் விஷத்தை புஜித்து பசியை நிவர்த்திசெய்துகொள்ளுகிறவனுக்கு ஒப்பாவான்.

34. ஆகையால் மோக்ஷத்தை விரும்புகிறவன் ஞானமடைய பக்தியுடன் உலகத்திலும் சரீரத்திலும் அவிமுக்த ஸ்தானத்தை சேவிக்கவேண்டியது.

35-37. அவ்விடத்திலேயே மகாதேவனை உபாசிக்கவும், தியானஞ்செய்யவும் வேண்டும் என்பதில் ஸந்தேகமில்லை. கிருஹஸ்த, வானபிரஸ்த, பிரம்மசாரிகளால் 'சதருத்ரியம்' என்ற மகத்தரமான மந்திரமானது ஜபிக்கத்தகுந்தது; ருத்திர ஜபஞ்செய்கிறவன் மகாபாபக்கூட்டங்களினின்றும் நீங்கி சிரேஷ்டமான ஞானத்தையடைந்து அதனால் பந்தத்தினின்றும் விடுதலையடைகிறான்; இதற்கு சமமாயுள்ள ஜபிக்கத்தகுந்தது சுருதியிலும் ஸ்மிருதியிலும் கிடையாது; இது ஸத்யம்.

38. சதருத்ரிய மத்தியத்தில் பஞ்சாக்ஷர வித்யை இருக்கிறது; அதில் மகாதேவர் எப்பொழுதும் நன்றாக பிரதிஷ்டிதமாயிருக்கிறார்.

39. மகாதேவருடைய ஸாந்நித்தியத்தால் வியஷ்டி (தனிப்பட்டுள்ள) பூதமாயுள்ள தேவர்கள் விருக்ஷத்தில் சாகைகள்போல இருக்கின்றார்கள்.

40. விருக்ஷத்தின்வேரில் ஜலம்விடுவதால் சாகைகள் எப்படி விருத்தியடைகின்றனவோ அப்படியே ருத்திர ஜபத்தால் சிவன் பிரீதியடையும்பொழுது பாக்கிதேவர்களும் பிரீதியடைகிறார்கள்.

41. ஆகையால் ருத்ரஜபத்தாலேயே போகமோக்ஷங்கள் ஸித்திக்கின்றன.

42. ஹே! த்விஜர்களே! மாயையாகிற மகேசனுடைய சக்தி, ஸத்வமுதலிய குணபேதங்களால், ஜீவனை ஸம்ஸாரத்தில் இழுத்து எப்பொழுதும் பிரமிக்கும்படி செய்கிறது.

**43–44.** ஸத்வகுணத்தால் ஸுகம், ஞானம், வைராக்கியம், வெளுப்புத்தன்மையும், ரஜோகுணத்தால் துக்ககரமாயுள்ள பிரவிருத்தியும், இச்சையும், ரக்தவர்ணமும், தமோகுணத்தால் மோகம், பிரமை, சோம்பல், கருப்புவர்ணமும் உண்டாகின்றன.

**45.** இப்படி உத்தமரூபமுள்ள பதார்த்தங்கள் ஸத்வத்தினின்றும், மத்தியமரூப பதார்த்தங்கள் ரஜஸிலிருந்தும், கெட்ட பதார்த்தங்கள் தமஸிலிருந்தும் உண்டாவதாக சுருக்கமாகச் சொல்லப்படுகிறது.

**46.** இவ்விதமாக எல்லாதேகிகளுக்கும் ஸம்ஸாரம் மாயாமயமாகிறது; அது சிவஞான மாத்திரத்தால் அப்பொழுதே நாசமடைகிறது.

**47.** ஆஸ்திகர்களாகவும், கர்வமற்றவர்களாகவுமுள்ள விப்ரர்களுக்கு ஞான எக்ஞத்தால் பரமமான ஞானம் உண்டாகுமே தவிர வேறுவிதமாயாகாது.

**48.** யக்ஞம் ஸ்தூல ஸூக்ஷ்ம பேதங்களால் இருவகையாகச் சொல்லப்பட்டிருக்கிறது; எல்லா அர்த்தமும் தெரிந்தவர்களால் ஸ்தூலமாயுள்ளது கர்மயக்ஞமென்றும், நேராக ஸம்ஸார நாசகமான ஞானயக்ஞம் ஸூக்ஷ்மம் என்றும் சொல்லப்படும்.

**49.** கர்மயக்ஞமென்ற ஸ்தூலமும் மூன்று பிரகாரமாக பிரிக்கப்பட்டிருக்கிறது; காயிகம், வாசிகம், மானஸம் என்று.

**50.** நித்திய நைமித்திகமுதலிய கர்மங்கள் காயிகம் என்றும், மந்திரஜபம் வாசிகவென்றும், தேவதாதியாநம் மானஸம் என்றும் சொல்லப்படும்.

**51–52.** புத்திமான்களால் காயிகத்தைக்காட்டிலும் வாசிகம் மேலானதென்றும், மானஸம் வாசிகத்தைக்காட்டிலும் சிரேஷ்டமானதென்றும் வெகுவிதமாய் சொல்லப்படுகிறது.

**53.** தியானிக்கத்தகுந்த மூர்த்திபேதத்தால் உத்தமம், அதமமென்ற பேதத்தால் இந்த மானஸமும் இரண்டுவிதம்; அதில் தேவனுகிற சிவனுடைய தியானம் உத்தமம்; விஷ்ணுமுதலான தேவர்களின் தியானம் அதமம் என்று சொல்லப்படும்.

54. ஆகையால் மோக்ஷத்தைக் கருதுகிற புத்திமான்களால் மங்களத்தைத்தரும் சிவன் ஒருவனே என்றும், சிவனைக்காட்டிலும் மற்ற தேவர்களை தள்ளிவிட்டு தியாநஞ்செய்யவேண்டும்.

55. இந்த விஷயத்தில் சிரேஷ்டமான சுருதி இம்முடிவடைந்திருக்கிறது.

56. பக்குவ சித்தமில்லாதவர்களால் மோக்ஷார்த்தமாக விஷ்ணுவாதிகள் தியானிக்கத்தகுந்தவர்கள்; பக்குவ சித்தர்களுக்கு நேரே ஸம்ஸாரமோசகராயிருக்கிற சிவனே தியேயர்.

57. விச்வத்தை தாண்டியிருக்கிற ருத்திரனையும் (விச்வத்திற்குள்ளடங்கிய) விஷ்ணு பிரம்மாமுதலான தேவர்களையும் ஸமமாக நினைத்தால் அவன் எப்பொழுதும் ஸம்ஸாரத்தில் சுற்றிக் கொண்டிருப்பான்.

58. பூர்வ ஜன்மங்களிலுண்டான மகா பாபங்களோடு கூடிய மனிதர்களுக்கு விஷ்ணு எல்லாவற்றிற்கும் மேலானதாகவும், ஸாக்ஷாத் பரமேசுவரன் அப்படியன்று என்றும் தோன்றும்.

59-60. விஷ்ணுவே ஸர்வாதிகர் என்றும் வேறொன்றும் ஸர்வாதிகம் இல்லையென்று சிந்திக்கிற மனிதனுக்கு நரகம்கிடைக்கும்; அவனுக்கு கல்பகோடி சதங்களாலும் ஸம்ஸார நாசம்கிடையாது; கல்பகோடி சதங்களிலும் மோக்ஷ ஆசைவாராது.

61. பிரமன் முதலான தேவர்களுக்கு விச்வாதிக்கியத்தைச் சொல்லுகிறவர்கள் தலைகீழ் கால்மேலாக நரக சமுத்திரத்தை யடைகிறார்கள்.

62. விஷ்ணு பிரம்மா மற்றுமுள்ள எந்த தேவர்களையும் ஸமமாக சொல்லுகிறவர்களுக்கு ஸம்ஸார விடுதலை கிட்டாது.

63. கீழ்ப்படியான விஷ்ணு பிரம்மா இந்திரன் முதலான தேவர்களுக்குள் சிவனைப் பார்க்கிறவன் ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுதலையடைகிறான்.

64. சிவ, ருத்திர, மகாதேவ, பிரஹ்ம, ஈசானுதி நாமங்களால் விஷ்ணுமுதலான தேவர்களை பார்க்கிறவன் கிரமமாக பந்தத்திலிருந்து விடுதலையடைகிறுன்.

65. ஹரி, விஷ்ணுமுதலிய நாமங்களால் ஸர்வோத்தமமான சிவனை சிந்திக்கிறவன் கோரமான ஸம்ஸாரத்தில் விழுகிறுன், ஸந்தேகமில்லை.

66. எப்படி ராஜாவினிடத்தில் மந்திரிமுதலிய புத்தி எப்படி கெடுதலுக்கு நேரிடுமோ அப்படி சிவனிடத்தில் விஷ்ணுமுதலிய புத்திமனிதனுக்கு கெடுதலுக்கே நேரிடும்.

67. ஆகையால் மனிதர்களால் முக்கியமாக எப்பொழுதும் சிவன் தியானிக்கத்தகுந்தது; சுருதி ஸ்மிருதிகளில் ஞானயக்ஞத்தைக்காட்டிலும் மேலான எக்ஞம் இல்லவேயில்லை.

68. ஞானயக்ஞ நிஷ்டையிலிருக்கிறவனுக்கு கிடைக்கக்கூடாதது ஒன்றுமில்லை; மகா பாபிகளாயிருக்கிற மனிதர்களுக்கு அதில் ருசியுண்டாகாது.

69–72. அதுமாத்திரமன்று; ஸ்வபாவத்திலேயே ஞானயக்ஞத்தில் துவேஷமுண்டாகும்; (ஆனுல்) எந்த மகாத்மாவுக்கு சுத்தஞானம் உண்டாகிறதோ அவனுக்கு சிவன், ருத்திரன், மகாதேவன், பிரஹ்மம், ஈசானன்முதலிய நாமங்களிலும், எல்லா ருத்திர மூர்த்திகளிலும், சமதமாதி ஸாதனங்களிலும், திரிபுண்டர தாரணத்திலும், ருத்திராக்ஷம் தரிப்பதிலும், விபூதி பூசுவதிலும், சிவலிங்க பூஜையிலும், சிவக்ஷேத்திரங்களிலும் ஸ்வபாவமாகவே எப்பொழுதும் பிரியபுத்தியுண்டாகும்; எந்த ஞானிக்கு முன்கூறியவைகளில் துவேஷமாவது உபேக்ஷையாவது உண்டாகிறதோ அவன் ஞானி அல்ல; ஞானத்தை மோசஞ்செய்கிற ஒரு பசுவாவான்.

73. ஸாத்திய ஸாதன பூர்வகமாயிருக்கப்பட்ட எல்லாவற்றிலும் ஞானிக்கு துவேஷங் கிடையாது; ஸாக்ஷாத் ஞானமடைந்த விப்ரனுக்கு அவைகளில் உபேக்ஷாபுத்தி (உதாஸீனபுத்தி) மாத்திரம் இருக்கும்.

**74.** ஆனாலும் முற்கூறிய சிவஸம்பந்தமான விஷயங்களில் பாதிக்கப்பட்ட விருத்திரூபமாக் பிரியபுத்தி ஸ்வபாவமாகவே உண்டாகிறது. (கயிற்றை கயிறுதான் பாம்பு அன்று என்று அறிந்தவனுக்கு கயிற்றில் ஸர்ப்பஞானம் வந்தாலும் அது எப்படி கெடுதல் செய்கிறதில்லையோ அப்படி சிவஸம்பந்தமான விஷயங்கள் ஸாதனபூர்வகமாயிருந்தாலும் அவைகளில் பிரியபுத்தி உண்டாகிறது).

**75.** எவனுக்கு பாதிதவிருத்தியால்கூட சிவவிஷயங்களில் புத்தி உண்டாகிறதில்லையோ அவன் ஞானி அல்லன், பிராந்தன் என்பதில் சந்தேகமில்லை.

**76.** சிலர் (ஞானமார்க்கத்தை யறியாதவர்களாய்) கர்மத்தைப் பிடித்துக்கொண்டே ஜீவிக்கிறார்கள்; சிலர் மோகமடைந்தவர்களாய் (ஞானமடையாமலே கர்மத்தைவிட்டு) ஞானத்தாலேயே ஜீவிக்கிறார்கள்.

**77.** அநேககோடி கல்பங்களாலும் ஞானயக்ஞத்தினுடைய வைபவத்தை என்னாலாவது, என் குருவாலாவது, மற்றயாவராலாவது வர்ணிக்கமுடியாது.

**78-79.** ஆனாலும் ஹே! முனிகளே! கேவலம் சிரத்தையினால் ஞானயக்ஞத்தின் வைபவத்தை மகாபாக்கியத்தால் (சிலர்) வர்ணிக்கிறார்கள்; ஞானயக்ஞத்தின் வைபவத்தை அறிய சக்தியற்றவர்களும் சிரத்தையுடன் தம்யோக்கியதைக்குத் தகுந்தபடி வர்ணிக்கிறார்கள்.

**80.** கணாதர் கபிலர் முதலியவர்களுக்குள் பரஸ்பர விரோதமிருந்தாலும் (அவர்கள்) ஞானத்தில் தோஷமானது ஸ்வபாவமாககிடையாது.

**81.** அவர்களால் சொல்லப்பட்ட ஞானம் எதார்த்த ஞானமல்ல; சிரத்தையால் பரிசுத்தமாயிருப்பதால் ஞானம் என்று உபசாரமாக சொல்லப்படுகிறது.

**82-86.** சிவனுடைய பிரஸாதத்தால் வியாஸர் ஸாக்ஷாத் சிவஞானியானார்; அவர் பிரஸாதத்தால் நானும் சிவஞானியா

னேன் யென்பதில் ஸந்தேகமில்லை; என்னால் உங்களுக்கு சிரத்தை யுடன் சுருக்கமாகச் சொல்லப்பட்டது; என் அனுகிரகத்தால் ஞா னயக்ஞத்தின் வைபவத்தையடைந்து கிருதார்த்தர்களாகவும் ஆ னீர்கள்; இது ஸத்தியவாக்; இதற்குமுன் என்னால் இந்த விஷயம் மற்றவர்களுக்குச் சொல்லப்படவில்லை; என் குருவான வியாஸர் பூர்வத்தில் இந்த ரகஸ்யத்தை எனக்குச் சொன்னார்; (என்னால்) நேராக சொல்லப்பட்ட ஸாரத்தைக்காட்டிலும் மிகஸாரமான இந்த அர்த்தம் பரம ஆஸ்திகர்களான உங்களால் ரகஸ்யமாய் காப்பாற்ற படவேண்டியது.

---

## அத்தியாயம் 3.

---

### (கர்ம யக்ஞ வைபவம்).

1. ஸூதர்:—இனி இப்பொழுது கர்மயக்ஞத்தின் வைப வத்தைக் கூறுகிறேன்; ஸூக்ஷ்மதர்சிகளான முனிகளால் கர்ம யக்ஞம் மூன்றுவிதம் என்று சொல்லப்படுகிறது.

2. ஒன்று காம்யம் என்றும், மற்றொன்று நித்யம் என்றும்; (மூன்றாவது) நைமித்திகம் என்றும் சொல்லப்படும்; முக்கியமாக காம்ய கர்மத்தின் பலன் சித்தசுத்தியாம்.

3. நித்ய கர்மத்திற்கும் முக்கியமாய் சித்தசுத்தி பலனும், நைமித்திக கர்மத்திற்கு பாப பரிகாரம் முக்கியபலன் என்று சொல்லப்படுகிறது.

4. காம்யகர்ம யக்ஞங்களில் சிரத்தையுடன் பிரவிருத்திக் கிற விப்ரர்கள் அற்ப பாக்கியமுள்ளவர்கள்; நித்ய நைமித்திக கர்மங்களில் பிரவிருத்திக்கிறவர்கள் மகா பாக்கியர்கள்.

5. இவ்வெல்லா யக்ஞங்களிலும் சிரத்தையுடன் வேதத் தில் விதித்திருக்கிறபடியால் செய்யவேண்டுமென்ற புத்தியுடன் பிருவிருத்திப்பவர்களுக்கு அற்ப பலன் உண்டாகும்.

6. இந்த யக்ஞங்களில் சிவாராதன புத்தியால் சிரத்தையு டன் பிரவிருத்திப்பவர்கள் (நிஷ்காமத்தால்) சீக்கிரத்தில் மோக்ஷ பலனை யடைகிறார்கள்.

7–8. நான் கர்த்தாவும் அல்ல, போக்தாவும் அல்ல, அஸங்கன், சிவன் என்று தனதாத்மாவை பிரமாணத்தாலும் யுக்தியாலும் அறிந்து சிரத்தையுடன் கர்மயக்ஞங்களில் நித்தியம் பிரவிருத்திப்பவர்கள் பிரதிபக்ஷ மகாதேவ ஞானத்தையடைகிறார்கள்.

9. யக்ஞங்களில் யக்ஞரூபியான மகாவிஷ்ணுவைபார்க்கிற த்விஜர்களும் ஞானத்தையடைந்து மோக்ஷத்தை யடைகிறார்கள்.

10. யக்ஞங்களால் முக்கியமாக மகாதேவன் பூஜிக்கத் தகுந்தவன் மற்றுயாரும் அல்ல என்று அறிந்து செய்கிறவர்களும் ஞானமடைகிறார்கள்.

11–12. பிரம்மா விஷ்ணு இந்திரன் அல்லது வேறு தேவதையை முக்கியமென்று நினைத்து எக்ஞங்களில் எவர் மோகத்தால் பூஜிக்கிறார்களோ அவர்கள் பிரளயபர்யந்தம் கோரமான நரகத்தைபடைகிறார்கள்.

13. நாமத்தாலும் அர்த்தத்தாலும் எந்த மகேசுவரன் மகாதேவனுகிறாரோ அதே ஸர்வக்ஞான ஸாம்பன் எல்லா மகாயக்ஞங்களால் பூஜிக்கத்தக்கவர்.

14. வேதத்தால் விதிக்கப்படாவிட்டாலும் உலகில் நிந்திக்கப்படாத கர்மங்களை சம்புவின் பூஜையென்று அறிகிறதும் மகாயக்ஞபலன்தரும்.

15. சுருதியிலும் ஸ்மிருதியிலும் நிந்திக்கப்பட்ட கர்மங்களையும் சம்புவினுடைய பூஜையென்று நினைப்பதும் பெரிய எக்ஞமாகும்.

16. ஹே! ஸுவிருதர்காள்! ஈசுவரவிஷயமென்று நினைத்து செய்யும் பாபகர்மங்களும் நிச்சயமாய் பரிசுத்தமானவை என்பதில் ஸந்தேகமில்லை.

17. பெரும்நெருப்பு ஈரக்கட்டையை சோஷித்து எரித்துவிடுவதுபோல் ஈசுவர புத்தியடன்கூடிய பாபம் சுத்த ஞானத்தைக் கொடுக்கும்.

**18.** சுருதியில் சொல்லியபடி கர்மானுஷ்டானஞ் செய்கிற வர்களுக்கு இஷ்டத்தைச் செய்கிறதும், நல்ல ஞானத்திற்கு காரணமான மகா யக்ஞமாகும்.

**19.** அப்படியே விதிக்கப்பட்ட கர்மத்தை யனுஷ்டிக்கிற வர்களுக்கு இஷ்டமில்லாததை செய்தல் ஸம்ஸார பிரவிருத்திக்கு காரணமான மகாபாபமாகும்.

**20.** துர்நடவடிக்கையுள்ள எல்லோரிடத்திலும் தோஷ திருஷ்டியன்றியில் உண்டாகும் உதாஸீன புத்தியானது மகா யக்ஞமாகும்.

**21.** புத்தன், ஜைனன் முதலான மார்க்கத்திலுள்ளவர்க ளிடத்திலும் அவர்களுடைய தேவதா பிம்பங்களிலும் ஈசுவர புத்திமாத்திரம் இருப்பது மகாயக்ஞமாகும்.

**22–23.** வைதிகமாயும், தாந்திரமாயுமுள்ள மார்க்கத்தை விட்டு, தன்புத்தியினல் எதிலாவது எவன் சிரத்தையுடன் தேவ தாபுத்தியடைகிருனே அதுவும் யக்ஞம் என்று என்னல் சொல்லப்படுகிறது; ஹே! வேதார்த்த மறிந்தவர்களே! சிரத்தையுடன் கூடிய எதுவும் இஹபரங்களில் க்ஷேமத்தைக் கொடுக்கும்.

**24.** தன் புத்தியால் வேதசாஸ்திரங்களிலும் தந்திரங்களிலும் சொல்லப்பட்ட விஷயங்களில் ஆஸ்திகமும் தேவதாபுத்தி வைப்பதும் மனிதர்களுக்கு க்ஷேம்மாகும்.

**25.** ஸூக்ஷ்மமாக யோஜிக்கும்மளவில் பலவிஷயத்தில் தாரதம்யமுண்டு.

**26.** சரீர சம்பந்தமான கர்மயக்ஞம் சுருக்கமாகச் சொல்லப்பட்டது; நீங்களும் காயிகமாயுள்ள மகாயக்ஞத்தைச் செய்யுங்கோள்.

---

## அத்தியாயம் 4.

---

### (வாசிக யக்ஞ விவரணம்).

**1–2.** இனி வாசிகயக்ஞம் சிரத்தையுடன் சொல்லுகிறேன்; பாத்தைக்காட்டிலும் (பிந்துவென்ற ஈசுவரனைக்காட்டிலும்) சிரேஷ்டமான (மாயாதீதமான நிஷ்கலமான) சைதன்யலக்ஷணமுள்ள

தாயும், தன் சக்தியுடன் கூடியதாயுமுள்ள சிவனிடத்திலிருந்து பரமாயும், ஸூக்ஷ்மமாயும், ஜ்யோதிர்மயமாயுமுள்ள சப்தமானது ஸ்வபாவமாகவே அகண்டமாய் உண்டாயிற்று. (மூலகாரணமான பிந்துஸர்வகமானபடியால் அதன் ஆத்மகாயுள்ள சப்தமும் அகண்டமாய் எல்லாவிடத்திலும் சேர்ந்ததாய் அகண்டமாய் இருக்கிறது; ஸ்வபிரகாச ஸ்வபாவத்தால் இந்திரியகோசர மில்லாவிடினும் ஸ்வபாவமாகவே உண்டாயிற்று; இந்த சப்தமே ஸ்வபிரகாசத்தாலும், ஸர்வகதத்தாலும், ஜகத்காரண தாதாத்மியத்தாலும் சப்த பிரஹ்மம் என்று சொல்லப்படும்.

3. பிராணிகளின் மூலாதாரத்தில், உருக்கிய தங்கத்துக்கு ஸமமான பிரபையுடன், இந்த சப்தம் பிண்டபூதமாக, இவ்விதம் உண்டானபிறகு, விளங்குகிறது. (இதற்கு பராவாக் என்று பெயர்; இது மூலாதாரத்தினின்று நாபிஸ்தானத்தில்வந்து மனஸுடன் கூடும்பொழுது பச்யந்தீ என்ற பெயரையடைகிறது; இந்த இரண்டும் சூக்ஷ்மதராமாயுள்ள சப்தம்).

4. இது மறுபடியும் ஸுஷும்ஞ நாடிமூலமாக ஹிருதய கமலத்தைப் பிரவேசித்து, ஸூக்ஷ்ம ரூபமாகப்பிரிந்து, அக்னி பிரபைபோல் தானேவிளங்குகிறது. (அதுவே நாபியிலிருந்து ஹிருதய தேசமடைந்து நிச்சயாத்மகமாயிருக்கிற புத்தியால் விஷயிகிருதமாய் மத்யமா வாக்ரூபத்தையடைகிறது).

5–8. திரும்பவும் சிவனுடைய உத்தமஸ்தானமாகிய பிரஹ்மரந்திரத்தையடைந்து பிண்டபூதமாகி, அவ்விடத்தில் பிரகாசாநந்த ரூபமாயிருக்கிற சம்புவில் தானே விச்ராந்தியடைகிறது; பராசக்தியின் ஸ்தானமான மூலாதாரத்தில் பிரகாசியானின்ற சப்தமானது பரமாயும் அத்யந்தம் சோபனமாயுமுள்ள ஒரே அக்ஷரமாக ஆகிறது. (பிரஹ்மாந்திரஸ்தானம் வைகரீ என்ற வாக்கின் ஸ்தானம்).

ஆக்ஞாசக்கிரம் என்று பெயரையுடைய மகாஸ்தானத்திற்கு மேலே எந்த உத்தமஸ்தானம் இருக்கிறதோ அந்த விடத்திலிருக்கிற சப்தமும் ஸூக்ஷ்மமாயுள்ள ஒரு அக்ஷரத் தன்மையையுயடைகிறது;

(பச்யந்தீ, மத்தியமாவைக்காட்டிலும்) மூன்ருவதாயும், எல்லா அக்ஷரங்களுக்கும் முக்கியமான ஆதாரமாயும், பூர்ணமாயும், புண்யத்திற் கிருப்பிடமாயுள்ள வைகரியிலும் ஸ்வபாவமாகவே இரண்டு அக்ஷரங்களும் ஒன்ருக ஆகின்றன.

9. இதுதான் ஆதியாயும், முக்கியமாயும், ஸ்வபாவமாக நன்ருகப் பிரசித்தமாயுள்ள மந்திரமாகும்; சிந்தனைசெய்கிறவர்களை (மனனம்) இரக்ஷிக்கிறபடியால் மந்திரம் என்ற பெயருடையதாயிற்று.

(அக்ஷரங்களின் ஸ்வரூபம் இரண்டுவிதம்; ஒன்று ஸ்தூலம், மற்றென்று ஸூக்ஷ்மம்; பிறர்காதுகளுக்கு கேட்கும்படியானதும் வைகரீரூபமடைந்ததும் அகாரமுதல் க்ஷகாரம்வரையிலுள்ள எழுத்துகளின் சேர்க்கையால் பதம், வாக்கியம், மந்திரம் முதலிய லக்ஷணமுள்ள அனேகமாயுள்ளது ஸ்தூலம்; ஸூக்ஷ்மமானது மத்யமரூபத்தைவிட்டு வைகரீரூபமாகும்பொழுது நாதாத்மகமான பிரணவரூபம் ஒன்று; பிரணவமும் கண்டமுதலானதால் விளங்கும்பொழுது பாஹ்யமாயும் ஸ்தூலமாயும் நாதாத்மகாயுமுள்ளது; எல்லா சப்தங்களுக்கும் உபாதானபூதமாய் மூர்த்தாவில் விளங்கும் ஸூக்ஷ்மமாயும் அந்தரமாயுமுள்ள அக்ஷரம்; அது அக்ஷரரூபமாய் பிரகாசிக்கும்பொழுது நாதாத்மகத்தால் சப்தம் என்று சொல்லப்படுகிறது; இதுதான் பிரணவத்தின் பிரபாவம். இதுபோலவே ஹம்ஸ மந்திரத்திலும் ஹ, ஸ என்ற இரண்டு அக்ஷரங்களும் ஒரே அக்ஷரமாக ஆகிறது என்றும் அறியவேண்டியது).

10. மந்திரங்களுக்கெல்லாம் மாதாவாயும், மகேச்வரீயாயும், பரமாயுமுள்ள இந்த மாதிருகாதேவி முதலிலுண்டான அந்த மகாமந்திரத்தினின்றும் ஸ்வபாவமாக உதித்தாள்.

11. கீழ்முகமாக ஒருரூபமும், மேல்முகமாக ஒரு ரூபமும் ஆனுள்; ஆகையால் பரிசுத்தமாயுள்ள ஸ்ரீமாதிருகா தேவிமுதல் மந்திரரூபியாக ஆனுள்.

12. இதுவே முக்கியமாயுள்ள ஆதிமந்திரம்; நன்ருகப் பிரஸித்தியாயிருந்தாலும் குரு உபதேசத்தால் அறியவேண்டுமே தவிர அநேக சாஸ்திரங்களாலும் அறியக்கூடாது.

(ஓம் என்று எல்லா சாகைகளிலும் அடிக்கடி வர்ணிக்கப்பட்டிருப்பதால் பிரஸித்தம்; சொல்லப்பட்ட சப்த பிரஹ்மதசா பூதமான பரா, பச்யந்தி, மத்யமா ரூபங்களால் அறியப்பட்டு வ்யான வாயுவுடன் சேர்ந்து ஸகலவர்ண பத வாக்கியாத்மகமாய் சப்தங்களுக்கு உபாதான பாவத்தால் வித்வான்களால் அறியப்படுவதால் அவர்களிடமே அறிந்து கொள்ளவேண்டியது).

**13.** எல்லோருக்கும் ஆதாரபூதமாயும், பரமாத்மாவாயும், ஸ்வயம்பிரகாச ஸ்வரூபமாயுமுள்ள சிவனுக்கு வாசகமாயிருப்பதால் இது முக்கிய மந்திரம்.

**14.** இதற்கு ஒப்பு, உயர்வு யாதொன்றும் இல்லையென்று வலது கையைத்தூக்கி ஸத்தியம், ஸத்தியம், மேலும் ஸத்தியம் என்று சொல்லப்படுகிறது.

**15.** மூன்று நான்கு வருடங்கள் சிஷ்யனை நன்றாகப் பரீக்ஷித்து ஈசனுடைய கட்டளையால் மந்திரத்தை யறிந்தவர்கள் இதை உபதேசிக்கவேண்டும்.

**16.** பரீக்ஷையன்றி உபதேசித்தால் சீக்கிரம் மரணத்தை யடைவான்; அவனால் சம்பாதிக்கப்பட்ட புருஷார்த்தங்களும் வியர்த்தமாகும்.

**17.** இந்த மந்திரத்தின் முக்கிய யோக்கியதை என்னாலாவது முனிகள், தேவர்கள், ஸர்வக்ஞான சிவனாலாவது சொல்ல முடியாது.

**18–20.** (பரா, பச்யந்தி தசைகளில் ஏகரூபமாயுள்ள) இந்த மந்திரங்களுக்கெல்லாம் மாதாரூபமாயும், பரமேச்வரியாயுமுள்ள மாதிருகாமந்திரம் புத்தியில் மத்யமா என்று பெயர்பூண்டு அநேக பிரிவுடன் இருக்கிறாள்! மறுபடியும் கிரமமாக மகாமந்திரமாயும், மந்திரரூபமாயும், ஸ்வதமாக வேதமுதலான சப்தாகாரமாயும், (லௌகிகமான) ஸத்ய அஸத்ய சப்தரூபமாயும் ஆகிறாள்.

**21.** எப்படி மகாசிரேஷ்டரான சம்பு சக்தி சிவம் என்று இரண்டாக இருக்கிறாரோ அப்படியே மாதிருக தேவியும் தானே இரண்டு ரூபமாகிறாள்.

22. இந்த வித்யாதேவி பதரூபமாகி, ஒரு ரூபத்தால் சக்திக்கு வாசகமாயும், மற்றொரு ரூபத்தால் சிவனுக்கு வாசகமாயும் ஆகிறாள்.

23. அவள் அபதமானாலும் பதத்தையடைந்தவளாயும், பதமானாலும் அபதத்தை யடைந்தவளாயு மிருக்கிறாள். இந்த பத அபத பிரிவுகளையறிந்தவனே வித்வான்.

24. இந்த பதத்தை (மாதிருகையை) நன்றாக தாத்பரிய பரிசீலனையால் அறிந்து இருப்பவனுக்கு மந்திரங்களெல்லாம் சித்தித்ததாகும்.

25–27. இந்த பதத்தின் ஒரு அம்சமானது (வைகரீ) மனிதர்களின் உபகாரத்தின்பொருட்டு முதலில் பதினாறுவிதமாகவும் (16 உயிர் எழுத்து), ஐந்தாக (க,ச,ட,த,ப) ஐந்து கூட்டமாகவுஞ் சேர்ந்து இருபத்தைந்தாகவும், பிறகு இரண்டாகவும், (ய,ர,ல,வ, ஶ,ஷ, ஸ,ஹ) எட்டாகவும் ஆயிற்று; மறுபடியும் அந்த அம்சத்தின் மற்றொரு பிரிவானது மூக்குத்தொனி பேதத்தால் பதினாறு உயிரெழுத்துக்களை இரண்டுவிதமாக்கி 32 ஆகவும், அப்படியே மெய்யெழுத்து 33-ஞ்சேர்ந்து இரண்டு பிரிவாக ஆயிற்று; இவ்விதம் லோகோபகாரத்தின் பொருட்டு பதம் அனேகவிதமாக ஆகிறது.

28–30. (மந்திரங்களில் உயிர், மெய் எழுத்துகளில்) ஒரு ஆகாரத்தை (ஒன்றை) ஜபிப்பதால் தானே காரியஸித்தி உண்டாகிறது; சில வைத்தீகரூபத்தை யடைந்து (வேத சப்தங்களால்) சித்தியை உண்டாக்குகிறது; சில தாந்திரங்களை அனுசரித்து (ஹூம், பட் என்றவை) சித்தியைக் கொடுக்கிறது; சில லௌகிக சப்தங்களையனுசரித்து இஷ்டத்தைக் கொடுக்கிறது. எப்படி எல்லோரும் எப்பொழுதும் மாதேவனை நம்பி ஜீவிக்கிறார்களோ, எப்படி ஈசனுடைய சக்தியையும், பஞ்சமகா பூதங்களை நம்பியும் ஜீவிக்கிறார்களோ அப்படியே எல்லோரும் பதத்தைநம்பி ஜீவித்து வருகிறார்கள்.

31. முக்கியமான மாதிருகாதேவி பதத்தின் பேதத்தால் வித்தியாஸப்பட்டு கரணங்களால் (உதடு கழுத்து முதலியவைகளால்) தான் வியக்தமாகி வைகரீ என்கிற பெயரை யடைகிறாள்.

32–34. இவ்விதமாக ஸ்தூல, ஸூக்ஷ்ம, அதிஸூக்ஷ்மமென்று மூன்றுவிதமான மாதிருகேச்வரியான அந்த தேவி அளவற்ற ஒளியுடன் சிவனுடைய சக்தியால் பிரிக்கப்பட்டவள் ஆகிறாள். மாதிருகேசுவரியினுடைய (பச்யந்தி, மத்தியமா) ஆகாரமானது வாக்குக்கெட்டாததாயும், அப்படியே பர ஆகாரமானது பிரம்மா விஷ்ணு தேவர்களாலும் சிந்திக்க முடியாததாகவும், அதிஸூக்ஷ்மமாயும், சின்மயமாயும், சித்ரூபமாயும், சிவனிடத்தில் ஐக்கியமாயுமிருக்கிறது.

35. இவ்விதமாக மந்திரத்தின் மேன்மையை அறிந்து ஆசாரியமுகமாக மந்திரஜபஞ்செய்தால் சீக்கிரத்தில் ஸித்தியுண்டாகும்; ஆசாரியனற்ற மந்திரம் மனிதனுக்கு கெடுதலைச்செய்யும்.

---

## அத்தியாயம் 5.

---

### (பிரணவ விசாரம்).

1. ஸூதர்:—சுருக்கமாக, விஸ்தாரமன்றி, பிரணவத்தைச் சொல்லுகிறேன்; பர, அபர என்ற பேதத்தால் பிரணவம் இரண்டு விதமாக எண்ணப்படுகிறது.

2. (பரப்பிரணவம் எதுவெனில்) ஞான, ஆனந்த முதலிய லக்ஷணமுடைய மிகச்சிரேஷ்டமான பிரஹ்மம் பரப்பிரணவம்; (அதற்கு பிரணவ சப்தத்தால் பெயரிடப்படுவது யாதுகாரணம் பற்றியெனில்) யாதொரு காரணத்தால் பரசிவ ஸ்வரூபமான பிரஹ்மம் (வேறுகாரணங்களை யபேக்ஷியாமல்) ஸ்வபாவமாகவே (பிர) மிகுதியாய் (நவம்) (எப்பொழுதுங் கூடஸ்தமாய் ஸத்பரானந்த பிரகாசத்தால்) புதுமையாயிருக்கிறதோ (அக்காரணத்தால் பிரணவம் என்ற பெயரையடைந்தது).

3. (அபரப்பிரணவம் எதுவெனில்) மிகக்களங்கமற்ற ஸாக்ஷாத் சப்தரூபம் அபரப்பிரணவம்; (முன்சொல்லப்பட்ட பரப் பிர

15

ணவமாகிய பிரஹ்மத்தை யடையும்படி செய்வதால்) மிகுதியான புதுமைக்குக் காரணமானதால் பிரணவம் என்று சொல்லப்படுகிறது.

4–6. பூர்வத்தில் பிரம்மதேவன் மிகச்சிரத்தையுடன் பஸ்மத்தால் பூசப்பட்ட எல்லா அங்கங்களை யுடையவராயும், திருபுண்டரத்தால் அலங்கரிக்கப்பட்ட நெற்றியையுடையவராயும், இந்திரயங்களை ஜயித்தவராயும், கோபத்தை வென்றவராயும் ஜடை மரவுரிகளுடன் கூடியவராயும், எப்பொழுதும் பஞ்சாக்னி மத்தியிலிருந்துகொண்டும், ஸாம்பசிவனை தியானித்துக்கொண்டும் அதிகடினமான தவத்தை மூன்று வருஷஞ் செய்தார்.

7. ஹே! ஆஸ்திகர்களே! பிறகு அவர் அம்பிகாபதியான சங்கருடைய பிரஸாதத்தால் பூமி, அந்தரிக்ஷம், ஸ்வர்க்கம் இவைகளைச் சிருஷ்டித்தார்.

8–9. அவர் அந்த மூன்று உலகங்களையும் தபிக்கச்செய்தார்; அவைகளினின்றும் மூன்று ஜ்யோதிகள் உண்டாயின; அவைகளுள் பூமியினிடமிருந்து அக்னியும், அந்தரிக்ஷத்திலிருந்து வாயுவும், ஸ்வர்க்கத்திலிருந்து ஜகத்திற்கு கண்ணான சூரியனும் உண்டாயின.

10–14. அந்த ஜ்யோதிகளை திரும்பவும் அந்த பிரம்மா தாபஞ்செய்ய அவைகளினின்றும் மூன்று வேதங்கள் உண்டாயின; அக்னியிலிருந்து முதல் வேதமான ரிக்குவேதமும், வாயுவினின்று யஜுர்வேதமும், சூரியனிடமிருந்து ஸாமவேதமும் உண்டாயின.

திரும்பவும் பிரம்மா அந்த வேதங்களைத்தாபஞ்செய்ய அவைகளினின்றும் மூன்று வெண்ணிறங்கள் (பிரகாசங்கள்) உண்டாயின; ரிக்குவேதத்திலிருந்து ‘புவ:’ என்றதும், ஸாமவேதத்திலிருந்து ‘ஸுவ:’ என்றதும் உண்டாயின; அந்தப்பிரபு (பிரம்மா) மறுபடியும் அந்த சுக்லங்களை தாபஞ்செய்ய அவைகளினின்று கோடி சூரியனுக்கு ஸமமான காந்தியோடு கிரமமாக ‘அ’கார, ‘உ’கார, ‘ம’கார மூன்று வர்ணங்கள் (அக்ஷரங்கள், எழுத்துக்கள்) உண்டாயின.

15. பரமபிரபுவான பிரம்மா அவைகளை 'ஓம்' என்று ஒன்ருகச் சேர்த்தார்; அதிலேயே எல்லாவஸ்துக்களையும் பிரகாசஞ் செய்பவராயுள்ள ஸாம்பசிவன் பிரதி பிம்பமானூர் (கண்ணுடியில் முகம்போல, ஸ்வபிரகாச சித்ரூபரான சிவன் பிரதிபிம்பமாக இந்த பிரணவமந்திரத்தில் பிரகாசிக்கிருர்); இக்காரணத்தால் பிரணவம் அவரைக் குறிக்கும் பெயராயிற்று.

16. நெருப்பில் காயவைத்த இரும்புமுதலிய லோகங்களில் அக்னி அபேதமாயிருப்பதுபோல சம்பு பிரணவத்தில் அபேதமாயிருக்கிருர்; ஆகையால் எப்பொழுதும் அந்தப் பிரணவம் எல்லாவற்றையும் பிரகாசஞ்செய்வதாக ஆயிற்று.

17. உலகத்தில் ஜனங்கள் (ஒரு விஷயத்தை) தெரிந்துகொண்டேன் என்று சொல்லாமல், அந்தத் தெரிந்துகொண்ட விஷயத்தில் 'ஓம்' என்று சொல்லுகிருர்கள்; அதனுல் இந்தப் பிரணவம் தெரிந்துகொண்டதின் வாசகமாயிற்று.

18. அப்படியே தெரியவில்லை என்று சொல்லாமல் (தெரியவில்லையா என்று கேட்கப்பட்டால்) ஓம் என்று சொல்லுகிருர்கள்; இதனுல் இந்தப்பிரணவம் தெரியாததற்கும் வாசகமாயிருக்கிறது.

19. ஸந்தேகமாயுள்ள விஷயத்திலும் 'ஸந்தேகம்' என்று சொல்லவேண்டியிருக்க 'ஓம்' என்று சொல்லுகிருர்கள்; இதனுல் ஸந்தேகத்திற்கும் 'ஓம்' வாசகமாயிருக்கிறது.

20. உலகஜனங்கள் ஆகாசம்முதலிய பதார்த்தங்களை குறிக்கும் வாசக சப்தங்களை விட்டுவிட்டு (அவைகளைப்பற்றி கேட்கப்படும்பொழுது) 'ஓம்' என்று சொல்லுகிருர்கள்.

21. ஆகையால் கடம் சுவர் முதலிய சப்தங்களைப்போல 'ஓம்' என்றதற்கும் அதிகப் பிரயோகமிருப்பதால் அந்த பிரணவம் ஆகாசாதி பதார்த்தங்களுக்கு வாசகமென்று ஏற்படுகிறது.

22. (இப்படி) எல்லாவற்றையும் பிரகாசஞ்செய்வதால் பிரஹ்மத்திற்கு ஒப்பாயிருக்கிறது.

23. எந்த த்விஜன் எல்லாவற்றையும் பிரகாசிப்பிக்கிற இந்த மந்திரத்தை ஜபிக்கிருனே அவன் சீக்கிரத்தில் எல்லாமந்திர ஜபத்

தின் பலனையடைகிறான்; ஆகையால் எல்லாவற்றையும் விட்டு எப்பொழுதும் இந்த மந்திரத்தை ஜபிக்கவேண்டும்.

24. இந்த மந்திரத்திற்கு ரிஷி பிரம்மா; காயத்ரி சன்தஸ் என்று சொல்லப்படுகிறது; பரமாத்மாவான சம்பு தேவதையென்று சொல்லப்பட்டிருக்கிறது.

(ஒரு மந்திரத்திற்கு ரிஷி, சன்தஸ் என்ற யாப்பிய லக்கனத்தின்படி மந்திர எழுத்துக்களின் சேர்க்கையின் பெயர், அதன் தேவதை இவைகளைத் தெரிந்துகொண்டு ஜபித்தால் அன்றி பலன் சித்திக்காது; ஆகையால் அவை சொல்லப்பட்டன).

25–26. பிந்துவுடன் சேர்ந்த 'அ'காரம் (அதாவது 'அம்') இந்த மந்திரத்திற்கு சக்தியென்றும், 'உ'கார, 'ம'காரங்களிரண்டும் பீஜம் என்று சொல்லப்படுகிறது; இதற்கு விநியோகம் (ஏற்பட்டபலன்) மோக்ஷம் என்று வேதாந்த மறிந்தவர்களால் சொல்லப்படுகிறது.

27–33. இந்த மூன்று வர்ணங்களுக்கும் (அ,உ,ம்) முறையே, கிரமமாக, அக்னி, வாயு, சூர்யன், ரிஷிகள் என்றும்; காயத்ரீ, திருஷ்டுப், பிரஹதி சந்தஸ்கள் என்றும்; பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் தேவதைகள் என்றும்; ரக்தம், சுக்லம், கருப்பு வர்ணங்களென்றும்; ஜாகிரத், ஸ்வப்ன, சுழுப்தி அவஸ்தைகளை குறிப்பிக்கின்றன வென்றும்; பூமி, அந்தரிக்ஷம், ஸ்வர்க்கம் ஸ்தானங்கள் என்றும்; உதாத்தமுதலிய ஸ்வரங்களை கிரமமாக உடையதாகவும்; ரிக்கு, யஜுஸ், ஸாமவேதங்களை கிரமமாக உடையதாகவும்; கார்ஹபத்ய, தக்ஷிண, ஆஹவனீயங்கள் அக்னிகளாகவும்; கிரமமாக பிராதக்காலம், மத்தியாந்நகாலம், சாயங்காலம் மூன்றும் காலமாகவும்; ரஜஸ், ஸத்வம், தமஸ் மூன்று குணங்களாகவும்; சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் கிரியைகளாகவும்; உத்பத்தி, ஸ்திதி, நாசம் இவைகளில் வினியோகமும் ஏற்பட்டிருக்கிறது.

34. ஸித்தியை விரும்புகிறவர்கள் கட்டைவிரல்முதல் சுண்டுவிரல் வரையிலும், அவைகளின் சந்துகளிலும் கிரமமாக நியாஸஞ் செய்யவேண்டும்.

35. எல்லாவிரல்களாலும் பிரணவத்தால் நியாஸமுஞ் சொல்லப்பட்டிருக்கிறது.

36. பூ, அக்னிமுதலிய (அங்க) மந்திரங்களாலும் கிரமமாக ஸித்தியின்பொருட்டு விநியாஸஞ் செய்யவேண்டும்.

37. மூன்று வர்ணங்களாலும், பிரணவத்தாலும், கிரமமாக நாவிலும், ஹிருதயத்திலும், தலையிலும் மறக்காமல் நியாசஞ் செய்யவேண்டும்.

38. ஹிருதயமுதலிய விடங்களில் பூ, அக்னிமுதலிய மந்திரங்களாலும் நியாஸஞ்செய்யவேண்டும்.

39. இவ்விதமாகப் விதிப்பிரகாரம் நியாஸஞ்செய்து, முக்கண்ணனை ஸாம்பனை தியானஞ்செய்து இந்த முக்கிய மந்திரத்தை பக்தியுடன் பத்துலக்ஷம் ஜபிக்கவும்.

40. இப்படிச்செய்தால் இந்த மந்திரம் ஸத்தியமாக ஸித்தியாகும்; ஆறு கர்மங்களும் அஷ்ட ஐசுவரியங்களும் ஸித்திக்கும்.

41. மோக்ஷம் தானகவே ஸித்திக்கும்; எல்லாபாபங்களினின்றும் விடுதலையடைகிறன்; ஸர்வவித்தைகளுக்கு மிருப்பிடமாக விருந்து இஷ்டமான பலத்தையடைகிறன்.

---

## அத்தியாயம் 6.

### (காயத்ரீ விவரணம்).

1–2. ஸூதர்:—இனி வியாஹிருதியுடனும், சிரஸுடனும் ஸாவித்ரீயைச் சொல்லுகிறேன்; (வியாஹிருதி மாயையின் விவரங்கள், பிரிவுகள், மாறுதல்கள்; அவை ஏழு, பூ, புவ, ஸ்வஹ, மஹ, ஜன, தப, ஸத்ய என்றவை): பூ முதலிய வியாஹிருதிகளுக்கு கிரமமாக அத்ரி, பிருகு, குத்ஸ, வஸிஷ்ட, கௌதம, கச்யபர், அங்கிரஸ் ரிஷிகள் ஆவார்.

3–5. வியாஹிருதிகளுக்கு கிரமமாக சந்தஸ், காயத்ரி, உஷ்ணிக், அனுஷ்டுப், பிரஹதி, பங்க்தி, திருஷ்டுப், ஜகதி இவைகளாகும்; தேவதைகளும் கிரமமாக அக்னி, வாயு, சூரியன், பிர

ஹஸ்பதி, வருணன், இந்திரன், விச்வேதேவர்கள் ஆவார்கள்; வியாஹிருதிகளுக்கு எல்லா விஷயத்திலும் வினியோகம்.

6. இந்த ஸாவித்ரீ மந்திரத்திற்கு விசுவாமித்திரர் ரிஷி; சந்தஸ் காயத்ரீ; சூரியன் தேவதை; (அந்த சூரியதேவதையினிடம் அந்தர்யாமி ரூபத்தோடு அதை பிரேரகஞ்செய்யும்) சிவனே இந்த சாவித்ரிக்கு அதிதேவதை.

7. (காயத்ரீ 24 அக்ஷரங்களடங்கியது; எட்டு எட்டு அக்ஷரங்களாக) இந்த ஸாவித்ரி மூன்று பதங்களுடனும், (அவ்வாறு அக்ஷரங்களாக) நான்கு பதங்களாகவும் இருக்கிறாள்; ஜபஞ்செய்யும்பொழுது மூன்று பதங்களாக அறியவேண்டும்; பூஜா சமயத்தில் நான்கு பதங்களாக எண்ணவேண்டும்.

8–9. 'ஓம் ஆபோ' என்று துவக்கப்படும் மந்திரம் இந்த காயத்ரிக்கு முக்கியமான சிரஸ்; இந்த (சிரஸ்) மந்திரத்திற்கு பிரம்மா ரிஷியும், சந்தஸ் அனுஷ்டுப்பும், தேவதை பரமாத்மாவென்றும் வேதார்த்தமறிந்தவர்களால் சொல்லப்படுகிறது; இதற்கு கருதிய இஷ்டத்தை ஸாதிப்பது விநியோகமென்று சொல்லப்படுகிறது. (இது வேதஸாரத்திற்கு பிரதானமாயிருப்பதால் சிரஸ் என்று சொல்லப்படுகிறது).

10. (இனி இந்தஸாவித்ரி ஜபகாலத்தில் தியானிக்கவேண்டிய விராட் முதலிய மூர்த்தியைச் சொல்லுகிறார்) மூன்று பதத்துடன்கூடிய காயத்ரீயை (ஜபசமயத்தில்) ஆறு வயிறுகளுடன் கூடியதாகவும், ஐந்து சிரசுகளுடனும், அக்னிவர்ண முகத்துடனும், வெண்ணிறமாகவும், தாமரை இலைபோன்ற நேத்திர முடையவளாகவும் தியானிக்கவும்.

11–12. இந்த ஸாவித்திரிக்கு ரிக், யஜுஸ், ஸாமங்கள் மூன்று பாதங்களாம்; கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு, மேல், கீழ் திக்குகள் முறையே ஆறுவயறுகளாம்.

13–15. இந்த ஸாவித்ரிக்கு பதினெட்டு புராணங்களும் நாபியாம்; ஜகத் சரீரம்; ஆகாசம் உள்வயிறு; இரண்டு ஸ்தனங்களும் சந்தஸ்கள்; கல்மஷமற்ற தர்மசாஸ்திரம் இவளுடைய ஹிரு

தயம்; நியாயசாஸ்திரம் கைகள்; இரண்டு ஸாங்கிய சாஸ்திரங்களும் (ஸேச்வர, நிரீசுவர ஸாங்கியங்கள்) காதுகள்; சிக்ஷைமுதலிய ஆறு அங்கங்களும் தலை; மகாபிரகாசமுள்ள அக்னிமுகம்; மீமாம்ஸை லக்ஷணம்; அதர்வண சுருதி இவளுடைய சேஷ்டைகள்.

16. பிரம்மா தலையும், ருத்திரன் சிகையும், விஷ்ணு ஆத்மாவும், வேதாந்த வேதசாஸ்திரம் இவளுக்கு சூக்ஷ்ம சரீரமாயும் இருக்கின்றன.

17. சந்திரசேகரனும், ஸாம்பனுமுள்ள சிவன் ஸாக்ஷாத் அந்தர்யாமியாயிருந்து பிரேரகஞ் செய்கிறார்; (இவ்விதமாக ரிஷி முதலிய நியாஸத்துடன் ஸாவித்ரீ மூர்த்தியை தியானித்து) மந்திர வர்ணங்களை தன் சரீரத்தில் அடியில்சொல்லப்படும் ஸ்தானங்களில் கிரமமாக நியாஸஞ்செய்யவேண்டும்.

18–20. (இருபத்திநான்கு அக்ஷரங்களையும் அடியில்கண்ட 24 ஸ்தானங்களில் நியாஸிக்கவேண்டும்). கால் கட்டைவிரல், கணுக்கள், மூட்டுகள், தொடை, மேல்தொடை, ஆண்குறி, பீஜம், இடுப்பு, நாபி, வயிறு, ஸ்தனம், ஹிருதயம், கண்டம், முகம், கன்னம், மூக்கு, கண், புருவமத்தியம், நெற்றி, முன்நெற்றி, தெற்கு, மேற்கு, வடக்கு, தலையுச்சிகளில் கிரமமாக அக்ஷரங்களை நியாஸஞ் செய்யவேண்டும்.

21–28. (ஜபவிதியில் இந்த அக்ஷரங்களை கிரமமாக எந்த வர்ணங்களாக தியானிக்கவேண்டியது என்பது சொல்லப்படுகிறது). முதல் அக்ஷரம் சம்பகவர்ணம்; இரண்டாவது சியாமம்; மூன்றாவது பிங்களம்; நான்காவது இந்திரநீலம்; ஐந்தாவது பாவகவர்ணம்; ஆறாவது நெருப்புவர்ணம்; ஏழாவதும் அப்படியே அக்னி வர்ணம்; எட்டாவது மின்னல் வர்ணம்; ஒன்பதாவது நக்ஷத்திர வர்ணம்; பத்தாவது கிருஷ்ண வர்ணம்; அதற்குமேல் ரக்தகௌரம்; அதற்குமேல் சியாமவர்ணம்; மேன்மேலும் (கிரமமாக) சுக்லம், பீதம், ரக்தவர்ணம்; (14) சுக்லவர்ணம்; (15) பத்மராகம்; (16) சந்திர வர்ணம்; (17) பாண்டுரம்; (18) ரத்னகௌரம்; (19) இந்திரநீலம்; (20) கோரக்த வர்ணம்; (21) சூரிய வர்ணம்;

(22) நீலோத்பல தலத்தின் வர்ணம்; (23) சங்க, குந்த, இந்து வர்ணம்: (24) தீப வர்ணம் என்று வர்ணங்கள் சொல்லப்படுகின்றன.

29. ஸாவித்திரியினுடைய சில வர்ணங்கள் மகா பாதகங்களை நாசஞ்செய்கின்றன; சில வர்ணங்கள் உபபாதங்களையும், சில க்ஷுத்திர பாபங்களையும் நாசஞ்செய்கின்றன; இதில் ஸம்சயம் வேண்டாம்.

30. அன்னம் ஜலங் கொடுப்பதற்கு ஸமமான தானம் ஒன்றுமில்லை; அஹிம்ஸைக்கு ஸமமான தபஸுமில்லை; ஸாவித்திரிக்கு ஸமமான ஜபமுமில்லை; வியாஹிருதிக்கு ஸமமான ஹோம மந்திரமுமில்லை.

31-36. (இனி காயத்ரீ மந்திரத்தின் பொருள் சொல்லப்படுகிறது). எவர் நம்முடைய சித்தவிருத்திகளை அந்தர்யாமி ஸ்வரூபமாயிருந்துகொண்டு ஏவுதல் (நடத்துகை) செய்கிறாரோ அந்த தேவராயும் (பிரகாசகராயும்) ஸகல ஜகத்திற்கும் ஸ்வபாவமாக (ஹிருதயமத்தியில் சாக்ஷிரூபமாக) பிரத்தியக்ஷமாயும், சூரியனுக்கு ஸ்வாத்மபூதமாயும், ஸகல ஜந்துக்களால் வரிக்கப்பட்டவரும், பூஜிக்கப்பட்டவரும், சைதன்ய லக்ஷணமான (பாபங்களை வறுக்கிற) பர்க்கஸ் என்ற தேஜஸாயும், 'தத்' என்ற சப்தத்தால் சொல்லப்பட்ட ஸர்வக்ஞராயும், ஜகத்சிருஷ்டியாதி காரணராயும், தன் மாயாசக்தியால் பிரிபட்டவரும், சிவன் ருத்திரன் என்ற நாமங்களைப் பூண்டவராயும், நீலகண்டன், விரூபாக்ஷன், ஸாம்பன் என்ற மூர்த்திகளால் குறிக்கப்பட்டவரும், ஆதித்ய தேவதைக்கு பிரேரகராயும், ஆதித்ய தேவதையால் அறியப்படாதவராயுமுள்ள பரமேசுவரனை நாங்கள் தியானஞ்செய்கிறோம்(அவரே நான் என்று அறிகிறோம்); இப்படி ஸாவித்திரியின் அர்த்தமானது என்னால் சிரத்தையுடன் சுருக்கமாகச் சொல்லப்பட்டது.

37. இந்த அர்த்தத்தை குருமூலமாக கிரகித்து அவருக்கு தக்ஷிணை ஸமர்ப்பித்து புத்திமான் சோம்பலன்றி இருபத்திநான்கு லக்ஷம் ஜபிக்கவும்.

**38.** (இவ்வளவு ஜபஞ்செய்த) திவிஜன் மஹாபாதகனு யிருந்தாலும் மந்திரசித்தி யுள்ளவனுகிருன்; மந்திரசித்தி யிச்சை யுள்ளவன் நெய்யினுல் நாலாயிரம் ஹோமங்கள் செய்யவேண்டும்.

**39–53.** இந்த மந்திரத்தாலேயே வினியோகங்களே, (சித்தி களே, நியமிப்புகளே) ஸாதித்துக்கொள்ளவும்; விடியற்காலவேளே யில் ஸ்நானஞ்செய்து சிரத்தையுடன் எவன் நித்தியம் ஆயிரம் ஜபிக்கிருனே அவன் இஷ்டமெல்லாவற்றையும் யடைவதில் ஸந் தேகமில்லே; சூரிய கிரஹணகாலத்தில் கதிரமரஸமித்தை நெய்யில் நன்ருகத்தோய்த்து அக்னியில் ஒருவன்ஹோமம் செய்தால் மிக்க தனத்தை யடைகிருன்; சூரிய கிரஹணகாலத்தில் சூரியனுக்கு ஜலத்தால் தர்ப்பணங் கொடுத்தால் எல்லாக் காமஸமிருத்தியு முண்டாகும்; இதில் ஸந்தேகமில்லே; வாளிபொடியை நெய்யில் துவைத்து மாட்டுக்கொட்டகையில் ஆயிரம் ஹோமங்கள் செய்கிற வன் வெகு பாலேக்கொடுக்கும் பசுவையடைகிருன்; நெல் ஹோ மத்தால் பிரயமான புத்திரனேயும், அரிசி ஹோமத்தால் கன்னிய யையுமடைகிருன்; கெட்ட ஸ்வப்ன நிவர்த்திக்காக ஜலத்தை எடுத்து, எண்ணுயிரம் காயித்திரி ஜபித்து, அந்த ஜலத்தால் திவி ஜன் அபிஷேகஞ் செய்யவேண்டியது; அபமிருத்யு விநாசத்திற் காக பாலேமாத்திரம் ஆஹாரமாகக்கொண்டு லக்ஷம் ஜபிக்கவேண் டியது; நெய்யை ஆஹாரமாகக்கொண்டு ஜபித்தால் வித்தையடை வதில் ஸந்தேகமில்லே; நாபிவரையிலும் ஜலத்தில் நின்று சாந்த மனஸுடன் லக்ஷம் ஜபித்தால் சத்துருவற்ற ஒரு பெரிய ராஜ் யத்தை யடைவான் என்பதில் சந்தேகமில்லே; பலாச புஷ்பங்க ளால் ஹோமஞ்செய்தால் பெரிய ஸம்பத்தையடைவான்; வேதஸ புஷ்பங்களால் ஹோமஞ்செய்தால் சீக்கிரம் மழையுண்டாகும்; தேன் ஹோமத்தால் ராஜவசியமும், தேனுடன் பாயஸ ஹோ மத்தால் ஸ்திரீவசியமும் சீக்கிரத்தில் கிடைக்கும்; நெய்மாத்திரம் ஹோமஞ்செய்தால் எல்லாக் காமங்களேயுமடைவான்; அன்ன ஹோமத்தால் சீக்கிரம் அன்னத்தை யடைகிருன்; பஞ்சகவியத்தை மாத்திரம் புஜித்துக்கொண்டு லக்ஷம் ஜபித்தால் பூர்வ ஜன்ம ஞானமுண்டாகும்; முழங்கால்மட்டும் ஜலத்தில் நின்றுகொண்டு

சத்துருவிருக்கும் திக்கைநோக்கி கோபத்துடன் ஆயிரம் ஜபித்தால் யுத்தத்தில் ஜயமுண்டாகும்; எருக்கு ஸமித்தை சிரத்தையுடன் கொதித்த நல்லெண்ணெயுடன்சேர்த்து ஹோமஞ்செய்தால் ஏழு நாளைக்குள் விப்ரன்தவிர மற்ற விரோதிகள் மாணமடைவார்கள்; இதில் ஸந்தேகமில்லை; சத்துருவினுடைய ஆகாரத்தையும் பெயரையும் பூமியில் எழுதி அதன் ஹிருதயத்தில் ஒரு காலால் மிதித்துக்கொண்டு ஜபித்தால் சத்துரு நாசமடைகிறான்.

54. அபிசார கர்மங்களில் ஸாவித்ரீ தலைகீழாக உபயோகிக்கப்படுகிறது; சத்துரு மாரணத்தில் அக்ஷரங்களை தலைகீழாக உபயோகப்படுத்துவதற்கு பிரஹ்மாஸ்திரம் என்று பெயர்.

55. இவ்விஷயம் குருபிரஸாதத்தால் அறியவேண்டுமேதவிர வேறுவிதமாகச்செய்தால் அனர்த்தமுண்டாகும்; சாந்தியை இச்சிக்கிறவன் நெய் அல்லது பால் அல்லது பஞ்சகவ்யம் அல்லது எள்ளு இவைகளால் ஹோமஞ்செய்தால் சாந்தியடைவான்.

56. மாவிலையினால் ஹோமஞ்செய்தால் எல்லா ஜுவரநாசமும், உதும்பரம் அரசு இவைகளின் ஸமித்துக்களால் ஹோமஞ்செய்தால் மாடு, யானை, குதிரைகளின் வியாதி நிவர்த்தியுமுண்டாகும்.

57. பால் அல்லது நெய்யால் ஹோமஞ்செய்தால் எல்லா நாற்கால் மிருகங்களின் வியாதி சமனமாகும்; எல்லா தோஷங்களுஞ் சமனமாக முழங்கால் ஜலத்திலிருந்து ஜபிக்கவும்.

58. வெண்ணிறமான விபூதியை ஜபித்துப் பூசிக்கொண்டால் பூதாதிகளின் பீடை சாந்தியாகும்.

59. அதிகமாகச் சொல்வதில் ஹே! விப்ரர்களே! என்ன பிரயோஜனம்; இதன் ஜபத்தாலும், ஹோமத்தாலும் இஷ்டப்பட்டதெல்லாம் கிடைக்கும் என்பதில் ஸந்தேகமில்லை.

60. அதன் பிரஸாதத்தால் ஞானவிருப்பை யடைகிறான்; ஸாவித்ரீ ஜபயக்ஞத்தால் ஞான யக்ஞத்தையடைகிறான்.

---

## அத்தியாயம் 7.

### (ஹம்ஸ வித்யா விவரணம்).

1. ஸூதர்:—விஸ்தாரமின்றிச் சுருக்கமாக ஆத்மமந்திரத்தைச் சொல்லுகிறேன்; இதற்கு ரிஷி பிரஹ்மா; சந்தஸ் காயத்திரீ; ஆத்மாவே தேவதை; இதற்கு சக்தி 'ஸ'காரமென்றும், பீஜம் 'ஹம்' என்றுஞ் சொல்லப்படுகிறது.

2. வித்தியாசக்தி, பீஜமாகிய சிவனேதவிர வேறல்ல; இக்காரணத்தால் இந்த முக்கிய மந்திரஞ் சிவசக்தி ஸ்வரூபமென்று சொல்லப்படுகிறது. (பரசிவ ஸ்வரூப ஸம்வித்ரூபியாகிற வித்யா சக்தி, 'ஸ'காரம்; அதனல் அறியப்பட்ட நிஷ்கல பரசிவஸ்வரூபம் பீஜம்; 'ஹ'; இவ்விதமாக பீஜாசக்தி ஸமுதாய ரூபமான இந்த மந்திரஞ் சிவசக்தி யாத்மகமாயிருக்கிறது).

3. (இவ்விதம் மந்திரார்த்தத்தையறிந்து ஜபசமயத்தில் தியானஞ் சொல்லப்படுகிறது) இப்படியறிந்து பீஜசக்தியாத்மகமாக வித்வான் மந்திரத்தை, ஸம்ஸார வியாதிக்கு மருந்தாயும் ஸாம்பனுயுமிருக்கிற மகாதேவனை தியானித்துக்கொண்டு, ஜபிக்கவும்.

4. எவனொருவன் தினந்தோறும் இம்மந்திரத்தை பன்னிரண்டாயிரம் ஜபிக்கிருனே அவனுடைய ஸர்வபாபங்களும் நாசமடைவதில் ஸந்தேகமில்லை. (இது மந்த அதிகாரிகளுக்கு சொல்லப்பட்டது).

5. அல்லது (இந்த ஹம்ஸ மந்திரத்தை வேறுவிதமாக பொருள்படுத்தி மத்தியமாதிகாரிகளுக்கு சொல்லப்படுகிறது). எப்பொழுதும் மனிதர்களின் சரீரத்தில் பிராண ஸஞ்சாரம் (காற்று உட்செல்லுதல்) 'ஸ'காரம் என்றும், அபான ஸஞ்சாரம் (காற்று வெளிப்போகுதல்) 'ஹ'காரம் என்றுஞ் சொல்லப்பட்டிருக்கிறது; (இந்த மந்திர பாகங்களான 'ஸ' என்றது பிராணவிருத்தியாகவும், 'ஹம்' என்றது அபான விருத்தியாகவும் தன் சரீரத்தில் எப்பொழுதும் அனுவர்த்தித்திருப்பதாக தியானஞ் செய்யவேண்டியது).

6. இவ்விதமாக எவன் குருமூலமாக மந்திரத்தை அறிந்துகொள்ளுகிருனே அவன் ஜபஞ்செய்யாத காலத்திலும் ஹம்ஸ

மந்திரத்தை ஜபித்துக்கொண்டேயிருக்கிறுன் என்பதில் ஸந்தேக மில்லை. (ஆகையால் இதற்கு 'அஜபா' மந்திரம் என்றும் பெய ருண்டு).

**7–8.** இவ்விதமான அஜபா மந்திரத்தை ஆஸ்திக்கியத்தா லும் (நம்பிக்கையாலும்) குருபக்தியாலும் எவன் அறிகிறுனே அவனுடைய புத்திபூர்வமாய் செய்த பாபங்களெல்லாம் நசிக்கின் றன வென்பதில் ஸந்தேகமில்லை.

**9.** அல்லது, (உத்தமாதிகரிகளுக்கு தியானவிசேஷம்), இது ஜீவனையும் ஆத்மாவையும் நிதானிக்கும் ஜீவமந்திரமாயிருக்கிறது; உலகத்தில் 'அகம்' என்கிற சப்தத்திற்கு அர்த்தத்தாலேயே ஜீவாத்ம வஸ்துவில் பிரஸித்தியிருக்கிறது; சக்திமந்திரமாகிய "ஸ' காரம் பரமேசுவரவாசகம்;

**10–11.** (ஏனெனில்) 'ஸ' (தத்பதம்) பிரஸித்தமாயுள்ள விஷயங்களில் உபயோகப் படுத்தப்படுகிறது; பரமேசுவரன் தன் னிடத்தில் மகத்முதல் அணுபரியந்தம் சராசரமாயிருக்கிற இந்த எல்லா ஜகத்தும் உண்டாகி, இருந்து, லயத்தையடைகிற பிரஸித்த முள்ளவராயிருக்கிறுர் (ஆகைபால் 'ஸ' பரமேசுவா வாசகம்).

**12–13** (பதங்களுடைய அர்த்தத்தை சொல்லிவிட்டு வாக் கியார்த்தஞ் சொல்லப்படுகிறது). தன் அனுபவ பிரமாணத்தால் ஸம்ஸாரியாகத் தோன்றுகின்ற நான் அந்த பரமேசுவரனே; அவ ரும் நானே என்பதில் ஸந்தேகமில்லை;

('அஹம்' சப்தத்திற்கு வாச்சியார்த்தம் கர்த்தா போக்தா வான கிஞ்சிக்ஞன் ஆன பிரத்தியக் சைதன்ய ஜீவன்; 'ஸ' சப்தத் திற்கு வாச்சியார்த்த ம்ஸர்வக்ஞன பரக்ஷோமான சைதன்யம்; எப்படி இந்த இரண்டிற்கும் ஏகத்துவம் உண்டாகுமெனில், இந்த விஷயத்தில் லக்ஷணையால் அர்த்தஞ்செய்யவேண்டுமென்று சொல் லப்படுகிறது). ஸகாரத்தை இரண்டாவது பதமாகவுடைய இரண்டு பதரூபமான ஹம்ஸ மந்திரத்தின் சபலத்தை (துவிதீய தோற் றத்தை) நீக்கி அறிவு மாத்திர ஸ்வாபாவமான நான் பூர்ணன் என்று இவ்விதம் அறியவேண்டும். (இதற்கு பிரமாணமில்லையோ

வெனில் வித்வான்களின் அனுபவம் பிரமாணம் என்று சொல்லப் பட்டது).

14. பரமார்த்தத்தைச் சொல்லுகிற சுருதியும் இப்படியே சொல்லுகிறது; பரமேசுவரன் ஸத்ய ஸம்பூர்ண விக்ஞான ஸுக ஸ்வரூபமாயிருக்கிர்.

15. (அவ்விதமே) நானும் மாறுதல் அடையாமல் இருக் கிறபடியால் ஸத்யஸ்வபாவன் என்பதில் ஸந்தேகமில்லை; மாறுத லடையும் வஸ்துக்களுக்கு (ஜாகிரத ஸ்வப்னமுதலிய ஸகல அவஸ் தை முதலியவைகளுக்கு) சாக்ஷியாக நான் இருப்பதால் நான் மாறுதலற்றவனே.

16. நான் கேவலமாய் (ஸம்பந்தப்படாமலிருந்துகொண்டு) அறியப்பட்டதும் அறியப்படாததுமான அர்த்தத்தை எப்பொழு தும் அறிந்துகொண்டிருக்கிறேன்; அந்த பதார்த்தங்கள் என்னை அறிகிறதில்லை; ஆகையால் நான் வேருக்கப்படாத சேதனனுயிருக் கிறேன்.

17. (மாறுதலற்ற ஸாக்ஷி சைதன்யத்திற்கு மாறுதலுடைய ஸாக்ஷிய சேஷதை, பற்றுதல், இருக்குமே, அப்பொழுது அது எப்படி சித்தாகும் என்று ஸந்தேகம்வர, ஸமாதானஞ் சொல்லப் படுகிறது).

சித்திற்கு அன்னியமான அசித் (ஜட) பதார்த்தங்களின் பற்றுதல் இல்லாதபடியால் அதற்கு அசித்சேஷதையில்லை; (அப் படியிருக்கும்பக்ஷத்தில், சொல்மாத்திரத்தால் வஸ்து ஸித்தி உண் டாகாதபடியால்) பானைமுதலிய பதார்த்தங்களுக்கு சேதனத்வ முண்டாகும் (அது யுக்தமன்று).

18. (ஜடப்பற்றுதல் வேண்டாம், வேறு சித்பற்றுதல் இருக் கட்டும் என்ருலோ) சித்துக்கும் வேறு சித் அபேக்ஷை இல்லை; ஒரு சித்துக்கும் வேறு சித்துக்கும் பேதமில்லை; அப்படி பேத மிருந்தால் சித் அசித்தாகும் (கடாதிகள்போல சித்துக்கு பின்ன மாயிருப்பதால் அசித்தாகும்); சித்துக்கு அசித்வம் விரோதமன் ருே (ஆகையால் சித் சேஷத்வமுமில்லை).

19. அப்படியே சித் சேதனனுடைய சேஷத்வமுமில்லை; அப்படி சேஷத்வ ஸம்பந்தமிருக்குமாயின் சித்தால் சேதன ஸித்தியும், சேதனத்தால் சித்தின் ஸ்திதியும் உண்டாகும் (இப்படி அந்நியோந்நிய ஆசிரய தோஷம் உண்டாவதால் இந்த சேஷத்வமுமில்லை).

20. (அப்படியானல், கடம் அறியப்பட்டது, நான் அறிகிறேன் என்ற முதலியதில் சித்துக்கு அந்நிய சேஷ ஸம்பந்தம் தோற்றுகிறதே எனில்) ஆகையால் லோகத்தில் சித்தினுடைய அந்நிய ஸம்பந்தமானது பிராந்தியால் தோன்றுகிறது (வாஸ்தவத்தில் இல்லை).

நான் எப்பொழுதும், பிரேமைக்கு இருப்பிடமாயிருப்பதால் ஸுகஸ்வபாவமாகவே இருக்கிறேன்.

21. ஸுகமில்லாதவன் பிரேமைக்கு இருப்பிடமாகக் காணப்படுகிறதில்லையன்றே; நான் அந்நிய பதார்த்த வபேக்ஷையற்றவன், ஆனல் எல்லாவற்றிற்குஞ் சேஷியாக (என் அபேக்ஷை வேண்டியதாக) இருக்கிறேன். (சுகஸாதனங்களும், துக்காபாவமும் சுக அபேக்ஷையால் பிரியமுள்ளவைகள்; நானே யாதொரு அபேக்ஷையுமில்லாமல் தானகவே பிரேமாஸ்பதமா யிருப்பதால் ஏன் பரமானந்த ரூபமாக விருக்கக்கூடாது).

22. (இப்படி நான் ஸத், சித், ஆனந்தமாக விருக்கிறேன், மேலும் ஈசுவரரூபமான பூர்ணமாகவும் இருக்கிறேன் என்று சொல்லப்படுகிறது). நான் (பூதபவிஷயத்வர்த்தமான எல்லாக் காலங்களிலும்) எப்பொழுதும், எல்லாவற்றிற்கும் (ஜாகிராதி அவஸ்தைகளுக்கும், எல்லாவிடங்களிலுமுள்ள கடபடாதிபதார்த்தங்களுக்கு), பரமார்த்தமாக (உள்வெளி பேதமற்று) ஸாக்ஷியாக விருப்பதால் பூர்ணனுயிருக்கிறேன்; பூர்ணமில்லாத எவனும் ஏக காலத்தில் எல்லாவற்றையும் அறியமாட்டான் (நானே அப்படி அறிகிறவன், ஆகையால் பூர்ணன்).

23. பரமேசுவரன் எப்பொழுதும் ஸம்ஸாரமற்றவராக விருக்கிறுர்; நானும் அப்படியே ஸம்ஸாரத்திற்கு ஸாக்ஷியானதால் ஸம்

ஸாரமற்றவனு யிருக்கிறேன். (சாக்ஷி சாக்ஷ்யங்களுக்கு பின்னமாக, கடசாக்ஷிபோல, இருக்கிருன்; அப்படியே ஸம்ஸாரமும் இதரவஸ்துப்போல சாக்ஷியால் அறியப்படுவதால் சாக்ஷிக்கு வேருனபடியால் நான் ஸம்ஸாரமற்றவன்).

24. இவ்விதமாக வேதவாக்கியத்தாலும், யுக்தியாலும், ஆசார்யனைமுன்னிட்டு நானே அவர் (பரமேசுவரன்), அவரே நான் என்று புத்திமான் அறியவும்.

25. எவன் இந்த ஆத்ம மந்திரத்தால் ஜீவாத்ம பரமாத்மாக்களின் பரமார்த்திகமான ஏகத்வத்தை திருடமாகயறிகிருனோ அவன்தான் பிரஹ்மவித்துக்களில் சிரேஷ்டனேயன்றி அக்ஞானத்தால் மோகமடைந்த மற்றவர்களன்று.

26. இவ்விதமாயுள்ள அனுபவஞானம் எவனுக்கு எக்காலத்தில் உலகில் உண்டாகிறதோ அப்பொழுதே அவனுக்கு ஸம்ஸார நாசமுண்டாகிறதென்பதில் ஸந்தேகமில்லை.

27. ஹம்ஸ வித்தையை யறியாமல் மோக்ஷமடைய பிரயத்தினஞ்செய்கிறவன் ஆகாசத்தைப் புஜித்து பசியை நிவர்த்திசெய்துகொள்ளுகிறவனுக்கு ஒப்பாவான்.

28-30. சிரேஷ்டமான இந்த ஹம்ஸவித்தை மற்றுமுள்ள கெடுதலான மந்திர பிரயோகங்களை பேதிக்கிறதாயும், ஸகல ஐசுவரியத்தையளிப்பதாயும், ஸகல தேவதைகளுக்கும் திருப்திசெய்யத்தக்கதாகவுமிருக்கிறது; இதன் ஜபமாத்திரத்தாலேயே தீர்க்காயுளையும், ஆரோக்கியதையும், விஜயத்தையும், வித்தையையும் அடைவதில் ஸந்தேகமில்லை; அதிகமாகச் சொல்லுவதில் என்னபயன்! இந்த ஹம்ஸவித்தை ஸகல காமத்தையுங் கொடுக்கிறது; எவன் எப்பொழுதும் 'ஹம்ஸ' 'ஹம்ஸ' என்று சொல்லுகிருனோ அவன் சிவனே!.

31. சிவனாலும், விஷ்ணுவாலும், பிரம்மாவாலும், எல்லா தேவர்களாலும், சீக்கிரத்தில் ஸித்தியளிக்கும் இந்த ஹம்ஸ வித்தை ஆதரிக்கப்பட்டிருக்கிறது.

**32–34.** (இனி நித்தியஸாதன யோகத்தைச் சொல்லுகிறார்). ரேசகத்தையும் பூரகத்தையும் நிற்கச்செய்து கும்பகத்தில் ஸ்திரமாயிருந்துகொண்டு, நாபிசக்கிரத்தில் பிராண அபான விருத்திகளை ஸமமாய்வைத்து (மூச்சுக்காத்து போக்குவரத்தில்லாமல் செய்து), தெளிந்த மனதுடன், எந்த புத்திமான் சிரஸிலிருக்கும் அமிருதத்தை சிரத்தையுடன் தியானத்தால் பாணஞ்செய்து (அமிருதமய தேகனாகவிருந்து), நாபிமத்தியத்தில் தீபாகாரம்போல் ஜ்வலிக்கும் மகாதேவனை அமிருதத்தால் அபிஷேகஞ்செய்து, 'ஹம்ஸ ஹம்ஸ'மென்று ஜபிக்கிறானோ அவனுக்கு ஜரை, மரணம், ரோக முதலியவை உலகத்திலிரா.

**35.** அணிமாதி ஸித்தியின்பொருட்டு தினந்தோறும் இப்படிச்செய்யவும்; எப்பொழுதும் அப்யாஸஞ்செய்கிறவன் ஈசுவரத்தன்மையை அடைகிறான்.

**36.** ஹே! ஆஸ்திகர்களே! அனேகர் இந்த மார்க்கத்தால் நித்தியத்தன்மையை அடைந்திருக்கிறார்கள்; நித்தியத்தன்மைக்கு ஹம்ஸவித்தையைத்தவிர வேறு ஸாதனம் உலகிலில்லை.

**37.** எவன் பரமேசுவரியான ஹம்ஸமஹாவித்தையை உபதேசஞ்செய்கிறானோ அவனுக்கு பரமசிரத்தையுடன் எப்பொழுதும் ஊழியஞ்செய்யவேண்டும்.

**38.** சுபமாயினும் அசுபமாயினுங் குருவால், உலகத்தில், எது சொல்லப்படுகிறதோ அதை சிஷ்யன், ஸந்தோஷத்துடன், விசாரியாமல் செய்யவேண்டியது.

**39–41.** இந்த ஹம்ஸவித்தையை குருஸேவையால் அறிந்து, ஆத்மாவை (பிரத்யக் சைதன்யத்தை) ஆத்மாவால் (பிரஹ்மாத்ம ஏகத்வ விஷய மனஸால்) ஸாக்ஷாத் பிரஹ்மமாக அறிந்து, சஞ்சலமின்றி இருந்துகொண்டு ஒரு மனிதன் தேகம் ஜாதி முதலிய ஸம்பந்தத்தையுடைய வர்ணாசிரமங்களையும், வேதங்களையும், மற்றுமுள்ள சாஸ்திரங்களையும் காலிலுள்ள தூளியைப்போல் தியாகஞ்செய்யவும்; (ஆனால்) அவர்செய்த நன்றியை அறிந்து குருவை ஒருக்காலமும் தியாகஞ்செய்யக் கூடாது.

42. இஹபர ஸாதனத்தின்பொருட்டு குருபக்தியை எப்பொழுதுஞ்செய்துகொண்டிருக்கவும்; சுருதியும் குருவே சிவனே ஒழிய வேறன்றுவென்று கூறுகிறது.

43. சுருதியில் சொல்லப்பட்டது எதார்த்தம் என்பதில் ஸந்தேகமில்லை; அதனால் சுருதிக்கு விரோதமாகாத பக்ஷத்தில் எல்லாவிஷயங்களும் பிரமாணமாகும்; விரோதப்பட்டால் கெடுதலின்பொருட்டேயாகும், பிரமாணமுமன்று.

---

## அத்தியாயம் 8.

---

### (ஷடக்ஷர மந்திர விவரணம்).

1. ஸூதர்:—வெகு சோபனமான ஆறு அக்ஷர மந்திரத்தைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன்; அதை அறிவதால் ஸம்ஸார நாசமும், பிரம்மேந்திராதி பெரிய பதங்களும் கிட்டும்.

2. இந்த மந்திரத்திற்கு ரிஷி பிரம்மா; சந்தஸ் காயத்ரம்; இதற்கு தேவதை ஸாக்ஷாத் ஸத்யஞான சுக அத்வயமான சிவனே.

3–5. (இந்த மந்திரத்தின் அர்த்த ரூபமாகிய) சக்தி (ஆத்ம மந்திரத்தில்போல) மகேசுவரீ (ஸம்வித்ரூபினி); இந்த சக்தி (பிரதிபாத்ய பிரதி பாதக அபேதத்தால் தனது வாசகமான) முன்சொல்லப்பட்ட லக்ஷணத்துடன்கூடிய மாயாவிசஷ்ட சிவாத்மகமான புவனேசாக்ஷரமான பீஜமாகிறது; அந்த சிவனும் அந்த சப்தரூபமாகவே இருக்கிறார். பஞ்சாக்ஷரங்களால் கிரமமாக கட்டைவிரல் முதல் சுண்டுவிரல் பரியந்தம் நியாஸஞ் செய்யவும்; அப்படியே கிரமமாக பஞ்சாக்ஷரத்தால் தலை, நெற்றி, ஹிருதயம், தொப்புள், இருகாள் இவைகளில் நியாஸஞ்செய்யவும்.

6–7. ஜாபால உபநிஷத்தில் சொல்லப்பட்ட இந்த ஷட் அக்ஷரமந்திரத்தின் முதலாவது பிரணவமாகவும், இரண்டாவது 'ந'காரமாகவும், மூன்றுவது 'ம'காரமாகவும், நான்காவது 'சி'காரமாகவும், ஐந்தாவது 'வ'காரமாகவும், ஆறுவது 'ய'காரமாகவும் (உள்ள அக்ஷரங்களாக) அறியவும்

16

**8–11.** (இப்பிரகாரம்) மந்திரம் அங்கத்துடன் சொல்லப் பட்டது; இப்பொழுது மந்திரார்த்தம் சொல்லப்படுகிறது. சிவ சப்தமானது ஸத்திய, ஞான, ஆனந்த ஸ்வரூபமாயுள்ள சிவனை (சப்தவிருத்தியாலல்லாமல், லக்ஷணுவிருத்தியால்) தொடாமல் குறிக்கிறது; 'நம:' என்ற சப்தம் நமஸ்காரத்தைக் குறிக்கிறது; பெரியோர்களால் நமஸ்காரம் வணக்கம் என்ற லக்ஷணத்துடன் கூடியது என்று சொல்லப்பட்டிருக்கிறது; (இந்த மந்திரத்தில்) வணக்கம் என்னவெனில், ஸத்தியம் ஞானம் முதலிய லக்ஷங்க ளோடுகூடிய சிவனைக்காட்டிலும், எதரர்த்தமன்றி மாயையால், வேருகத்தோன்றுகிற ஜீவனுக்கு அந்தச் சிவனுடன் தாதாத்மிய லக்ஷணமுள்ள ஸம்பந்தமேயாம்.

**12–13.** எல்லா மனிதர்களுக்கும் நித்தியஸித்தமான சிவ னே (பரசிவ சைதன்யமே) ஸாக்ஷாத் ஸ்வரூபம். (இதுதான் வாக்கியார்த்தம்).

(இந்த அர்த்தத்தையே வேறுபிரகாரமாக சொல்ல அக்ஷரங் களின் அர்த்தைச் சொல்லுகிருர்).

ஆகையால், ஸ்வரூபத்தை அறிய விரும்புகிற ஜீவனுக்கு நல் லது என்று ஒன்றை ஏற்றுக்கொள்ளலாவது, கெட்டது என்று ஒன்றை விட்டுவிடுதலாவது எப்பொழுதும், எதார்த்தத்திலாவது தோற்றத்தாலாவது, கிடையாது என்பது 'ந'காரத்தின் அர்த்த மாக அறியவும்.

'ம'காரத்தின் அர்த்தஞ் சொல்லப்படுகிறது.

**14–15.** 'மம' (என்னுடையது) என்பது 'ம'காரத்தின் அர்த்தம்; 'மம' என்பதில் ஒரு 'ம்'காரம் லோபத்தை யடைந் திருக்கிறது.

வியவகார திருஷ்டியால் இது (நம: என்பது) நமஸ்காரத்தை குறிப்பதாக சொல்லப்படுகிறது; இதனுல் நான்காம் வேற்றுமை (சிவன் பொருட்டு என்று) உபயோகப் படுத்தப்பட்டிருக்கிறது; வாஸ்தவத்தில் (நான்காம் வேற்றுமைக்கு இவ்விடத்தில் குறிப்பு) இல்லை.

'ஓம்'காரசப்தம் ஸர்வார்த்த வாசகமென்று (அறிபடும்பொருள் அறிபடாப்பொருள் எல்லாவற்றையும் பிரகாசிக்கும் வஸ்துவைக் குறிப்பதாக) சொல்லப்பட்டிருக்கிறது.

16. எல்லாவிடங்களிலும் பிரயோகிக்கப்படுவதால், எல்லா அர்த்தங்களும் (பதார்த்தங்களும்) சிவனேயாகையால் இந்தப் பிரணவம் பூர்ணமான சிவனுக்கு வாசகமென்று சொல்லப்படுகிறது.

17–19. (சிவஸ்வரூபம் வாக்கு மனதிற்கு எட்டாதாகையால் பிரணவத்திற்கு அதைக்குறிக்கும் வாசக, லக்ஷகதன்மைகள் எவ்விதம் என்றால் வாசக, வாச்சிய முதலியவை வியவகாரிக திருஷ்டியாலன்றி பாமார்த்தமாக இல்லையென்று சொல்லப்படுகிறது).

வாச்சிய வாசகதன்மையும், லக்ஷிய லக்ஷண தன்மையும் ஒன்றுக்கொன்று ஸம்பந்தமும் பாமார்த்தத்தை நிரூபிக்குங்கால் இல்லவேயில்லை; (ஏனெனில்) சிவனைத்தவிர மற்றவை எப்பொழுதும் இல்லாததால்; 'இருக்கிறது' 'இல்லை' 'பொய்யாகதோன்றுகிறது' 'தோன்றவில்லை' என்ற முதலியவை எல்லாம் மாயையால் சித்சுகாநந்த பரமாத்ம சிவனாகிய ஆத்மாவில் கல்பிக்கப்பட்டிருக்கின்றன; அந்த மாயையும், அதன் காரியமும் ஸத்யாதிலக்ஷணமுள்ள பிரத்தியக்ஷ ஸித்தமான இந்த சிவனைத்தவிர, பாமார்த்த நிரூபணத்தில், இல்லவேயில்லை.

20. அதிகமாகச் சொல்லுவதில் என்ன பிரயோஜன மிருக்கிறது! சிவனைத்தவிர வேறொன்றும் கிடையாது.

21. புத்திமான்கள் இஃதெல்லாவற்றையும் சிவஸ்வரூபமென்றே சொல்லுகிறார்கள்; அந்தந்த ரூபமாகத் தெரிகிறது அஞ்ஞானத்தாலன்றி எதார்த்தமாகவன்று.

22–24. இதுதான் இந்த மந்திரத்தின் அர்த்தமாயிருக்கிறது; ஸத்தியம், ஸத்தியம்; வேறுவிதமாகவில்லை; வேதங்கள், எல்லாப் புராணங்கள், மகாபாரதம், ஸ்மிருதிகள், மற்றுமுள்ள சாஸ்திரங்கள், தர்க்கம், பலவிதமான சைவாகமம், வைஷ்ணவாகமம், மற்றுமுள்ள ஆகமங்கள், (அப்படியே) வித்வான்களின் அனுப

வம் இவையெல்லாம் தன்னாலறியக்கூடிய இந்த அர்த்தத்தில் முடிவுபெறுகிறது; வேறில்லை.

25. (அப்படியானால் மேற்கூறியவை ஒன்றற்கொன்று விரோதப்படுகிறதேயெனில்)

வியவகாரத்தில், ஸமுத்திரத்தில் அலைகள்போல, இவை ஒன்றுக்கொன்று விரோதப்படுகிறதென்று வேதார்த்தத்திற் சுருக்கமாகவிருக்கிறது.

26–34. மந்திரார்த்தம் முழுவதுஞ் சொல்லப்பட்டது; இனி அதை ஜபஞ்செய்யவேண்டிய வழியைச் சொல்லுகிறேன். ஆசாரியன் மூலமாக அர்த்தத்துடன் மந்திரத்தைத் கவனமாகத் தெரிந்துகொண்டு, தன் சக்திக்குத் தக்கவாறு அவருக்கு தனத்தைக் கொடுத்துவிட்டு, அவருடைய அனுமதிபெற்று, முக்காலமும் ஸ்நானஞ்செய்து, விபூதிதரித்து, தன் பலத்திற்கு தக்கவாறு சாகம், பலம், மூலம், அல்லது ஹவிஸை புஜித்துக்கொண்டு, மலை உச்சி, நதிக்கரை, சமுத்திரக்கரை, சிவக்ஷேத்திரம், வனம் அல்லது பயமற்ற சுத்தவிடத்தில், கிழக்கு அல்லது வடக்கு முகமாயிருந்து, சாந்தமனதுடன். சுகமான ஆஸனத்தில் உட்கார்ந்து, மூன்று பிராணயாமங்கள்செய்து, மந்திரத்தின் ரிஷி, சந்தஸ், தேவதை, சக்தி, பீஜம் இவைகளை மனஸில் நினைத்துக்கொண்டு, அங்க நியாஸம், கரநியாஸஞ்செய்து, ஐந்து அங்கங்களையும் வினியஸித்து, குருவை ஸ்மரித்து நமஸ்கரித்து, ஹிருதய கமலமத்தியில் சந்திர, சூரிய, அக்னி மண்டலத்தில் மின்னல் கொடிபோலப் பிரகாசமாயும், அக்னி ரூபமாயும், சுபமாயுமிருக்கிற சிவத்தை தியானித்து, சஞ்சலமற்ற மனதுடன், ஆறு லக்ஷம் ஜபிக்கவும்; ஒரு லக்ஷம் (ஜலத்தால்) தர்ப்பணமும், ஓராயிரம் நெய், பால், அல்லது பலாச புஷ்பத்தால் ஹோமமுஞ் செய்தால் உடனே போக மோக்ஷப் பலத்தைக் கொடுக்கும் இம்மந்திரம் ஸித்திபெறும்.

35. அல்லது ஸாம்பனையும், ஈசானனையும், ஸதாசிவனையுமுள்ள தேவனை நர்த்தனஞ் செய்வதாகத் தியானித்து மந்திரத்தை ஸாதிக்கவும்.

36. அல்லது தன்னுடைய ஸ்வபாவமான (ஜீவன் என்ற) எண்ணத்தை நீக்கி எப்பொழுதும் 'நான் சிவனுயிருக்கிறேன்' என்று நினைத்து இந்த உத்தமமான மந்திரத்தை ஸாதிக்கவும்.

37–41. மந்திரஸாதனஞ் சொல்லப்பட்டது; இனி விநியோகஞ் சொல்லப்படும்; ஒருவன் நித்தம் பன்னிரண்டாயிரம் பக்தியுடன் ஜபித்தால் உத்தமஞானமாகிற தெப்பக்கட்டையை அடைந்து ஸம்ஸாரமாகிய சமுத்திரத்தைத் தாண்டுவான்; ஐன்பதுலக்ஷம் ஜபித்தால் காரணனுகிய ஈசுவரனையும், நூறுலக்ஷம் ஜபித்தால் நேரே ருத்திர பதவியையும், எண்பதுலக்ஷம் ஜபித்தால் விஷ்ணு பதவியையும், அறுபது லக்ஷம் ஜபித்தால் பிரம்ம பதவியையும், நாற்பது லக்ஷம் ஜபித்தால் விராட்டு ஆத்மாவையும், இருபது லக்ஷம் ஜபித்தால் தீர்க்காயுளையும், பத்து லக்ஷம் ஜபித்தால் ஆறு கர்மஸித்தியையுமடைகிறுன். இவ்விதமாக விநியோகஞ் சொல்லப்பட்டது; இப்பொழுது தேவனுடைய பூஜையைச் சொல்லுகிறேன்.

42–43. ஹிருதய தாமரைக்கொட்டையின் மத்தியில் (சிவனிருப்பதாக தியாநித்து) இந்த மந்திரத்தால் பூஜைசெய்யவும்; அல்லது, சூரிய மண்டலத்திலாவது, சந்திர மண்டலத்திலாவது, அல்லது அக்னியிலாவது, அல்லது பிரதிமைகளிலாவது சிவனை நித்தியம் பூஜிக்கவும்.

44–46. முதலில் ஆஸனத்தைக் கொடுத்து, பிறகு ஆவாஹனம், அர்க்கியம், பாத்தியம், ஆசமனம் கொடுக்கவும்; பிறகு ஸ்நானஞ் செய்துவைக்கவும்; வஸ்திரம், எக்ஞோபவீதம், ஆபரணம், கந்தம், புஷ்பம், தூபம், தீபம், அன்னம், மாலை, (சந்தனப்) பூச்சு இவைகளை ஸமர்ப்பித்து, நமஸ்கரித்து, இவையனைத்தையும் புத்திமான் ஷடக்ஷர மந்திரத்தால்செய்து, விஸர்ஜனஞ்செய்யவும்.

47–49. ஹிருதயகமல கர்ணிக நடுவில்நின்று தேவனை ஆவாகனமும், அந்தவிடத்திலேயே விஸர்ஜனமும் புத்திமான் செய்யவும்.

மனிதர்களுடைய போக மோக்ஷார்த்தமாக சுருக்கமாக எல்லாம் சொல்லப்பட்டது.

ஆகையால் மற்ற எல்லாவற்றையும் நீக்கி ஷடக்ஷர மந்திரத்தை ஜபிக்கவும்; ஷடக்ஷர மந்திரத்தால் எல்லாம் ஸித்தியாகுமென்பதில் ஸந்தேகமில்லை.

---

## அத்தியாயம் 9.

---

### (தியான யக்ஞம்).

1. ஸூதர்:—இனி இப்பொழுது போகமோக்ஷ பலத்தைக் கொடுக்கும் தியான யக்ஞத்தைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன்; நீங்கள் சிரத்தையுடன் கேளுங்கள். (இதுவரையிலும் வாசிக யக்ஞத்தைச் சொல்லிவிட்டு, அதைவிட உயர்ந்ததானதும் மானஸ கிரியையால் ஸாதிக்கக்கூடிய உபாஸனை ரூபமான தியான யக்ஞம் சொல்லப்படுகிறது).

2. மாயை (பரா) யைக் காட்டிலும் சிரேஷ்டமான (அத்விதீயமான பரசிவ) தத்வம் ஒரு மூர்த்தி ரூபமாகவே தியானஞ் செய்யத் தகுந்ததேயொழிய ஸ்வரூபமாக முடியாது; (ஏனெனில்) ஸாக்ஷியாயிருப்பதாலும், ஆத்மாவாயிருப்பதாலும், (ஒரு விஷயமுமன்றி) ஞானமாயிருப்பதால்,

3–7. பேதமில்லாமையாலும், உண்மையில் பேதம் பிரமையால் தோன்றுவதாலும் அந்த தத்வம் ஸ்வரூபமாகத் தியானிக்க முடியாது; உமையை பாதி சரீரமாகவுடையவரும், வெண்ணிறமானவரும், சந்திரசேகரரும், நீலகண்டரும், முக்கண்ணரும், புன்சிரிப்பு முகமுடையவரும், மனோஹரரும், வரதரும், அபயஹஸ்தரும், விசித்திரமான கிரீடத்தை தரித்தவரும், எல்லா லக்ஷணங்களும் பொருந்தியவரும், ஸர்வாபரணபூஷிதரும், தன் ஸ்வரூபதியான ஸந்தோஷத்தால் மகா நர்த்தனஞ் செய்துகொண்டிருப்பவரும், பிரம்மா விஷ்ணு ருத்திரர்களால் தியானிக்கத் தகுந்தவரும், ஆதியந்தமற்றவரும், சுருதியில் சொல்லப்பட்ட எந்த மூர்த்தியுளதோ அவரே பரத்தைக்காட்டிலுஞ் சிரேஷ்டமான தத்வத்தின் விசேஷ மூர்த்தியாகும்.

எப்பொழுதும் எவர்கள் இந்த சிரேஷ்டமான மூர்த்தியை ஹிருதயகமலத்தில் தியானஞ் செய்கிறார்களோ அவர்கள் உயர்ந்த முக்தியையும் போகத்தையும் யடைகிறார்கள்.

8–9. ஞானம் (ஸத்வகுணமாயுள்ள அந்தக்கரண விருத்தி), அக்ஞானம் (தமோகுணமான அந்தக்கரண விருத்தி) மகாமாயை (தன்னை ஆசிரயிக்கிறவர்களை மொகஞ்செய்யாதது), அவித்யை (மோகஞ்செய்கிறது) இவைகளுடன் (இந்த உபாதிகளுடன்)கூடி அபேதமாயிருக்கிற பாதத்தைக்காட்டிலும் சிரேஷ்டமான இந்த பதமானது (தத்வம்) தனது பிரதானத் தன்மையாலும் (உத்தமாதிகாரிகளுக்கு ஞானவிருத்தியாலும்), அப்படியே தன் பிரதானத் தன்மையற்றதாலும் (அதமாதிகாரிகளுக்கு மகாமாயா அவித்யா விருத்திகளாலும்), ஸம பிரதானத் தன்மையாலும் (நடுத்தன்மை, மத்தியமாதிகாரிகளுக்கு அக்ஞான விருத்தியாலும்) புத்திமான்களால் சிரத்தையுடன் உபாஸிக்கத்தகுந்தது.

10–11. சுத்த மனதுடையவர்கள் பாதத்வத்தை ஸ்வப்பிரதானத் தன்மையாகவும், அப்படியே பரிபாகமில்லாத மனதுடையவர்கள் ஸ்வப்பிரதானத் தன்மையற்றதாகவும், அப்படியே நடுத் தன்மையுள்ள மனிதன் ஸமப்பிரதானத் தன்மையாகவும் ஆதரவுடன் தியானஞ் செய்கிறார்கள்.

12. புத்திமான்களால் சக்தியின் ஜட ஆகாரம் எதுவுண்டோ (அக்ஞானம்) அதற்கு அபின்னமான பாதத்வத்தை ஸ்வ பிரதான முதலிய மூன்றுவிதமாக உபாஸிக்கப்பட வேண்டும்.

13. அவ்விதமே சக்தியின் ஞானகாரம் எதுவுண்டோ அத்துடன் ஒன்றாயுள்ள பாதத்வத்தை புத்திமான்கள் மூன்றுவிதமாக உபாஸிக்கவேண்டும்.

14–15. அப்படியே மாயையுடனும், அவித்யையுடனும் பேதமற்றுயிருக்கும் பாதத்வமான பிரஹ்மம் புத்திமான்களால் மூன்றுவிதமாக உபாஸிக்கப்படவேண்டும்.

16–17. ஹே! புத்திமான்களே! சக்தியின் வேறு ரூபங்கள் (இச்சை, ஞானம், கிரியை முதலியவை) எவை உளதோ,

அவைகளுடனும் ஒன்றுயுள்ள பாதத்வம் புத்திமான்களால் நித்தியம் சிரத்தையுடன் மூன்று விதமாக உபாஸிக்கப்படவேண்டும்.

ஈக்ஷண (ஸிருஷ்டிக்க யத்னப்பட்ட) உபாதியுடன் கூடிய பரதத்வம் ஹே! த்விஜர்காள்! மூன்று விதமாக பிரியத்துடன் உபாஸிக்கப்படவேண்டியது.

**18-20.** பிரஹ்ம சக்தியிலிருந்து உண்டான ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்கள் எவையோ அவைகளுடன் ஏகத்வத்தை யடைந்த பரமான பிரஹ்மம் கிரமமாக ருத்திரன், பிரஜாபதி, விஷ்ணுவென்ற பேதத்தை யடைந்தது; அவர்களும் ஜகத்தின் ஸிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங்களுக்கு கர்த்தாக்களாகவும் காரிய ரூபிகளாகவு மிருக்கிறபடியால், தங்கள் உபாதிகளுடன்கூட, மூன்றுவிதமாக உபாஸிக்கப்படவேண்டும்.

**21.** புத்திமான்களால் அவரவர் சித்த பாகத்திற்கு தக்கவாறு பிரம்மா, விஷ்ணு, ருத்திரர்களால் கிரகிக்கப்பட்ட (அவதாரம் பூண்ட) மூர்த்திகளும் மூன்றுவிதமாக உபாஸிக்கப்படவேண்டும்.

**22.** அக்னி, சூர்யன் முதலான தலை, இடை, கடை தேவர்களும் பிரஹ்ம ரூபமாக எப்பொழுதும் சிரத்தையுடன் உபாஸிக்கத் தருந்தவர்கள்.

**23-24.** புத்திமான்களால் சப்தம், ஸ்பரிசம் முதலிய ஐந்து பதார்த்தங்களும், ஆகாசம் முதலிய பஞ்சமகா பூதங்களும் பிரஹ்மரூபமாகவே உபாஸிக்கத்தக்கவை.

**25-43.** பூத ஸம்பந்தமான அநேக அண்டங்களும், அண்டமத்தியிலுள்ள அநேக லோகங்களும், லோகமத்தியிலுள்ள அநேக தேசங்களும், மேரு, மந்தாரமுதலிய பலவிதமான பர்வதங்களும், தேவர்கள், ரிஷிகள் முதலியவர்களால் நிர்மாணிக்கப்பட்ட நதிகளும், நதங்களும், வாபி, கூப, தடாகங்களும், லோகத்திலுள்ள அநேகவிதமான காடுகளும், ஸமுத்திரம், ஸமுத்திரத்திலுள்ளவைகள், ஸங்கமங்களும், திக்குகள், குறுக்குதிக்குகள், பகல், இரவு, எதிர்காலம் முதலிய காலங்களும், முட்டையினின்றும், ஜராயுப்பையினின்றும், வேர்வையினின்றும், வித்துக்களினின்

றும் உண்டானவைகளும், பிரஹ்ம, க்ஷத்திரிய, வைச்ய, சூத்திர, சங்கர ஜாதிகளும், பிரம்ம சர்யாதி ஆச்ரமங்களும், அவைகளின் ஆசாரங்களும், மகா பாதகம்முதலிய பாபங்களும், உத்தம மத்தியம அதம தர்மங்களும், சுகம், துக்கம், இவைகளின் அனுபவமும் ஸாதநங்களும், செய்கிறவன், செய்துவைப்பவன், செய்கை, செய்தல், செய்யத்தகுந்தது இவைகளும், அறிகிறவன், அறிகை, அறியத்தகுந்தது, அறிவு இவைகளும், விதி, நிஷேதம், வித்தை, அவித்தை, அர்த்தமுள்ளதும் இல்லாததுமான அநேக வாதங்கள் (கக்ஷிகள்), இவைகளெல்லாம் புத்திமான்களால் பிரஹ்மரூபமாக உபாஸிக்கத்தகுந்தவை.

44. பிரஹ்மத்தை யறிந்தவர்களால், நித்தியம், எவையெல்லாம் இருக்கிறதாகத் தோன்றுகின்றனவோ, எவையெல்லாம் இல்லையென்று தோன்றுகின்றனவோ அவைகளையெல்லாம் பிரஹ்மரூபமாகவே உபாஸிக்கப்படவேண்டும்.

45. இவ்விதமாக எவன் எல்லாவற்றிலும் நித்தியமாயுள்ள பிரஹ்மத்தை உபாஸிக்கிறானோ அவன் தியானயக்ஞத்தால் ஈசுவர ஞானத்தை யடைகிறான்.

46. தியான யக்ஞத்தின் மேன்மையை என்னாலாவது என்னைவிட பெரியோர்களாலாவது கோடி கல்பகாலத்திலுஞ் சொல்லமுடியாது.

47. தியான யக்ஞமில்லாமல் மோக்ஷத்தையடைய முயற்சி செய்கிற மூடர்கள் பாயஸான்னத்தைவிட்டு கொடியவிஷத்தை புசிக்கிறவர்களைப்போலாவார்கள்.

48. ஞானயக்ஞம் கொஞ்சமுமன்றி முக்திக்கு முயலுகிறவர்கள் காதுகளில்லாமல் கண்களால் சப்தத்தை கிரகிப்பவர்களுக்கு ஒப்பாவார்கள்.

49. வேதத்தில் சொல்லப்பட்ட அச்வமேதமுதலிய யக்ஞங்கள் தியான யக்ஞத்தினுடைய பதினாறில் ஒரு அம்சத்திற்குக் கூட ஒப்பாகா.

50 தியான யக்ஞத்தில் முயற்சியுள்ள மனிதன் சிவனே தவிரவேறில்லை; தியான யக்ஞத்திலேயே நிஷ்டையுடையவனுக்கு அடையக்கூடாதது ஒன்றுமில்லை.

51. தியான யக்ஞத்திலிருப்பவனுக்கு ஸம்ஸாரத்தை நிவர்த்தி செய்கிறவரும், ஸர்வக்ஞராயுமுள்ள சிவன் பிரஸாதமளிக்கிறார்.

52. அதிகமாகச் சொல்லுவதில் என்ன பிரயோஜனம்! எல்லாம் சுருக்கமாக உங்களுக்குச் சொல்லப்பட்டது; தியான யக்ஞத்தை, ஸந்தேகமற்று, வேதமறிந்தவர்களில் சிரேஷ்டர்களே! அனுஷ்டிக்கவும்.

---

## அத்தியாயம் 10.

---

### (ஞான யக்ஞ விவரணம்).

1. ஸூதர்:- இனி இப்பொழுது ஞானயக்ஞத்தின் வைபவத்தைச் சொல்லுகிறேன்; ஹே! விப்ரர்களே! ஞான யக்ஞத்தைக் காட்டிலும் மேலான யக்ஞம் சுருதியிலும் ஸ்மிருதியிலும் இல்லை.

2. வேதார்த்தஞான மறிந்தவர்களால் ஞானம் அநேகவிதம் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

3. பரமாத்மாவான சிவனுடைய ஸ்வரூபமான ஞானம் ஒன்றே; அதுவே மாயை, மாயையின் காரியங்களின் பேதத்தால் அநேகவிதமாக ஆகிறது.

4. சிவனுடைய ஜடசக்தியின் மாயாரூபத்துடன் (சுத்த ஸத்வத்துடன்) ஸம்பந்தப் படும்பொழுது ஞானமானது ஈசுவரன் என்கிற பெயருடன் ஜகத்திற்கு கர்த்தாவாகிறது.

5. சக்தியின் அவித்யாரூபத்துடன் (மலின ஸத்வத்துடன் சேரும்பொழுது ஞானம் ஜீவன் என்கிற பெயரையடைகிறது; ஜீவன் என்ற பெயருள்ள ஞானம் இரண்டுவிதமாக லோகத்தில் ஏற்பட்டிருக்கிறது; முக்கியார்த்தத்தில் ஒன்றும், தோற்றுதல் அர்த்தத்தில் ஒன்றுமாக ஏற்பட்டிருக்கிறது.

6 அவித்தையால் (காரண சரீரத்தால்) கட்டப்பட்ட ஞானம் முக்கியமென்றும், ஸ்தூல ஸூக்ஷ்ம சரீரங்களுடன் சேர்ந்த (அந்தக்கரணம் என்ற) ஸத்வம் (காய்ந்த லோஹமும் அக்னியும் ஒன்ருகத் தோன்றுவதுபோல) தோற்றத்தால் ஜீவன் என்றும் சொல்லப்படுகிறது.

7. தனது விஷயரூபமான விருத்திகளில் சஞ்சரித்துக் கொண்டிருக்கிற சித்தம், ஜீவரூபத்தைப் பிரகாசிப்பதற்கும், ஜீவனுக்கு 'அறிகிறேன்' என்ற தன்மைக்கும், துக்கப்படுகிறேன் (ஸுகப்படுகிறேன்) என்றவைகளுக்கும் காரணமாயிருக்கிறது.

8. காலகர்ம பரிபாகத்தால் ஹே! முனீசுவரர்களே! பிரமாணம், பிராந்தி, ஸந்தேகம் முதலிய ரூபங்களாக சித்தம் அநேக விதமாக ஆகிறது.

9. ஞானம் அந்தந்த விருத்திகளுடன் சேரும்பொழுது பிரமாண ஞானமென்றும், பிராந்திஞானமென்றும், ஸந்தேக ஞானமென்றுஞ் சொல்லப்படுகிறது.

10. தோஷமற்ற இந்திரியங்களால் உண்டான ஞானம் ஸூக்ஷமத்தையறிந்த ரிஷிகளால் பிரமாணஞானம் என்று சொல்லப்படுகிறது.

11. குற்றமுள்ள இந்திரியங்களால் உண்டான ஞானத்தை பிராந்தி ஞானமென்றும், அதுவோ, இதுவோவென்று இரண்டு பக்கங்களையும் தழுவும் ஞானத்தை ஸந்தேக ஞானமென்றும் ஆஸ்திகர்கள் சொல்லுகிருர்கள்.

12. 'இது இப்படித்தான் உளது' என்று உண்டாகிற ஞானத்திற்கு நிச்சய ஞானமென்று வித்வான்களால் சொல்லப்படுகிறது.

13. அத்துடன் ஞானஸம்பந்தத்தை பிரமாணம் என்று என்ருல் சொல்லப்படுகிறது; அந்தப் பிரமாண ஞானத்திற்கு ஆறு (ஸாமக்ரிகள்) வழிகள் இருக்கின்றனவென்று நான் சொல்லுகிறேன்

14. அவைகளில் ஒன்று அபாவ (இல்லையென்ற) ஞானத்திற்கு உபாயமும், மற்ற ஐந்து பாவ (இருக்கிறது என்ற) ஞானத்திற்கு உபாயங்களுமாக சொல்லப்படுகிறது.

15. ஹே! ஆஸ்திகர்களே! எந்த பதார்த்தத்தின் ஞானம் அது அடையப்படாமலே (கண்ணுல் பார்க்கப்படாமல் அல்லது அறியாமல்) உண்டாகிறதோ அதற்கு அபாவ ஞானமென்று சொல்லப்படுகிறது.

16. இந்திரியங்களின் மூலமாக உண்டாகிற ஞானம் பிரத்யக்ஷம் என்றும், வியாப்தியால் (ஒன்றைச் சூழ்ந்துக்கொண்டிருக்கிறதால்) உண்டாகும் ஞானம் அனுமானம் என்றும் சொல்லப்படும்; (அக்கினியைச் சூழ்ந்துகொண்டிருக்கும் புகையால் அக்னி உண்டென்ற ஞானம்).

17. திருஷ்டாந்தத்தால் உண்டாகும் ஞானம் உபமானம் என்றும், ஒன்றுக்கு காரணமாயிருந்து தோன்ருமலிருப்பதின் ஞானம் அர்த்தாபத்தி என்றும் சொல்லப்படும்.

18 (சொல்வோன்) கருத்துடன்கூடிய வார்த்தையினுல் உண்டாகும் ஞானத்திற்கு சப்தஞானமென்று சொல்லப்படுகிறது; அச்சப்தமும் ஹே! சிரேஷ்டர்களே! மூன்றுவிதமாக வகுக்கப்பட்டிருக்கிறது.

19–21. அக்ஷரங்கள் (எழுத்துகள்), பதங்கள், வாக்கியங்கள், என்று வகுக்கப்பட்டிருக்கிறது; இவ்விஷயத்தில் சிலர் எழுத்துக்களே பொருள்களின் வாசகமென்றும், சிலர் பதங்களே வாசகமென்றும், சிலர் வாக்கியங்களே பொருள்களின் வாசகமென்றும், நன்கு விளங்கக்கூடிய பிரமாணங்கள் என்று சொல்லுகிருர்கள்.

22–23. பதங்கள் ஒரு எழுத்துள்ளதாயும் பல எழுத்துக்களுள்ளதாயும் இருக்கின்றன; பதங்களுடைய கூட்டத்திற்கு வாக்கியம் என்று பெயர்; வாக்கியம் முக்கியமென்றும் (பிரதானம்), குணபூதமென்றும் (நடுத்தரம்) இரண்டு விதமாகவுள்ளது.

24. முனிசிரேஷ்டர்களால் பிரதானவாக்கியம் மஹா வாக்கியமென்றும், குணபூதம் அவாந்தர வாக்கியமென்றும் சொல்லப்படும்.

25–27. இந்த இரண்டுஞ்சேர்ந்து ஒரே பொருளைக்குறித்து நிச்சயஞ்செய்வதால் 'ஏகவாக்கியம்' ஆகிறது; பதங்கள் தத்தஞ்சக்

தியால் அர்த்தங்களுக்கு வாசகங்களாயிருக்கின்றன; வாக்கியங்கள் தத்தம் தாத்பரியத்தால் பொருள்களை தெரியப்படுத்துகின்றன.

வித்வான்களால் தாத்பரியமும் மஹாதாத்பரியமென்றும் அவாந்தர தாத்பரியமென்றும் இரண்டுவிதமாக சொல்லப்படுகிறது. அவாந்தரதாத்பரியம் மஹாதாத்பரியத்தின் சேஷமாயிருக்கும் (மிகுதியாய், அதன் அர்த்தத்திற் குட்பட்டுமிருக்கும்).

28–29. இங்ஙனமிருக்க சில வாக்கியங்கள் நிஷேதரூபமாகவும் (விலக்கு, தடை) சில விதிரூபமாகவும் (கட்டளை, நியமிப்பு), சில ஸித்தமாயுள்ள (எப்போதும் உண்மையாயிருக்கிற) அர்த்தத்தை அறிவிப்பதாயும் இருக்கின்றன.

30–31. இவைகளில் விதியும் நிஷேதமும் செய்யத்தகுந்தாயுள்ள விஷயத்தைப்பற்றி இருக்கின்றன; இருக்கிற அர்த்தத்தை போதிக்கிற வாக்கியம், உலக ஸம்பந்தமாயினும், வைதிக ஸம்பந்தமாயினும், இரண்டுவிதமாக, பெரியோர்களால், சொல்லப்படுகிறது; ஒன்று முன்னமேயே அடையப்பட்டதை (புதியதாய் இப்பொழுது) அடையப்பட்டதாகக் குறிக்கும் வாக்கியம் ஒன்றும், முன்னமேயே நிவிர்த்தியாயுள்ள தோஷத்தை (புதிதாய் இப்பொழுது) விட்டு நீங்குதலைக் குறிக்கும் வாக்கியம் ஒன்றுமாக சொல்லப்படுகிறது.

32–33. பிரத்யக்ஷமுதலிய ஐந்து பிரமாணங்களுஞ் செய்ய வேண்டுமென்ற விஷயத்தைக்குறித்த வாக்கியங்களாயும், (தனது ஆத்மாவிற்கு) வெளிப்பட்ட விஷயத்தைப் பற்றியிருப்பதால் அனாத்மவிஷயங்களாகவு மிருக்கின்றன; ஆத்மவஸ்து உள்பட்டிருப்பதால் அது பிரத்யக்வஸ்து.

34. ஆகையால் பிரத்யக்ஷமுதலிய எல்லாப் பிரமாணங்களாலும் பிரத்தியக்பூதமாயுள்ள (உள்ளிருக்கும்) சிவனை அறிய ஒருவராலும் முடியாது.

35. வெளியிலுள்ள பதார்த்தங்களெல்லாம் அனாத்மாவாகக் காணப்படுகிறபடியால் உள்ளிலிருக்கும் பிரத்யக் ஆத்மாவான

சிவன் ஒருபொழுதும் பராக் (வெளி) பதார்த்தமான அனுத்மா வாகாது.

36. எப்பொழுதும் ஸித்தித்துள்ள அர்த்தத்தையறிவிக்கும் சில லோக வாக்கியம் அனுத்ம விஷயத்தைக் குறிப்பதால் அவைக ளால் சிவனை யறியமுடியாது.

37–38. எப்பொழுதும் ஸித்தமாயுள்ள பொருளைக்குறிக்கும் சில லோக வாக்கியம், சுருதியை முன்னிட்டிருப்பதால் பிரத்யக் ரூபமான சிவனையறிய பிரமாணமாகும்.

(ஆயினும்) வேதாந்தங்களிலுள்ள மகாவாக்கியம் பிரத்யக் பிரஹ்மத்தைக்காட்டி மஹத்தாயும் (எங்கும் நிறைந்துள்ளதும்), ஆனந்தமாயும், சிவனுயுமுள்ள ஆத்மாவை யடைவதில் ஸாதன மென்று சொல்லப்படுகிறது; இதுவே (இந்த மகாவாக்கியமே) பிராந்தியால் தோன்றுகிற ஸம்ஸாரத்தை நீக்குகிறது.

39. ஹே! வேதமறிந்தவர்களே! ஆத்மா ஸ்வபாவமாகவே (ஸம்ஸாரத்தில்) கட்டுப்பட்டிருந்தால் நூறு ஜன்மங்களெடுத்தா லும் ஒருவன் ஸம்ஸாரத்திலிருந்து விடுதலையடையான்.

40. எவனுக்கு ஒரு தர்மம் (குணம்) ஸ்பாவமாக வுள்ள தோ, வேறுவிதமாக அந்த தர்மத்தின் ஸம்பந்தமில்லையோ, அவ னுக்கு குணத்தையுடைய தன்னுடனே நாசமொழிய ஸ்பாவ குணத்திற்கு மாத்திரம் நாசமில்லையன்றோ.

41. ஆத்மாவுக்கோ ஒருக்காலும் நாசம் கிடையாது; ஏனெ னில் அனுத்மாவாகிய கடாதிகளுக்கு நாசத்தை நாம் காண்கிறோ மேயொழிய ஆத்மாவிற்கு இல்லை.

42–43. எப்படி ஆகாசத்திற்கு கடமுதலிய உபாதி ஸம் பந்தத்தால் வேற்றுமை தோன்றுகிறதோ அப்படி ஆத்மாக்களுக் குள்ள பேதமும் ஆத்மாவுக்கும் பிரஹ்மத்திற்குமுள்ள பேதமும் உபாதியால் உண்டாகிறதேயொழிய ஸ்வபாவமாக இல்லை.

44. வேதாந்தம் 'ஏகம் ஏவ' (ஒன்றே) என்ற தாத்பரியத் தால் மகேசுவரனை (ஆத்மாவை) குறித்துக்காட்டுகிறது; சித்திற்கு (அறிவுக்கு) சித்ரூபத்துடன் ஒருவிதத்தாலும் வேற்றுமையில்லை.

45. சித்தினல் விளங்கப்படும் பதார்த்தங்களுக்கு (சைத்யத்திற்கு) அவைகளுக்குள் பேதமேயொழிய சித்திற்கு பேதமில்லை; ஆத்மபூதமாயிருக்கப்பட்ட சிவன் எப்பொழுதும் சின்மாத்திர ஜ்யோதியாகவே இருக்கிருன்.

46. சைத்தியங்களாகிய கடம்முதலியவை அனுத்மாவாக காணப்படுகிறதன்ரே (ஆகையால் அஹங்காரமுதலியவைகளும் ஆத்மாவன்று);

சில முனீசுவார்கள் (ஸாங்கிய காஞதர்கள்) ஆத்மாவுக்கும் ஸ்வபாவமாக பேதமிருப்பதாக சொல்லுகிருர்கள்.

47. அது சரியன்று; ஆத்மா பேதத்திற்கு துணைக்காரணமாகவும், சாக்ஷியாகவுமிருக்கிருன்; அப்படியிருக்க சிவனுயுள்ள ஆத்மா எப்படி பின்னனுயிருப்பான்.

48. எப்படி ஒரே ஆகாசத்தில் (கடாகாசம், மகாகாசம் முதலிய) பேதமானது பிராந்தியால் தோன்றுகிறதோ அப்படி ஆத்மாவில் பேதமானது பிராந்தியால் உண்டாகிறதேதவிர உண்மையாகவில்லை.

49. எதற்கு எது ஸ்வபாவமாகவே இருக்கிறதோ அதற்கு அதைக்காட்டிலும் வேருன குணங்கள் வேறு உபாதியின் சேர்க்கையால் உண்டானவையென்று லோகத்தில் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது.

ஆகையால் ஸ்வாபவத்தில் இரண்டற்ற பாமாத்மாவின் பேதம் பிராந்தியாம்.

50-52. ஹே! வேதக்கரைகண்டவர்களே! கடம் முதலியவைகளுக்கு பேதத்தை ஒப்புக்கொண்டு ஆத்மாவின் பேதமானது தள்ளப்பட்டது.

அவ்விதமே குடம் முதலியவைகளின் பேதமும் யுக்தியாலும் பிரமாணத்தாலும் பிராந்தியால் ஸித்தித்ததேயன்றி உண்மையாக இல்லை; (ஆனுல்) கடம் முதலியவைகளின் பேதமானது (கிளிஞ்சலில் வெள்ளிபோல்) தோற்றமட்டுமுள்ள பதார்த்தங்கள்போல் பிராந்தியல்ல; வியவகாரத்தில் கடம் முதலியவை ஸத்தியமே.

53. ஸ்வரூபத்தினுலாவது, குணத்தினுலாவது உண்மையில் இவைகளின்பேதம் நூறுவருஷமானுலும், நிலைநிறுத்தமுடியாது.

54–55. ஒரு பதார்த்தத்தின் பேதம் வேறொரு பாதார்த் தத்தினுல் ஸித்திக்கவேண்டுமேதவிர ஏகமாகிய அதனுலேயே ஒருபொழுதும் பேதம் ஸித்திக்கமாட்டாது; ஒரு வஸ்துவைக் காட்டிலும் வேறென்று இருக்கிறது என்று பேதம் ஸித்தித்தால் தான் யுக்திமுதலியவை ஏற்படும்.

'ஏகம் ஏவ; அத்விதீயம் ஸத்' (ஒன்றே ஒன்று; ஸத் இரண் டற்றது) என்று சுருதி அன்புடன் சொல்லுகிறது; வேறுபாடா கத் தோன்றுகிற இந்த ஜகத் மாயாமாத்திரம் என்று மேலான சுருதி கூறுகிறது.

56. 'ஒருமையை' (ஒரு பொருளாயிருக்குந் தன்மையை) அறிந்தவனுக்கு மோகமேது! துக்கமேது! என்றும், 'இரண்டாவ தான பதார்த்தத்தினுலேயே பயம் உண்டாகிறது' என்றும், அற் பத்தில் (ஜகத்திலுள்ள நசிக்கிற வஸ்துக்களால்) ஸுகமில்லை யென்றும் சுறுதி கூறுகிறது.

57. ஆகையால் தர்க்கம் பிரமாணம் இவைகளால் வஸ்து வின் ஏகத்வம் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது; அப்படியே வித்வான்க ளுடைய அனுபவத்தாலும் ஏகத்வம் நிச்சயிக்கப்படுகிறது.

58. எவர்கள் மஹாவாக்கியத்தினுலேயே வஸ்து ஏகத்வத் தை அறிகிறுர்களோ அவர்கள், நித்திரையினின்று விழித்துக் கொள்ளுவதுபோல் (வேறு கர்மாபேக்ஷையன்றி), ஸம்ஸாரத்தி னின்றும் விடுதலை யடைகிறுர்கள்.

59. பேதத்தோற்றத்தை கைப்பற்றிக்கொண்டு முக்திய டைய விருப்பமுள்ளவர்கள் மகாபயங்கரமான ஸம்ஸாரத்தில் விழு வார்கள் என்பதில் ஸந்தேகமில்லை.

60. எல்லா பூதங்களில் (தனது) ஆத்மாவையும், ஆத்மா வில் ஸமஸ்த பூதங்களையும் எவன் பார்க்கிறுனே (வேறன்று, ஆத் மாவே என்று எவன் அறிகிறுனே) அவன் ஆத்மயாகம் (ஞான யக்ஞம்) செய்கிறவனுகி ஸ்வாராஜ்யத்தையடைகிறுன்.

61. ஆத்மாவிலேயே எல்லாபூதங்களையும் பார்க்கிறவன் ஸம்ஸாரஸமுத்திரத்திலிருந்து கிளம்புகிறான் என்பதில் ஸந்தேகமில்லை.

62. அநேகர் அத்வைத ஞானத்தால் ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுதலைபடைந்திருக்கிறார்கள்.

63. துவைத ஞானத்தைக் கைப்பற்றி முக்தியடைய இச்சிப்பவர்கள் மஹாமோஹ ஸம்ஸார ஸர்ப்பத்தால் கடிபட்டவர்கள் என்பதில் ஸந்தேகமில்லை.

64. கெட்ட மனிதர்கள் உண்மை ஞானமாகிற ஆத்ம யக்ஞத்தை விலக்கி கிரியாரூபங்களான யக்ஞங்களில், மாயையால் சூழப்பட்டு, பிரவர்த்திக்கிறார்கள்.

65. எவர்கள் ஸம்ஸார ஸமுத்திரத்தின் கரையையடைய கர்மயக்ஞத்தால் முயலுகிறார்களோ அவர்கள் சூரியனில்லாமல் கொடிய இருளால் எல்லாவத்தையும் பார்க்கிறவர்களுக் கொப்பாவார்கள்.

66. ஞானயக்ஞமாகிய தெப்பக்கட்டையினால் ஒருவன் பிராமணனாயிருந்தாலும், கீழ்ப்பட்ட ஜாதியானாயிருந்தாலும் ஸம்ஸார ஸாகரத்தைத் தாண்டி முக்தியாகிற கரையை யடைகிறான்.

67–68. அஹோ! (ஆச்சரியம்), மாணிடர்கள் மகேசுவர ஞானமாகிய யக்ஞவைபவத்தை யறியாமல் ஸாரமற்ற உலகத்தில் முயற்சியுள்ளவர்களாயிருக்கிறார்கள்.

ஞானயக்ஞத்தின் வைபவத்தை தேவர்கள்கூட அறியமாட்டார்கள்; மாணிடர்கள் அறியாமலிருப்பதற்கு கேள்வி ஏன்! ஹே! விப்ரர்களே! எல்லாமறிந்த சிவன் அறிவார்!.

69. எல்லா தர்மங்களிலும் ஸமபுத்தியுள்ள சிவனடியார்கள், ருத்திரனுடைய கிருபையால்மாத்திரம், ஞானவைபவத்தை அறிவார்கள்.

70. அருளற்ற பாபஜனங்களால் ஹே! பிரஹ்ம சிரேஷ்டர்களே! எச்சாதனங்களாலும் ஞானயக்ஞத்தை அறியமுடியாது.

**71.** ஞான யக்ஞத்திலிருப்பவனுக்கு அடையக்கூடாத பதார்த்தம் ஒன்றுமில்லை; எல்லாம் பிரஹ்ம ரூபமாக (அவனுக்கு) விளங்குகிறபடியால் தள்ளத்தகுந்தது ஒன்றுமில்லை.

**72.** ஞான யக்ஞத்தின் வைபவத்தை என்னுலும், முனிகளாலும், தேவர்களாலும், மற்ற எந்த ஜந்துக்களாலும் வர்ணிக்க முடியாது.

**73.** சுருதியினுலாவது அல்லது சிவனுலாவது ஞானயக்ஞத்தின் வைபவம், கொஞ்சம், வர்ணிக்கமுடியும்; இது ஸத்தியம், ஸந்தேகமில்லை.

---

## அத்தியாயம் 11.

### (ஞானயக்ஞ விசேஷம்).

(முன் அத்தியாயத்தில் பிரத்யக் ஆத்மாவின் பரசிவ ஸ்வரூப ஞானமே முக்தி ஸாதனமென்றும், அவ்விஷயத்தில் வேதாந்த வாக்கியமே பிரமாணம், வேறு பிராமணமில்லையென்றும் ஸ்தாபிக்கப்பட்டது; ஸம்ஸாரியாயுள்ள ஜீவனுக்கு எவ்விதம் ஸம்ஸாரமற்ற பிரஹ்மத்துடன் ஏகத்வம் பொருந்துமென்று இந்த அத்தியாயத்தில் பிரதிபாதிக்கப்படுகிறது).

**1.** *ஸூதர்:*—மறுபடியும் ஞானயக்ஞத்தைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன்; ஆனந்தத்தையடைய ஹே! முனிசிரேஷ்டர்களே! அதிகப் பிரீதியுடன் கேளுங்கோள்.

**2.** ஹே! முனீசுவரர்களே! தர்மம், அதர்மம் இவை இருக்கின்றன என்கிற புத்தி எவர்களுக்கு உளதோ அவர்கள் ஞானத்தோடு நிறைந்தவர்களென்று எனது நிச்சயமான அபிப்பிராயம்.

**3–15.** தர்மாதர்மங்களின் பிரயோஜனங்கள் உளவென்று எவர்களுடைய மனதில் ஸ்திரமான நம்பிக்கையுண்டோ அவர்களும்; சுருதி, ஸ்மிருதி முதலியவைகளில் எப்பொழுதும் எவர்களுக்கு நம்பிக்கையுண்டோ அவர்களும்; பரலோகம் ஒன்றுண்டு யென்ற புத்தி எவர்களுக்குண்டோ அவர்களும்; யமனும் அவரு

டைய பரிவாரங்களும் இருக்கிறார்கள் என்ற ஞானம் எவர்களு டைய மனதில் இருக்கிறதோ அவர்களும்; பூத, பிரேத முதலிய வை இருக்கின்றனவென்ற ஞானமுடையவர்களும்; யக்ஷ ராக்ஷ ஸர்கள் இருக்கிறார்கள் என்று எவர்களுக்கு பிரமாணத்தால் தோற் றுகிறதோ அவர்களும்; முனிகள் இருக்கிறார்கள் என்ற புத்தி யுடையவர்களும்; இந்திராதி தேவர்கள் இருக்கிறார்கள் என்று எவர்களுடைய சித்தத்தில் பிரகாசமுண்டோ அவர்களும்; தேவர் களுக்குள் பிரஹ்மா சிரேஷ்டர் என்று அறிகிறவர்களும்; பிரமா ணத்தால் பிரஹ்மாவைவிட விஷ்ணு மேலானவர் என்று அறிந்த வர்களும்; பிரமாணத்தால் விஷ்ணுவைக்காட்டிலும் ருத்திரர் மே லானவரென்று அறிகிறவர்களும்; ருத்திரரைக்காட்டிலும் ஈசுவ ரன் சிரேஷ்டர் என்று நிச்சயமாய் அறிகிறவர்களும்; ஈசுவரனைக் காட்டிலும் ஸதாசிவன் மேலானவராக எவர்களுடைய சித்தத்தில் உதிக்கிறதோ அவர்களும்; (முற்கூறியவை காரியப் பிரம்மா முத லானவர்கள்; இனி காரணப் பிரம்மா முதலானவர்கள் சொல்லப் படுகின்றன); ஞானம் நிறைந்தவர்கள் என்று என்னுடைய நிச் சயமான கொள்கை.

16–20. ஸதாசிவனைக்காட்டிலும் பிரம்மா மேலானவர் என் றும், பிரம்மாவைவிட விஷ்ணு சிரேஷ்டர் என்றும், விஷ்ணுவை விட ருத்திரன் மேலானவர் என்றும், ருத்திரனைக்காட்டிலும் ஈக்ஷி தன் (ரஜோகுணத்துடன் சிருஷ்டிக்காக முயன்றவன்) மேலான வர் என்றும், இவரைக்காட்டிலும் எப்பொழுதும் ஸர்வக்ஞரா யுள்ளவர் (சிருஷ்டிக்குமுன் ஸத்வகுணத்துடன் கூடினவர்) சிரே ஷ்டர் என்றும், அறிந்தவர்கள் விக்ஞானத்துடன் கூடியவர்க ளென்று என்னுடைய நிச்சயக்கருத்து.

21–22. எல்லாவற்றிற்கும் காரணமான பிரம்மம் மேலான தென்றும், (இதைவிட) காரணம் என்ற தன்மையால் உபலக்ஷித மான (குறித்துக் காட்டப்பட்ட) சிவன் ஸர்வோத்கிருஷ்டம் (வெகு மேன்மையானது) என்றும், அறிகிறவர்கள் விக்ஞான ஸம்பன்னர்களென்று எனது நிச்சயமான நம்பிக்கை.

**23–31.** ஜீவன் இருக்கிறான், இல்லையென்பது இல்லை என்று பிரமாணத்தால் அறிந்துகொண்டவர்களும், தேகத்தைக்காட்டிலும் ஜீவன் வேறு என்று பிரமாணத்துடன் தெரிந்துகொண்டவர்களும், பிராணனைக்காட்டிலும் ஆத்மா வேறு என்று அறிகிறவர்களும், இந்திரியங்களைக் காட்டிலும் ஜீவன் வேறு என்று பிரமாண அறிவு உடையவர்களும், மனதைக்காட்டிலும் ஆத்மா வேறு என்ற பிரமாண ஞானமுடையவர்களும், க்ஷணந்தோரும் நாசமடையும் விக்ஞானத்தைக்காட்டிலும் (புத்தி), ஆத்மா வேறு என்ற பிரமாண ஞானமுடையவர்களும், புத்தி, அஹங்காரம் இவைகளைவிட ஆத்மா வேறு என்று அறிகிறவர்களும், சித்தத்தைவிட ஆத்மா வேறு என்று தெரிந்துகொண்டவர்களும், எல்லா விருத்திகளுக்கும் இருப்பிடமாயுள்ள அந்தக்கரணத்தைக் காட்டிலும் ஜீவன் வேறு என்று பிரமாண ஞானமுள்ளவர்களும் விக்ஞான ஸம்பன்னர்களென்று எனது நிச்சயமான கொள்கை.

**32.** ஜாகிருதம், ஸ்வப்நம், ஸுஷுப்தி என்ற மூன்று இருப்பிடங்களையும் எவன் அறிகிறானோ அவர்தான் ஆத்மாவென்று சொல்லப்படுகிறது; அவர் காணத்தகுந்தவரன்று; காணத்தகுந்தவை எல்லாம் அவரிடத்தில் கல்பிக்கப்பட்டிருக்கின்றன.

**33–35.** (முற்கூறிய) மூன்று ஸ்தானங்களுக்கு சாக்ஷியாயும், ஸத்ய, ஞான, ஆனந்தமுதலிய லக்ஷணங்களுடையவரும், 'நீ', 'நான்' என்ற சப்தங்களின் லக்ஷியார்த்தமானவரும், ஸர்வ தோஷங்களற்றவரும், அறியப்பட்டது, அறியப்படாதது என்ற இவ்விரண்டைக்காட்டிலும் வேறானவரும், அறியப்பட்டது அறியப்படாதது இவைகளைப் பிரகாசப்படுத்துகிறவரும், பிரமாண, பிராந்திகளாலும் அறியக்கூடாதவரும், இவைகளைப் பிரகாசஞ் செய்பவரும், ஸ்வயம்பிரகாசமாயும், ஆதாரமற்றதாயுமுள்ளதை எவர்கள் ஸந்தேகமின்றி அறிகிறார்களோ அவர்கள் விக்ஞான ஸம்பன்னர்களென்று எனது நிச்சயமான நம்பிக்கை.

**36–37.** சொல்லப்பட்ட லக்ஷணமுள்ள ஆத்மாவையும், ஈசுவரனையும் எந்த விப்ரர்கள் தர்க்கத்தாலும், பிரமாணத்தாலும்,

அப்படியே குரு வாக்கியத்தாலும், ஈசுவரகிருபையாலும் அனு பவத்தாலும் ஒன்ருக அறிகிருர்களோ அவர்களே ஞானமுள்ள வர்கள் என்று மும்முறை சபதத்துடன் சொல்லுகிறேன்.

38. அதிரகஸியமானதும், குருபரம்பரையா லடையப்பட்ட தும், சுருதியில் சொல்லப்பட்டதுமான இந்த விஷயம், ஆத்ம சுத்தியின் பொருட்டு என்னுல் சொல்லப்பட்டது; கெட்ட மனிதர் களின் கூட்டத்தில் இதைச் சொல்லக்கூடாது.

---

## அத்தியாயம் 12.

---

### (ஞானயக்ஞ விசேஷம்).

1. ஸூதர்:—மறுபடியும் ஞானயக்ஞத்தைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன்; அதிக சோபனமான இதை ஹே! முனிகளே! பரமபக்தியுடன் கேளுங்கோள்.

2. ஸத்யமாயும், பரானந்தமாயும், பிரகாசமாயும், அனந்த மாயுமுள்ள லக்ஷணமுள்ள பிரஹ்மம் எப்பொழுதும் மாருதலற்ற ஆத்மபாவமாகவிருக்கிறது.

3. ஹே! த்விஜர்களே! ஆதியந்தமற்றதும், யுக்திக்கெட் டாததுமான ஆத்மசக்தியின் சேர்க்கையால் பிரஹ்மம் ஸ்வயம் பிரகாசமாயுள்ளதாயிருந்தும்பிரகாசமற்றதுபோல்விளங்குகிறது.

4. ஸத்தாயிருந்தும் அஸத்போலவும், ஒன்ருயிருந்தும் பற் பலபோலவும், இவ்விதமான ரூபத்தையடைந்து ஸம்ஸாரிபோல விளங்குகிறது.

5. ஹே! பண்டிதோத்தமர்களே! பிரிவற்ற பிரஹ்மத்தில் சேதனமென்றும், அசேதனமென்றுமுள்ள பிரிவானது ஸ்வபாவ மாக இல்லாவிடினும் (மாயா) சக்தியால் கல்பிக்கப்பட்டிருக்கிறது.

6. பிரஹ்மத்தின் சேதனரூபத்தில் ஸர்வக்ஞரான ஈசுவரன் முதல் ஸ்தம்பபூச்சி ஈருயுள்ள சேதனபேதம் மாயையால் கல்பிக் கப்பட்டிருக்கிறது.

7. உயர்ந்ததும், தாழ்ந்ததும், நடத்துகிறவன், நடத்தப் படுகிறது முதலியவைகள் இந்த சேதன பேதங்களில் கல்பிக்கப் பட்டிருக்கின்றன.

8–10. பிரஹ்மத்தினுடைய அசேதன ரூபத்தில் மகாமாயையின் சக்தியால் மகத்முதல் சூன்யபரியந்தம் கல்பிக்கப்பட்டிருக்கிறது; உயர்ந்ததும் தாழ்ந்ததுமான ஜகத்தும் ஹே! முனீசுவரர்களே! மாயையால் கல்பிக்கப்பட்டிருக்கிறது; அப்படியே வியவஹாரதசையில் எல்லாவற்றிற்கும் மேலான பிரஹ்மத்தில் வர்ணாசிரமங்களும், வர்ணகலப்பும், அதததன் தர்மங்களும் பிரிவுபட்டு மாயையாலேயே கல்பிக்கப்பட்டிருக்கின்றன.

11. வர்ணாசிரமத்திலிருக்கிறவர்களுடைய கர்மஞ்செய்யும் கடமையும், தான் செய்பவன் என்னும் புத்தியும், அனுபவிக்கிற தன்மையும் மாயையாலேயே கல்பிக்கப்பட்டிருக்கிறது.

12. சுருதி ஸ்மிருதிகளில் கூறப்பட்ட விதி விலக்குகளும் தேவதேவனான பிரஹ்மத்தினுடைய மாயையால், உண்மைபோல, கல்பிக்கப்பட்டிருக்கின்றன.

13. அவ்விதமே தர்மாதர்மங்கள், அவைகளின் பலன்களும், ஸாதனங்களும் பிரஹ்மத்தின் மகாமோகத்தால் கல்பிக்கப் பட்டிருக்கின்றன; உண்மையாக இல்லை.

14. இராக த்வேஷமுதலிய தோஷங்களும் சாந்தி தாந்தி முதலிய நற்குணங்களும், மஹேசுவர ஸம்பந்தமான ஞானமுள்பட மாயையாலேயே கல்பிதங்கள்.

15. வைதிக தாந்திரிக மார்க்கங்களும், அப்படியே கெட்ட வழிகளும் ஸ்வதந்திரமான அம்பிகாபதியின் மாயாசக்தியாலேயே கல்பிக்கப்பட்டிருக்கின்றன.

16. எது இருப்பதாக விளங்குகிறதோ, எது இல்லையென்பதாக தோற்றுகிறதோ அவையெல்லாம் பரமசிவனுடைய மாயையால் கல்பிக்கப்பட்டிருக்கின்றன.

17. பிரஹ்மத்தில் சேதனம் அசேதனம் என்ற இரண்டு கல்பனைகளும், நன்கு விசாரிக்குங்கால், சிவனைக்காட்டிலும் வேறாக இருக்கின்றனவன்று.

18. நன்றாக விசாரிக்கும் வேளையில் கல்பிக்கப்பட்ட ஸ்தம்ப பரியந்தமுள்ள ஸர்வக்ஞத்வாதி பேதங்கள் சிவனைக்காட்டிலும் வேறாக ஒருபொழுதுமில்லை.

19. இவைகளில் கல்பிக்கப்பட்ட உயர்வு தாழ்வு பாவங்களும் சிவனைத்தவிர பேதமாகவில்லை.

20. நன்கு யோஜிக்குங்கால் பிரஹ்மத்தின் அசேதன ரூபத்தில் கல்பிக்கப்பட்ட ஜகத் சிவனுக்கு அன்யமாகவில்லை.

21. அவ்விதமே இந்த ஜகத்தில் கல்பிக்கப்பட்ட உயர்வு தாழ்வுகள் சிவனைத்திவிர வேறாகவில்லை.

22–28. மாயையால் கல்பிக்கப்பட்ட கடமைகளும், விதி நிஷேதங்களும், தர்மா தர்மங்களும், ராகத்வேஷங்களும், வைதிக, தாந்திரிக, கெட்டமார்க்கங்களும், மேலும் எது இருப்பதாக விளங்குகிறதோ, எது இல்லையென்று விளங்குகிறதோ இவையெல்லாம், சூக்ஷ்மமாய் யோஜித்துப்பார்தால், சிவனைவிட பேதமாகவில்லை.

29. ஆதலால், சுருக்கமாகச் சொல்வதைக் கேளுங்கள்! சித்தென்றும், அசித்தென்றும் தன்சக்தியால் பிரிவடைந்த ஸகல ஜகத்தும் சிவமாத்திரமே! தேவதேவனைக்காட்டிலும் தனிப்பட்ட பதார்த்தம் கொஞ்சங்கூட கிடையாது.

---

## அத்தியாயம் 13.

---

### (ஞானயக்ஞ விசேஷம்).

1. ஸூதர்:—ஹே! த்விஜர்களே! மறுபடியும் ரகசியத்தைக் காட்டிலும் அதிரகசியமானதும் ஸூக்ஷ்மமுமான ஞானயக்ஞத்தைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன்; சிரத்தையுடன் கேளீர்!

2–3. (போக்திரு போக்கிய ரூபமாயுள்ள பிரபஞ்சத்தின் சிருஷ்டிக்குமுன் ஒழிவடைந்த அவஸ்தையில், விகல்பத்திற்கு காரணமில்லாமையால், பரசிவஸ்வரூபம் நிர்விகல்பகமாயும், தன்னிடமேயுள்ளதாயு மிருக்கிறது; அதன் ஸ்வரூபத்தில் அத்யஸ்தமான மாயையும் விகல்பமன்றியில் நிலைபெற்றிருக்கிறது; அம்மாயையும் பிராணிகளின் கர்மபரிபாகத்தால் கொஞ்சம் மாறுதலடையும்பொழுது, அச்சமயத்தில் சிவன் வேறு சக்தி வேறு என்ற பிரிவு இல்லாதபடியால், சின்மாத்திரத்தையே ஆசிரயித்ததாயிருக்கிறது; சின்மாத்திர ரூபமாயுள்ள பரசிவமும் அம்மாயா ஸம்பந்தத்தால் தன் நிலைமையைவிட்டு அதற் கெதிர்முகப்படுகிறது; அப்பொழுது சிவசக்தி உபயரூப ஸாதாரணமான சின்மாத்திரத்தையாசிரயித்த அம்மாயை இரண்டாக ஆகிறாள்; ஸம்பந்தப்படும் வஸ்துவுடன் அதீன நிரூபண விஷயரூபியாகவும், அதீன நிரூபணமற்ற விஷயரூபியாகவும் ஆகிறாள்; இவ்விதம் உபாதி இரண்டால் சின்மாத்திரமும் இரண்டாக பிரிவடைகிறது; அதீன நிரூபணமாயை 'சக்தி' என்று சொல்லப்படுகிறது; காற்று ஜல ஸம்பந்தத்தால் விதை முளையாவதுபோல பிராணிகளின் கர்மவசத்தால் ஜகத்காரிய ஹேது பூதமான மாயையின் அங்குராவஸ்தை 'சக்தி' யென்று சொல்லப்படுகிறது; அதீன நிரூபணமற்ற மாயையின் ஆகாரத்தால் உபஹிதமான சைதன்யம் 'சிவம்' என்று சொல்லப்படுகிறது; ஜகத் அங்குரரூபியாகிய சக்தியால் அவச்சின்னமான சைதன்யத்தின் ஸம்வித் (ஞான) ரூபமெதுவோ அதற்கு 'பராசக்தி' என்று பெயர்; ஆகையால் உபாதிபேதத்தால்மட்டும் சின்மாத்திரம் ஒன்றிற்கே சிவ, சக்தி பேதம்; பாமார்த்தமாக, சின்மாத்திரமாகவே, ஒன்றே).

சின்மாத்திரத்தை ஆசிரயத்திருக்கிற மாயையினுடைய சக்தியென்ற ரூபத்தில் உட்பிரவேசித்து நிர்விகல்பமாயும், ஸ்வயம்பிரகாசமாயுமுள்ள யாதொரு ஸம்வித் (ஞானம், சித்) உண்டோ அவள் ஸத்ரூபியாயும், பராநந்தரூபியாயும், ஸம்ஸார ஒழிவுக்கு காரணமுள்ளவளாயும், நன்மை செய்பவளாயும், சிவையாயும், சிவனுக்கு வேறு ஆகாத முக்கிய தேவி (பரா சக்தி)யாயிருக்கிறாள்.

4. ஹே! முனிசிரேஷ்டர்களே! ஜகத்திற்கு காரணத்தன் மையை யடையும் சிவன் எவரோ அவருடையவும் சக்தியாக அவள் (பராசக்தி) ஆகிருள்; அவள் இல்லாவிடில் அவர் பிரயோ ஜனமற்றவராகிருர்.

5–28. உபாதியால் ஸர்வக்ஞத்வத்தையடையும் சிவனுக் கும், (ஈக்ஷித்ருத்வம்) பார்க்கும் தன்மையடையும் சிவனுக்கும், ருத்திரத்தன்மையடையும் சிவனுக்கும், விஷ்ணுத்தன்மையடை யும் சிவனுக்கும், பிரஹ்மத்தன்மையடையும் சிவனுக்கும், ஸதா சிவத்தன்மையடையும் சிவனுக்கும், ஈசுவரத்தன்மையடையும் சிவனுக்கும் ஹிரண்ய கர்ப்பத்தன்மை, ஸூத்திராத்மத்வம், விராட்ரூபம், ஸ்வராட்ரூபம், ஸம்ராட்ரூபம், இந்திராதிலோக பா லர்களின்ரூபம், தேவாதிகளின்ரூபம், மனுஷ்யரூபம், திரியக் முதலியரூபம், ஓஷதிகளின்ரூபம், வனஸ்பதிகளின்ரூபம், பக்ஷிய போஜ்யாதிரூபம், நதீநதாதிரூபம், பர்வதாதிரூபம், ஸமுத்திர ரூபம், மின்னல்ரூபம், மேலும் ஸர்வாகாரரூபம் இவைகளையடை யும் சிவனுக்கும் அவள் (பராசக்தி) சக்தியாயிருக்கிருள்; அவ ளில்லாவிடில் சிவன் உபயோகமற்றவராகிருர்.

29. இந்த ஸாக்ஷிரூபியான சக்தியானவள் (பராசக்தி), சிவனுக்கு வேருகவிராமல், சங்கரனுக்கும் (சிவனுக்கும்) ஸுகத் தைக்கொடுக்கிருள்; அவள் இல்லாமற்போனல் சிவன் ஒன்றுக் கும் உபயோகமில்லை.

30. சிவனன்றியில் சக்தியில்லை; சக்தியில்லாமல் சிவனில்லை; இவ்விதமாக உமைக்கும் (சக்திக்கும்) சங்கரனுக்கும் ஒருமையை எவன் அறிகிருனே அவனே உண்மையறிகிறவன்.

31. உமைக்கும் சங்கரனுக்கும் பேதத்தை எந்த கெட்ட மனிதர்கள் பார்க்கிருர்களோ அவர்கள் தலை கீழாகவும், கால்மே லாகவும் நரகக்கடலை யடைகிருர்கள்.

32. எப்படி மானிடர்கள், பூலோகத்தில், தாய் தந்தை இருவர்களாலும் விருத்தியடைகிருர்களோ அப்படியே எல்லாம் இவ்விருவர்களால் விருத்தியடைவதில் ஸந்தேகமில்லை.

33. பரமாயும், ஸர்வலோகத்திற்கும் ஒரே தாயுமாயுமுள்ள இவளை எவர்கள் உபாஸிக்கிறார்களோ அவர்கள் தங்களுடைய எல்லா விருப்பங்களையும் முக்தியைக்கொடுக்கும் வித்யையையும் அடைகிறார்கள்.

34. மேன்மைபொருந்திய இந்த பார்வதீதேவி (பராசக்தி) ஜந்துக்களுக்கு விசேஷமாக பிரஹ்ம வித்யையை அளிக்கிறாள் என்பதில் ஸந்தேகமில்லை.

35. இந்த சிவை லக்ஷ்மீ ஸரஸ்வதீ முதலான அநேக வேஷங்களைப்பூண்டு நடனமாடுகிறவள்போல் இருப்பதால் இவளால் சீக்கிரம் எல்லாம் ஸித்திக்கின்றன.

36. இவளுடைய பிரஸாதத்தாலேயே பிரஹ்மா, இந்திர முதலிய உயர்ந்த பதவிகள் அடையப்பட்டிருக்கின்றன; இவளன்றியில் எல்லாம் அஸத்தேயன்றி ஸத்தாகவிராது.

37. இவளை சிரத்தையுடன் வைதிகர்கள் ஆராதனை செய்தால் அவர்களுக்கு வேண்டியவையெல்லாம் கைகூடும்; வேறுவிதமாக கிட்டாது.

38–39. சைவர்கள், பாகவதர்கள், இவைகளின் உட்பிரிவுகளிலுள்ளவர்கள், திகம்பரர்கள், பௌத்தர்கள், கீழ்ப்பட்ட மார்க்கத்தை கைப்பற்றினவர்கள் எல்லோரும் இவளுடைய ஆராதனையால் இஷ்டப்பட்ட பலத்தை யடைகிறார்கள்.

40. ஹே! ஆஸ்திகர்களே! சிரத்தையுடன் இந்த சிவையை எவராயிருப்பினும் எப்படி ஆராதனை செய்கிறார்களோ அதற்கு தக்க இஷ்டபலனை யடைகிறார்கள்.

41. கருணைக் கடலாகிய இந்த சங்கரீயை எவன் பூஜிக்கிறானோ, அவனுக்கு அவளுடைய கிருபையால் எதுதான் கிட்டாது!

42–43. (இவ்விதமாக பராசக்தியின் மகிமையைக்காட்டி, முமுக்ஷுவால் எல்லாம் பரிபூர்ண பரசிவ ஸ்வரூபமாகவே பார்க்கப்படவேண்டுமென்று சொல்லப்படுகிறது).

இந்த சிவையையும் (பராசக்தியையும்), (லீலா விக்கிரஹ மடைந்த) உமையையும், அப்படியே ஜடசக்தியையும் (மாயயையும்), ஜடகார்யமான ஜகத்தையும் ஜீவனையும், அப்படியே அவர்களின் பேதங்களையும், மற்றுமுள்ள இருக்கிறதாக காணப்படுகிறதையும், அப்படியே 'இல்லை' என்ற சப்தத்தால் விளங்கப்படுகிற எல்லாவற்றையும் பரிபூர்ணமான சிவன் என்று பார்க்கிறவன் பரிபூர்ணனான சிவனாக ஸ்வயமே ஆகிறான்.

44. பூர்ணமாயுள்ள தன்னுடைய நிஜரூபம் மாயையால் பூர்ணமற்றதாக தோன்றுகிறது; பூர்ணரூபமாக மாயயைப் பார்த்தால் தானும் பூர்ணனாக ஆகிறான்.

45. தன்னுடைய பூர்ணரூபமாயுள்ள ஆத்மாவைத்தவிர, ஜகத், ஜீவன், ஈசுவரன் முதலியவையில்லை; மாயையும் இல்லை; இந்த அறிவுதான் சுத்தமான ஆத்மாவையறிதல்.

46. தனது பூர்ணாத்மாவாயுள்ள சிவானந்தத்தின் நிஷ்டையை அடைந்த மனிதன் அப்பொழுதே தன்னுடைய பூர்ண ஆத்மாவாயுள்ள சிவஸ்வரூபமாகிற முக்தியை யடைகிறான்.

47. தன்னுடைய பூர்ண ஆத்மாவாயுள்ள சிவானந்தத்தின் பிரகாசவலியால் இஷ்டப்படி உலகத்தில் இருப்பவனை எவன் தடுக்கமுடியும்.

48. மஹா சக்கிரவர்த்தியாயுள்ள ஒரு அரசன் எப்படி புவியில் இஷ்டப்படி சஞ்சரிப்பானோ அப்படி தன் பூர்ணாத்மாவான சிவனை யறிந்தவன் இஷ்டப்படி சஞ்சரிக்கிறான்.

49. எவனுக்குத் தோற்றமெல்லாம் தன் ஆத்மரூபமாகத் தானே விளங்குகிறதோ அந்த யோகிக்கு ஸம்ஸாரமாகிலும் முக்தியாகிலும் எப்படி ஸித்திக்கும்.

50. எவனுக்கு ஸம்ஸாரமாவது முக்தியாவது விளங்குகிறதோ அந்த யோகிக்குத்தான் விதியும் நிஷேதமும் உள.

51–52. எப்படி மண் விப்ரர்களாலும் சண்டாளர்களாலும் தொடப்பட்டாலும், அதே மண்குடம் முதலிய ரூபமடைந்த பின்

னர் நீச்சர்களால் தொடப்படுகிறதில்லேயோ, அப்படியே யோகிக்கு எல்லாம் பிரஹ்மாத்ம ரூபமானதால், நிந்திக்கப்படாததாயும் மூடனுக்கு எல்லாம் அததன் ரூபத்தால் நிந்திக்கப்பட்டதாயும், படாததாயும் விளங்குகிறது.

53. வைதிகமாயும், லௌகிகமாயுமுள்ள கல்பிக்கப்பட்ட வியவஹாரங்கள் மோகத்தால் பேதஞான முடையவர்களுக்கு விளங்குமேயன்றி யோகிக்கு இல்லே.

54. ஹே! விப்ரர்களே! ஆத்மஞானிகளுக்கு லௌகிகமென்றும் வைதிகமென்றும் வியவஹாரமில்லே; எல்லாம் ஸ்வபாவமாக ஆத்மாவாகவே அவனுக்கு விளங்குகிறது.

55. அநேககோடி கல்பங்களாலும் ஆத்மஞானமென்ற மஹாயக்ஞத்தின் வைபவத்தை என்னுல் வர்ணிக்கமுடியாது.

56. நீங்களும் மகாபாக்கியத்தாலும், மகாதேவனுடைய அருளாலும் இந்த ஞானத்தை என்னிடமிருந்து அடைந்து கிருதார்த்தர்கள் ஆனீர்கள்; இதில் ஸந்தேகமில்லே.

---

## அத்தியாயம் 14.

---

### (ஞான யக்ஞ விசேஷம்).

1. ஸூதர்:—மறுபடியும் ஞானயக்ஞத்தைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன்; ஹே! ஆஸ்திகர்களே! இதற்குமுன் இது ஒருவருக்கும் என்னுல் சொல்லப்படவில்லே.

2. உண்மையறிவானந்தமே யுருவாய், விகாரமில்லாததாய் சுத்தமாயும் ஒன்றுகவிருக்கும் சிவன் தன் சக்தியால் ஐந்துவிதமாக பேதப்பட்டிருக்கிறுர்.

3–5. ஈசானன் என்றும், தத்புருஷரென்றும், அகோரர் என்றும், வாமதேவர் என்றும், ஸத்யோஜாதர் என்றும் தன் ஸ்வரூபம் மாறுமல் பேதப்பட்டிருக்கிறுர்.

இதில் சப்தம் ஈசானன் என்றும், ஸ்பர்சம் தத்புருஷனென்றும், ரூபம் அகோரமென்றும், ரஸம் வாமதேவரென்றும், கந்தம்

ஸத்யோஜாதர் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. (பிரபஞ்சத்தில் ஐந்தாக வகுக்கப்பட்டிருக்கிற சப்த தன்மாத்திராதிகள் எல்லாம் இந்த பஞ்சபிரம்மாத்மகங்களாக விருக்கின்றன).

6. ஸதாசிவன், ஈசுவரன், ருத்திரன், விஷ்ணு, பிரம்மா இவர்கள் முறையே சப்தம் முதலிய ஐந்து பூதங்களுக்கும் தேவதைகளாகிறார்கள்.

7. முன் கிரமமாகச் சொல்லப்பட்ட ஈசானன் முதலியவர்கள் ஹே! பிராஹ்மண உத்தமர்களே! ஸந்தேகமன்றியில் சிவனே.

8–11. இவர்களை சிவரூபமாகப் பார்க்கிறவன் ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுதலையடைகிறான்.

மகா பூதமான ஆகாசம் ஈசானன் என்றும், வாயு தத்புருஷன் என்றும், அக்னி அகோரமென்றும், ஜலம் வாமதேவன் என்றும், பூமி ஸத்யோஜாதம் என்றுஞ் சொல்லப்பட்டிருக்கிறது.

ஸதாசிவன், ஈசன், ருத்திரன், விஷ்ணு, நான்முகப் பிரம்மா இவர்கள் ஆகாசம் முதலியவைகளுக்கு கிரமமாக தேவதைகளாவார்கள்.

இவர்களை சிவரூபமாக அறிகிறவன் பந்தத்திலிருந்து மோக்ஷத்தையடைகிறான்.

12–13. ஆகாசாதி பூத ஸத்வாம்சத்திலிருந்துண்டான சுரோத்திரம் ஈசானன் என்றும், த்வக் தத்புருஷர் என்றும், கண்கள் அகோரர் என்றும், ஜிஹ்வை வாமரென்றும், கிராணம் ஸத்யோஜாதமென்றும், கிரமமாக இச்சுரோத்திராதிகளுக்கு திக்கு, வாயு, ஆதித்யன், வருணன், பிருதிவி தேவதைகள் என்றுஞ் சொல்லப்படுகிறது.

இவைகளை சிவரூபமாக அறிகிறவன் பந்தத்திலிருந்து விடுதலையடைகிறான்.

14–17. ஆகாசாதி பஞ்சபூத ரஜோம்சத்திலிருந்துண்டான பாதம் ஈசானன், கை தத்புருஷன் என்றும், வாக் அகோரர் என்றும், உபஸ்தம் வாமதேவர் என்றும், பாயு ஸத்யோஜாதம் என்றும் வேதாந்தமறிந்தவர்களால் சொல்லப்படுகிறது.

பாத முதலியவைகளுக்கு திருவிக்கிரமன், இந்திரன், அக்னி, பிரஜாபதி, மித்திரன் இவர்கள் முறையே தேவதைகளாவார்கள்.

இவைகளை சிவரூபமாக அறிகிறவர்கள் பந்தத்திலிருந்து முக்தியடைவார்கள்.

**18–21.** மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்ற நான்கு அந்தக்கரண விருத்திகளும், அந்தக்கரணமும் முறையே ஈசானுதி ஆத்மகங்கள்; இவைகளுக்கு சந்திரன், வாசஸ்பதி, காலாக்னிருத்திரன், தேவி, ஹிரண்யகர்ப்பர் இவர்கள் தேவதைகள்.

இவைகளை சிவரூபமாகப் பார்க்கிறவன் பந்தத்திலிருந்து விடுதலையடைகிறுன்.

**22–24.** பிராணன் ஈசானன்; அபானன் தத்புருஷன்; வியானன் அகோரம்; உதானன் வாமதேவன்; ஸமானன் ஸத்யோஜாதன்; இவைகளுக்கு முறையே ஸூத்திராத்மா, காரணவாயு, சிரேஷ்டரான பிரம்மா, விஷ்ணு, மாயை இவர்கள் தேவதைகளாவார்கள்.

இவைகளை சிவரூபமாக அறிகிறவன் பந்தத்திலிருந்து விடுதலையடைகிறுன்.

**25.** பிருதிவி முதலிய பூதங்களில் ஸத்வம் என்று பெயரையுடைய யாதொரு குணம் இருக்கிறதோ அது கிரமமாக நிவிருத்தி முதலிய கலைகள் என்ற பெயரை அடைகிறது.

**26–27.** பூமியில் நிவிருத்தி கலையும், ஜலத்தில் பிரதிஷ்டா கலையும், அக்னியில் வித்யாகலையும், வாயுவில் சாந்தியும், ஆகாசத்தில் சாந்தியதீத கலையும் இருக்கின்றன; சாந்தியதீதமுதலிய கலைகளை கிரமமாக ஈசானன் முதலிய பஞ்ச பிரம்மங்களாகவும், அப்படியே பஞ்ச பூதங்களிலிருப்பதாகவும் இருக்கின்றன.

**28–29.** கிரமமாக ஆகாசாதிகளிலுள்ள ரஜோகுணம் ஸ்பந்தம், பரிஸ்பந்தம், பிரக்கிரமம், பரிசீலனம், பிரசாரமென்னும் ஐந்து கிரியைகளாம்; இவைகளும் பஞ்ச பிரம்மங்களே.

30-31. அப்படியே எல்லாப்பூதங்களிலுமுள்ள தமோ குணம் சாதகம், பாதகம், முக்தம், நோதகம், பஞ்சகமென ஐந்தாக ஆகிறது; இவைகளும் ஹே! முனிசிரேஷ்டர்களே! பஞ்ச பிரம்மங்களே; இவைகளை சிவரூபமாகப் பார்க்கிறவன் பந்தத்திலிருந்து முக்தியடைகிறான்.

32. இன்னும் ஐந்து விதமாக எவை இருக்கின்றனவோ அவை பஞ்சப் பிரம்மங்கள் என்பதில் ஸந்தேகமில்லை.

33. சராசரமான இந்த ஜகத்முழுவதும் பஞ்ச பிரம்மாக பிரிந்திருப்பதை சிவரூபமாக அறிகிறவன் பந்தத்திலிருந்து முக்தியடைகிறான்.

34. பரசிவன் மாயையினாலே ஐம்பிரமவுருவானான்; அம்மாயை சிவனுக்கு அசாத்தியமான சேர்க்கைகளை செய்விக்கிறது.

35. இத்தகைய மாயையால் பிரஹ்மம் காரணமாகவும், எல்லாமாகவும், அப்படியே நியந்தாவாகவும் ஏற்படுகிறது; பரமார்த்தமாக விசாரிக்கும்பொழுது இவைகளாகவில்லை.

36. உண்மையில் சம்பு ஸத்ய ஸம்பூர்ண சித்கனமாயிருக்கிறார்; மாயையால் மோகமடைந்த மனிதர்கள் அவரை பேதமாக அறிகிறார்கள்.

37. 'நான்தாஸன்' என்ற மோகமும், பிறகு 'அவரே நான்' என்ற மோகமும், 'நான் அவரே' என்ற மோகமுமான (மாயையால் உண்டான இந்த) மூன்றுகலைகளையும் நீக்கிவிடவும்.

38. பேதமற்றும், நிர்மலமாயும், நித்தியமாயும், ஆதாரமற்றதாயும், களங்கமற்றதாயுமுள்ள ஆத்மாவில் 'தாஸன்' என்றும், 'அவர் நான்,' 'நான் அவர்' என்றும் இம்மோக மெவ்வாறுற்றிருக்கலாம்!

39. ஆகையால், அக்ஞானமாகிய மாயையால் உண்டான இந்த ஜகத்தை, விவேகமாகிற தீபத்தால் சிவரூபமாக அறிகிறவன் முக்தியடைகிறான்.

40. விவேகமாகிய தீபத்தை கையிற்கொண்டு ஞானமார்க்கத்தில் செல்லுகிறவன் சீக்கிரத்தில் ஆத்ம முக்தியாகிற தன் வீட்டையடைகிறான்.

41. ஸம்ஸார ஸமுத்திரத்தில் மூழ்கினவர்களாயும், விவேகமற்றவர்களாயும், கதியற்றவர்களாயும் உள்ள ஜந்துக்களுக்கு கேவலம் ஞானமே கதி.

42. தன்னுடைய (ஹிருதயத்திலுள்ள) சித்சக்திக்கு விரோதிகளாகவும், கெட்டதுகளாயுமுள்ள ராகமுதலியவைகளை அறுக்க கேவலம் அறிவு கத்தியாகுமேதவிர வேறொன்றும் ஆகாது.

43. ஸம்ஸார துக்கத்தில் தபிக்கிறவர்களுக்கு ஆத்ம ஞானமாகிற அமிருதப்பெருக்கால் நிச்சயமாக சாந்தியடையவேண்டுமே தவிர வேறொன்றாலும் முடியாது; இது சத்யம், இதில் ஸந்தேகம் வேண்டாம்.

44. ஒருவன் ஸ்வதஸித்தமாயும், தானேயாகவும், தன்னால் விளங்கானின்றதாயுமுள்ள எல்லா ஜகத்தையும் தன்ரூபமாகவே அறிந்தால், தன் ஆத்மாவினாலே அதைத்தானே லயப்படுத்துகிறான்.

45. எப்படி தங்கம் காப்பை (உருவாக) உண்டாக்கி தானே அதை லயப்படுத்துகிறதோ அப்படி சம்பு இந்த ஜகத்தை உண்டாக்கி தானே லயப்படுத்துகிறார்.

46. எப்படி சிலந்தி நூலை சிருஷ்டிசெய்து தானே அதை கவருகிறதோ அப்படி சம்பு எல்லாவற்றையும் சிருஷ்டித்து தானே லயப்படுத்துகிறார்.

47–48. பூமி, செடி மரங்களை உண்டாக்கி, மறுபடியும் லயப்படுத்துகிறதுபோலும், தானே ஒருவன் ஸ்வப்னத்தை சிருஷ்டித்து லயப்படுத்துவதுபோலும் சம்பு இது எல்லாவற்றையும் சிருஷ்டித்து தானே லயப்படுத்துகிறார்.

49. எப்படி தான் கண்ட ஸ்வப்னம், தான் விழித்துக்கொண்டமாத்திரத்தில், தனது ஆத்மா மாத்திரமாக ஆகிறதோ,

அப்படியே, ஆத்மஞான மடைந்தமாத்திரத்தில் தன்னுடைய பிரபஞ்சமும் தானுக ஆகிறது.

50. தன்னுடைய அனுபவத்தால் எவன் எல்லாவற்றையும் தன் ஸ்வரூபமாக அறிகிருனே அவனே தீரன்; அவனே ஸர்வக்ஞன்; அவனே சிவன்; அவன் கிடைப்பது அறிது.

51. உண்மையான ஞானம் மானிடர்களுக்கு லோகவாஸனையாலும், சாஸ்திர வாஸனையாலும், தேக வாஸனையாலும் சரியாக உண்டாகிறதேயில்லை.

52. பூர்ணஞானம் சிலருக்கு புண்யகௌரவத்தால் உண்டானுலும் ஈசனுடைய பிரஸாதமில்லாவிடில் தடைப்படும்.

53. முக்தியையளிப்பதும், பிரதிபந்தமற்றதும், வேதாந்த வாக்கியத்தாலுண்டானதுமான ஞானம் ருத்திருடைய பிரஸாதத்தால் உண்டாகிறதன்ருே!

54. சிவன், சங்கரன், ருத்திரன் என்ற பெயர்களுடையவரும், ஸத்யாதி லக்ஷணமுள்ளவரும், பரமாத்மாவான சாம்பனே எப்பொழுதும் ஞானபிரஸாதமளிக்கிருர்.

55. இந்த ஞானபிரஸாதம் விஷ்ணுவாவது, பிரம்மாவாவது, இந்திர, சூரிய, சந்திர முதலிய மற்ற தேவர்களாவது செய்கிருர்களில்லை.

56. ஈசுவரார்ப்பணமாகச் கர்மங்களைச்செய்து சுத்த மனதுடையவர்களுக்கு விஷ்ணு முதலிய தேவர்கள் அதிகாரத்திற்கு தக்கபடி பிரஸாதஞ் செய்கிருர்களென்பது உண்மையே.

57. விஷ்ணுமுதலியவர்கள் அழுக்குள்ள சித்தமுடையவர்களுக்கு யதாதிகாரம் புக்தி ஸித்தியின்பொருட்டு பிரஸாதமளிக்கிருர்கள்.

58. ஆகையால் முமுக்ஷுக்களால் ஞானபிரஸாதமடைய சிவனுயும், ஸநாதனனுயுமுள்ள ஸாம்பன் உபாஸிக்கப்படவேண்டும், தியானிக்கப்படவேண்டும், கேட்கப்படவும் வேண்டும்.

18

59. சிவ பிரஸாதத்தாலேயே உத்தமமான முக்தியும், புக்தியும் கிடைக்கும்; சிவபிரஸாதமில்லாமல் புக்தியுமில்லை, முக்தியுமில்லை.

60. சிவப்பிரஸாதத்தால் குருபிரஸாதமும், சிவப்பிரஸாதத்தால் சம்புபக்தியும் உண்டாகி, முற்றிலும் பாபநாசமடைந்தவனுக்கு சுத்த ஞானமாகிற சூரியனுன தானே தமஸாகிற அக்ஞானத்தை நாசஞ்செய்கிறுன்.

61. பரமார்த்தமாக எல்லாஞ் சிவனே, வியவஹாரமாகவும் எல்லாம் சிவனே என்ற ஞானம் உண்டான மனிதர்கள் ஸம்ஸாரப் பெருங்கடலைத் தாண்டுகிறுர்கள்.

---

## அத்தியாயம் 15.

### (ஞானயக்ஞ விசேஷ யோகம்).

1. ஸூதர்:—திரும்பவும் ஞான யக்ஞத்தைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன். க்ஷேமத்தின்பொருட்டு வெகு சிரத்தையுடன் கேளுங்கள்.

2. குடம், சுவர், உரல் முதலிய பதார்த்தங்களில் யாதொரு ஸத்தை (இருக்கிறதென்ற தன்மை, 'ஸத்' என்ற ஜாதி) விளங்குகிறதோ அது ஸத்தென்ற ரூபத்தில் ஒன்றுகவே இருக்கிறது; அது விசேஷ ரூபத்தால் பின்னமாய் (நாநா ரூபமாய் பேதப்பட்டு) இருக்கிறதென்று சிலர் எண்ணுகிறுர்கள்.

3–4. அது (அப்படி நாநாரூபமாயிருப்பதாக நினைப்பது) அஸங்கதமென்று புத்திமான்கள் சொல்லுகிறுர்கள்; (ஏனெனில்) ஸத்திற்கு பேதமில்லாததால் கடபடாதி லக்ஷணமுள்ள விசேஷ ரூபம் அதற்கில்லை; (முன் பத்தாவது அத்தியாயத்தில் பாமார்த்திகமாக பேதம் இல்லையென்று நிரூபணம் செய்திருக்கிறபடி) பேதமே இல்லை; பேதமிருக்குமாயின் விசேஷரூபமுண்டு, பேதமில்லாவிடில் விசேஷ ரூபம் இல்லையன்றோ.

5–6. ஸத்தைக்கு உண்மையில் பேதரூபமுள்ள பக்ஷத்தில் அந்த பேதரூபம் ஸத்தையைவிட பேதமாயிருக்குமாயின், சூன்ய

தத்வம்போல, அஸத்தேயாகும்; சூன்யம்போலாகுமேதவிர விசேஷரூபமாகாது; அபேதமெனில் விசேஷரூபம் ஸத்தையே யாகும்.

7. பின்னுபின்னமெனின் மேற்சொல்லிய இரண்டு தோஷங்களும் ஸம்பவிக்கும்; ஆகையால் ஸத்தைக்கு வேருய விசேஷவுருக்களில்லை.

8. ஆனல், விசேஷரூப தோற்றமானது பிராந்தியால் உண்டானதென்பதில் ஸந்தேகமில்லை; ஆகையால் எப்பொழுதும் ஏகமாகிய ஸத்தையே இருக்கிறது; அதுவே பாரத்பாமான பிரஹ்மம்.

ஸத்தையைக்காட்டிலும் பிரஹ்மம் வேருகவிருக்குமாயின் மனிதனுடைய கொம்புக்கு ஸமானமாய் அஸத்தாகவே ஆகும்; (பிரஹ்மமோ ஸத்தே).

9–10. அப்படியிருக்கையில் கடமுதலிய பதார்த்தங்கள் ஸத்தையைத்தவிர எவ்வாற்ருனும் வேருகவில்லை.

களங்கமற்ற சுருதியும் இவையெல்லாம் பிரஹ்மமென்றே சொல்லுகிறது.

11. வித்வான்களுடைய அனுபவமும் அவ்விதமேயென்பதற்கு ஸந்தேகமில்லை; ஆகையால் இவையெல்லாம் ஹே! வித்வான்களே! சம்புவென்றே அறியுங்கள்.

12. எப்படி மண் சட்டி முதலிய ரூபமாய் ஸ்வபாவமாகவே தோன்றுகிறதோ அப்படியே எல்லாவற்றையும் விளங்கச்செய்யும் சிவன் எல்லாரூபமாக விளங்குகிருர்.

13. எப்படித் தங்கம் காப்பு முதலிய பேதமாய் பிரகாசிக்கிறதோ அப்படி சிவன் எல்லாரூபமாக விளங்குகிருர்.

14. எப்படி கிளிஞ்சல் ஸ்வபாவமாக வெள்ளிரூபமாகத் தோன்றுகிறதோ அப்படி சிவன் எல்லாமாக விளங்குகிருர்.

15. எப்படி ஸ்வப்னத்தைக் காண்கிறவன் ஸ்வபாவமாக ஸ்வப்ன ரூபமாகவே விளங்குகிருனே அப்படி சிவன் எல்லாமாக விளங்குகிருர்.

16. எப்படி ஆகாசத்தில் இருளும் பிரகாசமும் விளங்குகின்றனவோ அப்படி ஜடமும் அறிவுள்ளதுமான எல்லாம் பரமாத்மாவில் பிரகாசிக்கின்றன.

17. எப்படி பெரிய ஸமுத்திரத்தில் சிறிய அலை, பெரிய அலை முதலியவை விளங்குகின்றனவோ அப்படி ஆத்மாவில் மஹத் முதல் அணுபரியந்தமுள்ள இந்த ஜகத் விளங்குகிறது.

18. பூதங்களெல்லாம் சம்புவே, உலகங்கள் சம்பு, வனங்கள் சம்பு, பர்வதங்கள் சம்பு; அவரே எல்லாம்; அவரைக்காட்டிலும் வேறொன்றுமில்லை; ஆகையால் அவர் ஒன்றே உள்ளது; இதுதான் உண்மை.

19–20. யக்ஞங்களால் பூஜிக்கத்தகுந்தவர் சம்புவே; எல்லா த்தானங்களால் அடையத்தகுந்தவரும் அவரே; முக்கிய மந்திரங்களால் ஜபிக்கத்தகுந்தவர் அவரே; இந்திரன் முதலிய தேவர்களால் தேடத்தகுந்தவரும் அவரே;

எப்பொழுதும் கோரமான தவத்துடன்கூடி, மிகப் பிரியத்துடன், முனிக்கூட்டங்கள் இந்த மகேசனை பூஜிக்கிறார்கள்; நித்தியம் நமஸ்கரிக்கிறார்கள்; வாக்கால் ஸ்தோத்திரஞ் செய்கிறார்கள்.

21. யதீந்திர கூட்டங்கள் குரு பிரஸாதத்தாலும் சிவப் பிரஸாதத்தாலும் ஹிருதயத்திலிருக்கும் இவரையே 'அகம்' என்கிற விருத்திக்கு சாக்ஷியாகவிருக்கிற சிதாத்மரூபமாக அறிகிறார்கள்.

22. இவையெல்லாம் சிவமே என்று அறிகிறவனுக்கு ஸகல ஜன்ம ஜரை மரண முதலியவைகளும், எல்லா லோகத்திற்கு போகுதலும் பரமரூபமாகவே தடையன்றி தோன்றுகிறது.

23. பரமேசுவரனை பிரயத்னமன்றி ஸகலவேத வாக்காலும், பரமயோக பலத்தாலும் களங்கமற்ற ஞானரூபமாக அறிகிறவனுக்கு இந்த ஜகத்ரூபமான தோற்றம் எப்படியிருக்கும்.

24. எல்லாவற்றையும் பரமசிவமாய் அறிகிறவனுக்கு, நெருப்புடன் சேர்ந்த பஞ்சுபோல், ஹிருதய குஹைமத்தியில் ஆதி

முதல் ஸம்பாதிக்கப்பட்டக் கர்மக்கூட்டம் தகிக்கப்படும்; அந்தக் கர்மக்கூட்டம் பலவிதபோக மடைதலைக் கொடாது.

25. ஜலத்துடன் தாமரையிலை எப்படி ஒட்டுகிறதில்லையோ அப்படி ஒருபொழுதும் பிரஹ்மவித்சிரேஷ்டன் கர்மங்களைத் தோடும் பற்றுகிறதில்லை; ஆச்சரியம்! இதுதான் பிரஹ்மவித் சிரேஷ்டனுடைய மகிமை.

26. புண்ய பாபமாகத் தோற்றுகிறதும், கர்மக்கூட்டமும், அநாத்மபுத்தியும் அப்பொழுது பிரஹ்ம ரூபமாகவே விளங்கும் பக்ஷத்தில், பிரஹ்மத்தை அறிவதே உத்தமமன்றோ!.

27. எப்படி ஸர்ப்பம் முதலிய ரூபமாக விளங்கும் கயிறு ஸர்ப்பம் அன்றோ, எப்பொழுதும் ரஜ்ஜுவோ, அப்படி பிரபஞ்ச ரூபமாகத்தோன்றும் சிவனும் ஜகத்தன்று, எப்பொழுதும் ஸ்வய மான சிவனே.

28. இந்த பூமியை ஒருவன் ஜலரூபமாக (ஜலம் காரண மாக) அறிந்தாலும் எப்படி பூமி என்றும் அறிகிறானோ அப்படி ஜகத்ரூபமாகப் பார்த்தாலும் களங்கமற்ற ஞானமாக அறிகிறான்.

29. ஆகையால் பிரபஞ்சத்தினுடைய அனுபவம் எப்பொ ழுதுமில்லை; ஸ்வரூபஞானத்தின் அனுபவமே எப்போதுமுள்ளது; இப்படி அறிகிறவன் பூர்ணஞானத்தையடைந்தவன்; அவன் பந் தத்திலிருந்து விடுபட்டவனுமன்று, கட்டுப்பட்டவனுமன்று.

30. நிர்மலமான பரமேசுவரன் தன்னுடைய ரூபமாக, தானா கவே பிரகாசித்துக்கொண்டிருக்கிறார்; பிரபஞ்ச தோற்றமில்லை; ஆகையால் ஒருவனுக்கும் பந்தமோக்ஷங்களில்லை.

31. இதுவே வேதத்தினுடைய முக்கியகொள்கை; முனீசுவ ரர்களுடையதும், சங்கரருடையதும் கொள்கை இதுவே; இதைத் தவிர வேறுவிதமாக நினைக்கிறவர்கள் அக்ஞானமாகிற கிணற்றில் மோகமாகிற ஸர்ப்பத்தால் தீண்டப்பட்டு விழுகிறார்கள்.

---

## அத்தியாயம் 16.

---

### (ஞானோத்பத்தி காரணம்).

1. ஸூதர்:—இனி இப்பொழுது ஞானம் உண்டாவதற்குக் காரணத்தைச் சொல்லுகிறேன்; அந்த ஞானமில்லாவிடில் ஒருபொழுதும் சிவஞானம் உண்டாகாது.

2. மோக்ஷ இச்சையுள்ளவன் மிக ஸந்தோஷத்தோடு நல்ல கதி எனக்கு கிடைக்குமென்ற தீர்மான புத்தியுடன் பிரதி பந்தங்களை நிவர்த்திசெய்ய எப்பொழுதும் (கீழ்ச்சொல்லப்படும்) எல்லா தேவதைகளையும் பிரார்த்திக்கவேண்டியது.

3-6. மித்திரன் (பகல் அபிமானதேவதை) எங்களுக்கு ஸுகத்தைக் கொடுக்கட்டும்; வருணன் (இரவு அபிமானதேவதை) எங்களுக்கு ஸுகத்தைக் கொடுக்கட்டும்; அப்படியே அரியமாவும் (சந்தியாகால அபிமான தேவதை) ஸுகத்தைக் கொடுக்கட்டும்; (மேற்கூறிய மூன்றும் பூரக, ரேசக, கும்பகங்களுக்கு கிரமமாக அபிமான தேவதைகளாக இருக்கிறார்கள்); இந்திரனும், வாக்கிற்கு ஈசனான பிரஹஸ்பதியும், ஸர்வவியாபியான விஷ்ணுவும் ஸுகத்தைக் கொடுக்கட்டும். பிரஹ்மத்தின்பொருட்டு நமஸ்காரம்; ஹே! வாயுவே உமக்கு நமஸ்காரம்; உங்களுக்குமங்களம்; நீரே அபரோக்ஷமான பிரஹ்மமாக விருக்கிறீர்; உம்மை ஸாக்ஷாத் பரசிவ ஸ்வரூபமென்று சொல்லுகிறேன்; மனஸால் எதார்த்தமான ஸங்கல்பமும், அதை வாக்கால் உச்சரிப்பதும் விசேஷமாய் நீரே என்று சொல்லுகிறேன். அத்தகைய நீர் நல்ல குணத்தோடு கூடிய என்னை ரக்ஷியும்; என்னையும் என் குருவையும் ரக்ஷியும்.

7-8. முத்தோஷங்களையும் போக்கடிக்க 'சாந்தி' என்று மும்முறை சொல்லி பிரார்த்தனைசெய்து, ஆத்மஞான மடையும் பொருட்டு குருவினால் உபதேசிக்கப்பட்ட 'யத் சந்தஸாம்' என்ற மந்திரத்தை சிரத்தையுடன் நித்தியம் ஜபிக்கவும்.

9-11. ஞானத்தை விரும்புவோனுக்கு ஜீவனோபாயத்தில் குறைவு நேரிடில் அவனுக்கு அவ்விஷயத்திலேயே புத்திசென்று குறைவுபடும் என்பதில் ஸந்தேகமில்லை; ஆகையால் அக்குறைவை

நீக்க வித்தையில் பிரியமுள்ளவன் தினந்தோறும் நெய்யாலும், அன்னத்தாலும் 'ஆஹவந்தீ' என்கிற மந்திரத்தால் ஹோமஞ் செய்யவும்; சிரத்தையுடன் பிரஹ்மசாரி, கிரஹஸ்தன், வானபிரஸ் தன் இவ்விதஞ் செய்யவேண்டும்; ஸந்யாஸியும், அக்னியதிகார மில்லாதவனும் சிரத்தையுடன் இந்த மந்திரத்தை ஜபிக்கவும்; (இம் மந்திரங்கள் தைத்திரீயோபனிஷத் சிக்ஷாவல்லியில் மூன்ருவது அனுவாகம்).

12–13. நித்தியம் பக்தியுடன் குரு சிசுருஷை செய்யவும்; மூன்று, ஆறு, அல்லது பன்னிரண்டு தடவைகள் எழுந்து எழுந் து நமஸ்கரித்து, தண்டம்போல் பூமியில் விழுந்து நமஸ்கரித்து வேதாந்தத்தைக் கேட்கவும்; கேட்டதை மனதையடைக்கி மன னஞ் செய்யவும்.

14. தினமும் லிங்கத்தில் மகாதேவனைப் பூஜிக்கவும்; நித் தியம் சாந்தனுகவும், தாந்தனுகவுமிருக்கவும்; விரக்தனுயிருந்தால் ஸன்யாசியாகவும்.

15. சீதம், உஷ்ணம், ஸுகம், துக்கம், அப்படியே மானம், அவமானம் இவைகளை ஏகாக்கிர மனதுடன் ஸஹித்துக்கொள்ள வும்.

16. உருத்திராக்ஷ மணிந்துகொள்ளவும்; உருத்திராக்ஷ தா ரணத்தால் உருத்திரனுகிருன்; அதிக பிரதிபந்தகத்தால் அதைத் தரிப்பதில் லஜ்ஜையுண்டாகும்.

17. வீண்வார்த்தை யாடுவதிலும், கொட்டாவிவிடுதலிலும், புசிக்கக்கூடாததை புசித்தலிலும், பார்க்கக்கூடாததைப் பார்த்தல் முதலியவைகளிலும் உண்டாகும் தோஷபரிஹாரமாக புத்திமான் ஷடக்ஷரத்தை ஜபிக்கவும்.

18. எவன் நாக்குநுனியில் ஷடக்ஷரம் எப்பொழுதும் இருக் கிறதோ அவனுடன் விசாரியாமலே ஸம்பாஷணை செய்யலாம்.

19. மோகத்தினுல்கூட நீசர்களுடன் ஸம்பாஷிக்கக்கூடாது; அப்படித்தெரியாமற்செய்தால் திவிஜன் பிராயச்சித்தஞ் செய்து கொள்ளவும்.

**20.** தன் ஜாதிக்கு விதித்திருக்கிற ஆசாரத்தைச் செய்யாமலும், அன்னியர்களின் ஆசாரத்தை கைக்கொள்வதினுலும் யோக்கியர்களும் நீசர்களாவார். அவர்களுடன் பிராஹ்மண சிரேஷ்டர்கள் ஸம்பாஷிக்கக்கூடாது.

**21–23.** அக்னிஹோத்திரம் முதலியவைகளில் உண்டான வெளுப்பு பஸ்மத்தை பக்தியுடன் எடுத்து, ஜாபாலோபநிஷத்தில் சொல்லிய 'அக்னி' என்று ஆரம்பித்த ஏழுமந்திரங்களால் ஜபித்து, மகாதேவனை தியானித்து, சாந்தமனதுடன் அந்த பஸ்மத்தால் எல்லா அங்கங்களையும் பூசி, பிறகு விதிப்பிரகாரம் திரிபுண்டரத்தை நெற்றியிலும், கழுத்திலும், மார்பிலும் புத்திமான் தரிக்கவும்.

**24–25.** அளவற்ற காந்தியுடைய சிவனுடைய புராதன க்ஷேத்திரங்களை மாதந்தோறும் பக்தியுடன் விசேஷமாக ஸேவிக்கவும்; சிரத்தையுடன் சிவனுடைய உத்ஸவ ஸேவையின் பொருட்டு செல்லவும்; உத்ஸவ ஸேவை செய்பவனுக்கு மோக்ஷம் கையிலிருக்கிறது.

**26–28.** பரிசுத்தமான அன்னத்தை தன் சித்தசுத்தியின் பொருட்டு புஜிக்கவும்; நிர்மால்யத்தையும், நிவேத்தியத்தையும் விசேஷமாகத் தள்ளிவிடவும்; உருத்திரனல் புஜித்த மிகுதிக்கு நிர்மால்யமென்றும், மற்றதேவதைகளால் புஜித்த மிகுதிக்கு அப்படியல்லவென்றும், விஷ்ணுவால் புசிக்கப்பட்டதும், மற்ற தேவர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டதும் நிவேத்தியம் என்றும் சொல்லப்படுகிறது.

குருவினுடைய உச்சிஷ்டமானது யாகத்தில் விநியோகஞ் செய்யப்படும் பிரஸாதம் (புரோடாசம்) என்பதில் ஸந்தேகமில்லை.

நிர்மாலியத்தையும், நிவேத்தியத்தையும் புசித்தால் சாந்திராயணம் என்கிற பிராயச்சித்தத்தை யனுஷ்டிக்கவேண்டும்; (இவையெல்லாம் ஆகமவிதிக்கேயன்றி வைதிக விதிக்குயன்று).

**29–30.** வர்ணுசிரமம் முதலியவை இல்லாதவனுக்கு ஊழியஞ்செய்தல், அவனுடன் ஸகவாஸம், ஸம்பாஷணை, சிரிப்பு, அவ

னைத் தொடுதல், அவனுடன் புசித்தல், நடத்தல், சிநேகம், ஸம்பந்தம் இவைகளைச் செய்யக்கூடாது.

**31.** தேவ மனுஷ்ய மற்ற எவர்களுடைய (பெயர் அல்லது உருவம் இவைகளை சரீரத்தில்) அடையாளஞ் செய்துகொள்ளக் கூடாது; அப்படி மோகத்தால் செய்துகொண்டால் அவன் பதிதாளுகிறான்.

**32.** ஒரு அடையாளத்தை செய்துகொண்டிருக்கிறவன் ஒருக்காலும் சாக்ஷிக்கு உபயோகப்படமாட்டான்; அடையாள முடையவன் சுருதி, ஸ்மிருதி, ஸதாசாரம் இவைகளில் அதிகாரியாகமாட்டான்.

**33.** அப்படி அடையாளஞ் செய்துகொண்டவனுடன் பேசவும், அவனைத் தொடவும், பார்க்கவும் கூடாது; அவனை அரசன் தேசத்திலிருந்து வெளிப்படுத்தவேண்டியது.

**34.** விதிக்கப்பட்டதைச் செய்யாவிடினும் நிஷித்தமான கெட்ட கர்மங்களை விலக்கிவிடவும்; நிஷித்த பரிஹாரத்தால் விதித்த கர்மங்களில் புத்திசெல்லும்.

**35–37.** ஸத்தியத்திலிருந்தும், தர்மம், குசலம், பஸ்மதூலனம், திருபுண்டரதாரணம், வேதாத்தியநநம், தேவகர்மம், பிதிருகர்மம், தாய் தந்தைகளின் பூஜை, அப்படியே மற்றெல்லா ச்ரௌத ஸ்மார்த்த(நல்ல)கர்மங்கள் இவைகளினின்றும் முமுக்ஷு ஒருக்காலும் நழுவக்கூடாது; மேற்கூறிய ஸாதனங்களோடு கூடியவன் ஞானத்தால் பஸ்மத்தையடைகிறான்.

**38–40.** எப்பொழுதும் பிரகாசஞ் செய்கிறதால் சிரேஷ்டமான சிவஸ்வரூபமே பஸ்மம் என்று சொல்லப்படுகிறது; அதுவே, ஜலத்தில் சூரியன்போல, தனது மாயையால் உண்டான பிரபஞ்சத்தில் உட்பிரவேசித்த ரூபத்திற்கு பஸ்மலேசம் (பஸ்ம பூச்சு) என்று சொல்லப்படுகிறது; அந்த பிரதி பிம்பமாயுள்ள பஸ்மப் பூச்சினல் தேவ ஈசனுயும், ஸ்வதந்திரனுயும், பிம்பரூபனுயுமுள்ள சிவன் எப்பொழுதும் பூசப்பட்டிருக்கிறார்; அவரே பிரம்மா, விஷ்ணு, இந்திராதி தேவர்களால் எப்பொழுதும் பூஜிக்கத்தகுந்தவர்.

41. அவருடைய பிரஸாதத்தில் முற்கூறிய தேவர்கள் தங்கள் தேவபதவியை யடைந்தார்களே ஒழிய ஸ்வபாவமாகவில்லை; சூலத்தையுடைய தேவதேவனுக்கு தேவபதவி ஸ்வபாவமாகவே யுள்ளது.

42–45. அவரையறிந்து சமதமாதிகளுடன்கூடிய ஸந்யாஸிகளும், ஸத்யத்தை தர்மமாகக் கைக்கொண்ட மற்ற கிரஹஸ்தர்களும், பஸ்மத்தால் பூசப்பட்ட அங்கங்களுடையவர்களாயும், திரிபுண்டரம்தரித்த நெற்றியுடையவர்களாயும், உருத்திராக்ஷம் அணிந்தவர்களாயும், பஞ்சாக்ஷர பிரியமுள்ளவர்களாயும், எப்பொழுதும் சிவலிங்கார்ச்சனை செய்துகொண்டிருப்பவர்களாயும், யக்ஞம் முதலியவைகளால் பாபநாசஞ் செய்தவர்களாயுமுள்ள கிரஹஸ்தர்களும் மற்றுமுள்ளவர்களும் விடுதலையடைகிறார்கள்.

ஆதலால் ஞானத்தையடைய இச்சிக்கும் புத்திமான்கள் ஞான ஸாதனங்களை பிரயாஸப்பட்டாவது ஸம்பாதித்துக்கொள்ளவும்; ஞானத்தால் பந்தத்திலிருந்து விடுதலையடைகிறான். பிரஹ்மமும் ஆத்மாவும் ஒன்றே என்று வேதாந்தத்தால் உண்டாகும் அறிவுக்கு ஞானம் என்று பெயர்.

46. ஆகையால் அறிந்ததையே அறிகிறான் என்றும், முக்தியடைந்தவனே விடுதலையடைகிறான் என்றும், நிவிருத்தியுள்ளதே நிவிருத்தியடைகிறதென்றும் சுருதியினுடைய இந்த அர்த்தமானது சுருக்கமாகச் சொல்லப்பட்டது.

47. இந்த அர்த்தம் மஹாதேவருடைய அருளில்லாத மனிதர்களால், பிறவிக்குருடன் யானையைக்கண்டு வர்ணிப்பதுபோல், பலவிதமாக கற்பிக்கப்படுகிறது..

48. மஹாதேவனுடைய பிரஸாதத்தால் பிராமணனானாலும், அந்தியஜனானாலும், கர்ப்பத்திலுள்ளவனானாலும் ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுதலையடைகிறான்.

49. மஹாநந்தமாயும், மஹாகாருணிக உத்தமராயுமுள்ள மகாதேவன் பிரஸன்னரானால் புழுவாயிருந்தாலும், பக்ஷியாயிருந்தாலும் விடுதலையுண்டு.

**50.** குருவால் உபதேசிக்கப்பட்ட வேதார்த்தம் என்னுல் சுருக்கமாகச் சொல்லப்பட்டது; என்னுல் சொல்லப்பட்ட அர்த் தத்தில், சிரமப்பட்டு, ஹே! திவிஜர்காள்! விசுவாஸம்வைக்கவும்.

---

## அத்தியாயம் 17.

---

### (வைராக்கிய விசாரம்).

**1.** ஸூதர்:—இனி இப்பொழுது துக்கத்தை நாசஞ்செய் யும் வைராக்கியத்தைச் சொல்லுகிறேன்; வைராக்கியத்தால் நேரே மோக்ஷஸாதனமான சிவஞானம் உண்டாகும்.

**2–3.** 'ஜீவனும் பிரஹ்மமும் ஒன்றே' என்ற ஞானம் இல் லாததால் த்வைதவஸ்துவான் இந்த ஜகத் உண்டாயிற்று; அந்த த்வைதவஸ்துவில், ஹே! விப்ரசிரேஷ்டர்காள்! முன்வாஸனையா லும், பரமேசுவரனுடைய கட்டளையாலும், கர்மங்களின் பரிபா கத்தாலும் 'நல்லது', 'கெட்டது' என்ற பிராந்தி, உண்மைபோல், கல்பிக்கப்பட்டிருக்கிறது.

**4.** பூர்வ வாஸனை பலத்தால் நல்லது என்று கல்பிக்கப்பட் டிருக்கிற விஷயத்தில் மூடமனிதர்களுக்கு எப்பொழுதும் இச்சை யுண்டாகும்.

**5.** நல்லது என்று கல்பிக்கப்பட்ட விஷயம் இருவிதமா யுள்ளது; ஒன்று இந்தலோக ஸம்பந்தமானதென்றும், மற்றது மேல்லோக ஸம்பந்தமானதென்றுஞ் சொல்லப்படுகிறது.

**6–7.** மனிதன் இந்திரியங்களால் இந்தலோக ஸம்பந்தமான விஷயங்களை அனுபவிக்கிருன்; மேலும் அனுபவித்த விஷயங்களி லும், அவைகளுக்கு ஸமமான விஷயங்களிலும், வெகு மோகத் துடன், ஸ்வதந்திரமற்றவனுய் ஆசையைச் செலுத்துகிருன்.

**8** நல்லது என்று பரலோக ஸம்பந்தமாயுள்ள பதார்த்தங் களில் மனிதனுக்கு நிச்சய புத்தியுண்டாகிறது; எல்லாமனிதர்க ளுக்கும் அதன்போக இச்சை, மோகத்தால், உண்டாகிறது.

9. ஹே! வேதமறிந்தவர்களே! பார்ப்பதினுலும், கேட்பதினுலும் ஒருவனுக்கு புத்தி ஸந்ததி, எப்பொழுதும் கல்பிக்கப்பட்ட விஷயத்தில், உண்டாகிறது.

10. அவ்விதமே கெட்டது என்ற கல்பிக்கப்பட்ட இகலோக பரலோக விஷயங்களில் வெறுப்பு உண்டாகிறது.

11. விருப்பு வெறுப்பு என்ற சங்கலியால் கட்டப்பட்டு, தர்மம் அதர்மம் இவைகளின் வசத்துள்ளடங்கிய மானிடர்கள் தேவ மனுஷ்ய திரியக் முதலான ஜன்மமாகிற நரகத்தை அனுபவிக்கிறுர்கள்.

12–13. சுக்லம் சோணிதம் இவைகளைப் பார்த்தும், தொட்டும், நினைத்தும் ஜுகுப்ஸையடைந்து மனிதன் வாந்திசெய்கிறுன்; இந்த ஜீவனுகிற சேதனனுக்கு இவையே சரீரமாகவிருக்கிறது; அந்த சரீரத்தில் 'நான்' என்கிற அபிமானத்தையுடைய மூடபுருஷன் 'நான்' 'எனது' என்ற அபிமான புத்தியால் இந்த தேகத்தை கிரஹித்துக்கொண்டிருக்கிறுன்.

14–15. பூமியிலிருக்கிற தோலைப்பார்த்தும், தொட்டும், நினைத்தும், அதிலிருக்கும் தோஷத்தைக்கண்டு, மனிதன் வாந்தி செய்கிறுன்; அவ்விதம் ஆத்மாவுக்கு வேறுகிய சரீரத்தில் உள்ள சர்மத்தில் 'நான்' என்று அபிமானிக்கிற மூடமனிதன் 'நான்', 'எனது' என்ற புத்தியால் இந்த தேகத்தை வகித்துக்கொண்டிருக்கிறுன்,

16–19. (அப்படியே) பூதலத்தில் இருக்கும் மாம்ஸம், நரம்பு, எலும்பு, மயிர்கொத்து, ரக்தம், அமேத்தியம், கபக்கோழை, பித்தஜலம், மூத்திரம், மலம் இவைகளைப் பார்த்தும், தொட்டும், நினைத்தும் மனிதன் வாந்திசெய்கிறுன்; அப்படியிருக்க தேகத்திலுள்ள இவைகளில் 'நான்' 'எனது' என்று அபிமானிக்கிறவன் மூடனைத்தவிற வேறன்று.

40. சந்தனம், அகில்கட்டை, கற்பூரம் முதலிய நல்ல பதார்த்தங்கள் எதன் சம்பந்தத்தால் மலமாகின்றனவோ அந்த சரீரம் எப்படி நல்லதாகவிருக்கும்.

41. வெகு நல்லதான பக்ஷிய போஜ்ய பதார்த்தங்கள் எதன் சேர்க்கையால் மலமாகின்றனவோ அந்த சரீரம் எப்படி சோபனமாயிருக்கும்.

42. ஹே! த்விஜர்களே! ஸுகந்தமாயும் சீதலமாயுமுள்ள ஜலம் எதைச் சேருவதால் மூத்திரமாகிறதோ அந்தப் பிண்டம் எவ்விதம் சோபனமென்று சொல்லப்படும்.

43. மிக வெளுப்பாயும் சுத்தமாயுமுள்ள வஸ்திரம் எதன் சேர்க்கையால் அழுக்காகிவிடுகிறதோ அந்த சரீரம் எப்படி நல்லதாயிருக்கும்.

44. ரக்தத்திலுண்டாகிற புழுக்கள் அளவற்றவை; அப்படியே மாம்ஸத்திலுண்டாகும் கிரிமிகள் அளவற்றவை; புழுக்களுக்கு இருப்பிடமான இந்த சரீரம் துக்கத்திற்கு ஏற்பட்டதே தவிர ஸுகத்திற்கன்று.

45. கர்ப்பம், கலலம் என்ற அவஸ்தையில், புழுக்களால் பக்ஷிக்கப்படுகிறது; அப்பொழுது துக்கத்தைதவிர கொஞ்சங் கூட சௌக்கியமில்லை. (மாதாவின் கர்ப்பத்தில் ஒரு இரவு இருக்கும் சுக்லசோணிதம் கலலம் என்று சொல்லப்படும்).

46. புத்புத அவஸ்தையை யடைந்த அந்த கர்ப்பத்தை கிரிமிகள் பக்ஷிக்கின்றன; அப்பொழுது துக்கமேதவிர ஸுகமில்லை. (ஏழு இரவு கர்ப்பத்திலிருக்கும் கருவுக்கு புத்புதமென்று பெயர்).

47–50. மாதாவின் ஜடராக்னியில் கர்ப்பம் எப்பொழுதும் தபித்துக்கொண்டிருக்கிற சமயத்திலும், வயிற்றில் வாயு ஸஞ்சாரத்தால் பயம் உண்டாகிறபொழுதும், வயிற்றில் மலமூத்திரங்களோடுகூடிய சமயத்திலும், துவாரமற்ற ஜராயு என்ற (கர்ப்ப) பையின் மத்தியில் அமிழ்ந்திருக்கும் சமயத்திலும் துக்கமேதவிர கொஞ்சமேனும் ஸுகமில்லை.

51. ரௌரவம் முதலிய நரகங்களில் எவ்வளவு துக்கமுண்டோ அதைக்காட்டிலும் கோடிமடங்கு அதிகமாக துக்கம், கர்ப்பத்தில், உண்டென்பதில் ஸந்தேகமில்லை.

52. கர்ப்பத்தில் உண்டாகிறவனுடைய துக்கத்தைச் சொல்ல ஒருவராலும் முடியாது; ஐயோ! கர்ப்பவாஸம் நிரம்பவும் கஷ்டமான வாஸமாகும்.

53. பால்யத்தில் கடுமையான பாலாரிஷ்டம் முதலிய பீடைகள் உள; ஈமுதலியவைகளால் உண்டாகும் தொந்தரவை போக்கடிக்க சக்தியற்றிருக்கிறான்.

54. வியாதி பீடையும், தினந்தோறும் பசி, தாகம் முதலிய பீடைகளும் இருக்க எவ்விதம் மனிதன் சுகமடைவான்.

55. (மேலும் அந்த அவஸ்தையில்) எழுத்துக்கூட்ட ஆரம்பிப்பத்திலும், படிப்பிலும் பீடை; சாஸ்திரங்களை படிப்பதாகிய சமுத்திரத்திற்கு எல்லையேயில்லை.

56. சுருதியிலும் பெரியோர்களாலும் சொல்லப்பட்ட நல்ல ஆசாரத்தையனுஷ்டிப்பதும், விலக்கப்பட்டதை நீக்குதலிலும் பெரிய பீடை இருக்க எப்படி மனிதன் சுகமடைவான்.

57. யௌவன காலத்திலும் பெரிய துக்கம்; ஸ்திரீ ஸங்கத்தில் அதைவிட அதிக துக்கம்; ஸ்திரீ போக இச்சை துக்கம்; விசாரிக்குங்கால் துக்கமாகவே முடியும்.

58–59. ஸ்திரீகளை உபசாரஞ் செய்வதிலும், ரக்ஷிப்பதிலும், அவர்களுக்கு குறைவுநேரிடும் காலத்திலும், ஆடை ஆபரணங்கள் ஸம்பாதித்து கொடுப்பதிலும், இவைகளைக் காப்பாற்றுவதிலும் துக்கமேதவிர வேறில்லை.

60. வீடு, நிலம், தனம் இவைகளை ஸம்பாதிப்பதிலும், ரக்ஷிப்பதிலும் யோசிக்குங்கால் துக்கமேயுண்டாகும்.

61. புத்திர, மித்திர, பந்துக்களின் கஷ்டங்களால் துக்கமும், அவர்களின் நாசபயத்தால் துக்கமும் உண்டாகிறது.

62. ராஜ்யம் வகிக்கிறதில் வெகு துக்கம்; மந்திரியாயிருப்பது அதைவிட துக்கம்; ஊழியஞ்செய்வதில் வெகு துக்கம்.

63. வேத மார்க்கத்தைவிட்டு மற்ற வழிகளிலிருப்பதும், நல்ல வழியைத் தெரிந்துகொள்ளுவதும் துக்கமே.

64. தான் தரித்திரனுயிருப்பதில் வெகு துக்கம்; மற்று மொருவன் ஸம்பத்தைப்பார்க்கையில் துக்கம்; நமக்கு ஸமமா யிருப்பவனைப் பார்த்து துக்கம்; விசாரிக்குங்கால் துக்கமே இருக் கிறது.

65. வாயு, அக்னி, ஜலம் இவைகளின் பீடையும், ஸர்ப் பாதி தீண்டலில் பீடையும் துக்கமே.

66. பூத, பிரேத, பிசாச, யக்ஷர்களால் மகாபீடை; நல்ல பதவியை யடைவதும் மகா துக்கம்.

67. இந்திர லோகத்திலும், பிரஹ்ம லோகத்திலும், விஷ்ணு லோகத்திலும், ருத்திர லோகத்திலும், விசாரிக்குங்கால், துக்க மேயுளது.

68. அதிகமாக விஸ்தரிப்பதில் பிரயோஜனமில்லை; இந்த தேகத்தில் 'நான்', 'எனது' என்ற புத்தியைச் செலுத்துவா னுகில் துக்கத்தையே எப்பொழுதும் அடைவான்; கொஞ்சமே னும் சுகமடையான்.

69. (விஷய சுகமும் துக்கமென்றுல் ஏன் ஒருவன் அதை துக்கமென் றறியவில்லை யெனில்) துக்கத்தை துக்கமாகவும், கொஞ்சகாலம் மோகத்தால் சுகமாகவும் எண்ணுகிருன்.

70. ஸுகம் ஆத்மாவின் ஸ்வரூபமேயன்றி வேறென்று மாகாது; இதையறியாததால் மனிதனுக்கு வெளிப் பதார்த்தங்க ளில் சுகத்தை இச்சிக்கிருன்.

71. இந்த அறியாத்தன்மை நீக்கப்பட்டால் (எப்பொழு தும்) அடையப்பட்டதாயுள்ள சுகத்தை தானேயடைகிருன்; அடையப்படாமலிருக்கிற துக்கத்தையும் தானே நீக்கிவிடுகிருன்.

72. அக்ஞானத்தின் நிவிருத்தி ஞானத்தாலே ஒழிய கர் மத்தால் அன்று; ஞானம் என்றுல் வேதாந்த வாக்கியத்தாலுண் டாகும் மகாதேவனையறிதல்.

73. ஸம்ஸாரத்தினின்றும் விரக்தியடைந்தவனுக்கு அந்த ஞானம் உண்டாகுமேதவிர மற்றொருவனுக்கும் உண்டாகாது;

எப்பொழுது ஒருவனுடைய ஹிருதயத்திலிருக்கிற ஆசைகளெல்லாம் நிங்குகின்றனவோ அப்பொழுது அந்த மனிதன் நாசமற்றவனுகி இவ்விடமே பிரஹ்மத்தை அனுபவிக்கிருன்.

**74.** வைராக்கிய மில்லாதவனுக்கு உண்மை அறிவு உண்டாகாது; முக்தி ஸித்திக்காது; பந்தமும் நீங்காது; தர்ம ஸித்தியும் உண்டாகாது; ஆனதால் இந்த சிரேஷ்டமான வைராக்கிய தர்மம் பெரியோர்களால், வெகு கிருபையுடன், சொல்லப்பட்டிருக்கிறது.

---

## அத்தியாயம் 18.

### (அநித்திய வஸ்து விவேகம்).

**1.** ஸூதர்:—இனிச் சுருக்கமாக, விஸ்தாரமின்றி, அநித்திய வஸ்துக்களைப்பற்றிச் சொல்லுகிறேன்; இதை யறிந்தால் ஸம்ஸாரத்தினின்றும் வைராக்கியம் மனதிற்கு உண்டாகும்.

**2.** தான் அல்லாத ஜடரூபம் எதுவுளதோ அது அநித்தியம் என்று சொல்லப்படுகிறது; ஏனெனில், பண்டிதர்முதல் பாலன் ஈருக தனக்கு வேருகிய கடாதிகளில் அநித்யத்வம் அறியப்படுகிறது.

**3–4.** சிலர் இவ்விடத்தில் காரியங்களுக்கு (கடபடாதி முதலிய காரியங்களுக்கு) மட்டும் அநித்யத்வம் சொல்லுகிருர்கள்; அது யுக்தமன்று; காரியமல்லாதவைகளுக்கும் அநித்யத்வம் பிரஸித்தமாய் காணப்படுகின்றது; ஹே! பண்டிதோத்தமர்களே! (அநாதியாய்) காரியமில்லாத கடமுதலியவைகளின் பிராக் அபாவத்தின் (முன் கடரூபமாயில்லாமை) அநித்யத்வம் மனிதர்களால் அறியப்படுகிறதன்றே! அறியப்படாமல் இல்லை.

**5.** பாவரூபமாயுள்ள (இருப்பாயுள்ள) வஸ்துவுக்கு காரியமாகவிருக்கும் தன்மை அநித்யத்தை ஸாதிப்பதில் பிரயோஜனமாகும்.

**6–7.** என்ருலும் (பாவ, அபாவரூபமான) எல்லா பதார்த்தங்களின் அநாத்மத்வம் (ஆத்மா ஆக இல்லாமலிருப்பது) மேற்கூறிய அநித்யத்தை ஸாதிப்பதில் பிரயோஜனமாகும். திக்கு,

காலம், ஆகாசம் முதலிய அனாத்ம பதார்த்தங்கள் அநித்யத் தன்மையை அடைந்திருக்கின்றன; சுருதியும் இவைகளுக்கு அநித்யத் தன்மையை ஆதரவுடன் கூறுகிறது.

8–9. (பாவரூபமாயுள்ள காரியங்களுக்கு அநித்யத்தன்மை வாஸ்தவம்; பாவாபாவரூபமாயுள்ள மற்ற பதார்த்தங்களுக்கு அநித்யத்தன்மை எப்படி ஸாத்தியம் என்றால், பாவாபாவ ரூபமாயுள்ள எல்லா பதார்த்தங்களும் அநாத்ம வஸ்துக்கள்; அந்த அநாத்ம வஸ்துக்கள் முழுவதும் பிரஹ்ம காரியங்கள்; காரியமாயிருப்பதால் அநித்யம். ஆனால், இதில் ஒரு தர்க்கம்; காரியங்களெல்லாம் தன் ஜாதியை ஒட்டிய திரவியத்தோடு இருக்கும்; பிரஹ்ம காரியங்களோ அப்படியில்லை. இந்த சந்தேகத்திற்கு ஸமாதானஞ் சொல்லப்படுகிறது).

சுருதியை அனுஸரித்துவந்த தர்க்கத்தை பிரமாணமாக அங்கீகரிக்க வேண்டுமேதவிர ஸ்வதந்தரமான தர்க்கத்திற்கு பிரமாணமில்லை; ஹே! வேதமறிந்தவர்களே! பார்க்கப்பட்டதை உதாரணமாகக்கொண்டு தர்க்கம் விஷயத்தை ஸாதிக்கிறது (நிச்சயப்படுத்துகிறது); வேதமோ வேறு அபேக்ஷையன்றி விஷயத்தை ஸாதிக்கிறது; பிரத்யக்ஷமுதலிய ஐந்து பிராமணங்களுக்கும் எட்டாமலிருக்கிற பிரஹ்மம், தர்மம், அதர்மம் இவைகளை சுருதியொன்றே அறியச்செய்கிறது.

10. இந்திரியங்களுக்கு எட்டாத விஷயங்களை சுருதியின்றி அறிய முயற்சிசெய்கிறவன், நாவினாலன்றி கையால் ருசியை உணருகிறவனுக்கு ஒப்பாவான் என்பது நிச்சயம்.

11–13. முன்னொருகாலத்தில் ஸங்கிரன் என்ற ஒரு மூர்க்க அந்தணன், பூர்வ ஜன்மபாவத்தால் வேதத்தில் சிரத்தையற்றவனாகி, தர்க்க சாஸ்திரத்தில் இன்புற்று, இந்திரியங்களுக்கு மேல்பட்டதும் நாசமற்றதாயுமான பிரஹ்மத்தையும், தர்மாதர்மங்களையும் கேவலம் தர்க்கத்தாலே, சிரமமில்லாமல், அறிய வெகு பிரயத்தனஞ் செய்தான்; அப்பொழுது அவனுக்கு தர்க்கம் நானாவிதமாய்த் தோற்றிற்று.

**14–15.** அதனால் மோகத்தையடைந்த ஸங்கிரன் உடனே பாஷண்ட மார்க்கத்திலும் அதன் உட்பிரிவுகளிலும் சிரத்தையுடன் தீக்ஷை பெற்றுக்கொண்டான்.

**16.** திரும்பவும் தர்க்கத்திற்கு ஸ்திரமில்லாததினால், மாயையால் அதிக மோகப்பட்டு, பாஷண்ட மார்க்கத்தையும் நீக்கி இஷ்டப்பிரகாரஞ் சஞ்சரித்தான்.

**17.** இதற்குமேல் மோகத்தால் சூழப்பட்டவனாய் தன்னுடைய ஸகோதரியையும் தாயையும் புணர்ந்து, பிறகு, இந்த கெட்ட பிராமணன் மரித்தான்.

**18.** அதிக குரூரர்களாயும், பயங்கரர்களாயும் ஆயத்தமாயுமுள்ள யமதூதர்கள் ஸங்கிரனை அழைத்துக்கொண்டு சீக்கிரமாக யமனிடஞ் சென்றார்கள்.

**19.** யமன் இந்த ஸங்கிரனை கோபத்துடன் பார்த்து, தன்னுடைய பரிவாரங்களை கூடியமட்டும் இவனை தன்முன்னிலையில் ஹிம்ஸைசெய்ய கட்டளையிட்டான்.

**20.** இப்படி யமனால் சொல்லப்பட்ட யமகிங்கரர்களால் அதிகமாய் பீடிக்கப்பட்ட ஸங்கிரன் மூர்ச்சையடைந்தான்.

**21–22.** மறுபடியும் கடுமையான வாக்கால் யமன் உத்திரவு செய்ததாவது:—'இந்த ஸங்கிரனை வெட்டுங்கோள்! குத்துங்கள்! பொசுக்கிவிடவும்; இரும்பு ஆலைமுதலியவைகளில் இவனைத்தள்ளி எப்பொழுதும் ஆலையாட்டுங்கள்; மற்றும் பலவிதமான கொடிய உபாயங்களால் இவனை கஷ்டப்படச் செய்யவும்'.

**23–24.** ஸங்கிரனும் யமதூதர்களால் கிரமமாய் நரக ஸமுத்திரத்தில், அநேகவிதமாயும் வெகு பயங்கரமான யந்திர உபாயங்களாலும் ஹிம்ஸிக்கப்பட்டு, கோடி வருஷமிருந்தான்.

**25–27.** முன் ஜன்மத்திற்செய்த மகா புண்ணியத்தின் பரிபாகத்தாலும், பரமாத்மாவாயும், சிவனுமான ருத்திரனுடைய கிருபையாலும் அந்த விடத்திற்கு எதிர்ச்சையாக மகா தேஜஸ் உள்ளவரும், புத்திமானும், சம்பு பக்தராயும், இரண்டாவது

சம்புபோல் இருக்கிறவருமான சதாநந்தர் என்ற பெயருள்ளவர் வந்தார். அவர் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிற இந்த ஸங்கிரஹே கருணபலத்தால் பார்த்து 'ஓம் நமசிவாய' என்ற ஆறு அக்ஷரங்களுடன்கூடிய சிரேஷ்டமான மந்திரத்தைச் சொன்னர். அப்பொழுதே அந்த நரகம் ஸ்வர்க்க லோகமாகவே ஆயிற்று.

**28.** மங்களகரமான புஷ்பவிருஷ்டியும் உண்டாயிற்று; புத்திமான்களாயும் அக்னிபோல் பிரகாச முள்ளவர்களுமான ஸித்தர்களும், யக்ஷர்களும், முனிகளும் அவ்விடத்தில் வெகு அழகான நர்த்தனத்தைச் சந்தோஷத்துடன் செய்தார்கள்.

**29–30.** நர்த்தனம், ஸங்கீதம் முதலியவைகளுடன் வெகு அழகான யக்ஷகின்னரர் முதலியவர்கள் அப்ஸரஸ் ஸ்திரீகளுடன் ஸுகத்தை யனுபவித்தார்கள்; எல்லா தேவர்களுடன் தேவேந்திரன் சந்தோஷத்துடன் தானே அழகான நர்த்தனஞ்செய்தான்; பிரம்மாவும் தன் பார்யையுடன் நர்த்தனஞ் செய்தார்; விஷ்ணுவும் லக்ஷ்மியுடன் சந்தோஷத்துடன் நர்த்தனஞ்செய்தார்.

**31.** யமன் அதிகபயத்துடன் பரமேசுவரனுடைய கட்டளையால் பிரவர்த்தித்தவனுக கைகூப்பி, தன்மனிதர்களுடன் நடுங்கிக்கொண்டு, தானும், சிவன் என்ற எண்ணத்துடன் அநேக நமஸ்காரங்கள் செய்தான்.

**32–33.** சதாநந்தமுனி பயத்துடனிருக்கிற யமனை கிருபையுடன் பார்த்து 'ஹே! யம! பயப்படவேண்டாம்; சங்கரருடைய கட்டளையால் எல்லாம் நடக்கின்றது' என்ற ஸுகவார்த்தையைச் சொன்னர்; கெடுதல் என்ற தோற்றத்தைக்கூட நீக்குகிறதும், சுத்தபோத ஸுகவஸ்துவிலிருக்கிறதுமான அந்த வார்த்தையை கேட்டமாத்திரத்தில் ஸந்தேகம் நீங்கிய யமன் உடனே பயமற்றவனுக ஆனன்

**34.** பிறகு ஸகல உலகத்திற்கு முனீசுவரரான சதாநந்தமுனி யமனைக் கூப்பிட்டு எல்லோருடைய முன்னிலையில் அடியில் கண்ட ஸுகத்தைத்தரும் வசனத்தைக் கூறினர்.

**35.** சதாநந்தர்:—எவனொருவன் மஹேசுவரனை விஷ்ணு பிரஜாபதி இந்திராதி தேவர்களைக்காட்டிலும் சிரேஷ்டமாக எண்ணுகிருனே அந்த பிரபுவை நீ விட்டுவிடு.

**36–47.** எந்த மனிதன் நாராயணமுதலிய சப்தங்களைவிட சிவ ருத்திராதி சப்தம் சிரேஷ்டமென்று அறிகிருனே அந்த பிரபுவையும்; உமையுடனும், சுத்தமாயும், முக்கண்ணுடையவரும், சந்திர சேகரருமான பரத்தினுடைய மூர்த்தியை அறிகிற பிரபுவையும்; எல்லா ஜகத்தின் மூலமும், எல்லாவற்றை பிரகாசிக்கிற வஸ்துவையும் ஆத்மாவாக அறிகிறவனையும்; சிரசிலும், நெற்றியிலும், மார்பிலும் பிரீதியுடன் திருபுண்டாரத்தை பஸ்மத்தால் தரித்துக்கொள்ளுகிறவனையும்; 'அக்னிரிதிபஸ்மா' என்ற முதலிய மந்திரங்களால் பஸ்மத்தை தன்தேகத்தில் உபயோகப்படுத்திக்கொள்ளுகிறவனையும்; தினந்தோரும் ஸம்ஸார விமோசகராயிருக்கிற மஹாதேவனை லிங்கத்தில் ஆராதனை செய்கிறவனையும்; மூன்று, ஆறு, அல்லது ஒன்று ருத்திராக்ஷத்தை வெகு சிரத்தையுடன் நித்தியம் தரித்துக்கொண் டிருக்கிறவனையும்; சாந்தம் தாந்தம் முதலியவைகளோடும், சங்கரபக்தியுடனும் சேர்ந்த ஸர்வகர்ம ஸந்யாஸியையும்; எப்பொழுதும் வேதாந்த சிரவணம், மனனம், சிந்தனம் பிரீதியுடன் செய்துகொண்டிருக்கிறவனையும்; வேத வேதாந்த நிஷ்டையிலுள்ள குருவின் சிஷ்ரூஷை செய்துகொண்டிருப்பவனையும்; யக்ஞம், தானம், தபஸ், ஹோமம், ஸ்வாத்யாயம், அத்யயன முதலியவைகளால் பிரீதியுடன் ருத்திரனை ஆராதிக்கிரவனையும்; ச்ரௌத ஸ்மார்த்த ஸதாசாரங்களாலும், மற்றுமுள்ளதுகளாலும், பிரீதியுடன் சிவார்ச்சனஞ் செய்கிறவனையும், நீ விட்டுவிடு.

**48–54.** எவனொருவன் எப்பொழுதும் தேவர்களுடையதை விட உயர்ந்திருக்கும், பிரீதியுடன் பரமாத்மாவான சிவனுடைய, மகிமையைக் கூருமலிருக்கிருனே அவனையும்; விஷ்ணு, பிரம்மா முதலியவர்கள் மஹாதேவனுக்கு ஸமம் என்று மோகத்தால் நினைக்கிறவனையும்; மோகத்தால் தினந்தோரும் ச்ரௌதஸ்மார்த்த ஸதாசாரங்களை சிரத்தையுடன் அனுஷ்டிக்காதவனையும்; பிரமை

யால் மனிதன், தெய்வம், அல்லது மற்ற அடையாளங்களை தன் தேகத்தில்செய்துகொள்கிறவனையும்; மோகத்தால் திரிபுண்டரம், திரிசூலம், உருண்டாகாரங்களை தரிக்கும் வைதிகனையும்; சுருதி யில் சொல்லப்பட்ட ஆசாரங்களில் பராங்முகனையும், சொல்லப் படாத ஆசாரங்களை யனுஷ்டிப்பவனையும், குருத்ரோகியையும், வேதமார்க்கத்தின் மேன்மையை அறியாதவனையும், வேதாந்தத் தின் சிரேஷ்டத்தை யறியாதவனையும், துர்ஜனனான இவனை, நீர் கொல்லும்.

**55.** ஸூதர்:—சதாநந்தமுனி இவ்விதம் சொல்லிவிட்டு, குதூஹலத்துடன், ருத்திரனை ஸ்தோத்திரஞ்செய்ய கைலாஸஞ் சென்றார்.

**56–60.** ஹே! விப்ரர்களே! யமனும் ஆதரவுடன் ஸங்கிரனை யழைத்து, வேதமன்றியில் கேவலம் தர்க்கத்தை நீ கைப்பற்றிய தால் அனேகவிதமானதும் ஸஹிக்கக்கூடாததுமான மகா கஷ்டத் தை அனுபவித்தனை; முன்செய்த புண்யத்தாலும், மகாதேவனு டைய கிருபையாலும், ஷடக்ஷர மந்திரத்தைக் கேட்டதாலும் இந்த துக்கத்திலிருந்து மீண்டுகொண்டனை; சுகத்தைக்கொடுப்ப தான பிராமண ஜன்மத்தையடைந்து, மறுபடியும் வேதத்தின் மகிமையை தெரிந்துகொண்டு, அதில் சொல்லிய தர்மத்தைச் செய்துகொண்டு, அதற்குமேல் வேதாந்தவாக்கியத்தா லுண்டா கும் சிவஞானத்தையடைந்து, சீக்கிரத்தில் பந்தத்திலிருந்து முக் தியடை, என்று சொல்லிவிட்டு யமன் தன்பட்டணஞ் சேர்ந்தார்.

**61.** ஆதலால் வேதத்தில் சொல்லப்பட்டனவையே நல்ல தும் நிச்சயமான அர்த்தங்கள்; தர்க்கத்தால் ஸித்திபெறும் அர்த் தங்கள் துக்கத்திற்குங் கெடுதலுக்குங் காரணமாகும்.

**62.** ஹே! வேதமறிந்தவர்காள்! சுருதியைவிலக்கி கேவலம் தர்க்கத்தைக் கைக்கொண்ட அநேகர் ரௌரவாதி நரகங்களில் கஷ்டப்பட்டார்கள்.

**63.** தார்க்கிகர்களுடன் ஸஹவாஸமும், அவர்களுடன் பங்திபோஜனமும், அவர்களுடன் சேர்க்கையும் நரகத்தில் கொண்டுவிடும்.

64. தார்க்கிகன் மகாபாபி; அவன் மகாபாதகிக்கு ஸமம்; அவனுடன் ஒரு காரியமுஞ் செய்யக்கூடாது; ஆகையால் தர்க்கத்தை ஒழிக்கவேண்டும்.

65. ஆகையால் வேதத்தில் சொல்லியபிரகாரமாக அநாத்ம பதார்த்தங்களெல்லாம் அநித்ய வஸ்துக்கள் என்று நிச்சயமாய் அறியவேண்டும்.

66. ஹே! த்விஜர்களே! ஆத்மாவைத்தவிர மற்றதெல்லாம் அநித்யம் என்றுண்டாகும் அறிவு, ஒன்றே, ஸம்ஸாரத்தில் (உலக வாழ்க்கையில்) வைராக்கியத்தை உண்டாக்கும்.

67. ஸம்ஸாரத்தினின்று வைராக்கியமடைந்தவனுக்கு ஆசைப்படக்கூடியது ஒன்றுமில்லை; ஸம்ஸாரத்தில் வைராக்கியம் உண்டானல் துக்கமேயில்லை.

68. மானிடர்களுக்கு ராகத்தால் ஸம்ஸார மகா துக்கமுண்டாகிறது; விரக்தனுக்கு ராகமில்லாததால் ஸுகமேயுள்ளது.

69. ஆகையால் வைராக்கிய லாபத்தின்பொருட்டு அநாத்மாக்களான சராசரமான இந்த ஜகத்முழுவதும் அநித்தியமென்றுணர்ந்திடவேண்டும்.

70–71. மாடமாளிகைகளுடன் புத்திரமித்திர களத்திர முதலிய போகங்கள் மின்னல்போல் நசிக்கும்; மகாமோகத்தால் அவைகளை நித்தியமென்று மனிதன் நினைக்கிறான்.

72–73. மகா போகத்துடன்கூடிய வேந்தனும் தனது ஆதிபத்தியமில்லாமல் ஸ்வபாவத்திலே துன்பமடைந்து இருப்பது பார்க்கப்பட்டிருக்கிறது; அப்படியே தானே அதிபதியாயுள்ள மகாராஜனும் இராஜ்ய சுகமற்று துக்கமடைந்தவனாக ஸகல ஜனங்களும் பார்த்திருக்கிறார்கள்.

74. இவ்விதமிருந்தும் மோகத்தால் சூழப்பட்டவர்களாக ஸுகபோகத்தின்பொருட்டு சேஷ்டிக்கிறார்கள்.

75. பரலோக ஸுகமும் (ஸ்வர்காதிசுகமும்) கர்மத்தால் ஸாதிக்கப்படுவதால் அதுவும் நாசமேயடையும்; ஸந்தேகமில்லை.

**76–79.** பிரளயகாலத்தில் இந்த மகாபூமியும் பெருங்கடலில் நஷ்டமாய்ப்போகிறது; அதிலுள்ள பொருள்களும் நாசமாகின்றன; ஏழு ஸமுத்திரங்களும் வடவாமுகப் பெருந்தீயில் நாசமாகின்றன; வடவாக்னி பெரும்வன்னியிலும், இது வாயுவிலும், வாயு ஆகாசத்திலும், அந்த ஆகாசமும் தனது காரணமான அவ்யக்தத்திலு மொடுங்கும்; (அவ்விதமே) சப்தமுதலிய பூதங்களும் நாசமடையும்; பூதங்களின் நாசத்தால் பௌதிகமனைத்தும் நசிக்கும்; இப்படியிருக்க எதை நித்தியமென்று சொல்லக்கூடும்.

**80–81.** (இவ்விதமாகவே) பிரஹ்மாமுதல் ஸ்தம்ப பூச்சி பரியந்தம் பலவித சேதனங்களும் நசிக்கின்றன; ஸர்வ ஜகத் யோனியாகிய விஷ்ணுவும், தன்னிடமிருந் துண்டானவைகளுடன், பிரளயத்தில் நாசமடைகிறார்; இப்படியிருக்க எது நித்யமாகும்.

**82.** தானே ஒளிமயமான பரசிவப் பெருமானொருவனே என்றைக்குமுள்ளோன். அவரையன்றி மற்றதெல்லாம் பொய்யே.

**83.** சுருதியாலும் யுக்தியாலும் அநாத்மாவாயுள்ள ஜடமாகிய எல்லாம் அநித்தியமென்றுணர்ந்தவன் எப்பொழுதுமுள்ள பிரபுவாகிய சம்புவை கிரமமாக யடைகிறான்; இது என்னால் ஸத்தியமாச் சொல்லப்பட்டது.

---

## அத்தியாயம் 19.

---

### (நித்தியவஸ்து விசாரம்).

1. ஸூதர்:—ஹே! த்விஜர்களே! இனி இப்பொழுது எந்த நித்தியவஸ்துவை அறிந்தால் சிவஞானந் திடமாக உண்டாகுமோ அதை ஸங்கிரமமாகச் சொல்லுகிறேன்.

2. எந்த ஆத்மா கேவலமாயும், சுத்தமாயும், விகாரமற்றதாயும், நிரஞ்சனமாயும் (மாயை இருளற்றதாயும்) இருக்கிறானோ அவனே சிற்சொரூபமாயும் எப்பொழுதும் ஸர்வஸாக்ஷியாயுமுள்ள நித்தியன் (நித்தியவஸ்து).

3. ஹே! ஸூவிருதர்களே! அநித்தியம் ஜடத்திற்கேதவிர சித்ரூபவஸ்துக்கு இல்லை; சித்துக்கு அநித்யத்தை எவராலும் காணப்பட்டதில்லை.

4. (ஸாக்ஷி சைதன்யத்திற்கு நித்தியத்வமிருக்கட்டும், ஆனால் தத்ஜாதீயமான 'இதுகடம்' முதலிய விஷயகோசர ஞானத்திற்கு அநித்யத்வம் தோன்றுகிறதே யெனில்) விசாரித்துப் பார்த்தால் கடமுதலிய ஞானத்திற்கும் அநித்யத்வமில்லை; ஏனெனில் அந்த (விஷயகோசர) ஞானம் அந்தக்கரண விருத்தியாலே தோன்றுகின்றது.

5. அந்தப் பிரத்தியயத்தில் ('இதுகடம்' என்ற முதலிய ஞானத்தில்) சிதாகாரம், விருத்தியாகாரமென இரண்டுமுள்ளன; பிராந்தியினால் ஒன்றாய்த்தோன்றும்.

6. பிரத்யயஞானத்தில் பாவாம்சமென்றும் (தாதுவின் அர்த்தபாகஞ், சொற்பொருள்பாகம்), காரகாம்சமென்றும் (வேறென்றுண்டான அம்சம்) இரண்டுமுள்ளன; இவைகளில் பாவாம்சம் சித்ரூபமாயும், காரகாம்சம் விருத்தியம்சமாயு மிருக்கின்றன.

7. கடவஸ்துவைப்போல ஜடமாகியபடியால் விருத்தியம்சத்திற்கே நாசமுண்டாகும்; சித் அம்சம் நாசமடைகிறதேயில்லை; ஒருவராலும் காணப்படாதபடியால்.

8. இதிலும் ஞானத்தன்மைக்கு நாசமில்லை; விருத்தியுடன் கூடிய பாவத்திற்கு நாசங் காணப்படுகிறது.

9–11. ஆதலால் பாவாம்சத்திற்கு நாசத்தின் தோற்றம் பிரமமேதவிர வேறல்ல; ஞானமிலார் சித்திவிருத்தியிற் றோன்றும் சித் ஆகாரத்தை உண்டாயிற்றென்று நினைக்கிறார்கள்; அறிஞர் ஒருபொழுதும் எண்ணமாட்டார்கள்; ஹே! முனீசுவர்களே! விருத்தி நாசமாகும்பொழுது விருத்தியிலுள்ள சித் ஆகாரத்தை, பிரகாசமில்லாததால், நாசமாயிற்றென்று அக்ஞானத்தால் நினைக்கிறார்கள்; ஹே! ஆஸ்திகர்களே! சைதன்ய மாத்திரத்திற்கு அநித்யத்வமில்லை.

12. அரியப்பட்டதும் அரியப்படாததுமாகிய எல்லாவற்றிற்கும் எவர் தானுக ஸாக்ஷியாக விளங்குகிருரோ அவரே ஸாக்ஷாத் சின்மாத்திர ஸ்வபாவ ஆத்மா; வேறு ஒருவரும் அன்று.

13. விசாரிக்குங்கால் அவருக்கு ஜன்ம நாசங்களில்லை; உண்டாகும் வஸ்துக்களின் ஜன்மகாலத்தில் இவர் ஸாக்ஷியாயிருப்பதால் இவருக்கு ஜன்மமில்லை.

14. அவ்விதமே நாசத்திற்கும் ஸாக்ஷியாயிருப்பதால் அவருக்கு நாசமில்லை; 'இருக்கிறது' என்று சொல்லப்படும் காலத்தில் இவரிருப்பதால் இவரில்லையென்பது ஒருக்காலும் கிடையாது.

15. ஹே! முனிசிரேஷ்டர்களே! ஜன்மநாச ஞானமும் ஸாக்ஷியன்றியில் இல்லை! ஜன்ம நாசங்கள் தனியாக ஸித்தியாகா.

16–17. ஜன்ம நாசங்கள் கடம் சுவர் முதலிய வஸ்துக்கள் போல காணப்படுகிறபடியாலும், ஜடமாயிருப்பதாலும் தானே ஸித்தியாகா; ஸாக்ஷியாயுள்ளவனுக்கு ஜன்மநாசங்கள் ஜடமாயுள்ள வெளிப்பதார்த்தங்களால் ஸித்தியாகா; ஏனெனில் ஸாக்ஷிரூபமாயுள்ள வஸ்துவைத்தவிர வேறு பதார்த்தமில்லை.

18. ஸாக்ஷியால் விளங்கப்பட்ட பதார்த்தங்களெல்லாம் ஓரே தன்மையாகையால் (ஸாக்ஷ்யம்) ஸாக்ஷிபேதம் ஸித்திக்கிறதில்லை.

19–20. ஸாக்ஷ்யரூப பேதம் பதார்த்தங்களிலேதவிர ஸாக்ஷியில் இல்லை; ஸாக்ஷியாக பேதமில்லாவிடினும் புவியில் சிலர் விசேஷரூபமாக பேதத்தைக் கூறுகிருர்கள்; அவர்கள் மகா மோகமாகிற ஸர்ப்பத்தால் தீண்டப்பட்டவர்களென்பதில் ஸந்தேகமில்லை.

21. (இவர் சொல்லும்) விசேஷரூபம் சித்ரூபமாகவாவது ஜடரூபமாகவாவது இருக்கவேண்டும்; இவைகளைத்தவிர வேறு ரூபம் ஏற்படவில்லை.

22. சித்ரூபம் ஸாக்ஷிமாத்திரமாக இருக்குமே ஒழிய வேறு ஒன்றும் பரமார்த்தமாக ஆகாது; ஜடரூபம் பரமார்த்தத்தில் ஸாக்ஷியைக்காட்டிலும் வேருகவில்லை.

23. சித்ரூபத்திற்கு ஜடரூபம், விரோதமிருக்கிறபடியால், ஸித்திக்கிறதில்லை; லோகத்தில் பிரகாசத்திற்கு இருள் ஸித்தியாகாததுபோல்.

24. ஆதலால் ஸர்வஸாக்ஷிக்கு விசேஷரூபபேதஞ் சொல்லுகிறவர்கள் மகாபிராந்தர்களாயும் ஸம்ஸார ஸமுத்திரத்தில் அமிழ்ந்தவர்களாகவும் ஆவார்கள்.

25. ஹே! த்விஜர்களே! சிரத்தையுடன் வேதம் ஆத்மாவிற்கு ஸர்வ ஸாக்ஷித்தன்மையையும், ஏகத்தன்மையையும், நித்தியத்தன்மையையும், சுத்தத்தையும், பூமானந்தத் தன்மையையும், பிரஹ்மத்வத்தையும் கூறுகிறது.

26. ஹே! ஆஸ்திகாள்! அவ்விதமே ஸ்மிருதிகளும், பாரத முதலிய புராணங்களும் கூறுகின்றன.

27. அப்படியே மகாதேவரும் விஷ்ணுவும் பிரம்மாவும் ஆத்மாவிற்கு நித்தியசுத்த ஞானத்தைக் கூறுகிறார்கள்.

28. ஆகையால் ஆத்மா ஒன்றே நித்திய வஸ்துதவிர வேறு ஒன்றும் நித்தியமல்லவென்று நாக்கில் பழுத்த மழுவை தரிப்பேன்; ஸந்தேகமில்லை.

---

## அத்தியாயம் 20.

---

### (விசிஷ்டதர்ம விசாரம்).

1. ஸூதர்:—இப்பால் சிரேஷ்டமான தர்மத்தை சிரத்தையுடன் சொல்லுகிறேன். அதிக சோபனமான இதை ஸந்தோஷத்துடன் கேளுங்கள்.

2–5. முன்னொருகாலத்தில் வேதமறிந்தவர்களில் சிரேஷ்டர்களான காவஷேயர்கள் என்ற மகரிஷிகள், ஸத்ரயாகத்தின் முடிவில் கூடி, சிரத்தையுடன் வெகுகாலஞ் சிரேஷ்டதர்மம் எது, என்று விசாரித்து, திரும்பவும் திரும்பவும் ஸந்தேகப்பட்டு துக்கத்துடன் ஹிமயபர்வதத்தின் சார்பையடைந்து முக்கால ஸ்நானத்துடனும், ஸர்வாங்க விபூதிதாரணத்துடனும், நெற்றியில் திரி

புண்டரதாரணத்துடனும், ருத்திராக்ஷமாலை ஆபரணத்துடனும், ஜடை மரவுரிதரித்தும் அளவற்ற காந்தியுடன் சிவலிங்க பூஜை எப்பொழுதுஞ் செய்துகொண்டிருந்தார்கள்.

**6-7.** இவ்விதம் மூன்றுவருஷகாலம் தவம்புரிந்தார்கள்; மஹாதேவனுடைய பிரசாதத்தால் மிகக் கிருபையுடையவரும், உத்தமரும், சக்தி என்ற ஆயுதத்தை கையில் தரித்தவரும், மிகப் பிரகாசமுள்ளவரும், இரண்டாவது சங்கரன்போல விளங்குகிறவ ராயும், ஜகத்திற்கெல்லாம் ஸ்வாமியாயுமுள்ள ஸ்கந்தர் தாமே பிரத்யக்ஷமானார்.

**8-9.** எல்லாமுனிவர்களும் அவரைப்பார்த்து தெளிந்த இந்திரியமனதுடன் பக்தியால் பரவசர்களாகி தகைந்த சப்தத் துடன், எழுந்து எழுந்து பூமியில் தண்டஞ்செய்து வணக்கத் துடன் ஸ்தோத்திரஞ்செய்து, சக்தியானுஸாரம் அந்த மகாத்மா வைப் பூஜித்தார்கள்.

**10-11.** முனிவர்கள் கைகளைக்கூப்பிக்கொண்டு உத்தம மான தர்மத்தைச் சொல்லும்படிக் கேட்டார்கள்; எல்லா ஜகத் திற்கு ஸ்வாமியாயும், தாரகாசுர சத்துருவாயும், காந்தியுடையவ ரும், எல்லா ஞானரத்னங்களுக்கும் கருணைக்கும் இருப்பிடமா யுள்ளவருமான அவர் வெகு ஸந்தோஷத்துடன் முனிகளைநோக்கி உத்தமமான தர்மத்தைத்தானே சொன்னார்.

**12.** ஸ்கந்தர்:—வெகு பாக்கியத்துடன்கூடிய முனிகளே! கேளுங்கள்! உத்தமமாயுள்ள தர்மத்தை உங்களுக்கு நான் சுருக்க மாகச் சொல்லுகிறேன்.

**13.** தன் புத்தியால் கல்பிக்கப்பட்டதாயும் பிரமாணமற்ற தாயு மிருந்தாலுஞ் சிரத்தையுடன் கூடியிருந்தால் அதற்கு தர்ம மென்று சொல்லப்படும்.

**14.** பிரமாணமற்றும், தன்புத்தியால் கல்பிக்கப்பட்டிருந் தாலும் தேவதா ஆராதனை ரூபமாகவிருப்பது முற்கூறியதைவிட சிரேஷ்டமான தர்மமாகும்.

15. ஸ்வபுத்தி கல்பிதமாயும் மூலாகம மற்றதாயும் தேவதா ராதன ரூபமுள்ள தர்மத்தைக்காட்டிலும் பிரமாணத்தோடுகூடிய தர்மம் சிரேஷ்டமாகும்.

16. வேதார்த்தமறிந்தவர்களே! மூலாகமத்தோடுகூடிய தர்மங்களுள் புத்தாகமம் சிரேஷ்டம்.

17–20. இதைவிட க்ஷபணகாகமம் (ஜைனம்) சிரேஷ்ட மென்றும், இதைவிட பிரஹ்மாவால் சொல்லப்பட்ட ஆகமம் சிரேஷ்டமென்றும், இதற்குமேல் விஷ்ணுவாகமம் சிரேஷ்டமென் றும், அதைவிட சைவாகமதர்மம் உயர்ந்ததென்றுஞ் சொல்லப் படும்; இதில் ஸந்தேகமில்லை. சைவாகம தர்மமும் இரண்டுவித மென்று ஏற்பட்டிருக்கிறது.

21. கீழ்நோக்கிய பிரவாகத்தினின்று உண்டான தர்மம் ஒன்று (பரமசிவனுடைய லீலாவிக்கிரக நாபிக்குக் கீழ் உண்டா னது); மற்றொன்று மேல்நோக்கிய பிரவாகத்தினின்று உண்டா னது (ஸத்யோஜாதம் முதலிய ஐந்து முகங்களினின்றும் உண்டா னது).

22. கீழ்நோக்கிய தர்மத்தைவிட மேல்நோக்கிய தர்மம் சிரேஷ்டம்; மேல்நோக்கிய தர்மம் காமிகம் முதலிய பேதங்களால் அநேக பிரிவுகளாக வகுக்கப்பட்டிருக்கிறது.

23–27. அவ்விதமே கீழ்நோக்கிய தர்மமும் (காபாலம் முதலிய) பலவிதங்களாக வகுக்கப்பட்டிருக்கிறது. மேல்நோக் கிய தர்மத்தைவிட ஸ்மார்த்த தர்மமும் சிறந்தது; ஸ்மார்த்த தர் மத்தைவிட வேததர்மம் சிலாக்கியமானது; ச்ரௌத தர்மங்களில் சாந்தம் முதலியவைகளும், இவைகளைவிட விபூதிப்பூச்சும், ருத் திராக்ஷதாரணமும், சிவநாமங்களை உச்சரிப்பதும், பக்தியுடன் சிவலிங்கபூஜை செய்வதும், நானே சிவனென்ற பாவனையும், சிவ ஞான நிஷ்டையிலிருப்பவர்களும் ஊழியமும் சிரேஷ்டமாகும்.

இவ்வெல்லா தர்மங்களைக்காட்டிலும் மோக்ஷத்திற்கு முக்கிய ஸாதனமாகிய வேதாந்த தாத்பரிய நிரூபணஞானம் மிகச்சிரேஷ்ட மானது. ஞானத்தைக்காட்டிலும் மேலான தர்மம் இல்லையென் பது வேதார்த்தக்கொள்கை.

28. முற்கூறிய ஞானத்திற்கு ஸாதனங்களாகிய எல்லா தர்மங்களைக்காட்டிலும், சுருக்கமாக பஸ்மம் ஒன்றே முக்கிய மாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

29. பஸ்ம ஸாதனமுள்ளோருக்கு சிவமென்று பெயருள்ள பஸ்மம் நேராக பிரகாசிக்கிறது; சாந்த குணத்தால் பராத்பரமாயும் சாந்தமாயுமுள்ளவஸ்து பிரகாசிப்பதுபோல்.

30. ஞானகாரணங்களுள் சுருதி ஒன்றே பெரிது; ஞானங் களுக்குள் சம்பு ஞானமே சிரேஷ்டமானது, மற்றவை சிரேஷ்ட மாகா.

31. வேதவாக்கியத்தால் உண்டாகுஞ் சிவஞானம் (ஒன்றே) சரியான ஞானம் என்று என்னால் நிரூபிக்கப்பட்டது; மற்றவைக ளுக்கு வியவஹாரத்தில் ஞானமென்று சொல்லப்படுகிறது.

32. நன்றாய் விசாரிக்கும்பொழுது வேதத்தில் கட்டளை யிடப்பட்ட தர்மமொன்றே தர்மமாகும்; பாக்கியெல்லாம் வியவ காரத்தில் தர்மமென்று சொல்லப்படும்.

33. ஹே! நல்லவிருதர்களே! தர்மம் ஸ்வல்பமாயிருந்தா லும், சிரத்தையுடன் கூடியிருந்தால், அதற்கு தர்மமென்ற பெயர் கொடுப்பதுண்டு; ஆனால் முக்கியமாய் தர்மம் என்ற பெயர் வேத தர்மத்திற்கேயாம்.

34–41. எப்படிச் சம்புவுக்கு ஸமான தேவதையில்லையோ, விப்ரனுக்கு ஸமான மனுஷ்யனில்லையோ, அன்னத்திற்கு ஸமான ஆகாரமில்லையோ, கங்கைக்கு ஸமான புண்யநதி லோகத்திலில்லை யோ, காசிக்கு ஸமான பட்டணம் லோகத்திலில்லையோ, சூக்ஷ்ம ஸபைக்குச் (சிதம்பரம்) சமானமான க்ஷேத்திரமில்லையோ, ஷட க்ஷரமந்திரத்திற்கு ஸமானமான மந்திரமில்லையோ, குருவுக்கு ஸமானமான ஸம்ஸார ஸாகரத்தினின்று காப்பாத்துகிறவரில்லை யோ, அப்படி வேதத்திற்கு ஸமானமான பிரமாணம் இல்லையென் பதில் ஸந்தேகமில்லை.

42. ஆதலால் சுருக்கமாயுள்ளதை உங்களுக்குச் சொல்லு கிறேன்; சுருதியொன்றே பிரமாணம்; தானுயுள்ள சிவனென்றே

மேலானது; வெண்ணிறமான பஸ்மதாரணமும், களங்கமற்ற ஞானமும் சிரேஷ்டம்; இதைத்தவிர வேறு ஒன்றும் சிரேஷ்டமன்று.

43. ஸூதர்:—இவ்விதம் முனிசிரேஷ்டர்களுக்குச் சொல்லிவிட்டு மயில்வாகனராயும், மகாதேஜஸுள்ளவராயும், ஜகத்ஸ்வாமியாயுமுள்ள ஸ்கந்தர் அவ்விடத்திலேயே மறைந்தார்.

44. தாரகாஸுர சத்துருவின் (ஸ்கந்தர்) பிரசாதத்தால் காவஷேயர்கள் மகாத்மாவான மகாதேவருடைய நேர்வரவைக் கண்டார்கள்.

45. ஸர்வக்ஞரும், ஒருவராலும் ஜயிக்கக்கூடாதவருமான அந்த மகாதேவனை நமஸ்கரித்து, சிரத்தையுடன் பஞ்சாக்ஷரத்தால் பூஜித்தார்கள்.

46. தேவதேவனும், தேவர்களுக்கு தேசிகனுமுள்ள அந்த மகாதேவன் காவஷேய முனிவர்களுக்குத் தன் ஆத்மஞானத்தை ஸந்தோஷத்துடன் அளித்தார்.

47–48. அவ்வெல்லா முனிசிரேஷ்டர்களும் ஸாம்பனுயும் ஸம்ஸார மருந்தாயுள்ள ஈசனை நமஸ்கரித்து, அவரை ஸந்தோஷிப்பித்து, ஆத்மஞானத்தால் கிருதார்த்தர்களாகி, ஆத்மாவைத்தவிர மற்றதில் பற்றற்று ஹிமயமலைக் குஹையை யடைந்தார்கள்.

49. வேதார்த்த விசாரணைக்கு முக்கியமான விசிஷ்ட தர்மம் என்னுல் சுருக்கமாகச் சொல்லப்பட்டது; சுத்த சித்தர்களுக்கு இதைக்காட்டிலும் மற்றதெல்லாம் உமியைப்போல் பிரயோஜனமாகாது.

---

## அத்தியாயம் 21.

---

### (முக்திஸாதனம்).

1. ஸூதர்:—ஹே! ஆஸ்திகர்களே! இனி இப்பொழுது முக்திஸாதனத்தைச் சொல்லுகிறேன்; சிரத்தையுடன் கேளுங்கள்; (நான் சொல்லப்போகிற முக்திஸாதனம்) வேதாந்தத்தால் அறியப்பட்டது.

**2–4.** முன்னொருகாலத்தில் ச்வேதர்முதலான நூற்றிபனிரண்டு ரிஷிகள், பஸ்மத்தால் பூசப்பட்ட சரீரங்களுடனும், திருபுண்டரம்தரித்த நெற்றிகளுடனும், ருத்ராக்ஷமாலை தரித்தவர்களாகவும், ருத்ரனை பூஜிப்பதில் இன்புற்றவர்களாகவும் இருந்துகொண்டு, வெகு சிரத்தையுடன், ஸம்ஸாரத்தை நேராக நசிக்கச்செய்யும் தக்ஷிண கைலாஸத்தில், வெகு தீவ்ரமான தவஞ்செய்தார்கள்.

**5–10.** நெருப்புடன் சேர்ந்த பஞ்சு எவ்விதம் தஹிக்கப்படுகிறதோ அப்படி இந்த தக்ஷிண கைலாஸத்தை பார்த்தமாத்திரத்தில் எல்லாப் பாபங்களும் நாசமுறும்; ஹே! த்விஜோத்மர்களே! இவ்விடத்தில் வாஸஞ்செய்கிற எல்லா மானிடர்களுக்கும் சிரேஷ்டமான முக்தியை வெகு சீக்கிரம் மஹேசுவரன் கொடுப்பார்; பஸ்மத்தில் பிரியமுள்ள த்விஜர்களுக்கு வருடந்தோறும் இவ்விடத்தில் சக்தியானுஸாரம் தனங்கொடுத்தால் ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுதலையுண்டு; இவ்விடத்தில் ஈசுவர பக்தியுள்ளவர்களுக்கு தினந்தோறும் ஒரு முஷ்டிமாத்திரம் தானமளித்தால் மகாபாபங்கள் நாசமாகும்; இவ்விடத்தில் சிவஞானிகளுக்கு பிரியத்துடன் போஜனமும் வஸ்திரமும் கொடுத்தால் பவபந்தத்திலிருந்து விடுதலையடைவார்கள்; பிராமணர்களும் மற்றுமுள்ளவர்களும் இவ்விடத்தில் ஜபம், ஹோமம், தானம், தபஸ் முதலியவை செய்தால் அனந்தமாகும்.

**11.** அவ்விடத்தில் சந்தோஷத்துடன் கிருணாநிதியான சங்கரன் இவர்களுடைய தவத்தால் சிரேஷ்டமான சக்தியுடன் தோன்றினர்.

**12.** ஸம்ஸார வைத்யராகிய ஸாம்பவனைத் தரிசித்து, பூமியில் தண்டம் ஸமர்ப்பித்து, முக்திஸாதனத்தைக் கேட்டார்கள்.

**13.** ஸம்ஸார மோசகராகிய அத்தேவனும் கருணையுடன் அக்கொடிய தபஸுள்ள முனிகளுக்கு முக்திஸாதனத்தைச் சொன்னர்.

**14.** ஈசுவரன்:—ஆதரவுடன் அதிரகசியமான முக்தி ஸாதனத்தைச் சொல்லுகிறேன்; வர்ணாச்ரம தர்மங்களை கைக்கொள்வதாலன்றி வேறுவிதமாக முக்திகிட்டாது.

15. எவனொருவன் பிரியத்துடன் ஸ்வஜாதி தர்மத்தைச் செய்கிறானோ அவன் ஈசுவரக்கட்டளையால் விப்ரர்களின் முக்கிய குலத்தில் ஜனிக்கிறான்.

16–18. மேலும் அவன் ஜாதகர்மம் முதலிய ஸம்ஸ்காரங்களால் சுத்தமாகி, உபநயனமடைந்து, விதியுடன் குருவினிடமிருந்து வேதத்தைப்படித்து, விவாஹஞ் செய்துகொண்டு, பலத்தில் ஆசையில்லாமல் யக்ஞம், தானம், கொடியதவம் இவைகளைச் செய்து, பாபமற்றவனாய், சுத்தமனதுடன், எல்லா லோகங்களும் தோஷமுள்ளதென்ற நம்பிக்கையுடன் விரக்தியடைந்தவனாக, ஞானமடைய இச்சையுள்ளவனாய் தன்சுத்த பக்குவத்திற்கு தக்கவாறு ஸங்யாஸமடைகிறான்.

19–20. இவ்விஷயத்தில் மோக்ஷ இச்சையற்ற ஸங்யாஸி, பரமேச்வரனால் ஏவப்பட்டவனாக, குடீசகம், பஹூதகம், ஹம்ஸம் என்ற விருத்திகளில் யாதாமொன்றை கைக்கொள்கிறான்.

21. ஹே! த்விஜோத்தமர்களே! மோக்ஷ இச்சையுள்ள ஸங்யாஸி தேவேச பிரஸாதத்தால் சுபமான பரமஹம்ஸ விருத்தியை எப்பொழுதும் விரும்புகிறான்.

22. குடீசகமுதலிய விருத்திகளிலிருப்பவன் முக்தியைக் கருதினால் சங்கராஞையால் பரமஹம்ஸமென்ற பெயருள்ள விருத்தியை யடைகிறான்.

23–26. எல்லா ஸங்யாஸிகளுக்கும் சாந்தி, தமம், பொருமை, ஸ்நாநம், சுத்தி, அஹிம்ஸை, பொய்சொல்வதை விலக்கல், 'அக்னி' என்ற மந்திரத்தால் பஸ்மத்தைத்தரித்தல், திரிபுண்டரம் தரித்தல், பிரஹ்ம விஷ்ணு சிவாத்மகமாகிய லிங்கத்தில் சிவபூஜை செய்தல் முதலியவை பெரியோர்களால் தர்மம் என்று சொல்லப்பட்டிருக்கின்றன; அவ்விதமே வேதாந்த வாக்கியங்களை சிரவண மனன நிதித்யாஸனஞ்செய்தலும், பிரியத்துடன் குருவுக்கு ஊழியஞ்செய்தலும் பரமஹம்ஸனுக்கு முக்கிய தர்மமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

27–28. பூர்வபுண்ய வலியாலும், சிவானுக்கிரஹத்தாலும் சீக்கிரத்தில் ஸந்யாஸி பிரஹ்மாத்ம விஷயஞானத்தை யடைகிறான்; வேதாந்த வாக்கியத்தாலுண்டான ஞானத்தால் ஸந்யாஸி முக்தி யடைகிறான். ஞானமன்றியில் முக்திகிட்டாது, முக்திகிட்டாது.

29. ஹே! முனிகளே! சுருக்கமாக முக்திஸாதனஞ் சொல லப்பட்டது; நீங்களும் எப்பொழுதும் சிரமத்துடன் ஞானத்தில் சிரத்தையுள்ளவர்களாக விருக்கவும்.

30. ஸூதர்:—ஸம்ஸாரவிமோசகரும், ஆகமத்தாலேயே அறியக்கூடியவருமான பகவான் ருத்ரன் இவ்விதம் உபதேசஞ் செய்துவிட்டு அவ்விடத்திலேயே மறைந்தார்.

31. நீங்களும் பரமாத்மாவான சிவனுடைய கிருபையால் என்னிடமிருந்து இந்த ஞானத்தை சீக்கிரம் பெற்றீர்கள்.

32. ஹே! புத்திமான்களே! மனிதர்களுக்கு இஷ்டமுள்ள தை இந்த உத்தமஸ்தானமாகிய தக்ஷிண கைலாஸம் அளிக்கு மென்பதை அறிந்துகொள்ளுங்கள்.

33. முக்தியிச்சையுள்ளவனுக்கு இந்த தக்ஷிண கைலாஸ தர்சனமன்றியில் ஸம்ஸார நாசமில்லையென்பது ஸத்தியம்.

34. கைவல்லியமடைய இச்சையுள்ளவனுக்கு வர்ணாச்ரம தர்ம அனுஷ்டானமில்லாமல் கைவல்யம் கிட்டாது என்பது ஸத் யம்; ஸந்தேகமில்லை.

35. விஷ்ணு, பிரஹ்மா, இந்திரன் முதலானவர்களைக் காட் டிலும் சிவன் பெருமை யுள்ளவன் என்று அறியாதவன் கோடி ஜன்மங்களெடுத்தாலும் ஸம்ஸாரத்திலிருந்து விடுதலையடையான்.

36. நித்தியமான வேதம்—பிரஹ்மாத்ம ஐக்கிய ஞானமன்றி கைவல்யம் கிட்டாது என்று சொல்லுகிறது.

37. கருணையில் உத்தமமானவரும், ஸர்வக்ஞரும், பகவானு மான சிவன் வேதாந்த ஞானமில்லாமல் முக்தியில்லையென்று சொல்லுகிறார்.

**38.** அவ்விதமே விஷ்ணு, பிரஹ்மா, இந்திரன் முதலான தேவர்களும் ஞானமில்லாமல் கைவல்யம் கிட்டாது என்று சொல்லுகிறார்கள்.

**39.** மகாத்மாக்களாகவும், ஸத்யஸந்தர்களாகவும், ஜிதேந்திரியர்களாகவுமுள்ள முனிகளும் ஞானமில்லாமல் முக்தியில்லையென்று சொல்லுகிறார்கள்.

**40.** அதிகமாகச் சொல்லுவதில் என்ன பிரயோஜனம்; முக்திஸாதன ஞானம் வேதத்தாலேயன்றி வேறொன்றாலும் கிடைக்காது.

**41.** தோஷமற்றதாயும், எப்பொழுதும் சோபனமுள்ளதுமான வேதமார்க்கத்திலிருந்து உண்டாவதே ஞானமாகும்; விசாரிக்குங்கால் மற்ற மார்க்கங்களிலிருந்து உண்டாவது கிரமமாக வேதவழியில் ருசியைத்தரும்.

---

## அத்தியாயம் 22.

---

**(மார்க்க பிராமாண்ய வர்ணனம்-பலவழிகளின் பிரமாணத்தையுரைத்தல்).**

**1.** ஸூதர்:—ஹே! முனிசிரேஷ்டர்களே! இனி பலவழிகளின் பிரமாண நிர்ணயத்தைச் சொல்லுகிறேன்; சிரத்தையுடன் கேளுங்கள்.

**2-6.** வேதங்களையும், தர்மசாஸ்திரங்களையும், புராணத்தையும், அப்படியே பாரதத்தையும், வேதாங்கங்களையும், உபவேதங்களையும், காமிகம்முதலிய ஆகமங்களையும், காபாலத்தையும், லாகுலத்தையும், (இவைகளின்) உட்பிரிவுகளையும், பாசுபதத்தையும், ஸோமத்தையும் பைரவம்முதலிய ஆகமங்களையும், (இவைகளின்) நூறு, ஆயிரக்கணக்குள்ள உட்பிரிவுகளையும், விஷ்ணு, பிரஹ்மா, புத்த, ஆர்ஹத ஆகமங்களையும், லோகாயதத்தையும், வெகு விஸ்தாரமான தர்க்க சாஸ்திரத்தையும், அதிகம்பீரமான மீமாம்ஸத்தையும், ஸாங்கிய யோகங்களையும், அவ்விதமே அனேக பேதங்களுடைய மற்ற சாஸ்திரங்களையும் ஸர்வக்ஞராகிய சங்கரர் சுருக்கமாகச்செய்தார்

**7–9.** ருத்திரருடைய பிரஸாதத்தால் பிரஹ்மா, விஷ்ணு முதலான தேவர்களும், ஸித்தர், வித்யாதரர், யக்ஷ ராக்ஷஸர்கள், முனிகள், மனிதர்கள் அவரவர்களின் யோக்கியதைக்குத் தகுந்த்படி (முற்கூறியவைகளை) சுருக்கமாகவும், விஸ்தாரமாகவுஞ்செய்து தங்கள் தங்கள் பெயரைக் கொடுத்தார்கள்.

இவை அதிகாரிபேதத்திற்கு தக்கவாறு இருப்பதாக எண்ணவேண்டுமேதவிர ஒருவனுக்கே உபயோகப்படுவதாக நினைக்கக்கூடாது.

இம்மார்க்கங்களை புத்திமான்கள் தர்க்கத்தால் பிசகென்று விலக்கக்கூடாது.

**10.** எப்படி ஜலப்பிரவாஹங்களுக்கெல்லாம் ஸமுத்திரம் கடைமுடிவோ, அப்படியே எல்லாமார்க்கங்களுக்கும் மஹேச்வரன் பரமமுடிவுஸ்தானம்.

**11–12.** எந்தெந்த மார்க்கத்தால் ஜனங்கள் உபாஸிக்கிறார்களோ அந்தந்தவழியை யனுசரித்து அவர் ஸாதகஞ்செய்கிறார். அவர் பிரஸாதத்தால் சிரேஷ்ட மார்க்கங்களைக் கிரமமாக யடைந்தவனுக்கு அவ்வவ்விடத்தில் அந்தந்த மார்க்கத்திலிருந்துகொண்டு தேவன் பிரஸாதமளிக்கிறார்.

**13.** வரிசைக்கிரமமாக தேவர்கள் வேதமார்க்கத்தைக்காட்ட காரணமாகவிருக்கிறார்கள்; வேதமார்க்கத்திலிருக்கிற தேவர் நேராக முக்திக்கு காரணமாயிருக்கிறார்.

**14.** இதிலும் ஹரன் கர்மபாகத்திலிருந்து ஞானத்தில் சிரத்தையை யளிக்கிறார்; ஞானபாகத்திலிருக்கிற சம்பு ஞான வாயிலாக மோக்ஷமளிக்கிறார்.

**15–17.** சிரேஷ்டமான முக்தி ஒரே ரூபமானபடியால் அவ்விஷயமாகிய புத்தியும் ஒரே ரூபமாயிருக்குமேதவிர அநேக ரூபங்களாக விருக்காது; விசேஷமற்றதும் இரண்டற்றதுமான ஆத்மாவாகச் சங்கரனை நேராக வேதாந்தஞ் சொல்லுகிறது; மற்ற மார்க்கங்கள் இவ்விதஞ் சொல்லவில்லை; ஆகையால் வேதாந்தத்தா லுண்டாகிறதே வித்தையொழிய மற்றமார்க்கங்களா லுண்டாகும் ஞானம் அவித்தைதவிர வித்தையாகாது; இது நன்றாகயேற்படுகிறது.

18–20. ஆதலால் முக்தியன்றி மற்றுமுள்ளவைகளில் இதர மார்க்கங்கள் பிரமாணமாகும்; முக்திவிஷயத்தில் ஆகா; முக்திவிஷயத்தில் கிரமமாக பிரமாணமாகும். ஆனபடியால் மஹாதேவர் வேதாந்த பாகத்திலிருந்துகொண்டு சீக்கிரத்தில் முக்தியையளிக்கிறார்; மற்ற பாகங்களிலிருக்கும் அவரே கிரமமாக பரமமுக்தியைக் கொடுக்கிறார்; இது நித்யமான ச்ருதியால் சொல்லப்படுகிறது.

21. ஆகையால் வேதமார்க்கத்திலிருக்கும் மனிதன் வேறு மார்க்கத்தைப் பின்பற்றக்கூடாது; வேதமார்க்கத்தை அனுஷ்டிப்பவனுக்கு அடையக்கூடாதது ஒன்றுமில்லை.

22. இவ்வேதமார்க்கத்திலேயே சிரேஷ்டமான முக்தியும் எல்லையற்றபோகங்களும் கிட்டும்; ஆதலால் அதிகாரிகளின் யோக்கியதைக்கு தகுந்தபடி மார்க்கங்களெல்லாம் பிரமாணமாகும் என்பதில் ஸந்தேகமில்லை.

23–24. ஈசுவர ஸ்வரூப விஷயத்திலும், பந்தகாரண விஷயத்திலும், ஜகத்காரணத்திலும், முக்திஞானம் முதலிய விஷயங்களிலும் இதரமார்க்கங்களில் வேதாந்த மார்க்கத்திற்கு விரோதமாயுள்ள அம்சங்கள் மகாமோகமடைந்த மந்தபுத்தியுள்ளவர்களின் கருத்தையனுஸரித்து ஏற்பட்டிருக்கின்றனவேதவிர யதார்த்தமாகவில்லை.

25–26. ஒரு மனிதன் ஓடுகிற பசுவை திருணத்தைக் காட்டி எப்படி பிடிக்கிறானோ அப்படியே மகேசுவரன் அற்பமான இஷ்டவிஷயத்தை முதலில் காண்பிவித்து பிறகு சிரேஷ்டமான ஞானத்தை அவனவன் பரிபாகத்திற்கு தக்கவாறு கொடுக்கிறார்.

27. ஆகையால் முற்கூறிய வழியாக சிவனால் சொல்லப்பட்ட எல்லாமார்க்கங்களும் பிரமாணமேயொழிய அப்பிரமாணமல்ல; அவ்விதமிருந்தால் எப்படி சிவன் உபயோகமற்றதைக் கூறுவாராவார்?.

28–29. ஸர்வக்ஞராயும், களங்கமற்றவராயும், வெகு கிருபையுடன் சேர்ந்த தேவராயிருந்தாலும், மார்க்கங்களால் ஸர்வஸாதகமாயும் சிரேஷ்டமாயுமுள்ளது வேதமேயாம்; மார்க்கங்க

ளின் பிரமாண நிர்ணயமெல்லாம் சுருக்கமாக என்னால் சொல்லப்பட்டது; அதையறிந்து ச்ருதியில் சிரத்தையுடையவர்களாக விருங்கள்.

## அத்தியாயம் 23.

### (சங்கர பிரஸாத க்ரமம்).

1. ஸூதர்:—அன்புடன் இனி பிரஸாதக்கிரமத்தைச் சொல்லுகிறேன்; இதையறிந்தமாத்திரத்தில் சங்கரபிரஸாத முண்டாகும்.

2. முன்னொருகாலத்தில் உண்மையை முழுதுமுணர்ந்த ஸநத்குமாரமுனி பிரஹ்மத்தையறிந்த பிரஹ்மாவை இந்த விஷயத்தைக்கேட்டார்.

3. ஸர்வஜகத்ரக்ஷகரான அவரும் அம்முனிவரோடு ஆதியந்தமற்ற நாராயணனை உத்தமமான இவ்விஷயத்தைக்கேட்டார்.

4–5. அந்நாராயணரும் இவ்விருவர்களுடன் ரம்யமான கைலாஸ சிகரத்தில் வீற்றிருக்கும் மிகப்பிரபுவான உமாபதியை, பக்தியுடன்வணங்கி, ருத்திரத்தால் ஸ்துதித்து, பரமகாரணராகிய அத்தேவேசனை இவ்விஷயத்தைக்கேட்டார்.

6. ஸர்வக்ஞராயும், ஸாம்பனாயும், ஸர்வபலத்தை யளிப்பவருமான அத்தேவதேவனும் கம்பீரமான வசனங்களால் விஷ்ணுவை நோக்கி உத்திரமளித்தார்.

7. பிரத்யக்ஷ சங்கரரென்ற அந்த ஸநத்குமாரரிடமிருந்து பகவான் வியாஸர் இதையறிந்து பிரியமுற்று எனக்குரைத்தார்.

8. ஹே! முனிசிரேஷ்டர்களே! நான் கிருபைகொண்டு பாக்கிய சாலிகளான உங்களுக்கு ஸந்தோஷத்துடன் சொல்லுகிறேன்.

9–10. நித்திய கர்மானுஷ்டானத்தால் பாபநாசம் உண்டாகிறது; (பலாபேக்ஷையன்றி ஈசுவரார்பணமாக செய்யப்படும் நித்திய நைமித்திக கர்மானுஷ்டானத்தால் தத்வஞானத்திற்குத் தடையான பாபத்திற்கு நாசமுண்டாகிறது; இதுமுதல் பிரஸா

தம்); இந்த பாபநாசத்தால் சித்தசுத்தி யுண்டாகிறது; பிறகு ருத்திரனுடைய பிரஸாதத்தால் ஸ்வபாவமாக ஸம்ஸாரத்தில் தோஷம் விளங்குகிறது; பிறகு ஸம்ஸாரத்தில் விரக்தியும், கர்மங்களைத் தியாகஞ்செய்யும் சித்தமும் உண்டாகிறது.

**11.** அப்பால் பிரஹ்மாவினுடைய பிரஸாதத்தால் சாந்தி முதலிய ஸாதனலாபமும், விஷ்ணு பிரஸாதத்தால் மோக்ஷ இச்சையும் தானாகவே உண்டாகும்.

**12.** விநாயகருடைய பிரஸாதத்தால் குருபாதமடைதலும், அதனால் ஈசுவர ஸம்பந்தமானதும் ஞானஸாதனமாயுமுள்ள யோகம் என்கிற தியானம் அடையப்படும்.

**13–14.** மேலும் பார்வதியினுடைய கிருபையால் ஸாங்கியமென்ற ஞானமும். அந்த ஞானம் உதயமாகுங் காலத்தில் மோசகரான சிவனுடைய பிரஸாதமும், அதனால் ஸம்ஸார நாசமும் உண்டாகிறது. ஸாக்ஷாத் சிவன் ஒருவரே ஸம்ஸாரமோசகர், வேறு ஒருவரும் அன்று.

**15–16** மற்ற தேவர்கள் எல்லோரும் பரம்பரையாக மோசகர்களாவார்கள்; அநேக ஜன்மங்களில் ஸித்திபெற்று, ச்ரௌத ஸ்மார்த்த கர்மங்களை யனுஷ்டிக்கிற முமுக்ஷு கிரமமாக மஹாதேவரும், மோசகபிரதருமான பரமசிவனை ஸாவதானமாக யடைகிறான் என்று ச்ருதி சொல்லுகிறது.

**17–18.** பெரியோர்களால் பிரணவமென்ற உயர்ந்த மந்திரம் பிரஸாத மளிப்பவைகளில் சிரேஷ்டமென்று சொல்லப்பட்டிருக்கிறது; தேவதைகளில் முக்கியமாக விஷ்ணு சிரேஷ்டமென்று சொல்லப்பட்டிருக்கிறது; வேத மார்க்கத்தைப் பின்பற்றுகிறவர்களால் எல்லாதர்மங்களைக் காட்டிலும் ருத்திரபூஜை சிரேஷ்டமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

**19–20.** பிரணவ மந்திர பிரஸாதத்தாலும், விஷ்ணுவினுடைய கிருபையாலும் ருத்திரபூஜையில் இச்சையுண்டாகிறது; மேலும் அந்த ருத்திரனை ஆராதிப்பதால் ஆனந்தமாயும், அத்வைதமாயும், பரமாயும், ஞானமாயுமுள்ள பிரஹ்மத்தை யடைகிறான்.

உருத்திரனுடைய பிரஸாதத்தினுலேயே மோக்ஷமடைய முக்கிய ஸாதனமான ஞானம் உண்டாகிறது.

**21–26.** விஷ்ணுவினுடைய கிருபையால் தேவயானமென்ற மார்க்கமும் (இறந்தபிறகு அர்ச்சாதி மார்க்கமடைதல்), பிரஹ்மாவின் பிரஸாதத்தால் பிராஹ்மண்யமும், சந்திரனுல் கீர்த்தியும், சூரியனுல் திரேகசௌக்கியமும், அக்னியினுல் அளவற்ற ஐச்வர்யமும், யமனுல் பிதிருயான பிராப்தியும், இந்திரனுல் ஸௌபாக்யமும், வாயுவின் பிரஸாதத்தால் பலமும், விக்னராஜதேவனுல் தடையற்ற காரியஸித்தியும், ஷண்முகனுடைய பிரஸாதத்தால் யத்னமன்றி எல்லாஸித்தியும், ஸரஸ்வதியின் பிரஸாதத்தால் வாக்கு ஸம்பத்தும், ஸ்ரீதேவியின் கிருபையால் எல்லா ஐச்வர்யமும், துர்க்காதேவியினுடைய பிரஸாதத்தால் எவ்விடத்திலும் ஜயமும் உண்டாகும்.

பல இச்சையுடன் ஆராதனை செய்பவர்களுக்கு எல்லா தேவதைகளும் ஸம்ஸார ஸம்பந்தமான பலனை யளிப்பார்கள்; பல இச்சையற்றவர்களுக்கு அத்தேவதைகள் சித்தசுத்தி வழியாக மஹாதேவருடைய பிரஸாதமடையக் காரணபூதர்களாயிருப்பார்கள்.

**27–30.** மஹாதேவருடைய கிருபையோ மற்றென்றுக்கும் காரணமாகாது; காமமுள்ளவர்களுக்கு சீக்கிரத்தில்தானே போகத்தைக்கொடுப்பார்; காமமற்றவர்களுக்கு சீக்கிரத்தில் ஸ்வயமே மோக்ஷத்தையளிப்பார்; சிவனுடைய பிரஸாதத்தினுலேயே தேவதைகள் ஸ்வல்பகாலத்திற்குள் போகத்தைக் கொடுப்பார்கள்; ஸ்வதந்திரமாக முக்தியளிக்க சக்தியற்றவர்கள்.

மஹாதேவருடைய பிரஸாதத்திற்கு ஸமமாக ஒன்றுமில்லை; மஹாதேவருடைய பிரஸாதத்தாலேயே விஷ்ணுபதமும், பிரஹ்மா முதலிய பதமும் எல்லாமனிதர்களுக்கும் கிடைக்குமேதவிர ஸ்வயமாக கிடைக்காது.

**31.** பரமாத்மாவான சிவனுடைய கிருபையிருந்தால் வைதிகர்களுக்கும் மற்றவர்களுக்கும் முக்திஸித்திக்கும்.

**32.** சிவப்பிரஸாதத்தால் பிராஹ்மணர்களும், க்ஷத்திரியர்களும், வைச்ய சூத்திரர்களும், கலந்த சாதியார்களும், மோக்ஷமடைவார்கள்.

**33–34.** சிவப்பிரஸாதத்தால் பாஷாண்டிகளும் (வைதிகமும் அவைதிகமும் கலந்த சமயத்தை யனுசரிப்பவர்களும்) மோக்ஷமடைகிறார்கள்; அப்படியிருக்க வைதிக விப்ரர்களைப்பற்றி என்ன தடையிருக்கிறது; ஹே! முனீச்வரர்களே! கேவலம் ஈசப்பிரஸாதத்தால் ஸ்திரீகளும், கழுதை, ஒட்டகம், விருக்ஷங்கள் எல்லாம் பிரயத்தினமில்லாமல் மோக்ஷமடைகின்றன; இதில் ஸந்தேகமில்லை.

**35–36.** கர்ப்பத்திலிருந்துகொண்டே சிலரும், பிறந்தவுடனே சிலரும், பால்ய, யௌவன, வார்த்தக்கிய அவஸ்தைகளில் சிலரும், பாஷண்டர்களும், வைதிகர்களும், கழுதை, ஒட்டகம் முதலிய ஜாதிகளும் ஈசனுடைய கிருபையால் மோக்ஷமடைகிறார்கள்.

**37.** ஈசுவரனுடைய பிரஸாதமடைந்தவர்களுடைய கேவலம் கட்டளையால் புழுதிகள் மலைகளாகும்; மலை புழுதியாகும்.

**38.** பிரஸாதமடைந்தவர்களின் கட்டளையால் பிரஹ்மா, நாராயணன் முதலான தேவர்களெல்லாம் ஜனிக்கிறார்கள், நாசமடைகிறார்கள்.

**39.** பரமாத்மாவான சிவனுடைய பிரஸாத மகிமையை தேவர்கள்கூட அறியார்கள்; சுருதிகளும் அறியா.

**40.** மஹா பிரகாசமுள்ள சங்கரரும், சங்கரியும் பிரஸாத மகிமையை அறிவார்களோ இல்லையோ ஸந்தேகம்.

**41.** மஹாதேவ பிரஸாதமடைய ஹே! முனிகளே! நீங்களும் நித்தியம் சக்தியானுஸாரம் குருபாத பூஜை செய்யுங்கள்.

**42–43.** எல்லா தேவர்களால் சூழப்பட்டுள்ள புண்ய க்ஷேத்திரமாகிய சிதம்பரத்தில் தன்னுடைய ஸ்வரூப தியான ஸந்தோஷத்தால் சூக்ஷ்ம ஸபைமத்தியில் எப்பொழுதும் நர்த்தனஞ் செய்கிறவரும், தேவநாயகருமான உமாபதியை ஸந்தோஷத்துடன் தினமும் பூஜியுங்கள்.

44–45. காலஹஸ்தி நாதருடைய தரிசனமும். அவருக்கு நமஸ்கார முதலியவைகளும், அப்படியே காசியில் மஹாதேவ ருடைய தரிசனம். அவருக்கு நமஸ்காரமுதலியவைகளும், சிவ பிரஸாதமடைவிக்கும்.

46. தர்மத்தைக் கைக்கொள்வதும், தேவதார்ச்சனமும், தேவதை ஸ்மரணமும் எல்லாம் பிரஸாதமடையும் பொருட்டன்றே சொல்லப்பட்டிருக்கிறது.

47. சிவப்பிரஸாத மில்லாவிடில் போகங்களுமில்லை, மோக்ஷமுமில்லை, தேவதைகளுமில்லை; ஹே! ஆஸ்திகர்களே! சிவப் பிரஸாதத்தாலேயே எல்லாம் ஸித்தியாகும்.

48. சிவப்பிரஸாதத்திற்கு ஸமம் ஒன்றுமில்லை; சிவப்பிர ஸாதத்தால் சிவனுடைய தர்சனம் கிடைக்கும்; சிவப்பிரஸாதத் தால் ஆத்ம சுத்தியுண்டாகும்.

49. சிவப்பிரஸாத மடைந்தவனுக்கு வைதிக கர்மமுமில்லை; அப்படியே தந்திர கர்மமுமில்லை.

50. சிவப்பிரஸாத முடையவனுக்கு ஜனன மரணம் ஒரு பொழுதுமில்லை; சிவப்பிரஸாத முடையவன் ஸ்வயம் சிவனே; சிவப்பிர ஸாதத்தாலேயே சிவப்பிரஸாத முண்டாகவேண்டும்.

---

## அத்தியாயம் 24.

---

### (பிரஸாத மகிமை).

1. ஸூதர்:—இனி வெகு சோபனமான பிரஸாதத்தின் மகிமையைச் சொல்லுகிறேன்; அதிக சிரத்தையுடன் கேளுங்கள்.

2–5. முன்னொரு காலத்தில் கொடிய பாபியாயும், வெகு கோபிஷ்டனாயும், மிகப்பிடிவாதக் காரனாயும் துர்க்கடன் என்று பெயருள்ள ஒரு சூத்திரனிருந்தான்; அவன் மோஹத்தால் நூறு பிராமணர்களையும், நூறு பசுக்களையும் வதஞ்செய்தான்; அப்படியே நூறு வீடுகளைக் கொளுத்திவிட்டான்; மனிதர்களுடைய பொருளை யோசியாமலே அபகரித்தான்; எதிரில் அகப்பட்ட ஸ்தி

ரீகளை பலாத்காரமாய் போகித்தான்; குளம், குட்டை, கிணறு முதலியவைகளிலுள்ள ஜலத்தைக் கெடுத்தான்; வர்ணாசிரம ஆசார மரியாதையை பேதித்தான்.

6–9. ஹே! முனீசுவரர்களே! ஒரு ஆயிரம் ஜன்மங்களுக்கு முன் இந்த துர்க்கடன் நிஷ்கம் என்ற அளவுள்ள தங்கத்தை ஒரு சிவனடியாருக்கு தானஞ் செய்திருந்தான்; அதனால் கொஞ்ச காலத்திற்கு பிறகு இவனுக்கு நல்ல புத்தியுண்டாகி, 'ஐயோ, மோகத்தால் அநேக பாபங்களைச் செய்தேன்; இந்த பாபநாசத்திற்கு வழி ஒன்றும் தெரியவில்லையே; வேதமறிந்த பிராமணர்கள் எனக்கு நரகம்தான் கிடைக்கும் என்று சொல்லுகிறார்களே!' என்று மனவருத்த மடைந்த அந்த துர்க்கடன் என்ற கொடிய பாபிக்கு ஆஸ்திகரான ஒரு பிராமணன் புத்தி சொன்னான்.

10–15. பிராமணன்:—இப்புவியில் வியாக்ரபுரம் என்ற ஒரு ஸ்தல மிருக்கிறது; அதில் விசுவாத்மாவாயும் ஸம்ஸார மோசகராயுமான சிவன் நர்த்தனஞ்செய்கிறார்; அதினுடைய மகிமையை யறிந்து எல்லா ஜகத் ரூபியான விஷ்ணு அங்குள்ள ஈசுவரனைக் குறித்து கொடிய தவம்புரிந்தார்; அவ்விதமே எல்லா தேவர்களுக்கு மதிபதியான பிரம்மாவும், அதிவீரனான இந்திரனும், தேவ யக்ஷகின்னரர்களும், முனிகளும் அவ்விடத்தில் கடினமான தவஞ் செய்தார்கள்.

16. ஹரியானவர் எந்தவிடத்தில் ஸர்வேசுவரனை தர்சித்து கிருபையை அடைந்தாரோ அந்த இடத்தில் நர்த்தனஞ்செய்யும் உமாபதியை நீயும் உபாஸி.

17–20. எந்தவிடத்தில் பிரம்மாவும், இந்திரனும், தேவர்களும், யக்ஷ, ராக்ஷஸ, கந்தர்வ, ஸித்த, வித்யாதரர்களும் நர்த்தனஞ் செய்யும் உமாபதியை தங்கள் தங்கள் அதிகாரத்திற்கு தக்கபடி பூஜித்து பிரஸாதமடைந்தார்களோ அவ்விடத்தில் நீயும் உமாபதியை உபாஸி.

21–25. ஸூதர்: புண்ய கௌரவத்தால் இவ்விதம் பிராமணனால் உபதேசிக்கப்பட்ட துர்க்கடன் வியாக்ரபுரஞ் சென்று,

சிரத்தையுடன் மூன்று பிரதக்ஷிணஞ் செய்து, தினந்தோறும் சோம்பலின்றியில் ஸ்நானஞ்செய்து, நூற்றெட்டு பஞ்சாக்ஷரம் ஜபித்து, சூக்ஷ்மஸபை மத்தியில் நர்த்தனஞ்செய்யும் உமாபதியை தரிசித்து, தண்டம்போல் பூமியில்விழுந்து நமஸ்கரித்து, சிவபக்தியுடைய விப்ரர்களுக்கும், விபூதிதரித்துகொண்ட பிராமணர்களுக்கும், சிவஞான நிஷ்டையிலுள்ளவர்களுக்கும் அடிக்கடி தனம், தான்யம் கொடுத்து, ஸத்ய வாக்குடனும், சுத்தியுடனும், காமக்ரோத மில்லாமல் மூன்று வருஷகாலம் வெகு பிரியத்துடன் அங்கு வாஸஞ்செய்தான்.

26. கிருபாளுவான மகாதேவன் அந்த துராத்மாவான துர்க்கடனுக்கு பிரஸாதமளித்தார்.

27. அந்த துர்க்கடன், சிவப்பிரஸாதத்தால், மறு ஜன்மத்தில் லோகாதிபதியாகி, சிரேஷ்டமாயும், அந்தக்கரண ஸாக்ஷியின் உபாதி நாசத்தால் மிஞ்சியுள்ள லக்ஷணமுடைய மோக்ஷத்தை யடைந்தான்.

---

## அத்தியாயம் 25.

---

### (பிரஸாத வைபவம்).

1. ஸூதர்:—இன்னும் தேவதேவனுடைய பிரஸாத வைபவத்தைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன்; சிரத்தையுடன் கேளுங்கள்.

2–6. முன்னொரு காலத்தில் எல்லா நற்குணங்களுள்ளவனும், வேதியர்குலத்தி லுதித்தவனும், விஷ்ணுபக்தனும், சுத்தனுமான ஸத்யஸந்தனென்று பெயருள்ள ஒருவனிருந்தான்; ச்ருதி ஸ்மிருதிகளில் சொல்லப்பட்ட கர்மங்களனைத்தும் அவனால் செய்யப்பட்டன; அநேகம் விஷ்ணு ஆலயங்கள் பிரதிஷ்டை செய்தான்; தினந்தோறும் நல்ல வாஸனையுடைய புஷ்பங்களால் விச்வஜகன்மயனான விஷ்ணுவை பக்தியுடன் பூஜித்தான்; தினந்தோரும் விஷ்ணு ஸம்பந்தமான மந்திரங்களை ஜபித்தான்; பிராசீன விஷ்ணு ஆலயங்களை தரிசித்தான்; வைஷ்ணவ அன்பர்களுக்கு பொருள் கொடுத்தான்.

**7–9.** அப்பால் சங்கசக்கிர கதைகளையுடைய ஸ்ரீமந்நாராயணன் இவனுக்குமுன் பிரத்யக்ஷமானார்; அவரைப்பார்த்து ஸத்யஸந்தன் தண்டம்போலடியில் வீழ்ந்து பக்தியுடன் கந்தபுஷ்பங்களால் பூஜித்து உலக காரணமான விஷ்ணுவை ஸ்துதிசெய்ய லுற்றான்.

**10–34.** ஸத்யஸந்தன்:—உலகங்களுக்கெல்லாம் காரனமாயும், எவ்வகை யுயிர்க்குமின்பாராயும், வேதவேதாந்த நிஷ்டர்களுக்கு ஆன்ம ஸ்வரூபமாயுமுள்ள விஷ்ணுவே! உமக்கு நமஸ்காரஞ் செய்கிறேன்; எவ்விதத்தாலும் என் கஷ்டங்களைப் போக்குகிறவரும், பிரத்யக்ஷாராயும், ஞானஸ்வரூபராயும், வித்வான்களின் ஆத்ம ஸ்வரூபராயுமுள்ள ஹே! கிருஷ்ண! உமக்கு நமஸ்காரம்; அதிசுத்தரும், கேவலரும், பரமாத்மாவாயும், சுத்தசித்த முடையவர்களுக்கு பிரஸன்னருமான கேசவனைப் போற்றுகிறேன்; முஞ்சிப்புல் போன்ற கேசமுடையவரும், முண்டராயும், யதிகளின் கஷ்டத்தை நிவாரணஞ் செய்கிறவரும், மௌனிகளுக்கும் மூர்க்கர்களுக்கும் முக்தியளிக்கும் உமக்கு நமஸ்காரம்; ஸ்ரீவத்ஸ அடையாளமுள்ளவரும், பூஜ்யரும், வரதரும், பரமாத்மாவும், வஞ்சகர்களாலறியக்கூடாதவரும், வஸ்து பூதராயுமுள்ள உமக்கு நமஸ்காரம்; ஸ்ரீபதியும், கோபதியும், என் ரூபமுடையவரும், 'எனது' என்ற மகாமோகத்தை விநாசஞ்செய்கிறவருமான உமக்கு நமஸ்காரம்; மஞ்சளாடை தரித்தவரும், மஞ்சள் நிறமானவரும், பாபக்கூட்டத்தை தகிக்கிறவரும், பாபிகளை நாசஞ்செய்கிறவருமான உமக்கு நமஸ்காரம்; விஷ்வக்ஸேநராயும், விச்வரும், லோப உத்பத்தி முதலியவைகளுக்கு காரணரும், விச்வஞானரூபரும், நிர்மலருமான உமக்கு நமஸ்காரம்; விச்வரூபரும், விசுவாஸத்தா லறியக்கூடியவரும், ஆத்மஞானமுடையவரும், லோகாதீதராயும், விச்வசாக்ஷியாயுமுள்ள உமக்கு நமஸ்காரம்; முராரியாயும், முகூர்த்தாயும், கால அளவை நிர்மாணஞ் செய்கிறவராயும், முகூர்த்தகாலம் பஜித்த மனிதர்களுக்கு மோக்ஷத்தையளிக்கும் உமக்கு நமஸ்காரம்; சௌரியம், சார்ங்கியும், சங்ககுந்த இந்துரூபியும், பூண்டு கிழங்குகளை புசிக்கிறவர்களுக்கு சாந்தியை அளிப்பவராயுமுள்ள உமக்கு நமஸ்

காரம்; பத்மனுபரும், லக்ஷ்மீபதியும், தாமரைக்கண்ணனும், ஹிருத்பத்மகர்ணிகை மத்தியிலிருப்பவராயுமுள்ள உமக்கு நமஸ்காரம்; முகுந்தரும், மூர்க்கனுன முகுந்தனென்ற ராக்ஷஸனை கொன்றவரும், ரக்ஷகரும், ஞானிகளின் ஆத்மாவாயுமுள்ள உமக்கு நமஸ்காரம்; கோவிந்தரும், நித்யம் பசுக்களை ரக்ஷிப்பவரும், நந்தகோபரும், ரஹஸ்யரும், எல்லாவற்றையும் ரக்ஷிப்பவருமான உமக்கு நமஸ்காரம்; பூமியைதரிப்பவரும், ஜடிதியில் வெகுகோபத்துடன் காளியென்ற ஸர்ப்பத்தைச் சேதித்தவரும், பூதநாதரும் பூதங்களுக்கு ஆதாரமாயுமுள்ள உமக்கு நமஸ்காரம்; வைகுண்டவாஸியும், விசிஷ்டர்களுக்கு மேலான ஞானத்தையளிப்பவரும், பிரம்மா முதலிய தேவர்களைவிட சிரேஷ்டருமான உமக்கு நமஸ்காரம்; பாற்கடலில் நித்திரையிலிருப்பவரும், பாற்கடலுக்கு ஸாக்ஷாத் காரணராயும், நிராதாரரும், நித்யரும், நித்தியானந்தத்தை யளிப்பவருமான உமக்கு நமஸ்காரம்; யக்ஞரூபராயும், யக்ஞ பலப்பிராப்திக்கு முக்கியராயும், யக்ஞபதியாயும், யக்ஞத்தாலறியக்கூடியவருமான உமக்கு நமஸ்காரம்; ஜனர்த்தனரும், தைத்தியர்களின் சத்துருவும், சுத்தமனதுள்ள தனது பக்தர்களுக்கு விசேஷமாய் சக்தியளிப்பவருமான உமக்கு நமஸ்காரம்; வாஸுதேவரும், உடையளிப்பவரும், பூஜ்யரும், புராணரும், பூர்ணுத்மாவாயுமுள்ள உமக்கு நமஸ்காரம்; தாமோதரரும், தேவர்களின் சத்துரு நாசத்திற்கு முக்யகாரணரும், அடக்கமான மனதுள்ளவர்களை ரக்ஷிப்பவருமான உமக்கு நமஸ்காரம்; அச்யுதரும், எல்லாவற்றிற்கும் சாக்ஷியும், நாசமுள்ள வஸ்து ஸம்பந்தமற்றவரும், தன்னை நன்கறிந்தவராயுமுள்ள உமக்கு நமஸ்காரம்; ஹரியாயும், ஹார, கேயூர, கடகாபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட கல்யாண சரீரமுடையவருமான உமக்கு நமஸ்காரம்; ஹ்ருஷீகேசரும், மனதில் எப்பொழுதும் சிந்திக்கிறவர்களுக்கு தங்கம் தனம் தான்யமுதலியவைக ளளிப்பவரும், ஸத்ய [பராத்மாயுமான உமக்கு நமஸ்காரம்; நாராயணரும், நரகக்கடலைத் தாண்டச்செய்பவருயும், நானாவிதமான ஜகத்தினிருப்புக்குக் காரணராயும், மோஹத்தால் சூழப்பட்ட மனிதனுக்கு உடனே மேன்மையைத் தருகிறவருமான பரமபுருஷரான உமக்கு நமஸ்காரம்.

**35–37.** ஸூதர்:—இவ்விதம் மகா த்விஜரான ஸத்யஸந்தன் ஹரியை பக்தியுடன் ஸ்தோத்திரஞ்செய்து, ஹே! தேவரே! இந்த ஸம்ஸார பந்தத்திலிருந்து நான் விடுதலையடைய கிருபை செய்யும் என்று விண்ணப்பஞ் செய்தான்; இவ்விதம் பிரார்த்திக்கப்பட்ட ஸர்வபூதங்களுக்கும் நன்மைசெய்யும் வல்லரும், ஸத்ய வாக்குடையவரும், உண்மைஞான ஸமுத்திரமும், அஸூயையற்றவருமான பகவான் ஜனார்த்தனர் கம்பீரமான வாக்குடன் ஸத்யஸந்தனை நோக்கி (அடியில்வருமாறு) உரைத்தார்.

**38–39.** விஷ்ணு:—என்னுடைய பக்தனும், ஸத்யத்தைக் கைக்கொண்டவனும், ச்ரௌத ஸ்மார்த்த கர்மானுஷ்டான உத்தமனான ஹே! ஸுவிருதனான ஸத்ய ஸந்த! ஸம்ஸார ஸமுத்திரத்தில் மூழ்கியவர்களுக்கு அச்சம்ஸார முக்தியளிப்பவன் நான் அன்று; பிரஹ்மாதி தேவர்களும் அன்று.

**40.** கொடிய ஸம்ஸாரத்திலுள்ள மானிடர்களுக்கு ஸாக்ஷாத் ஸர்வக்ஞரும், ஸாம்பரும், ஈசுவாருமான சிவன் ஒருவரே ஸம்ஸாரத்திலிருந்து விடுதலை செய்யக்கூடியவர்.

**41.** ஹே! பாபமற்றவனே! அவருக்கு வாஸ்தவத்தில் யாதொரு காரியமுமில்லை; காரணமுமில்லை; அவருக்கு ஸமமாயாவது, அதிகமாகவாவது யாதொரு சேதனருமில்லை.

**42.** அங்ஙனமாயினும் எல்லா வேதங்களிலும் சூலபாணியாகிய அப்பரசிவனுடைய ஸச்சித்ரூபமான ஓரேசக்தி பலவிதமாக விருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது; அவருடைய ஸ்வஞானமும், ஸ்வபலமும், வியாபாரமும் தானாகவே ஸித்தியானவையன்றி வேறொன்றாலு மன்று.

**43.** என்னுடையவும், பிரஹ்மாதி தேவர்களுடையவும் விக்ஞானம், பலம், வியாபாரம் மூன்றும் அவருடைய பிரஸாதத்தால் உண்டாகிறபடியால் அவர் ஒருவரே பவமோசகர்.

**44.** நானும், பிரஹ்மாதி தேவர்களும் அவருடைய பிரஸாதத்தால் பரம்பரையாக முக்திகொடுக்க கூடியவர்கள் என்பதில் ஸந்தேகமில்லை.

**45-46.** முக்திதரும் பிரஸாதம் அவரிடமிருந்தே ஒழிய வேறொருவரிடமிருந்தில்லை; (அவருடைய நிஜரூபம் யாதெனில்) ஸாக்ஷாத் சிவன், ஸத்யாதி லக்ஷணமுள்ளவர்; ஸம்ஸாரமற்றவர்; சுத்தர்; அஸங்கர்; ஸர்வஸாக்ஷி; அம்பிகாஸஹிதர்; ஸர்வக்ஞர்.

**47.** ஹே! பாபமற்றவரே! புருஷர்களுக்கு போகத்தையும் மோக்ஷத்தையும் அளிக்கும் என்னுடையவும் பிரஹ்மாதி தேவர்களின் பிரஸாதம் ஸாக்ஷாத் சிவனுடை இச்சையால் உண்டாகிறது.

**48.** ஆதலால் என்னுடையவும், அன்னியருடையவும் பிரஸாதம் சூலபாணியாகிய பரசிவனுடைய பிரஸாதத்தை தழுவியிருக்கிறதேயன்றி ஸ்வயமாகவில்லை.

**49.** ஹே! என்பிரியமுள்ள ஸத்யஸந்த! பூர்ண பிரஸாதமடைய மஹாகிருபையுடைய மஹாத்மாவான மஹாதேவரை பஜி.

**50.** ஒருவன் மஹாதேவரை ஆசிரயித்து இஷ்ட பலத்தையடையாவிடில், அப்பலப்பிராப்தி கொடுக்கும்பொருட்டு அந்த மஹாதேவன் (தன்னைவிட பெரிய) எந்த மஹாதேவனை ஆசிரயிப்பார்.

**51.** பெயராலும், பொருளாலும் மஹேசுவரனே மஹாதேவன்; அன்னியர்கள் கேவலம் தேவர்கள், மஹாதேவர்கள் அன்று.

**52.** மஹாதேவரை விட்டுவிட்டு ஒருவன் சிரத்தையுடன் என்னை பஜித்தாலும் அவனுக்கு கோடிஜன்மங்களானாலும் ஸம்ஸார மோக்ஷமில்லை.

**53.** ஹே! பாபமற்ற என் பக்தரே! சுருக்கமாக எல்லாம் என்னால் சொல்லப்பட்டது; சிவனைத்தவிர மற்றவைகளைத் தள்ளிவிட்டு, ஸாம்பனை எப்பொழுதும் பஜி.

**54.** ஸூதர்:—கருடக் கொடியுடையவரும், கிரீடம் தரித்தவருமான ஸ்ரீமான் ஸர்வவிக்ஞானமுடைய ஹரி இவ்விதம் சொல்லிவிட்டு மறைந்தார்.

**55.** ஸத்யஸந்தரும் விஷ்ணுவின் பிரஸாதத்தால் எல்லா தேவர்களையும் தியாகஞ்செய்துவிட்டு ஈசுவரனை ஆசிரயித்தான்.

56. மஹாத்விஜனான அந்த ஸத்யஸந்தன் ஈசுவரகிருபை யால் வேதாந்த ஞானமடைந்து பவபந்தத்திலிருந்து விடுதலே யடைந்தான்.

57. த்விஜ சிரேஷ்டர்களான நீங்களும் சிவனைத்தவிர வேறு தெய்வத்தை நீக்கிவிட்டு பிரஸாதமடையும்பொருட்டு நாசமற்ற சிவனை பஜிக்கவும்.

58. ஹே! முனிசிரேஷ்டர்களே! சுருக்கமாக என்னால் எல்லாஞ் சொல்லப்பட்டது; என்னுடைய வாக்கியங்களில் விசுவாஸ மிருக்கட்டும்.

59. அதிரஹஸ்யமானதும், ச்ருதி பாம்பரையாலும், ரிஷிகளின் பரம்பரையாலும் நிச்சியிக்கப் பட்டதுமான என்னால் சொல்லப்பட்ட இதைத் துஷ்டர்களுக்கு சொல்லக்கூடாது.

---

## அத்தியாயம் 26.

---

### (சிவபக்தி விசாரம்).

1. ஸூதர்:—இனி எல்லா மனிதர்களுக்கும் போகமோக்ஷத்தைக் கொடுக்கக்கூடிய சிவபக்தி விஷயத்தைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன்.

2. உமாபதியான சிவனிடத்தில் பக்தி அநேகவிதமாக அறியத்தகுந்தது; வெகு ஸாரமுள்ளதும், சிரேஷ்டமாயுமுள்ள சங்கர ஸாயுஜ்யத்தை அடைவதில் சிரத்தை ஒன்று.

3. மற்றொன்று சிவனுக்கு மிகப்பிரியத்தைக் கொடுக்கும் சங்கர ஸாரூப்யத்தை அடைவதில் சிரத்தை; வேறொன்று சிவஸாமீப்யமடைவதில் சிரத்தை; மேலும் இஷ்டபலத்தை தரக்கூடிய சிவ ஸாலோக்கிய சிரத்தை ஒன்று.

4. பாசத்தையறுக்கும் சிவஞான சிரத்தை ஒன்று.

5. நேராக ஞானத்தைக்கொடுக்கும் வேதசிரஸான உபநிஷத்தில் சிரத்தை ஒன்று; அதைக் கேட்பதில் சிரத்தை வேறொன்று.

6. மனிதர்களுக்கு ஸந்தேகங்களை நிவர்த்திசெய்து உண்மையைத் தெரிவிக்கும் மனனத்தில் சிரத்தை ஒன்று; வேறொன்று உயர்ந்ததான தேவேச்வர தியானத்தில் சிரத்தை.

7. பாபத்தைப் போக்கும் பஸ்மப்பூச்சில் சிரத்தை ஒன்று; மற்றொன்று தத்வஞானமளிக்கும் திரிபுண்ட்ர தாரணத்தில் சிரத்தை.

8. ருத்ராக்ஷ தாரணத்தில் சிரத்தையும், ஷடக்ஷர மந்திர ஜபத்தில் சிரத்தையும் பக்தியென்று சொல்லப்படுகிறது.

9. சிவலிங்க பூஜையில் சிரத்தையும் உயர்ந்த பக்தியென்று சொல்லப்படும்; லிங்கபூஜையைத் தரிசிப்பதில் சிரத்தையும் மகா பக்தி யென்று சொல்லப்படுகிறது.

10–37. (அடியில் கண்ட விஷயங்களெல்லாம் சிவபக்தி யென்றே சொல்லப்படுகின்றன); ஈசனைப் பூஜிப்பது நல்லதென்று சொல்லுவதும், பூஜைக்கு வேண்டிய திரவியங்களைத் தேடுவதில் சிரத்தையும்; சிவனுடைய உத்ஸவங்களைப் பார்க்க ஆவலும், அது போலவே அவருடைய உத்ஸவங்களை ஸேவிப்பதும்; உத்ஸவ தரிசனத்திற்காக வந்திருக்கும் பெரியோர்களுக்கு அன்னபானம் கொடுப்பதும்; மஹாதேவருடைய கதைகளைக் கேட்பதில் விருப்பமும்; பரமாத்மாவான சிவனுடைய கதைகளைக் கேட்கும்கால் கண்டத்துவனி கண் முதலியவை மாறுதலடைவதும்; சிவனுக்கு நந்தவனம் ஏற்படுத்துவதும், கிணறு, குட்டை, குளம் வெட்டுவதும்; அளவற்ற காந்தியுடைய சிவனுக்கு கல் முதலியவைகளால் மதில் கோபுரம் முதலியவைகளைக் கட்டுவதும்; சிரத்தையுடன் சிவனுடைய கட்டளைகளை அனுஸரிக்கும் பெரியோர்களைப் பூஜிப்பதும்; நித்திய நைமித்திக கர்மங்களை சிவபூஜை யென்றே நினைத்து செய்வதும்; சிவ வித்யயைப் படிப்பதும், அதைப் பிறருக்குச் சொல்லிக்கொடுப்பதும்; சிவ வித்யயை எழுதுவதும், அதைத்தானம் செய்வதும்; சிவ வித்யா புஸ்தகங்களைப் பாதுகாக்கப் புஸ்தக சாலை கட்டுவதும்; சிவஞானத்திலேயே நிஷ்டை

யுடையவர்களுக்கு மடம் ஏற்ப்படுத்துவதும், அன்னபான முத லியவைகளைத் தானம் செய்வதும்; சிரத்தையுடன் அவர்களை உப சரிப்பதும்; சிவமந்திரத்தை ஜபிக்கும் பெரியோர்களுக்கு சுச்ரூ ஷை செய்வதும்; சிவஸ்தலங்களுக்கு யாத்திரை செய்வதும், யாத் திரை செய்வோர்களை உபசரிப்பதும்; சிவயாத்திரை செய்வோர்க ளுக்கு கெடுதிசெய்பவர்களைத் தடுப்பதும்; சிவாபராதஞ் செய்கிற வர்களை சிரத்தையுடன் தண்டிப்பதும்; சிவஞான நிஷ்டையுடைய வர்களின் சிவ ஞானத்தை தூஷிப்பவர்களை தண்டிப்பதும்; விபூதி ஸாதன நிஷ்டர்களை தூஷிப்பவர்களை தண்டிப்பதும்; விஷ் ணு முதலான தேவர்களை தூஷிக்கும் கெட்டமனிதர்களை தண் டிப்பதும்; விஷ்ணு முதலான தேவர்களிடத்தில் பக்தியுள்ளவர் களை தூஷிக்கும் கொடியோனை தண்டிப்பதும்; தேவனுடைய திரவியங்களையும், பிராமணர்களுடைய பொருள்களையும் திருடுகி றவனைத் தண்டிப்பதும்; கஷ்டப்படுகிறவர்களைக் காப்பாற்றுவ தும், அப்படி உதவிபுரிவோர்களுக்கு உதவிசெய்வதும், பயமு டையவர்களை தேர்த்துவதும்; எல்லா பூதங்களிடத்திலும் கா ருண்யமிருப்பதும், பிரியமாகப் பேசுவதும், எல்லா பூதங்களின் நன்மையில் சிரத்தையும்; எல்லா பூதங்களிடத்தில் குணத்தை கிரகிப்பதும், தோஷத்தைத் தள்ளுவதும், எல்லா பூதங்களிடத் திலும் சிநேகமாயிருப்பதும்; மஹாதேவரிடத்தில் விசுவாஸமாயி ருப்பதும், சிவத்தை அறிவதில் பிரியமாயிருப்பதும், வேதாந்தத் தில் விசுவாஸமாயிருப்பதும்; குருவாக்கியத்தில் நம்பிக்கையும், குருவைப் பூஜிப்பதில் சிரத்தையும்; இவையெல்லாம் வேத வே தாந்த மறிந்தவர்களால் சிவபக்தி யென்றே சொல்லப்படுகிறது.

38. பரமார்த்தத்தைக் கொடுப்பது பக்தியொன்றே; ஸம் ஸார வியாதியை நாசஞ்செய்வது பக்தியே; பக்திதான் பிரம்மத் தை யறியும்படி செய்விக்கும்; பக்தி யொன்றே மேலான முக்தி யைக் கொடுக்கும்.

39. பக்தியுடன் கூடிய மனிதனுடைய ஹிருதய கமலத் தில், போக மோக்ஷபலத்தை கொடுப்பவரும், ஆதியந்தமற்றவ

ரும், சக்தியுடன்கூடிய பராவிக்ரகமாகிய சிவன் ஸத்தியமாக எப்பொழுதும் பிரகாசித்துக்கொண்டிருக்கிறார்.

40. ஹே! முனிகளே! பரம காருணியரான ஈசன் தன்னுடைய முடிவற்றதும், ஸத்ய சுக ஞானமானதும், சக்தியுடன் கூடியதும், முக்கண்ணுடையதுமான தன்னுடைய நிஜ ஸ்வரூபத்தை, பக்திமான்களால் ஸந்தோஷிக்கப்பட்டவராய் கொடுக்கிறார்.

---

## அத்தியாயம் 27.

---

### (பரபத ஸ்வரூப விசாரம்).

1. ஸூதர்:—இனி இப்பொழுது சக்தியுடன் கூடிய தத்வத்தைக்காட்டிலும் மேலான சிவதத்வக்காட்டிலும் உயர்ந்த (உபாதியற்றதும், சத்சித்தாநந்த லக்ஷணமுற்றதும், தன்னிடத்திலே பிரதிஷ்டிதமான) பரசிவஸ்வரூபத்தைச் சொல்லுகிறேன்; ஹே! த்விஜர்களே! இதன் ஸத்தையினுடைய சேர்க்கையால் எல்லாம் ஸத்யம்போலத் தோன்றுகிறது.

2. இதனுடைய சித் பிரகாசத்தால் எல்லா ஜகத்தும் சேதனமாகிறது; இதனுடைய ஆனந்த ஸம்பந்தத்தால் எல்லாம் பிரியத்திற்கு இடமாகிறது.

3. தோற்றப்படுகிற (பஞ்ச) பூத ஸம்பந்தமான ஜகத்தைக் காட்டிலும் (ஆகாசாதி பஞ்ச) பூதங்கள் உயர்ந்தவை; இவைகளை விட சேதனனான ஜீவாத்மா உயர்ந்தவன்.

4–5. அந்த சேதனனும் ஸமஷ்டி (தன்னையும் பிறவஸ்துக்களையும் வியாபித்துகொண்டிருப்பது; ஹிருண்ய கர்ப்பன்), வியஷ்டி (தன்னைமாத்திரம் வியாபித்துக்கொண்டிருப்பது; ஜீவர்கள்) பேதங்களால் பிரிக்கப்படுகிறான்; அப்படியே வியஷ்டிகளான ஜீவாத்மாக்களும் (உத்கிராந்த ஸமயத்தில்) தங்கள் தங்கள் மனோபாவரூபத்திற்கு தக்கபடி பேதப்படுகிறார்கள்; தேவ, மனுஷ்ய, (அல்லது) கீழ்ப்பட்ட சரீரங்களை அடைகிறார்கள். ஹே! ஞானவான்களே! இவைகளுக்குள் ஸமஷ்டி பூதனான ஹிரண்யகர்பன் எல்லாவிதத்திலும் சிரேஷ்டன்.

6. இவரைக்காட்டிலும் பிரம்ம தேவருடைய அவதார விசேஷங்கள் சிரேஷ்டமானவை; ஹே! முனிகளே! ஜீவர்களுக்குள் போல இவ்விசேஷங்களுக்குளும் தாரதம்யங்களுண்டு.

7. இவ்வவதார விசேஷங்களைக்காட்டிலும் பிரம்மா சிரேஷ்டர்; அவரைவிட விஷ்ணு முக்கியமானவரென்று சொல்லப்படுகிறது; அவ்விஷ்ணுவும் தன் வ்யஷ்டிபூதங்களான அவதாரங்களைக் காட்டிலும் சிரேஷ்டர்.

8. இந்த ஸமஷ்டிபூத விஷ்ணுவைக்காட்டிலும் ருத்திரர் சிரேஷ்டர்; அந்தருத்திரரும் தன் வ்யஷ்டிகளைக்காட்டிலும் முக்கியர் என்று சொல்லப்படுகிறது; பிரம்மா, விஷ்ணு, ருத்திரர் இவர்கள் நிர்குணமான பரதத்வத்தினுடைய மகிமைகள் (மாயாகுண உபாதியால் உண்டான அம்சங்கள்).

9. எல்லாவற்றிற்கும் காரணமான ஈசுவரன் இம்மூவர்களைவிட உயர்ந்தவர்; இந்த ஈசுவரனைக்காட்டிலும் ஞானமாயும், ஆனந்தமாயும், அத்வயமாயுமுள்ள பரமானதத்வம் சிரேஷ்டம்; எல்லோருக்கும் இந்த பரதத்வமே விச்ராந்தி (லய) ஸ்தானமென்று சுருதியிலும், ஸ்மிருதிகளிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

10. மனுஷ்ய ஸம்பந்தமான யாதொரு ஆனந்தமுளதோ அதைவிட மனுஷ்ய கந்தர்வ முதலியோருடைய ஆனந்தம் நூறுமடங்கு அதிகமென்று அறியப்படுகிறது.

11. விஷ்ணுவினுடைய ஆனந்தம் பிரம்மாவின் ஆனந்தத்திற்கு நூறுமடங்கு, என்று சொல்லப்படுகிறது.

12. இவ்விஷ்ணுவின் ஆனந்தத்தின் நூறுபங்கு ருத்திருடைய ஆனந்தம்; ஸர்வகாரணராகிய சிவனுடைய ஆனந்தம் இதைவிட நூறுமடங்குள்ளது.

13. எல்லாவற்றிற்கும் காரணமென்று குறிக்கப்பட்டவரும், சத்சித் ரூபரும், பரமாத்மாவான சிவனுடைய ஆனந்தம் 'பூமா' (அளவற்ற) ஆனந்தம் என்று சொல்லப்படுகிறது.

**14–16.** இவ்விதமாகவே கிரமமாக இவர்களுக்குள் ஞான தாரதம்யமும் உண்டு.

எப்படி ஒரு மரம் அடி, கொப்பு, கிளைகள் முதலான பேதங்களுடன் இருக்கிறதோ அதுபோல் சிவன் ஒருவரே ருத்திரர் முதலிய பேதங்களுடன் இருக்கிறார்; எவ்விதம் அடி, கொப்பு, கிளைகள் முதலிய வஸ்துக்களில் மேன்மை தாழ்மை இருக்கிறதோ, அவ்விதமே ருத்திர விஷ்ணு முதலானனர்களுக்குள் மேன்மை தாழ்மை இருக்கிறது.

லோகத்தில் அலை, குமுழி முதலியவைகளுக்குள் மேன்மை தாழ்மை யுண்டோ அதுபோல் ருத்திரர் முதலானவர்களுக்குள் உயர்வு, தாழ்மை யுண்டு.

**17.** ஸகலத்திற்கும் காரணரும், ருத்திரருமான சிவனுக்கு எல்லாவற்றைவிட சிரேஷ்டத்தன்மையை சொல்லாதவர்கள் ராக்ஷஸர்கள் என்பதில் ஸந்தேகமில்லை.

**18.** இப்பிரிவுகளெல்லாம் வியவக்கார திருஷ்டியால் கூறப்பட்டது.

**19–20.** பிரமாண திருஷ்டியைக்கொண்டு விசாரிக்கும் பொழுது, நித்தியமான வஸ்து ஒன்றே தவிர, வேறில்லை என்பதில் ஸந்தேகமில்லை; உலகத்தில் மனிதர்கள், மகாமோகத்தால் பிரமாணத்தை ஆதரிக்காமல், இந்த தேவன் உயர்ந்தது, அந்த தேவன் உயர்ந்ததன்று என்று ஒருவருக்கொருவர் வாதாடுகிறார்கள்; மஹாபாபிகளான மனிதர்களுக்கு ருத்திரனுடைய உயர்வு விளங்குகிறதில்லை.

**21.** அநேக ஜன்மங்களில் செய்த ச்ரௌத ஸ்மார்த்த கர்மானுஷ்டானத்தால் ஸித்தி பெற்றவர்களுக்கு பிரமாணத்தாலும், தர்க்கத்தாலும், ஸ்வபாவமாகவும் ருத்திரனுடைய சிரேஷ்டத்தன்மை விளங்குகிறது.

**22.** தேவர்கள் படிப்படியாக மனிதர்களை ஸம்ஸாரத்தினின்றும் விடுதலை செய்கிறார்கள்; ருத்திரன் ஸம்ஸாரத்தில் மூழ்கினவர்களை தானே நேராக விடுதலை செய்கிறார்.

23. ஆதலால், சிவனைத்தவிர மற்ற தேவதைகளை விட்டு விட்டு ஸோராக ஸம்ஸார மோசகராகிய சிவன் ஒருவனே எப்பொழுதும் தியானிக்கத்தகுந்தவர்.

24. எப்படி விருக்ஷத்தின் வேரில் ஜலம் விடுவதால் கொம்புகளெல்லாம் விருத்தியடைகின்றனவோ, அப்படியே சிவதியானத்தால் எல்லா தேவர்களும் திருப்தியடைகிறார்கள்.

25. ஞானமாயும், ஆனந்தமாயும், நாசமற்றதாயுமுள்ள தத்துவத்தை விகல்பமன்றி எவர்கள் அறிகிறார்களோ. அவர்கள் ஜீவித்திருந்தாலும் முக்தர்கள் ஏன்பதில் ஸந்தேகமில்லை.

26. எவனுக்கு பரமான தத்துவம் தர்கத்தினால் நிர்விகல்பமாக விளங்குகிறதோ, அவனும், ஸ்வப்னத்திலிருந்து விடுதலையாவதுபோல், ஸம்ஸாரத்தினின்றும் விடுதலை யடைகிறான்.

27. எவனுக்கு வேதாந்த வாக்கிய பிரமாணத்தால் மாத்திரம் நிர்விகல்பமான பரம தத்வம் விளங்குகிறதோ அவனும் தன்னுடைய ஸம்ஸார ஸமுத்திரத்திலிருந்து விடுபடுகிறான்.

28. பரமாத்வான சிவனுக்கு நாமமுமில்லை, ரூபமுமில்லை; மாயையால் நாமரூபங்கள் கல்பிக்கப்பட்டிருக்கின்றன.

29. பரதத்வத்திற்கு, சிவன், ருத்திரன், மகாதேவன், சங்கரன், பிரஹ்மம், ஸத், பரம் என்ற நாமங்கள் முக்கியமானவை.

30. பரமேச்வரனிடத்தில் விஷ்ணு, நாராயணன் முதலிய நாமங்கள் முக்கியார்தத்தில் செல்லா; ஆனால் யோகார்தத்தால் (அவயவ வ்யுத்பத்தியால்) கொஞ்சம் பொருந்துகின்றன.

31–32. சிவன் ரூபமற்றவராயிருந்தாலும், உபாஸகர்களால் உமையை பாதி சரீரமாகயுடையதாகவும், வெண்ணிறமுள்ளதாகவும், முக்கண்ணராகவும், சந்திரசேகரனாகவும், நீலகண்டராகவும், பரமானந்தானுபவ ஸந்தோஷத்தால் நர்த்தனப்பிரியராகவும், குணமூர்த்திகளான பிரம்மா, விஷ்ணு, ருத்திரர்களால் உபாஸிக்கப்படுகிறவராயுமுள்ள மூர்த்தியாக தியானம் செய்யத்தக்கது.

33. மேற்கூறிய ரூபம், ஒரு மூர்த்தியுமில்லாதவரும், எல்லா மூர்த்தியுள்ளவருமான சிவனுக்கு சிரேஷ்டமான ரூபமென்று நித்தியமாயுள்ள வேதம் கூறுகிறது ; (கைவல்லியோபநிஷத்).

34. பழுக்கக்காய்ச்சிய இரும்புக்கட்டிபோல, ஹே ! விப்ரர்களே! மற்ற மூர்த்திகளைவிட ருத்திரமூர்த்தி பிரகாச ஸுக லக்ஷணங்களால் பரதத்துவத்திற்கு ஸமானமாக விருக்கிறது.

35. ஹே! வேதாந்தக்கடல் கரைகண்டவர்களே! மற்ற விஷ்ணு முதலான மூர்த்திகள் ரஜஸ்தமோகுணங்களின் அதிகச் சேர்க்கையால் விலக்ஷணமா யிருக்கிறபடியால் பரதத்துவத்திற்கு ஸமமாக ஆகாது.

36. மும்மூர்த்திகளுள் ருத்திரனிடத்தில் பரதத்வத்தின் நாமங்கள் (ஸத், பரம் முதலியவை) நேராகவே செல்லும்.

37. ஹே! பிரஹ்மஞானிகளே! விஷ்ணுமுதலிய தேவர்களுக்கு நாமங்கள், அந்த பரதத்வத்தின் சேர்க்கையால் பொருந்துகின்றன.

38. ஆனாலும், பரதத்வத்துடன் நேர்சேர்க்கையால் ருத்திரனுக்கு இந்த நாமங்கள் முக்கியமாகவும், பரதத்வத்துடன் மறைந்திருப்பதால் மற்றவர்களுக்கு முக்கியமல்லாததாகவும் இருக்கின்றன.

39. பரதத்வமூர்த்தியாகிய ருத்திரபிரஸாதத்தால் பரதத்வத்தின் ஞானம் உண்டாகும், அந்தப்பிரஸாதமும் அந்தமூர்த்தியை தியானம் செய்வதாலும், பூஜைசெய்வதினாலும் உண்டாகுமேதவிர வேறு வழியாக உண்டாகாது.

40. மனிதர்களுக்கு அன்னத்தைப்புஜிப்பதால் பசி நீங்குவதுபோல, இந்த மூர்த்திப்பிரஸாதத்தால் பரதத்வம் விளங்கும்.

41. எப்பொழுதும், எல்லோருக்கும் பரதத்வம் அவரவர் ஸ்வரூபமாயிருந்தபோதிலும், அந்த மூர்த்தியினுடைய பிரஸாதமில்லாமல் அது அறியப்படமாட்டாது.

42. ஆகையால், எல்லோருக்கும் இந்த மூர்த்தியே போக மோக்ஷபலத்தைக் கொடுக்கிறது; ஹே! முனிசிரேஷ்டர்களே! அதிக பக்தியுடன் இந்த மூர்த்தியை பூஜைசெய்யவும்.

---

## அத்தியாயம் 28.

---

### (சிவலிங்க ஸ்வரூப மூறைத்தல்).

1. ஸூதர்:—இனி, இப்பொழுது சிவலிங்கத்தைப்பற்றி சுருக்கமாகச் சொல்லுகிறேன்; இதை அறிந்த மாத்திரத்தில் மனிதன் முக்தியை யடைவான்.

2. (சிவலிங்கமென்றால், சிவனுடைய லிங்கமென்று அர்த்தம் செய்யக்கூடாது) சிவனே லிங்கம்; லிங்கமென்றால் ஒன்றை ஞாபகப்படுத்தும்படியான குறிப்பு (லோகத்தில் நெருப்பு முதலிய பதார்த்தங்களை புகைமுதலியது ஞாபகப்படுத்துகிறது, புகை முதலியது லிங்கம் என்று சொல்லப்படும்)! சிவனால் எல்லாம் ஞாபகப்படுத்தப்படுகிறது; சிவன் வேறொன்றாலும் ஞாபகப் படுத்தப்படுகிறதில்லை. (சிவன் தனது ஸ்வப்பிரகாச ஞானரூபத்தால் எல்லா ஜடவர்க்கத்தையும் ஞாபகப்படுத்துகிறான்).

3. ஜடம்தான் வேறொன்றால் ஞாபகப்படுத்தப்படுகிறது; அஜடம் (சைதன்யம்) அப்படியல்ல; சிவன் ஸ்வபிரகாச லக்ஷண முள்ளதால் ஜடமே யன்று.

4. சிவன் அசித்தாயிருந்தால் எப்படி அவன் சிவனாவான்; அசித்தாயிருக்கிற சுவர் முதலானது சிவன் என்று சொல்ல ஒருவரும் ஸம்மதப்படமாட்டார்கள்.

5. ஸ்வப்பிரகாசலக்ஷணமுடைய சிவன் இல்லாதபக்ஷத்தில் எல்லாம் தோற்றுதலில்லாமல் ஆகும்; அப்பொழுது எல்லாம் சூன்யமாகமுடியும்.

6. சூன்யத்தால் சூன்யத்தின் இருப்பு ஸ்தாபிக்கமுடியாது; ஏனெனில் சூன்யத்தின் லக்ஷணமே எல்லாப்பிரகாரமாக பிரகாசமற்றது.

7. ஆதலால் ஸ்வப்பிரகாசத்தையே முக்கிய லக்ஷணமாகவுடைய சாக்ஷியாயும், ஸாம்பனுயுமுள்ள சிவனுல் இந்த விளங்கக்கூடிய ஜகத்தெல்லாம் ஞாபகப்படுத்தப்படுகிறது ; ஞாபகப்படுத்துகிற இந்த சிவன் மற்றெதினுலும் ஞாபகப்படுத்தப்படுகிறதில்லை.

8. (மேலும்) இந்த மகேச்வரன் ஸ்வயம் ஜ்யோதியாயிருக்கிருர் என்று ச்ருதி சொல்லுகிறது; இவருடைய பிரகாசத்தால் இந்த ஜகத்தெல்லாம் விளங்குகிறதென்றும் சொல்லுகிறது.

9. ஆதலால், எல்லா ஜகத்தையும் விளங்கச்செய்கிற ஸ்வயம்பிரகாசமான சிவனே, நான் சொல்லியபிரகாரம், லிங்கமென்று அறியவும் ; வேதமுடிவானதும் இதுவே ; ஹே ! திவிஜர்களே ! இதுவே பூஜிக்கத்தக்கது.

10. ஹே ! முனிகளே ! வேதமறிந்த சிலர் 'சிவனுடைய லிங்கம், சிவலிங்கம்' என்று சொல்லுகிருர்கள் ; அது ஸ்வயம் பிரகாசமாயுள்ள விடத்தில் யுக்தமன்று ; ஆகையால் சம்புவே லிங்கம்.

11. விவேக மில்லாத மனிதனுடைய சித்த விருத்தியை அபேக்ஷித்து 'சிவனுடைய லிங்கம்' என்ற சப்தம் ஸமஸ்த ஜந்துக்களால் சொல்லப்படுகிறது : சிவன் எப்பொழுதும் தானே பிரஸித்தமாயிருக்கிருர்; ஆகையால் இந்த அர்த்தம் பொருந்தாது.

12. தானே எல்லாவற்றையும் நன்கு பிரகாசிப்பிவித்தாலும், சங்கரன் மாயையால் பிரகாசமற்றவர்போல் காணப்படுகிருர் ; (எல்லாவற்றையும் பிரகாசம் செய்வதால் ஸ்வயம்பிரகாசமாயிருந்தாலும், அவிவேகிகளுக்கு அக்ஞானத்தால் பிரகாசமாவதில்லை); சிவன் தானே தன்லிங்கத்தால் நன்கு விளங்குகிருன்.

13. வியவகாரதிருஷ்டியால் சிலர் அநேகவிதமாக 'சிவனுடைய லிங்கம்' என்று சொல்லுகிருர்கள்; தத்வதிருஷ்டியால் ஸ்வயம் பிரகாசமான பரமேசுவரனுக்கு லிங்கமில்லை.

14. வேதாந்த வாக்கியத்தால் உண்டாகும் பரமாத்ம வித்யயை சிவனுடைய லிங்கமென்று சிலர்சொல்லுகிருர்கள்; மீமாம்ஸ

சாஸ்திர மூலமாக விசாரித்து அதனால் உண்டாகும் ஸத்யவித்யையை சிவனுடைய லிங்கமென்று சிலர் சொல்லுகிறார்கள்.

15. ஸ்மிருதிகளாலும், இதிஹாஸங்களாலும் உண்டாகிற அதி சுத்தமான பரவித்யையை சிவனுடைய லிங்கமென்று சிலர் சொல்லுகிறார்கள்.

16. சிலர் சிவனுக்கு விஷயமாயும், சிவதத்வத்தில் இருக்கிறதாயுமுள்ள மாயையை சிவலிங்கமென்று சொல்லுகிறார்கள்; சிலர் சித்தமென்றும், அஹங்காரமென்றும், மனஸ் என்றும், புத்தி யென்றும் சொல்லுகிறார்கள்.

17. பிராணனை லிங்கமென்று சிலரும், சரீரமென்று சிலரும், த்வக்முதலிய இந்திரியங்களை லிங்க மென்று சிலரும், இவைகளின் சேர்க்கையை (ஸ்தூலசரீரத்தை) லிங்கமென்று சிலரும் சொல்லுகிறார்கள்.

18. சப்தமுதலிய ஸூக்ஷ்ம பூதங்களையும், அவ்விதமே ஸ்தூல பூதங்களையும், பாதால முதலிய உலகங்களை யெல்லாம் லிங்கமென்று சிலரும் சொல்லுகிறார்கள்.

19. இருப்புள்ளதும் இருப்பில்லாததுமான ஸகல பதார்த்தங்களையும் சிவலிங்கமென்று சிலர் சொல்லுகிறார்கள்; (ஆனால்) நிர்மலமான ஞானத்தையுடைய சிரேஷ்டமான யோகிகள் சிவனுக்கு, ஸ்வயம் பிரகாசமானதால், லிங்கமில்லை யென்று சொல்லுகிறார்கள்.

20. எது எது சிவனுக்கு லிங்கமாகச் சொல்லப்பட்டதோ அவையெல்லாம் வாஸ்தவத்தில் ஜடபதார்த்தங்களானபடியால் லிங்கமாகமாட்டா; ஞானமன்றோ லிங்கமாயிருக்கக்கூடும்; ஆகையால் உண்மையில் சிரேஷ்டனும், சித்ரூபனுமிருக்கிற மஹேசுவரன், அந்தந்த ஜடோபாதியிலிருந்துகொண்டு பிரபுவாயுள்ள தன்னை ஞாபகப்படுத்திக்கொள்ளுகிறான்.

21. ஆலயத்தை (ஆதாரத்தை, பிடிப்பை, சிவபூஜைக்காக ஏற்படும் லிங்கமுதலியவை) லிங்கமென்று சிலர் சொல்லுகிறார்கள்;

அப்படியானாலும் சங்கரனே ஸாக்ஷாத் லிங்கமாகுமே தவிர வேறு ஆகாது.

22. ஆலயம் என்றால் ஆதாரம்; சிவனன்றோ எல்லாவற்றிற்கும் ஆதாரம்; எப்பொழுதும் ஸத்யஸ்வபாவமுள்ளபடியால் ஸத்யமே சிவன்.

23. சித்ரூபம்தான் எப்பொழுதும் ஸத்யமாகும்; அசித்ரூபம் (ஜடரூபம்) ஸத்யமாகாது; ஏனெனில் சித்ரூபமற்ற வஸ்துகளுக்கு ஸத்யமற்றதண்மை காணப்படுகிறது.

24–25. சிப்பி வெள்ளி முதலியவை அஸத்தியமென்பது எல்லோருக்கும் ஸம்மதம்; அசேதனமான மற்றெல்லாப் பதார்த்தங்களின் அஸத்யதண்மையை விளங்கச்செய்ய இந்த சிப்பி வெள்ளி திருஷ்டாந்தமாகும்; சிவன் ஒருவனே ஸத்யம்; ஆதலால் கல்பிக்கப்பட்ட ரூபங்களுக்கெல்லாம் சிவனே ஆதாரமாயிருக்கிறார்.

26. ஸத்ய சைதன்ய லக்ஷணமுடைய மஹாதேவன் ஆதாரமற்றவனாயிருக்கிறான்; எல்லாவற்றிற்கும் ஆதாரமாயுள்ளதற்கு வேறு ஆதாரம் காணப்படவில்லை; எப்படி ஆகாசத்திற்கு ஒரு ஆதாரமும் காணப்படவில்லையோ அப்படி ஆதாரமற்றிருக்கிறான்.

27–28. ஸத்யத்தைச் சொல்லுவதும், தானே பிரமாணமாயுள்ள வேதவாக்கியம், பரமாத்மாவான சிவனுக்கு தன்னுடைய மகிமையிலேயே ஆதாரத்தைச் சொல்லுகிறது; வேதப்பிரமாணம் மற்றப்பிரமாணங்களைவிட உயர்ந்தது என்று ஒப்புக்கொள்ளப்படுகிறது.

29. ஆதலால் சத்சித் ஆனந்த லக்ஷணமுள்ள பரமேசுவரன் எப்பொழுதும் தானே லிங்கமாயிருக்கிறார்; அவரைக் குறிப்பிடும்படியான லிங்கம் வேறு காணப்படவில்லை.

30–31. ஸம்ஸார ஸமுத்திரத்தில் மூழ்கிய அக்ஞானிகளின் சித்தபரிபாகத்தை யனுஸரித்து, அவர்களால் செய்யப்படவேண்

டிய உபாஸனார்த்தம் ஆதாரமற்ற பரமாத்மாவான சிவனுக்கு, மந்திர ஸம்ஸ்கார பூர்வமாக, வாஸ்தவம்போல ஆதாரம் கல்பிக்கப்படுகிறது.

32. வேறு சில வேதவித்தமர்கள், எல்லாம் இதில் லயமடைகிறபடியால், லிங்கம் என்று சொல்லுகிறார்கள்; அப்படியாயினும் மஹேசுவரனே ஸ்வயமே லிங்கமாயிருக்கிறார்.

33. லயமடையக்கூடிய இந்த எல்லா ஜகத்தும் பிரஹ்மத்தினிடமே லயமாகிறது ; எப்பொழுதும் ஸத்ய (இருப்பு) ஸ்வபாவமானதால் பரப்பிரஹ்மம் லயமடைகிறதில்லை.

34–35. (வியவஹார தசையில்) அஸத்யமான சுக்தியில் தோன்றுகிற வெள்ளி (சுக்தி ஞானத்தால்) லயமடைவதைக் காண்கிறோம் ; ஸத்யமான சுக்தி லயமடைகிறதில்ல; (அதுபோல தத்வதிருஷ்டியால்) சிவனைக்காட்டிலும் அன்னியமான அசிவ பதார்த்தங்களெல்லாம் சிவனிடத்தில் லயமடைகின்றன ; ஆகையால் நாசமற்ற ஹரனே ஸ்வயம் லிங்கமாயிருக்கிறார்.

36, மற்றும் சிலர் இந்த சரீரத்திலுள்ள (நாடிகளின்) ஆதாரங்களில் சிவனுக்கு லிங்கங்களைச் சொல்லுகிறார்கள். (மூலாதாரம், மணிபூரகம், அனாஹதம், ஆஞா, த்வாதசாந்தம், ஷோடசாந்தமென்ற இத்தேகத்திலுள்ள ஆறு ஆதாரங்களும் சிவனுடைய உபாஸநா ஸ்தானமென்று ச்ருதி ஆகமங்களை அனுஸரிக்கிறவர்கள் சொல்லுகிறார்கள்).

37–38. (இவைகளில் மணிபூரகத்தில் உபாஸிக்கவேண்டிய பிரஹ்மலிங்கம் சொல்லப்படுகிறது). கீழ்நோக்கமுள்ளதாயும் (சிருஷ்டிகார்யாபிமுகமாயும்), ஆதியந்தமற்றதாயும், சரீரமற்றதாயும், (உபாதியால்) சரீரமுள்ளதாயும், ச்வலிக்கின்ற காலாக்னிக்கு ஸமமாயும், ஸ்வயம்புவாயும், பிரஹ்மம் என்று சொல்லப்பட்ட ஒரு லிங்கம், உதரமத்தியமான நாபியிலிருக்கும் மணிபூரகத்தில், யோகிகளால், மஹா மந்திரங்களுடன், பூஜிக்கத்தகுந்தது. இவைகளை ஸம்பிரதாயமாய் குருபதேசத்தால் அறியவேண்டும்.

39–41. (ஹிருதய ஸ்தானமாகிய அனுஹதத்தில் உபாஸிக்கவேண்டிய இரண்டாவதான விஷ்ணு லிங்கம் சொல்லப்படுகிறது). கோடி சூரிய பிரகாசமுள்ளதாயும், கோமலமாயும், லிங்கசரீரமற்றதாயும், (உபாதியால்) லிங்கசரீரமுள்ளதாயும், அவ்வியக்தமாயும், ஸ்தூலசரீரமற்றதாயும், (உபாதியால்) ஸ்தூலசரீரமுள்ளதாயும், எப்பொழுதும் மேல்நோக்குமுள்ளதாயும், ஸம்ஸார நாசகமாயுமுள்ள இரண்டாவது (விஷ்ணு) லிங்கம் மூன்ருவது சக்கிரமான அனுஹதத்தில், மஹா மந்திரங்களுடன் ஆத்ம நிஷ்டையுள்ள யோகிகளால் பூஜிக்கத்தக்கது; இது குருபதேசத்தால் அறியத்தக்கது.

42–44. (மூண்ருவதான ருத்திரலிங்கம் நெற்றி மத்தியிலிருக்கும் ஆஞா சக்கிரத்தில் உபாஸிக்கவேண்டுமென்று சொல்லப்படுகிறது).

கோடி சந்திரனுக்கு ஸமான காந்தியை யுடையதும், சங்கரனும், உமாசக்தியுடன் கூடியதாயும், ரூபமற்றதாயும், (உபாதியால்) ரூபமுள்ளதாயும். அவ்வியக்தமாயும், அபரமாயும் அத்புதமான பரமாயும், ஸம்ஸார நிவிருத்தி ஸ்தானமாகிய அவிமுக்தமாகிய ஆஞாயிலிருப்பதாயும், எல்லாமாயும், எல்லா ஞானத்திற்கு ஸாதகமாயுமுள்ள மூண்ருவது லிங்கத்தை அதிசுத்தமான யோகிகள் மஹா மந்திரத்தாலும், குருபதேசத்தாலும் பூஜிக்கவேண்டியது.

45. இந்த லிங்கங்களில் பூரணராயும், தன் சக்தியுக்தனுயுமுள்ள சிவன் எப்பொழுதும் ஸ்வஜன பிரியத்தின்பொருட்டு பிரகாசிக்கொண்டிருப்பதாக எண்ணி ஸ்ம்ஸாரஸாகரத்திலிருந்து கரையேறக் கோருகிறவர்கள் பூஜிக்கவேண்டியது.

46. எவனெருவன் இவ்விதம் அந்தர்லிங்கத்தை எப்பொழுதும் அறிகிருனே அந்த பிரஹ்மவித் சங்கர பிரஸாதத்தால் சீக்கிரத்தில் பந்தத்தைச் சேதிக்கிருன் என்ற யதார்த்தமானது ஸர்வலோக க்ஷேமத்தின்பொருட்டு சொல்லப்பட்டது.

47. அலைகளற்ற (சாந்தமான) பரமாத்மாவான சிவனிடத்தில் பரயோகிகளினுடைய விருத்திகளின் லயம் முக்கியபூஜை என்று சொல்லப்படுகிறது; புஷ்பம், ஜலம், பழமுதலியவை அற்பங்களாம்.

48. அக்ஞானத்தை மூலமாகவுடைய ஸம்ஸாரமென்ற பெரிய விருக்ஷத்தை வேருடன் கெடுக்க மந்திரத்தினால் பூஜிப்பது எப்பொழுதும் போதாது.

49. ஞானம்தான் சிவார்ச்சனை என்று சொல்லப்படுகிறது; மனிதர்களுக்கு வெளிப்பூஜை ஸ்தூலமே ஆகும்; வேதமே எப்பொழுதும் ஞானத்திற்கு காரணம்; ஹே! ஆஸ்திகர்களே! ஞானமே பரமபதம்.

50. மஹேசுவர பக்தரான வியாஸர் எனக்கு சொல்லிய இந்த பரமரஹஸ்யம் என்னால் உங்களுக்குச் சொல்லப்பட்டது; அஸத்யமான இந்த ஸம்ஸார நிவிருத்தியின்பொருட்டு மரணபரியந்தம் இந்த பூஜையைச் செய்யுங்கோள்.

---

## அத்தியாயம் 29.

### (சிவஸ்தான விசாரம்).

1. ஸூதர்:—இனி, இப்பொழுது சுருக்கமாக சிவஸ்தானத்தைச் சொல்லுகிறேன்; அவ்விடத்தில் தேவேசனை ஸ்மரிப்பதால் மனிதன் கைவல்லியமடைவான்.

2. முன்னொருகாலத்தில் கிரீடம் தரித்தவரும், கருடக்கொடியுடயவருமான ஸ்ரீமான் நாராயணன் பரமமான தபஸை, கைலாஸ அருகில், செய்தார்.

3. எல்லா அங்கங்களிலும் பஸ்மத்தைப் பூசிக்கொண்டும், நெற்றியில் திருபுண்டரம் தரித்துக்கொண்டும், ருத்திராக்ஷமாலை போட்டுக்கொண்டும், சடை மரவுரியியுடன் தபஸ்செய்தார்.

4. அந்த மகாத்மாவான கேசவருடைய தபஸால் கருணாநிதியான சங்கரன் பிரஸன்னமானார்.

**5–6.** கருணாநிதியும், அம்பிகாஸஹிதரும், சந்திரமௌலியும், ஸநாதனருமாகிய அந்த ருத்திரரைக்கண்டு, அந்த மஹாவிஷ்ணு பரமபக்தியுடன் தண்டம்போல் பூமியில் விழுந்து நமஸ்கரித்து, எல்லோருக்கும் நன்மையை யளிக்கக்கூடிய ஸ்தோத்திரத்தைச் சொல்லத்தொடங்கினார்.

**7–65.** (விஷ்ணுவால் சொல்லப்பட்ட இந்த மந்திர ஸ்தோத்திரத்தில் 'அ' காரம் முதல் 'க்ஷ' காரம் வரையிலுள்ள மாதிருகா மந்திரங்களில் சிவன் தாதாத்மியமாயிருப்பதாக அறியவேண்டியது; மேலும் சில அக்ஷரங்களுக்கு தமிழ்பாஷையில் ஸமமான எழுத்துகள் இல்லாதபடியால் மூலக்கிரந்தத்தைப் பார்ப்பது விசேஷம்).

விஷ்ணு :—

(விஷ்ணுவால் கீழ்ச்சொல்லப்படும் சிவனுடைய ரூபங்களுக்கும், குணங்களுக்கும் 'நமஸ்காரம் செய்கிறேன்' என்று சேர்த்துக்கொள்ளவும்).

(மஹா தேவனாகிய சங்கரன்) 'அ' காரரூபர் ஸாக்ஷாத் அனந்த ஆனந்தமூர்த்தி; எல்லோருக்கும், ஆத்மாவாக விருக்கிறவர்; வெகு சுத்தர்; சூலாயுதத்தை யுடையவர்; 'ஆ' காரரூபர்; அதிசுத்தர்; ஸர்வவஸ்துக்களுக்கும் ஸாக்ஷி; அம்பிகாபதி; ஸங்கமற்றவர்; 'இ' கார ரூபர்; ஈசுவரன் என்ற பெயருள்ளவர்; ஸர்வஸித்திகளையும் செய்யக்கூடியவர்; இந்திரன் முதலிய லோகபாலர்களுக்கு தங்கள் தங்கள் ஸ்தானத்தை யளிப்பவர்; 'ஈ'காரரூபர்; சிரேஷ்டர்; வெண்டியவைகளை யளிப்பவர்; வஞ்சகர்களுக்கு கிட்டாதவர்; ஐசுவரிய மளிப்பவர்; 'உ'கார ரூபர்; கெட்ட ஜந்துக்களுக்கு கெடுதல் செய்பவர்; சூலினி; உத்தம ஜந்துக்களால் உபாஸிக்கப்படுகிறவர்; 'ஊ'கார ரூபர்; போகமோக்ஷத்தை யளிப்பவர்; உத்தம ஆத்மா; ஸ்திரமானவர்; உத்தம ஞானத்தால் அறியத்தக்கவர்; பரமாத்மா; 'ரு'கார ரூபர்; ஆதியிலுள்ளவர்; ஸ்ரீராமர் முதலியவர்களால் பூஜிக்கப்பட்டவர்; வேதரிக்குகளின் அர்த்தஸ்வரூபர்; ஸத்ய பர ஆத்மா; 'ரூ'காரர்; எல்லா வஸ்துக்களின்

ஸ்வாபவரூபர்; நித்திய திருப்தர்; சம்பு; வஸ்துக்களின் முக்கியமான ரஸரூபர்; சுத்தசித்ரூபர்; 'ல்ரு' காரரூபர்; நீண்டு தொங்குகின்ற தாழ்வாயை ஆபரணமாக வுடையவர்; ஸ்வப்பிரகாசர்; லிங்கரூபர்; 'ல்ரூ' காரரூபர்; பிரளயத்தில் இருப்பவர்; நாசம்செய்கிறவர்; ஆதிகாரணர்; லாக்ஷாருணசரீரி; கர்மபலத்திலிருப்பவர்; 'எ' காரரூபர்; 'இது' என்பதற்கு எப்பொழுதும் ஸாக்ஷி; அஹங்காரத்திற்கு ஸாக்ஷி; தனியாகவும் இரண்டற்றதாகவுமுள்ள வஸ்து; 'ஐ' காரரூபர்; மலமற்ற ஞான விசாரத்திலிருப்பவர்களின் ஆத்மா ரூபமாக எப்பொழுதும் விளங்குகிறவர்; 'ஓ' காரரூபர்; பிரம்ம, விஷ்ணு, ருத்திரமூர்த்தி; வாக்குக்கெட்டாதவர்; ஸ்வப்பிரகாசர்; 'ஔ'கார ரூபர்; மஹேசர்; மஹாமந்திரார்த்தரூபர்; மஹாதேவர்; பிரமாண பிரமேய பிரபஞ்சரூபர்; பிந்து ('அம்') ரூபர்; பீஜரூபர்; பீஜத்திற்கு அதிஷ்டானரூபர்; மாயா பீஜ நாசகரர்; விஸர்ஜன ('அ:' ரூபர்;) ஆச்சரியரூபமுள்ளவர்; மஹாத்மா; ஸகல ஸம்ஸார பரித்தியாக நிஷ்டர்களால் விசேஷமாக பூஜிக்கத்தகுந்தவர்; 'க' காரரூபர்; பிரம்மா இந்திரன் முதலியவர்களால் பூஜிக்கப்பட்டவர்; கரணக்கூட்டங்களை நசிக்கச்செய்து மோக்ஷமளிப்பவர்; காலத்தைக்கடந்தவர்; 'க்க' காரரூபர்; ஆகாசம் முதலிய பஞ்சபூதங்களின் காரணர்; ஆகாசம் போல் நிர்மலர்; கலஞானவிஷயர்; 'க' ரூபர்; கணேசர்; கணக்கூட்டத்தால் பூஜிக்கப்பட்டவர்; கங்காதரர்; ரஹஸ்யமானவர்; குணங்களுக்கெட்டாதவர்; 'க' கார ரூபர்; பிரபஞ்சத்தை பிரளயகாலத்தில் நசிக்கச்செய்கிறவர்; ஸ்ருஷ்டிகாலத்தில் பிரபஞ்ச ஆத்மா; கடமுதலிய ஜகத் உருவற்றவர்; 'ங' கார ரூபர்; 'ங்' (பார்வதீ) மந்திரார்த்த ஸ்வரூபர்; சிவாத்மா; பார்வதீ மந்திரங்களால் அறியத்தக்கவர்; 'ச' காரரூபர்; ஆத்ம சக்தியுக்த மந்திர ஸ்வரூபர்; அளவிடக்கூடாதவர்; 'ச' மந்திரத்திலிருப்பவர்களுக்கு மோக்ஷத்தையளிப்பவர்; 'ச்ச' கார ரூபர்; பொய், சோம்பல் முதலிய விசேஷங்களுடன் புத்தி குகையிலிருக்கபட்ட வஸ்துவை முமுக்ஷுக்களுக்கு பிரிக்கிறவர்; 'ஜ' காரரூபர்; ஜகத் சக்தி ஸ்வரூபர்; ஜயத்தை இச்சிப்பவர்களுக்கு ஜயத்தையளிப்பவர்; மூலாக்ஞான

ஆசிருத ரூபர்; 'ஜ்ஜ' காரரூபர்; 'ஜ்ஜ' மாந்திரார்த்த ஸ்வரூபர்; அமிருதர்; அமிருத மத்தியத்திலிருக்கும் சந்திர பிம்பர்; ஸாம்பர்; சம்பு; 'ஞ' காரரூபர்; 'ஞ' மந்திரார்த்த ஸ்வரூபர்; ஞான மூர்த்தி; ஞானநிஷ்டையிலிருப்பவர்களுக்கு முக்தியளிப்பவர்; 'ட' காரரூபர்; தேவர்களாலும் அஸுரர்களாலும் ட, டா, டி, டீ என்ற சப்தங்களினுல் பூஜிக்கப்பட்டவர்; 'ட்ட' காரரூபர்; 'ட' மந்திரார்த்த ஸ்வரூபர்; 'ட' மந்திரத்தால் டடாதிகணங்களால் பூஜிக்கப்பட்டவர்; 'ட' மத்தியத்திலிருப்பவர்; 'ட' காரரூபர்; டமருக வாத்தியத்தில் ட, டா, டி, டீ, டே, டோ, டை என்ற சப்தங்களால் பூஜிக்கப்பட்டவர்; நர்த்தனத்தில் பிரியமுடையவர்; 'ட' காரரூபர்; 'ட' மந்திரார்த்தம் தெரிந்த மனிதர்களுக்கு எப்பொழுதும் போநானந்தத்தை யளிப்பவர்; 'ண' காரரூபர்; ஞுகி னிகணங்களால் ண, ணா, ணீ, ணு, ணெ, ணே, ணொ சப்தங்களால் ஸதா பூஜிக்கப்பட்டவர்; 'ண' என்ற பெயருடையவர்; 'த' காரரூபர்; 'த' சப்தார்த்த ஸ்வரூபர்; விஸ்தாரமுள்ளவர்; தத்வம் என்றே பூஜிக்கத்தகுந்தவர்; தத்வபூதர்; 'த்த' காரரூபர்; (த்த) மந்திரார்த்த ஸ்வரூபர்; 'த்த' என்ற மகாகணங்களால் பூஜிக்கப்பட்டவர்; 'த்த' மத்தியத்திலிருப்பவர்; 'த' காரரூபர்; கருணை என்ற மகாசக்திமயர்; தேசம் ஜாதியற்றவர்; பகலும் இரவுமானவர்; 'த' காரரூபர்; பிரதிவி முதலிய மகாபூதங்களின் ஸ்வரூபர்; கைலாஸ மத்தியிலிருப்பவர்; 'த' மத்தியத்திலிருப்பவர்; 'ந' காரரூபர்; நகேந்திரர்; நாம ஜாதிக்கு காரணர்; நமசிவாயரூபர்; நமஸ்கரிக்கத்தக்கவர்; பல ரூபமுள்ளவர்; சூலாயுதமுடையவர்; 'ப' காரரூபர்; பராநந்த ஸ்வரூபர்; பராத்மா; பராபரமற்றவர்; பரிசுத்தம் செய்யக்கூடியவர்; 'ப்ப' காரரூபர்; ஸத்கர்மபலமளிப்பவர்; பிரமதாதி கணங்களால் பூஜிக்கப்பட்டவர்; பூர்ண ஸ்வரூபர்; 'ப' காரரூபர்; பிரஹ்ம மந்திர உபாஸனையிலிருப்பவர்களுடைய பந்தத்தை நாசஞ்செய்பவர்; 'ப' காரரூபர்; ஸம்ஸார ஸாகரத்தை தாண்டச்செய்பவர்; ஸத் என்ற சப்தத்தால் அறியப்படுகிறவர்; பவானிபதி; 'ம' காரரூபர்; மகாமாயையின் பாசத்தை நாசஞ்செய்யக்காரணர்; மமகாரமில்லாதவர்களுக்

கும் மகாநந்தத்தை யளிப்பவர்; 'ய' காரரூபர்; நிஜமானவர்; ஸத்யமான பிரத்யக் அத்வைத பிரஹ்மம்; 'ர' காரரூபர்; ரதியில் பிரியமுள்ளவர்களுக்கு பிரியமானவர்; ரதிக்கு காரணர்; ர சப்த தேகமுடையவர் (சிவனும், சூரியனும் ர சப்தார்த்தம்); ரோகத்தையும் ஸம்ஸாரத்தையும் நசிக்கச்செய்பவர்; 'ல' காரரூபர்; ஸோமலதை ஸ்வரூபர்; சந்திரரூபர்; லாபாலாபமற்றவர்; அடையப்பட்ட ரூபமுள்ளவர்; 'வ' காரரூபர்; வரிஷ்டர்; வாஸுதேவர் முதலியவர்களுக்கு காரணர்; ஆசையை யொழிப்பதில் காரணர்; 'ச' காரரூபர்; நமஸ்கரிக்கத்தக்கவர்; சம்பு; சரத்காலசந்திரன்போல் தாவல்யமானவர்; 'ஷ' காரரூபர்; ஷடாதாரம், ஷட்சக்கிர ஸ்வரூபர்; ஷடக்ஷரமந்திரத்திலிருப்பவர்; ஷண்முகருக்கு காரணர்; 'ஸ' காரரூபர்; ஸ சப்தார்த்த ஸ்வரூபர்; ஸதாத்மா; ஜடங்களுக்கு ஸாக்ஷிரூபர்; ஸாதுக்களுக்கு உபகாரஞ்செய்பவர்; 'ஹ' காரரூபர்; அகம் அர்த்தமுடையவர்; எப்பொழுதும் அகங்காரத்திற்கு சாக்ஷி; தேவர்களால் ஸ்துதிசெய்யப்பட்டவர்; ஹம்ஸரூபர்; 'ள' காரரூபர்; 'ள' கார மகாமந்திர பிரியர்; சஞ்சலமான ஸம்ஸார நாசகர்; 'க்ஷ' காரரூபர் 'க்ஷ' மந்திரார்த்த ஸ்வரூபர்; பொருமையுடையவர்களுக்கு க்ஷேமத்தை செய்பவர்; என் க்ஷேமரூபர்; மாதிருகாரூப முள்ளவர்; அந்தக்கரண விருத்திகளுக்கு சாக்ஷி; மாதிருகா மந்திரத்தாலடையக்கூடியவர்; மஹான்; மாதிருகைக்கு ஆகாரமாக விருப்பவர்; மாதிருகாமூலரூபர்; மஹா மந்திர வாச்யர்; மஹத்தான பிரஹ்மம்; ஸ்வரமென்றும் ஸ்போடமென்றும் மகாமந்திரங்களின் இரண்டு ரூபமுடையவர்; பதாபத ரூபர்; மகான்; எட்டுவர்க்கங்களாக பிரிவுபட்ட மலமற்ற ஆத்மா; எல்லா சப்த ஸ்வரூபர்; அந்தந்த அர்த்தமுள்ளவர்; சப்தத்தால் அறிக்கக்கூடாதவர்; சப்தத்தால் அடையக்கூடியவர்; ஸாக்ஷி; ஸர்வோபாதியற்றவர்; ஸ்வயம் பிரகாசமுள்ளவர்; பிரதியக்ஷ முதலிய பிரமாணங்களால் அறியக்கூடாதவர்; அபரோக்ஷமாக விளங்குகிறவர்; ஸ்வயமே ஸர்வஸாக்ஷி; மகான்; வஸ்து, அவஸ்து முதலிய ஸ்வஸ்வரூபமற்றவர்; யதார்த்தமானவர்; ஸாக்ஷாத் ஸ்வயம் பிரகாசர்; கிருபையாலடையப்பட்

டவர் ; சிவன் ; ஸத்யசித் ஆனந்தரூபர் ; கெடுதலற்றவர் ; அதி சுத்தமான ஹிருதயகமலத்தில் பிரகாசிப்பவர் ; இத்தகையவருக்கு நமஸ்காரஞ் செய்கிறேன்.

66. ஸூதர் :—இவ்விதம் நாராயணரால் பிரீதிசெய்யப் பட்ட சங்கரர் எதற்காக தபஸ்செய்தீரென்று கம்பீரமான வசனத் தால் கேட்டார்.

67. இதைக்கேட்டு மகாவிஷ்ணு, பரமேசுவரரை நமஸ்க ரித்து, ஹே ! தேவ ! ஸாக்ஷாத் கிருபாகரா ! எனக்கு தங்களு டைய ஸ்தானங்களைச் சொல்லும் என்று கேட்டார்.

68. விஷ்ணுவால் இப்படிக்கேட்கப்பட்ட தன்னுடைய இருப்பிடங்களை ஸர்வக்ஞரான சம்பு சொல்லத்துவக்கினர்.

69. ஈசுவரன் :—ஹே ! புருஷோத்தம ! மகாமோக நிவர்த் தியின் பொருட்டு என்னுடைய ஸ்தானங்களைச் சொல்லுகிறேன் ; வெகு சிரத்தையுடன் கேளும்.

70. மனிதர்களால் ஸ்வர்க்கமோக்ஷமடையும் பொருட்டு உபாஸிக்கக்கூடிய என்னுடைய அத்தியாத்ம அதிபூதஸ்தானங் கள் அநேகமுள.

71. (அத்தியாத்மத்தில்) யோகிகளால் ஸேவிக்கப்படுவ தும், விசிஷ்டமானதும், மனிதர்களுக்கு முக்திஸாதனமான பிரஹ்மரந்திரமென்ற ஸ்தானம் ஒன்றென்று அறி.

72. ஹே ! ஜனார்த்தன ! ஆச்சரியமானதும், புக்திமுக்தி யை யளிப்பதும், மோஹநாசகரமுமான முகமண்டலம் என்னு டைய ஸ்தானம் என்றறி.

73. கண்களும், சுரோத்திரமும். நாசிகையும், கழுத்தும், வாய், பற்கள், தலை இவைகளெல்லாம் முகத்தில் என் ஸ்தானங் களென்றறி.

74. கால் கை களிலிருக்கும் ஸந்திகளும், இரண்டு பார்ச் வங்களும் என்னுடைய ஸ்தானங்கள்.

75. பிரஷ்டபாகமும், நாபிதேசமும், ஹிருத்தேசமும், ஸப்ததாத்துக்களும் என்னுடைய ஸ்தானங்கள்.

76. (தேகமத்தியில்) மூலாதாரமும், லிங்கமூலமான ஸ்வாதிஷ்டானமும், நாபியில் மணிபூரகமும். ஹிருதயத்தில் அநாஹதமும், கண்டத்தில் விசுத்தமும் என்னுடைய ஸ்தானங்கள்.

77. ப்ரூமத்தியத்தில் மஹா ஆக்ஞா சக்கிரமும், ஸித்தி என்ற பிரஹ்மரந்திரமும், ப்ரூமத்தியமான வாராணஸியும், அகார உகார, மகார மூன்று அம்சங்களும், பிந்து, நாத, சக்திகளும் என்னுடைய ஸ்தானங்கள்.

78. பீஜஸ்தானமும், மேட்ரமுங், பல ரோமங்களும் என்னுடைய ஸ்தானங்களென்றறி.

79. அத்தியாத்ம விஷயத்தில் எவ்விதம் என்னுடைய ஸ்தானங்கள் அநேகமுளதோ, அவ்விதமே அதிபூதிக விஷயத்திலும் வெகு ஸ்தானங்களுள.

80. (அதிபூத ஸ்தானங்கள்) கைலாஸபர்வதம் என்னுடைய ஸாக்ஷாத் ஸ்தானம்; அவ்விதமே தக்ஷிண கைலாஸபர்வதமும் என் ஸ்தானம்.

81. விமுக்தியை யளிக்கும் புண்யபுரியாகிய வாராணஸி என்னுடைய ஸ்தானம்; அவ்விடத்தில் மரணமடைந்தவர்களுக்கு முக்தி கிடைக்கும்.

82. ஸ்ரீ ஸோமநாதமும், கேதாரமும், ஸ்ரீபர்வதமும் என்னுடைய ஸ்தானங்கள்.

83. புண்யமான விருத்தாசலமும், கோபர்வதமும், ஸ்ரீ ஹரதீர்த்தமும் என்னுடைய நாசமற்ற ஸ்தானங்கள்.

84. ஆதிகிராமமென்றதும், ச்வேதாரண்யமும், தந்திஸ்தானமும் என்னுடைய ஸ்தானங்கள்.

85. கம்பீரமான திருகோட்டி என்ற க்ஷேத்திரமும், கோபுடதீர்த்தமும், மத்தியார்ஜுனமும் என்னுடைய ஸ்தானங்கள்.

86. ஸ்ரீ மங்கள வம்சமென்றதும், கும்பகோணமென்றதும் என்னுடைய ஸ்தானங்கள்.

87. ஜாப்யேசுவரமும், உத்தமமான வல்மீகமும், கஜாரண்யமும் என்னுடைய ஸ்தானங்கள்.

88. வேதாரண்யமும், ஹாலாஸ்ய க்ஷேத்திரமும், இராமேசுவரமும் என்னுடைய ஸ்தானங்கள்.

89. அக்னிக்கு ஸமானமானதும், சுத்தமானதும், யோக நிஷ்டையிலிருக்கும் முனிக்கூட்டத்தால் ஸேவிக்கப்பட்டதும், போகத்தையும் முக்தியையு மளிப்பதும், புராதனமுமான புண்டரீகபுரமென்ற என்னுடைய உத்தமமான ஸ்தானமிருக்கிறது.

90. உன்னாலும், என்னாலும், இந்திரனாலும், நந்தியாலும், விநாயகராலும், மற்றுமுள்ள எல்லோராலும் வெகு பிரியத்துடன் ஸேவிக்கப்பட்டது; ஆஸ்திக ஜனங்களால் பூஜிக்கப்பட்டது; விராட்டான ஸமஷ்டி ஸ்தூலசரீரத்திலிருக்கப்பட்ட ஸ்வராட்டென்ற லிங்கசரீரத்தின் ஹிருதயமாயிருக்கிறது.

91. ஸர்வசக்தியுள்ள மஹர்ஷிகளாலும் சுருதி ஸ்மிருதி மூலமாய்கூட தெரியப்படுத்தக் கூடாதது. சிவபிரஸாதத்தாலேயே அடையக்கூடியது; சோபனமானது; குணத்தைக் கொடுக்கக்கூடியது; குஹ்யமானது; கெடுதலை நீக்கக்கூடியது.

92. எப்பொழுதும் பரானந்தத்தை விளையச்செய்கிறது; கோடிசூரியர்களுக்கு ஸமமானது; பழமையான புண்யசீலர்களுடைய மோக நாசத்தின்பொருட்டு என்னால் நிர்மாணிக்கப்பட்டது.

93. அதிபிரியமான இந்த ஸ்தானம் வேதமறிந்த ஆஸ்திகர்களால் பூஜிக்கப்பட்டது; முக்தியை யளிப்பது; எப்பொழுதும் என்னாலும் ஸேவிக்கப்பட்டது.

94. இந்தவிடத்தில் அதிசோபனமானதும், பரமானதும், ஸத்ய போத ஸுக வஸ்துவை போதிப்பிக்கிறதும், பக்தசித்த ஹிருதயத்திலிருக்கப்பட்டதுமான நர்த்தனத்தை வியக்தமாகச் செய்கிறேன்.

95. சிரேஷ்டையான பார்வதீயும், விநாயகரும், ஷண்முகரும், நல்லயசஸுடைய பிரபுவின் அந்தரங்க ஜனங்களும் இவ்விடத்தில் பிரியமான என் நர்த்தனத்தை ஸ்வயமே பார்க்கிறார்கள்.

96. நீயும், பிரஹ்மாவும், புரந்தரனும், சிரேஷ்டையான ஸரஸ்வதீயும் என்பிரஸாதத்தாலுண்டான கண்களால் இவ்விடத்தில் என் நர்த்தனத்தைப் பார்த்தார்கள்.

97. சப்தஜாலத்தில் மோகத்தை யடைந்தவர்களும், தர்க்க ஜாலத்தால் மோகமடைந்தவர்களும், பக்தியற்ற ஜனங்களும் இவ்விடத்தில் நர்த்தனத்தை பார்க்கமாட்டார்கள்.

98. வேத மார்க்கத்திலில்லாதவர்களும், கேவலம் பசு ஜனங்களும் பார்க்கமாட்டார்கள்: இவ்விடத்தில் பக்தியுடன் கூடியவர்களே ஸத்தியமாக தாங்களே நர்த்தனத்தைப் பார்ப்பார்கள்.

99. இவ்விடத்தில் நர்த்தனத்தைப் பார்த்து மானிடர்கள் யாகங்களால் ஸ்வர்க்கலோகத்தைக்கூட இச்சிக்கமாட்டார்கள்; வித்யையினால் நித்திய, சுத்த ஸுக ஸத்ய சித் கனமான பிரஹ்ம முக்தியையும் அடைய இச்சிக்கமாட்டார்கள்.

100. நர்த்தனத்தைப்பார்க்காத ஜனங்கள் புழுவுக்கு ஸமானம்; அவர்களுக்கு புண்யமடைவது கஷ்டம்; இது ஸத்யமாய் என்னால் சொல்லப்பட்டது.

101. இவ்விடத்தில் நர்த்தன தர்சனம் செய்யாதவர்கள் அந்திய ஜர் (கீழ் ஜாதியார்); அவனுடைய ஜன்மம் பயனற்றது; ஹே! ஹரியே! மனிதன் மோகத்தால் எப்படி பீடிக்கப்பட்டிருக்கிறான்! ஆச்சரியம்!

102. அதிகமாகச் சொல்வது என்ன பிரயோஜனம்! என்னால் ஆதரிக்கப்பட்ட இந்த புரம் விசித்திரமானது; முக்தியைக் கருதும் புண்யாத்மாக்களுக்கு முக்தியைக் கொடுக்கக்கூடியது; எல்லாவற்றிலும் உத்தமமானது.

103. ஸூதர் :—இவ்விதம் கூறிவிட்டு, ஸாம்பனும், ஸம்ஸாரமோசகரும், ஸத்யஞான பாரகருமான மகாதேவர் அவ்விடத்திலேயே மறைந்துவிட்டார்.

104. ஸமஸ்தலோக ஹிதரானவரும், விசுவ ஜகந்நாதருமான விஷ்ணு சிவஸ்தானங்களைக் கேட்டுவிட்டு ஸ்ரீவைகுண்டத்திற்கு சென்றார்.

105. உங்களாலும் வெகுபாக்கியத்தால் சிவஸ்தானங்கள் கேட்கப்பட்டன ; அவைகளை சிரத்தையுடன் மோக்ஷமடைய பஜியுங்கோள்.

106. ஹே ! த்விஜேந்திரர்களே ! ஒருவரான பரமேசுவருடைய எல்லா ஸ்தானங்களும் என்னால் சொல்லப்பட்டன. அவித்யா நிவிருத்தி இச்சையுடன் பிரியமாக பஜிக்கவும்.

---

## அத்தியாயம் 30.

---

### (பஸ்மதாரண வைபவம்.)

1. ஸூதர் :—இனி, இப்பொழுது பஸ்மதாரண வைபவத்தைச் சொல்லுகிறேன் ; இதை அறிவதால் ஒரு மனிதன் பந்தத்திலிருந்து விடுதலையடைகிறான்.

2. தர்மிஷ்டர்களாலும், தத்வத்தையே சிந்தை செய்துகொண்டிருப்பவர்களாலும் பஸ்மம் பலவிதமென்று சொல்லப்பட்டிருக்கிறது ; (ஆனால்) விப்ரர்களே ! மகாபஸ்மம் ஒன்று ; மற்றது ஸ்வல்பம் (சிறியது, கீழ்பட்டது) என்று சொல்லப்படுகிறது.

3. மகாபஸ்மம் என்பது, எல்லா பாபங்களைப் போக்கடிப்பதாலும், வித்யையால் பிரகாசிக்கிறதாலும், மகாமாயையை விளங்கச்செய்வதாலும், மஹாதேவனே.

4. ஹே ! முனிகளே ! வித்யை நேராக வேதத்தால் உண்டானது ; பாக்கியெல்லாம் பந்தத்திற்கு காரணமாதலால் அவித்யையே.

5. எவனுக்கு மகாபஸ்மம் தன் ஆத்மாவாகவே நேராக விளங்குகிறதோ அவனுக்கு பஸ்மத்தினாலும் ஜடை மாவுரிகளா லும் காரியமொன்றுமில்லை.

6. எவனுக்கு பஸ்மம் தன் ஆத்மாவாகவே ஸ்வதமாக விளங்குகிறதோ அவனுக்கு வர்ணாசிரமதர்மங்களால் ஒரு காரியமுமில்லை.

7. எவனுக்கு ஆத்மரூபமாக பஸ்மம் விளங்குகிறதோ அந்த சிரேஷ்டமான யோகிக்கு தபஸாலும், தானத்தாலும் யாகத்தாலும் ஒரு பிரயோஜனமுமில்லை.

8. எவனுக்கு ஸ்வப்பிரகாசமான பஸ்மம் ஸாக்ஷிரூபமாக விளங்குகிறதோ அவனுக்கு வேத, ஸ்மிருதி புராணங்களால் ஒரு காரியமுமில்லை.

9. எவனுக்கு எப்பொழுதும் பஸ்மம் பிரத்யக்ரூபமாக (தனது உள்ரூபமாக) விளங்குகிறதோ அவனுக்கு தீர்த்தயாத்திரை, சிவபூஜைகளால் ஒரு பிரயோஜனமுமில்லை.

10. பஸ்ம ஞானமுடையவன் மகா யோகி, மேலானவன் கிருதகிருத்யன், மேதாவி என்பதில்தடையில்லை; அவன் சிவனே.

11. பழமையான எல்லாவேதங்களும், ஸ்மிருதிகளும், எல்லாபுராணங்களும், பாரதமும் இந்த பஸ்ம ஞானமடையும்பொருட்டு பிரவிருத்தித்ததன்றோ !

12. பஸ்ம ஞானத்திலாழ்ந்திருப்பவனுக்கு செய்யவேண்டியது யாதொன்றுமில்லை ; மாணபரியந்தம் கேவலம் தேகயாத்திரைமாத்திரம் காரியம்.

13. ஸ்வல்பம் என்ற பஸ்மம் பலவிதமாக சொல்லப்பட்டிருக்கிறது ; (வைதீக, ஸ்மார்த்த, லௌகிகபேதங்களால் பலவிதமாகவிருக்கிறது) ; ஒன்று ச்ரௌதம், மற்றொன்று ஸ்மார்த்தம்.

14. இவைகளுள் ச்ரௌதம் முக்கியமென்றும், ஸ்மார்த்தம் அமுக்யமென்றும் சொல்லப்படுகிறது ; கேவலம் லௌகீகமான வேறு பஸ்மமுமுண்டு.

15. ச்ரௌத ஸ்மார்த்த பஸ்மம் த்விஜர்களுக்கு மாத்திரம் ஏற்பட்டிருக்கிறது; மற்றவர்களுக்கெல்லாம் லௌகிக பஸ்மம்.

16. எல்லா அங்கங்களில் பூசிக்கொள்வதாலும், குறுக்காக திருபுண்டிரங்களாலும் பஸ்மத்தை த்விஜர்கள் தரித்துக்கொள்ள வேண்டுமென்று சொல்லப்படுகிறது.

17. த்விஜர்கள் மந்திரங்கள் சொல்லிக்கொண்டு தரித்துக் கொள்ளவேண்டுமென்றும், அன்யர்கள் கேவலமாய் தரித்துக் கொள்ள வேண்டுமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

18. ஜாபால உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கிற 'அக்னி ரிதிபஸ்ம' என்ற முதலான ஏழு மந்திரங்களால் பஸ்மத்தை ஜலத்துடன் குழைத்து பூசிக்கொள்ளவேண்டியது.

19. த்விஜர்கள் 'திரியாயுஷம்' என்ற மந்திரத்தைச் சொல்லி திருபுண்டரதாரணம் செய்துகொள்ளவேண்டியதென்று வேதமறிந்த தர்மிஷ்டர்கள் சொல்லுகிறார்கள்.

20. பிரஹ்மசாரி தினந்தோறும் 'மேதா வீயூயாஸம்', என்ற மந்திரத்தால் ஜலத்துடன் பஸ்மத்தை திருபுண்டரமாக தரிக்கவேண்டியது.

21. கிருகஸ்தனும் வானப்பிரஸ்தனும் 'திரியம்பக' மந்தி ரத்தினாலாவது, பிரணவத்துடன்சேர்ந்த பஞ்சாக்ஷரத்தினாலாவது திருபுண்டரம் தரிக்கவேண்டியது.

22. ஸன்யாஸி மூன்றுதடவை பிரணவத்தை உச்சரித்து, ஹம்ஸமந்திரத்துடன் நித்தியம் திருபுண்டரம் தரிக்கவேண்டு மென்று ஜாபாலச்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறது.

23. நெற்றியிலும், இரண்டுகைகளிலும், மார்பிலும் புத்தி மான் போகமோக்ஷத்தையளிக்கும் திருபுண்டரத்தை தரிக்க வேண்டும்.

24. வர்ணாச்சிரமதர்மத்திலிருப்பவர்களுக்குமந்திரத்தாலும், அது இல்லாமலும், திருபுண்டரதாரணமும், உத்தூலனமும் ஆதரவுடன் ஜாபாலச்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறது.

25. உத்தூலனமும், திருபுண்டரதாரணமும் ஞானத்திற்கு அங்கமென்று யஜுர்வேதசாகையில் சொல்லப்பட்டிருக்கிறது.

26. (என்னவென்றால்) 'இந்த அத்யாச்ரமதர்மத்தை எவர்கள் நன்றாக பின்பற்றுகிறார்களோ அவர்களுக்கே ஸம்ஸார நாசகாரணமான சிவஞானமுண்டு.'

27. அதர்வ வேதசாகையை பின்தொடருகிறவர்கள் உத்தூலனும் திருபுண்டரதாரணமும் மாயாபாச நிவிருத்தியின்பொருட்டு அனுஷ்டிக்கவேண்டுமென்கிறார்கள்.

28. ஆயினும் மாயயை நீக்குவது கேவலம் ஞானத்தாலேயேதான் முடியும்; அக்ஞானத்திற்கு ஞானம் விரோதமே ஒழிய வேறு ஒன்றுமன்று.

29. எவனால் இந்த பாசுபத விருதம் நன்றாக ஆசரிக்கப்படுகிறதோ அவனுக்கு ஞானம் உண்டாகிறது; அதனால் பந்தமோசனம் உண்டாகிறது.

30. கைவல்யசாகிகளும் உத்தூல்னத்தையும் திருபுண்டரதாரணத்தையும் ஞானங்கமாகக் கருதுகிறார்கள்.

31. ஆதலால் முமுக்ஷு பந்தவிமோசனத்திற்கும் ஞானமடையும்பொருட்டும் இந்த விருதத்தை நன்றாக ஆசரிக்க வேண்டியது.

32. அக்னி ஜலம் பிருதிவி முதலியவைகளினின்றும் சிரேஷ்டமான விபூதி உண்டாகிறது; (இந்த பூததிரவியங்களும் ஞானஸாதனங்கள் என்று சாங்தோக்ய உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கிறது; இவைகளிலிருந்து உண்டாகும் பூதியும் ஞானஸாதனமென்பதுசரியே); ஆனதால் முமுக்ஷு ஞானசித்தியின் பொருட்டுபஸ்ம உத்தூலனத்தையும், திருபுண்டரதாரணத்தையும் அனுஷ்டிக்க வேண்டியது.

33 மோக்ஷத்தையடைய இச்சிக்கிறவன் பிரமாதத்தால் கூட இந்த அனுஷ்டானத்தை விடக்கூடாதென்று ச்ருதிசொல்லுகிறது.

34–45. (இந்த அனுஷ்டானம் செய்வதால் கிடைக்கும் ஸித்திகளும், செய்யாவிடில் உண்டாகும் கெடுதல்களும் சொல்லப் படுகின்றன). பஸ்ம உத்தூலனமும் திருபுண்டரமும் மகாபாபங் களைப் போக்கடிக்க கட்டாயம் வேண்டுமென்று வேதச்ருதியின் கட்டளை; எல்லா ஜந்துக்களின் ரக்ஷணையின் பொருட்டும், எல் லோருடைய மங்களத்திற்காகவும், எல்லோரும் சுத்தியடையும் பொருட்டும், மகேசுவரனுடைய லிங்கமாகவும் (குறிப்பாகவும்), எல்லாவற்றின் குறிப்பாகவும், ஸ்நாநமாகவும், விருதமாகவும், தானமாகவும், தபஸாகவும், யக்ஞமாகவும், மனிதனுக்கு ஸர்வ தர்மமாகவும் இந்த பஸ்ம விருதம் செய்யக்கடவதென்று ச்ருதி கட்டளையிடுகிறது.

46–49. சிவனாலும், விஷ்ணுவாலும், பிரஹ்மாவினாலும், இந்திரனாலும், தேவர்களாலும், உமாதேவியாலும், லக்ஷ்மியா லும், ஸரஸ்வதியினாலும், மற்றுமுள்ள ஆஸ்திகர்களாலும், எல் லாஸ்திரீகளாலும், யக்ஷராக்ஷஸ கந்தர்வஸித்த வித்தியாதர்களா லும், பிராஹ்மணர்களாலும், க்ஷத்திரிய வைச்ய சூத்திரர்களா லும், கலந்த ஜாதியார்களாலும், ஜாதிபிரஷ்டர்களாலும் பஸ்மதா ரணமும் திருபுண்டரமும் தரிக்கப்படுகின்றன.

50. உத்தூலனத்தையும் திருபுரண்டரத்தையும் எவர்கள் நன்கு எப்பொழுதும் ஆசரிக்கிறார்களோ அவர்களே சிஷ்டர் களும் வித்வான்களாலும் ஆவார்; மற்றவர் ஆகார்.

51. சிரத்தையுடன் இதை பின்பற்றாதவர்களுக்கு கோடி ஜன்மமெடுத்தாலும் ஸம்ஸாரத்திலிருந்து விடுதலை கிட்டாது.

52-54. இதை ஆசரியாதவர்களுக்கு நூறுகோடி கல்பங் களானாலும் சிவஞானம் உண்டாகாது; வர்ணாசிரம தர்மத்துடன் சேர்ந்த நல்நடக்கை உண்டாகாது; ஆசரியாதவர்கள் மகாபாபி கள் இதுதான் சாஸ்திர நிர்ணயம்.

55. இதை ஆசரியாதவர்கள் செய்யும் காரியமெல்லாம் கெட்டபலனைக் கொடுக்கும்.

56. பூர்வஜன்மங்களில் செய்த கொடியபாவங்களால் ஜந்துக் களுக்கு இந்த ஆசரணையில் த்வேஷம் திருடமாக உண்டாகிறது.

57. திருபுண்டர உத்தூலனத்தில் எவர்களுக்கு சிரத்தையில்லையோ அவர்கள் உபபாதகதோஷத்தால் துஷ்டர்களே யாவார்கள்.

58. இதைப்பார்ப்பதிலும், கேட்பதிலும் எவர்களுக்கு பிரியமுண்டாகவில்லையோ அவர்கள் மகாபாபிகள்.

59. எவர்களுக்கு பஸ்மதாரணத்திலும், அதன் பிரமாணத்திலும் கோபமுண்டாகிறதோ அவர்கள் மகாபாபிகள் என்பது என் நிச்சயமான எண்ணம்.

60–61. என்னுலாகிலும், என்குருவாலாகிலும், பிரஹ்மாவினுலாவது, விஷ்ணுவாலாவது, ருத்திராலாவது, நூறுகோடி கல்பங்களானும், பஸ்மதாரணமகிமையைச் சொல்லமுடியாது.

62. ஹே! முனீந்திரர்களே! மோகத்தினுடைய பெருமையைப்பாருங்கள்! ஹே! பிரஹ்மவித்துக்களே! நரர்கள் பஸ்மத்தை விட்டுவிட்டு தங்களிஷ்டப்படி மற்றதை யனுஷ்டிக்கிறார்கள்.

63, ஸமஸ்த ஜகத்திற்கு நன்மைபயக்கும் இந்த அதிரகஸியமான பஸ்மமகிமையை என்னுல் சொல்லப்பட்டது; மனிதர்கள் ஸந்தோஷத்துடன் இதைக்கைகொண்டால் ஜன்மம் ஸபலமாகும் என்பதில் ஸந்தேகமில்லை.

---

## அத்தியாயம் 31.

---

### (சிவப்பிரீதிசெய்யும் ஜீவபிரஹ்ம ஐக்கியஞானம்.)

1. ஸூதர் :—ஹே! விப்ரேந்திரர்களே! இப்பொழுது நான் சிவனைப் பிரீதிசெய்வதை ஸந்தோஷமாகச் சொல்லுகிறேன்; இந்த சோபனமானதை சிரத்தையுடன் கேட்கவும்.

2–20. எப்பொழுதும் தேவதேவரான சிவனுக்கு பிரீதிசெய்யக்கூடியது (அடியிற்கண்டவை); வேதத்தை யறிவதால் உண்டாகும் நிர்மலமான ஜீவபிரஹ்மஐக்கியஞானம்; வேதாந்த வாக்கியத்தால் ஜனிக்கும் எல்லாம் பிரஹ்மம் என்ற ஞானம்;

ஸாம்பமூர்த்தியான சிவனுடைய தியானம்; நர்த்தனம்செய்து கொண்டிருக்கிற தேவனுடைய தியானம்; ஆதரவுடன் சிவன் சங்கரன், ருத்திர முதலிய சப்தங்களின் அப்பியாசம்; சிவபக்தியும் குருபக்தியும்; ஸ்துதி, ஸ்மிருதி புராணங்களில் விசுவாசம்; வேதவேதாந்தங்களைப் படிக்கிறதும், படிப்பிவித்தலும்; வேத வேதாந்தவாக்கியங்களின் தாத்பரியத்தை நிரூபித்தல்; ஜாபாலச்ருதியில் சொல்லியபடி திருபுண்டர உத்தூலனம், கழுத்திலாவது, தலையிலாவது, கையிலாவது ருத்திராக்ஷம் தரிப்பது, வேதத்தில்சொல்லிய வழிப்படி லிங்கத்தில் சிவார்ச்சனம்; ஆதரவுடன் காசிமுதலிய விடங்களுக்கு யாத்திரைசெய்தல்; சாந்தமடைதலும், தாந்தமடைதலும், முமுக்ஷுத்வம் அடைதலும்; நித்யாநித்யஞானமும், திடமான வைராக்கியமும்; யக்ஞ, ஞான, தபஸ்செய்தலும், தனது ஆசிரமத்தைக் காப்பாற்றுதலும், ஸ்வஜாதிக்குறிய ஆசாரங்களை அனுஷ்டிப்பதும், அயல் ஆசாரங்களை விலக்குவதும்; செய்யக்கூடாத கர்மங்களை நீக்குவதும், கெட்டகாரியங்களை விட்டுவிடுதலும்; மற்ற மார்க்கங்களை தூஷிக்காமல் எல்லா பூதங்களிடத்தில் தயையுடனிருப்பதும் தேவதேவருக்குப் பிரீதியைச் செய்யும்.

**21.** திவிஜர்களுக்கு சுச்ரூஷைசெய்வதும், அதிலும் விசேஷமாக ஞானிகளுக்குச் செய்வதும் சிவப்பிரீதியை உண்டாக்கும்.

**22.** எப்பொழுதும் சிவஞானநிஷ்டையிலிருக்கும் குருவுக்கு சுச்ரூஷை செய்வது சிவனைப்பிரீதிசெய்வதில் முக்கியமானது என்பதில் ஸந்தேகமில்லை.

**23.** முன்னொருகாலத்தில் வெகு சுந்திரமுள்ள ஒரு குயவஸ்திரீ இருந்தாள்; அவள் தன் ஆசைகொண்டு மூவாயிரம் பிராமணர்களைக் கொலைசெய்து மகாதனவதியாகி, மாயையால் பீடிக்கப்பட்டவளாய், கர்வத்துடன் இஷ்டப்படி புவியில் விப்ரர்களுடன் சேர்ந்தாள்.

**24–28.** ஞானவானும், நிச்சலபுத்தியுடனும் கூடியவராயுமுள்ள ஒரு மகாயோகி, க்ஷேத்திரப்பெருமையை யறிந்தவராய்,

சிவஸ்தானங்களில் சிரேஷ்டமான தக்ஷிணகைலாஸத்தில் சிரத்தையுடன் வஸிப்பதற்காக அவ்விடம்சென்றார்.

அவரைப்பார்த்து, அவள் தன் போகத்திற்காக அந்த தபஸ்வியை நமஸ்கரித்து, ஸந்தோஷத்துடன் தனது வீட்டிற்கு அழைத்துக்கொண்டுபோய், அவருக்கு ஸ்நானம்செய்துவைத்து, வஸ்திரம்முதலியது கொடுத்து, போஜனம்செய்துவைத்து, சந்தனம் முதலியவைகளால் அவரை அலங்காரம்செய்து, தாம்பூலம் கொடுத்து பிரயமாக அவடன் போகம் செய்தாள்.

29–30. அந்த ஞானவானன போகியும் அதிகபிரீதியடைந்தவராய் அவளுடன் வெகுகாலம் தக்ஷணகைலாஸத்தில் வஸித்தார்.

31. தேவதேவரான சிவனும் அவளுடைய சுச்ரூஷையால் மகாபிரீதியடைந்து, அவளுக்கு ஞானபூர்வகமாக பரமகைவல்யத்தை, அளித்தார்.

32. அனேகர் ஞானநிஷ்டர்களுக்கு கைங்கர்யம் செய்வதால் சிவனுடைய பிரீதியைப்பெற்று சீக்கிரத்தில் ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுதலையடைந்திருக்கிறார்கள்.

33. ஆதலால் சொல்லப்பட்டவைகளுள் சிவயோகிகளுக்கு சுச்ரூஷை செய்வதே நேராக சிவப்பிரீதியைக் கிட்டச்செய்யுமென்று வேதார்த்த ஸங்கிரகம்.

34. ஆகையால் த்விஜர்களே! சிவப் பிரீதிகரமானதை விசாரித்து, நான்சொல்லிய மார்க்கத்தால் எப்பொழுதும் சிவனை பிரீதிசெய்யவும்.

---

## அத்தியாயம் 32.

---

### (பக்தியற்றிருப்பதற்கு காரணம்.)

1. ஸூதர் :—இனி மனிதர்களுக்கு மகாதேவரிடத்தில் சிரத்தையில்லாமலிருப்பதற்கு காரணம்சொல்லுகிறேன் ; சிரத்தையுடன் கேட்க.

2. முன்னொருகாலத்தில் பிராணிகளின் கர்ம்மவசத்தாலும், காலவிபரீதத்தாலும், பன்னிரண்டுவருஷம் இந்திரன் மழை வருஷிக்கவில்லை.

3. புவியில் மழையில்லாததால் பஞ்சம் உண்டாயிற்று. எல்லாபிராணிகளுக்கும் கொடுமையான க்ஷுத்பீடை உண்டாயிற்று.

4. அன்னவாஞ்சையால் மனிதர்கள் கெட்டவர்களாய், மனிதர்களையே சிலர் மோகத்தால் கொலைசெய்து புஜித்தார்கள்.

5. சிலர் மோகங்கொண்டு தங்கள் சக்திக்கு தக்கபடி பசுவையும், ஆட்டையும், குதிரைகளையும், யானைகளையும் கொன்று புசித்தார்கள்.

6. சிலசிரேஷ்டர்களான பிராஹ்மணர்கள் மேன்மையாயும் புண்யமாயுமுள்ள கௌதமருடைய ஆச்ரமத்திற்குச் சென்றார்கள்.

7. தன்னுடைய தபோயோகத்தாலும். சங்காருடை பிரஸாதத்தாலும் அந்த கௌதமருடைய ஆச்ரமம் சீக்கிரத்தி ஸுபிக்ஷகமாயிற்று.

8. முனிசிரேஷ்டரான கௌதமரை அவர்கள் அடைந்து, நமஸ்கரித்து, துக்கத்துடன் கருணையுடைய கௌதமரிடம் (அடியில் கண்டபடி) சொன்னார்கள்.

9. "நாங்களெல்லோரும் பசியால் பீடிக்கப்பட்டிருக்கிறோம்; கேவலம் கிருபைகொண்டு எங்களை ரக்ஷிக்கவேண்டும்."

10. இவ்விதம் கோரப்பட்ட மகாகருணையுடைய கௌதமர் எல்லா பிராஹ்மணர்களுக்கும் அபயபிரதானம் அருளினர்.

11–12 புத்திர பார்யைகளுடன் கூடிய விப்ரர்களுக்கு அந்த கௌதமமுனிவர் தான்யம், தனம், வஸ்திரம், எள்ளு, எண்ணெய், பசுக்கள் இவைகளெல்லாவற்றையும் கொடுத்தார்; மற்ற ஜந்துக்களுக்கும் வேண்டியவைகளைத் தந்தார்.

13. அந்த பிராஹ்மணர்களுக் குண்டான ஆதிவியாதி அஸ்திரசஸ்திரமுதலியபீடைகளை கௌதமர் நிவாரணம்செய்தார்.

14. அந்த பிராஹமணர்களுக்கு கேவலம் கருணையை முன்னிட்டுகௌதமரால் ச்ரௌத ஸ்மார்த்த ஆசாரங்கள் போதிக் கப்பட்டன.

15. இவ்விதம் வெகுகாலம் சென்ற பிறகு கௌதமருடைய தபஸால் பூமியில் ஸுபிக்ஷம் உண்டாயிற்று.

16–18. கௌதமரால் இப்படி இரக்ஷிக்கப்பட்ட பிராஹ மணர்கள், இதை யறிந்தவர்களாய், தங்கள் தேசத்திற்குப்போக உத்தேசம்முள்ளவர்களாய், நன்றியற்ற கெட்ட புருஷர்களான இவர்களால், மகா மோகவசத்தால், கௌதமரால் கோஹத்தி செய்யப்பட்டதென்று பொய்யான வார்த்தையை ஏர்ப்படுத்தி சபிக்கத்துவக்கினார்கள்.

இதையறிந்த ஸ்ரீமான் கௌதமர் மகாகோபங்கொண்டு அந்த பிராஹ்மண அதமர்களை சபித்தார்.

19–23. கௌதமர் :—ஹே ! பிராமண அதமர்களே ! மகாதேவஸ்வரூபத்திலும், அவருடைய விக்ரஹத்திலும், பக்தியிலும், நாமத்திலும், ஞானத்திலும், பிரஸாதமடைவதிலும், ஸ்தானத்திலும், கீர்த்தியிலும், தானத்திலும், அவருடைய ஆலயங்களிலும், மேன்மையிலும், திருபுண்டர உத்தூலணத்திலும், ருத்திராக்ஷம் தரிப்பதிலும், ருத்திரலிங்க பூஜையிலும், ருத்திராலய தரிசனத்திலும், ருத்திரயாத்திரைமுதலிய காரியங்களிலும், ருத்திரஸம்பந்தான எவ்விஷயத்திலும், நீங்கள் எப்பொழுதும் சிரத்தையற்றிருக்ககடவீர்கள்.

24–30, மேலும் ஹே ! நிக்ருஷ்ட பிராஹ்மணர்களே ; நித்யகர்மம் செய்வதிலும், காம்மிய கர்மத்தை நீக்குவதிலும், சாந்தி தந்திமுதலிய ஞானஸாதனங்களிலும், வேதமோதுவதிலும், ஜபத்திலும், பிரவசனத்திலும், பலவிதமான யக்ஞங்களிலும், கிருச்சிர சாந்திராயணமுதலிய விருதங்களிலும், மாஸ உபவாஸத்திலும், தெய்வபக்தியிலும், ஆஸ்திகக்யக்தியிலும், யமமுத

வியயோக அங்கங்களிலும், ச்ருதி ஸ்மிருதி புராணங்களின் அர்த்தங்களிலும், நீங்கள் சிரத்தையில்லாம லிருக்கக்கடவீர்கள் !.

31. மேலும் ஹே ! கொடிய பிராஹ்மணர்களே ! தன் பார்யையிடம் புணர்வதிலும், பரஸ்திரீகளைத் தள்ளுவதிலும் எப்பொழுதும் சிரத்தையற்றவர்களா யிருக்கவும் !

32. ஹே ! பிராஹ்மணதமர்களே ! சங்கரரைவிட விஷ்ணு முதலிய தேவர்களெல்லாம் சிரேஷ்டர்களென்ற பிராந்தி ஞானத்துடன் கூடியவர்களா யிருக்கவும் !

33. சங்கம், சக்கிரம், கதை, பத்மம், தண்டம், பாசம், அங்குசம் இவைகளால் தேகத்தில் சிரத்தையுடன் குறிதரித்துக் கொண்டிருக்கக்கடவீர்கள் !

34. ஹீனஜாதியாருடைய நாமங்களையும் ரூபங்களையும் சிரத்தையுடன் தரித்துக்கொள்ளக்கடவீர்கள் !

35. பிரஹ்மணதமர்களே ! வட்டமாயும், அரசயிலைபோலும், அர்த்தசந்திரன்போலும், தீபம்போலுமுள்ள, குறிகளை சிரத்தையுடன் நெற்றியில் தரித்துக்கொள்ளக்கடவீர்கள்.

36. எப்பொழுதும் பிதா, மாதா, புத்திரன், பிராதா, பார்யை, பந்துக்கள் முதலியவர்களை விக்கிரயம் செய்துகொண்டிருக்கக்கடவீர்கள் !

37. ஹே ! கொடிய விப்ரர்களே ! தேவ, தீர்த்த, வேத விக்கிரியங்கள் எப்பொழுதும் செய்யக்கடவீர்கள்!

38. ஸுரை, மாம்சம், மத்ஸியம் இவைகளையும் எப்பொழுதும் விக்கிரியம் செய்யக்கடவீர்கள்.

39. பாஞ்சராத்திரத்திலும், காபால மதத்திலும், காலாமுகத்திலும், சக்திமதத்திலும் எப்பொழுதும் தீக்ஷையுள்ளவர்களாகவிருக்கக்கடவீர்கள் ;

40. பௌத்தமதத்திலும், பார்ஹஸ்பத்தியத்திலும், பாசுபதத்திலும், சாம்பமதத்திலும் தீக்ஷைபெற்றிருக்கக்கடவீர்கள் !

41. ஹே ! பிராமணதமர்களே ! ச்ரௌதமார்க்கமல்லாத பாஷண்டத்திலும் மற்றுமுள்ள மார்க்கத்திலும் சிரத்தையுடன் தீக்ஷையடைந்திருக்கக்கடவீர்கள் !

42. எல்லாஸ்திரீகளுடன் கூட உங்கள் வம்சத்தில் உண்டாகிறவர்கள் நான் சபித்துச் சொன்னபிரகாரம் இருக்கட்டும்.

43-44. அதிகமாகச்சொல்வதில் என்ன பிரயோஜனம். என்னுல் கொடுக்கப்பட்ட சாபம் யாதெனில், ஸம்ஸாரமோசகரான ஸாக்ஷாத் சிவனிடத்திலும், அவர் சம்பந்தமான சுருதி ஸ்மிருதி முதலியவைகளிலும் உங்களுக்கும், உங்கள் வம்சத்தில் உதிப்பவர்களுக்கும் எப்பொழுதும் சிரத்தை யில்லாமலிருக்கக்கடவது !

45. ஸூதர்:— இவ்விதம் முனீந்திரரால் சபிக்கப்பட்ட த்விஜாதமர்களும், அவர் குலத்திலுதித்த எல்லோரும் அந்த முனியின் பிரபாவத்தால் அப்படியே ஆனுர்கள்.

46. இக்காரணத்தால் நரர்களுக்கு ருத்திரனிடத்திலும் அவருடைய தர்மத்திலும் சிரத்தையற்றுப் போய்விட்டது; ஆகையால், வித்வான் அந்த அச்சிரத்தை நாசமாகும்பொருட்டு சிரத்தையுடன் நித்தியம் ருத்திரனை பூஜிக்கவேண்டும்.

47. ஹே ! பாபமற்ற முனிகளே ! ஆஸ்திக உத்தமர்கள் திருபுண்டர உத்தூலனத்தை ஆசரிக்கவேண்டும் ; விசேஷமாக சங்கரனை யறிவதில் முயன்றிருக்கவேண்டும். இவ்விதம் பாக்கியில்லாமல் எல்லாம் என்னுல் சொல்லப்பட்டது.

---

## அத்தியாயம் 33.

---

### (பாதத்வநாம விசாரம்.)

1. ஸூதர்:—இனிபரதத்வத்தின் நாமங்களைச்சொல்லுகிறேன் ; இவைகளை சங்கீர்த்தனம்செய்கிற மனிதன் முக்திபலத்தை யடைவான்.

2-25. (பரதத்வத்தின் நாமங்களாவன) சிவன், ருத்ரன், மஹாதேவன், சங்கரன், பிரஹ்மம், ஸத், பரம், சம்பு, ஈசானன்,

ஈசன், சூலீ, சந்திரகலாதரன், சர்வன் (கெட்டவர்களை ஹிம்ஸை செய்கிறவன்), பசுபதி, ஸாக்ஷி, ஹரன், ஸ்ரீகண்டன், அத்புதன், உக்ரன், கபர்த்தீ (ஜடையுடையவன்), கிரிசன், பவன், ஸர்வக்ஞன், ஈசுவரன், உமாபதி, கபர்த்தீ, பூதேசன், திருபுராந்தகன், அந்தகாரி, த்ருநேத்திரன், தக்ஷயக்ஞவிநாசன், தூர்ஜடி, வாமதேவன், ஸ்தாணு, ஸர்வவிநாசகன், ஸிருஷ்டா, பாலகன், தத்புருஷன், பிரபு, வாமதேவன், கபாலீ, ஸத்யோஜாதன், ஸமன், ஸுகீ, அகோரன், ஸுகோரன், பிரசாந்தன், பாபநாசகன், பவாரி, போகதன், புண்யன், காமத்வம்ஸி, கபிஞ்சரன், வியோமகேசன், விசாலாக்ஷன், வஹ்நிரேதன், வரப்பிரதன், பீமன், பர்க்கன், பிநாகி, விருஷாங்கன், காலகூடதிருக், கிருத்திவாஸன், கிராதன், பிக்ஷுகன், மூலகாரணம், அஹி (எங்கும் செல்லுகிறவன்), புத்னியன் (அந்தரிக்ஷத்திலிருப்பவர்), விரூபாக்ஷன், விரூபன், விசுவவேஷதிருக், சிபிவிஷ்டன் (ரச்மிகளால் சூழப்பட்டிருக்கிறவன்), மஹாதேவன், கணேசன், பார்வதீபதி, மிருடன் (சந்தோஷமுற்றவன்), மேருதரன், மேதா, மஹாமாயீ, மஹேச்வரன், ஸர்வாதிஷ்டானம், ஸர்வாதாரம், ஸர்வாதிகாரணன், ஸ்வராட், ஸர்வேசுவரன், ஸர்வநிதி, ஸர்வாத்மா, ஸர்வஸாதகன், சேது (கரை), ஸீமா (எல்லை), ஸமுத்ரம், விசஷ்டன், விதாரகன், ஜன்மாதி காரணம், ஹேது, சாஸ்திரயோநி, ஸுகாஸனன், தத்ஸம (தனக்கு சமம் தானே), அதிகன், அஸங்கன், ஆத்மா, அமலஸாதனம், புராணன், புருஷன், பூர்ணன், அநந்தரூபன், புராதநன், ஸத்யம், ஞானம், ஸுகம், ஆகாசம், பிராணன், ஜ்யோதி, பிரகாசம், பிரதிதன் (பிரதாபமுடையவன்), ஸ்வயம்பானன், ஸ்வயம்பிரபு, ஸ்வபிரகாசன், ஸ்வதந்திரன், ஸ்வஸ்தன், ஸ்வானுபவன், அகமன், அத்தா, அனசனன், சங்கு, பரமாத்மா, பராத்பரன், தேவதேவன், தேவன், ஜகந்நாதன், நிரஞ்சனன், நிர்பயன், நிர்குணன், நித்யன், நித்யாநந்தன், நிராமயன், விதன் (அறிகிறவன்), விதாதி (ஸர்வக்ஞன்) வேதாந்தன், தேவதா, பரதேவதா, பதி, பாசஹரன், பாரன், பாரசூன்யன், பிரஜாபதி, தாதா, தாரபிதா, திருஷ்டா, தாம, தாமவிவர்ஜிதன், புவனேசன், ஸபாநாதன், ஸபாபதி, அதிபிரபு,

ஸப்யன், ஸ்துத்யன், ஸமஸ்தாத்மா, ஸாம்பன், ஸம்ஸாரவர்ஜிதன், ஸம்ஸாரவைத்யன், ஸத்யார்த்தன், ஸாரன், ஸம்ஸாரபேஷஜம் ஸம்ஸாரமோச்சகன், மோச்சியன், முக்தன், மூலதனம், முனி, மஹர்ஷி, மஹாகிராஸன், மஹாத்மா, மதுரன், ஸூரன், ஸூரஜ்யேஷ்டன், விரூபாக்ஷன், விச்வரூபன், விநாயகன், விச்வாதிகள், வேத்யன், வேதார்த்தன், விகதஸ்பிருஹன், அஹம்அர்த்தன், அப்பிரமேயன், தத்வம், உத்தம நிர்வாணம், கைவல்யம், பதம், அவ்யக்தம், காலகாலன், கோமலன், அந்தர்யாமீ, ஸமாஹாரன், ஸோமன், ஸௌக்யம், ஸூஹிருத், ஸூதா, அதிருச்யன், திருசியநேதா, நேத்திரம், திருஷ்டி, தர்சனம், திருக்திருஷ்டி, பவமானன், வசீ, வைச்வாநரன், நரன், மூலாசாரியன், முகுந்தேசன், மூலம், ஆயதநம், மஹான், தஹரன் (தஹராகாசஞானத்தால் அடையக்கூடியவன்), திவ்யன், அத்வைதம், அநாக்யம், வாஸ்தவவஸ்து, பூமா (பெரிது), போஜயிதா, போக்தா, ருசி, பஸ்ம, அநபூ, ரஸன், 'ஹ'காரம், 'ஹூம்'காரம், 'பட்', கிரஸ்தன், ஹார்தன் (ஹிருதயத்திலிருப்பவன்), ஹிருத்பாவநன், அவதி (முடிவு).

26. இந்த நாமங்கள் ரூடியினுலே (வாச்சியார்த்தத்தாலேயே) ஆதிதத்வமான மஹேசனிடத்தில் குறிப்புடையன; நாராயண, ஹரி, முராஜித், வாஸுதேவன் முதலிய சப்தங்கள் அப்படியன்று (குறிப்புடையனவாகா); இவை (சொற்பொருளல்லாத) யோகத்தால் (பரம்பரா அர்த்தத்தால்) பரதத்வத்தை வெகு பிரயாஸத்துடன் குறிக்கும்; ஆகையால் முற்கூறிய நாமங்களை களங்கமற்ற புத்தியுள்ளவன் எப்பொழுதும் கீர்த்தனம்செய்யவேண்டும்.

27. 'சிவன்' முதலிய சப்தங்களை விலக்கி 'நாராயணன், விஷ்ணு' முதலிய சப்தங்களைச் சொல்லுகிற மனிதர்களுக்கு மோக்ஷம் கிடைக்காது; (ஆனுல்) ஐச்வரியமுண்டாகி கிரமமாக முக்தி கிட்டும்.

28. முக்கியமான இந்த சப்தங்களை கீர்த்தனம் செய்கிறவர்கள் அப்பொழுதே பரமபதத்தையடைகிருர்கள்; அப்பொழுதே

ஸகல லோகத்தை யடைகிறார்கள்; இது என்றால் ஸத்தியமாகச் சொல்லப்படுகிறது.

29. நித்தியஸுக ஆத்ம ஸ்வரூபநித்தில் தன்னுடைய மாயையால் எல்லா நாமங்களும் கல்பிதங்கள்; அப்படியிருந்தாலும் சிவனுடைய ஸங்கல்பத்தால் 'சிவ' முதலிய சப்தங்கள் முக்கியங்களாக விருக்கின்றன.

30. இந்த முக்கிய சப்தங்களை ஜபிக்கிறவன் ஸத்யமாகவே பரமேச்வரனாகிறான்; அவனுடைய முககமலத்தில் பார்வதியுடன் பரமேச்வரன் நர்த்தனம் செய்கிறான்.

31. 'தேவன், ருத்ரன், சிவன், சங்கரன்' முதலிய சப்தங்களில் பாபாக்னியால் தகிக்கப்பட்ட மனதுடையவன் க்ரோதமடைகிறான்; ஐயோ! அந்த நரன் புழுமுதலிய ஜன்மத்தை யடைவான்!.

32. அதிகமாகச் சொல்வதில் என்ன பிரயோஜனம்! பரதத்வத்தின் ஆக்ஞையால், பராத்பரத்தின் 'சிவ' முதலிய நாமங்கள், 'விஷ்ணு' முதலிய சப்தங்களைக் காட்டிலும் தானாக விசேஷமாய் விளங்குகின்றன.

33. ஆதலால் எப்பொழுதும் த்விஜன், சோம்பலன்றி, ஸந்தோஷத்துடன் 'நாராயணன்' முதலிய சப்தங்களை விலக்கி 'மஹாதேவன், சிவன்' என்ற சப்தங்களை, அசுபங்களைப்போக்க, ஜபிக்கவேண்டும்.

---

## அத்தியாயம் 34.

---

### (மஹாதேவ பிரஸாத காரணம்).

1. ஸூதர்:—இனி இப்பொழுது மஹாதேவருடைய கிருபையை சீக்கிரம் அடைவதற்கு காரணமாகிய ஸம்பிரதாயக் கிரமத்தைச் சொல்லுகிறேன்.

2–6. புத்திமான், ஸத்யம் திருடாமை தயைமுதலிய எல்லா நற்குணங்களுடன் கூடியவனாப், காமம், க்ரோதம், லோபம், கோட்

சொல் முதலியவை யற்றவனாக விருந்துகொண்டு, உத்தமராயும், கருணையுடையவரும், ஸத்தியத்துடன் கூடினவருமான ஒரு ஆசார்யரை யடைந்து, அந்த மஹாத்மாவை தண்டம்போல் பூமியில் விழுந்து நமஸ்கரித்து, சந்தனம், அகில், கர்பூரமுதலியவைகளால் அத்தேசிகரை பூஜித்து, ஆயிரம் அல்லது இரண்டாயிரம் அல்லது மூவாயிரம் தங்கக் காசுகளாவது, தனமாவது, சக்திக்குத் தக்கவாறு ஸமர்ப்பித்து, சிரத்தையுடன் பலதடவை பூமியில் தண்டம் போல் விழுந்து நமஸ்கரித்து, அந்த பரயோகியினுடைய பாதாம்புஜத்தை சிரஸில் வகித்து, 'ஹே! பகவான்! பிரஹ்மத்தைப்பற்றி உபதேசிக்க' என்று விக்ஞாபனம்செய்து கொள்ளவேண்டியது.

**7–11.** சுபமாயும், நிர்பயமாயும், நிர்ஜனமாயும், ஸமமாயுமுள்ள ஒரு நல்லவிடத்தில், பசுவின் சாணியால் மெழுகி, புஷ்பங்களால் அலங்கரித்து, பூர்ணகும்பங்களை ஸ்தாபித்து, திக்குகளில் தீபங்களை பிரகாசிக்கச்செய்து, தோரணங்களைக்கட்டி, தூபதீபங்களால் வாஸனையுண்டாகச்செய்து சுத்தமான பச்சரிசி அல்லது சுத்தமான வெண்ணிறமான அரிசியால் ஒரு மண்டலத்தை குருவால் சொல்லியபிரகாரம் அமைத்து, இம்மண்டலத்தை மந்திர பூர்வகமாய் புஷ்ப சந்தனங்களால் பூஜித்து, சிரத்தையுடன் குரு பரம்பரைக் கிரமத்தை புத்தியால் சிந்தித்து, அம்மண்டலத்தின் மத்தியில் குரு சிஷ்யனை ஸ்தாபிக்கவேண்டும்.

**12–16.** கைகூப்பிக்கொண்டும், பூர்ணபிரகாசம் நிறைந்த சிவாநந்தத்திலிருப்பதாக பாவித்துக்கொண்டும், தேசிகர் தன் ஆத்மாவால் பரமாத்மாவை ஸாக்ஷாத்கரித்தும், சஞ்சலமற்றவராய் சிஷ்யனையும் தனது ஆத்மாவாக திருடமாய் நிச்சயித்துக்கொண்டும், சாக்ஷியான ஆத்மாவைக் காட்டிலும் அன்னியமாகத்தோன்றுகிறதை தன் ஆத்மாவாகவேதானே சிந்திக்கவேண்டும்.

சஞ்சலமற்ற சிஷ்யனும் ஆரம்பமுதல் மந்திரஜபம்செய்து கொண்டு குருசொன்னவழியாக கிரந்திச்சேதம் செய்யவும். (இந்தவழி பிரபஞ்சஸாரமுதலிய சைவாகமங்களில் சொல்லப்பட்டிருக்கிறது).

கருணையுற்ற ஆசாரியரால் இவ்விதம் செய்யப்பட்டவுடன் மஹாநந்தரும் மகாகருணையுள்ளவருமான மஹாதேவன் தனது ஆத்மபூதமாயிருக்கப்பட்ட பராசக்திமை (சிஷ்யனைக் கிருபை செய்ய) தூண்டிவிடுகிறார்.

17. மகாகருணையுடைய அந்தமஹாதேவியும் பிரசன்னமாகி, சிஷ்யனுடைய சித்ரூபமான ஆத்மாவில் தானாகவே விழுகிறாள்.

18. சக்திவிழுந்தவுடன் சிஷ்யனுடைய ஆத்மாவிலிருக்கிற மாயை தகிக்கப்படுகிறது; இதில்கொஞ்சம்கூட சந்தேகமில்லை.

19–20. எல்லாஸாதனங்களுடன் கூடியும், ஆஸ்திக்கியபுத்தியுடனும், மஹாதேவபக்தியுடன் கூடியும், ஸத்குருபக்தியுடையவனுமிருந்தால், அந்தசிஷ்யனுக்கு கர்மஸாம்யமுண்டாக, அவனுடைய சித்தனத்தில் சாம்பவீசக்தியானது பூராவாக விழுகிறது.

21. அந்த சிஷ்யனுடைய சித்ரூபத்தில் கல்பிக்கப்பட்ட மோகரூபியான மாயை தகிக்கப்படுகிறது; அப்பொழுது அவனுடைய சரீரம் கீழேவிழுந்துவிடுகிறது.

22. சிஷ்யனுடைய தேகம் பூமியில் விழுந்துதேயானால் அவனுக்கு சங்காருடைய பிரஸாதம் உண்டாகியேவிட்டது.

23. எவனுக்கு தேகபாதனத்தை முடிவாகவுடைய பிரஸாதம் உண்டாகிறதோ அவன் கிருதார்த்தனே; அவன் மருபடியும் பிறக்கிறதில்லை.

24. இவ்விதப் பிரஸாதமுள்ளவனுக்கு வேதாந்தவாக்கியத்தால் உண்டாகும் வித்யை, சூர்யவுதயம் இருட்டைப் போக்கடிப்பதுபோல, எல்லா அவித்யையையும் தகித்துப்போடுகிறது.

25. சக்திபாதமில்லாமலிருந்தாலும் ஸத்யவானாயும், குருபக்தியுடனிருந்தால் ஆசார்யனிடத்திலிருந்து உபதேசிக்கப்பட்ட வேதாந்த ஞானத்தால் படிப்படியாக ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுபடுகிறான்.

26. சக்திபாதத்துடன்கூடி எவனுக்கு வேதாந்தவாக்கிய ஜன்ய வித்யை எப்பொழுது உண்டாகிறதோ அப்பொழுதே அவனுக்கு முக்தி என்பதில் ஸம்சயமில்லை.

27. ரஹஸ்யமானதாலும், (குரு) ஆக்ஞை பங்கபயத்தாலும் சக்திபாதத்தின் பிரகாரத்தில் ஒரு ரஹஸ்ய அம்சம் என்னுல் சொல்லப்படவில்லை. (அந்த ரஹஸ்யாம்சம் யாதெனில் பரமேச்வரர் ஸ்வரூபமாகவும், எங்கும் வியாபகமாயிருக்கப்பட்ட ஸம்வித்ரூபியான பராசக்தி எவ்விதம் விழக்கூடும்; சிஷ்யனுடைய ஆத்மாவில் எப்பொழுதுமுள்ள அந்த பராசக்தி பாசஜாலத்தால் மூடப்பட்டு இந்த தீக்ஷாஸம்ஸ்காரத்தால் அந்த பாசஜாலம் நீங்கி தான் பிரகாசிப்பது பதனம் என்று உபசாரமாகச் சொல்லப்படுகிறது).

28. பிரஸாதத்தை இச்சிக்கிறவன் பிரஸன்னனுக குருபக்தியுடன் தினந்தோரும் தனம் முதலியவைகளால் குருபூஜை செய்ய வேண்டும்.

29. சங்கரரால் முன் என்குருவுக்கு சொல்லப்பட்ட உத்தமமும் ரஹஸ்யமுமான இந்த ஸம்பிரதாய வழியானது என்னுல் சொல்லப்பட்டது; சங்கரர் எல்லோருடைய நன்மையிலும் கருத்துள்ளவரன்ரே!.

---

## அத்தியாயம் 35.

---

### (ஸம்பிரதாய பரம்பரை).

1. ஸூதர்:—இனி, இப்பொழுது ஸம்பிரதாய குருபரம்பரை சொல்லுகிறேன்; இதையறிந்தால் ஒரு த்விஜ சிரேஷ்டன் குருவாகிருன்.

2. ஸர்வ பூதங்களுக்கும் ஈசுவரனுன சிவன் தானே எல்லா வித்யைகளுக்கும் ஈசானன்; அவர்தான் ஆதி குருவாயிருக்கிறுர்.

3. அவருடைய சிஷ்யர் ஸர்வ ஞானஸமுத்திரமாகிய மஹா விஷ்ணு; ஸர்வ ஜகத்பிரபுவான பிரஹ்மா இவரிடமிருந்து ஞானத்தை அடைந்தார்.

4–5. பிரஹ்மாவிடமிருந்து பகவான் ஸநத்குமாரர் உபதேசம்பெற்றுர்; ஸர்வக்ஞான ஸநத்குமாரரிடமிருந்து கிருஷ்ண

த்வைபாயன முனி எல்லா ஞானத்தையும் பெற்ருர்; அவரிடம் என்ஞல் உபதேசமடையப்பட்டது; நீங்களெல்லோரும் என்னிட மிருந்து ஞானத்தையடைந்தீர்கள்.

6–7. ஹே! முனிசிரேஷ்டர்களே! இவ்விதம் ஸம்பிரதாய பரம்பரையையறிந்து, இந்த தேசிகர்களை அவரவர் பெயர்சொல்லி நமஸ்கரித்து, முன்சொல்லிய மார்க்கத்தால் ஆசார்யனிடமிருந்து வேதாந்தமறிந்து, ஸத்திய வாக்காயும், குரு பக்தியுடனுமிருந்து அக்ஞான நாசத்தைச் செய்யவேண்டும்.

8. இந்த வித்தியாஸந்ததி ஞானமற்றவன் தேசிகன் ஆனல் அவன் கோரமான நரகத்தையடைகிருன்; இதில் ஸந்தேகமில்லை.

9. வித்யாஸந்ததி ஞானமற்ற குரு ஆகாசத்தை புசித்து பசிநோயை நிவர்த்திசெய்பவனுவான்.

10. வித்யாஸந்ததி ஞானமற்ற தேசிகன் எள் இல்லாமலே மண்ணில் எண்ணெய் உண்டாக்குகிறவனுவான்.

11. வித்யா ஸந்ததி ஞானத்துடன்கூடிய தேசிகன் சிரம மன்றியில் மனிதர்களை ஸம்ஸாரத்திலிருந்து கரையேற்றுகிருன்.

12–14. பிராக்ஞன தேசிகன் தன்னுடைய கோத்திர ரிஷி யை நமஸ்கரித்து, குருசொன்ன மார்க்கமாய் தன்னுடைய குரு வையும் நமஸ்கரித்து, குருவிற்குருவை சிரத்தையுடன் நமஸ்கரித் து, விக்னேசுவரரையும், ஷண்முகரையும், வித்யாஸ்வரூபியான உமையையும், பிரஹ்மா விஷ்ணு முதலிய மற்றுமுள்ள எல்லா தேவர்களையும் நமஸ்கரித்து, சிஷ்யனுடைய புத்திபக்குவத்தை நன்ருய் பரிசோதித்து அவித்யா பாசச்சேதம் செய்யவேண்டும்.

15. மேலும், ஹே! ஆஸ்திகர்களே! சிஷ்யனுடைய சித்த பரிபாகத்தை அறிந்து, அதற்குத்தக்கபடி இந்த மகேச்வரீ வித்ய யைச் சொல்லவேண்டும்.

16. மூர்க்க சிஷ்யனுக்கு உபதேசிப்பதாலும், வித்யா கர் வத்தாலும், குருதுரோகத்தாலும் ஒருவன் ஸர்வக்ஞனுயிருந்தா லும் அறியாமையான கிணற்றில் கீழேவிழுவான்.

17. ஆதலால் ஒரு வருஷம் சிஷ்யனை பரீக்ஷித்து, வித்யாபி விருத்திக்காக, இந்த வைதிக வித்யயை ஒழுங்காக சொல்லிக் கொடுக்கவேண்டும்.

18. ஈசுவரனுடைய கட்டளையால் தேசிகனுக்கு வித்யா ஸந்ததிஞானமும், சிஷ்யசித்த பரீக்ஷையும் கட்டாயம் வேண்டியவை.

19. ஸம்பிரதாயமற்ற வித்யை அவித்யையேதவிர வித்யையன்று; இது தத்வவித்துக்களின் நிச்சயம்.

20. குருபாம்பரா ஞானம் பரவித்யையயடைய பிரவிர்த்திக்கச்செய்யும்; பாரம்பர்ய ஞானத்தால் வித்யை அதிக வீர்யமாயிருக்கும்.

21. பாரம்பர்ய விக்ஞானத்தால்தான் ஸம்ஸாரபாசம் அறுபடவேண்டும்; ஆதலால் புத்திமான் தன் வித்யாஸந்ததி ஞானமுற்றவனாகவேண்டும்.

22. எவ்விதம் (லோகத்தில்) கோத்திர ஞானம் விவாகத்திற்கு உபயோகமோ, அவ்விதமே குருபாம்பரா ஞானம் ஞானத்திற்கு உபயோகமாகும்.

23. வித்யா ஸந்ததி ஞானம் சுருதியில் பலரூபமாகச் சொல்லப்பட்டிருக்கிறது; அந்தந்த ஸந்ததி விக்ஞானம் வித்யா ஸித்திக்கு காரணம்.

24. எவன், ஒருவனுக்கு பிரம்ம ஞானத்தின்பொருட்டு குருவாகிறானோ, அவன் பக்தியுடன்கூடிய அந்த சிஷ்யனுக்கு தன்னுடைய இந்த தேசிகபரம்பரையை போதிக்கவேண்டும்.

25. எவனால் தேசிகபரம்பரா ஞானம் தரிக்கப்படுகிறதோ அவனுக்கு மகத்தான சக்தி கிளம்பி விருத்தியாகிறது; ஸத்குருவின் சுத்தவம்ச ஞானத்தால் முக்திஸித்தியுமுண்டு.

26. குரு ஸந்தான ஞானமற்ற தேசிகன் பிசாசுமுதலியவைகளால் மிகவும் பீடிக்கப்படுவான்; ஞானமுடையவனுக்கு ஸதாசிவன் தன்னுடைய சரீரமான சித்ஸுகத்தைக் கொடுக்கிறார்.

27. ஸந்ததி ஞானமற்ற நரனுக்கு இன்னொரு கெடுதலைச் சொல்லுகிறேன்; கேளுங்கள்; அவனுக்கு முக்தியும் சித்தியில்லை; அவனுக்கு ஞானமுமில்லை; குருத்வமுமில்லை; ஸுகமுமில்லை.

28. சிஷ்யனுக்கும் முக்தி, பரஞானம், ஸுகம், சித்தசுத்தி இவைகளில்லை; பத்தமும், கஷ்டமும், மோகமுமடைந்து பிரஷ்டனாகிறான்; இது ஸத்தியம் என்று என்னால் சொல்லப்படுகிறது.

29. இவ்விஷயத்தில் அதிகமாகச் சொல்வதில் எதற்கு! ஸந்ததி ஞானமற்றவன் ஸகலபாபக் கூட்டத்தையு மடைகிறான்; இது ஸத்யம்; ஸந்ததிஞானமற்றவர்கள் பரமபதமென்ற பிரஹ்ம ரூபத்தை யடையமாட்டார்கள்; அனுபவ ஆனந்தமானதும், அனந்தமானதுமான பிரஹ்மரூபத்தை யடையமாட்டார்கள்.

---

## அத்தியாயம் 36.

---

### (ஸத்யோ முக்திகொடுக்கும் க்ஷேத்திரமகிமை.)

1. ஸூதர்:—எல்லா மனிதர்களுக்கும் வேதாந்தத்தில் சொல்லிய பரமமான ஸம்ஸித்தியை சிரமமன்றி உடனே அடையக்கூடிய வழியை இனிச் சொல்லுகிறேன்.

2–6. முன்னொருகாலத்தில் பொகமோக்ஷ பலத்தையளிப்பவளும், புராணீயும், பூர்ணவிக்ஞான ஸ்வரூபியும், பரமசிவையுமான பகவதிதேவி, தேவதேவரும், ஜகந்நாதரும், தேவ, மனுஷ்ய, கிருமி, கீட, பதங்களில் ஸமமாயிருப்பவரும், ஸத்ய விக்ஞான ஸம்பூர்ணரும், ஸுக லக்ஷணரும், நாசமற்றவரும், ஸ்வப்பிரகாசரும், தனக்கு யாதொரு விலக்ஷணமற்றவரும், கிருபையால் நெய்கட்டிபோல் உண்டான மஹாநந்த தாண்டவரும், கருணைக்கிருப்பிடமும், குணத்தைத் தாண்டியவரும், குணமூர்த்திகளால் உபாஸிக்கத்தக்க ரஹஸ்யமான குருவை (பரமசிவனை) தண்டம்போல் விழுந்து நமஸ்கரித்து இதைக்கேட்டாள்.

7. தேவீ:—ஹே! தேவதேவ, ஜகந்நாதா, ஜகத்தின் கஷ்டத்தைப் போக்கடிப்பவரே! மனிதர்களுக்கு உடனே முக்தியை யளிக்கும் வழியை, ஹே! சிவனே! எனக்குச்சொல்லும்.

8. ஸூதர்:—இப்படி மகாதேவியால் கேட்கப்பட்ட விருஷபகொடியுடைய மஹாதேவர் ஜகத்தின் க்ஷேமத்தின்பொருட்டு அதை அவளுக்குச்சொன்னார்.

9. மஹேச்வரர்:—ஜகத்ஹிதமான இதைக்கேட்டது ஹே! மகாதேவீ! வெகுநல்லது; இதுவரையிலும் என்னால் சொல்லப்படாததை உனக்குச் சொல்லுகிறேன்; கேள்!.

10–15. பிராஹ்மணனாலும், அந்தயஜனாலும், ஸ்திரீயாலும், பாஷண்டனாயினும், புத்திமானாலும், தரித்திரனாலும், ஐச்வர்யவானாலும், மூர்க்கனாயிருந்தாலும், பண்டிதனாலும், ஸமர்த்தனாலும், அஸமர்த்தனாலும், பாலனாலும், விருத்தனாலும், ஆஸ்திகனாயிருந்தாலும், நாஸ்திகனாலும், பூமியிலிருக்கும் ஸர்வஸ்தான சிரேஷ்டமும், சுபமும், ஸூவர்ண முகரி நதியிலிருக்கப்பட்டதும், என்னாலும், உன்னாலும், நமது புத்திரர்களாலும், நந்தியாலும், என்னுடைய எல்லா பக்தர்களாலும், பிரஹ்ம, விஷ்ணு, இந்திராதிலோகபாலர்கள், ஸோமஸூரியர்கள், மற்றுமுள்ள எல்லாதேவர்களாலும், யக்ஷராக்ஷசர்களாலும் எப்பொழுதும் ஸேவிக்கப்பட்டதும், சுத்தமானதும், எல்லாக் காமங்களை கொடுக்கக்கூடியதுமான தக்ஷிணகைலாஸ க்ஷேத்திரத்தில் ஸம்வத்ஸரவிருதம் செய்வானாகில் அது உடனேமுக்தியைக்கொடுக்கும்.

16–18. ஆதித்யன் மேஷராசியிலிருக்கும்பொழுது (சித்தர மாதத்தில்) சித்திரை நக்ஷத்திரத்தில் ஒரு மனிதன் பாபநாசம் செய்யக்கூடிய பவித்திரமான ஸூவர்ண முகரீநதியில் காலமே ஸ்நாநம்செய்து, பிரியத்துடன் சக்திக்குத்தக்கபடி தனம்கொடுத்து, ஆதரவுடன் காலஹஸ்தி நாதராகிய என்னை யதாசக்தி பிரதக்ஷணம் செய்து, தண்டம்போல் பூமியில் விழுந்து நமஸ்கரித்து தரிசித்து ராத்திரியில் போஜனம் செய்யவேண்டியது.

19–20. (இதேவிதமாக) சூரியன் விருஷபராசியில் இருக்கும்போது விசாகநக்ஷத்திரத்தில் தரிசித்து பகலில் புஜிக்காமல் ராத்திரி புஜிக்கவேண்டியது.

21–25. ஆதித்யன் மிதுனத்திலிருக்கும்பொழுது புத்திமான் மூலாநக்ஷத்திரத்திலும், கடகத்தில் இருக்கும்பொழுது பூர்வாஷாட நக்ஷத்திரத்திலும் முன்போல் ஆசரிக்கவேண்டியது.

26–27. ஆதித்யன் ஸிம்மராசியில் இருக்கும்பொழுது (ஆவணிமாதத்தில்) சிரவண நக்ஷத்திரத்தில் இதேமாதிரியாக நடக்கவேண்டும்.

28–32. சூர்யன் கன்னியாராசியில் இருக்கும்பொழுது பூர்வப்ரோஷ்டபத நக்ஷத்திரத்திலும்; துலாராசியில் வரும்பொழுது அச்வினி நக்ஷத்திரத்திலும்; விருச்சிகாராசியில் சூர்யனிருக்கும்பொழுது கிருத்திகா நக்ஷத்திரத்திலும் முன் சொல்லிய மார்க்கமாக பகல் போஜனத்தை விட்டு இரவில் புஜிக்கவேண்டும்.

33–37. சூர்யன் தனுர்ராசியில் வரும்பொழுது மிருகசீர்ஷ நக்ஷத்திரத்திலும், மகர ராசியிலிருக்கும்பொழுது புஷ்ய நக்ஷத்திரத்திலும், மாகமாஸத்தில் மகாநக்ஷத்திரத்திலும், சூர்யன் கும்பராசியிலிருக்கும்பொழுது மகாநக்ஷத்திரத்திலும், ஆதித்யன் மீனராசியிலிருக்கும்பொழுது பல்குனி (உத்திர) நக்ஷத்திரத்திலும் முன்சொன்னபடியே எல்லாம் செய்யவேண்டியது.

38. இவ்விதமாக மாதந்தோறும் மனிதன் பரமமான ஸந்தோஷத்துடன் ஆசாணைசெய்யவேண்டியது; இவனுக்கு அதே க்ஷணத்தில் பரமஞானத்தை, தேகநாசம் எப்போவருமோவென்று கருதி, கொடுக்கிறேன்.

39. ஹே! மகேச்வரீ! இந்த விருதத்தை ஆசரித்து எனது பதவியை மனிதர்கள் நிச்சியமாய் அடைந்திருக்கிறார்கள்; இந்த சுகரமான வழி என்னால் உனக்கும் எல்லா ஜனங்களுக்கும் சொல்லப்பட்டது.

40. இந்தவிடத்தில் கொடுக்கப்பட்டது அணுவாயிருந்தாலும் மேருவுக்கு ஸமானமென்று சாஸ்திர நிச்சயம்; இவ்விடம் எப்பொழுதும் வஸிக்கும் மனிதனுக்கு முக்திஸித்தம் என்பதில் ஸந்தேகமில்லை.

41. தேவேந்திரனல் ஸேவிக்கப்பட்ட இந்த ஸ்தானம் பாப பஞ்சுப்பொதிக்கு நெருப்பு; காமிகளான மனிதர்களுக்கும் போகத்தைக் கொடுக்கக்கூடியது.

42. இந்த ஸ்லத்தின் வைபவத்தை மோகமடைந்த ஜனம் அறிகிறதில்லை; என் பிரஸாதத்தாலேயே, வேருகாரணமன்றி, அறிகிறுன்.

43. பாபராசியுடன்கூடிய நாஸ்திகனும், அவிவேகத்துடன் கூடியமனிதர்களும் கேவலம் காலஹஸ்தியைப் பிடிப்பாகவைத்துக்கொண்டு என்னுடைய பரமபதத்தை யடைகிறுர்கள்.

44. ஸத்யோமுக்திகரமும், பரமும் ஸகலத்தையும் கொடுக்கக்கூடியதும், நல்ல ஞானத்தை யளிப்பதும், என்னுலும், ஹரியாலும், பிரம்ஹ்மா முதலிய தேவர்களாலும் கூட பக்திபாலடையக்கூடியதுமான இந்த ஸ்தானத்தை, பாக்கிகளையெல்லாம் விட்டுவிட்டு, இந்திரயங்களை யடைக்கிக்கொண்டு புத்திசாலிகளால் ஆசரியிக்கப்படவேண்டியது என்று பரமான சுருதியும் சொல்லுகிறது.

45. ஸூதர்:—மகாதேவியிடம் இவ்விதம் சொல்லிவிட்டு மகாதாண்டவ பண்டிதராகிய சம்பு, அவளுடன் தனது ஆத்மாவின் ஐக்கியத்தை ஸ்மரித்து, சிவையை ஆலிங்கனம் செய்துகொண்டார்.

46. ஜகந்மாதாவன தேவதேவியும் தயைபால் உருகிய மனதுடையவளாய் பரமசிவனை நமஸ்கரித்து பூஜித்தாள்.

47. தேவதேவனுல் இது ரகஸ்யமாய் தேவிக்குச்சொல்லப்பட்டது, பிரம்மவித்துக்களான தங்களுக்கு என்னுல் பிரீதியுடன் சொல்லப்பட்டது.

48. தாங்களும் எல்லாவற்றையும் ஸந்தோஷத்துடன் தள்ளி விட்டு, இந்த உத்தமமான ஸத்ய முக்திகாஸ்தானத்தை பஜிக்கவும்.

49. ஹே! முனிகளே! சுருக்கமாக ஆதரவுடன் எல்லாம் சொல்லப்பட்டது; இது இதரமனிதர்களுக்கு காலம்கழிக்க விஷய மாகும்.

---

## அத்தியாயம் 37.

---

### (முக்தி உபாயம்.)

1. ஸூதர்:—ஹே! நல்ல விருதமுடையவர்களே! இனி, இதுவரையில் என்னால் சொல்லப்படாததும், சிரமமன்றி அடையக்கூடியதுமான முக்தி உபாயத்தைச் சொல்லுகிறேன்.

2–4. முன்னொருகாலத்தில் ஜைமினி ரிஷி வெகு சிரத்தையுடன், தனது குருவும், வேதவேதாந்த வித்வானும், உத்தமரும், தபஸால் ஜ்வலிக்கிற அங்கங்களுடையவரும், பராசரர் புத்திரரும், பிரபுவுமான வியாஸரை பரமபிரீதியுடன் தண்டம்போல் நமஸ்கரித்து ஸம்ஸார மருந்தாகிய அவருடைய பாததாமரைகளில் தன் சிரஸைவைத்து, வெகு ரஹஸ்யமானதும், உத்தமமுமானதுமான இந்த விஷயத்தை லோகரக்ஷார்த்தம் கேட்டார்.

5 ஜைமினி:—ஹே! பகவான்! மாயா விஷத்தைப் போக்கடித்து, எல்லா ஜந்துக்களுக்கும் சிரமமன்றியில் முக்தியைக் கொடுக்கக்கூடியதை கருணைகொண்டு எனக்குச் சொல்லவும்.

6. வியாஸர்:—ஹே! முனிசிரேஷ்டரே! ஜகத்திற்கு நன்மையான இந்த விஷயம் நீ கேட்டது நல்லது; என்னால் இதே விஷயம் முன்னொருகாலத்தில் புராணரான பிரஹ்மாவை கேட்கப்பட்டது.

7–8. பிரஹ்மாவால் மஹாவிஷ்ணு கேட்கப்பட்டார்; அவரால் சங்கரர் வினவப்பட்டார்; அந்த சங்கரன் தன் ஸ்வரூபாநந்தத்திலிருந்துகொண்டு லோகரக்ஷார்த்தம் விஷ்ணுவுக்குச்சொன்னார்.

9. ஈசுவரன்:—ஜகத்ரக்ஷணைக்காக உன்னால் நன்றாய் கேட்கப்பட்டது; ஹே! விஷ்ணு! சிரமமன்றியில் அடையக்கூடிய முக்தி உபாயத்தைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன்.

10. இப்பூமியில் ஸ்ரீமத் வியாக்ரபுரமென்ற ஒரு இடமிருக்கிறது; அவ்விடத்தில் எப்பொழுதும் பரம பிரீதியுடன் நர்த்னம் செய்துகொண்டிருக்கிறேன்.

11–12. அவ்விடத்தில் தினந்தோறும் நர்த்தனம்செய்கிற என்னை ஆதரவுடன் தர்சித்து, ஸர்வஸித்தியையளிக்கும் பஞ்சாக்ஷரமந்திரத்தை, பிரணவத்துடன், பன்னிரண்டாயிரம் எவன் சிரத்தையுடன் ஜபிக்கிறானோ அவனுக்கு உத்தமமான ஞானமில்லாமலிருந்தாலும் பரமமானமுக்தி ஸித்தமாகிறது.

13–17. அப்படியே ஒருவன் தக்ஷிண கைலாஸத்திலும், விருத்தாசலத்திலும், சுத்தமான கோபர்வதத்திலும், வல்மீகபுரத்திலும், ஆதிகிராமத்திலும், ஸோமநாதத்திலும், கோகர்ணத்திலும், பீமேசுவரத்திலும், விசிஷ்டமான வேதாரண்யத்திலும், சோபனமான சுவேதாரண்யத்திலும், ஹஸ்திகானனத்திலும், ஜப்யேசுவரத்திலும், மஹாஸ்தானமாகிய கும்பகோணத்திலும், மத்தியார்ஜுனத்திலும், காசியிலும், கேதாரத்திலும், ராமேசுவரத்திலும், ஹாலாஸ்யத்திலும் நித்தியம் ஹரனாகிய என்னை தரிசித்து முன்சொல்லியபடி மந்திரத்தை ஜபித்தால் பவபந்தத்திலிருந்து விடுபடுகிறான்.

18–27. முன்னொருகாலத்தில் புண்ணியமற்ற ஒரு மகாபாபியான த்விஜன், மகாமோகத்தால், பதிவிருதையான தனது மாதவை அநேக நாட்கள் புணர்ந்து, யோக்கியரான தனது பிதாவைக் கொன்று லஜ்ஜை பயமற்றவனாய் பூமியில் சஞ்சரித்தான்; அவ்விதம் சஞ்சரித்த அந்த மூர்க்கனை வெகுபயங்கரமான ஒரு பிரஹ்மராக்ஷஸ் உலக்கையை கையில்தூக்கிக்கொண்டு அவன் பார்க்க பின்பற்றியது; அதைப்பார்த்து பயமடைந்து பூர்வபுண்ய பலத்தால் ஹாலாஸ்யமென்ற மகாக்ஷேத்திரத்தை அடைந்தான்; அந்த க்ஷணமே இவனால் பிரஹ்ம ரக்ஷஸ் காணப்படவில்லை; அவ

னும் ஆச்சரியமடைந்து, யோஜித்தான்; "இந்த ஸ்தானத்தின் மகாத்மியம் ஆச்சரியமானது; இந்த தேசத்தில் அதிபயங்கரமான பிரஹ்ம ரக்ஷஸ் என்னுல் பார்க்கப்படவில்லை; ஆகையால் மரணபரியந்தம் என்னுல் இவ்விடம் வாஸம்செய்யவேண்டியதே காரியம்" என்று நிச்சயம்செய்துகொண்டு சஞ்சலமற்று அங்கு வஸித்தான்; அவ்விடம் வஸித்தமாத்திரத்தில் இவனுடைய பாபங்களெல்லாம் நாசமடைந்தன; என் பிரஸாதத்தால் ஒரு விப்ரனுடைய வார்த்தையைக்கேட்டு, அந்த க்ஷேத்திரத்தில் நித்தியம் என்னை தரிசித்து, முன் சொல்லியபடி ஷடக்ஷரமந்திரத்தை ஜபித்து ஸம்ஸார ஸமுத்திரத்திலிருந்து யத்னமன்றியில் விடுதலையடைந்தான்.

28. இவ்விடத்தில் செய்யப்பட்ட தானம் மகாதானமாகவும், ஹோமம், இஷ்டம், தபஸ் இவைகள் ஸ்வல்பமாய் செய்யப்பட்டாலும் பெரிதாக ஆகிவிடும்.

29. ஆதலால் விசிஷ்டமான என் ஸ்தானத்தில், இங்கேயாவது வேரிடத்திலாவது , என்னை ஆதரவுடன் தரிசித்து ஷடக்ஷரமந்திரத்தை ஜபிக்கவேண்டும்.

30. இப்படிச் செய்கிறவனுக்கு என்பிரஸாதத்தால் ஸம்சயமில்லாமல் சிரமமன்றி முக்திஸித்தியுண்டாகும்.

31. பாபிகளான நரர்களுக்கு இதைத்தவிர வேறுசெய்வது வெகுகஷ்டம்; ஆதலால் இதை ஆசரிக்கவேணும்.

32. ஸூதர்:—இவ்விதமாக முன் சிவனுல் ஸமஸ்த மனிதர்களுக்கும் சிரமமன்றி முக்தியடைய கருணையுடன் சொல்லப்பட்டதை நான் உங்களுக்குச் சொன்னேன்.

---

## அத்தியாயம் 38.

---

### (முக்தீ ஸாதன விஸாரம்.)

1. ஸூதர்:—ஹே! த்விஜர்களே! இதற்குமேல் ஸர்வ புக்தி முக்திபெற உத்தமமான ஸாதனத்தைச் சொல்லுகிறேன்;

ஸாரங்களுக்குள் உத்தமமான இதை அதிகப்பிரியத்துடன் கேளுங்கள்.

**2–3.** முன் ஒரு காலத்தில் ஸர்வவிக்ஞான ஸாகரரும், ஸர்வவேத ஸமுத்திரத்திற்கு கரையும், கருணாநிதியும், என் குருவுமான ஸத்யவதீ புத்திரரான வியாஸர் ஸர்வலோக உபகாரத்தின் பொருட்டு ஸம்ஸார வைத்தியராகிய ஸாம்பரை தியானித்துக் கொண்டு பரமதபஸைச் செய்தார்.

**4.** மேலும் அத்தேவனை தன்சக்திக்கு தக்கபடி புஷ்பமுதலியவைகளால் ஆராதனை செய்து, ஷடக்ஷர மந்திரத்தால் ஸ்துதி செய்தார்.

**5–30.** (வேதாந்தார்த்த விசேஷணங்களால் பரமேசுவரனை இதில் ஸ்தோத்திரம் செய்கிறார்). தத்வங்களுக்குள் பரமான தத்வமாயும், உண்மையில் தத்வமாயும், தன்னைத்தவிர வேறு (தத்வம்) இல்லாத அந்த ஸ்வயம்புவை நமஸ்கரிக்கிறேன்; எவர் ஒருவரே உண்மையில், எப்பொழுதும், சித்சக்தியாயும், ஜடசக்தியாயும், இவைகளின் பேதங்களான இச்சா, ஞான, கிரியாசக்திகளாயிருக்கிறாரோ அந்த ஸர்வாத்மாவுக்கு நமஸ்காரம்; பிரஹ்மா, விஷ்ணு, ருத்திரர், ஈசுவரன், ஸதாசிவன், விராட் முதலியவர்கள், தேவர்கள் இவர்கள் எல்லாம் அன்னியமில்லாமல் எவர் மாத்திரமாயிருக்கிறதோ அந்த சிவனை நமஸ்கரிக்கிறேன்; யானை முதலிய பெரிய பிராணிகளும், மனிதன் முதலிய மத்தியம ஸத்வங்களும், கிரிமி முதலிய அல்பங்களும் எவர் மாத்திரமோ அந்த மகத்தான பிரகாசத்திற்கு நமஸ்காரம்; எவருடைய இருப்பால் ஜகத் இருப்பது போல் காணப்படுகிறதோ, எவர் இல்லாவிடில் ஜகத் இல்லையோ, அந்த ஸாக்ஷாத் ஸத்திற்கு எப்பொழுதும் நமஸ்காரம்; எவருடைய பிரகாசமானது (சித்ஸ்புரணம்) ஜகத்ஸ்புரணமாக பிரகாசிக்கிறதோ, எவரில்லாவிடில் ஜகத் பிரகாசமிராதோ அந்த சித் ஆத்மாவிற்கு நமஸ்காரம்; எவருடைய ஸ்வரூபபூதமான ஆனந்தம் தானாகவே ஸர்வஜனங்களுடைய ஆனந்தமாக பிரகாசிக்கிறதோ அந்த பரமென்றும் அபரமென்றுமில்லாத பரமானந்தத்திற்கு

நமஸ்காரம்; எது தேசகாலதிக்குகளால் பிரிவுபடாமல் எப்பொழு தும் அத்வயமாகவே யிருக்கிறதோ, எது ஒன்றே இந்த ஸமஸ்த விசுவமாயிருக்கிறதோ அந்த யதார்த்மான பிரஹ்மத்தை நான் நமஸ்காரம் செய்கிறேன்; எல்லா வேதங்களும் எதைக் கரையற்ற தாகவும், அத்வயமாகவும், பூர்ணமாகவும், ஏகமாகவும் முறையிடு கின்றனவோ அந்தப்பிரஹ்மத்தை நமஸ்கரிக்கிறேன்; எவருடைய நிஜரூபத்தையறியாமல் ஸாங்கிய யோக சாஸ்திரங்கள் ஜகத்தைக் கல்பித்துக்கொண்டு பிரவிருத்திக்கின்றனவோ, இந்த அக்ஞான கல்பனைக்கு சுவர் (தடுப்பு) ஆயிருக்கின்ற அந்த சிவனுக்கு நமஸ் காரம்; எவருடைய ஸ்வரூபத்தை யறியாமல் இந்த ஜகத்திற்கு காரணம் பரமாணுக்கள் என்று (காணாதர்களால்) கல்பிக்கப்படு கின்றனவோ அந்த பரமேசுவராருக்கு நமஸ்காரம்; எவர் ஸ்வரூ பத்தை யறியாமல் தேவனன்றி கர்மங்களே ஸர்வ பலங்களையும் தருவதாக சிலர் கல்பிக்கிறார்களோ அந்த ஸகலத்தையும் கொடுக் கும் தேவனை நமஸ்கரிக்கிறேன்; எவருடைய நிஜரூபத்தை அறி யாமல் ஆபாஸ (போலி) தர்க்கத்தால் தேகமே ஆத்மாவென்று சிலரால் எண்ணப்படுகிறதோ அந்த தேகவிலக்ஷணமான ஈசானனை நமஸ்கரிக்கிறேன்; எவருடைய ஸ்வரூபத்தை யறியாமல் தேகத்தி லுள்ள இந்திரியங்கள் ஆத்மாவென்று மதிக்கப்படுகின்றனவோ அந்த இந்திரியங்களுக்கு வேறான தத்வத்தை நமஸ்கரிக்கிறேன்; எவருடைய ஸ்வரூபத்தை யறியாமல் பிராணன் ஆத்மாவென்று கொள்ளப்படுகிறதோ அந்த பிராணனை அறியும் பிராணனுக்கு பிராணனை நமஸ்கரிக்கிறேன்; எவருடைய ரூபத்தை யறியா மல் ஸங்கல்ப லக்ஷணமுள்ள மனஸை ஆத்மாவென்று கருது கிறார்களோ அந்த மனஸுக்கு பரமானவஸ்துவை நமஸ்கரிக்கி றேன்; எவருடைய ஸ்வரூபத்தை அறியாமல் புத்தி ஆத்மா வென்று மதிக்கப்படுகிறதோ அந்த விகாரமற்றதும், புத்திக்கு புத்தியைக் கொடுப்பதுமான ஞானஸ்வரூபத்தை நமஸ்கரிக்கி றேன்; எவருடைய ஸ்வரூபத்தை அறியாமல் எல்லா எண் ணங்களுக்கும் காரணமான அந்தக்கரணத்தை ஆத்மாவென்று கொள்ளப்படுகிறதோ அந்த சிவனுக்கு நமஸ்காரம்; எதனிடத்

தில் இந்த ஜாக்கிரத அவஸ்தையானது பிரகாசிப்பதாகவும், இருக்கிறதாகவும் தோன்றுகிறதோ, அந்த, இந்த பிராந்திக்கு அதிஷ்டானமாகவும், ஸாக்ஷியாகவு மிருக்கிற ஈசுவரனை நமஸ்கரிக்கிறேன் ; எவரிடத்தில் இந்த ஸ்வப்னுவஸ்தையும், ஸுஷுப்தி அவஸ்தையும் தோன்றுவதாகவும், இருப்பதாகவும் காணப்படுகிறதோ, இந்த பிராந்திகளுக்கு அதிஷ்டானமாகவும், ஸாக்ஷியாகவுமிருக்கிற அந்த ஈசுவரனை நமஸ்கரிக்கிறேன் ; இம்மூன்று அவஸ்தைகளையும் அபேக்ஷித்து எவரிடத்தில் துரியத்வம் (நான்காவதாக யிருக்குகை) கல்பிக்கப்படுகிறதோ, அந்த துரீயத்வமற்ற சித்கனமான ஈசுவரனை நமஸ்கரிக்கிறேன் ; எவரிடத்தில் துரீயாதீதம், அது இல்லாமலிருக்கவே, கல்பிக்கப்படுகிறதோ அந்த கேவலமும், சுத்தமும், நிர்வேசஷமுமான மஹேசுவரனை நமஸ்கரிக்கிறேன்; எவரிடத்தில் ஏகத்வமும் (ஒன்று என்பதும்), இரண்டென்பதும், மூண்றென்பதும், பலவென்பதும் கல்பிக்கப்படுகிறதோ அந்த கணக்கற்ற ஈசனுன சிவனை நமஸ்கரிக்கிறேன் ; எவரை சிலர் அபின்னமென்றும், சிலர் பின்னமென்றும், சிலர் பின்னுபின்னமென்றும் சொல்லுகிறுர்களோ, அந்த எப்பொழுதும் கேவலமானதும், சிலரால் மாத்திரம் அறியக்கூடியதுமான ஈசுவரனை நமஸ்கரிக்குறேன்.

**31–65.** எந்த பரமாத்வயத்தின் விக்ஞானத்தை (ஸ்வரூபத்தின் ஞானத்தை) ஸம்பூர்ணமாக உடயோர்கள் பிரஹ்மா, விஷ்ணு, மஹேச்வரர்கள் யதார்த்தத்தில் பிரஹ்மமென்று அறிகிறுர்களோ அந்தபரமாத்வய வஸ்துவை நமஸ்கரிக்கிறேன் ; (இதேவிதமாக அடியில்கண்டவைகளும் வாஸ்தவத்தில் பிரஹ்மமாகவே ஞானிகளால் மதிக்கப்படுகின்றன ; அந்த பிரஹ்மத்தை நமஸ்கரிக்கிறேன் என்று சேர்த்துக்கொள்ளவும்); ஈசுவரனும் ஸதாசிவனும் எப்பொழுதும் யதார்த்தத்தில் பிரஹ்மமாகவும் ஸந்தேகமற்று எல்லாதேவர்களும், பின்னமற்ற ஜீவசேதனங்களும், சந்தேகமில்லாமல் எல்லாவேதங்களும், எல்லா ஸ்மிருதிகளும், புராணங்களும், பாரதமும், எல்லா சைவாகமங்களும், பற்பல வைஷணவாகமங்களும், பிரஹ்மாகமங்களும், புத்த ஆர்ஹத

ஆகமங்களும், ஸத்ய அஸத்ய சப்தங்களும், எல்லாவித்யைகளும், பரஸ்பரவிரோதமுள்ள தர்க்கங்களும், பிரமாதாவுடன் பிரமாண மும், பிராஹ்மணர்கள், க்ஷத்திரியர்கள், வைச்யர்கள், சூத்ரர்கள், மற்றும் கலப்புள்ள ஜாதியார்களும், எல்லா ஆச்ரமங்களும், தர்ம அதர்மங்களும், தள்ளக்கூடியதும் கூடாததும், வித்யையும் அவித் யையும், எல்லா தேசங்களும், எப்பொழுதும் ஜாக்கிரதமுதலிய மூன்று அவஸ்தைகளும், துரீயத்வம் முதலிய கல்பனைகளும், பூமி, ஜலம், அக்னி, வாயு, ஆகாசம் இவைகளும், இவைகளின் பேதங்களும், சப்தஸபர்சங்களும், மஹத்முதலான இந்த எல்லா ஜகத்தும், இது எல்லாமும், மஹாமாயையும், விமலமான சித்சக் தியும், தோன்றுகிற இந்த ஜகத்தெல்லாம் யதார்த்தத்தில் பிரஹ் மமே. (அந்த பிரஹ்மத்தை நமஸ்கரிக்கிறேன்).

66. எந்தப் பிரஹ்மத்தின் அறிவுடையோர் பலனை யடை யும் பொருட்டு ஒருபொழுதும், கொஞ்சம்கூட, ஒருகாரியமும் செய்கிறதில்லையோ அந்த பரமமான அத்வயவஸ்துவை நமஸ்க ரிக்கிறேன்.

67. எதின் அறிவுடையோர் பிரத்யக்ஜ்யோதியில் ஸ்தாபிக் கப்பட்டிருக்கிறார்களோ, அந்த அகந்தை முதலியதற்ற பிரத்யக் ஆத்மாவை நமஸ்கரிக்கிறேன்.

68. எதினுடைய ரூபம் அஹம் என்றும் இது என்றும் பிரகாசிக்கிறதோ அந்த லக்ஷணமற்றதும், த்வந்தமற்றதும், நிர் தேசிக்கக்கூடாததும், ஸ்வயம் பிரகாசமான பிரஹ்மத்தை நமஸ் கரிக்கிறேன்

69. ஸ்தோத்திரம், பிரமாணம் இவைகளுக்கு விஷயமா காததும், ஸம்ஸாரதுக்க ஸமுத்திரத்திற்கு எப்பொழுதும் தாண் டக்கூடிய உதவியாயிருப்பதும், தேவதிரியக் மனுஷியர்களிடத் தில் அஹம்கார ஸாக்ஷியாய் எப்பொழுதும் பிரகாசித்துகொண் டிருப்பதும், எல்லா ஜகத்ரஹிதமான தத்வத்தை எப்பொழுதும் நமஸ்கரிக்கிறேன்.

[இந்தப்பிரகரணத்தின் மொத்த அபிப்பிராயம் சுக்திவெள்ளி முதலிய பிரமஸ்தானங்களில், ஆரோபிக்கப்பட்ட வெள்ளி முதலியவை, அதிஷ்டான சுக்தியின் ஞானம் உண்டானவுடன், பாதிக்கப்பட்டு, எப்படி வாஸ்தவத்தில் சுக்தி ஒன்றே அதனுடைய உண்மையான ஸ்வரூபமோ; அதுபோல் பிரஹ்மத்தின் யதார்த்த ஞானத்தால் லயமடைந்த அவித்யையும் அதன் காரியமுமான நாமரூப பிரபஞ்சம், பரமார்த்தத்தில் பிரஹ்மத்திற்குத் தனிப்பட்ட ரூபம் இல்லாமல் பிரஹ்மரூபமே].

**70–72.** இவ்விதம் வியாஸரால் ஸந்தோஷிக்கப்பட்ட ஸர்வக்ஞரும், ஸாம்பரும், ஸர்வபலமளிப்பவருமான மஹாதேவர் அந்தமுனிக்கு பிரஸன்னமானுர்; அந்த அழிவற்றவரும், தேவியுடனிருக்கிற தேவதேவனைக்கண்டு நமஸ்கரித்து ஸர்வஸாதன ஞானத்தை வியாஸர் பிரார்த்தித்தார்; தேவதேவரும் பிரஸன்னராய் அந்த முனிக்கு ஸர்வஸாதனத்தை கம்பீரமான வாக்குடன் சொன்னுர்.

**73.** ஈசுவரன்:—ஹே! விப்ரரே! என்னுல் இதுகாறும் சொல்லப்படாததும், உத்தமுமான ஸர்வஸாதனத்தைச் சொல்லுகிறேன்; சிரத்தையுடன் கேளும்.

**74.** எல்லோராலும் புக்தியும் முக்தியும் விரும்பப்படுகிறது; வேதானுஸாரமாக முக்தி நாநாவிதம் என்று என்னுல் சொல்லப்படுகிறது.

**75.** அதில் ஸாயுஜ்யரூப முக்திக்கு நேர்ஸாதனம் ஞானமாயிருக்கிறது; கர்மமுமன்று, ஞானகர்மங்களின் சேர்க்கையுமன்று.

**76.** (ஏனெனில்) அந்த ஸாயுஜ்யரூப முக்தி, ஒன்று நித்ய ஸித்தமாய் (எப்பொழுதுமுள்ளதாய்) இருக்கவேண்டும் அல்லது ஏதாகிலும் ஸாதனத்தினுல் அடையப்படவேண்டும்; அப்படி நித்ய ஸித்தமாயிருந்தால் எல்லோருடைய ஆத்மரூபமாயிருக்கவேண்டும் அல்லது அதற்கு வேறுகவிருக்கவேண்டும்.

**77.** முக்தி ஆத்மரூபமாயிருந்தால், அந்த ஆத்மா நித்தியப் பிராப்தமன்றே! (ஆதலால் முக்தியும் எப்பொழுதுமுள்ளது);

(இவ்விதத்தால்) நித்ய பிராப்தமான முக்திக்கு அப்பிராப்தி (அடையாமலிருக்குகை) மனிதர்களின் பிரமையன்றோ!

**78.** இந்த பிரமையின் நிவிருத்தி, பிராப்தி (அடைதல்) என்று சுருதியில் சொல்லப்படுகிறது; இந்த பிரமத்தின் நிவிருத்தி அக்ஞான நாசத்தால் ஸித்திக்கிறது.

**79.** அந்த அக்ஞானத்தின் நாசமும் ஞானத்தாலேயே தவிர வேறொன்றுமன்று; (ஏனெனில்) ஞானத்தால் அக்ஞானநாசமென்று எல்லோருக்கும் பிரசித்தமா யிருக்கிறது.

**80.** (இவ்விதமாக ஸித்தாந்தத்தைச் சொல்லி பூர்வபக்ஷத்தை மறுக்க முன்சொன்ன நித்தியஸித்தமான முக்தி ஆத்மரூபமன்றென்ற கக்ஷியை எடுத்து அதைதூஷித்துக்காட்டுகிறார்). இந்த (நித்யஸித்தமான பரா) முக்தி ஆத்மரூபமல்லாமல் வேறு என்று மதித்தால், அது ஒன்று ஆத்மாவால் அடையப்படுவதாக விருக்க வேண்டும் அல்லது அடையக்கூடாததா யிருக்கவேண்டும்.

**81.** அடையக்கூடியதாயிருந்தால் ஆத்மாவால் அடையப்படாத அடைவன்றோமுக்தி; அப்படி அப்பிராப்த பிராப்த (அடையப்படாமலிருந்து அடையப்படும்) முக்தி, இந்த ஆத்மாவுக்கும் முக்திக்கும் ஸம்பந்தரூபமா அல்லது ஐக்கியமா (தாதாத்ம்ய ரூபமா).

**82.** அப்படி முக்திசம்பந்தரூபமானால் அந்த ஸம்பந்தம் ஸாத்யமாகவாவது நித்தியமாகவாவது இருக்கவேண்டும்; ஸாத்யமாயிருந்தால்(ஒரு ஸாதனத்தினால் கிடைக்கக்கூடியதாயிருந்தால்) அந்த ஸம்பந்தம் அநித்தியமேயல்லாது ஒருவிதத்திலும் நித்தியமாகாது.

**83.** (ஏனெனில்) ஸாதிக்கக்கூடிய பாவங்களுக்கு (பதார்த்தங்களுக்கு) அநித்யத்வம் காணப்படுகிறது. பிரத்வம்ஸ அபாவத்திற்கு ஒருபொழுதும் ஸாத்யத்வம் கிட்டாது.

**84–85.** ஸாத்யத்வ தர்மத்திற்கு அபாவாசிரயம் எப்பொழுதும் இல்லை. (அதாவது ஸாதிக்கக்கூடிய விஷயம் அபாவரூப

மாயிராது; ஆதலால் ஸாத்ய ஸம்பந்தம் சரியன்று). நித்ய ஸம்பந்தமாயிருந்தால், ஸம்பந்துமென்று சொல்லப்பட்ட முக்தி நித்ய ஸித்தமாக முமுக்ஷுவின் ஆத்மாவாகவே ஆகிறது. அப்பொழுதும் நித்ய பிராப்தமான முக்தியின் அடைதல் (ஸித்தாந்தத்தைப் போல்) ஞானத்தாலேயே தவிர வேறொன்றாலுமன்று என்று ஸத்யமாய் சொல்லப்படுகிறது.

86–88. (81-வது ச்லோகத்தில் சொல்லியபிரகாரம் ஆத்மாவுக்கும் முக்திக்கும் ஐக்கியம் என்றதும் சரியல்லவென்று சொல்லப்படுகிறது). அப்பிராப்தபிராப்த ரூப முக்தி ஆத்மாவுடன் ஐக்கியம் என்ற பக்ஷத்தில், அது யுக்தமன்று; இரண்டின் ஐக்கியமும் ஒருபொழுதும் ஸித்தியாகாது; முக்தி பின்னமானதின் (ஜீவேசுவர்களின்) பேத நாசத்தால் ஐக்கியமாயிருக்கவேண்டும் அல்லது பேதம் இருக்கும்போதே ஐக்கியமாயிருக்கவேண்டும்; பேதம் நாசமானல் அவைகளின் ஐக்கியம் இருக்கிறது (தங்கள் கக்ஷிப்படி பேதத்திற்கு அந்யோந்ய அபாவரூபத்தை அங்கீகரிக்கிறபடியாலும், அநாதி அநந்தமென்பதாலும் இது தள்ளத்தக்கது); பேதம் இருந்தால் ஐக்கியம் என்று சொல்வது சரியன்று.

89. பேதமிருக்கும்பொழுது அதற்கு விரோதமான ஐக்கியம் ஸித்தியாகாது;

(80-வது ச்லோகத்தில் சொல்லிய இரண்டாவது கக்ஷிப்படி) ஆத்மாவால் முக்தி அப்பிராப்யம் (அடையமுடியாதது) என்றால், அது அஸங்கதமாயிருக்கிறது.

90. (ஏனெனில்) அப்பிராப்பியமான முக்தியை யடைய ஒரு ஸாதனத்தின் உதவியும் வேண்டியதில்லை; ஸாதனங்களிருந்தாலும் அந்த முக்தி எப்பொழுதும் அடையக்கூடாததன்றோ! (ஸாதன அபேக்ஷையில்லாமல் எல்லோரும் முக்தியடையலாம்).

91. இவ்விதமாக இந்த முக்தி நித்யஸித்தமன்று, ஸாத்யரூபமென்று மதித்தால் அப்படி ஸாத்யரூபமென்றால் அநித்யமென்று முன்னே காட்டப்பட்டிருக்கிறது; (83-வது ச்லோகத்தில்).

92. (ஆயினும், ஸாத்யமாயிருந்து பிரத்வம்ஸ அபாவம் போல் ஏன் முக்தி நித்யமாயிருக்கக்கூடாதெனில்) பிரத்வம்ஸ (நாச) அபாவத்திற்கு நித்யத்வம் எப்பொழுதும் கிடையாது; அசித்ரூபமுள்ள ஸகலத்திற்கும் வினுசமேதவிர சிதாத்மாவிற்கு அபாவமில்லாததால் நித்யத்வமில்லை.

93. பாவத்வமாயிருந்தால், அசேதனமான ஸாத்யமாயிருப்பதால் அதற்கு விநாசம் உண்டு; அபாவமாயிருப்பதால் பிரத்வம்ஸத்தின் ஸாத்யத்திற்கு நாசமுண்டு (அநித்யம்).

94. விநாசமும் (பிரத்வம்ஸ அபாவமும்) ஸித்திக்கிறதில்லை; அது ஸூஸங்கதம் அன்று; முன்போல், பிராக் அபாவத்தைப் போலவே இதற்கும் (விநாசத்திற்கும்) அநித்யத்வத்தை காண்கிறோம்.

95. பிராக் அபாவத்திற்கு ஸாத்யத்வ அபாவம் இருந்தாலும் அபாவமானதால் எந்த அநித்யத்துவம் சொல்லப்படுகிறதோ அது பிரத்வம் ஸாபவத்திற்கும் ஸமமாயிருக்கிறது.

96. (கடமுதலிய) பாவபதார்தங்களான ஸாத்யங்களிலும், அபாவமான (பிரத்வம்ஸமுதலிய) பதார்த்தங்களான ஸாத்தியங்களிலும், (பரமாணு, ஆகாசம், காலம் திக்முதலியவை நித்யமாய் சிலரால் அங்கீகரிக்கப்பட்டிருந்தாலும் அஸாத்யங்களாக கருதவேண்டும்), எல்லா அஸாத்தியங்களிலும் அநித்யத்வமே பிரயோஜனம் (மோக்ஷ பிரயோஜனமில்லை).

97. அசேதனத்திற்கே அநித்யத்துவம் சொல்லப்படுகிறது, மைற்ற கிருதகத்வ முதலியவை அநித்யமா யிருந்தபோதிலும் அவ்யாப்தியால் சொல்லப்படவேண்டியதில்லை; ஆனுல் சேதனத்திற்கோ பழமையான சுருதி நித்யத்வத்தை கூறுகின்றது.

98. ஆதலால், மேல்சொல்லிய வழியாக, ஸாயுஜ்யரூபமான முக்தி ஞானத்தால் அடையப்படவேண்டும்; கிருயைகளால் அடைய முடியாது; ஞானக்கிரியை சேர்க்கையாலும் முடியாது

99. ஞானம் என்பது காணப்படுகிறபிரபஞ்சமெல்லாவற்றை யும் ஸத் ரூபமாக (பிரஹ்மாத்மத்வ ஸாக்ஷாத்காரம்) அறிதல்; (இது ஸாயுஜ்யமுக்திஸாதனம்). கிரியையோ காரகனை (செய்ப வனை) அபேக்ஷிக்கிறது, எப்பொழுதும் ஞானத்தை கர்திரு காணபேதமற்றபரமாத்ம ஸாக்ஷாத்காரத்தை பிடித்துக்கொள்ளு கிறதில்லை (ஆதலால் முக்திஸாதனமன்று).

100. கிருயைக்கு ஞானத்துடன் எப்பொழுதும் விரோ தமிருப்பதாலேயே, ஸமுச்சயம் (இரண்டின் சேர்க்கையும்) உண்டாகாது; இதனுல் எப்படி பராகதியான முக்தி உண் டாகும்.

101. ஸாரூப்ய, ஸாமீப்ய ஸாலோக்யமென்று சொல்லப் பட்ட முக்திகளுக்கு கேவலம் கர்மமே ஸாதனம்.

102. எல்லோருக்கும் இஹ, பரலோகங்களைக் கொடுக்கும் முக்திகள் கர்மங்களாலே ஸித்தியாகின்றன; விரோதமாயிருப்ப தால் ஞானத்தாலன்று.

103. (இதுவரையில் சொல்லப்பட்ட) ஞானமும் கர்மமும் வேதத்தில் சொல்லியவைகளே, (வேதத்தில்சொல்லாத) மற்றவை யல்ல ;மற்றவையெல்லாம் அவிவேகிகளின்வியவகாரத்தில் இருக் கின்றன.

104. (இந்த வேதோக்தத்திலும்) உத்தம மத்திம அதம அதிகாரிகளின் புத்தி தாரதம்யத்தை அபேக்ஷித்து (ஹிருண்ய கர்பாதி ஸகுண பிரஹ்ம) விக்ஞானமும், அக்னிஹோத்ர கர்மமும் விதிக்கப்பட்டிருக்கிறது; அப்படியிருந்தாலும் வியவஹார தசை யில் வியவஹாரிகபலனை இவை கொடுக்கும்.

105. ஆதலால் புத்தியுள்ளவன் நாஸ்திக்யம் செய்யக்கூ டாது; நாஸ்திக்யத்தாலேயே எல்லோருக்கும் ஸம்ஸாரத்தில் சுற் றுதல் உண்டாகிறது.

106. ஹே! முனிசிரேஷ்டரே சுருக்கமாக ஸர்வஸாதனமும் சொல்லப்பட்டது. ஆகையால் ஆஸ்திகர்களுக்கு எப்பொழுதும் அத்புதமான இதை ரஹஸ்யமாய் வைத்திருக்கவேண்டும்.

107. ஸூதர்:—எல்லாவற்றையும் பிரகாசிப்பவரும் ஸாம்பருமான மஹாதேவர் இவ்விதம் உபதேசித்துவிட்டு, அவருடைய (வியாஸருடைய) முன்பாக தாண்டவம் செய்து அவ்விடத்திலேயே மறைந்துவிட்டார்.

108. கேவலம் கிருபையால் ஸகல ஸாதனமும் என்னால் உங்களுக்குச் சொல்லப்பட்டது; ஹே! த்விஜர்களே! இவ்விடத்தில் வேறென்றும் சொல்லப்படக்கூடாது; இதைத்தவிர மற்றெல்லாம் மோஹமன்றோ!

---

## அத்தியாயம் 39.

---

### (வேதங்களின் விரோதமில்லாமை.)

1. ஸூதர்:—இனிமேல், ஹே! முனீச்வரர்களே! விஸ்தாரமன்றி, சுருக்கமாக, எல்லா வேதங்களும் ஒன்றுக்கொன்று விரோதமில்லாததைப்பற்றி சொல்லுகிறேன்.

2. (வேதத்தில் அத்வைதத்தையும் சொல்லி, அதற்கு விரோதியான கர்திருகாண பலாதிபேதமுள்ள த்வைதத்தையும் சொல்லப்படுவதால், வேதம் பிரமாணமல்ல என்ற ஸந்தேகம் வர இவைகளின் விரோத மின்மையைக் காட்டுகிறார்).

வேதராசி இரண்டுபாகமாய் இருக்கிறது; ஒரு வேதபாகம் (உபநிஷத் லக்ஷணமுள்ளது) ஸத்யமாயும் அத்வைதமாயுமிருக்கிற பிரஹ்மத்தைக் கூறுகிறது.

3. மற்றொரு வேதபாகம், அப்படியே, (பிரஹ்ம ஸ்வரூபத்தில்) கல்பிக்கப்பட்ட த்வைதத்தைப்பற்றி சொல்லுகிறது (கர்ம காண்டம்); (இப்படி விஷயபேதத்தால் அவிரோதம் என்று தாத்

பர்யம்). அத்வைதம் எப்பொழுதும் ஸத்யமே; த்வைதம் அஸத்யம்.

4. சிலர் (வேதங்களில்) த்வைதத்திற்குகூட ஸத்யத்வம் உண்டென்று சொல்லுகிறார்கள்; அது சரியன்று; ஏனெனில் த்வைதம் பரமாத்மாவில் அத்யஸ்தமாயிருக்கிறது (ஆரோபிக்கப் பட்டிருக்கிறது).

5. அத்யஸ்த பதார்த்தம், எப்பொழுதும், சுக்தியில் வெள் ளிபோல காணப்படுகிறபடியால் த்வைதமாகும்; த்வைதத்திற்கு காணப்படும் தன்மை எல்லோருக்கும் ஸம்மதம்.

6. ஆகையால் வேதத்தின் த்வைதபர பாகமானது கல்பி தத்வைத விஷயமாகும்; அத்வைதம் பேதமில்லாதபடியால் எப் பொழுதும் ஸத்யமாகும்.

7. (மேலும்) அத்வைதமும் அத்யஸ்தம் என்றும் சொல் லும்பக்ஷத்தில், இது எதில் அத்யஸ்தமாயிருக்கிறது? (மற்றொரு அத்வைதமில்லாதபடியால்) அத்வைதத்தில் அத்யஸ்தமன்று.

8. கேவலம் கல்பிக்கப்பட்ட த்வைதத்தில் அத்வைதம் அத் யாஸமாகிறது அஸம்பவம்; வியவஹாரதசையில்கூட ஸத்ய வஸ் துவில் அத்யாஸத்தைக் காண்கிறோம் (அஸத்தியமான கல்பித வஸ்துவில் இல்லை).

9. த்வைதத்தில் அத்வைதம் அத்யஸ்தமன்று சொல்ல முடியாது; (ஏனெனில்) அந்த த்வைதமும் அத்யாஸரூபமாகவே யிருக்கிறது; (ஒரேவஸ்து அதிஷ்டானமாகவும், ஆரோபிதமாக வும் இருக்கமுடியாது).

10. த்வைதமும் கல்பிதம், அப்படியே அத்வைதமும், இரண்டும் கல்பிதம் என்றும் சொல்லமுடியாது; (ஏனெனில்) த்வைத, அத்வைதங்களைத் தவிர வேறு வஸ்துவில்லை. (அதிஷ் டானவஸ்து இல்லை).

11. (வஸ்துவில்லாவிடில் சூன்யமே அதிஷ்டானமாயிருக் கட்டுமேயெனில்) இரண்டும் சூன்யமாத்திரத்தில் அத்யஸ்தமாக

எண்ணுவோமென்றால், ஒரு ரூபத்தாலும் சொல்லமுடியாததில் அத்யாஸ அதிஷ்டானங்கள் ஸம்பவியா.

12–13. ஆகையால் த்வைதம் அத்வைதமான பராத்மாவில் அத்யஸ்தமாயிருக்கிறது ; ஆதலால் முன்சொல்லிய வழியாக, சுருதியின் சில அம்சம் ஸத்ய அத்வைத பரமாயிருக்கிறதென்று எல்லா சாஸ்திரமறிந்தவர்கள் சொல்லுகிறார்கள் ; அப்படியே சில பாகம் கல்பிதத்வைத பரமென்று ஸத்யவாதிகளால் சொல்லப்படுகிறது.

14. த்வைத அத்வைத ச்ருதிகளின் விரோதம் தோன்றினாலும், சொல்லிய வழியாக விரோதமே இல்லை.

15. (ச்ருதியர்த்தத்தில் பேதம் அபேதம் ஸமமாயிருக்கும்பொழுது அபேதம் பரமார்த்தமென்றும், பேதம் கல்பிதம் என்று எப்படி ஸித்திக்கும் என்றால்) ; ப்ரத்யக்ஷமுதலிய பிரமாணங்களால் அத்வைதம் (அபேதம்) எப்பொழுதும் அறியப்படமுடியாது ; (அப்படி பிராமணங்களால் அறியக்கூடாத) அதில் (அபேதத்தில்) அத்வைதச்ருதி நேராக (பிரமாணமான) அர்த்தமுள்ளதாகவிருக்கிறது.

16–17. ச்ருதி பிரமாணமில்லாமலே எப்பொழுதும் லோகஸித்தமான பேதம் இருக்கிறது ; ஆதலால் இந்தபேத விஷயத்தில் ச்ருதி அர்த்தமுள்ளதன்று; ச்ருதி (ப்ரத்யக்ஷ முதலிய) பிரமாணங்களுக்கு மேல்பட்டிருக்கிறது ; (ப்ரத்யக்ஷ முதலிய பிரமாணங்களுக்கு விஷயமாகாத ஸ்வர்க்க முதலியவற்றை சொல்வதில் எப்படி ச்ருதி பிரமாணமோ, அப்படியே அத்வைதத்தைப் போதிக்கவும் அதற்கு சக்தியுண்டு); (மேலும்) எப்பொழுதும் ச்ருதிக்கு மற்ற பிரமாணங்களுடன், ஸம்வாதம் செய்யவேண்டிய அபேக்ஷயுமில்லை; (ஸர்வக்ஞர்கள் ச்ருதிக்கு ஸ்வதபிராமாண்யம் அங்கீகரித்திருக்கிறபடியால் ஸம்வாத ஞானாபேக்ஷயில்லை).

18. (சரிதான் ஸம்வாதஞானாபேக்ஷ வேண்டியதில்லை, பாதிக்கப்பட்டால் ஏன் அப்பிரமாண்யம் ஆகாது என்றால்) ச்ரு

திக்கு (துஷ்டபிராமாணத்தாலுண்டாகும்) ஸ்வத தோஷம் கிடையாது (கருதிய அர்த்தத்தை சொல்ல ஸாமர்த்தியமிருப்பதால்); வேறென்றாலும் தோஷம் கிடையாது (அபௌருஷேயமானபடியால்); (ஆதலால் ஸ்வத்ஸித்த பிரமாண்யம் ச்ருதிக்கு மறுக்க முடியாது).

(ச்ருதிக்கு இவ்விதம் நிர்தோஷ பிராமாண்யமாத்திரமுமல்லாமல் பாக்கி பிரத்யக்ஷ முதலியவைகளைவிட பலமுமுள்ளது); பிரத்யக்ஷ முதலிய பிரமாணங்களுக்கு எப்பொழுதும் தோஷத்துடன்கூடி உண்டாகும் தன்மையிருக்கிறது; ஆகையால் (இத்தோஷத்தன்மை யில்லாதபடியால்) இப்பிரமாணங்களைவிட ச்ருதி பலமானது.

19–20. (ச்ருதி இவ்விதம் பலமான பிரமாணமாயிருப்பதும் தவிர பிரயோஜன விஷயத்திலும் மேலானது). பரமார்த்தத்தை நிரூபண விஷயமாக கல்பிதத்வைத மாத்திரத்தில் (மாயாமயமாய் வஸ்துவில்லாமலிருப்பதில் பிரவிருத்தித்தால் பிரயோஜனமுமில்லாததில்) ச்ருதி பிரமாணமன்று, அதில் பிரயோஜனமில்லாததால்;

அத்வைதம், பரமானந்தமாயும், பிரஹ்மவஸ்துவாயுமிருக்கிறது தவிர மற்றதன்று; அதில் பிரயோஜனம் ஸம்சயமில்லாமல் இருக்கிறது.

21. எந்த விஷயத்தில் பிரயோஜனமுள்ளதோ அதில் ச்ருதி பிரமாணமென்று (பெரியோர்களின்) தீர்மாணம்.

22. ஆதலால், ச்ருதி பிரயோஜனமில்லாதபடியால் த்வைதத்தை ஸ்தாபிக்கிறதில்லை; த்வைதத்தை விலக்கி அத்வைதத்தை நிரூபிக்கிறது.

23. ஸ்மிருதிகளும், புராணங்களும், பாரதமுதலியவைகளும், சைவாகம முதலியதும், தர்க்கங்களும், அத்வைதத்தில் குறிப்பே தவிர த்வைதபரம் ஒருபொழுதும் ஆகா.

24. சில ச்ருதி வாக்கியங்கள் அத்யஸ்தமான அக்ஞானம், அதன்காரியங்களின் நிவிருத்தி மூலமாக அத்வயத்தை போதிக்கின்றன.

25. சில ச்ருதிகள் விதிமுகமாக (வஸ்துவின் யதார்த்த ஸ்திதியை நேராக சொல்வது மூலமாக) எது ஸத்யாதி லக்ஷணமுள்ளதோ அது பிரஹ்மமென்று காட்டுகின்றன.

26. சில ச்ருதி ஸாதகனுகிய ஜீவனுக்கு இயற்கையாகவே சிவத்தன்மையை போதிப்பித்து பிராந்தியால் கல்பிக்கப்பட்ட ஜீவத்தன்மையை பாதிக்கிறது.

27. இந்த சேதனனுக்கு ஜீவத்வம் இயற்கை என்று சிலர் சொல்லுகிறுர்கள்; இது வீண்வார்த்தையே ஒழிய வாஸ்தவமன்று ; ஜீவத்தன்மை ஒருபொழுதும் ஸ்வபாவமாகாது.

28. எப்பொழுதும் ஜீவத்தன்மை இயற்கையானுல் அதற்கு நிவிருத்தியேயில்லை (மோக்ஷம் என்பது இல்லாமல்போகும்) ; ஸ்வத ஸித்தமாயிருப்பது (எப்பொழுதும் இயற்கையாயிருப்பது) ஒருபொழுதும் நாசமடையாது.

29–31. எப்படி தாம்பிரத்திலுள்ள களும்புக்கு சில சுத்தி செய்கிற வஸ்துவால் நாசம் உண்டாகிறதோ அப்படி ஜீவனுடைய துக்க முதலியதின் நிவிருத்தி சில ஸாதனங்ககளால் உண்டாகும்என்றும்; எப்படி ரஸசேர்க்கையால்இரும்பு எப்பொழுதும் தங்கமாகிறதோ அப்படியே சில ஸாதனத்தால் ஜீவன் சிவன் ஆகிருன் என்றும் சில வாதிகள், தங்களுடைய மோகத்தினுல், சொல்லுகிறுர்கள்; அது அவ்விதம் ஆகாது ; ஏனெனில் ஸ்வத ஸித்தமானது {ஸ்வபாவமாகவிருப்பது) நாசமடையாது.

32. எப்படி அக்னியினுடைய ஸ்வபாவிகமான உஷ்ணமும், பிரகாசமும் நசிக்கிறதில்லையோ, அப்படி இந்த ஜீவனுடைய துக்கமுதலியவை நாசமடைகிறதில்லை.

33. மணி, மந்திர, ஔஷதங்களின் விசித்திர சக்தி மாத்திரத்தால் நசித்ததுபோல கட்டுப்பட்டிருக்குமே தவிர வாஸ்தவத்

தில் நசிப்பதில்லை யென்பது எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்படுகிறது.

**34–35.** எப்படி தாம்பிர மலம் ஒரு ஸாதனத்தினலும் நாசமாகிறதில்லையோ, நாசமானதுபோல் (காணப்பட்டு) தடுக்கப்பட்டிருக்கிறதோ, ஆனால் அக்ஞர்கள் நாசமாய்விட்டதென்று நினைக்கிறார்களோ, அப்படியே ஸுகதுக்கலக்ஷணமுள்ள சேதனத்தின் ஜீவத்தன்மையும் நஷ்டம்போல் கட்டப்பட்டிருக்குமே தவிர ஒரு ஸாதனத்தாலும் நாசமடையாது.

**36.** பாலுடன் சேர்க்கப்பட்ட ஜலம் பால் என்றே சொல்லப்படுகிறது.

**37–38.** தங்கத்துடன் சேர்க்கப்பட்ட வெள்ளி தங்கம் என்றே சொல்லப்படுகிறது; அப்படியே ரஸ வீர்யமும் நெருப்பும் சேர்ந்தால் இரும்புக்கு தங்கவர்ணம் உண்டாகுமே தவிர ஒரு பொழுதும் தங்கத்தன்மை உண்டாகாது; ரசத்தின் வீர்யம் நாசமடைந்தால் அதன்வர்ணம் போய்விடும்.

**39.** உலகத்தில் கிருதகத்திற்கு (ஒரு ஸாதனத்தால் ஆக்கப்பட்ட வஸ்துவுக்கு) நித்யத்வம் இல்லையென்பது ஸ்திரமான வார்த்தை; அப்படியிருந்தும் பிராந்தர்களால் இரும்பு தங்கமென்று மதிக்கப்படுகிறது.

**40.** ஸூக்ஷ்ம ஞான மில்லாதவனுக்கு பிராந்தி ஸுலபமாய் ஏற்படும்; அதுபோல ஜீவனுக்கு சிவத்தன்மை பிராந்தியால் ஸித்திக்கிறது.

**41.** இயற்கையாகவே ஜீவனயிருக்கப்பட்டவன் எந்த ஸாதனத்தினலேயும் ஒருக்காலும் சிவன் ஆகமாட்டான்; ஆதலால் ஜீவன் ஒருபொழுதும் ஸாக்ஷாத் சிவன் ஆகான்; சிவனே ஸாக்ஷாத் சிவனுக விருப்பனேதவிர வேறுகவிரான்.

**42–43.** எப்படி அக்னி ஸம்பந்தத்தால் ஜலம் யதார்த்தத்தில் அக்னி ஆகாதோ, (ஸாதாரண) மனிதர்களுக்கு அக்னியாக தோன்றினலும், வித்வான்கள் 'ஜலம் உஷ்ணமாயிருக்கிறது'

என்று சொல்லுகிறார்களோ அப்படியே அசிவனாயிருக்கப்பட்ட ஜீவன் சிலபொழுது சிவத்தன்மையுடன் தோன்றினாலும் இயற்கையாக சிவனாக ஆகமாட்டான்.

44. ஸ்வபாவத்தில் அசிவனாயிருக்கப்பட்ட இந்த ஜீவன் எவ்விதத்திலும் சிவனாகான்.

45–48. ஏதோ சில ஸாதனங்களால் முக்தியில் சிவனுக்கு ஸமமாக ஆகிறான் என்று சில வாதிகள் சொல்லுகிறார்கள். இது வீண்வார்த்தையே தவிர ஒருபொழுதும் பொருள் ஆகாது. ஜீவர்கள் ஏகதேசத்தில் சிவனுக்கு ஸமமா ? அல்லது எல்லாவற்றாலும் ஸமமா ? ஏகதேசத்திலானால் ஸம்ஸாரத்திலிருக்கிற எல்லா ஜீவர்களும் சிவர்களாவார்கள்; ஏகேதேசத்தில் எல்லா ஜீவர்களுக்கும் சிவனுடைய ஸமத்வமிருக்கிறது (எல்லாரும் முக்தர்கள்); எல்லாவற்றாலும் ஸாம்யமிருந்தால் அப்பொழுது ஜீவன் எப்பொழுதும் பேதத்திற்கு காரணமில்லாதபடியாலும், பேதமில்லாதபடியாலும் சிவனே ஆகிறான்.

49. மேலும் முக்தியில் ஜீவன் சிவனுக்கு ஸமமாய் ஆனால் அந்த ஸமத்வம் கொஞ்சகாலம்தான் இருக்கும்; வந்தது போகுமன்றோ!.

50–51. (ஸித்தாந்தம்) ஆகையால் ஜீவன் ஸ்வபாவமாகவே ஸத்யாதி லக்ஷணமுடைய ஸாக்ஷாத் சிவனே; நழுவதலற்ற ஆத்மபாவத்தோடிருந்துகொண்டு (அந்தக்காண உபாதியால் ஜீவபாவமடைந்து) பர வித்யையால் (தான் பரசிவன் என்ற ஞானத்தால்) தன்னுடைய அக்ஞானத்தையும் அதனால் உண்டாகும் ஸம்ஸாரத்தையும் தானே இழுத்துக்கொண்டு தன்னுடைய பூர்ண சிவரூபத்துடன் தான் மிஞ்சியிருக்கிறான்.

52. லோகத்தில் சுக்தியில் தோன்றுகிற வெள்ளி, இது சுக்தி என்று அறியப்பட்டவுடன் எப்படி சுக்தி மாத்திரரூபமாக மிஞ்சுகிறதோ (வேறு வெள்ளி அல்லது வெள்ளி அல்லாததாக விராமல்), அதுபோல் சிவன்தான் மிச்சம்.

**53–57.** (முக்தி தசையில் ஜகத்தோன்றுததால் அதன் அபாவம் தோன்றுமே தவிர எப்படி அதிஷ்டானமாத்திரம் மிஞ்சிநிற்கும்?).

முக்தியில் ஜகத்தானது சிவனுக பாதிக்கப்படமாட்டாது, ஜகத்திற்கு அபாவம்தான் உண்டு என்று சிலர் சொல்லுகிறுர்கள்; அது மந்தபுத்தியின் பிரமம்; அபாவரூப வஸ்து பாவரூபமடைகிறது; ஜகத் பாவமுமன்று அபாவமுமன்று, பாவாபாவத்திற்கு விலக்ஷணமாயிருக்கிறது; ஆதலால் அத்யஸ்த வஸ்துவின் பாதமானது பாவமுமன்று, அபாவமுமன்று, ஆனுல் கேவலம் அதிஷ்டான மீதி மாத்திரம்தான்; ஜகத்பிரமைக்கு அதிஷ்டானம் ஸத்யஸ்வபாவமான சிவனே; அவனைத்தவிர மற்றதெல்லாம், யுக்தியாலும் பிரமாணத்தாலும் விசாரித்தால், பிரமையினுல் உண்டானவையே; ஆதலால் ஸர்வஜகத்தும் பாதிக்கப்பட்டால் சிவன் மாத்திரம் மிஞ்சியிருக்கிறுர்.

**58.** ச்ருதி ஆதாவுடன் எல்லா ஜகத்திற்கும் மிச்சம் சிவன் என்று சொல்லுகிறது; இதில் ஸந்தேகமில்லையென்று மும்முறை சபதம் செய்கிறேன்.

**59.** ஆதலால் ஸத்ய ஆனந்த பிரகாச அத்வைதமான ஈச்வரனை ச்ருதிகளும் ஸ்மிருதிகளும் போதிக்கின்றன.

**60.** ஏகத்வத்தை போதிக்கிற ('தத்வமஸி' முதவிய) இந்த வேதவாக்கியத்திற்கு, மற்றெல்லா வாக்கியங்களும் (உபநிஷத்வாக்கியங்கள், அதையனுஸரித்த ஸ்மிருதி புராண வாக்கியங்களெல்லாம்) எப்பொழுதும் சேஷபூதமாயிருக்கும் (உள்ளடங்கியிருக்கும்).

**61.** எப்படி தேவரான மஹேச்வரன் ஒருவருக்கும் உள்ளடங்கியில்லையோ, அப்படி வேதம் மற்றென்றுக்கும் உட்பட்டதன்று; எல்லாம் சிவனுக்கு உட்பட்டது; எல்லா பிரமாணங்களும் ச்ருதிக்கு உட்பட்டனவாகும்.

62. எப்படி தாயானவள் தன்னுடைய புத்திரனுக்கு ஸத்யத்தையே சொல்லுவாளோ அப்படியே ச்ருதி எல்லா ஜனங்களுக்கும் ஸத்யத்தைச் சொல்லுகிறது.

63. ச்ருதியிலும், மஹாதேவரிடத்திலும், திருபுண்டரத்திலும், பஸ்மதாரணத்திலும் ஸ்வல்ப புண்யம்கூட இல்லாத மனிதன் சிரத்தைவைக்க மாட்டான்.

64. பாபிகளான மனிதர்களுக்கு மேற்சொல்லிய விஷயங்களில் ஸ்வபாவமாகவே த்வேஷமுண்டாகிறது.

65. புண்யசாலிகளுக்கு வேதம், சிவன், ஞானம், திருபுண்டரம், உத்தூலனம் இவைகளின் சிரேஷ்டத்தில் சிரத்தை உண்டாகிறது.

66. முன் சொல்லப்பட்ட கிரமமாக வேதங்களின் விரோதமின்மையிலும், வேதானுஸாரமான ஸ்மிருதி முதலியவைகளிலும் பாபிகளுக்கு சிரத்தை இருக்கமாட்டாது.

67. அறியாதவர்கள் விஷ்ணு முதலியவர்கள் சிவனுக்கு ஸமானமென்றும், மற்றவைகளெல்லாம் வேதத்திற்கு ஸமானமென்றும் நினைப்பதில் இஷ்டமுள்ளவர்களா யிருக்கிறார்கள்; இதற்கு பாபம்தான் காரணம்.

68. வேதம், திருபுண்டரம், சிவன் இவைகளுக்கு பாபிகள் தாழ்மையைக் கருதுகிறார்கள்.

69. மஹாதேவன், வேதம், திர்யக்திருபுண்டரம் இவைகளெல்லாம் உபயோகமற்றவை யென்று பாபிகளான பாஷண்டிகள் சொல்லுகிறார்கள்.

70. மஹா தேவன், வேதங்கள், திருபுண்டரம் இவைகளின் பெருமையை என்னால் வர்ணிக்க முடியாது.

71. வேதத்தின் பிரஹ்ம காண்டம் கர்ம காண்டத்திற்கு உட்பட்டதென்று வெகு சிரமத்துடன் சிலர் சொல்லுகிறார்கள்; அவர்கள் ஸாதுக்கள் அல்லர்; பிரட்டுக்காரர்கள்.

72. கர்த்திருத்வம், போக்திருத்வம், ஏவப்படும் தன்மை, கர்மபலன் இவைகளை பிரஹ்மஞானமானது விழுங்கிவிடுகிறது; ஆதலால் இந்த ஞானம் கர்மத்திற்கு உட்பட்டதாகாது.

73. கர்மம் ஸ்வல்ப லாபத்தைக் கொடுக்கும்; ஞானம் பூர்ண பலத்தை யளிக்கும்; அப்படியிருக்க ஞானம் எப்படி கீழ்பட்டதாகும்.

74. அபலமான (பிரயாஜம் முதலிய) கர்மங்களுக்கு பலத்துடன் கூடிய கர்மங்களின் ஸம்பந்தமாய் கீழ்த்தன்மையுண்டு; பரமான ஞானமானது பலமுள்ளதன்றோ; ஆதலால் இதற்கு கீழ்த்தன்மையில்லை.

75. கர்ம பிரகரணத்தில் (பாகத்தில்) ஞானம் சொல்லப்பட்டிருந்தால் கர்மத்திற்கு அங்கம் (கர்மத்தைச் சேர்ந்தது) என்று நினைக்கலாம்; ஞானம் வேறு பிரகரணமாக விருக்கிறது; ஆதலால் ஞானம் கர்மத்திற்கு கீழ் ஆகாது.

76. கர்மம் (ஒருகாரியத்தைச் செய்து அதற்குமேல் உண்டாகும்) ஸம்பாதிக்கத்தகுந்த பலனை உடைத்ததாயிருக்கிறது; ஞானம் (எப்பொழுதும்) ஸித்தமாயுள்ள பலனை யுடையது; அவ்விதமிருக்க கர்மத்தினுடைய சேஷத்வம் ஞானத்திற்கு எப்படிக் கூடும்?

77. இரண்டு காண்டங்களும் (கர்ம, ஞான காண்டங்கள்) அதிகாரிகளின் பேதத்தைத் தழுவியிருக்கின்றன; ஆதலால் ஒன்றுக்கொன்று எவ்விதம் குணமாயிருக்கும்.

78. அக்ஞானம் இருக்கும்போது கர்மம் உண்டாகிறது; பிரஹ்மஞானம் அப்படியன்று; இவ்விதமிருக்கையில் ஞானகர்மச் சேர்க்கை எப்படிக்கூடும்?

79. (மேலும் அக்ஞானகாரியமானபடியால்) கர்மம் அப்பிரகாசமாயிருக்கிறது; ஞானமோ பிரகாசமாயிருக்கிறது; ஆதலால் ஞான கர்ம சேர்க்கை எப்படிக்கூடும்?

80. ஆதலால் பிரஹ்மகாண்டமென்று சொல்லப்பட்ட (வேதத்தின்) வேதாந்தபாகமானது ஒருபொழுதும் கர்மகாண்டத்தின் சேஷமாகாது (அங்கமாகாது, கீழ் ஆகாது).

81–84. அப்படியே கர்ம பாகமும் பிரஹ்மகாண்டத்திற்கு ஸாக்ஷாத்தாக (நேராக) சேஷமாகாது (உட்பட்டதாக, கீழ்பட்டதாக ஆகாது); வேதாந்தவாக்கியத்தால் உண்டாகும் ஞானம், சாந்தி, தாந்தி, உபரதி, திதீக்ஷை முதலிய எல்லாக்குணங்களும் பிரஹ்ம வித்தைக்கு அங்கங்களாகின்றன (கீழ்பட்டிருக்கின்றன, உட்பட்டிருக்கின்றன); சிரவணம் வித்யைக்கு கரணமாகிறது (காரணமாகிறது); மனனமும், தியானமும் வித்யாபலத்திற்கு உபகரணங்களாகின்றன.

அக்ஞானத்தைப் போக்கடிக்க ஞானம் ஒரு ஸஹாயத்தையும் அபேக்ஷிக்கிறதில்லை; சூர்யன் இருளைப்போக்க எப்படி வேறொரு ஸஹாயத்தையும் அபேக்ஷிக்கிறதில்லையோ அவ்விதமே ஞானம் அபேக்ஷிக்கிறதில்லை.

85. க்ஷணகாலத்தில் நாசத்தையடையும் கர்மத்திற்கு தர்மாதர்மம் பலமே ஒழிய ஞானமன்று; ஆதலால் ஞானத்திற்கு கர்மம் நேரே ஸாதனமானது.

86. அதர்மத்திற்கு பலன் ஸாக்ஷாத் நரகமே ஒழிய ஞானமன்று, ஆதலால் ஞானத்திற்கு அதர்மம் ஸாதனமன்று.

87. தர்மத்திற்கு பாபநிவிருத்தி மூலமாக சித்தசுத்தி பலனாகிறது, பிரஹ்மஞானம் பலனாகாது; ஆகையால் தர்மம் ஸாதனமாகாது.

88. கர்மத்தால் சுத்தசித்தமுள்ளவனுக்கு ஸம்ஸாரத்தில் தோஷதிருஷ்டியும், அதனால் விரக்தியும், அப்படியே ஸம்ஸாரத்திலிருந்து மோக்ஷமடைய இச்சையும் உண்டாகிறது.

89–90. ஆதலால் கர்மம் கிரமமாக (படிப்படியாக, பரம்பரையாக) ஞானசேஷமாகுமேதவிர, வேறு (நேராக) ஆகாது;

ஆதலால், சொல்லியபிரகாரம், இவைகளின் சேர்க்கையும் அடியோடு இல்லை யென்று என்னால் நன்றாய் சொல்லப்படுகிறது;

ஆதலால் இரண்டு காண்டங்களுக்கும் அந்யோந்ய ஸம்பந்தம் இல்லை.

91. கெட்டமனிதர்கள் ந்யாயம்போல் தோன்றுகிற யுக்தியைக் கைக்கொண்டு வேதார்த்தத்தை குழப்புகிறார்கள்; அவர்களுடைய புத்தி சிறந்ததன்று.

92. அதுமாத்திரமல்ல, இப்படியுண்டாகும் ப்ராந்தி ஞானத்தால் நிஜவேதாந்த அர்த்தம் பாதிக்கப்படுவதால் அவர்களுக்கு எப்பொழுதும் ஸம்ஸாரத்திலிருத்தலே உள்ளது என்பதில் ஸந்தேகமில்லை.

93. ஆச்சரியம்! மோகத்தின் பெருமையைப் பாருங்கள்! வேதார்த்தத்தை விலக்கி, அதைத்தவிர மற்றதுகளில் வெகு ப்ரவிருத்திகளுடன் சுற்றிக்கொண்டிருக்கிறார்கள்.

94. புண்யத்தாலும், சம்பு பக்தியாலும், சிவப்ரஸாதத்தாலும், ஒருவன் எல்லா வேதங்களையும் நன்றாக அறிந்து நான் சொல்லிய வேதாந்தவிசார மார்க்கத்தை யடைகிறான்; வேறு ஒன்றினாலும் அடையான்.

95. ச்ருதி விஷயமாயுள்ள அவிரோதமானது என்னால் உங்களுக்குச் சொல்லப்பட்டது; மனிதனுக்கு இதில் புத்திசென்றால் முக்தி கிடைக்கும்; இதற்கு விரோதத்தில் புத்திசென்றால் அவன் நாசமடைகிறான்.

---

## அத்தியாயம் 40.

---

### (ஸர்வஸித்தியளிக்கும் கர்ம விசாரம்.)

1. ஸூதர்:—இனி, இப்பொழுது மனிதர்களுக்கு ஸர்வ ஸித்திகளையும் அளிப்பது எதுவோ அதைச் சொல்லுகிறேன்; இதுவரை என்னால் சொல்லப்படவில்லை; வெகு ரஹஸ்யமும், உத்தமுமானது.

2. ஆஸ்திகர்களால் ஸர்வஸித்தியையுமடையும் பொருட்டு சரீரத்தாலும், வாக்காலும், மனஸாலும் மூன்றுவிதமான கர்மம் செய்யப்படவேண்டியது.

3–5. ஸர்வஸித்திகரமான சரீரகர்மம் பலவிதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது; லிங்கத்தில் சிவபூஜை செய்வதும், ருத்திராக்ஷங்களை தரித்துக்கொள்வதும், ஜாபால உபநிஷத்தில் சொல்லிய 'அக்னி' என்ற ஏழுமந்திரங்களாலும், 'திரியாயுஷம்' என்ற மந்திரத்தாலும் ஜலத்துடன் சேர்ந்த பஸ்மத்தால் எல்லா அங்கங்களில் பூசிக்கொள்வதும், திருபுண்டரம் தரித்துக்கொள்வதும், சிவனுடைய உத்ஸவங்களை ஸேவிப்பதும், சிவஸ்தலங்களில் வஸிப்பதும் சரீரகர்மமாகும்.

6–8. மனிதர்களுக்கு ஸர்வஸித்தியை யளிக்கும் வாசிககர்மமாவது, சித் மந்திர ஜபமும் (பாராசக்தியின் ஹ்ரீம்முதலிய மந்திரங்கள்), பதமந்திரங்களும் (மாதிருகா மந்திரங்களும்), பிரணவ ஜபமும், ஹம்ஸமந்திர மனுஜபமும், ஷடக்ஷர மந்திர ஜபமும், காயத்ரீ ஜபமும், வேதபாராயணமும், வேதாங்கங்களின் கீர்த்தனமுமாம்.

9–11. மானஸகர்மமாவது, மகாதேவருடைய ஸ்மரணமும், அப்படியே ஸாக்ஷாத் மகாதேவியின் ஸ்மிருதியும், வேதாந்தார்த்த விசாரமும், வேதத்தைத்தவிர மற்றவைகளில் ஞாபகமற்றிருப்பதும், எல்லா லோகங்களிலும் விரக்தியும், வேதார்த்தத்தில் சலியாத நிச்சயமும், ஸ்மிருதியிலும் புராணங்களிலும் நிச்சயபுத்தியும், சிவன் மேன்மையென்ற புத்தியும், சிவனே நான் என்ற பாவனையுமாம்.

இந்த தர்மங்கள் ஸர்வஸித்திகளை யளிப்பதும் சிரேஷ்டமுமாம்.

12. சுருதி ஸ்மிருதிகளில் இவைகளைவிட சொல்லப்பட்ட வேறு தர்மங்கள் ஸர்வஸித்திகரமாகா.

13–14. மஹாதேவன் எல்லாருடைய ஆத்மாவாகவும், எல்லா வஸ்துக்களையும் பிரகாசிப்பிக்கிறவராகவும், ஸர்வாநந்தகர

ராகவும், பூர்ணராகவும், எல்லாதேவர்களுக்கும் மேற்பட்டவராக வுமிருக்கிருர் ; முற்கூறிய தர்மங்களெல்லாம் அவருக்கு முக்கிய மானவை ; ஆதலால் இவை எல்லாமனிதர்களுக்கும் ஸர்வஸித்தி யை யளிக்கின்றன.

15-16. விஷ்ணு முதலான எல்லோருக்கும் மஹாதேவரு டைய பிரஸாதத்தாலேயே இருப்பு உள்ளது; ஆதலால் மேற் சொல்லிய ஸர்வஸித்திகர தர்மங்கள் முக்கியமாய் மோக்ஷத்தைக் கொடுக்கின்றன ; பின்பு ஸர்வஸித்திகளையும் கொடுக்கின்றன ; சிவனுக்கு முக்கியமானபடியால் சீக்கிரத்தில் ஸித்திகொடுக்கின் றன.

17-24. எப்படி சிவனுக்கு ஸமானமான தேவன் இல்லை யோ, சிவஞானத்திற்கு ஸமானமான ஞானம் எப்படி இல்லையோ வேத பிரமாணத்திற்கு ஸமமான பிரமாணம் எப்படி இல்லையோ, பிராஹ்மணனுக்கு ஸமானமான மனிதன் எப்படி இல்லையோ, லோகத்தில் மேருவுக்கு ஸமமான பர்வதம் எப்படி இல்லையோ, தேகஸ்திதிக்கு அன்னபான ஸமமாய் எப்படி ஒன்றும் இல்லை யோ, லோகத்தில் எப்படி பகீரதீ (கங்கை)க்கு ஸமானமான நதி இல்லையோ, புவியில் சிவக்ஷேத்திரத்திற்கு ஸமமாய் எப்படி ஒரு ஸ்தானமுமில்லையோ அப்படி இந்த தர்மங்களுக்கு ஸமமாக ச்ரு தியிலும் ஸ்மிருதியிலும் வேறென்றுமில்லை.

25. இவைகளே எப்பொழுதும் ஸர்வஸித்தி யளிக்கின்ற வைகள்; மற்றவையன்று ; விசாரிக்குமளவில் இதில் சம்சயமில்லை; இது கேவலம் கிருபைகொண்டு என்னால் சொல்லப்பட்டது.

---

## அத்தியாயம் 41.

---

### (பாதக விசாரம்.)

1. ஸூதர் :—(ஞானோத்பத்திக்கு அனுகூலமான மூன்று விதமான கர்மம் சொல்லப்பட்டது ; அந்தக்கர்மத்தைச் செய்ய

வொட்டாமல் தடுக்கிற பாபத்தைப் போக்கடிக்க, அந்தப்பாபத்தின் ஸ்வரூபத்தைச் சொல்லுகிறார்).

இதற்குமேல் சுருக்கமாக பாபங்களைச் சொல்லுகிறேன்; அதை பாபபரிஹாரத்தின்பொருட்டு சிரத்தையுடன் கேளுங்கள்.

**2.** சுருக்கமாக பாபங்கள் பத்துவகைகளென்று பெரியோர்களால் சொல்லப்பட்டிருக்கின்றன; இவைகளில் தாரதம்யத்தால் குறைவு தாழ்வு இருக்கிறது.

**3–5.** முதலாவது 'மஹாபாதக' மென்றும், இரண்டாவது 'அதிபாப' மென்றும், மூன்றாவது 'பிராஸங்கிகா' வென்றும், நான்காவது 'பாதகம்' என்றும், ஐந்தாவது 'உபபாதக' மென்றும், ஆறாவது 'ஜாதிபிரம்சகாம்' என்றும், ஏழாவது 'ஸங்கீர்ணகரணம்' என்றும், எட்டாவது 'அபாத்ரீ கரணம்' என்றும், ஒன்பதாவது 'மலாவஹம்' என்றும், பத்தாவது 'பிரகீர்ணகம்' என்றும் சொல்லப்படும்;

**6–7.** (மஹாபாதகம்) நிஷேதிக்கப்பட்ட ஸுராபானம், பிரஹ்மஹத்தி, பிராஹ்மணர்களுடைய ஸுவர்ணத்தை பரிக்கிறது, தாயாரிடம் புணர்தல், இந்நால்வரோடும் சேர்ந்திருப்பது— இவை மகாபாதகம் என்று சொல்லப்படுகிறது.

**8–9.** ஸாக்ஷாத்தாக வில்லாத மாதிருகமனம், தன் ஸ்வபுத்திரியிடம் சேருதல், மருமகளிடம் கமனம், மதனிகமனம், சிவ, விஷ்ணு, பிரஹ்ம மூர்த்திகளை பிடுங்கி எடுத்தெரிதல், இவையெல்லாம் முனிகள் அதிபாதகமென்று சொல்லுகிறார்கள்.

**10–12.** க்ஷத்திரியன், வைச்யன், யக்ஞதீக்ஷைபெற்றவன், ரஜஸ்வலை, கர்ப்பிணி, வியாதிகிரஸ்தன் இவர்களை வதைப்பதும், சரணமடைந்த நாதனற்ற ஸ்திரீயின் கர்ப்பத்தை அழித்தலும், பொய்சாக்ஷி சொல்வதும், சிநேகிதனை வதைசெய்வதும், பிராஹ்மணர்களின் பூமியை அபகரித்துக்கொள்ளுதலும், தாயாதிகளின் பூமியை அபகரிப்பதும், தாய்வழி பாட்டன், அம்மான், ராஜா இவர்களின் பார்யையுடன் சிநேகிப்பதும்—இவையெல்லாம் 'பிரஸங்கிகா' என்ற பாபம்.

**13–16.** தாயாருடன்கூட ஜனித்தவர்களுடன் சேர்தலும், மாதாபந்துகளிடத்திலும், பௌத்ரீயிடத்திலும், மாமன் மருமகளிடத்திலும் சேருதலும், திருபுண்டரதாரண மில்லாமலிருப்பதும், விபூதிப்பூச்சு இல்லாமலிருப்பதும், ஊர்த்வபுண்டர முதலியது தரிப்பதும், பாசம், அங்குசம், கதம், தண்டம், சங்கம், சக்கிரம் முதலியவைகளை தேகத்தில் அங்கமாக தரிப்பதும் 'பாதகம்' என்று சொல்லப்படும்.

**17–20.** தாய்தந்தையின் ஸகோதரியிடம் புணர்வதும், ச்ரோதிரியன், ரித்வக், அத்யாபகன், மித்திரன் இவர்களின் பார்யையுடன் சம்பந்தப்படுவதும், தன் மைத்துனியுடன் சம்பந்தப்படுவதும், ஸ்வகோத்திர விப்ரகன்னியிடம் ஸம்பந்தப்படுவதும், நான்காவது ஆச்ரமத்திலுள்ளவளிடமும், விலக்கப்பட்டவளிடமும் சேர்தலும், பாஷாண்டி ஸ்திரீகளிடம் சேர்தலும், தன்னை சரணமடைந்த ஸ்திரீயிடம் புணர்வதும், துர்க்கை சூரியன் முதலிய தேவர்களின் விக்ரகங்களை சலிப்பதும், முக்கிய 'உபபாதகம்' என்று மகான்கள் சொல்லுகிறார்கள்.

**21–28.** பொய் மொழிதல், கோட்சொல்லுதல், ராஜகமனமும், குருமுதலியவர்களை நிர்பந்திப்பதும், வேதநிந்தையும், அத்யனனம் செய்த ச்ருதியை தியாகம்செய்வதும், தன்னுடைய அக்னிகாரியங்களை தியாகம்செய்வதும், பிதா, மாதா, ஸஹோதரி, பார்யை இவர்களைத் தியாகம் செய்வதும், பக்ஷிக்கக்கூடாததை புசிப்பதும், பிறருடைய பொருளை அபகரிப்பதும், பரஸ்திரீ ஸேவையும், யக்ஞம் செய்ய அர்ஹமில்லாதவருக்கு யாகம் செய்துவைப்பதும், சூத்திரனுக்கு அத்தியயனம் செய்துவைப்பதும், ஸர்வாதிகாரி வேலையும், மகாயந்திர பிரவிருத்தியும், மரம், செடி, கொடி இவைகளால் ஜீவனமும், ஆபிசார பிரயோகம் செய்வதும், தனக்காகவே போஜனம் செய்துகொள்வதும், அக்னிஹோத்திர முதலியனில்லாதிருப்பதும், பிரஹ்மசரியமற்றிருப்பதும், யக்ஞம் செய்யாமலிருப்பதும், பிள்ளை உண்டாக்காமலிருப்பதும், சாஸ்திர விருத்தமான அஸத்காரியங்களைச் செய்தலும், நாஸ்திக்யமும்,

கெட்ட சீலத்துடனிருப்பதும், சாஹுத்தி கமனமும், கௌண (முக்கியமில்லாத இரண்டாவதான) உபபாதகமென்று சொல்லப்படும்.

29. விப்ரர்களுக்கு ரோகத்தை யுண்டுசெய்கிறது, முகாக் கூடாததை கிராணம் செய்வது, ஸுரைமுதலியதை கிராணம் செய்வது, பசு, புருஷன் இவர்களுடன் சேர்தல், இவைகளெல்லாம் 'ஜாதிபிரம்சகரம்' என்று சொல்லப்படும்.

30. கிராம அரண்ய பசுக்களை ஹிம்ஸிப்பது 'ஸங்கீர்ணகரணம்' என்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள்.

31–32. நிந்திக்கப்பட்டவர்களிடம் தனம், அன்னம் பெற்றுக்கொள்வதும், கெட்டவழியில் ஜீவனம் செய்துகொள்வதும், பொய்யுடன் வியாபாரம் செய்தலும், சூத்திரனுக்கு யக்ஞம் செய்துவைத்தலும் 'அபாத்ரீகரணம்' என்று சொல்லப்படுகிறது.

33. பக்ஷிகளை வதைப்பதும், ஜலஸ்தலவாஸ ஜீவன்களை வதைப்பதும், மத்தியத்துடன் கலந்ததை புசிப்பதும் 'மலாவஹம்' என்று சொல்லப்படுகிறது.

இவைகளில் சொல்லப்படாத மற்றவையெல்லாம் 'பிரகீரணகம்' என்று பெரியோர்களால் சொல்லப்படுகிறது.

34. தண்டிக்கக்கூடாதவனை தண்டிப்பதும், யுத்தத்தில் பயத்துடன் புறங்காட்டி யோடுதலும் க்ஷத்திரியனுக்கு முக்கியமாக மகாபாதகமாகவும்.

35. வைச்யனுக்கு நிறையில் வஞ்சிப்பது மகாபாபமாகும்.

36–37. மாம்ஸ விக்ரயம், ஸுரா விக்ரயம், பிராஹ்மணஸ்திரீ ஸம்போகம், காபாலமதானுஸாரமும், சூத்திரனுக்கும் ஸங்கர ஜாதியாருக்கும் மகாபாதங்களாகும்.

38–39. புருஷர்களுக்கும் ஸ்திரீகளுக்கும் பாபங்கள் ஸமமென்று சொல்லப்பட்டிருக்கிறது ; (அப்படி இருந்தாலும்) ஸ்திரீகளுக்கு விசேஷமாக, நீசருடன் சேர்க்கையும், கர்ப்பத்தையழிப்பதும், பர்த்தாவை வதைசெய்வதும், பர்த்தாவின் சிஷ்யனுடன்

புணர்வதும், பர்த்தாவின் குருவுடன் சேர நினைப்பதும், மகாபாதகமென்று சொல்லப்படுகிறது.

40. விஸ்தாரமாய் சொல்வதில் என்ன பிரயோஜனமிருக்கிறது! ச்ருதி ஸ்மிருதிகளில் சொல்லப்படாத எதைச்செய்தாலும் ஒருவன் பாபியாகிறான் என்பதில் ஸந்தேகமில்லை.

41. சோகமோகங்களைத் தாண்டக்கூடிய வேதத்தின் முக்யமான ஸாராம்சம் உங்களுக்குச் சொல்லப்பட்டது; ஹே! புத்திசாலிகளே! இந்த பாபங்களையெல்லாம் நீக்கி எப்பொழுதும் தேவதேவனை சரணமடையுங்கள்!

---

## அத்தியாயம் 42.

---

### (பிராயச்சித்த முறைத்தல்.)

1. ஸூதர்:—நான் சுருக்கமாக பிரயாச்சித்த ரஹஸ்யத்தைச் சொல்லுகிறேன்; ஹே! பிரஹ்மவித்துக்களே! சிரத்தையுடன் கேளுங்கள்.

2. வேதாந்த விசாரணையால் உண்டாகும், பிரஹ்மமும் ஆத்மாவும் ஒன்று, என்ற ஞானம் புத்திபூர்வமாய் செய்யப்பட்ட எல்லாபாபத்தையும், அக்னிபோல், எரித்துவிடும்.

3. ஹே! வேதவித்துக்களே! கர்மம், கர்மத்தைச்செய்யும் கர்த்தாவை பந்தப்படுத்தும் (கர்மபல ஸம்பந்தமான பந்தம்); (அகர்த்தாவான வெறொருவனையும் பந்தப்படுத்தாது); (ஆத்மா அநாத்மா விவேகத்தையுடைய) ஞானிக்கு (ஸாக்ஷி சின்மாத்திர ஸ்வரூப ஆத்மாவுக்கு) கர்திருத்வமில்லை; கர்திருத்வத்திற்கு சாக்ஷியாயுள்ளதிற்கு கர்திருத்வ ஸம்ஸர்கம் இல்லையன்றோ!

4. கர்மம், காயிகம், வாசிகம், மானஸம் ஆக இருக்குமே தவிர வேறு ஸம்பந்தமாய் இராது; அப்படியிருக்க கர்ம ஸாக்ஷி ரூபமாயிருக்கப்பட்ட சின்மாத்திர ஸ்வரூபத்திற்கு எப்படி கர்ம

பந்தமிருக்கும் (தேகாதிகள் ஆத்மாவென்ற அத்தியாஸமுடைய கர்த்தாத்மாவுக்கு கர்ம பந்தமுண்டு, விவேகத்தால் இந்த அத்யாஸமில்லாத சிதாத்ம ஸ்வரூபத்திற்கு கர்ம பந்தமில்லை).

5. கடம்போல் புலப்படுகிற சரீரத்திற்கு சாக்ஷியிருக்கிற சித்ரூபமான தனது ஆத்மாவை (பிரகாசாந்திரமில்லாமல்) ஆத்மாவாலேயே பார்த்துக்கொண்டிருக்கிற சித்ரூபம் கர்மத்தால் எப்படிக் கட்டுப்படும்!.

6–13. எல்லா இந்திரியங்களுக்கும் சாக்ஷிரூபமாயிருக்கப்பட்டதும், பிராண அபான முதலிய பேதத்தால் பிரிவடைந்திருக்கிற பிராணனுக்கு சாக்ஷியாயிருக்கப்பட்டதும், ஸங்கல்ப விகல்ப லக்ஷணமுடைய மனஸுக்கு சாக்ஷியாயிருக்கப்பட்டதும், நிச்சய ஞானமுடைய புக்திக்கு சாக்ஷியாயிருக்கப்பட்டதும், துக்க முதலிய விசேஷணங்களுடைய அஹங்காரத்திற்கு ஸாக்ஷியாயிருக்கப்பட்டதும், சேதன லக்ஷணமுடைய சித்தமென்றதற்கு சாக்ஷியாயிருக்கப்பட்டதும், தேகேந்திரயமுதலிய சேர்க்கைக்கு யாதொரு உபதரவமில்லாமல் ஸாக்ஷியாயிருக்கப்பட்டதும் , ஜாக்ரத், ஸ்வபன, ஸுஸுப்தி அவஸ்தைகளுக்கு எப்பொழுதும் அழிவில்லாத ஸாக்ஷியாயிருக்கப்பட்டதுமான சித்ரூபத்தை தனது ஆத்மாவால் பார்க்கிறவனுக்கு கர்மபந்தம் ஏது?

14. ஸத்சித் ஆனந்த ஸம்பூர்ண லக்ஷணமுள்ளதும், அக்ஞானத்திற்கு மேற்பட்டதுமான பிரஹ்மாத்மாவை எப்பொழுதும் அறிந்தவனுக்கு கர்மபந்தம் ஏது?

15–26. விசாரமற்றதும், பரிசுத்தமானதும், எப்பொழுதும் ஸ்வபிரகாசமுள்ளதும், எப்பொழுதும் ஆகாசாதி பூதங்களுக்கும் சப்தம்முதலியவைகட்கும் ஸாக்ஷியும், கர்மநிபந்தனைக்குட்படாததும், செய்கையற்றதும், கர்மபலனுடைய அனுபவமற்றதும், ஸ்வப்பிரகாசமானதும், பிரமாணங்களுக்கு மேற்பட்டதும், பிரமாணங்களுக்கு சாக்ஷியும், உண்டாகிறது, மறைகிறது, குறைகிறது அற்றதும் ஸர்வஸாக்ஷியும், ஆத்மாவும், வாஸ்தவத்

தில் ஸர்வஹீனரும், தன்னிடத்தில் அத்யஸ்தமான பிரபஞ்சத்திற்கு ஸாக்ஷியும், புண்யபாபலேபமற்றதும், மலமற்றதும், யாதொரு கிரியையுமற்றதும், மஹத்தான ஆனந்தமும், போக்தாவின் ஸ்வரூபமும், போகமுமற்றதும், ஏவப்படுந்தன்மை முதலியதற்றதும், பிரியா அப்பிரியமற்றதும், வேதாந்தத்தில் 'இது அன்று' 'இது அன்று' என்று தனக்கு விலக்ஷணமானதை நீக்கிகாட்டப்பட்டதும், அனுவுமல்லாமலும், குட்டையில்லாமலும் ஸ்தூலமல்லாமலும், தீர்க்கமல்லாமலும் ஸத் சித் கட்டியாயிருப்பதுமான ஆத்மாவை ஆத்மாவால் அறிந்தால் கர்மத்தால் எப்படிக் கட்டுப்படுவான்.

27. அக்ஞானத்தால் உண்டாகும் கர்த்திரு காரகத்தால் உண்டாகும் கர்மம், ச்ருதி வாக்கியத்தால் உண்டாகும் ஆத்மஞானதீபத்தை எப்படிப் பாதிக்கும்.

28. கர்ம தர்மாதி லக்ஷணமுடைய அக்ஞான அந்ததமோரூபம், ஸ்வப்பிரகாசமான ஆத்மாவை ஸம்பந்தப்பட யோக்யதையில்லை.

29. மறைக்கப்பட்ட சூர்யன் எப்படி (ஸ்வபிரகாசமானதால்) இருளுடன் சேருகிறதில்லையோ அப்படி சித்பிரகாச மகாசூர்யன் தமோரூபமான கிரயையுடன் சேருகிறதில்லை.

30–31. தமோரூபமான ராகு சூரியனை ஆசிரயித்து, சூர்யபிரகாசத்தால் இருள் என்று காட்டப்பட்டாலும் இரண்டுக்கும் ஸம்பந்தமில்லை, அதுபோல, ஸ்வப்பிரகாசமான ஆத்மாவை அக்ஞானமும் அதன்காரியமும் ஆசிரயித்து, ஆத்ம பிரகாசத்தால் அக்ஞானம் விளங்கினாலும் அவைகளுக்கு ஸம்பந்தமில்லை.

32. (அக்ஞானிகள்) அக்ஞான பிரமத்தினால் ஆத்மாவுடன் கர்மத்தை சம்பந்தப்படுத்துகிறார்கள்; வித்வான்களுக்கு அந்த பிரமையில்லை; ஆதலால் கர்மஸம்பந்தமில்லை.

33. தேகாதிகூட்டத்தில் 'நான்' என்கிற புத்தியை எவன் செலுத்துகிறானோ அந்த பிராந்தனுக்குத்தான் எப்பொழுதும் கர்ம ஸம்பந்தமுண்டு.

34. விக்ஞானமுள்ளவர்களுக்கு கர்மத்துடன் ஸம்பந்த மில்லை; இது ஸத்யமென்று நான் சொல்லுகிறேன், ஸந்தேக மில்லை.

35. ஆதலால் வேதவாக்கியத்தாலும், குருமுகமாகவும் உண்டான பிரஹ்மாத்ம ஞானம் புத்திபூர்வகிருதமான பாபத்தை க்ஷணத்தில் நாசஞ்செய்கிறது.

36. ச்ருதியாலும் தேசிகராலும் உண்டாகும் அபரோக்ஷ ஆத்மஞானம், ஸம்ஸார காரணமான அக்ஞான இருட்டுக்கு சூர்ய னுயிருக்கிறது.

37. (பரோக்ஷ ஞானிகளுக்கு) மகா பாதகம் முதலிய ரஹஸ்ய, பிரஸித்த பாபங்களுக்கு பிரஹ்மஞான மடைவதுதான் பிராயச்சித்தம்.

38. அபரோக்ஷ ஞானிகளுக்கு பாதகமே இல்லை (ஆதலால் பிராயச்சித்தமில்லை); பரோக்ஷ ஞானமுடையவர்களுக்கு பிரஹ்ம ஞானம் அடைவது பிராயச்சித்தமாகும்.

39. ஞானிகளின் ஸ்திதியை யறியாமல் வெளிப்பார்வை மட்டும் உள்ள, மனிதர்கள் ஸத்துக்கள் பாபத்துடன் கூடியவர்க ளென்று நினைக்கிறார்கள்.

40. பாபங்களுக்கு பிராயச்சித்தம் பிரஹ்மாத்ம விக்ஞானம் போல பிரஹ்ம பாவனையும் பிராயச்சித்தமாகும்.

41. ச்ருதி ஆசார்யருடைய பிரஸாதத்தால் 'எல்லாம் பிரஹ்மம்' என்ற பாவனையால் க்ஷணமாத்திரத்தில் மகாபாபங்களி லிருந்து விடுபடுகிறான்.

42. குருமுகமாய் கிருகிக்கப்பட்டு, தினத்தில் பாதி 'எல் லாம் பிரஹ்மம்' என்று பாவனை செய்தால் புத்திபூர்வமாய் செய் யப்பட்ட பாபம் நசித்துப்போகும்.

43. (நிர்குண பிரஹ்மஞானம் போல ஸகுணபிரஹ்ம உபா ஸனையும், அந்த ஸகுண பிரஹ்மத்தின் ஸ்வலீலா விக்ரஹ தியா னமும் ஸர்வபாப பிராயச்சித்தமாகும்).

அத்புதமும், முக்கண்ணுடைய வுமான பரதத்வத்தின் விக்ரஹமான ஸாம்பனை ஒரு முகூர்த்தம் ஒருவன் தியானம் செய்தால் ஸகல பாபத்திலிருந்தும் விடுபடுகிறான்.

44. எல்லாவற்றிற்கும் காரணமாயும், ஸ்வரூப ஞானத்துடன் நர்த்தனம் செய்துகொண்டிருக்கிற சிவனை ஒரு முகூர்த்தம் தியானித்தால் ஸர்வபாபங்களும் போகின்றன.

45. நர்த்தனம் செய்துகொண்டிருக்கிற மகா தேவரையாவது, ஸாம்பமூர்த்தி ரூபமுள்ள மகாதேவரையாவது ஒருநாளில் பாதிபொழுது தியானம் செய்தால் பிரசித்தமான எல்லாபாபங்களும் நாசமடையும்.

46–47. திருமூர்த்திகளுக்குள் ருத்திரனை தினம் சிந்தித்தாலும், மூண்றுதினம் இந்திரிய நிக்கிரகத்துடன் ருத்திரமூர்த்தியை தியானம் செய்தாலும் ஸர்வபாதகங்கலிருந்து விடுபடுவதில் ஸந்தேகமில்லை.

48–49. ஒரு மனிதன் மூன்று தினம் விஷ்ணுவின் சுத்த விக்ரகத்தை தியானித்தாலும், ஏழுராத்திரி தியானம் செய்தாலும் ஸர்வபாதகங்களிலிருந்தும் விடுபடுவான்.

50–51. பிரஹ்மாவின் விக்ரகத்தை ஏழுராத்திரியாவது, அல்லது ஒரு மாஸமாவது தியானம் செய்தால் எல்லாபாபங்களின் நிவிருத்தியுண்டாகும்.

52–53. சைதன்ய வாசகமான (சின்மந்திரம், புவனேச்வரீ மந்திரம்) மந்திரத்தை பதினாயிரம் தடவை ஜபித்தால் பாபவிமோசனமுண்டு; பாபங்களின் தாரதம்யத்திற்கு தக்கபடி சின்மந்திரத்தின் ஜபமும் ஏற்றக்குறவாய் செய்யவேண்டும்.

54-55. மாதிருகா ரூபமாயிருக்கும் பதமந்திரத்தை பண்ணிரண்டாயிரம் செய்தால் மகாபாதக நாசமுண்டு; பாவதாரதம்யதிற்கு தக்கபடி பதமந்திரத்தின் ஜபமும் செய்யவேண்டும்.

56. பிரஹ்மவாசகமான பிரணவமந்திரத்தை ஒருலக்ஷம் ஜபித்தால் எல்லாபாபத்தின் நிவிருத்தியுண்டு.

57. கழுத்துவரையில் ஜலத்திலிருந்துகொண்டு ஒரு லக்ஷம் ஹம்ஸ மந்திர ஜபம் செய்தால் மகாபாதக கூட்டம் தொலையும்.

58. நாபிவரையில் ஜலத்திலிருந்து ஒரு லக்ஷம் ஷடக்ஷர மந்திரம் ஜபித்தால் பாபவிமோசனமுண்டு.

59. கழுத்துவரையில் ஜலத்திலிருந்து ஒரு லக்ஷம் மூன்று வியாஹிருதிகளை ஜபித்தால் மகாபாதக நாசமுண்டு.

60. சிரத்தையுடன் வாக்கை யடக்கிக்கொண்டு லக்ஷம் காயத்ரீ ஜபம் ஜெய்தால் மகாபாப நிவிருத்தி யுண்டாகும்.

61. பிரணவத்துடனும் வியாஹிருதியுடனும் பதினாறு பிராணாயமும் தினந்தோரும் செய்தால் ஒரு மாஸத்தில் பிரஹ்மஹத்தி பாபத்திலிருந்தும் விடுபடுவான்.

62. ஸந்தோஷத்துடன் பிக்ஷையெடுத்துக்கொண்டு பசுக் கூட்டத்தில் பவமானருக்கை ஜபித்தால் ஒரு வருஷத்தில் ஸந்தேகமில்லாமல் பாபநிவிருத்தியுண்டு.

63. கோஹத்தி முதலிய பாபங்களுக்கு தினந்தோரும் தசவாரம் பாவமானீ ஜபம் அவசியம் செய்யவேண்டியது.

64. மூன்று உபவாஸமிருந்து, கழுத்துவரை ஜலத்திலிருந்துகொண்டு மூன்றுதடவை 'அகமர்ஷண' ஜபம் செய்தால் பாப நிவிருத்தியுண்டாகும்.

65. பிக்ஷையெடுத்துக்கொண்டு தினம் எண்ணாயிரம் காயத்ரீ ஜபம்செய்தால் ஏழுதினத்தில் எல்லாபாபங்களும் நாசமாகும்.

66. மூன்று உபவாஸத்திற்குமேல் நாற்பத்திரண்டு நெய் ஆகூதிகள் 'கூஷ்மாண்ட' மந்திரத்தால் செய்தால் ஸர்வபாபமும் நசிக்கும்.

67. 'சிவ ஸங்கல்ப' ஸூக்தத்தையும், 'அஸ்யவாமஸ்ய' என்ற ஸூக்தத்தையும் ஜபித்தால் ஸுவர்ணஸ்தேய முதலிய பாபங்களிலிருந்து விடுபடுவான்.

68. புருஷ ஸூக்தத்தையும், 'ஹவிஷ் பாந்தம் அஜாம் ஸ்வர்விதம்' என்ற ஸூக்தத்தையும் ஜபித்தால் குருபத்னியிடம் சென்ற தோஷம் போய்விடும்.

69. மூன்று உபவாஸமிருந்து புருஷ ஸூக்தத்தை ஆஜ்ய ஹோமம் செய்தால் ஸர்வபாப நிவிருத்தியுண்டு.

70. மூன்று ராத்திரி உபவாஸமிருந்து, ஜலத்திலிருந்து பத்துதடவை 'யச்சந்தஸாம் ரிஷபோ விச்வரூப' என்ற மந்திரத்தை ஜபித்தால் ஸுவர்ணஸ்தேய பாபத்திலிருந்து விடுபடுகிறான்.

71. மூன்று உபவாஸமிருந்து, பஸ்மம் பூசிக்கொண்டு ருத்திர ஜபம்செய்தால் ஸுராபானம் செய்தபாபம் நசிக்கும்.

72. சுக்லயஜுர் வேதத்திலிருக்கும் 'த்ருபதாதிவ முமுசான' என்ற காயத்ரீ ஜபத்தை ஜலத்திலிருந்து ஐந்து தடவை செய்தால் ஸர்வபாதக நிவிருத்தியுண்டு.

73. 'அவதெ ஹேலோ வருணெ' என்ற ரிக்கையாவது, 'ய்த் கிஞ்சித் இதம் வருண' என்ற ரிக்கையாவது ஒரு வருஷம் தினம் பத்து தடவை ஜபித்தால் மகாபாதகங்களெல்லாம் நசிக்கும்.

74. 'தரத் ஸமந்தீ தாவதீ' என்ற ஸூக்தத்தை ஜபித்தால் உண்ணக்கூடாததை சாப்பிட்ட பாபம் நிவாரணமாகும்.

75. 'இந்திரம் மித்திரம் அக்னிம் ஆஹு' என்ற ஸூக்தத்தை அரைவருஷம் ஜபித்தால் பிக்ஷெடுத்த தோஷத்திலிருந்தும், மகாபாதத்திலிருந்தும் விடுபடுகிறான்.

76. நூறு பிராணாயமம் செய்தால் ஸர்வபாப நாசமும், ஆயிரம் பிராணாயாமம் செய்தால் பவபந்தன விடுதலையும் உண்டாகும்.

77. பிரணவத்தோடும், வியாஹிருதியுடனும், சிரஸுடனும் ஜலத்தில்முழுகி மூன்றுதடவை காயத்ரீயை ஜபித்தால் ஸர்வபாப நாசமுண்டாகும்.

78. வியஹிருதியினுலாவது, பிரணவத்தினுலாவது ஆயிரம் திலஹோமம் செய்தால் ஸர்வபாபக்கூட்டம் நசித்துப்போகும்.

79. காலமே எழுந்தவுடன் 'மஹாதேவன்' என்று எவன் சொல்லுகிருனே அவனுடைய ஆயிரம் ஜன்மங்களில் செய்த பாபம் நசித்துப்போகும்.

80. பிரஹ்ம முகூர்த்தத்தில் எழுந்து சிவ கீர்த்தனை செய் தால் ஸர்வபாப நாசமுண்டு.

81–82. லோகத்தில் பாகீரதீ புண்ய நதியென்றும், காசி புண்யபுரமென்றும், வேதங்கள் புண்ணியமென்றும், சிவன்புண்ய மென்றும், திரியக் திரிபுண்டரம் புண்யமென்றும் எவன் காலை வேளையில் இந்த ஐந்து புண்ய ஸங்கீர்த்தனம் செய்கிருனே அவன் எல்லா பாபங்களிலிருந்தும் விடுபட்டு பரமான கதியை யடைகிருன்.

83–90. விஷு அயன காலங்களிலும், சந்திர சூர்ய கிர ஹண காலங்களிலும் சிவ சப்தம் ஜபிக்கிரவனும், வ்யதீபாதத்தில் பிராமணனுக்கு தனதான்யம் கொடுப்பவனும், கிருஷ்ணபக்ஷம் பஞ்சதசிதினத்தில் மகாதேவனை யுத்தேசித்து பிராஹ்மணனை புசிக்கச்செய்பவனும், கிருஷ்ண சதுர்தசியில் அப்படி செய்பவ னும், கிருஷ்ணஷ்டமியில் பிராஹ்மண போஜனம் செய்பவனும், அர்க்கவாரத்தில் நூற்றியெட்டு காயத்ரீ ஜபித்து த்விஜபோஜனம் செய்பவனும், ஆர்த்திரா நக்ஷத்திரதினத்தில் ருத்திரனை யுத்தே சித்து பிராஹ்மண போஜனம் செய்பவனும், மகாமகத்தில் மகா தேவனை நெய் அபிஷேகம் செய்பவனும் மகாபாபங்களிலிருந்து விடுபடுகிருன்.

91–93. மாகமாஸத்தில் கிருஷ்ணபக்ஷ சதுர்தசியில் மகேச் வரனை பில்வபத்திரத்தால் பூசித்தாலும், பங்குனி மாதத்தில் உத் திரபல்குனி நக்ஷத்திரத்தில் பலாச புஷ்பத்தால் மகாதேவனை பூஜித்தாலும், வஸந்தகாலத்தில் சித்திரா நக்ஷத்திரத்தில் நல்ல வாஸனையுள்ள புஷ்பங்களால் ஹரனைப் பூஜித்தாலும் ஸர்வபாப விநாசமுண்டாகும்.

**94.** ஒருதடவை கங்கையில் ஸ்நாநம்செய்து காசி விச்வேச்வரனை தரிசித்தால் ஸர்வ பாதகங்களிலிருந்தும் விடுதலையடைகிறான்.

**95.** கோதவரியில் குரு ஸிம்ஹராசியில் இருக்கும்பொழுது ஒருதடவை ஸ்நாநம்செய்தால் பிரஹ்மஹத்தி முதலிய பாபங்கள் போகும்.

**96–99.** மாகமாஸம் மகாநக்ஷத்திரத்தில் ஸுவர்ணமுகரீ நதியிலும், சிவகங்கையில் பர்வத்துடன்சேர்ந்த அர்க்கவாரத்திலும், ஸோமவாரம்கூடிய அமாவாஸையிலும், ஸப்தமியிலும், அர்க்கவாரத்தில் காவேரி நதியிலும், கந்தமாதன பர்வதத்திலும் ஸ்நாநம்செய்தால் எல்லா பாபங்களும் நாசமாகும்; ராமேச்வரத்திலிருக்கும் தேவனை தரிசித்தால் எல்லா பாபவிமோசனமுண்டு.

**100.** பக்தியுடன் பிரஹ்ம நிஷ்டனை அன்னபானங்களால் பூஜித்தால் எல்லாபாபங்களும் விலகி சங்கரனை யடையலாம்.

**101.** ஸ்ரீமத்தப்ரசபையில் நர்த்தனம்செய்யும் தேவநாயகனை தினந்தோரும் பார்த்தால் பத்து தினத்தில் எல்லாபாபங்களும் நாசமாகும்.

**102.** பாபிஷ்டர்களாகவும் அயோக்கியர்களாகவு மிருக்கிறவர்களுக்கு ஸந்யாஸமும் பிராயச்சித்தமாகும்; யோக்யர்களுக்கு ஸந்யாஸம் முக்தி ஸாதனமாகும்.

**103–105.** விருத்திபேதத்தால் ஸந்யாஸம் நான்கு விதமாகிறது; கூடீசகமென்றும், பகூதகமென்றும், ஹம்ஸமென்றும், பரஹம்ஸமென்றும் சொல்லப்படுகின்றன; கூடீசகனைவிட பகூதகன் சிரேஷ்டனென்றும், அவனைவிட ஹம்ஸனும், அவனைவிட பரஹம்ஸன் சிரேஷ்டமென்றும், பரஹம்ஸனைவிட சிரேஷ்ட ஆச்ரமி இல்லையென்றும் சொல்லப்படுகிறது.

**106–107.** கூடீசக, ஹம்ஸ, பகூதக ஸந்யாஸிகள் நித்யானுஷ்டானம் செய்துகொண்டு சுத்தர்களாக விருக்கிறார்கள்; சித்த

சுத்தியுண்டாகி கிரமமாய் அவர்களுக்கு முமுக்ஷுத்வம் உண்டாகிறது; முமுக்ஷுத்வம் உண்டாகவே பரஹம்ஸர்களாகிறார்கள்.

108. பரஹம்ஸர்கள் விதியுடன் நித்யகர்மங்களை விட்டுவிட்டு சமாதி ஸாதனங்களுடன் வேதாந்த ஞானத்தை அப்யாஸம் செய்யவேண்டும்.

109–110. கூடீசகனும் பகூதகனும் திருதண்டம், கமண்டலம், ஜலபாத்திரம், பவித்திரம், காஷாயம், சிகை, யக்ஞோபவீதம் இவைகளை தரித்துக்கொள்ளவேண்டும்.

111. ஹம்ஸனுக்கும் ஜலபாத்திரம், பவித்திரம், குண்டிகை, உபவீதம் இவைகள் ஸமமாய் உள.

112. ஹம்ஸனும் பரமஹம்ஸனும் அழகான கணுவில்லாத ஒரு மூங்கில் தண்டத்தையும், காஷாயத்தையும் தரித்துக்கொள்ளவேண்டும்.

113–114. ஹம்ஸனுக்கும் பரமஹம்ஸனுக்கும் தலைமொட்டையடித்துக்கொள்வது ஸமானம்; ஸ்நாநம், சௌசம், சிவத்யானம், சிவார்ச்சனை, பஸ்மகுண்டனம், திருபுண்டரதாரணம், சாந்தி, தாந்தி, கோபமுதலிய வில்லாமை, சாதுர்மாஸ்யம் இவையெல்லாம் ஸமமாக உள.

115. மகாபாபியாயுள்ளவன் சாஸ்திரத்தில் சொல்லியபடி கர்ம ஸந்யாஸம் செய்துகொண்டு அதற்கு மேல், பாபசுத்திக்கு பிராணத்தியாகம் செய்யவேண்டும்.

116. ஸன்யாஸத்துடன் கூடிய யோக்யமுள்ளவன் ஒருபொழுதும், மோகத்தாலும்கூட, பிராணத்யாகம் செய்துகொள்ளக்கூடாது; ஞானத்தையே எப்பொழுதும் அப்யஸிக்கவேண்டும்.

117. ஸன்யாஸத்திற்கு ஸமமான பிராயச்சித்தம் ஒன்றுமில்லை; ஆதலால் பாபநிவிருத்தியின் பொருட்டு பரிதாபத்துடன் ஸன்யாஸம் செய்துகொள்ளவேண்டும்.

118. ரஹஸ்யமானதும், பிரஸித்தமானதுமான பாபங்களுக்கு ஸந்யாஸம் பிராயச்சித்தமாகும்.

**119–120.** பாபங்களுக்கு சிலாக்கியமான பிராயச்சித்தம் யாதெனில், சிவஞானம், சிவதியானம், சிவ சப்த ஜபம், 'அக்னி' என்ற மந்திரத்தால் திருபுண்டரதாரணம், ருதிராக்ஷதாரணம், ஸன்யாஸம் இவைகளே!

**121.** ஸர்வவேத ரகஸ்யமான இந்த ஸங்கதிகள் கிருபை கொண்டு என்னால் சொல்லப்பட்டன; தேசிக சிரேஷ்டரும், எல்லா வேதார்த்தத்தை யறிந்தவரும், கருணையுள்ள என் குருவால் எனக்கு இது சொல்லப்பட்டது.

---

## அத்தியாயம் 43.

---

### (பாபசுத்தி யுபாயம்).

**1.** ஸூதர்:—ஹே! பிரஹ்மவித்துக்களே! மறுபடியும் பாபசுத்திசெய்துகொள்ள உபயாத்தைச் சொல்லுகிறேன்; வெகு சிரத்தையுடன் கேளுங்கள்.

**2.** பூமியில் சிவனால், மனிதர்களுக்கு பாபசுத்தியின் பொருட்டு, க்ஷேத்திரங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன; அவைகள் முழுவதையும் சொல்லுகிறேன்.

**3–4.** ஸர்வார்த்த ஸாதனமான அமரேசம் என்ற ஸ்தானம் ஒன்றுண்டு; அவ்விடத்தில் ஈசனுக்கு 'ஓம்காரம்' என்று பெயர்; மகேச்வரீக்கு 'சண்டிகா' என்று பெயர்; அவ்விடத்தில் தேவனையும் தேவியையும் அந்தந்தப் பெயரால் பூஜித்தால் எல்லாபாபங்களும் நாசமாகும்.

(இதேமாதிரியாக அடியில் சொல்லப்படும் க்ஷேத்திரங்களில் பூஜைசெய்கிறவன், எல்லாபாதகங்களிலிருந்தும் விடுபடுகிறான்).

**5-6.** பிரபாஸ க்ஷேத்திரம்; சிவன் 'ஸோமநாதன்; தேவி 'புஷ்கரேக்ஷணீ.'

**7–8.** நைமிச க்ஷேத்திரம்; 'தேவதேவன்', தேவி 'லிங்கதாரிணீ'.

9–10. புஷ்கர க்ஷேத்திரம்; 'ரஜோகந்தி' தேவன், 'புருஹூதா' தேவி.

11–12. ஆஷாடீ க்ஷேத்திரம்; 'ஆஷாடீசன்' தேவன், 'ரதி' தேவி.

13–14. சண்டமுண்டீ க்ஷேத்திரம்; 'தண்டீ' தேவன், 'தண்டினீ' தேவி.

15–16. பாரபூதி க்ஷேத்திரம்; 'பாரபூதி' தேவன், 'பூதி' தேவி.

17–18. நகுலம் க்ஷேத்திரம்; 'நகுலேசன்' தேவன், 'நகுலேச்வரீ' தேவி.

19–20. ஹரிச்சந்திர க்ஷேத்திரம்; 'ஹரன்' தேவன், 'சண்டிகா' தேவி.

21–22. ஸ்ரீபர்வத க்ஷேத்திரம்; 'திருபுராந்தகன்' தேவன், 'மாயாவீ' தேவி.

23–24. ஜப்யேச்வரம் க்ஷேத்திரம்; 'திருசூலி' தேவன், 'திருசூலா' தேவி.

25–26. ஆம்ராத கேச்வரம் க்ஷேத்திரம்; 'ஸூக்ஷ்ம' தேவன்; 'ஸூக்ஷ்மா' தேவி.

27–28. மஹாகால க்ஷேத்திரம்; 'மஹாகாலன்' தேவன், 'சங்கரீ' தேவி.

29–30. மத்தியமா ஸ்தானம்; 'சர்வ' தேவன், 'சர்வாணீ' தேவி.

31–32. கேதாரம் க்ஷேத்ரம்; 'ஈசானன்' தேவன், 'மார்கதாயினீ' தேவி.

33–34. பைரவம் க்ஷேத்ரம்; 'பைரவர்' தேவன், 'பைரவீ' தேவி.

35–36. கயா க்ஷேத்ரம்; 'பிரபிதமஹன்' தேவன், 'மங்களா' தேவி.

37–38. குருக்ஷேத்ரம் க்ஷேத்ரம்; 'ஸ்தாணு' தேவன், 'ஸ்தாணுபிரியா' தேவி.

39–40. லாகுலம் க்ஷேத்ரம்; 'ஸ்வயம்பூ' தேவன், 'ஸ்வாயம்புவீ' தேவி.

41–42. கனகலம் க்ஷேத்திரம்; 'உக்ரன்' தேவன், 'உக்ரா' தேவி.

43–44. விமலேச்வரம் க்ஷேத்ரம்; 'விச்வன்' தேவன், 'விச்வேசா' தேவி.

45–46. அட்டஹாஸம் க்ஷேத்ரம்; 'மஹாநந்தர்' தேவன், 'மஹாநந்தா' தேவி.

47–48. மஹேந்திரம் க்ஷேத்திரம்; 'மஹாந்தகன்' தேவன், 'மஹாந்தகா' தேவி.

49–50. பீமம் என்ற க்ஷேத்திரத்தில், 'பீமேச்வரர்' தேவன், 'பீமேச்வரீ' தேவி.

51–52. வஸ்திராபதம் என்ற க்ஷேத்ரத்தில் 'பவன்' தேவன், 'பவானீ' தேவி.

53–54. 'அர்த்தகோடி' ஸ்தானத்தில் 'மகா யோகி' தேவன், 'ருத்ராணீ' தேவீ.

55–56. அவிமுக்தம் (காசி) என்ற ஸ்தானத்தில் 'மஹா தேவன்' தேவன், 'விசாலாக்ஷி' தேவீ.

57–58. மஹால்யம் என்ற க்ஷேத்ரத்தில் 'ருத்ரன்' தேவன், 'மஹாபாகா' தேவீ.

59–60. கோகர்ணம் என்ற ஸ்தானத்தில் 'மஹாபலர்' தேவன், 'பத்ரகர்ணிகா' தேவீ.

61–62. பத்ரகர்ணம் என்ற க்ஷேத்ரத்தில் 'சிவன்' தேவன், 'பத்மா' தேவீ.

63–64. ஸுவர்ணாக்ஷம் என்ற க்ஷேத்ரத்தில் 'ஸஹஸ்ராக்ஷ' தேவன், 'உத்பலாக்ஷீ' தேவீ.

**65–66.** ஸ்தாணு வென்ற க்ஷேத்ரத்தில், 'ஸ்தாண்வீச்வ ரர்' தேவன், 'ஸ்தாண்வீச்வரீ' தேவீ.

**67–68.** மேன்மைபொருந்திய கமலாலயம் என்ற ஸ்தான ஒன்றிருக்கிறது; அதில் கமலாக்யர் என்ற சிவனும், கமலா என்ற தேவியும் இருக்கிறார்கள்; அவ்விடத்தில் தேவனையும் தேவியையும் சிரத்தையுடன் பூஜித்தால் ஸர்வபாதகங்களும் நீங்கும்.

**69–70.** ச்சாகண்டலம் என்ற க்ஷேத்திரத்தில் கபர்தீ ஈசனும், பிரசண்டா தேவியும் இருக்கிறார்கள். அவர்களை பூஜித்தால் எல்லா பாபங்களும் விலகும்.

**71–72.** குரண்ட க்ஷேத்திரம்; ஊர்த்துவரேதர் தேவன், திருஸந்தியை தேவி; பூஜாபலம் முன்போல்.

**73–74.** மாகோடி க்ஷேத்திரம்; மஹோத்கடர் தேவன், முகேடீச்வரீ தேவி; பூஜாபலம் முன்போல்.

**75–76.** மண்டலேச்வரம் க்ஷேத்திரம்; ஸ்ரீகண்டர்தேவன், சாண்டகீதேவி; பூஜாபலம் முன்போல்.

**77–78.** காலம்ஜரம் க்ஷேத்திரம்; நீலகண்டர் தேவன், காளி தேவீ; பூஜாபலம் முன்போல்.

**79–80.** சங்குகர்ணம் க்ஷேத்திரம்; மஹாதேஜர் தேவன், த்வனீ பரமேச்வரீ; பூஜாபலம் முன்போல்.

**81–82.** ஸ்தூலேச்வரம் க்ஷேத்திரம்; ஸ்தூலர் தேவன், ஸ்தூலாதேவீ; பூஜாபலம் முன்போல்.

**83–84.** ஸ்ரீமத் வியாக்ரபுரம் க்ஷேத்திரம்; ஸபாபதி தேவன், தப்ரஸபாதிபா தேவீ; பூஜாபலம் முன்போல்.

**85–108.** (வியாக்ரபுரி மஹாத்மியம்). இந்த விடத்தில் ஸ்வாத்மாநந்த ஸந்தோஷத்தால் ஈசன் நர்த்தனம் செய்கிறார்; இந்த நர்த்தனம் செய்கிற ஈசனை அம்பிகை பார்த்துக்கொண்டிருக்கிறாள்; இந்த விடத்தில் பக்திமான்களுக்கு மஹேச்வரன் பிரஸாதம்செய்கிறார்; இந்தவிடத்தில் நர்த்தனம்செய்யும் ஈசனை

தரிசித்தால் மனிதனுக்கு ஸம்ஸார விமோசனமுண்டு; க்ஷேத்திரங்களுக்குள் இது உயர்ந்த க்ஷேத்திரம்; இந்தவிடத்தில் செய்யப்பட்ட ஜபம், தானம், ஹோமம் எல்லாம் கணக்கற்ற குணத்தைக் கொடுக்கும்;

இந்த க்ஷேத்திரத்தில் சிவகங்கையென்ற பெரிய தடாகமிருக்கிறது; இதற்கு தெற்கில் ஈசுவரன் நர்த்தனம் செய்கிறார்; இந்த தடாகத்தில் தினம் ஸ்நானம்செய்து, சிரத்தையுடன் ஸபாபதியை தரிசித்து, எண்ணாயிரம் ஷடக்ஷரம் ஜபம்செய்தால் மஹத்தான பாபங்கள் நாசமாகும்; மேஷ மாதத்தில் பர்வத்திலும், ஆர்த்திரா நக்ஷத்திரத்திலும், விருஷபமாதத்தில் விருஷபோதயத்திலும், மிதுன மாதத்தில் கிருஷ்ணாஷ்டமியிலும், ஆஷாட மாதத்தில் கிருஷ்ணபக்ஷ சதுர்தசியிலும், சிராவணமாதத்தில் பவுர்ணமியிலும், கன்னியாமாதத்தில் ஜன்மநக்ஷத்திரத்திலும், அர்க்கவாரத்திலும், துலாமாதத்தில் பூர்வபல்குணி நக்ஷத்திரத்திலும், விருச்சிகமாதத்தில் கிருத்திகையிலும், தனுர்மாதத்தில் ரௌத்ர நக்ஷத்திரத்திலும், மகர மாதத்தில் புஷ்யத்திலும், அர்க்கவாரத்திலும், மாக மாதத்தில் மக நக்ஷத்திரத்திலும், பங்குனி மாதத்தில் உத்திர பல்குனியிலும் இந்த தடாகத்தில் ஸ்நாநம்செய்தால் பிரஸித்தமான பாபங்களெல்லாம் நாசமாகும்;

இதற்கு ஸமமான ஸ்தானம் மூன்று லோகங்களிலும் இல்லை; இந்த ஸ்தானத்தில் வஸிப்பதினாலேயே பவபந்தனம் நீங்கும்;

இந்த க்ஷேத்திரத்தில் பிரஹ்ம வித்துக்களுக்கு அன்னபானம் நித்தியம் அளித்தால் பரம கதிகிடைக்கும்; யோகிக்கு இந்த விடத்தில் கிரகமாவது மட்மாவது ஒருவன் தானம்செய்தால் எல்லா பாபங்களும் நீங்கி பரமசிவனை யடைவான்;

முன்காலத்தில், வெகு கருணையுடன் சம்பு மனிதர்களுடைய ஸர்வதோஷ நிவிருத்தியின்பொருட்டு இந்த ஸ்தானத்தை சிருஷ்டித்தார்; பலகோடி ஜன்மங்களில் செய்த புண்யத்தால் இந்த ஸ்தானம் மனிதர்களுக்கு கிடைக்கும்;

எப்பொழுதும் எல்லா ஜந்துக்களால் ஸேவிக்க வேண்டிய தும், வெகு சோபனமானதும், பாபாசியை நிவர்த்திக்கக்கூடிய துமான இந்த ஸ்தானம் என்னால் சொல்லப்பட்டது.

---

## அத்தியாயம் 44.

---

### (திரவ்ய சுத்தி).

1. ஸூதர்:—இதற்குமேல் ஆத்மாவின் ஸ்வதசுத்தியை அறியும்பொருட்டு சுருக்கமாக பதார்த்த சுத்தியைச் சொல்லுகி றேன்; சிரத்தையுடன் கேளுங்கள்.

2. திரவியம் ஆத்மாவென்றும் அனாத்மாவென்றும் இரண்டு பிரிவாகவிருக்கிறது; ஸத்யஞான ஆனந்த லக்ஷணமான ஆத்மதிர வியம் இயற்கையாகவே சுத்தமாயிருக்கிறது.

3. (ஆத்மாவில் கல்பிக்கப்பட்டபல வியக்திகளுக்கு அதிஷ் டானமாயிருப்பதால், அந்த) ஸத்தா மாத்திரத்தில் தோஷமில்லை; ஏனெனில் ஸத்தா (ஆத்மாவாயிருப்பதால்) அது எப்பொழுதும் ஸ்வதசுத்தமாயிருக்கிறது. ஸத்தை ஸ்வத அசுத்தமாயிருந்தால் அப்பொழுது எல்லாம் அசுத்தமாகிவிடும்.

4. அசுத்த (துஷ்ட) ஸத்தா ஸம்பந்தத்தால் எல்லாம் துஷ் டமாகிவிடுமன்றோ! அப்படியானால் ஒருபொழுதும் (ஆத்மலாபத் தின்பொருட்டு) சுத்திஸித்தியாகாது.

5. ஸத்தா சூன்யமோ துச்சமாயிருக்கிறது; ஸத்தையோ இயற்கையிலேயே சுத்தமாயிருக்கிறது; அப்படியே அறியக்கூடிய வஸ்து ரூபமுள்ள (ஞானத்தன்மையாயுள்ள, ஞப்திரூபமுள்ள) ஞானமும் இயற்கையிலேயே எப்பொழுதும் சுத்தமாயிருக்கிறது.

6–9. எல்லா ஜனங்களாலும் ஜடரூபத்தில்தான் அசுத்தி காணப்படுகிறது; ஞானமோ ஸ்வதபிரகாசமுள்ளது; அது தோ ஷப்பட்டால் எல்லாம், இந்த தோஷச் சேர்க்கையால், தோஷ

முள்ளதாகிவிடும்; அப்படியானல் சுத்தி ஒருபொழுதும் ஸித்தி யாகாது.

ஸ்புரணமற்ற வஸ்து எப்பொழுதும் துச்சமே; துஷ்டகாரண மான ஞானத்தில் தோஷமிருப்பதாக சொல்லும்பக்ஷத்தில், பிர காசத்திற்கு உபாதிபூதமான விருத்தியால் (அபிவ்யஞ்சக விருத் தியால்) ஞானத்தில் தோஷமிருக்குமேதவிர ஸ்வபாவமாகவிராது. அப்படியிருந்தால் எல்லா ஞானமும் ஸ்வயமாகவே துஷ்டமாகி விடும்.

ஆதலால் ஸ்புரணரூபமான ஞானம் எப்பொழுதும் சுத்த மானது.

10–15. ஆனந்தம் புருஷர்களால் விரும்பப்படுகிறபடியால் ஸ்வயம் சுத்தமாயிருக்கிறது; அசுத்தத்தை ஒருபொழுதும் புரு ஷர்கள் விரும்பமாட்டார்களன்றே!

பிரஹ்மாதி ஸ்தம்பபரியந்தம் எப்பொழுதும் ஸுகத்தை விரும்புகிறார்கள்.

விஷயங்களுடன் இந்திரியங்கள் சேருவதால் எப்பொழுதும் ஸுகம் உண்டாகி, உடனே காணப்படாமல் போகிறது; ஆதலால் ஆனந்தம் துஷ்டமாயிருக்கிறது என்று நினைப்பது சரியன்று; (ஸுகத்தை) பிரகாசம்செய்கிற மனோவிருத்தியினுல் ஸுகத்தில் தோஷம் உண்டேதவிர ஸ்வயமாகவில்லை; ஆத்மரூபமான ஸுகம் நித்யம், ஜன்ம நாசமற்றது.

பிரியத்தை விரும்புகிறபடியால் தன் ஆத்மா ஸுகமென்ப தில் ஸந்தேகமில்லை; ஆத்மாவிற்கும் ஸுகத்திற்கும் எப்பொழு தும் பிரேமாலம்பணம் (பிரியத்தின் விருப்பம்) காணப்படுகிறது; ஆதலால் ஸுகமும் ஆத்மாவும் எப்பொழுதும் ஐக்கியமுள்ளது.

ஆகையால் ஸுகம் எப்பொழுதும் ஆத்மாவாக விருக்கிற படியால் நிர்தோஷமேயாகும்.

16. ஆதலால் ஸத்சித் ஆனந்த ஆத்மா எப்பொழுதும் ஸ்வ பாவ சுத்தன் என்பதில் ஸந்தேகமில்லை; ஆதலால் ஸத்யாதி லக்ஷ ணமுடைய ஆத்மதிரவ்யம் ஸ்வத சுத்தமானது.

17. அந்த ஆத்மதிரவ்யம் அக்ஞான உபாதிசேர்க்கையால் அசுத்தம்போல் தோன்றுகிறது; அதற்கு முக்கியமான சுத்தி ஞானத்தாலேயேதவிர கர்மத்தாலன்று.

18. ஸ்வத சுத்தமான ஆத்மவஸ்துவிற்கு அக்ஞானத் தால் அசுத்தி ஏற்படுகிறது; அக்ஞான நிவிருத்தியினுலேயே ஸ்வ பாவமான சுத்தி விளங்குகிறது.

19. கர்மத்தால் சுத்தி உண்டாகும் பக்ஷத்தில் அது நசித் துப் போகும்; ஏனெனில் கர்மத்தால் ஸம்பாதிக்கப்பட்டது அநித் யம், நித்யம் அல்லவென்று எல்லோருடைய ஸம்மதம்.

20. சத்சித் ஆனந்த ரூபனுயுள்ள ஆத்மா ஸ்வயமாகவே எப்பொழுதும் சுத்தன்; அக்ஞானத்தால் அவனுக்கு ஜீவத்தன்மை யுண்டாகிறது; அது எப்பொழுதும் ஸ்வபாவமாக ஆகமாட்டாது.

21. ஆகையால் ஜீவனுக்கும் ஈசுவரனுக்கும் ஏகத்தன்மை யை அளிக்கிற ஞானத்தினுலேயே ஆத்மவஸ்துவிற்கு சிரேஷ்ட மான சுத்தியென்று சொல்லப்பட்டிருக்கிறது; ஒருக்காலும் கர் மத்தால் சுத்தியாகாது.

22. அக்ஞானத்தால் மூடப்பட்ட ஜீவனுக்கு வியவஹார காலத்தில் வேதோக்த கர்மத்தால் சுத்தி உண்டாகும்; ஆனல் அவனுக்கு சிரேஷ்டமான சுத்திஞானத்தாலேதான்.

23. அனுத்ம ரூபமுள்ள பதார்த்தம் எப்பொழுதும் ஸ்வ பாவத்திலேயே அசுத்தம்; ஆனுலும் வியவஹாரதசையில் அதற் கு சுத்தி சொல்லப்பட்டிருக்கிறது.

24. அனுத்ம வஸ்துவும் அத்யாத்மகமென்றும் (ஆத்ம வஸ்துவை அனுஸரித்துள்ளது), அதி பௌதிகமென்றும் (வெ ளிபதார்த்தமான பூதங்களை அனுஸரித்தது) என்றும் இரண்டு விதம்; தேகம், இந்திரியங்களுடன் கூடிய அஹம் (தான்) என்கிற புத்தியினுல் கிரகிக்கத்தகுந்தவைகளுக்கு அத்யாத்மம் என்று சொல்லப்படுகிறது.

25. பிருதிவி முதலிய பூதங்கள், அவைகளில் நின்று உண்டாகும் சப்த, ஸ்பர்ச முதலியவை ஆதிபௌதிகம் என்று சொல்லப்படும்.

26. வேதத்தில் சொல்லிய ஸம்ஸ்காரத்தாலும், சிவபாவனையாலும், அவ்விதமே ஹிம்ஸைமுதலியவைகளை விலக்குவதினாலும் தேக சுத்தியுண்டாகும்.

27. இந்திரியங்களுக்கு அவைகளின் அதிஷ்டான தேவதைகளை நினைப்பதினாலும், சிவபாவனையினாலும், சுத்தியுண்டாகிறது.

28. பிராணனுக்கு பிராணாயாமத்தாலும், அதிஷ்டான தேவதை ஸ்மரணத்தினாலும் ஸ்வபாவனையாலும் சுத்தி யுண்டாகும்.

29. கெட்ட சிந்தனையற்றிருப்பதாலும், சிவபாவனையாலும் மனமுதலியவற்றிற்கு ஸம்சயமில்லாமல் சுத்தியுண்டாகும்; ஸமாதியில் லயமடைவதாலும் மனதிற்கு சுத்தி சொல்லப்பட்டிருக்கிறது.

30. தேகாதிகளின் சுத்தியால் நான் சுத்தம் என்ற பிரமையினால் தனது ஆத்மாவை சுத்தம் என்று நினைப்பது வியாவஹாரிகம் (பாரமார்த்திகமன்று).

31. சரீரம் முதலியவைகளின் அசுத்தியினால் சேதனனை ஜீவன் வியவஹாரதசையில் அசுத்தனாக காணப்படுகிறான்; சந்திரன் நிச்சலனாயிருந்தாலும் சலிக்கிற ஜலமுதலியவற்றால் சலிக்கிறதாக காணப்படுவதுபோல.

32. பூத பௌதிக பதார்த்தங்களுக்கு பிரஹ்ம பாவனையால் ஸந்தேகமில்லாமல் சுத்தி யுண்டாகிறது; இது ஸத்யமென்று என்னால் சொல்லப்படுகிறது.

33. பிரஹ்ம பாவனையால் எல்லாம் சுத்தம் என்று பார்க்கிறவனுக்கு விடக்கூடியது ஒன்றுமில்லை; இது ஸத்யமே, ஸந்தேகமில்லை.

34. பிரஹ்மம் எல்லாம் என்ற ஞானமில்லாமலாவது, அல்லது பாவனாபலமில்லாமலாவது திரவியங்களுக்கு ஒருபொழுதும் சுத்தியில்லை.

**35.** சுத்தி பிராயசித்தத்தால் சிரமப்பட்டு ஸம்பாதிக்கப்பட்டாலும் அசுத்திபால் எல்லாம், அக்னி தூமத்தினுல்போல, மூடப்பட்டிருக்கிறது.

**36.** அப்படியிருந்தாலும் சிரேயஸை இச்சிக்கும் மனிதர்களால் வேதோக்தமார்க்கத்தால் அனுத்ம பதார்த்தங்களின் தாத்காலிக சுத்தி செய்யப்படவேண்டும்.

**37–38.** சண்டாளர் முதலியவர்களால் வேகவைத்த மண்பாண்டங்கள் தொடப்பட்டால் அவைகளைத் தள்ளிவிடவும்; வேகவைக்கப்படாத பாத்திரங்கள் தர்ப்பை ஜலத்தால் கழுவதினுலாவது, ப்ரோக்ஷண செய்வதினுலாவது சுத்தியாகும்.

சூத்திரனுல் தொடப்பட்ட பக்வபாத்திரங்கள் ப்ரோக்ஷணத்தாலேயே சுத்தியாகும்.

**39–40.** கையாடினதாயிருந்தால் (உபயோகப்பட்டதாயிருந்தால்) தள்ளிவிடவேண்டியது அல்லது மறுபடியும் சூளையில் வைத்து வேகவைக்கவேண்டும்; வெகு காலம் உபயோகித்த பெரிய மண்பாத்திரம் அக்னியில் வேகவைப்பதால் சுத்தியாகும்; புதிதாயிருந்தால் கழுவதினுல் சுத்தியாகும்.

உபயோகப்பட்ட மண்பாத்திரம் அமேதயத்தால் ஸ்பர்சமானுல் தள்ளிவிடப்படவேண்டியது.

**41–43.** அபக்வமாயிருந்தால் (வேகவைக்கப்படாமலிருந்தால்) தர்ப்பை ஜலத்தர்ல் கழுவவும்;

பகிஷ்டர்களாலும், தீண்டலுற்றவர்களாலும் தொடப்பட்ட கட்டை யக்ஞபாத்திரத்தை உபயோகப்பட்டிருந்தால் தள்ளிவிடவும்; இல்லாவிடில் தர்ப்பை ஜலத்தால் தெளிக்கவும்.

தேசம், காலம், பதார்த்தம், பிரயோஜனம், நம்முடைய நிலைமை, அவஸ்தை இவைகளை யோஜித்து அவைகளுக்கு தக்கபடி சுத்திசெய்யவும்.

**44.** ஆபத்துக்காலங்களில் ஒரு த்ரோணம் (மாக்கால் அளவு) பக்வம் செய்யப்பட்ட அன்னம் தொடக்கூடாத கீழ்ஜாதி

யார்களால் தொடப்பட்டால், ஜலம் தெளிப்பதினுலும், அலம்புவ தினுலும் சுத்தியாகும். மாக்காலுக்கு குறைந்ததை தள்ளிவிட வும். ஒரு பாரத்திற்கு அதிகமாயிருந்தால் ப்ரோக்ஷணம் செய் யவும்.

45. முற்கூறியது ஆபத்து இல்லாத காலங்களுக்கு அல்ல; எல்லா காலங்களிலும் ஒரு குடத்திற்கு மேற்பட்ட பக்வான்னத் திற்கு ப்ரோக்ஷணத்தால் சுத்தியாகும்.

46. அபக்வமானுல் அலம்புவதினுல் சுத்தியாகும்; பாரத் திற்கு குறைந்த பக்வான்னத்தை தள்ளவும்.

47. இரண்டு பாரத்திற்கு குறைந்தால் அலம்பவும், அதற்கு மேற்பட்டால் ஜலம் தெளிக்கவும். தீட்டுக்காரி, அந்தியஜர்களால் தொடப்பட்டதை தள்ளவும்.

48. ஆறு பாரமிருந்தால் அலம்பவும்; அதற்குமேல் ஜலம் தெளிக்கவும்; இவர்களால் தொடப்பட்ட வஸ்திரத்தை நனைக்கவும்.

49–50. நாய், பன்றி, கழுதை, ஒட்டகம் முதலியவைக ளால் தொடப்பட்டால் (வஸ்திரத்தை) நனைக்கவும்; புதிய வஸ்தி ரம், காஷாயம், அநேகவஸ்திரங்கள், சிகப்பு கருப்பு வஸ்திரங்கள், கம்பளம் முதலியவை ஜலம் தெளிப்பதினுல் சுத்தியாகும்.

அரிசி, தான்யம், வெல்லம், பால், தயிர் இவைகளை காக்கை முதயியவை தொட்டால், தொட்டபாகத்தை தள்ளிவிட்டு மிகுதி யை ஜலம் தெளிக்கவும்.

51. திரவ பதார்த்தத்திற்கு சுத்தி வாயால் ஊதுவதாகும்.

52. இதை கெட்டபாத்திரத்தில் வைத்தால் தோஷமாகும்; பக்வம் செய்த மற்ற பதார்த்தங்களுக்கு அன்னத்திற்கு சொல் லிய சுத்தியைச் செய்யவும்.

53-54. கிடைக்கக்கூடாத பதார்த்தங்களுக்கு கேவலம் ப்ரோக்ஷணத்தினுல் சுத்தி; ரோமம், நகம், புழு, கிருமி முதலிய வைகளால் தூஷிக்கப்பட்ட அன்னம் பஸ்மத்தாலும், நெய்யினு

லும், ப்ரோக்ஷணத்தினுலும் சுத்தியாகும்; விலேக்கு வாங்கின மாவுபதார்த்தங்கள் மறுபடியும் பாகத்தினுல் சுத்தியாகும்.

**55–56.** சூத்ரன், அந்தியஜன், தீண்டக்காரி இவர்களால் தொடப்பட்டால் கட்டாயம் தள்ளவேண்டும். உச்சிஷ்டத்தை தள்ளவும்; பக்ஷிக்கக்கூடிய நல்ல பதார்த்தங்களே சுத்திசெய்து எடுத்துக்கொள்ளவும்; வெகுவாயுள்ள தான்யத்திற்கும் வஸ்திரங்களுக்கும் ஜலப்ரோக்ஷணத்தால் சுத்தி.

**57.** கொஞ்சமாயிருந்தால் நனேப்பதினுல் சுத்தி; எண்ணெய் முதலியவைகள் ஸுரா ஸ்பர்சம்பட்டால் அக்னியில் சுட வைக்கவும்.

**58.** பிரஹ்ம, க்ஷத்திரிய, வைச்யர்களுக்கு அலம்புவதால் சுத்தி; நாய், சண்டாளர்களால் தொடப்பட்டால் ஜலம் தெளிக்கவும்.

**59.** தாம்ர பாத்திரங்களுக்கு புளியாலும், சாம்பல், ஜலங்களாலும் சுத்தி.

**60–63.** தூஸ்திரீ சாப்பிட்ட வெண்கல பாத்திரத்திற்கு தேய்த்து அலம்புவதால் சுத்தி.

கல்யாணம், தீர்த்தயாத்திரை, ராஜ்யகுழப்பம், பயகாலம், தேவோத்ஸவம், தரித்திரம் இக்காலங்களில் ஸ்பர்ச தோஷம் கிடையாது.

சூத்ரன், அனுலோம, பிரதிலோமர்களால் தொடப்பட்டதை இருபத்தொரு தடவை மண்ணுலும் ஜலத்தாலும் அலம்பவும்.

கற்சட்டி பாத்திரத்தை சாம்பலாலும் ஜலத்தாலும் அழுக்குப் போகும்படி இருபத்தொருமுறை கழுவவும்.

ஜலத்திலுண்டான சங்கு, சிப்பி முதலிய பதார்த்தங்களே கழுவுவதினுலும், விபூதியாலும் ஜலம் தெளிப்பதாலும் சுத்தமாகும்.

64. அதிகமாகச் சொல்வதில் என்ன பிரயோஜனம்! திருடமாக எப்பொழுதும் எல்லாம் பிரஹ்மமாக, ஸர்வதோஷ நிவிருத்தியின்பொருட்டு, சிந்திக்கவும்.

65. பிரஹ்மரூபமாக கிருஹிப்பதெல்லாம் எப்பொழுதும் சுத்தமாகவேயிருக்கும். நித்தியசுத்தமான பிரஹ்மத்தின் திருஷ்டி நிச்சயமாய் சுத்தியைக்கொடுக்கும்.

66. நித்ய சுத்தமோ எப்பொழுதும் ஸத்யாதி லக்ஷணமுள்ள பிரஹ்மமாகும்; அதன் திருஷ்டியுடன்கூடிய எல்லாம் சுத்தமாகும்.

67. அல்லது, ஸர்வதோஷ நிவிருத்தியின்பொருட்டு, கார்யமாயுள்ள எல்லாவற்றையும், தர்க்கத்தாலும், பிரமாணத்தாலும், காரணரூபமாகவே பார்க்கவும்.

68. எல்லா காரியங்களுக்கும் பரமாத்மாவே காரணம், வேறன்று, என்று வேதாந்தமும், ஸ்மிருதிகளும் ஆதாவுடன் சொல்லுகின்றன.

69. ஆதலால், ஸ்வானுபவத்துடன் எல்லாம் பரமேசுவரனாக மனிதர்கள் சிந்திக்கவேண்டியது; இப்படிச் சிந்திப்பதால் எல்லாம் சுத்தியடையும் என்பதில் ஸம்சயமில்லை.

---

## அத்தியாயம் 45.

---

### (அபக்ஷ்ய நிவிருத்தி).

1. ஸூதர்:—நல்ல விருதமுடைய முனிகளே! மேலும் சொல்லுகிறேன்; பக்ஷிக்கக் கூடாததை நிவிருத்திப்பதினால் ஹிருதயம் சுத்தமாகும்.

2. ஆஹார சுத்தியினால் ஸ்வயமாகவே சித்தசுத்தி உண்டாகிறது; சித்தம் சுத்தியானால் கிரமமாக பரமேச்வர ஞானம் உண்டாகும்.

3. பரமேச்வர ஞானம் உண்டானவுடன் ஸம்ஸாரகாரண மான கிரந்திகள் (முடிச்சுகள், அக்ஞானத்தாலுண்டான கர்த்திருத்வ போக்திருத்வ பிரமைகள்) நாசமடைவதில் ஸந்தேகமில்லை.

4. பக்ஷிக்கக்கூடாததை உட்கொள்வதால் சித்தம் ஸ்வதமாக அசுத்தமாகிறது; அசுத்தியால் மனிதர்களுக்கு திருடமாக பிராந்தி ஞானம் உண்டாகிறது.

5. பிராந்தி ஞானமடைந்த மனிதன் கெட்ட நடக்கையில் செல்ல பிரியப்படுகிறான்; அதனால் எப்பொழுதும் பாபகர்மத்தைச் செய்கிறான்.

6. அதனால் ஸம்ஸாரம் விருத்தியடைகிறது; ஒருபொழுதும் மோக்ஷம் கிட்டாது; ஆகையால் பிரயாஸப்பட்டு பக்ஷிக்கக்கூடாததை தூரத்தில் விலக்கவேண்டியது.

7. பிரஹ்ம ஞான மில்லாத ஜீவனுக்கே பக்ஷிக்கக்கூடாதென்பது உண்டு; நல்ல ஞானமுடையவர்களுக்கன்று; ஏனெனில் அந்த ஞானிக்கு எல்லாம் தனது ஆத்ம ஸ்வரூபமாய் விளங்குகிறது.

8. 'நான் அன்னம்' அப்படியே 'புசிப்பவன்' (போக்தாவும் தான், போக்யமும்தான்) என்பதே பிரஹ்ம ஞானியின் அறிவு; பிரஹ்மஞானி, தனது ஞானத்தால், எல்லா ஜகத்தையும் பிரஹ்ம ரூபமாகவே அனுபவித்து புசிக்கிறான்.

9. (சுருதி ஆதாரத்தைச் சொல்லுகிறார்). எவருக்கு பிரஹ்ம க்ஷத்திரம் முதலியன எப்பொழுதும் ஆஹாரமோ, மிருத்யு ஊறுகாயோ அந்த ஞானி முன்சொல்லியதுபோல் புசிக்கிறான் அன்றோ!

10. அந்த ஞானிக்கு இந்த எல்லா ஜகத்தும் ஞானத்தால் (அனுபவபலத்தால்) பிரஹ்ம ஸ்வரூபமாக விளங்குகிறது; இவ்விதமிருக்க ஞானிக்கு ஜகத்முழுவதும் போஜ்யமன்றோ!

11. எப்பொழுது ஜகத் ஆத்மாக தோன்றுகிறதோ அப்பொழுது (எல்லாம்) போஜ்யமாகவே ஆகும்; எப்பொழுது தன

தாத்மாவாகத் தோன்றுகிறதோ அப்பொழுது எல்லாம் புசிக்கப்பட்டதாய் விளங்கும்.

12. அப்பொழுது நாமரூபாத்மகமாக விளங்குகிற ஜகத்தும் ஸ்வயம் போஜ்யமாக ஆகிறது; சுருதி பிரமாணத்தால், தனதாத்மாவாக விளங்கும் ஜகத்தும் நிச்சயமாக புஜிக்கப்பட்டதாக ஆகும்.

13. (ஜீவரூபனுயிருக்கப்பட்ட) ஈசுவான் ஜாக்ரத்ஸ்வப்ன காலத்தில் விளங்குவதை எல்லாம் ஸுஷுப்தியில் தன்னிடத்திலேயே இழுத்துக்கொள்ளுகிறான்; மறுபடியும் அந்த பிரபு அதை சிருஷ்டிக்கிறான்.

14. எப்படி ஸ்வப்ன பிரபஞ்சத்திலுள்ள எல்லாம் உண்மையில் ஸ்வாத்மமாத்திரமோ அப்படியே ஜாகிரத் பிரபஞ்சமும் உண்மையில் ஸ்வாத்ம மாத்திரமே.

15. தன்தன் ரூபத்தையே தான் புசிக்கிறான்; தனக்கு வேறாக போஜ்யம் என்பது இல்லை; அப்படியிருந்தால் போஜ்யத்திற்கு ஸத் (இருக்கிறது என்ற) ரூபம்வரும்; (அப்பொழுது அது பிரஹ்மமே; ஏனெனில்) பிரஹ்மத்திற்குத்தான் ஸத்லக்ஷணமுண்டு.

16. 'இருக்கிறது' என்ற இலக்ஷணமுடைய ஸத்தை எப்பொழுதும் பிரஹ்மத்திற்கேதவிர வேறொன்றிற்கும் இல்லை; ஹே! ஆஸ்திகர்களே! ஸத்திற்கு வெளிப்பட்டு ஒன்றுமில்லை.

17. ஸத்திற்கு வெளிப்பட்டு ஒன்று சூன்யம்போல் இருக்குமானால் அது சூன்யமே ஆகும்; இதில் ஸந்தேகமேயில்லை; வாஸ்தவத்தில் மாயை என்பதுமில்லை.

18. எல்லோரையும் மோஹிக்கச்செய்கிற மாயை ஸத்தோ அஸத்தோ வென்ற ரூபத்தை விசாரிக்க இடமில்லாத சக்தியாயிருக்கிறது; அது சிவஞானமற்றவர்களுக்கே விளங்கும், யோகிகளுக்கு விளங்காது.

19. ஆத்ம நிஷ்டையுடைய யோகிகளுக்கு சாக்ஷியில் (தன தாத்ம ரூபத்தில்) கல்பிக்கப்பட்ட மாயை சிவஞானத்தால் பாதிக்கப்பட்டு ஸாக்ஷிரூபமாகவே விளங்குகிறது.

20. பிரஹ்ம ஞானிகளுக்குக்கூட பிராப்தகர்ம முடிவுபரியந்தம் மாயை, ஞானத்தால் பாதிக்கப்பட்டாலும், மறுபடியும் விளங்கும்; பிரதேசங்களில் திசைதெரியாதபோது சூர்யோதய முதலியதால் கிழக்கு முதலிய திசை தெரிந்துகொண்டாலும் மறுபடியும் திக்மோகம் உண்டாவதுபோல்.

21. பிரஹ்ம விக்ஞானமுடையவன் தோன்றுகிற இந்த எல்லா ஜகத்தையும் எப்பொழுதும் பார்த்துக்கொண்டிருந்தாலும், தனதாத்மாவிற்கு வேறாக பார்க்கிறதில்லை.

22. ஆகையால் பரயோகியான வித்வானுக்கு பக்ஷிக்கக்கூடாதென்பது ஒன்றுமில்லை; ஆத்மஞானமில்லாதவர்களுக்கே (சிலவற்றை) பக்ஷிக்கக்கூடாதென்பது உண்டு.

23. ஆத்மஞானமற்ற த்விஜர்களுக்கே ஆஹார நியமமான இந்த வியவஸ்தை (ஏற்பாடு) சங்கரனாலேயே ஏற்படுத்தப்பட்டிருக்கிறது.

24. வெள்வெண்காயம், ஈரவெண்காயம், உள்ளிப்பூண்டு, கிராமக்கோழி, நாய்க்கொடை, பன்றி இவைகளை புத்திமான் பக்ஷிக்கக்கூடாது.

25. உள்ளிப்பூண்டுக்கு ஸமமானவாசனை, நிறம், ஸாரமுதலியவையுடையதை, அறிந்தும் அறியாமலும், பிராஹ்மணன் சாப்பிடக்கூடாது.

26. பெருங்காயத்தைதவிர மற்ற பிசின்களையும், பூமியில் உண்டாகிற புல்லையும், புல்லுருவியையும் புஜிக்கக்கூடாது.

27–35. கீரைத்தண்டு, கத்தரிக்காய், பூவழலை பூமியிலுண்டாகும் புல், பூமியிலுண்டாகும் உப்பு, நகத்தால் கிள்ளப்பட்ட கீரை, கோயஷ்டி, ஸௌலம், வல்லூரு, புழுவைத்தின்னும்

ஜந்துக்கள், கொக்கு, வலியன்குருவி, கோகிலம், யாகத்திற்கும் திதிக்கும் விதிக்கப்பட்டிருக்கிற பாடீனம், ரோகிதம் என்கிற மீன்களைத்தவிர மற்ற ராஜீலம் (நீர்பாம்பு), ஸிம்ஹதுண்டம், சசகம், காயவைத்தது, பழையது, பதனிட்டது, மலமூத்திரம், ஸுரை (கள்) சேர்ந்தது, வீர்யம், தேகமலம், நாய், காக்கை தீண்டியது, பூச்சி; பன்றி, கழுதை, ஒட்டகம் இவைகளின் மூத்திரம்; பூனை, காக்கை, கீரிப்பிள்ளை இவை தின்ற மிகுதியும்; வேதபாஹ்யனல் தொடப்பட்டதும், சகுனி, கிராமவாஸ பக்ஷிகள், ஒரு கொளும்புடைய மாம்ஸ பக்ஷிணியான தெரியாத எல்லா மிருகங்களும்,—இவைகளைப் பக்ஷிக்கக்கூடாது.

36–41. கலவிங்கம் (கலகக்குருவி), டிட்டிபம், ப்லவம், ஹம்ஸம், சக்கிரவாகம், ஸாரஸம், ரஜ்ஜுவாலம், தாத்யூகம் (கிளி) நீண்டமூக்கும் வலைபோன்ற பாதங்களையுடைய பக்ஷிகள், குதிரை, யானை, தவளை இவைகளின் மலமூத்திரங்கள்; நரன், யானை, குதிரை, எருமைகளின் மாம்ஸம், செம்மறியாடு, வெள்ளாடு, இவைகளின் மாம்ஸமும் ரக்தமும், கோமாம்ஸம், மிருகங்களின் மாம்ஸம், ஐந்து நகங்களுடன் கூடிய மிருகத்தின் மாம்ஸம் இவைகளைத் தெரிந்தும் தெரியாமலும் புஜிக்கக்கூடாது.

42–46. எல்லா மீன் வகையும், தோலில் அடைத்த நெய் ரக்தம், பனஞ்சாறு, புழுங்கல் அரிசி சாதம், வேகவைத்த தேங்காய் ரஸம், பூமியில்படாத ஜலம், கன்றுபோட்டு பதினன்கு நாள் வரையிலும் உள்ள பால், ஒட்டகம், ஒற்றைக்கொளம்புள்ள மிருகம்; ஆடு, ஸந்திநி, கன்று இல்லாத பசு இவைகளின் பாலும், எருமையைத் தவிர மற்ற காட்டுமிருகங்களின் பாலும், மாடு, யானை, குதிரை முதலியவைகளால் முகர்ந்ததும், அறிந்து காலால் மிதிக்கப்பட்டதும், அனுலோம ஜாதியால் தொடப்பட்டதும்—இவைகளை புஜிக்கக்கூடாது.

47. மேற்சொல்லியவைகளையெல்லாம் விசேஷமாக பிராஹ்மணன் புஜிக்கக்கூடாது; பக்ஷிக்கிறவர்கள் அதோகதியடைகிறார்கள்.

48. ஆதலால் புத்திசாலியான பிராஹ்மணன் பக்ஷிக்கக்கூடாததை விளக்கி, சித்தபரிசுத்திக்காக புஜிக்கக்கூடியதை ஏற்றுக் கொள்ளவேண்டும்.

49. க்ஷத்திரியர்களுக்கும் வைசியர்களுக்கும் இவைகளில் சில புஜிக்கக்கூடியதுண்டு; ஆயினும் புஜிக்காமலிருந்தால் அவர்களுக்கு மேன்மையுண்டு.

50. சூத்திரர் முதலிய எல்லோருக்கும் பக்ஷிக்கக்கூடாதது ஒன்றுமில்லை; அப்படியிருந்தாலும் அவர்கள் புஜியாமலிருந்தால் மகத்தான பலனுண்டு.

51. புஜிக்கக்கூடியதை பக்ஷிப்பதால் மனிதனுக்கு சித்த சுத்தி யுண்டாகும்; பரமேச்வர ஞானத்தால் பவபந்தனத்திலிருந்து விடுபடுவான்.

52. பரமேச்வர ஞானம் வேதத்தாலேயே உண்டாகவேண்டும்; மற்றதால் உண்டாகாது; ஆகமங்களால் உண்டாகும் ஞானம் இந்த பரமேச்வர ஞான மாகமாட்டாது.

53. வேதத்திற்கு அன்னியமான பதினெட்டு வித்யைகளும் வேதானுஸாரமாகவே மிக ரமணீயமாக பிரவிருத்தித்திருக்கின்றன.

54–56. ஆனாலும் அவைகளில் சிற்சில விடங்களில் சில அம்சங்கள் சிவாகமத்தையும், அதன் உட்பிரிவுகளையும் அனுஸரித்தும், சில விஷ்ணுவாகமத்தையும், அதன் உட்பிரிவுகளையும், சில பிரஹ்மாகமத்தையும், அதன் உட்பிரிவுகளையும் அனுஸரித்தும், அதிகாரிக்குத்தக்கபடி கிரமமாக முக்தியின்பொருட்டு பிரவிருத்திக்கின்றனவென்று ஸத்யமாய் என்னால் சொல்லப்படுகிறது.

57. அந்தந்த ஆகமங்களில் தீக்ஷைபெற்ற மனிதன் அந்தந்த அம்சங்களை கிரகித்துக்கொள்ளலாம்; வைதிகர்கள் ஒருக்காலும் கிரகிக்கக்கூடாது.

58. இந்த என்னால் சொல்லப்பட்ட சிரேஷ்டமான இந்த ஸம்ஹிதை வேதப்பிரமாணத்தை யனுஸரித்தே இருக்கிறது;

வேதமன்றி மற்ற ஆகமங்களை யனுஸரித்த அம்சம் கொஞ்சமே னும் இல்லை.

59. ருத்திரனுடைய கிருபையாலேயே இந்த ஸம்ஹிதை என்னால் சொல்லப்பட்டது; சங்கரனுடைய பிரஸாதம் நல்ல ஞானத்திற்கு ஸாதனமன்றோ!

60. ஆதலால் த்விஜர்களின் சித்தசுத்தியின் பொருட்டு, வேதானுஸாரமாகவே, பக்ஷிக்கக்கூடாதவை என்னால் ஆதரவுடன் சொல்லப்பட்டது.

61. கேவலம் கிருபையால் சுருக்கமாக எல்லாம் சொல்லப் பட்டது; சிரத்தையுடன், பக்ஷிக்கக்கூடாததை பிரமையினலாவது புசிக்கக்கூடாது.

---

## அத்தியாயம் 46.

---

### (மிருத்யு ஸூசக விவரணம்).

1. ஸூதர்:—இதற்குமேல் சுருக்கமாக, விஸ்தாரமன்றியில் எந்த ஞான விசேஷத்தால் புருஷன் மிருத்யுவை பார்க்கிறானே அதைச் சொல்லுகிறேன்.

(மரணம் ஸமீபித்த புருஷன் காசி முதலிய க்ஷேத்திரத்தை யடைந்து ஸம்ஸார நிவர்த்திக்காக உபாயத்தை சீக்கிரம் அனுஷ்டிக்கவேண்டியதைக் கருதி மரணக்குறிப்புகளான அரிஷ்டங்களைச் சொல்லுகிறார்).

2. ஸோமச்சாயை (சுக்லபக்ஷத்வீதியை முதலிய திதிகளில் தோன்றுகிற சந்திரகலையின் அம்சம்), த்ருவ நக்ஷத்திரம், மஹாபதம் (நக்ஷத்திரக் கூட்டங்களின்வரிசை), அருந்ததீ நக்ஷத்திரம், இவைகள் எவன் கண்ணுக்கு புலப்படவில்லையோ அவன் ஒரு வருஷத்திற்குமேல் ஜீவிக்கமாட்டான் என்பதில் ஸந்தேகமில்லை.

3. சூரியனை கிரணமில்லாமலும், நெருப்பை கிரணமுள்ள தாகவும் பார்க்கிற மனிதன் பதினொன்று மாஸத்திற்குமேல் ஜீவிக் கமாட்டான்.

4. வெள்ளி, தங்கம், மலம், மூத்திரம் இவைகளை பிரத்யக்ஷ மாகவாவது அல்லது ஸ்வப்னத்திலாவது வாந்தி செய்வதாக விருந்தால் பத்து மாதத்திற்குமேல் ஜீவிக்கமாட்டான்.

5. பூத, பிரேத, பிசாசம், கந்தர்வநகாம், சிகப்புவர்ண முள்ள மரம் இவைகளைக்கண்டால் ஒன்பது மாஸத்திற்குமேல் ஜீவிக்கமாட்டான்.

6. ஒரு மனிதன் காரணமன்றியில் ஸ்தூலமாகவாவது, கிருசமாகவாவது, கருப்பு நிறமாகவாவது ஆனால் எட்டு மாஸத் திற்குமேல் ஜீவிக்கமாட்டான்.

7. தன்காலை, முன்பாகம் அல்லது பின்பாகம், சேற்றில் அல்லது புழுதியில் ஒடிந்ததாகக் கண்டால் ஏழு மாஸத்திற்குமேல் ஜீவிக்கமாட்டான்.

8. புரு, கழுகு, காக்கை, மற்ற பிரேதத்தை பக்ஷிக்கும் பக்ஷிகள் தலையில் உட்கார்ந்தால் ஆறு மாதத்திற்குமேல் ஜீவிக்க மாட்டான்.

9. காக்கைக் கூட்டத்துடன் போகிறதாகவும், புழுதி வர் ஷத்துடன் போகிறதாகவும், தன்னுடைய நிழலை விகாரமாகப் பார்த்தாலும் நான்கு அல்லது ஐந்து மாஸத்திற்குமேல் ஜீவிக்க மாட்டான்.

10. மேகமில்லாத காலத்தில் மின்னலை தனது தக்ஷண பாகத்திலும், ஜலத்தில் இந்திர தனுஸையும் பார்த்தால் இரண்டு மூன்று மாஸத்திற்குமேல் ஜீவிக்கமாட்டான்.

11. கண்ணாடி, ஜலம், பிறருடைய கண்கள் இவைகளில் தனக்குத் தலையில்லாததாக கண்டால் ஒரு மாஸத்திற்குமேல் ஜீவிக்கமாட்டான்.

12. தன் தேகத்தில் துர் நாற்றமாவது, பிண நாற்றமாவது, புளி வாஸனையாவது இருந்தால் பதினைந்துநாட்களில் நசிப்பான்.

13. எவனுடைய ஹிருதயம் சோஷித்துப் போகிறதோ, தலை புகையுடன் கூடியிருக்கிறதோ, எப்பொழுதும் நடுக்கம் உண்டாகிறதோ அவன் பத்து நாட்களுக்குமேல் ஜீவிக்கமாட்டான்.

14. எவனுக்கு பிராணவாயு வேகத்துடன் மர்மஸ்தானத்தை குத்துகிறதோ, எவனுக்கு ஜலத்தைத் தொடுவதால் உணர்ச்சியில்லையோ அவனுக்கு சீக்கிரத்தில் மரணமுண்டாகும்.

15. கரடி, குரங்கு இவைகளுடன் கூடிய ரதத்தில் தக்ஷிண தசை நோக்கிப்போகிறதாக எண்ணுகிறவன் சீக்கிரத்தில் இரப்பான்.

16. ஸ்வப்பனத்தில் கருப்பு வஸ்திரம் அல்லது நீல வஸ்திரம் அணிந்த கறுப்பு ஸ்திரீகளுடன்கூடி தக்ஷிண திக்கை நோக்கி போவதாகக்கண்டால் அவன் ஜீவிக்கமாட்டான்.

17. ஸ்வப்னத்தில் தன் கருப்பு வஸ்திரம் கிழிந்ததாகவாவது, தான் நிர்வாணமாகவாவது இருக்கக்கண்டால் அவன் வீட்டில் யமன் வந்ததாகயிருக்கிறது.

18–19. பகலில் நக்ஷத்திரங்களையும், இரவில் இந்திரதனுசையும், சந்திரனை சிகப்பாகவும், சூரியனை கருப்பாகவும், சூரிய சந்திர மண்டலங்களில் த்வாரத்தையும், ஆகாசத்தில் ரக்தமாலையையும் பார்க்கிரவன் உடனே மரணத்தையடைகிறான்.

20. சுடுகாடு, சாம்பல், ரோமம், சுஷ்கநதி, பாம்பு இவைகளை ஸ்வப்பனத்தில் கண்டால் சீக்கிரத்தில் மரணமுண்டாகும்.

21. கறுப்பாகவும், தலைமயிர் இல்லாத புருஷர்களால், ஸ்வப்னத்தில் அடிக்கப்பட்டவனாகவும் கற்களால் அடிக்கப்பட்டவனாகவும் பார்த்தால் சீக்கிரத்தில் மரணம் ஸம்பவிக்கும்.

22. சூரியோதயகாலத்தில் நரிகள் நோராக ஊளையிடுவதாகப் பார்த்தால் சீக்கிரத்தில் மரணம் உண்டாகும்.

23. பயம், நடுக்கம், சோகம், மோகம் இவை எவனுக்கு எப்பொழுதும் உண்டாகிறதோ அவன் சீக்கிரம் மரணமடைவான்.

24. எவனுடைய நாக்கு வரட்சியடைகிறதோ, எவன் பற்களைக் கடிக்கிறானோ, எவன் ஹிருதயத்தில் நெருப்பு இருப்பதாக தோன்றுகிறதோ அவன் சீக்கிரத்தில் மரணமடைவான்.

25. எவனுடைய கண்ணிலிருந்து ஜலம்வடிகிறதோ, காதுகள் அடைபடுகிறதோ, மூக்கு கோணலாகிறதோ அவன் கிரகத்தில் மிருத்யு வந்திருக்கிறான்.

26. எவனுடைய நாக்கு கறுப்பாகவும், நல்லமுகம் துர்முகவாகவும், கண்டம் கறுப்பு அல்லது சிகப்பாக ஆகிறதோ அவனுக்கு சீக்கிரத்தில் மரணமுண்டு.

27. தலைவிரித்துக்கொண்டும், சிரித்துக்கொண்டும், பாடிக்கொண்டும், நடனம்செய்துகொண்டும் தக்ஷிண திக்கை நோக்கி செல்வதாக ஸ்வப்னத்தில் கண்டால் மரணம் நிச்சயம்.

28–29. வெண்ணிறமுள்ள குதிரை அல்லது ஒட்டகம் கழுதை கட்டிய ரதத்தில் தக்ஷிணமுகமாக போவதாகக் கண்டால் மரணம் சித்தம்.

30. எவனுக்கு காதில் சப்தம் கேட்கவில்லையோ, கண்ணில் ஜ்யோதி தெரியாமலிருக்கிறதோ, ஸ்வப்னத்தில் குழியில் விழுவதாக காண்கிறானோ அவனுக்கு மரணம் ஸமீபித்துவிட்டது.

31. மேல்பார்வையும், சிகப்பு கறுப்பு பார்வையும், உஷ்ணமில்லாததேகமும் எவனுக்கு இருக்கிறதோ அவனுக்கு மிருத்யு வந்துவிட்டது.

32. நாபியிலும், ஹிருதயத்திலும் எவனுக்கு ஓட்டையிருப்பதாகவும், எவனுடைய மூத்திரம் உஷ்ணமாகவும் இருக்கிறதோ அவனுக்கு மிருத்யு ஸமீபித்துவிட்டது.

33. ஜாகிரத் காலத்திலாவது, ஸ்வப்னத்திலாவது மறைந்து ஒருவன் அடிப்பதாக நினைக்கிறானோ அவனுக்கு மிருத்யு நிச்சயம்.

34. ஸ்வப்னத்தில் நெருப்பில் விழுகிறதாகவும், எப்பொழுதும் மறதியுடனும், யமனுடைய சப்தத்தை கேட்டுக்கொண்டும் இருக்கிறானோ அவனுக்கு மிருத்யு ஸமீபம்.

35. தன்னைச்சுற்றி வெளுப்பு, சிகப்பு, கறுப்பு மறைவு கட்டினதாகவும், நீலத்துணி கட்டிக்கொண்டதாகவும் ஸ்வப்னத்தில் கண்டால் அவனுக்கு மரணம் ஸித்தம்.

36–37. இவைமுதலிய கெட்டகுறிகள் எவனுக்குத் தோன்றுகிறதோ அவன் பயம், சோகம், மோகங்களை நீக்கி, ஏகாக்ர மனதுடன் திரடமாக காசிக்குச்சென்று, கங்காஜலத்தில் ஸ்நாநம் செய்து, விச்வேச்வர தேவனை தரிசித்து எப்பொழுதும் பஞ்சாக்ஷரத்தை ஜபிக்கவேண்டியது.

38. அல்லது ஸோமநாதம் சென்று ஸோமதீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்து மகாதேவரை தரிசித்து பஞ்சாக்ஷரம் ஜபிக்கவும்.

39–48. அல்லது ஸ்ரீபர்வதம்சென்று மல்லிகேச்வரரை தரிசித்து விபூதி பூசிக்கொண்டு எப்பொழுதும் பஞ்சாக்ஷரம் ஜபிக்கவும்.

40. அல்லது காலஹஸ்தி, கோபர்வதம், விருத்தாசலம், ராமேச்வரம், ஹாலாஸ்யம் (மதுரை), வேதாரண்யம், வல்மீகம் (திருவாரூர்), கஜாரண்யம், ஜப்யேச்வரம் முதலிய ஸ்தலங்களுக்கு சென்று அங்கங்குள்ள ஈசனை தரிசித்து பஞ்சாக்ஷரம் ஜபிக்கவும்.

49. அல்லது தென்திசையிலுள்ள காவேரீ நதியில் ஸ்நாநஞ்செய்து ஈச்வரனை தரிசித்து பஞ்சாக்ஷரம் ஜபிக்கவும்.

50–54. அல்லது கும்பகோணம், மத்யார்ஜுனம், கோவடுதீர்த்தம், மங்களவம்சம், அக்னீச்வரம், கோடிகா, ஆம்ரதீர்த்தம், ச்வேதாரண்யம், பிரஹ்மபுரம், காவேரிஸங்கம் இவைகளுக்குச் சென்று சக்திக்கு தக்கவாறு தனம், தான்யம், எள்ளு தானம்செய்து, மகேச்வரனை பக்தியுடன் தரிசித்து எப்பொழுதும் பஞ்சாக்ஷரம் ஜபிக்கவும்.

55-56. அல்லது மனிதன் சீக்கிரத்தில் வியாக்ரபுரம் (சிதம்பரம்) சென்று, சிவகங்கா தீர்த்தத்தில் முழுகி, யதாசக்தி தானம் செய்து, தப்ரஸபாபதியை மும்முறை பிரதக்ஷிணம் செய்து, தரிசித்து, பிரணவத்துடன் பஞ்சாக்ஷரத்தை எப்பொழுதும் ஜபிக்க வேண்டும்.

57. இந்த புண்ய க்ஷேத்திரமாகிய வியாக்ரபுரத்தில் எந்த மனிதன் மரித்தாலும் அவனுக்கு சிரேஷ்டமான முக்தி ஸித்தமென்பதில் ஸந்தேகமில்லை.

58. இந்த ஸ்தானத்தில் பிரவேசிப்பதாலேயே எல்லா மகாபாபக்கூட்டங்களும், நாசமாகும்; ஸபாபதியின் தர்சனத்தினாலேயே முக்தி ஸித்தமாகிறது.

59. மகா கருணையுடைய தேவனும், மகாநந்தத்தை யனுபவித்துக்கொண்டுமிருக்கிற தேவன் இந்தவிடத்தில் நர்த்தனம் செய்துகொண்டிருக்கிறார்; அவரை தரிசித்தால் பவபந்தனத்திலிருந்து விடுபடுவான்.

60. இந்த ஸ்தல தர்சனத்தினாலேயே வெகு ஜனங்கள் முக்தியடைந்திருக்கிறார்கள்; இந்த ஸபாபதியை தரிசனம் செய்தால் கேட்கவேண்டுமா!

61. காசிக்ஷேத்திரத்தை விட இந்த ஸ்தானம் சிரேஷ்டம் என்பதில் ஸந்தேகமில்லை; இங்கே தேவன் நர்த்தனம் செய்கிறான், காசியில் இல்லை.

62. இங்கே தர்சனமாத்திரத்தில் முக்தி ஸித்தமாயுண்டு; காசியில் மரணமடைந்தால்தான் முக்தி; ஆதலால் இது சிரேஷ்டமான ஸ்தானம்.

63. இந்த வியாக்ரபுரத்தை விட்டுவிட்டு, காசிக்குப்போய் இறந்தாலும் மனிதன் மோக்ஷமடையமாட்டான்.

64. எப்பொழுதும் இந்த வியாக்ரபுரத்தில் வித்யைகளால் சூழப்பட்டவளாக பராசக்தியான பார்வதி கருணையுடன் விளங்கிக்கொண்டிருக்கிறாள்.

65. எல்லா வித்யைக்கும் இருப்பிடமாகிய தேவீ எந்த விடத்தில் மிகவும் பிரகாசித்துக்கொண்டிருக்கிறளோ அவ்விடத்தில்தான் ச்ரேஷ்டமான முக்தியுண்டு; ஆதலால் இந்தப்புரம் சிரேஷ்டமானது.

66. ஆதலால் எல்லாவற்றையும் விட்டுவிட்டு, சீக்கிரத்தில் ஸமஸ்ததோஷ நிவிருத்தி ஸித்தியின்பொருட்டு, இந்த முக்யஸ்தலத்தை மனிதன் அடையவேண்டியது; சிவப்பிரஸாதத்தால் இவ்விடத்தில் மோக்ஷமடைவான்.

---

## அத்தியாயம் 47.

### (பாக்கியுள்ள பாபஸ்வரூபம்).

1. ஸூதர் :—இனி இப்பொழுது, பாபம் செய்யாமலிருக்கும் பொருட்டு, போகத்தை (ஸ்வர்க்காதிலோக முதலிய விடங்களில்) அனுபவித்து மிகுதியுள்ள பாபத்துடன் வருகிறவர்களின் லக்ஷணத்தைச் சொல்லுகிறேன்.

2. பிரஹ்மஹத்தி செய்தவன் க்ஷயரோகியாகவும், ஸுரா குடிக்கிறவன் கறுப்பு பற்களுடனும், தங்கம் திருடினவன் கெட்ட நகத்துடனும், குருபத்னியுடன் சேர்ந்தவன் கெட்ட தோலுடனும் எப்பொழுதும் இருப்பான்.

3. பழிச்சொல் சொல்லுகிறவன் நொண்டி, குருடு, செவிடனுகவும், அதற்கு உதவியாயிருந்தவன் கழுதைக்கு எஜமானனுகவும் ஆகிறுன்.

4. குருநிந்தை எப்பொழுதும் செய்கிறவன் அபஸ்மார வியாதியாலும், குரு ஆக்ஞை பங்கம் செய்தவன் பகந்தர வியாதியாலும் பீடிக்கப்படுவான் என்பதில் ஸந்தேகமில்லை.

5. குரு விரோதி புழு, கிருமியாகவும், குருவை அவமானம் செய்தவன் சிவதுரோகியாகவும் ஆவான்.

6. குருஸேவை செய்யாதவன் கெட்ட புத்தியுள்ளவனுக வும், விஷ்ணுத்துரோகி ஒணுனுகவும் ஆவான்.

7. வேததூஷகன் சண்டாளனுகவும், வேதாந்த தூஷகன் புல்கஸனுகவும் ஆவான்.

8. வேத ஞானதூஷகன் உன்மத்தனுகவும், ரஜஸ்வளையை புணர்ந்தவன் கீழ் ஜாதியானுகவும் ஆவான்.

9. நெருப்பு வைத்தவன் குஷ்டரோகியாகவும், விஷம் வைத் தவன் கசாய்க்காரனுகவும், ரூபாய் திருடினவன் தர்துர ஜந்துவா கவும் ஆவான்.

10. பொய் ஸாக்ஷி சொன்னவன், வஞ்சகன், பொய்ஸா க்ஷிக்கு ஸகாயமாயிருந்தவன், அதற்கு யுக்தி சொன்னவன், இவர் கள் முகரோகிகளாக ஆவார்கள்.

11. மாதா பிதாக்களையும் குழந்தைகளையும் மனைவியையும் தள்ளிவிட்டவன் எப்பொழுதும் கண்நோய் உள்ளவனுவான்.

12. வாக்குத்தத்தம்செய்து தவறியவன் அல்பாயுஸ் உள்ள வனுகவும், பலபத்னிகளின் நடுவில் ஒருவனிடத்திலேயே ரமிக்கிற வன் நபும்ஸகனுகவும் ஆவான்.

13. அன்னம் திருடியவன் ஜீர்ணசக்தியற்றவனுகவும், நாக் கு ரோகியாகவும், எல்லோருக்கும்முந்தி சாப்பிடுகிறவனும், மற்ற வர்களை கவனியாமல் தான்மட்டும் நன்ருக புஜிக்கிறவன் கண்ட ரோகியாகவும் ஆவான்.

14. பஞ்சயக்கியம் செய்யாதவன் ஊர்பன்றியாகவும், பர்வ காலங்களில் ஸ்திரீயை புணருகிறவன் பெருமூத்திர ரோகியாக வும் ஆவான்.

15. வந்தவர்களையும் அதிதிகளையும் தள்ளிவிடுகிறவன் கன்னக்கட்டியுள்ளவனுகவும் ஆவான்.

16. எப்பொழுதும் தன்னை புகழ்ந்து கொள்ளுகிறவன் குள்ளனுகவும், நொண்டியாகவும், கோஹத்தி செய்தவனும், நன் றிமறந்தவனும் பிறவிக்குருடனுகவும் ஆவான்.

**17.** தன்மனைவியிடம் பிரியமில்லாதவன் கழுத்துக்கட்டி யுள்ளவனாகவும், தாஸிஸேவைசெய்கிறவன் ஆண்குறியற்றவனாக வும் ஆவான்.

**18.** கோள்சொல்லுகிறவன் துர்நாற்றம்வீசும் வாயுடனும், தாம்பிரமுதலிய லோஹங்களையும், ஆடு, யானை, குதிரை முதலிய வைகளையும் விக்ரியம் செய்கிறவன் வேடனுமாவான்.

**19.** ஞானம், மந்திரம் இவைகளைத் திருடினவன் ஊமை யாகவும், கெட்டதை புஜிக்கிறவன் தொண்டை ரோகியாகவும் ஆவான்.

**20.** கூத்தாடி கெட்டபுத்தி யுள்ளவனாகவும் புஸ்தகம், லேகனம் திருடினவன் குருடனாகவும் ஆவான்.

**21.** எப்பொழுதும் புண்யகதைகளை ஆக்ஷேபிக்கிறவன் வக்ரமூக்குடையவனாகவும், சிஷ்டாசாரதர்ம நிந்தகன் ராக்ஷஸனா கவும் ஆவான்.

**22–28.** ஞானம், யோகம், குரு இவைகளை திவேஷிக்கிற வன் வக்கிரவாய் உடையவனாகவும், தேவதூஷகனும், புண்யகர் மத்தைச் செய்கிறவனைத் தடுக்கிறவனும் புழுவாகவும், தேவதிர வியத்தை திருடுகிறவன் வாயுபக்ஷகனாகவும், தடாகம் நந்தவனங் களைக் கெடுக்கிறவன் அங்கஹீனனாகவும், மர்யாதையைக் கெடுக் கிறவன் தாஸனாகவும், பரஸ்திரீ கமனம் செய்கிறவன் வாயுரோகி யாகவும், ஒட்டகை முதலியவைகளைப் புணர்ந்தவன் மது பிரமே ஹியாகவும் (நீர்ரோகி), கற்புள்ள ஸ்திரீயை புணர்ந்தவன் பன்றி யாகவும், பரநிந்தனை செய்கிறவன் துக்கியாகவும், சோம்பலுள்ள வனாகவும் ஆவான்.

அதிபாதகதோஷத்தால் புழுவாகவும், பாதகதோஷத்தால் பன்றியாகவும் உபபாதக தோஷத்தால் நாயாகவும் ஆவான். மற்ற கெட்ட பாபங்களாலும், மகாபாதகங்களாலும் எப்பொழுதும் நீச யோனிகளில் பிறப்பான்.

**29.** தனது பரமார்த்த ஸ்வரூபத்தை அறியாததினால் மனி தன் பந்தத்திற்குள்ளாகிறான்; தன் ஸ்வரூபத்தை அறிந்தால் கர் மங்களால் பாதிக்கப்படுகிறதில்லை.

**30.** எல்லா மனிதர்களுக்கும் எப்பொழுதும் தன்ஸ்வரூபம் சுத்தமாகவே இருக்கிறது; எப்பொழுதும் தன்ஸ்வரூபம் சின் மாத்திரமாகவேயிருக்கிறது.

**31–32.** அது (தன் ஸ்வரூபம்), கடபடம்போல் பார்வைக்கு விஷயமாயுள்ள தேகமுதலிய சேர்க்கை ஆகமாட்டாது; தேக முதலிய எந்தரூபம் பார்க்கக்கூடிய ரூபமாக விருக்கிறதோ அது அனாத்மாகவிருக்கிறது (ஆத்மா அன்று); ஏனெனில், இது இப் படியென்று காணக்கூடியதன்மை யிருப்பதால் ஆத்மாவன்று; தேகமும் அப்படியன்றோ! எல்லோருக்கும் தேக முதலியவைக ளுக்கு காணப்படுந் தன்மை யுண்டென்பது ஸம்மதம்.

**33.** காணப்படும்தன்மை (திரிசயத்வம்) பார்க்கிறவனால் (அறிகிறவனால், திருஷ்டாவால்) உண்டாகிறதென்று உலகத்தில் எல்லோரும் அறிந்திருக்கிறார்கள்;

பார்க்கிறவன் பார்க்கப்படும் தன்மையை அடையான்; அப் படியானால் அவனுக்கு பார்க்கிறதன்மை இராது; திருச்யரூபமான சுவர் முதலியவைகளுக்கு பார்க்கிறதன்மை யில்லையன்றோ.

**34.** (தன்ஸ்வரூபம்) அம்சபேதத்தால், பார்க்கிறதன்மை யும், பார்க்கப்படும் தன்மையும் இருக்கிறதென்று நினைத்தால், அம்சத்துடன் கூடியிருப்பதால் சுவர்முதலியதுபோல் அனாத்மா வாகும். (அது ஸம்மதமன்று).

**35.** அப்படியே அம்சபேதம் இருப்பதாக எண்ணினாலும், திருச்ய அம்சம் சுவர்போல் அனாத்மாவாகும், பார்க்கிறதன்மை அம்சம் கேவலம் ஆத்மாவாகும்.

**36.** பார்க்கிறவன் என்கிற அம்சத்திலும் கர்த்திருத்வம் (செய்கிறேன் என்னும் தன்மை) எப்பொழுதும் உபாதியால் (தொடாத ஸம்பந்தத்தால்) உண்டாகும்; அல்லது பார்க்கப்படும்

பதார்த்தத்தை பிரகாசஞ்செய்வதை அபேக்ஷித்தாவது உண்டாகுமே தவிர ஸ்வபாவத்தில் கர்த்திருத்வம் யில்லை.

37. ஸ்வபாவத்தில் இந்த ஆத்மாவிற்கு கர்த்திருத்வம் இருக்கிற பக்ஷத்தில் அப்பொழுது அவன் திருச்யரூபமாக (பார்க்கப்படும் தன்மையுடையதாக) மாறுதலடையவேண்டும்.

38. மண்முதலியவைபோல் ஒருபொழுதும் ஆத்மா மாறுதலடைவதாகாது; சேதனமற்றதன்மையும் இவனுக்கு அடையவுண்டாகும்; அப்பொழுது இவனிடத்தில் சேதனத்தன்மை இராது.

39. சித் இல்லாத ஜடம் பிரகாசியாது; தானே பிரகாசமற்றதற்கு பிரகாசம் ஒவ்வாது.

40. சித்பிரகாச ஆத்ம ஸம்பந்தத்தாலும் சேத்யங்கள் (சித்தால் பிரகாசப்படுகிற பதார்த்தங்கள்) விளங்குகிறதில்லை; அத்தகைய ஸம்பந்தமில்லாதபடியால் (விஷய விஷயி ஸம்பந்தம் நிரூபிக்க முடியாததால்); ஆகலால் சித் (உபாதியால்) வெளி பதார்த்தங்களின் தோற்றங்களாக பலவாக பிரிவு அடைகிறது.

41. சித் எப்பொழுதும் சித்தாகவே இருக்கும்; எக்காரணத்தினுலாவது திருச்யம் (காணப்படும் தன்மையுடையது) அகாது; எது திருக் (பார்க்கிறதன்மை) திருச்யம் (பார்க்கப்படும் தன்மை) அற்றிருக்கிறதோ அதுதான் எப்பொழுதும் பிரகாசிக்கும்.

42. அது சில வேளைகளில் பிரகாசிக்கிறதில்லை என்று இருந்தால், அப்பொழுது பிரகாசிக்கவில்லை என்ற விஞானம் (அறிவு) எதனுல் ஏற்படுகிறது.

43. 'பிரகாசப்படவில்லை' என்கிற அறிவும் விளக்கமன்று என்று எண்ணினுல், அப்பொழுது 'விளங்கவில்லை' என்பதே விளக்கம்; அந்த விளக்கம் ஞானமன்றோ!

44. பிரகாசம் மற்றொரு பிரகாசத்தால் விளங்காது; பிரகாசம் என்ற ரூபத்தால் அது எப்பொழுதும் ஒன்றே தவிர இரண்டன்று.

45. பிரகாசம் தன்னுடைய பிரகாசத்தன்மையால் பிரகாசம் செய்யப்படுகிற வஸ்துக்களை விளக்குகிறது ; வேறொன்றால் விளக் கவில்லை ; எது ஸ்வயம் பிரகாசமுடையதோ அதன்றோ விளக்கக் கூடியதை பிரகாசஞ்செய்கிற பிரகாசம்.

46. ஆதலால் எல்லாவற்றிற்கும் ஸாக்ஷியாயிருக்கிற ஸ்வ யம் பிரகாசமுள்ள ஆத்மா, ஸாக்ஷ்யங்களின் (ஸாக்ஷியாயிருந்து பார்க்கக்கூடிய விஷயங்களின்) தர்மங்களான கர்மங்களால் கட் டுப்படுகிறான் இல்லை.

47. பார்க்கிறான் என்கிற தன்மையும் (திருக்ரூபம்), பார் கப்படுகிறதன்மையுடன் (திருச்ய) சேர்ந்திருக்கிறதென்று சொல் லமுடியாது.

48. இச்சேர்க்கை ஸாக்ஷிக்கு விஷயமாயிருக்கிறபடியால் காணப்படும் வஸ்துவை ஒட்டியிருக்கிறது ; திருச்யங்களான கயி றுமுதலியவைகளிலே இந்த சேர்க்கை பரமார்த்தமாகவில்லை, அத்யாஸத்தால் தோற்றம் என்று முன்னமே கண்டிருக்கிறோ மல்லவா ?

49. சிரேஷ்டமான சுருதியும் இவர் அஸங்கன் என்று சொல்லுகிறது ; ஆதலால் ஆத்மா சித்ரூபன், கர்மங்களால் பந்தப் படுகிறதில்லை.

50. ச்ருதி இந்த சித்ரூப ஆத்மாவிற்கு பிரஹ்மத்வத்தைக் கூறுகிறது ; பிரஹ்மத்திற்கு கர்மஸம்பந்த மில்லாததையும் சொல் லுகிறது.

51–52. இப்படியிருக்க அவன் எப்படி கர்மங்களால் கட் டுப்பட்டவனாவான் !

ஆதலால், ஆத்மா தனது அக்ஞானத்தால் (மோகத்தால்) ஸம்ஸாரிபோல விளங்குகிறான். வர்ணம், ஆச்ரமம், வயது, அவஸ் தாவிசேஷ முதலிய அனாத்ம பிரமையால், பிராஹ்மணத்வ முத லிய அத்யாஸத்தால் எல்லா வேதங்களின் கட்டளைகளால் ஏவப் பட்டவனாகிறான் ; ஸ்வபாவமாகவில்லை.

53. அக்ஞானத்தால் 'இவன் மனுஷத்தன்மையுள்ளவன்' என்ற விபரீத ஞான முண்டாகிறது; பரமாத்மாவான ஆத்மா (தேகாதிதாதாத்மய அபிமானத்தால்) பரவசமாக கர்மங்களால் கட்டுப்படுகிறானே தவிர ஸ்வதந்தரமாகவில்லை.

54. வியவஹாரதசையில் தன்மாயையால் கர்மத்தால் கட்டுப்பட்டவனு யிருந்தாலும், யதார்த்தத்தில் பரமாத்மாவான இவன் கட்டுப்படவில்லை.

55. தான் எல்லாவற்றிற்கும் ஸாக்ஷியாயிருக்கும் தன்மையும், தேகமுதலியவைகளைக் காட்டிலும் வேறாயிருக்கும் தன்மையும், பிரஹ்மத்தன்மையும் சுருதியால் அறியப்பட்டால் கர்மத்தால் கட்டுப்படமாட்டான்.

56. ஸர்வஸாக்ஷியாயும், வர்ணாசிரமமற்றதாயுமுள்ள தனதாத்மாவை பிரஹ்மரூபமாக அறிகிறவன் ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுதலையடைகிறான்.

57. ஆதலால், தன் ஆத்மாவை யறியாததால் தேகத்தில் தான் என்கிற எண்ணத்தை யடைந்து எல்லா சாஸ்திரங்களில் சொல்லிய கர்மத்தைச் செய்கிறான்; ஞானி அப்படியல்ல என்பதில் ஸந்தேகமில்லை.

58. இந்த தேவீ ஸம்பந்தமானதும், ஸம்ஸாரத்தை நாசஞ் செய்யக்கூடியதுமான சிரேஷ்டமான ஞானம் பராசக்தியின் கிருபையாலேயே உண்டாகிறது.

59–69. யாதொரு சித்ரூபியான பராசக்தி பரா என்ற பெயருடன் வாக்ரூபமாக ஆகிறாளோ அந்த ஸ்ரீகண்டனை பாதி சரீரமாக வுடயவளை பக்தியுடன் எப்பொழுதும் நமஸ்கரிக்கிறேன்.

யாதொரு சக்தியானவள் பரிபூர்ண சிவனுடைய உதரித்திலிருந்துகொண்டு 'இச்சாசக்தி' என்ற பெயரை யடைகிறாளோ அந்த என்னுடைய இஷ்டபலத்தைத் தரும் தேவியை ஆதரவுடன் நமஸ்கரிக்கிறேன்.

யாதொரு பராசக்தி எல்லாவற்றிற்கும் நேராக பீஜமாக (காரணமாக) இருக்கிருளோ அந்த நகுலீசனுடன்கூடிய தேவியை நமஸ்கரிக்கிறேன்.

எவள் மேல் ரூபமாயும் (காரணம்) கீழ்ரூபமாயும் (காரியமாயும்), கீழ்ரூபமாயினும் நடுவை அடைந்தவளாயும் (ஸ்திதி), நடுரூபமாயினும் உள்ரூபமாயும் (உபாதானகாரணம்) இருக்கிருளோ அந்த வரப்பிரதயை நமஸ்கரிக்கிறேன்.

எவள் ஸமஸ்தமான வித்யைகளுக்கு இருப்பிடமாக விருந்து வர்ணங்களால் (அகாரமுதலிய அக்ஷரங்களால்) கல்பிக்கப்பட்ட அவஸ்தா விசேஷங்களால் வாக்கில் பிரகாசிக்கிருளோ அவளை ஆதரவுடன் நமஸ்கரிக்கிறேன்.

எவள் ஒரேவிதமாகவும் (சப்தம்), இரண்டாகவும் (உயிர், மெய் எழுத்தாகவும்), அப்படியே பதினாறு உயிர் எழுத்துக்களாகவும், முப்பத்திரண்டு மெய் எழுத்துக்களாகவும்(33 மெய் எழுத்துக்களில் ர, ல அபேதம்) இருக்கிருளோ, பரமாத்மாவை அறியும்படி செய்யக்கூடிய அவளை நமஸ்கரிக்கிறேன்.

எவள் நிர்மலமான 'அ' காரமுதல், 'க்ஷ' காரம் வரையிலுள்ள வர்ணங்களால் எல்லாசப்தங்களாக விளங்குகிருளோ அந்த ஆனந்தத்தை யளிப்பவளை நமஸ்கரிக்கிறேன்.

எவள் நாட்டிய ஸ்திரீயைப்போல லக்ஷ்மீ ஸரஸ்வதீ முதலான ரூபத்துடன் விளங்குகிருளோ, அந்த ஆதியந்தமற்றவளும் அழகுள்ளவளுமானவளை நமஸ்கரிக்கிறேன்.

எவளிடமிருந்து பிரஹ்மா முதல் ஸ்தம்பபூச்சிவரையில் எல்லாம் உண்டாயிற்றோ, எவளிடத்தில் லீனமாகின்றனவோ அவளை நித்யம் நமஸ்கரிக்கிறேன்.

மஹத் முதல் கடபட விசேஷம்வரையிலுள்ள போக்ய ரூபமான ஜகத் எவளிடத்தில் உத்பத்தியாகி லயம் அடைகின்றனவோ அந்த அம்பிகையை நமஸ்கரிக்கிறேன்.

குருமூர்த்தியை தரித்தவளாயும், ஸூக்ஷ்மையாகவும், ரஹஸ்ய ஞானத்தை (பிஹ்மாத்ம ஐக்கிய ஞானத்தை) அளிப்பவ

ளாகவும், ரஹஸ்ய பக்த ஜனங்களில் பிரீதியுள்ளவளாகவும் புத்தி குகையில் இருக்கிறதேவியை நமஸ்கரிக்கிறேன்.

**70.** எவனொருவன் இந்த ஸ்தோத்திரத்தை இரண்டு ஸந்தியாகாலங்களிலும் படிக்கிறானோ அவன் ஸர்வ வித்யாபிருப்பிடமாக விருந்து பரமகதியை யடைவான்.

**71.** இவ்விதமாக தேவியின் பிரஸாதத்தால் ஜனஹிதமான இதைசொல்லிவிட்டு, பக்தியுடன் ஸர்வேசஞன பரமகுருவைநமஸ்கரித்து முனிக்கூட்டத்தைப் பார்த்து, ஸ்வானுபூதியால் ஸூத முனிவர் தனது பரசிவரூபத்தில் லயமடைந்த புத்தியுள்ளவரானார்.

பூர்வபாகம் முற்றிற்று.

---

## நான்காம் கண்டம்.

# யக்ஞ வைபவ கண்டம்.

### உபரிபாகம்.

---

# பிரஹ்மகீதை.

---

## அத்தியாயம் 1.

---

(பிரஹ்ம கீதி).

1. முனிகள்:—தங்களால் சுருக்கமாகவும் விஸ்தாரமாகவும் எல்லாம் சொல்லப்பட்டது; இப்பொழுது வெகு உத்தமமான பிரஹ்மகீதையை கேட்க விரும்புகிறோம்.

2. எல்லா ஞானரத்னமாகிய மஹாத்மாவான க்ருஷ்ண த்வைபாயனரின் (வ்யாஸரின்) முக்கிய சிஷ்யராக விருக்கிறீர்.

3. ஸத்யமாக உங்களால் அறியப்படாதது ஒன்றுமில்லை என்று சொல்லப்படுகிறது; தாங்கள் இஷ்டப்பட்டால் எங்களுக்கு இதைச்சொல்ல கேட்டுக்கொள்ளுகிறோம்.

4. ஸூதர்:—அந்த உத்தமமான பிரஹ்மகீதையை ஆதரவுடன் சொல்லுகிறேன்; நீங்களெல்லோரும் சிரத்தையுடன் கேளுங்கள்.

5–6. முன்னொரு கல்பத்தில் உத்தமமான வேதார்த்தத்தை எல்லாதேவர்களும்கூடி ஆதரவுடன் வெகுகாலம் விசாரித்து, ஸந்தேகம் வந்தமையால் மகத்தான தபஸ்செய்து, பிரஹ்மாவை கேட்க தேவர்கள் சென்றார்கள்.

7. எங்கே ஜகந்நாதரும், ஸர்வக்ஞரும், பிரபுவும், மஹா கருணிகரும், பக்தியில் இன்புற்ற ஸ்ரீமான் பிரஹ்மன் இருக்கிறாரோ அவ்விடம் சென்றார்கள்.

**8–24.** எல்லா யோகிகளாலும் சூழப்பட்டதும், யக்ஷ, ராக்ஷஸ, கந்தர்வ, ஸித்தர்களால் நன்கு ஸேவிக்கப்பட்டதும், பல ரத்னங்களால் பூரிக்கப்பட்டதும், பலதாதுக்களால் அழகுள்ளதும் சகுந்த பக்ஷிகளால் நிரைந்ததும், பல தீர்த்தங்களால் சூழப்பட்டதும், அநேககோடி குகைகளால் நிறைந்ததும், மலைச்சாரிகளை உடைத்தானதும், ஷட்ரஸங்களுள்ளதும், வெகு அழகுள்ளதும், நூறு யோஜனையுள்ளதும், பலபக்ஷி மிருகங்களுள்ளதும், நல்ல ஜலமுள்ளதும், பழமூலங்களால் நிறைவுள்ளதும், பிரமரங்களால் சூழப்பட்ட வாஸனமரங்களையுடையதும், மந்தமான காற்று, சூர்ய பிரகாசமுடையதும், நிசாசரர்களால் உலாவப்பட்ட சிரேஷ்டமான பிரஹ்மவனம் என்ற பெயருள்ள ஒரு வனம் (காடு) மேரு மலையின் சிகரத்தின்மேல் இருக்கிறது.

அவ்விடத்தில் தங்கத்திற்கும், காலசூர்யனுக்கும் ஸமமான ஒன்பது மதில்களுடையதும், எண்பது த்வாரங்களுடையதும், கோடிக்கணக்கான பலமுள்ள த்வாரபாலகர்களால் சூழப்பட்டதும், கத்தி, கேடயம், தனுசுமுதலிய ஆயுதங்களால் ரக்ஷிக்கப்பட்டதும், புஷ்பம், பூர்ணகும்பம், தீபம், புஷ்பமாலை, சித்திரங்கள்கூடிய அநேக சுவர்களால் சூழப்பட்டதும், முத்து தோரணங்கள், அப்ரககொடிகளுடன் கூடியதும், நிருத்ய கீதத்துடன்கூடிய அப்ஸரஸ்கூட்டங்களால் ஸேவிக்கப்பட்டதும், பலவாத்தியங்களாலும், பல கானங்களாலும் கோஷிக்கப்பட்டதும், மிருதுவாயும், மத்யமுமாயும், உக்ரமாயுமுள்ள சப்தங்களால் கூடியதும், வேத கோஷம், ஸ்மிருதிபுராண, இதிஹாஸ கோஷங்களால் நிறைந்ததும், எல்லாவித்யை உள்ளவர்களாலும் ஸர்வக்ஞர்களாலும் சூழப்பட்டதும், வெகு ஆழமான அகிழ்களோடு கூடியதும், கோடி ரதங்கள், யானைகள், குதிரைகளால் ரமணீயமாயிருக்கப்பட்டதும், அஸ்திர சஸ்திரங்களாலும், கணக்கற்ற சைன்யங்களாலும், படர்களாலும், எப்பொழுதும் ரக்ஷிக்கப்பட்டதும், புண்யர்களால் அடையக்கூடியதும், பாபிகளால் போகக்கூடாததுமான ஒரு உத்தமமான புரமிருக்கிறது.

**25-27.** சுத்தமான அந்த பட்டணத்திற்குள் ஆயிரம் தூண்களுள்ளதும், எல்லா லக்ஷணம்பொருந்தியதும், நன்ருய் அலங்கரிக்கப்பட்டதும், மகர தோரணங்கள் கல்ப விருக்ஷங்கள் கூடியதும், ஆறு கால்களுடன் ஸிம்ஹ முகத்துடன் கூடியதும், மிருதுவான பஞ்சணையுள்ளதும், ரத்னங்களால் நிர்மாணம் செய்யப்பட்ட ஒரு மண்டபத்தில், வர்ணவிக்கிரகமான ஸரஸ்வதீ தேவியுடன், ஸர்வ சப்தார்த்தமானவரும் பிரபுவுமான பிரஹ்மதேவர் வாஸம்செய்கிருர்.

அவ்விடத்தில் தேவர்கள் சென்று லோகநாயகரான பிரஹ்மாவை தர்சனம் செய்தார்கள்.

**29-34.** பற்பல ரத்னங்களால் இழைக்கப்பட்ட விசித்திரமான கிரீடத்துடன் ஜ்வலித்துக்கொண்டிருக்கிறவரும், ரத்ன குண்டலம் தரித்திருப்பவரும், பிரஸன்ன முகத்துடன் கூடியவரும், சுபரும், பலரத்னங்கள் சேர்ந்த மாலையுடையவரும், வெகு உயர்ந்த ரத்ன கேயூரம் பூண்டவரும், விசித்திரமான கடகம் (காப்பு) பூண்டவரும், மோதிரங்கள் அணிந்தவரும், உத்தரீயம் தரித்தவரும், வெண்ணிறமான யக்ஞோபவீதம் பூண்டவரும், ரத்ன உதரபந்தனமணிந்தவரும், அகிற்சந்தனம், பனிநீர், பச்சைக்கற்பூரமும் பூசியவரும், அநேக வாஸனையுடைய புஷ்பமாலைகள் சாத்திக்கொண்டும், வெள்ளை வஸ்திரம் தரித்தவரும், ஓடவைத்த செம்பொன் காந்தியுடையவரும், தன்னொளியினுல் எல்லாவற்றையும் விளக்குகின்றவரும், தேவர்களும் அஸுரர்களும் பணிந்து ஸ்துதிசெய்யப்பட்டவரும், பராத்பரருமான பிரஹ்மாவை தரிசித்தார்கள்.

**35-38.** மாயைக்கு மேல்பட்டவரும், ஸர்வகர்த்தாவாயும், ஸாக்ஷியாயுமிருக்கிற அவரைக்கண்டு, எல்லாதேவர்களும் வெகு களிப்புடன் கூடியவர்களாயும், பிரஸன்ன முகங்களுடையவர்களாகவும், உரோமஞ்சிலிர்ப்புடனும், தழுதழுத்து, நிர்மலர்களான ஸநகாதி யோகிகளால் சூழப்பட்டு, ஆனந்த ஸமுத்திரத்தில் மூழ்கினவராகி, நீங்கிய மாயையுள்ளவர்களாகப், ஏகசித்தர்களாக

கூப்பியகையினர்களாய் பூமியில்விழுந்து நமஸ்கரித்து, ஸர்வலோக பிதாமஹரும், புண்யசாலிகளுக்கு முக்தி கொடுப்பவரும், பாபிகளுக்கு துக்கத்தைக் கொடுப்பவருமான அவரை ஸ்தோத்திரம் செய்தார்கள்.

**39–58.** தேவர்கள் (ஸ்தோத்திரம்):—பிரஹ்ஞான பாற்கடலை செய்தவரும், பிரஹ்மதத்வத்தை அறிய விரும்புவர்களுக்கு பரதத்துவத்தை காட்டியருள்கின்ற ஹே! பிரஹ்மனே! உமக்கு நமஸ்காரம்.

கஷ்ட ஸம்ஸாரத்தில் விழுந்து தவிக்கிறவர்களுக்கு கை கொடுப்பவரும், எல்லா பூதங்களுக்கு ஸாக்ஷியும், தனக்கு ஸாக்ஷியமற்றவருமான உமக்கு நமஸ்காரம்.

ஸர்வஜகத்தை தரிப்பவரும், நிர்மானம் செய்பவரும், எல்லா த்வந்தங்களை நீக்குகிறவரும், எல்லா அவஸ்தைகளிலும் எல்லாவற்றிற்கும் ஸாக்ஷியாகிய உமக்கு நமஸ்காரம்.

பராத்பரமான மாயையற்றவரும், மேலானவரும், பரமேஷ்டியும், ஞான ஆத்ம ரூபமாயிருக்கிற உமக்கு நமஸ்காரம்.

பத்மத்திலிருந் துண்டானவரும், சித்தரும், பத்மநாபனுடைய புத்திரரும், பத்மபுஷ்பங்களால் பூஜிக்கப்பட்டவரும், பத்மத்தை தரித்தவருமான உமக்கு நமஸ்காரம்.

தேவசிரேஷ்டரும், சூர்யாதி தேவர்களுக்கு திருப்தியைக் கொடுக்கிறவரும், சுரர், அசுரர் நரர் இவர்களுக்கு ஸுகத்தைக் கொடுப்பவருமான உமக்கு நமஸ்காரம்.

ரக்ஷிப்பவரும், விச்வத்திற்கு கண்ணும், சுத்தஞான ரூபரும், வேதத்தால் அறியக்கூடியவரும், வேதாந்த நிதியுமான உமக்கு நமஸ்காரம்.

விதிக்கிறவரும், மேற்பட்டவரன்றி யிருப்பவரும், விதிவாக்கியங்களை ஏற்படுத்துகிறவரும், விதித்த கர்மத்தை செய்கிறவர்களுக்கு ஞானத்தைக் கொடுப்பவருமான உமக்கு நமஸ்காரம்.

விரிஞ்சியும், விசிஷ்டரும், விசிஷ்டர்களுடைய துன்பத்தை நீக்குகிறவரும், துக்கஸமுத்திரத்தை நாசஞ்செய்யக்கூடிய வருமான உமக்கு நமஸ்காரம்.

ஹிருண்யகர்பரும், தங்கமலையிலிருப்பவரும், தங்கதானத்தால் அறியக்கூடியவரும், ஹிரண்யப் பிரியருமான உமக்கு நமஸ்காரம்.

நூறுகுணமுடைய ஆனந்தமுள்ளவரும், சாந்தரும், சங்கரஞான மளிப்பவரும், சமதமாதிகுணங்களுடன் கூடியவர்களுக்கே ஞானத்தைக்கொடுப்பவருமான உமக்கு நமஸ்காரம்.

சம்புவும், சம்புபக்தர்களுக்கு ஸுகத்தைக் கொடுக்கிறவரும், சங்கர ஞானமற்றவர்களுக்கு சத்துருவுமான உமக்கு நமஸ்காரம்.

ஸ்வயம்புவும், எப்பொழுதும் சிவஞான மளிப்பவரும், ஸ்வபாவமாகவே பிரஹ்மரூபரும், ஸ்வதந்திரரும், பரமாத்மாவுமான உமக்கு நமஸ்காரம்.

சூர்யனும், கெட்டவர்களுக்கு துக்கத்தையும் நல்லோருக்கும் ஆத்மஞானத்தையும் கொடுக்கிறவருமான உமக்கு நமஸ்காரம்.

நமஸ்கரிக்கத்தகுந்தவரும், தான் நமஸ்கரிக்கக்கூடியவற்றவரும், வரதரும், பரத்திற்கும், வரிஷ்டர்களுக்கும் மேற்பட்டவரும், நான்முகமுடையவருமான உமக்கு நமஸ்காரம்.

பிஜாபதியும், ஸம்ஸார விரக்தரும் ஞானமளிப்பவருமான உமக்கு நமஸ்காரம்.

பிதாமஹரும், பிதாமுதலிய கல்பனையற்றவரும், கோட்ச்சொல்லுகிறவர்களால் அறியக்கூடாதவரும், மனோக்கியருமான உமக்கு நமஸ்காரம்.

ஜகத்தின் கர்த்தாவும், ரக்ஷிக்கிரவரும், அழிக்கிறவரும், பரமாத்மாவும், ஜகத்திருச்சிய மற்றவரும், சின்மாத்திர ஜ்யோதியுமாகிய உமக்கு நமஸ்காரம்.

ஸம்ஸாரத்தைத் தாண்டச்செய்கிறவரும், விச்வரும், விச்வ மற்றவரும், ஸர்வஸாக்ஷியும், ஸ்வபிரகாசமென்ற ஒன்றினாலேயே அறியக்கூடியவரும், பூர்ண பரமாத்மாவுமான உமக்கு நமஸ்காரம்.

ஒருவரால் ஸ்தோத்திரம் செய்யத் தகுந்தவரும், தான் ஸ்தோத்திரம் செய்யக்கூடியவரற்றவரும், உண்மையில் ஸ்தோத்திரூபமாயிருப்பவரும், ஸ்தோத்திரம் செய்கிறவர்களுக்கெல்லாம் ஸுகத்தையளிக்கும் உமக்கு நமஸ்காரம்.

**59–60.** ஸூதர்:—இவ்விதம் பக்தியுடன் ஸூர்யன்முதலான தேவர்கள் பிரஹ்மாவை ஸ்தோத்திரஞ்செய்து, ஆதரவுடன் எல்லா வேதங்களின் அர்த்தத்தைக் கேட்டார்கள்.

பிரஹ்மனும் எல்லா தேவர்களாலும் ஸந்தோஷிக்கப்பட்டவராய் கம்பீரமான வாக்கால் உத்தமமான வேதங்களுடைய அர்த்தத்தைச் சொன்னார்.

---

## அத்தியாயம் 2.

---

### (வேதார்த்த விசாரம்).

**1.** பிரஹ்மன்:—எவ்வித சேதனர்களினாலும் ஒருபொழுதும் வேதார்த்தமானது (நிர்குணமாய் ஜாதி, குணம், கிரியை முதலிய சப்தங்களால் குறிப்பிட்டு காட்டமுடியாததாலும்) சப்தார்த்தத்தால் (பதங்களின் வாச்சியார்த்தத்தால்) தெரிவிக்க முடியாது; அப்படியாயினும், பக்தர்களாகிய உங்கள்பொருட்டுச் (லக்ஷணா விருத்தியால்) சொல்லுகிறேன்; சிரத்தையுடன் கேளுங்கோள்!

**2.** (இனி ரிக்வேதத்திலுள்ள ஐதரேயோபநிஷத்தின் ஸாரத்தைச் சொல்லுகிறார்).

சிருஷ்டிக்குமுன் காணப்படுகிற இந்த ஜகத்தெல்லாம் ஹே! தேவர்களே! சிவமாயும், சுத்தமாயும், ஏகமாயும், எப்பொழுதும் இரண்டற்றதாயுமுள்ள ஆத்மமாத்திரமாகவே இருந்தது.

3. அந்த ஆத்மஸ்ரூபத்தைத் தவிர வேறு ஒன்றும் பிரகாசமான வஸ்து இருந்ததில்லை; மறுபடியும் (சென்ற கல்பத்தில் போல) கால பரிபாகத்தாலும், (தன்னிடம் லீனமாயிருந்த) பிராணிகளின் கர்மவாஸனுவசத்தாலும்; தன் மாயாசக்தியிலுள்ள ஸத்வகுணத்தால் அந்த சங்கார் (ஆத்மா) இந்த எல்லா ஜகத்தையும் ஸிருஷ்டிப்போம் என்று பார்த்தார் (ஆலோசித்தார்).

4. ஹே! தேவர்களே! அந்த பிரபு திரும்பவும், தனது சக்தியால், முன்கல்பத்தில்போலவே, கிரமமாக இந்த எல்லா உலகங்களையும் ஸிருஷ்டித்தார்.

5. இப்படி ஸிருஷ்டாவான அத்மாவை மோகத்தினுலே, சிலர் சிவன் (ருத்திரன்) என்று சொல்லுகிறுர்கள்; சிலர் விஷ்ணுவென்று மதிக்கிறுர்கள்.

6. சிலர் நான் (பிரஹ்மன்) என்று சொல்லுகிறுர்கள்; சிலர் இந்திரன் முதலிய தேவர்களென்று சொல்லுகிறுர்கள்; சிலர்(ஸாங்கியர்கள்) முக்குணமுடையதும், ஸ்வதந்திரமானதும் (வேதாந்த மதத்தில்கூறிய மாயையைப்போல் பாதந்திரமன்று), கேவலம் ஜடமானதுமான பிரதானம் என்று சொல்லுகிறுர்கள்.

7. சிலர் அணுக்கள் என்றும், சிலர் சப்தம் என்றும், சில பிராந்தியடைந்த புத்தியுள்ளவர்கள் க்ஷணத்தில் நசிக்கக்கூடிய விக்ஞானமென்றும் சொல்லுகிறுர்கள்.

8. சிலர் ஒன்றுமில்லாத சூன்யமென்றும், சிலர் பூதங்களென்றும், சிலர் பிரமையால் இப்படிப்பட்ட ஜகத்தே சிருஷ்டியற்றதென்றும் (ஸ்வபாவமென்றும்) நினைக்கிறுர்கள்.

9. அதற்கு தக்கபடி தங்களால் கூடியவரையில் யுக்திகளையும் சொல்லுகிறுர்கள்; (ஆனுல்) இந்த எல்லா வாதங்களும் (கொள்கைகளும்) ச்ருதிஸ்மிருதிகளுக்கு விருத்தம் என்பது என்னுடைய அபிப்பிராயம்.

10–12. பாபிகளுக்கு பூர்வஸம்ஸ்கார வாசனையால் இவைகளில் ருசி உண்டாகிறது; அவர்களும் காலபரிபாகத்தாலும்,

சிரத்தையாலும், முன்செய்தபுண்யத்தாலும், தேவதைகளின் கிருபையாலும் வெகுகாலம் கழித்து படிப்படியாக, இந்த எப்பொழுதுமுள்ள சிரேஷ்டமான வேதமார்க்கத்தை யடைகிறார்கள்.

13. எவன் முன்ஸம்ஸ்காரவசத்திலிருந்து (தனது மார்க்கத்திலிருந்து) (தன்மார்க்கத்திற்கும் வேதமார்கத்திற்கும் உள்ள) பலாபலங்களை யோஜித்து ஸ்வதந்திரனாக வேதமார்க்கத்தையடைகிறானோ அவனும் கைவல்யமடைவான்.

14. இந்த வேதமார்க்கத்தை விட்டுவிட்டு எவனொருவன் வேறு வழியை ஆச்ரயிக்கிறானோ அவன் கையிலிருக்கிற பாயஸத்தை விட்டுவிட்டு புரங்கையை நக்குவனுக்கு ஒப்பாவான்.

15. ஜந்துக்களுக்கு வேதமார்க்கமன்னியில் வேறுமார்க்கத்தால் முக்தி கிட்டுமானால், பிரகாசமில்லாமல் அவர்களுக்கு இருளால் கடமுதலியவை அறியப்படும்.

16. ஆதலால் வேதத்தால் சொல்லப்பட்ட பொருளே ஸத்யம், ஸத்யம், என்று என்னால் சொல்லப்படுகிறது; மற்ற மார்க்கத்தால் அறியப்படும் அர்த்தம் பரமார்த்த ஸத்யமன்று.

17–18. ஹே! ஸ்வர்க்கவாஸிகளே! பரமார்த்தம் இருவகையாக என்னால் சொல்லப்படுகிறது;

ஒன்று, ஸ்வபாவமாகவே எக்காலத்திலும் ஸாக்ஷாத்பரமார்த்தம்; அது, ஸத்ய, சைதன்ய, ஸுக, அனந்த லக்ஷணமுடைய சிவமே.

மற்றொன்று (இந்த சிவமாகிய) ஸாக்ஷாத்பிரஹ்மத்தினிடத்தில் (குற்றத்துக்கிடமின்றி) அத்யாஸத்தாற்றோன்றிய மாயையாற் கற்பிக்கப்பட்டதாகும்.

19–20. இவ்விதம் மாயையால் கற்பிக்கப்பட்ட உண்மையற்ற (அவஸ்து) பதார்த்தங்களுக்குள் (எல்லாம் மாயையால் கற்பிக்கப்பட்டபடியால் வஸ்துக்கள் இல்லாமலிருந்தாலும்), சிலவியவஹாரதசையில் ஸத்யமாக (பரமார்த்தமாக) வும், சிலவியவஹாரதசையிலும் அஸத்யமாகவும் (அபரமார்த்தமாகவும்) கற்பிக்கப்பட்

டிருக்கின்றன ; இவ்விருவகைகளும் ஆகாசமுதலிய ஜகத்தும், இப்பியிற் காணப்படும் வெள்ளிமுதலியவைகளுமாம், என்று என்னுல் சொல்லப்படுகிறது.

21. வியாவஹாரிக ஸத்யதையும், ஸாக்ஷாத் ஸத்யமான சித்கனத்தையும், இவ்விரண்டையும் வேதம் சொல்லுகிறது ; புறமதங்கள் இவ்விதம் சொல்லவில்லை புறமதங்கள் இவ்விருவிதஸத்தியங்களையும் கூருமல் கேவலம் வேதாந்தத்தில் விவகாரத்தின் பொருட்டொப்பிய வியாவகாரிக ஸத்யத்தையே பாரமார்த்தமாகக்கொண்டு, பஞ்சபூததிரவிய குணுதிகளையன்றி மற்றொன்றையும் கூறிற்றில்லை.

22. ஸ்வப்னத்தில் கற்பிதமாயுள்ள பொருள்களைப்போல ஜாக்கிரத்திற் கற்பிதமாயுள்ள வஸ்துக்களைப் பொய்யென்றுகொள்ளாமல் மெய்யென்று கருதி புறமதங்கள் வியவஹாரிக பொருளையே சொல்லுகின்றன.

23. இம்மார்க்கங்கள் ஜாக்ரத்காலத்தில் கற்பிக்கப்பட்ட ஸத்யபொருளுக்கு ஸமானமானதை மாத்திரம் சொல்லுகின்றன; பாமார்த்தமான ஸத்யசித்கனத்தை இவர்கள் எவ்விதம் பிரவித்திப்பார்கள்.

24. ஆதலால் (வியாவஹாரிகம் என்ற) ஒரு திருஷ்டியால் இந்த மார்க்கங்களெல்லாம் ஸத்யங்களே; ஆயினும் வேறு (பாமார்த்த) திருஷ்டியினுல் பிராந்திகள் என்றே நன்கு நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

25. சைதன்யத்தை யபேக்ஷித்து சேத்யமான ஆகாசாதி ஸகல ஜகத்தும் அஸத்யமே; கடம், சுவர் முதலியவைகளை யபேக்ஷித்து அந்த ஆகாசாதி ஜகத்ஸத்யம்.

26. ஆகாசமுதலியவைகளை யபேக்ஷித்து கடம், சுவர் முதலிய பாவங்கள் (பதார்த்தங்கள்) அஸத்யங்களே; கிளிஞ்சில் வெள்ளியை யபேக்ஷித்து கடம், சுவர் முதலியவை ஸத்யங்களே

27. ஜாகிரதாவஸ்தையை யபேக்ஷித்து ஸ்வப்பனுவஸ்தை அஸத்யரூபம், ஸத்யமன்று.

28. அப்படியிருந்தாலும் ஸ்வப்னத்தில்கண்ட சில வஸ்து ஜாக்ரத்தில் ஸத்யமான சில பொருளை யடைவதில் ஸூசகமா யிருக்கிறது.

29. இவ்விதமாக புறமார்க்கங்கள் பிராந்தங்களாயிருந்தாலும் வேதத்தில் சொல்லிய அர்த்தத்தை அடைவதில் காரணமாகும், ஸந்தேகமில்லை.

30. ஆதலால், ஆராயுமிடத்து வேதபரமான மார்க்கத்தைத் தள்ளக்கூடாது; வேதமார்க்கத்திலிருப்பவன் புறமார்க்கங்களைத் தொடக்கூடாது.

31. வேதமார்க்கத்தையுடையவன் புறமார்க்கங்களை மோகத்தாலேனும் சேர்வானேயாகில் யாதொரு விசாரணையுமின்றி பிராயச்சித்தம் செய்துகொள்ளவேண்டும்.

32. வைதிக மார்க்கஸ்தன் அவர்களின் பங்க்தியில் புஜிக்கக்கூடாது; புஜித்தால் சாந்திராயணம் செய்யவேண்டும்.

33. அவர்களுடன் மோகத்தினுலாவது ஹோமம், தானம், விவாஹம், அத்யயனம் முதலிய காரியங்கள் செய்யக்கூடாது; செய்தால் சாந்திராயண விருதம் செய்யவேண்டும்.

34. சிரேயஸை விரும்பும் புத்திமான்கள் தர்மாதர்மங்கள் முதலியவற்றையும், விவேக ஞானத்தையும் மோகத்தாலாவது அவர்களிடம் தெரிந்துகொள்ளக்கூடாது.

35. எவர்கள் வேதபாஹ்யமான மார்க்கங்களில் நிலைபெற்றிருக்கிறுர்களோ அவர்கள் பாஷண்டிகளென்றே யறியக்கடவீர்; அவர்களுடன் ஸஹவாஸம் செய்கிறவர்களும் பாஷண்டிகளே.

36. கலியுகத்தில் பாஷண்ட மார்க்கத்தால் மயக்கத்தை யடைந்து ஜகத்கர்த்தாவும், ஸத்யாதிலக்ஷணமுள்ள சிவனை வேத மந்திரங்களால் ஜனங்கள் பூஜிக்கிறதில்லை.

37. வேதசித்தரும், ஸாம்பரும் சந்திரார்த்த சேகருமான மஹாதேவரை பூஜிக்கிறதில்லை.

38. வேதோக்த மார்க்கத்தால் பஸ்ம திருபுண்டரமும் தூளனமும் ஆசரிக்கிரதில்லை.

39–42. ருத்திராக்ஷதாரணம், சிவலிங்கபூஜை, தேவகாரியம், பிதிருகாரியம், ஔபாஸனம், பஞ்சயக்ஞம், அதிதிபூஜனம், வைச்வதேவம் இவைகளையெல்லாம் செய்கிறதில்லை.

43. வேதபாஹ்யமான மார்க்கத்தால் விஷ்ணுவை பூஜித்து, மோஹத்தால் சங்கரனை நிந்திப்பார்கள்.

44. பிரஹ்மன, விஷ்ணு, ருத்ரன் இவர்களை பேதபாவத்துடன் பார்ப்பார்கள்; ஒன்ருக அறியமாட்டார்கள்.

45. தக்ஷிணையில்லாமலும், அப்யங்கமில்லாமலும் (எண்ணை தேய்த்துக்கொள்ளுதல் இல்லாமலும்), பாதசுத்தி யில்லாமலும், ஹோமமில்லாமலும் சிரார்த்தம் செய்வார்கள்.

46. ஏகாதசி, அஷ்டமி, விசேஷமாக சதுர்தசி இத்திதிகளில் உபவாசமிருக்கமாட்டார்கள்.

47. சதருத்ரம், சமகம், புருஷஸூக்தம் இவைகளால் ஈசனை அபிஷேகம் செய்கிறதில்லை.

48. பக்தியுடன் சிவனுடைய புராதனமான க்ஷேத்திரங்களை தரிசிக்கிரதில்லை.

49–52. தக்ஷிணகைலாஸம், வியாக்ரபுரம், மற்றுமுள்ள சிரேஷ்டமான சிவக்ஷேத்திரங்களில் ஒரு வருஷம் வாஸம்செய்வதுமில்லை.

53. தினந்தோரும் வேதாந்த மஹாவாக்கியநிர்ணயத்தை குருமூலமாக செய்துகொள்வதில்லை.

54. மற்றுமுள்ள வேதத்தில் சொல்லிய கர்மங்களை ஆசரிக்கிரதில்லை.

55. ஸ்மார்த்த கர்மங்களையும் செய்கிரதில்லை.

56. நெற்றியில் ஊர்த்துவ புண்டரமாயும், வர்த்துலமாயும், அர்த்தசந்திராகாரமாயும் மோகத்தால் தரித்துக்கொள்ளுகிறார்கள்.

57. தன் தேகத்தில் சங்கம், சக்கிரம், கதை, வஜ்ர முதலிய அடையாளங்களை தரித்துக்கொள்ளுகிறார்கள்.

58. மனுஷ்யனுடைய நாமத்தையும், ஆகாரத்தையும் தரித்துக்கொள்வார்கள்.

59. அதிகமாய்ச் சொல்வதில் என்னபயனிருக்கிறது; பாஷண்டிகள் வெகுசிரத்தையுடன் வேதமரியாதயை (வேதத்தில் சொல்லியவைகளை) கெடுப்பார்கள்.

60. தீரர்களும், சிஷ்டர்களுமான மஹாத்மாக்கள் மகேச்வரனுடைய கிருபையுள்ளவர்களாக ஸந்தோஷத்துடன் முக்தியடையும்பொருட்டு கேவலம் வேதத்தில் சொல்லியவைகளைச் செய்வார்கள்.

---

## அத்தியாயம் 3.

---

### (ஸாக்ஷிசிவஸ்வரூப கதனம்).

1. பிரஹ்மன் :—எல்லாச்சரீரங்களிலும் ஆத்மாவாக விளங்குகிற சங்கரனென்னும் பெயருடையவர் அனைத்துக்கும் ஸாக்ஷியாவார்; அந்த ஸாக்ஷியில்லாவிடில் ஸாக்ஷியமாகிற (ஸாக்ஷிக்கு விஷயமாகிற) ஜகத் எவ்விதம் விளங்கும் (இந்த சின்மாத்திர ஸாக்ஷி இல்லாவிடில் எந்தபிரகாசத்தால் ஜகத் விளங்கும்; ஆதலால் ஸாக்ஷிரூபமான ஒருபிரகாசம் ஒப்பவேண்டும்).

2. (ஸாக்ஷிரூபம்போல், ஸாக்ஷ்யத்திற்கும் ஏன் ஸ்வதமாய் பிரகாசமிருக்கக்கூடாதெனில்) சராசரமாயுள்ள இந்த எல்லா ஜகத்தும் ஸ்வபாவத்தில் பிரகாசமற்ற ஜடமன்றோ! (ஆதலால் ஸாக்ஷிஸ்புரணமில்லாமல் இதற்கு பிரகாசமில்லை); இந்த ஜகத்தின் ஜடாஜடமாகிய இரண்டுபாகமும் (ஒருஸாக்ஷிப்) பிரகாசத்தினாலேயே விளங்கவேண்டுவதால் ஜகத் ஜடமேயாம்.

**3.** இந்த பானம் (விளக்கம்) விக்ஞானத்தினின்றும் ஜன்ம மென்று சிலர் (பாட்ட மதஸ்தர்கள்) சொல்வார்கள் ; அது சரி யன்று; ஜன்யமாயிருந்தால் அது (பானம்) ஜடமாகும்; ஜன்யமான கடமுதலியவைகளுக்கு ஜடத்வம் பொருந்தும்.

**4.** விக்ஞானம் (விஷயங்களில்) பானத்தை (விளக்கத்தை) உற்பத்தியாகும்படி செய்வது உண்மையாகாது ; (மேலும்) ஞா னத்திற்கு பானரூபமாக பரிணமித்தல் ஸித்திக்காது.

**5.** ஞானத்திற்கு (ஸ்வபாவத்திலே) விகாரத்தன்மை யில் லாததால் பரிணாமம் ஸித்திக்காது; விகாரப்படுமாயின் பால்முத லிய ஜடவஸ்துக்களைப்போல (தன்ஸ்வபாவம்கெட்டு) காட்சிப்பொ ருளாகும் (ஸாக்ஷ்யமாகும்) ; ஞானம் அப்படி யன்று (சேத்ய மன்று, அறியும்பொருளன்று).

**6.** அப்படியே பானத்திற்கு விக்ஞானம் ஆரம்பகம் (ஜன கம்) ஆகாது ; (ஏனெனில்) ஞானம் திருசியமா யறியத்தக்க ஒரு திரவியவஸ்துவன்று ; (மேலும்) அறிவை குணவஸ்துவாக தார்க் கிகர்கள் முதலியவர்கள் அங்கீகரித்திருக்கிறார்கள்.

**7.** (ஆரம்பவாதத்தில் அஸத்காரியத்தை உத்பத்திசெய்கிற தாக கொள்கை), அஸத்ரூபமான (பிராக் அபாவமாகிய) பானத் திற்கு ஞானம் ஆரம்பகமாகாது ; (அப்படியானால்) வந்தியாபுத்தி ரனுக்குக்கூட ஞானம் ஜனகமாகும்.

**8.** முன் அஸத்ரூபமாயிருக்கிற பானத்திற்கு ஞானம் ஜன கமாகாது ; (காரிய உத்பத்திக்கு) முன்னாக விருக்கத்தக்க (கருவி) விசேஷணங்கள் அஸத்திற்கு இல்லாதபடியால் (ஜனகமாகாது).

**9.** (பரிணாமம், ஆரம்பகத்தை தவிர உத்பத்திக்கு வேறு விதமில்லாதபடியாலும், இந்த இரண்டும் முன்சொல்லியபடி இதற்கு சேராதபடியாலும்) ஆதலால் பானத்திற்கு விக்ஞானஜன் யத்வம் ஒருபொழுதுமில்லை.

**10.** ஹே ! ஸ்வர்க்கவாஸிகளே ! முன்சொல்லிய நியாயத் தால் ஞானத்திற்கு ஜன்யத்வமில்லை (உண்டாகிறது என்பது

இல்லை); இந்த விளக்கத்திற்கு (உணர்வுக்கு) ஜன்யத்வபிரதீதி (உண்டாகிறதென்ற தோற்றம்) பிராந்தியே. (கடஞானத்திற்கு பிறகு படஞானம் முதலியனவர, ஞானஜன்யத்வ தோற்றமிருக்கிறதே எனில், கடம், படம் முதலிய விருத்தி ஞானத்தில், விருத்தி, ஞானம் இவ்விரண்டையும் பிரித்தறியாமல் விருத்தியினுற் பத்தியைக்கண்டு ஞானத்தி னுற்பத்தியாகக்கொள்வது பிராந்தியே).

11. இந்த பானத்திற்கும் ஜன்யத்வதோற்றம் பிராந்தியே; (அபாவமில்லாமல்) இது பாவமாயிருப்பதால், உற்பத்தியுமில்லாததால் நித்யமாயிருக்கிறது.

12. ஸர்வஜகத்தையும் விளக்குகின்ற அழிவில்லாத ஸ்வயம் பிரகாசமான வஸ்து எதுவோ, அந்தபானமாகிய வஸ்துவே ஸர்வஜகத்திற்கும் ஸாக்ஷியாய் விளங்குகின்ற சங்கரனென்றும் பெயருடையவர்.

13. அந்த சங்கரனுல் கற்பிதமாகிய ஸம்பந்தத்தைப்பற்றி அக்ஞானம் விளங்குகின்றது; தானுகவே விளங்கமாட்டாது. (இவர் அஸங்கராயிருப்பதால் ஒருவிதத்தாலும் ஒன்றோடும் ஸம்பந்தமில்லை; ஆதலால் அக்ஞானம்போலவே இந்த ஸம்பந்தமும் ஸாக்ஷியில் கற்பிதம்).

அவ்விதமே அக்ஞானத்தாலுண்டாகும் சித்தமும், (அதன் தர்மங்களாகிய) இராகத்வேஷாதிகளும், அக்ஞானத்தை (கற்பிதமாக) ஸ்பரிசித்து விளங்குவிக்கின்ற சைதன்யத்தால் விளங்குகின்றன, ஸ்பாவமாக விளங்கவில்லை.

14–15. பிராணன், பாஹ்யகரணங்கள் (இந்திரியங்கள்), உடல், கடபடாதிவெளிவிஷயங்கள் இவையெல்லாம் சித்தவிருத்திஸம்பந்தமூலமாக, (அந்த சித்தவிருத்தி சைதன்ய ஸம்பந்தத்தால் விளங்குகிறதென்று முன்சொல்லியபடி) திருக்ரூபஸாக்ஷி சைதன்ய ஸம்பந்த பலத்தாலேயே பிரகாசிக்கின்றன, தானுகவில்லை.

16–17. அன்றியும், அனுமானம், உபமானம் முதலிய விருத்திகளிலிருக்கும் சைதன்யம் சிலபொருள்களை விளங்கச் செய்யும் (பரோக்ஷ பொருள்களை) ;

ஆதலால் சங்கரன் எல்லாவற்றையும் விளங்குவிக்கின்றனவ ராகச் சொல்லப்படுகிறார் ; இந்த ஜகத் அவரால் விளங்குகிறது.

ஆதலால் (முன்சொல்லிய யுக்திப்படி ஸாக்ஷிரூபமாக சித்எல் லாவற்றையும் விளங்கச்செய்கிற காரணத்தால்) மனிதர்கள் இந்த ஈசனுலேயே ரூபங்களைப் பார்க்கிறார்கள்; (கண்ணோடு ஸம்பந்தப் பட்ட உருவங்களால் உண்டான மனோவிருத்தியை விளங்கச்செய் கின்ற சித்பிரகாசத்தினுல் ரூபத்தைப் பார்க்கிறார்கள்).

18. இந்த சைதன்யத்தாலேயே ஒருவன் சப்தங்களைக் கேட்கிறான் ; பிரியமுள்ள கந்தங்களை முகர்கிறான் ; இதனுலேயே எப்பொழுதும் வாக்வியவஹாரம் செய்கிறான்.

19. இதனுலேயே ருசி, அருசிகளை அறிகிறான்; இப்படிப் பட்ட சங்கரன்என்ற விக்ஞானத்தை அறிஞர்களால் வெவ்வே ருகச் சொல்லுகிறார்கள். ஹே ! பிராஹ்மணர்களே ! சிலர் இதை ஹிருதயம் என்று சொல்லுகிறார்கள்.

20–24. சிலர் இதை மனம் என்றும், ஸம்க்ஞானம் என் றும், அக்ஞானமென்றும், விக்ஞானமென்றும், பிரக்ஞானமென் றும், மேதையென்றும், திருதியென்றும், திருஷ்டியென்றும், மதியென்றும், மனீஷையென்றும், ஜூதியென்றும், ஸ்மிருதி யென்றும், ஸங்கல்பமென்றும், கிருது என்றும், நாமமென்றும், வசமென்றும் இவைகளெல்லாம் என்றும் சொல்லுகிறார்கள்.

இவையெல்லாம் பிரக்ஞானமாகிய சிவனுடைய நாமதேயங் கள், சம்சயமில்லை.

25-27. இந்த பிரக்ஞானமே பிரஹ்மம், இந்திரன், பிரஜா பதி தேவர்கள், பூதங்கள், புவனங்கள், அண்டஜம், ஜாருஜம், ஸ்வேதஜம், உத்பீஜம், குதிரைகள், பசுக்கள், மனிதர்கள், யானை கள் மற்றுமுள்ள ஸ்தாவரஜங்கமங்கள் ; எல்லாம் பிரக்ஞானகன லக்ஷணமுடைய இந்த சம்புவே.

28. இந்த பரமேச்வர ஸம்மந்தமான பிரக்ஞை எல்லாவஸ் துக்களுக்கும் பிரதிஷ்டை (ஆச்ரயம்). இந்த பிரக்ஞானமே சிவ ருத்திரனென்ற பெயருடைய அந்த பிரஹ்மம்.

29. இவ்விதமான ஞானத்தினலேயே மனிதன் அமிருத ஞகிருன் (மோக்ஷமடைகிருன்); கர்மத்தாலாவது, பிரஜையாலா வது வேறு மற்றயாதொன்ருலுமாகிறதில்லை.

30. பிரஹ்மஞானத்தால் மட்டும் மனிதன் பிரஹ்மத்தை யடைகிருன்; இதில் ஸந்தேகமில்லை; மும்முறை சபதம் செய்கி ரேன்.

[இரண்டாம் அத்தியாயம் ஆரம்பமுதல் இதுவரையிலும் ரிக் வேதத்திலுள்ள ஐத்ரோபநிஷத்தின் அர்த்தத்தை பிரஹ்மா சொன்ஞர் இனிமேல் யஜுர்வேதத்திலுள்ள தைத்திரீயோபநிஷத்தின் பொரு ளைச் சொல்லத்தொடங்குகிருர். இந்த பிரஹ்மகீதை நன்குவிளங்க உபநிஷத்துகள் பிரயோஜனப்படுமாகையால் இந்த சூதசம்ஹிதை பிரசுரக்காரர் வெளியிட்டிருக்கிற 'த்வாதசோப நிஷத்' என்ற புஸ்த கம் வெகு உபயோகமாயிருக்கும். அதில் இதே பொருள்கள் ஸ்ரீசங் கரர் பாஷ்யஸாரத்துடன் மொழிபெயர்க்கப்பட்டிருக்கின்றன].

31–32. (இதுமுதல் அத்யாயம் முடிவுவரை தைத்திரீயோ பநிஷத் அர்த்தம் சொல்லப்படுகிறது). (ஐதரேய உபநிஷத்தில் முக்தி ஸாதனம் ஞானமேதவிர கர்மமன்று என சொல்லப்ப ட்டது; அவ்விஷயமே இதிலும் காட்டுகிருர்).

அந்த ஞானத்திற்கு விஷயம் ஸத்யஞானஸுக அத்வயஸ்வ ரூபமான பிரஹ்மம்; இந்த ஸம்ஸாரமாகிய குகையில், மாயை, அக் ஞானம், பரமாகாசம் என்னும் பெயர்களுடைய அவ்யாகிருதத் தில் இருக்கிற பிரஹ்மத்தை எவனொருவன் அறிகிருனே அவன் ஒரேகாலத்தில் எல்லாக்காமங்களையும் யடைகிருன்; அவன் அறி யப்பட்ட பிரஹ்மஸ்வரூபமாக ஜீவன்முக்தன் என்பதில் ஸந்தேக மில்லை.

33. பிரத்யக் ஆத்மாவின் பிரஹ்மரூபத்தை மறைக்கும் அக் ஞானம், அந்தக்கரணம், மாயாசக்தி இவைகளுக்கு ஸாக்ஷியான

அத்விதீயமான பிரஹ்மத்தை யறிகிறவன் மேலான பிரஹ்மவித் ஆகிறான்.

34. இந்த அபின்னமாகிய கற்பித சக்தியுடன் கூடியிருக்கின்ற பிரஹ்மரூப ஆத்மாவினிடத்திலிருந்து, ரஜ்ஜுஸர்ப்பம் போல, அபஞ்சீகிருத ஆகாசம் உண்டாயிற்று (தோன்றிற்று).

35. அவ்வாகாசத்திலிருந்து வாயுயென்ற பெயருடைய ஸ்பர்சம் தோன்றிற்று ; அதினின்றும் அக்னி உண்டாயிற்று ; அக்னியினின்றும் ஜலமும், ஜலத்திலிருந்து பிருதிவியும் உண்டாயிற்று.

36. சிவாக்ஞையால் இந்த ஸூக்ஷ்ம பூதங்களை பஞ்சீகாணம் செய்து, அவைகளைக்கொண்டு என்னால் இந்த பிரஹ்மாண்டம் ஸிருஷ்டிக்கப்பட்டது.

37–38. பிரஹ்மாண்டத்திலுள்ளே விசிஷ்ட புவனங்கள் சிவாக்ஞையால் நிர்மாணிக்கப்பட்டன; தேவர்களும், பலகர்மதேவர்களும், மனுஷ்யர்களும், பசுமுதானவைகளும், அந்தந்தக்கர்மானுரூபமாக என்னால் சிருஷ்டிக்கப்பட்டன.

39. (அன்ன பரிணாமரூப புருஷசரீர தாதாத்ம்யத்தையடைந்த ஆத்மாவுக்கு, சர்வாந்திர பிரஹ்மரூபத்தை விளங்கும்படிச்செய்ய, உள், வெளி என்ற பாவத்தால் அன்னமயமுதலிய பஞ்சகோசங்கள் ச்ருதியில் சொல்லப்பட்டிருக்கின்றன. முதலில், 'அந்த புருஷன் அன்னரஸமயன்' என்று ச்ருதி அதிகாரிகளின் பிரதிபத்தி ஸௌகர்யத்திற்காக சொல்லுகிறது).

இந்த ஆத்மா அன்னமயன் ; எது எலும்பு, நரம்பு முதலிய ரூபத்துடன் தேகிகளுக்கு சரீரமென்று விளங்குகிறதோ (அதை உபாதியாயுடைய அன்னமய ஆத்மாவிற்கு) அதற்குள்ளாகி, பிராணமயாத்மா பின்னமாக விளங்குவான்; எந்தக்காரணத்தால் இந்த உள்ளிருக்கிற பிராணமயன் தேகமத்தியத்தி லிருப்பதாக அனுபவிக்கப்படுகிறதோ அக்காரணத்தால் பாஹ்யதேகத்தைக்காட்டிலும் பிராணமய ஆத்மாபின்னமென்று அறிந்துகொள்ளவேண்

டும். (கத்தி உரைபோல் உள்ளிருப்பதை மறைப்பதால் அன்னமய தேகம் கோசம் என்றுசொல்லப்படுகிறது).

40. எல்லா மனிதர்களிடமும் விளங்குகிற இந்தபிராணமய கோசத்திற்குள்ளும், வேராகவும் மனோமய ஆத்மா விளங்குகிறது (இதுவும் அனாத்மாவென்று விவேகத்தால் அறிந்துகொள்ள வேண்டியது)

41. இந்த விளங்காநின்ற மனோமயகோசத்திற்குள்ளும் வேறாகவும் விக்ஞானமய ஆத்மாவிளங்குகிறது.

42. (இந்த விக்ஞானமயமும் அனாத்மா); இந்த விக்ஞான மய ஆத்மாவிற்கு உள்ளும் வேறாகவும் ஆனந்தமய ஆத்மா யிருக் கிறது.

43–45. இந்த அன்னமயன் பிராணமயனால் வியாபிக்கப் பட்டிருக்கிறான்; பிராணன் மனோமயத்தாலும், மனோமயன் விக் ஞானமயத்தாலும், விக்ஞானமயன் எப்பொழுதும் ஆனந்தமயனா லும் பூர்ணனாயிருக்கிறான்; அப்படியே இந்த ஆனந்தமயனும் தனக்கு வேறான ஸாக்ஷியாகிய பிரஹ்மத்தால் எல்லாவற்றிற்கும் உள்ளாக ஸம்பூரணனாயிருக்கிறான்; இந்த பிரஹ்மம் வேறொன்றா லும் வியாபிக்கப்படவில்லை.

46 'புச்சம்' (ஆதாரம், அதிஷ்டானம்) என்று சொல்லப் பட்ட இந்த ஸத்ய ஞானத்துவ யாத்தமகமான பிரஹ்மம் (அஸத் அல்ல), எப்பொழுதும் ஸாக்ஷாத் ரஸமாயிருக்கிறது; (மதுர முதலிய ரஸமுதலியதுபோல எப்பொழுதும் பிரத்யக்திருஷ்டி யுடைய யோகிகளால் ஆனந்தரூபமாக அனுபவிக்கப்படுகிறபடி யால் ரஸம் என்று சொல்லப்படுகிறது).

47. இந்த ஸநாதனமான ரசத்தையடைந்து தேகியானவன் எங்கும் ஸுகீயாயிருக்கிறான், வேறு விதமாக (விஷயத்தால்) அன்று.

48. எல்லோருக்கும் ஸ்வாத்மபூதமா யிருக்கப்பட்ட இந்த பரானந்தம் இல்லாவிடில் (அஸத்தாய் இருக்கும்பக்ஷத்தில்) எந்த

மனிதன் ஜீவித்திருப்பான், எதுதான் காரியங்களைச் செய்து கொண்டிருக்கும்.

**49.** ஆதலால் (எதனுல் இவருக்கு ஆனந்தரூபம் விளங்குகிறதோ); எல்லாப்பிராணி ஹிருதயத்திலும் அபரோக்ஷமக விளங்குகின்ற பிரஹ்மம் ரஸமென்ற பெயர் அடைந்தது; அவர் கிருபைகொண்டு, ஸம்ஸாரதுக்கத்தில் உழலுகின்ற ஜீவாத்மாவை (அவன் செய்ததர்மானுரூபமாக) ஸுகமடையும்படிச் செய்கிறது.

**50–51.** எப்பொழுது இந்த ஜீவாத்மா அதிருச்யம் முதலிய லக்ஷணங்களுடன் கூடிய இந்த பிரஹ்மத்துடன் பேதமற்றிருப்பதாயும், பரமமான ஐக்கியமாயிருப்பதாயும் அறிகிருனே அப்பொழுதுதான் அபயமாயும், அத்யந்த கல்யாணமாயும், பராமிருதமாயும் ஸ்வாத்மபூதமாயுமுள்ள பரம்பிரஹ்மத்தை யடைகிருன்.

**52.** எப்பொழுது இந்த ஜீவன் இந்த பிரஹ்மத்தில் அல்பமாகிலும் பேதத்தை அறிகிருனே அப்பொழுது அவனுக்கு பயம் உண்டாவதில் ஸந்தேகமில்லை.

**53.** ஸத்யாதி லக்ஷணமுள்ள, எல்லோருடைய ஆத்மபூதமாயிருக்கப்பட்ட பிரஹ்மம் மூர்க்கஜனங்களைப்பற்றி உதாஸீனமாக விருக்கிறது (தன்னை விளக்காது).

**54.** நல்ல ஞானமுடையவர்களுக்கு அதுவே பரமமான பதம்; அப்பொழுது தனதாத்மாவாகவே கேவலம் கிருபையால் விளங்கும்.

**55.** அங்கங்களுடன் வேதங்களை நன்ருய் படித்திருந்தாலும், மனனமற்றவனுக்கு இந்த பிரஹ்மம் எப்பொழுதும் பயத்திற்கு காரணமாயிருக்கும்.

**56.** (இதை திருடப்படுத்த சுருதிவாக்யம்) இந்த பிரஹ்மத்தினிடமிருக்கும் பயத்தால் வாயு, சூரியன், அக்னி, இந்திரன், மிருத்யு எல்லோரும் தத்தம் தொழிலைச் செய்கிருர்கள்.

**57.** இந்த பிரஹ்மத்தின் ஆனந்த லேசத்தால் விஷ்ணு முதல் ஸ்தம்பாந்தமுள்ளவர்களெல்லாம், தாரதம்யகிரமத்துடன், ஸுகிகளாக விருக்கிருர்கள்.

58. அவ்வப் பதங்களில் இச்சையில்லாத சிவபிராஸத மடைந்த ச்ரோத்திரயனுக்கு ஸ்வரூபபூத ஆனந்தம், ஸார்வபௌம முதலிய பதங்களில்போல, தானுகவே விளங்கும்.

59. இந்த ஆதித்யன் (ஹிரண்யகர்ப்பன்) ஹிருதயத்தி லும், அப்படியே மற்ரேர்களுடைய ஹிருதயத்திலும் ஸ்வயம் ஸாக்ஷியாக விருக்கிறது ஸாக்ஷாத் இந்த சிவனே (பிரஹ்மமே).

60. மாயை ஈறுகவுள்ள தேகமுதலிய ஸாக்ஷ்யத்தை (அறிபடும்பொருளை) விட்டுவிட்டு ஸர்வஸாக்ஷியாகிய ஆத்மாவை எவன் அறிகிருனே அவனே உண்மையை யறிந்தவன்.

61. ருத்ரன் நாராயணன்முதல் ஸ்தம்பம் வரையிலுள்ளவை களுக்கு ஸாக்ஷியாகவிருக்கும் பிரஹ்மத்தை எவன் தர்க்கத்தாலும் ச்ருதி பிரமாணத்தாலும் அறிகிருனே அவனே உண்மையை யறிந்தவன்.

62–63. எவனுக்கு தர்க்கபிரமாணங்களால் இத்தகைய ஞானம் இருக்கிறதோ அவன், தனது ஆத்மாவால், தன் ஆத்மா வை ஸ்வர்க்காதிலோகமுதலியவைகளினின்று பிரித்து (இவைக ளல்லவென்று நன்ருய் உணர்ந்து), ஆபாஸமாக விளங்குகின்ற (வாஸ்தவமல்லாமல் தோற்றமாகமாத்திர மிருக்கும்) அன்ன மயாதிகோசங்களை கேவலம் சிவபிரஸாதத்தால் சுருக்கிக்கொள் ளுகிருன் (இவைதானல்லவென்று அறிந்து பிரஹ்மத்தை யடைகிருன்).

64. (அத்யந்தம் நிர்விகல்பகமா யிருப்பதால்) நிமித்தமில் லாதபடியால் சப்தங்களால் அறியக்கூடிய ஜாதிகுணம் கிரியைக ளில்லாதபடியால் அவரிடமிருந்து வாக்கு திரும்பிவந்து விடுகின் றது (எட்டுகிறதில்லை) நிர்விசேஷமாயிருக்கிற சிவனிடத்தில் சப் தம் எப்படி பிரவிர்த்திக்கும்?.

65–67. ஒரு விசேஷத்தை ஆசரியத்தல்லவோ சப்தம் பிரவர்த்திக்கும்; எல்லாவிஷயத்தையும் விஷயீகரிக்கின்ற இந்த மனஸ் எந்தவஸ்துவினிடம் செல்லாமல் திரும்புகின்றதோ, பாக் (வெளி) வஸ்துவிஷயங்களும், ச்ரோத்ரம், த்வக், கண்முத

கிய ஞானேந்திரியங்களும், கர்மேந்திரியங்களும் செல்லாதோ அந்த ஆனந்தமாயும், ஏகமாயும், நிர்குணமாயும், சத்யசித்கனமாயும் உள்ள பிரஹ்மத்தை ஸ்வாத்மாரூபமாக அடைந்தவனே பயமற்றவனாவான்.

68. தன்னுடைய குருஉபதேசத்தால் எவன் இப்படி பிரஹ்மத்தை யறிகிறானோ அவன் நல்லதும், கெட்டதுமான கர்மங்களால் ஒருபொழுதும் தன்னை வருத்தப்படுத்திக் கொள்ளுகிறதில்லை.

69. துக்கப்படசெய்கிறதும், துக்கத்தை யனுபவிப்பதுமாகிய ரூபத்தால் விளங்குகின்ற இந்த ஜகத்தெல்லாம் வேதாந்தவாக்யத்தால் உண்டான ஞானத்தால் பிரத்யக் ஆத்மாவாகிய தனது ஸ்வரூபமாகவே விளங்கும்.

70–105. இந்த ஞானத்தால் அடியில் சொல்லப்படும் எல்லாம் சிவபிரஸாதத்தால் ஆத்மஸ்வரூபமாகவே விளங்கும்.

கர்த்தா, செய்விப்பவன், கர்மம், செய்கருவி, காரியம்; பிரமாதா (அறிவேன்), பிரமாணம், பிரமேயம் (அறிபொருள்), பிரமிதி; ஏவப்படுகிறவன், ஏவல், ஸாதனங்கள், ஏவுகிறவன்; போக்தா, புஜிக்கச்செய்பவன், போகம், போகஸாதனங்கள்; கிருகிக்கிறவன், கிருகிக்கும்பொருள், கிரகித்தல்; வேறொன்றாக மாறுபடுகின்ற பிராந்தி ஞானம், அக்ஞானம், ஸம்சயஞானம்; கடஞானம், படஞானம், சுவர் முதலியஞானம்; கடம், சுவர், குதிர், வஸ்திரம், பாத்திரம், பர்வதம்; பாதாள முதலியனவும், ஸத்யாதி லோகங்களும்; பிரஹ்மாண்டமும் அதற்குள்ளடங்கிய நூறு கோடி அண்டங்களும்; ஸமுத்திரம், தடாகம், நதீ, நதங்களும்; மேரு, மந்திரமுதலிய பெரிய பர்வதங்களும்; வனங்கள், வனதேசங்கள். வனத்திலிருப்பவைகளும்; விருக்ஷங்களும், பல புல் பூண்டு முதலியவைகளும்; ஆகாசமுதலிய பூதங்களும் பௌதிகங்களும்; சப்த ஸ்பர்சமுதலிய எல்லாதன்மாத்திர ரூபங்களும்; புழு, வண்டு, பறவைகள் கெட்ட ஜந்துக்களும்; பசுக்கள், மிருகங்கள் பாம்புகளும்; மனுஷ்யர்கள், யானை, குதிரை ஒட்டகம்,

கழுதைகளும் ; யக்ஷ, ராக்ஷஸ, கின்னர, ஸித்த, கந்தர்வர்களும் ; கர்மதேவர்கள், தேவர்கள், தேவராஜன், விராட், ஸ்வராட்டும் ; நானும் (பிரஹ்மனும்), என்னுடைய ஐச்வரியமும், என்னுடைய பக்தர்களும் ; ருத்ரன், அவருடைய ஐச்வரியமும், பக்தர்களும் ; ஈசுவரனும், அவர் ஐச்வரியமும், அவருடைய பக்தர்களும் ; விஷ்ணுவும், அவருடைய ஐச்வரியமும், அவர் பக்தர்களும் ; ஸதா சிவனும், அவருடைய ஐச்வரியங்களும் ; திக்குகள் மூலைதிக்குகள், நக்ஷத்திரமண்டலமும் ; வாசுதேவன், சங்கர்ஷணன், பிரத்யும்னன், அநிருத்தன், மத்ஸயம், கூர்மம், வாராஹம், நாரஸிம்ஹம், வாமனமும் ; ஆச்ரமங்கள், வர்ணங்கள் பல ஸங்கரஜாதிகளும் ; நிஷித்தங்களும், நன்மையும், நிஷேதமும், விதிகளும் ; சரீரம், இந்திரியம்; பிராணன், மனஸ், புத்தி, அகங்காரமும் ; காமக்ரோதாதிகளும், சாந்தி முதலியவைகளும், ஜீவாத்மா, பரமாத்மா, அவைகளின் பேதமும் ; பேதவுபாதியும் ; ஜடசக்தி, அதன்பேதங்களும், சித் சக்தியும் அதன் பேதங்களும் ; 'இருக்கிறது, இல்லை' என்ற வார்த்தைகளால் உதிக்கின்றபொருள்களும்; இவையெல்லாம் தனதாத்மாவாகவே விளங்கும்.

106–107. ஹே ! தேவர்களே ! ஜந்துக்கள் எப்பொழுதும் தனது பிரகாசத்தால் விளங்கும் ஆத்மாவென்ற பெயருள்ளதை 'நீ' 'நான்' என்ற சப்தார்த்தங்களாக வியவஹாரத்தில் அறிகிறார்கள் ; உண்மையாக அவர்கள் அறிகிறதில்லை ; இது அத்வயமானபடியால் (வேறொன்றுமில்லாமல் ஏகமாயிருப்பதால்) இவனை உண்மையாக அறிகிறவன் ஒருவன் இல்லை.

108. இவ்விதம் அத்வைதமான ஆத்மாவை எவனொருவன் திருடமாக அறிகிறானோ அவன் ஸ்வபாவமாக இந்த அர்த்தத்தை கானம்செய்துகொண்டிருப்பான் (ச்ருதியில் சொல்லிய 'அஹம் அன்னம்' என்றகானத்தை, அதன்பொருள் 'இதுவரையிலும் போக்திரு, போக்யம், போகபிரத ரூபமாய் பின்னமாய் இருந்த ஜகத் எல்லாம் நானே ; என்னைத்தவிர வேறொன்றுமில்லை; இது வெகு ஆச்சரியம் ; நான் ஸ்வப்பிரகாச சித்லக்ஷணபரம, ஜ்யோதி ரூபம் ; நானே அவைகளாக விருக்கிறேன்).

109. எவ்விதம் ஈசுவரனுடைய நர்த்னம் ஸ்வபவமாக லோக ரக்ஷணைக்காக ஏற்பட்டதோ, அவ்விதமே இந்த வித்வானு டைய கானமும் லோகோபகாரமாக விருக்கிறது.

110. எவ்விதம் ஆதிகுருவான ஈசுவரனுல் சொல்லப்பட்ட கீதை லோகஹிதமோ அவ்விதமே இந்த குருவான வித்வானு டைய கானமும் ஹிதத்தின் பொருட்டேயாம். (கூர்மபுராணத் தில் உள்ள ஈசுவரகீதை).

111. எப்படி ஆப்தகாமரான ருத்திரனுடைய பரதத்வ வியாக்யானரூபமான கீதை பரோபகாரமோ, அப்படியே இந்த கானமும் பரோபகாரமாகும்.

112. லௌகிக கானத்திலும் சிவன் பிரஸாத மளிக்கிறுர். (அந்தந்த தேச பாஷையால் பரமேச்வரனைப்பற்றி கானம்செய் வது லௌகிககானம்). வைதிக கானத்தைப்பற்றி கேட்கவே ண்டுமா ? ஆதலால் இந்த கானத்தை ஆசிரயிக்கவேண்டியது.

113. மேற்சொல்லிய வியாக்யானரூபமான கானம் செய்ய சக்தியில்லாமலிருந்தால் எப்பொழுதும் லௌகிக கானத்தையா வது கவனத்துடன் செய்யவேண்டியது.

114. சிவனையடைவதற்கு இந்த கீதி ஞானம் முக்கியகார ணமாயிருக்கிறது ; கீதி ஞானத்தால் யோகமுண்டாகிறது ; யோ கத்தாலேயே சிவனுடன் ஐக்கியம் ஸம்பவிக்கும்.

115. கானஞானமுடையவன் யோகத்தால் (அப்போதே) பிரதிபந்த (தடை) மிகுதியால் பரமேச்வரனை யடையாவிட்டா லும், அதையே பின்பற்றவேண்டியது (காலாந்தரத்தில் அடை வான்).

116. மோகத்தால் கேவலம் லௌகிக கானத்தை இவன் செய்யக்கூடாது; அப்படிச்செய்தால் அவன் பிராயச்சித்தம் செய் துகொள்ளவேண்டும்.

117. ஆதலால், தன்னுடைய துக்கரூபமான ஸம்ஸார நாசத்தில் பிரியமுள்ளவன், ச்ருதி பிரமாணத்தாலும், தர்க்க வழி

யாலும் சிவஞானம்பெற்று, அவனை எப்பொழுதும் கானம் செய்துகொண்டு இந்தப்புவியில் ஸஞ்சரிக்கவேண்டும்.

**118.** ஸகல துக்கத்தையும் போக்கடிக்கக்கூடிய என்னால் உண்மையாகச் சொல்லப்பட்ட இந்த உபநிஷத் பாதத்வ விஷயத்தை கஷ்ட ஹிருதயமுள்ளவனுக்கு சொல்லக்கூடாது; சிவபக்தியுள்ளவனுக்கே உபதேசிக்கவேண்டியது.

---

## அத்தியாயம் 4.

---

### (கேனோபநிஷத் வியாக்யானம்).

**1.** பிரஹ்மன்:—எக்காலத்திலுள்ளவும், எல்லாவற்றிற்கும் ஸாக்ஷியாயும், ஸம்ஸார ஸமுத்திரத்தில் ஆழ்ந்தவர்களுக்கு முக்தியளிப்பவனுயுமுள்ள ஒரு தேவனிருக்கிறான்.

**2.** அவருடைய இச்சாமாத்திர நியமத்தால் பிரேரிக்கப்பட்டு இந்த எல்லோருடைய மனஸ் நினைக்கக்கூடிய விஷயத்தில் செல்லுகிறது; பிராணன் சேஷ்டைசெய்கிறது; வாக்வசனிக்கின்றது.

**3.** கண் ரூபங்களைப் பார்க்கிறது, ச்ரோத்திரம் சப்தங்களை கேட்கிறது; மற்றுமுள்ள எல்லா இந்திரியங்களும் (புத்தி, கர்மேந்திரயங்கள்) அவராலே ஏவப்படுகின்றன.

**4.** தங்கள் தங்கள் விஷயத்தை உத்தேசித்து எப்பொழுதும் இவை பிரவிருத்திக்கின்றன; இவருக்கு இந்த ஏவுவதும் மாயையாலேயேதவிர ஸ்வபாவமாகவில்லை.

**5.** இந்திரியங்களுக்கு ஸத்தையும் (இருப்பும்) ஸ்வபாவத்தில் இல்லை; அக்னியால் வியாபிக்கப்பட்ட இரும்புபோல அவருடைய ஸத்தையே உள்ளது.

**6.** தன்னிடத்தில் கற்பிக்கப்பட்ட ச்ரோத்திரத்தை இந்த தேவன் அதில் பிரவேசித்து, ச்ரோத்திரத்திற்கு கேட்குந்தன்மையை கொடுக்கின்றான்.

**7–9.** அப்படியே தன்னிடத்தில் அத்யஸ்தமான மனஸுக்கு தான் அதை பிரவேசித்து ஸத்வகுணத்தி லிருந்துகொண்டு மனத்தன்மையையும், வாக்குக்கு பேசும்தன்மையையும், பிராணனுக்கு பிராணத்தன்மையையும், கண்ணுக்குப் பார்க்கும் தன்மையையும் நியமமாகக் கொடுக்கின்றார்; மற்ற கற்பித இந்திரியங்களுக்கும் அந்தந்தத் தன்மையைக் கொடுக்கிறார்.

**10.** அந்த பரமாத்மாஸ்வயம் ஜ்யோதி ஸ்வபாபமுடையவரானதால் அவரிடத்தில் வாக், கண், மனஸ் மற்றுமுள்ள இந்திரியங்கள் செல்லமாட்டா.

**11–12.** அந்த தேவன் அறியக்கூடியதும், அறியக்கூடாததுமான பொருள்களுக்கும் வேறுவான்; வாக்கினுலாவது, மனஸ், கண், காது அல்லது பிராணனுலாவது அறியமுடியாதென்று ஸத்யமாய்ச் சொல்லுகிறேன்.

**13.** சூர்யனுக்கு முன்பாக ரூபங்களெல்லாம் எப்படி விளங்குகின்றனவோ அப்படி எவருக்கு இந்த அகில ஜகத்தும் கோசரமோ (அறியப்பட்டதாகிறதோ) அவரையே எப்பொழுதுமுள்ள பரம் பிரஹ்மம் என்று நீங்கள் அறியுங்கள்.

**14.** எவர்கள் இவ்விதம் தர்க்கவழியாலும், ச்ருதி பிரமாணத்தாலும், குருபதேசத்தாலும், தனது அனுபவத்தாலும் அறிகிறார்களோ அவர்கள் அமிருதர்களாவார்கள்.

**15.** அந்தப் பிரஹ்மம் நன்கு அறியப்பட்டதென்று நீங்கள் நினைப்பீர்களானல் அது அல்பமாகும் (அஸத் ஜடமாகும், புத்தி கோசரமாயிருப்பதால்); அந்த புத்திவிருத்திக்கு ஸாக்ஷியாயிருப்பது எப்படி புத்தியால் அறியப்படும்?.

**16.** எவனுக்கு அறியும் கர்த்ருத்வமன்றியில் தனதாத்மாவாக பிரஹ்மம் அறியப்படுகிறதோ அந்த ஞான கர்த்திருத்வமற்றவனுக்கே அறியப்பட்டதாகவிருக்கிறது.

**17.** எவன் (மனஸால்) அறிந்ததாக நினைக்கிறானே அவனல் அது அறியப்பட்டதன்று. எவன் மனஸால் அறியமுடியவில்லையென்று நினைக்கிறானே அவனல் அது அறியப்பட்டது; புத்தி

விருத்தியாலறியப்பட்டதாக நினைக்கிறவன் அதை அறியவில்லை; அப்படி யன்று என்று நினைக்கிறவனால் அது அறியப்படும்.

18. பிரஹ்ம ஞானத்திலும், கடஞானத்திலும், பிராந்தி ஞானத்திலும் கர்த்தாவுமன்றி, கர்மமுமன்றி பிரஹ்மம் கேவலம் சித்தாய் (இவைகளுக்கு ஸாக்ஷியாய்) இருக்கிறது.

19. எவனுக்கு அக்ர்த்தாவாகிய பிரஹ்மம் கர்த்தாவாக விளங்குகிறதோ அவனால் பிரஹ்மம் அறியப்படவில்லை, ஏனெனில் கர்த்தாவென்று எண்ணுகிறான்.

20. அப்படியே அகர்மமாகிய பிரஹ்மம் கர்மமாக விளங்குகிறதோ அவனும் அறிந்தவனல்லன்.

21. தர்க்கம் ச்ருதி பிராமாணங்களற்று, ஸ்வயமாக விளங்கும் பிரஹ்மத்தை, கர்த்தாவாதலும் ஒரு விஷயமாதலும் நீங்க, தன்னாத்மாவாலேயே அறிகிறவன், பிரஹ்மத்தை உண்மையாயறிந்தவனாகிறான்.

22. இந்த ஞானம் எவனுக்கு திருசியமாய் புளப்படுகிறதோ, அதற்கு ஸாக்ஷியான அவன் எவ்விதம் பிரஹ்மாத்மவித் ஆவான், சொல்லுங்கள்!.

23. பிரஹ்மவித்யை உண்டாகுமானால் கும்பம்போல் அறிபடும் பொருளாகும்; அறிபடும் பொருள், அறிவு இவைகளின் ஸங்கமத்தால் அறிய முடியாத பிரஹ்மம் அறியப்பட்டாதாகும்.

24. அறிகிறவனும் அறிவு ஸம்பந்தத்தால் விசேஷிக்கப் படுவான்; பரம் பிரஹ்மமோ நிர்விசேஷமாயிருக்கிறது; ஆதலால் இப்படி யறிகிறவன் ஆத்மவித் அன்று.

25. பிரஹ்மம் வித்யைக்கு ஆசிரயமாகவாவது விஷயமாகவாவது இருக்கவேண்டும்; பிரஹ்மம் அப்படியல்ல; அப்பொழுது இப்படியறிவது எப்படி பிரஹ்மமாகும்.

26. இப்படி பிரஹ்ம ஸம்பந்தமற்ற வித்யை பிரஹ்மத்தை அறிவதில் சக்தியற்றிருக்கிறது; இப்படியிருக்க எவனை பிரஹ்மாத்மவித் என்று சொல்லமுடியும் (பிரஹ்மத்தை உண்மையாயறிந்தவன் பிரஹ்மமே, பிரஹ்ம வித்தன்று).

27. இந்த வித்யை பிரஹ்மத்தில் கற்பிக்கப்பட்ட மாயை முதலியதை நிவர்த்தி செய்கின்றதென்று சங்கித்தால் அது சரியல்ல; பிரத்யக் ஆத்மாவிடத்தில் மாயையிருப்பது அஸம்பவம்.

28. பிரத்யக் ஆத்ம மகத்தான ஜ்யோதிஸாக விருக்கிறது; மாயையேபெரிய இருள்; அப்படியிருக்க பிரத்யக் ஆத்மாவை எப்படி மாயை ஆசிரயித்து விஷயீகரிக்கும்.

29. ஆதலால் தர்க்க பிரமாணங்களாலும் அனுபவத்தாலும், ஸ்வபிரகாச சித்கன பரமாத்மாவில் மாயை என்பது இல்லை.

30. வியவஹார திருஷ்டியால் வித்யை என்றும் அவித்யை என்றும் சொல்லப்படுகிறது. உண்மையாகப் பார்த்தால் அவைகளில்லை, கேவலம் தத்வமாத்திரம் இருக்கிறது.

31. வியவஹார திருஷ்டியும் ஆன்மப்பிரகாசம் மாறுதலடையாமலிருப்பதாலே (ஸித்திக்கிறது). (கட, பட முதலிய மனோவிருத்திகளில் எங்கும் ஸாக்ஷிசித்பிரகாசவிளக்கத்தால் அது மாறுதலடைகிறதில்லை). ஆதலால் இது எப்பொழுதும் பிரகாசமே; ஆதலாலேயே இது இரண்டற்றது.

32. இந்த 'இரண்டற்றது' என்ற பேச்சும், இந்த சித்பிரகாசம் மாறுதலடையாமலிருப்பதாலே அறியப்படுகிறது; (ஆதலால்) எப்பொழுதும் பிரகாசமேயுள்ளது; ஆதலால் (இவ்விதம் பிரஹ்மத்தை விஷயீகரிக்கும்பொருட்டு சப்தமும் மனஸும் பிரவிருத்தித்தால், பிரஹ்மம் அந்தந்த உபாதி விசேஷத்துடன் சேர்ந்திருப்பதால் மௌனமே வித்வான்களுக்கு பிரதிபத்தி உபாயம்) மௌனம் தான் சரி.

33–34. பிரத்யக்ஷாதி பிரமாணங்களாலும், தர்க்கவழிகளாலும், ச்ருதியாலும் தன்குரு உபதேசத்தாலும், சிவனுடைய கிருபையாலும், முன்செய்த தர்மங்களின் பக்வத்தினாலும் இந்த கம்பீரமான சங்கர ஸம்பந்தமான பொருள் (ஞானம்) புருஷனுக்கு விளங்கும்.

35. இந்த மகத்தான அர்த்தம் எவனுக்கு நேராக விளங்குகிறதோ அவனுக்கு யாதொரு கிரியைகளும் இல்லை, ஞானம்

அத்வயமாயிருப்பதால் (கர்மஸாதனமான வேறு வஸ்து இல்லாத படியால்).

**36–43.** இந்த அர்த்தம் எவனுக்கு ஸ்வயமாக விளங்குகிறதோ அவன் ஜீவனுமன்று, பிரஹ்மமுமன்று, வேறொன்று மல்லன்; அவனுக்கு வர்ணாசிரமங்கள் இல்லை; தர்மாதர்மங்களில்லை; நிஷேதமும் (தடை) விதியும் காணப்படவில்லை; அவன் சம்புவே தவிர வேறல்லன்; அவனுடைய மஹத்வத்தை என்னாலாகிலும், விஷ்ணுவினாலாகிலும், ருத்ரனாலாகிலும், வேதத்தாலாகிலும் சொல்லமுடியாது.

**44.** முன் சொல்லப்பட்ட இந்த மகத்தான அர்த்தத்தை இந்த மனுஷ்ய தேகமிருக்கும்பொழுதே அறிந்தவன் ஸாக்ஷாத் ஸத்யமத்வைதம், நிர்வாணம் அடைகிறான்.

**45.** அவ்விதம் இந்த தேகமிருக்கும்பொழுதே அறியாதவன் வெகு கஷ்டத்தை யடைகிறான், அவனுக்கு பரகதியில்லை.

**46.** அந்த பிரஹ்மாத்ம தத்வத்தை தன் சரீரத்திலும் அன்யசரீரங்களிலும் ஸமமாயிருப்பதாக ஸ்திரமான நிச்சயமடைந்த தீரர்கள் மறுபடியும் பிறக்கிறார்களில்லை, அமிருதர்களாகவே ஆகிறார்கள்.

**47.** ஸ்வப்னத்தில் தைஜஸ ஆத்மா ஸ்வயமாகவே ஸ்வப்ன பதார்த்தங்களாக எப்படி பலவாக விளங்குகிறானோ, அப்படியே ஒரே சிதாத்மா அவித்யா கற்பித உபாதி பலவகைகளால் பத்தனாகவும், முக்தனாகவும், மகாவித்வானாகவும், அக்ஞனாகவும் பேதங்களால் அவர் ஒருவரே விளங்குகிறார்.

**48–49.** சிரேஷ்டமான ஆத்மவித் தனது முக்தியில், அந்தக்கரண விருத்தியால் அன்னிய சரீரங்களாகத் தோற்றுகின்ற ஜீவர்களுக்கும் முக்தியை உனர்கின்றான்; தான் முக்தியடையும் முன் ஸம்ஸாரதசையில் எவ்விதமாக தனது பிராந்தியால் ஆபாஸ தேகிகளுக்கும் ஸம்ஸார தசையை அறிந்தானோ அப்படியே முக்தி தசையிலும் முக்தர்களென்று அறிவான்.

**50–51.** பிராரப்த கர்மபரியந்தம் பரமாத்மவித் ஒருகாலத்தில் உயிர்கள் உலகமுதலியவற்றைக் காண்பான்; ஒருகாலத்தில் காணமாட்டான்; ஒரு காலத்தில் தோற்றுகின்ற எல்லாவற்றையும் பிரஹ்ம ஸ்வரூபமாகவே பார்ப்பான்; ஒருகாலத்தில் ஸ்வபாவத்திலேயே அன்னியமான ஒன்றையும் காணமாட்டான்.

**52–53.** பிரஹ்மம் ஜகத் ஜீவாதிரூபமாக தோன்றும்பொழுது (விக்ஷேப ஸமயத்தில்) துக்கமுதலிய போகங்களும் ஆபாஸமாகத் தோன்றும்; ஜகமானது பிரஹ்மமாக தோன்றும்போது (ஸமாதியில்) இந்த துக்காதிபோகாபாஸம் தோன்ருது.

**54.** பரமாத்மவித் (அத்யஸ்தமான) ஜகத் ஜீவரூபத்தால் பார்த்தாலும் அதை அந்த ரூபமாக பார்க்கிறதில்லை; (அதிஷ்டானமான) பிரஹ்மவஸ்துவைத்தான் பார்க்கிருன். (அக்ஞானிகள் இவ்விதம் பார்க்கிறதில்லை).

**55.** எப்பொழுதும் பிரஹ்மத்தைத்தவிர வேறு வஸ்துவாவது, அவஸ்துவாவது இல்லை; அப்படியிருக்கையில் தத்வவித் சிவத்தைத்தவிர வேறு எதைப்பார்ப்பான்.

**56.** பிரஹ்மமாகவாவது, ஜகத் ஜீவனுகவாவது தோற்றம் எப்படியோ அப்படியே பிரஹ்மமே விளங்குகின்றது.

**57.** யோகிக்கு எந்தப்பிரகாரம் இந்தத்தோற்றம் காணப்படுகின்றதோ, அந்தப்பிரகாரமாகவே ஸ்வபாவமாகவே (ஆன்ம ஸ்வபாவம்) விளங்குவது என்று தெளிவடைந்து அறிவதே ஆத்ம ஞானமாகும்.

**58.** பெயராலும், உண்மைப்பொருளாலும் சகலப்பிரகாசமும் பிரபுவாகிய மகாதேவருடைய விளக்கமேயாகுமானல், எதைக்கிருகிக்கிறது, எதைத்தள்ளுகிறது.

**59.** அந்த சங்காருக்கு வேருக தள்ளுவதும் கொள்ளுவதும் ஏதேனுமிருக்குமாகில் அவருடைய மகத்துவத்திற்குக் குறைவுண்டாகும்; அவருடைய ஸ்வபாவம் கெடத்தக்கதல்லவே!

60. இந்த பரமாத்வாவுக்கு மகத்வமும் தர்மமன்று; பேதத்தன்மையிருந்தாலன்றோ தர்மதர்மிகளாகச் சொல்லுகின்ற பேதவார்த்தை உண்டாகும்.

61. ஆதலால், பேதம், அபேதம், பேதாபேதம் இவைகளை அந்த பரமாத்மாவுக்கு வேறல்ல; அவர் ஒன்றே என்றுமுள்ளவர்.

62. ஸத்தாகவாவது, அஸத்தாகவாவது இருக்கிறதெல்லாம் பிரஹ்மமாகவே காணப்படுகிறது; அப்படி யிருக்கையில் சிவஞானி எதைக் கொள்ளுவான், எதைதள்ளுவான்?.

63. சிலர் தெரியாத்தனத்தால், எப்பொருளும் (ஸதஸத் விலக்ஷணமான) மாயையாலுண்டானதென்று சொல்லுவார்கள்; உண்மையில் சிவரூபத்தைத் தவிர மாயை என்பது இல்லை.

64. சிவனைவிட வேறாக (ஸத்தான) மாயையால் ஜகத்தெல்லாம் இருப்பதாகச் சொன்னாலும் இந்த சிவனுடைய பரமமான மகத்துவம் குறையுமல்லவா ?

65. நன்றாய் விசாரிக்குங்கால் இவருடைய மகத்வத்திற்கு குறைவு இல்லை; இருக்கிறதென்றால் ஸத்யத்தைச் சொல்லுகின்றச்ருதி அப்பிரமாணமாகும்.

66. ஆதலால் மகேதேவர் ஒருவரே ஸ்வயமாயிருக்கிறார்; அவர் பிறபு; ஆனந்தரூபர்; ஸம்பூர்ணர்; அவரைத்தவிர வேறொன்றும் கொஞ்சம் கூடயில்லை.

67–70. இதுவே தர்க்கங்கள், பிரத்யக்ஷாதிபிரமாணங்கள், வேதாந்தங்கள், ஸ்மிருதிகள், புராணங்கள்; பாரதம், வேதானுஸார வித்யைகள், சைவ விஷ்ணு பிரம்மாகமங்கள், புத்த ஆர்ஹத, யக்ஷ, கந்தர்வ, ஸித்தர் முதலிய ஆகமங்கள் இவைகளின் கடைசியான முடிவு.

71. இந்த பரமாத்மாத்வைத 'ஞானம் எந்தமனிதனுக்கு அல்லது தேவனுக்கு ஸித்திக்கும்; ஸாக்ஷாத் சிவனுக்கே ஸித்திக்கும்.

72. அளவற்ற தேஜஸையுடைய சிவனுடைய இந்த பர மாத்வ ஞானம் சிவனுடையதேவிக்கு ஸ்வபாவத்திலேயே ஸித்த மாயிருக்கிறது.

73–74. ருத்ரனுடையவும் சிவையினுடையவும் பிரஸாதத் தால் விஷ்ணுவுக்கும், எனக்கும், விராட்தேவனுக்கும், ஸ்வராட் ஆத்மாவுக்கும், ஸம்ராட் முதலியவர்களுக்கும் இந்தஞானமுண்டு.

75. உங்களுக்கும்கூட சிவனுடையகிருபையாலேயே பர மாத்மா விக்ஞானம் உண்டாகும், வேறுவிதமாய் உண்டாகாது.

76. சிவனுடைய பிரஸாதத்தாலேயே யக்ஷ, ராக்ஷஸ, கந் தர்வ, ஸித்தர்களுக்கு பரமாத்மஞானம் உண்டாகிறது.

77. எல்லாமனிதர்களுக்கும், பசுக்களுக்கும் அப்படியே சிவப்பிரஸாதத்தால் ஞானமுண்டாகும்.

78. பிரஸாதமிருந்தால் புழுவானாலும், பூச்சியானாலும், நர னானாலும், தேவனானாலும், தானவன் ஆனாலும் உத்தமஞானத் தை யடைவான்.

79. இவர்தான் ஜந்துக்களுக்கு ஞானத்தைக்கொடுக்கிறார்; நானுமன்று, விஷ்ணுவுமன்று, மற்றொருவருமன்று.

80. வாங்கவும் கொடுக்கவும் ஹரிக்கும் எனக்கும் ஸ்வதந் திரமில்லை.

81. சிவனொருவனே ஸ்வதந்திரன்; அவரே ஸம்ஸார மோ சகன்; அவரில்லாமல் ஒருவனை ஸம்ஸாரத்தினின்று வெளிப்படுத்த என்னால் முடியாது.

82. பரமான விஷ்ணுவாலும் கருணைக்கடலான மகாதேவர் இல்லாமல் ஒருவனை கரையேற்றமுடியாது.

83. நானும், விஷ்ணுவும் தர்விநியாயமாய் (அகப்பை கொடுப்பது என்பதுபோல்) ஸம்ஸார உத்தார்களேதவிர ஸ்வதந் திர மாகவில்லை.

**84.** தேவதேவனுகியருத்ரனுடைய ஸ்வரூபத்தையும் வைப வத்தையும் ஒருவரும் அறிந்தவர்களில்லை ; தானே அறிகிருரோ, இல்லையோ!.

**85.** மகான்களுக்குக்கூட அவர் பிரஸாதமில்லாமல் மகா தேவனை அறிவது அருமை.

**86–94.** முன்பொருகாலத்தில் எல்லாதேவர்களுக்கும் கெட் டவர்களான அஸுரர்களுக்கும், கொடிய மோகத்தால், தடுக்கப் படக்கூடாத சண்டை உண்டாயிற்று. பலமுள்ள அஸுரர்களால் தேவர்கள் சீக்கிரம் பீடிக்கப்பட்டார்கள்; இவர்களைக்கண்டு, ஸர் வக்ஞரும், கருணுகாருமான பகவான் ஈசன் தேவர்களுக்கு ஜயத் தையும் அஸுரர்களுக்கு தோற்வையையும் அளித்தார். மோக மடைந்தவர்களாய், மஹாதேவருடைய வைபவத்தையறியாமல் எல்லாதேவர்களும் 'நாம் ஜயித்தோம்,' 'அஸுரர்கள் தோற்கடிக் கப்பட்டார்கள்' என்று அகம்பாவம் கொண்டிருந்தார்கள்.

மறுபடியும் விச்வத்திற்கு மேலானவரும் கருணு நிதியுமான பகவான் ருத்ரன், தன்தர்சனம் அவர்களுக்கு கொடுக்க உத்தே சித்தும், தன்னுடைய அறிதற்கரிமையை காட்டவும், அவர்களு டைய மோகத்தை நீக்கும்பொருட்டும் ஒரு யக்ஷரூபங்கொண்டு நின்ருர்.

அந்த யக்ஷலைக்கண்டு, தேவர்களெல்லாம்கூடி, அதிசயத் துடன், இது என்ன யக்ஷஸ் என்று விசாரித்தார்கள்; இன்ன தென்று தெரியாததால் எல்லா தேவர்களும் அக்னிதேவனை அழைத்து, 'இது என்ன யக்ஷஸ் என்று அறிந்துவா' என்று சொன்ஞர்கள்.

**95–100.** அக்னிதேவன் அப்படியே செய்கிறேன் என்று சொல்லி யக்ஷத்தினிடம் சென்ருன்; யக்ஷரூபமாயிருக்கிற மகா தேவர் அக்னியைப்பார்த்து நீ யார்? என்று கேட்டார்; அக்னி யும், நான் அக்னியென்று யக்ஷஸுக்கு பதில் சொன்ஞர்; யக்ஷ ஸும் 'பகவானே! உன்னிடத்தில் என்ன வீர்யம் இருக்கிற' தென்று கேட்டார்; பூமியிலிருக்கப்பட்டதை யெல்லாம் எறித்து

விடுவேன் என்று அக்னி சொன்னார்; பரமேச்வரன் ஒரு துரும்பை யெடுத்து அவன் முன்பாகவைத்து, புன்சிரிப்புடன் 'இதை தகித்துவிடு' என்று சொன்னார்; அக்னி வெகுவேகத்துடனும் அந்த திரணத்தை தகிக்க சக்தியற்றவனாய், லஜ்ஜையடைந்து, பயத்துடன் தேவர்களிடம் சென்றார். என்னால் அவர் வைபவத்தை யறிய முடியவில்லை, வெகுகஷ்டப்பட்டு நீங்கள் அறியுங்கள் என்று தேவர்களுக்கு அக்னி சொன்னார்.

101. அதைக்கேட்டு தேவர்கள் வாயுதேவனை அழைத்து, 'நீ அறிந்துவா' என்று சொன்னார்கள். அவனும் போய், யக்ஷரூபமடைந்த சம்புவால் உடனே அவமானமடைந்தவனாய், தேவர்களிடம் திரும்பவந்தான்.

102. இதற்குமேல் இந்திரன் தனதுமோகத்தால் அகந்தையால் சூழப்பட்டு, யக்ஷஸை அறியும்பொருட்டு அவ்விடம் சென்றான்; அவ்விடமே அது மறைந்து விட்டது.

103–106. இந்திரன் அதிக துக்கமடைந்து, வெகுதாபத்துடன் கருணையுள்ள உத்தமமான வித்யாரூபியான உமாதேவியை தியானித்து, லௌகிக வைதிக ஸ்தோத்திரங்களால் அந்த பரமேச்வரியை ஸந்தோஷிப்பித்தான்; அந்த கருணாமூர்த்தியும், ஜகன்மாதாவும், வேதமயியும், சிவனைவிட வேறல்லாதவரும், பராநந்தையும், சங்கரனுக்குக்கூட சங்கரீயும், தன்னுடைய இச்சையால் ஹிமவானுக்கு புத்திரியானவரும், தன் பக்த ஜனங்களிடம் பிரியமுள்ளவருமான சிவை, அறிதற்கரிய மகாதேவருடைய பெருமையை காட்டவேவென்று எண்ணும்படியாக, அவ்விடத்திலே ஸ்வயமாகத் தோன்றினாள்.

107–108. அந்த உமாதேவியை ஆராதித்து, இந்திரன் 'இது, எக்ஷஸ், என்ன தோன்றினது, மறைந்துவிட்டது; ஹே! கருணையுள்ளவரே! எனக்கு அருளவேண்டும்' என்று சொன்னான்.

**109.** பரமகிருபையால் எல்லோருடைய நாயிகையான தேவி 'இவ்விடத்தில் தோன்றி மறைந்தது, என்பதியான பிரஹ்மம்' என்று சொன்னாள்.

**110–113.** 'இந்த மகாதேவன், விஷ்ணுவாலும், பிரஹ்மனாலும், வேறுதேவர்களாலும் அறிதற்கரியவன்; இதைக்காட்டவே தோன்றினர், வேறு காரணம்பற்றியல்ல; அவரே உனக்கும் எல்லா தேவர்களுக்கும் ஜயத்தைக்கொடுப்பவர்; அஸுரர்களுக்குதோற்வையைக்கொடுப்பவர்; அவரையே சரணமடைவாய்'; என்று சொல்லிவிட்டு ஸர்வஸாக்ஷிணியான மகாதேவி மறைந்துவிட்டாள்.

**114.** இதற்குமேல் தேவர்கள், பிரவிக்காரணமான மாத்ஸர்யத்தை (அகங்காரத்தை) விட்டு, அறியக்கூடாதவரும் கருணையுள்ளவரும், ஸ்வதந்திரரும், முக்தி புக்தியளிப்பவருமான மகாதேவரை நிச்சயமாய் அறிந்தார்கள்.

**115–117.** பிரஸாதம் இருந்தால் ஒழிய ஒரு மனிதனும் பரமேச்வரனை அறியமுடியாது; பிரஸாதம்மில்லாத போனல் விஷ்ணுவால் அறிய முடியாது. என்னலும், தேவர்களாலும் முடியாது. பிரஸாதமடையும் பொருட்டல்லவா சொல்லியதெல்லாம்; பிரஸாத மின்றி தேவனை அறிகிற மனிதர்கள் மூக்கினலன்றி கையினல் வாஸனையை அறிவார்கள்.

**118–120.** ருத்திரனுடைய பிரஸாதம் என்பது கர்மஸாம்யமாகும் பொழுது தேசிகர் கடாக்ஷத்தினல் உண்டாகக் கூடியது; இந்த பிரஸாதத்தின் ஸ்வரூப அதிசயத்தைச் சொல்ல கல்பகோடிகாலத்தாலும் என்னலாவது நாராயணனலாவது ருத்ரனலாவது முடியாது. சிவப்பிரஸாதம் பிரத்தியக்ஷமாகத் தெரியாது; எனக்கும், ஹரிக்கும், தேவிக்கும் சில அடையாளங்களால் தெரியப்படும்.

**121–124.** வெகு ஸந்தோஷமடைதலும், மொழி (பேச்சு), நேத்திரம், சரீரம் விகாரப்படுதலும் (மாறுதலும்), நடுக்கமும், ஸ்தோபம் (தம்பமாயுறுதலும்), சரீரம் கீழே விழுதலும், பிரமிப்

பதும், மேல்கிளம்புதலும், ஆகாசத்திலிருத்தலும்வேறுசரீரத்தை யடைவதும், சரீரம் ஒருவருக்கும் தெரியாமலிருத்தலும், பிரகாச மாக விளங்குதலும், அப்பியாஸமில்லாத சாஸ்திரத்தை உணர்வ தும், நிக்ரஹ அனுக்ரஹ சக்தியுடனிருப்பதும், மலைமுதலி யதை ஸாதனமில்லாமல் பேதிப்பதுமானவை சிவப்ரஸாதத்தின் குறிகளாகும்.

**125–134.** தீவ்ரமான சம்புவின் பிரஸாதத்திற்கு ஸமமாக ஒன்றுமில்லை; இந்த ரூபமான பிரஸாதம் சிவனாலும் சிவையாலும் அறியமுடியும்; வேறொருவராலும் அறிய முடியாது; ஆதலால் சிவனைத்தவிர பாக்கி தெய்வங்கள் எல்லாவற்றையும் விட்டு விட்டு, அவரையே சரணமடையவேண்டும்; உடனே முக்தியளிப்பார்; விஷ்ணுபக்தியாலும், என் பக்தியானாலும் பராகதி கிட்டவே கிட் டாது; சம்பு பக்தியாலேயே எல்லோருக்கும் கிடைக்கும்; சம்பு பக்தியால் இந்த தேகத்தில் பிரஸாதம் எப்படி விளங்குமோ அப்படி விஷ்ணுபக்தியாலும், என் பக்தியாலும் விளங்காது; ஆதலால் மோக்ஷ இச்சையுள்ளவன் என்னையும் விஷ்ணுவையும் நீக்கி விட்டு எல்லா பாவத்தினாலும் மகேச்வரனை ஆசிரயிக்க வேண்டியது; அவர் பிரஸாதமளிப்பார்; அவர் பிரஸாதமிருந் தால் தேவேசன் அறிதற்கரிதாயிருந்தாலும் பிரத்யக் ஆத்மாவாக மனிதர்களால் எப்பொழுதும் அறியமுடியும்; மூர்த்தியாத்மா கவும் அறியவும் கூடும்; ஸர்வாத்மரூபமாகவும் அறியக் கூடும்.

ஸர்வஸாக்ஷியான ஆத்மாவை அறிந்து ஸகல ஜகத்தையும் ஸாக்ஷிமாத்திரமாக எப்பொழுதும் எவன் அறிகிறானோ அவனே உண்மையறிந்தவன்; இது பரமாத்வைத நிஷ்டையாகும், இது வே அடைவதற்கரிய முடிவாயுள்ளது.

**135.** ப்ராந்தியால் சிவனுக்கு அன்யமாகவாவது, த்வைத மாகவாவது அறிகிறவன் பசு; பரமாத்வைத விக்ஞானி ஸ்வயம் பரதேவதை.

**136–140.** அவனுக்கே பரமானமுக்தி; இதில் ஸந்தேக மில்லை; கௌதமமுனி சாபத்தாலும், ததீசனுடைய சாபத்தாலும்,

ஜன்மாந்திரத்தில் செய்த பாபத்தாலும் மகாபாபிகளான மனிதர்களுக்கு இந்த அர்த்தம் ருசிக்காது; வேத ஜன்யமான இந்த பரமாத்வைத ஞானத்திலும், சிவனிடத்திலும் த்வேஷமுண்டாகும்; ஞானசாதனங்களாகிய ஸர்வாங்கதூளனம், திரியக் திருபுண்டரதாரணம், ருத்திராக்ஷமணிதல், ருத்ரலிங்க பூஜை, சிவ சப்த ஜபம் இவைகளில் த்வேஷமுண்டாகும்.

**141–145.** ச்ரௌத ஸ்மார்த்த கர்மங்களை வெகு ஜன்மங்களில் செய்து ஸித்திபெற்றவர்களுக்கு பரமாத்மாத்வைத ஞானம் உண்டாகிறது; அந்த ஞானி என்னாலும் விஷ்ணுவாலும், ருத்ரனாலும் ஆராதிக்கக்கூடியவன்; பரமாத்ம விக்ஞானி எங்கு இருக்கிறானோ அவ்விடத்தில் முக்தி ஸமீபத்திலிருப்பதில் ஸந்தேகமில்லை. அந்த பரமாத்வைத நிஷ்டனான மகாத்மாவுக்கு எவனால் சிச்ருஷை செய்யப்படுகிறதோ அவன் பாதங்கள் என் தலையிலிருக்கும். அவனுக்கு ஸமமாக தேவனாவது, ஹரியாவது, மகேச்வரனாவது இருக்கிறதாக எனக்குத்தோன்றவில்லை.

**146.** அந்த பரமான யோகிக்கு சிரத்தையுடன் சரீரம், அர்த்தம், பிராணன் இவைகளைத் தத்தம் செய்யவேண்டும்; இவனுக்கு சிச்ருஷைசெய்வது சந்தேகமில்லாமல் சுத்த வித்யையடைவதற்கு ஸாதனமாகும்.

**147–151.** பரமாத்வைத விக்ஞானமடைய வொட்டாமல் தடுக்கும் பிரதிபந்தகம் (யாதெனில்), மனிதர்களுக்கு வேதபாகியமான தந்திரங்களில் பிடிப்பு (வாசனை), குதர்க்க வாஸனை, லோக வாஸனை, புத்திர மித்திர, பார்யா வாஸனை; அர்த்த வாஸனை, தேகம், இந்திரியம், மனஸ், புத்தி, பிராணங்களின் வாஸனை; பாண்டித்ய வாஸனை; போக வாஸனை; காந்தி வாசனை; ருத்ரன், வேதபாராயணங்களில் த்வேஷ வாஸனை; ஞான ஸாதனங்களான திருபுண்டர முதலியவைகளில் த்வேஷ வாஸனை; பாபவாஸனை இவைகளேயாம்.

**152.** ஆதலால் சிரத்தையுடன் முமுக்ஷுவானவன் இந்த வாஸனைகளை யெல்லாம் நீக்கி, எப்பொழுதும் பரமாத்வைத ஞான நிஷ்டனாக விருக்கவேண்டும்.

**153.** வேதத்தில் சொல்லிய மகத்தான அத்வைத ஞானத்தின் மகிமையை எங்களால் சொல்ல முடியாது ; ஆதலால் சும்மாயிருக்க வேண்டியதுதான்.

**154.** எல்லா துக்கத்தைப் போக்கடிப்பதும், இப்பொழுதே பரமஸுகசிவனை அடையக்கூடியதுமான எல்லாம் உங்களுக்குச் சொல்லப்பட்டது ; இந்த ஸகல தோஷமற்ற வேத வேதாந்த நிஷ்டையை ஹிருதயத்தில் எப்பொழுதும் வைத்துக்கொள்ளக் கடவீர்கள்.

---

## அத்தியாயம் 5.

---

### (ஆதேச கதனம்).

**1.** *பிரஹ்மன்:*—வெகு ரஹஸ்யமானதும், அநந்த அர்த்தத்தைப் பிரகாசிப்பதுமான ஆதேசத்தை (பிரஹ்மத்தை அறியக்கூடியதை) உங்களுக்கு இப்பொழுது சொல்லுகிறேன் ; சிரத்தையுடன் கேளுங்கள்.

[இந்த அத்யாயத்திலும் அடுத்த அத்யாயத்திலும் சாந்தோக்ய உபநிஷத் அர்த்தம் சொல்லப்படுகிறது. சாந்தோக்யம் ஆறுவது அத்யாயத்திலுள்ள பொருளை முதலில் சொல்லுகிறார்].

**2.** எந்த பிரஹ்மத்தின் சிரவண ஞானத்தால் கேட்கப்படாத எல்லாம் கேட்டதுகளாகுமோ, மனனப்படாததெல்லாம் மனனஞ் செய்ததுகளாகுமோ; அறியப்படாத அனைத்தும் அறியப்பட்டதாகுமோ (அந்த உபதேசத்தைச் சொல்லுகிறேன்).

**3.** மண்ணைக்காட்டிலும் பின்னமாக எப்பொழுதும் இல்லாததால், மண்ணினுடைய ஒருபிண்டத்தால் மண்ணாலாக்கப்பட்ட கடமுதலானவைகள் எல்லாம் மண்மயமாய் அறியப்படுகிறது.

**4.** ஒரு லோகமணியால் (லோகத்தால் ஆக்கப்பட்டதெல்லாம்) லோகமயமாய் எல்லாம் அறியப்படுகிறது ; நகஞ்செதுக்கும் கத்தி ஒன்றால் (இரும்பால் செய்யப்பட்ட) எல்லாம் இரும்புமயமாய் அறியப்படுகிறது.

5. காரியம் காரணத்திற்கு அபின்னம் (வேறன்று); பின்னமன்று ; பின்னுபின்னமுமன்று.

6. பின்னம் என்றபக்ஷத்தில், காரியம் ஸத்தா, அஸத்தா, ஸத் அஸத்தா ? ஸத்தாயிருந்தால் காரணஸத்தையா அல்லது காரிய ஸத்தையா.

7. காரணஸத்தை என்றால், காரியஸத்தை காரண ஸத்தையே, வேறன்று ; அப்பொழுது காரணஸத்தை ஒன்றே எப்படி பின்னமாகும்.

8. ஸத்தை ஒன்றானாலும், காரணத்தைவிட காரியம் பின்னம் என்கிற வார்த்தையும்வீண்பேச்சு ; காரியம் என்றது அஸத் அன்றோ !

9. ஸத்தற்ற காரியத்திற்கு அஸத்வமேயுளது ; இப்படி காரியத்திற்கு அஸத்வமிருக்கும்பொழுது, காரியம் ஸத் என்பது வீண்வார்த்தை.

10–12. காரண ஸத்தை காரியசத்தையன்று, வேறென்று சொன்னல், அப்பொழுது, அந்தகாரியஸத்தை, காரணஸத்தயைவிட, ஸத்ரூபத்தால் பின்னமா அல்லது அஸத்ரூபத்தால் பின்னமா ? ஸத்ரூபத்தால் என்றால் ஒரே ஸத்தை பின்னமாக ஆகாது; அஸத்ரூபத்தால் பின்னமென்றால் காரியஸத்தை சூன்யம்போல அஸத்தே ஆகும்.

13. கார்யத்திற்கு அஸத்தன்மையேர்ப்பட்டால் அப்பொழுது காரியமே ஆகாது ; மலடிமகன் ஒருவஸ்துவுக்கும் காரியம் என்று சொல்லப்படுகிறதில்லை.

14. (பிரத்வம்ஸ அபாவம்போல், கடனசம்போல், அஸத்தாயிருந்தாலும் காரியத்தன்மை ஏன் இருக்கக்கூடாதென்றால்) பிரத்வம்ஸத்திற்கும் காரியத்தன்மை சம்விக்கிறதில்லை ; சொல்லப்பட்ட லக்ஷணத்தால் அதற்கு உத்பத்தி இசையாது ; (கர்த்தா, காணுதி காரக ஸம்பந்தத்தால் கடம் உண்டாகிறது) பிரத்வம்ஸத்திற்கு காரக ஸம்பந்தமில்லை ; ஆதலால் உத்பத்திகிரியை இல்லை (காரியத்தன்மை யுக்தமன்று).

15. அஸத்தாயிருந்தாலும் காரியத்திற்கு (அஸத்தான மலடிமகனைவிட விசேஷமிருக்கிறதென்று மதித்தால்) விசேஷ மென்றால் என்ன? அதற்கு கருவிகளுடன் ஸம்பந்தமென்றால், அது இருக்கமுடியாது; விசேஷமிருந்தால் அல்லவா ஸம்பந்த மிருக்கும்; அதன் ஸம்பந்தமென்பதும் அதுவேயாம்.

17. இந்த விசேஷம் உத்பத்தி கிருயையை ஆசிரயித்திருக் கிற தன்மையாகும் என்றாலும் முற்கூறிய தோஷமுண்டாகும், அதை விலக்கமுடியாது.

18. இந்த விசேஷம் ஸத்தாஸம்பந்தத்தன்மையென்றால் அது ஸரியன்று; அப்பொழுதும் முன்சொன்ன தோஷமிரு க்கிறது.

19. ஆதலால் அஸத்திற்கு காரியத்தன்மை இல்லை; ஸத் அஸத்யமும் ஸம்விக்காது, சொன்ன இரண்டுதோஷங்களு மிருக் கிறபடியால். ஆதலால் காரியம் காரணத்திற்கு அபின்னமே; உண் மையில் பேதம் பொருந்தாதபடியால்.

20. உண்மையில் காரிய காரணத்திற்கு பேதமில்லாதபடி யால் பேதாபேதமென்பது ஒருக்காலும் ஏற்படாது.

21–22. காரியகாரணபேதமும், காரகஸம்பந்தமும், உத் பத்தியும், நாசமும், அப்படியே அர்த்தகிருயையும், நாமரூப விசேஷங்களும் எல்லாம் பிரமையால் (விளக்கமாக) ஸித்திக் கின்றது.

23. ஆதலால் எல்லாவிகாரங்களும் (மாறுபாடுகளும்) 'இரு க்கிறது' என்பதுகேவலம் வார்த்தை மாத்திரத்தால் ஆரம்பிக்கப் படுகிறது (உண்மையில்லை); அதற்கு (காரியத்திற்கு) எப்பொழு தும் (பிரத்வம்ஸகாலத்தில்போல ஸ்திதிகாலத்திலும்) நாமதேய மாத்திரமே உளது.

24. பிரதீதியாகிற (தோற்றமுள்ள) ரூபத்தால் (காரிய) விகாரம் அஸத்யமே; காரணரூபமே இந்த கார்யரூபத்திற்கு எப் பொழுதும் ஸத்யரூபமாயிருக்கிறது.

25. காரணத்திற்கு அபின்னமானரூபத்தால் கார்யம் காரணமாகவே யிருக்கிறது; ஸத்ரூபத்தால் எப்பொழுதும் ஸத்யமாயிருக்கிறது, பின்னமென்ற பேச்சு வீண்.

26. ஆதலால் காரணஞானத்தால் எல்லாவற்றின் ஞானமும் எளிதில் உண்டாகிறதென்பதில் ஸந்தேகமில்லை.

27. அந்தக்காரணமும் ஒன்றே, பின்னமுமன்று, பின்னு பின்னமுமன்று; எவ்விடத்திலும் பேதம்மித்தையே, (பேதத்தை ஏற்படுத்த) தர்மிகளின் நிரூபணம் செய்யமுடியாததால்.

28–29. பேதம் அறியப்பட்டாலன்றோ தர்மி (குணத்துடன் கூடியது) முதலிய பேதத்தை யறியலாம்; (அப்படியே) பேதமான தர்மிமுதலியவைகளை அறிந்தால் பேதத்தை யறியலாம்; இந்த பேதத்தை நிரூபிக்கமுடியாததால் பேதாபேதம் ஸங்கதமன்று. ஆகையால், காரணம் நித்யமாய் ஒன்றாயும், அத்வயமாயு மிருக்கிறது.

30. (கடமுதலியவைகளின் உத்பத்தியில் நிமித்தகாரணம் உபாதான காரணம் காணப்படுகிறதுபோல ஸத்தே இரண்டுமாகிறது என்று சொல்லப்படுகிறது). லோகத்தில் குயவன், மண்முதலிய பேதங்கள் (கடகாரணத்தில்) இருந்தாலும், மண்முதலியவை அசேதனங்களானபடியால் குயவன் முதலியவர்களை அபேக்ஷிக்கிறது.

31. இங்கோ காரணமான அத்வைதம் சுத்தசைதன்யமன்றோ! அதனால் வேறொருசேதனமுள்ள காரணம் அபேக்ஷிக்கப்படுகிறதில்லை.

32. ஸ்வயம் சேதனமாயிருக்கிற இந்த காரணமும் குயவன் அசித்தான மண்ணை அபேக்ஷிக்கிறதுபோல அசித்ரூபமான காரணத்தை அபேக்ஷிக்கிறதில்லை.

33. தோற்றமாத்திர சரீரமுடையவரும், ஜடரூபியும், தமஸ்மயமானவரும், எவ்விதத்தாலும் வித்வான்களால் நிரூபிக்ககூடாதவருமான சங்கரஸம்பந்தமான ஒருசக்தி (மாயை) இருக்கிறது.

**34.** சேர்க்கக்கூடாதவைகளை சேர்த்துவைக்கும் இந்த மாயையுடன் தாதாத்மிய ஸம்பந்தமுடைய இந்தக்காரணவஸ்து (விகாரமற்றதாயிருந்தாலும்) சிருஷ்டிக்கும் தன்மையையும், அழிக்கும் தன்மையையும் பாலகத்தன்மையையும் அடைகிறது. இரண்டாவது அடைவதில்லை, மாயை அநிர்வசநீயமாக ஸத்திற்கு வேறுகாதபடியால்).

**35.** ஸத் எப்பொழுதும் சித்ரூபமானபடியால், சித்ரூபத்திற்கு ஸத்யத்தன்மை யுக்தமே.

**36.** அசித்ரூபமான ரஜ்ஜு ஸர்ப்பவிஷயத்தில் அஸத்தன்மை ஸம்மதமன்றே ; ஆதலால் இந்தகாரணமானது, ஸத்தாகவும், ஏகமாகவும், சாச்வதமாகவு மிருக்கிறது.

**37.** இந்த எல்லா ஜகத்தும் (தோற்றத்திற்குமுன்) ஸத்தாகவே இருந்தது; அஸத்தாகவிருந்ததென்று பிராந்தர்கள் சொல்லுகிறுர்கள்.

**38.** உண்மையாக யோஜிக்கும்கால் அஸத்காரணமாகாது; அப்பொழுது மலடிமகன் எல்லாத்துக்கும் காரணமாகும்.

**39–40.** தன்னுடைய சக்தியால் அஸத்காரண மாகிறதென்றுல் அஸத்திற்கு சக்தியேது, ஸத்ரூபமாகிய விரைமுதலியதில் அங்குர உத்பத்தி சக்திகாணப்படுகிறது; அஸத்தில் அது காணப்படவில்லை.

**41.** அந்த சக்தியும் ஸத்தா, அஸத்தா, ஸத்அஸத்தா; ஸத்தாயிருந்தால், அந்த ஸத்தான சக்தி எவ்விதம் மலடிமகனை ஆசிரயிக்கும்; ஆசிரதம் லோகத்தில் ஸத்தில் காணப்படுகிறதே யன்றி, அஸத்திலில்லை.

**42.** அஸத்தாயிருந்தால் அஸத் எப்படி காரியத்தை நிர்வாகம்செய்யும்.

**43.** மலடிமகன் தானே காரியத்தை நிர்வாகம் செய்யவில்லையே; நிர்வாகக தர்மம் ஸத்திற்கே காணப்படுகிறதன்றே.

44. அந்த சக்தி ஸத் அஸத் என்றால் இந்த இரண்டு தோஷங்களும் இருக்கின்றன ; ஆதலால் தன் சக்தியால் அஸத் ஒரு பொழுதும் காரணமாகாது.

45. இந்த அஸத்வாதம் நிலைக்காது ; யுக்தியுள்ள தன்று ; ஆதலால் ஸத்தே எல்லாவற்றிற்கும் காரணம் அஸத்தன்று.

46. சிருஷ்டிக்குமுன் இந்த எல்லா ஜகத்தும் காரணமான ஸத்தாகவே யிருந்தது ; இந்தக் காரணமும் ஆதியந்தமற்ற அத்வயமான ஸத்தாயிருக்கிறது.

47–49. பூர்வ கல்ப பிரபஞ்ச ஸம்ஸ்காரத்தால் ரஞ்சிதமாயும், காலகர்மபரிபாகத்தால், ஸத்வ விருத்தியை ஆசிரயித்ததாய் இந்த சக்தியுள்ள ஸத் பலவாக ஆகுவேன் என்று ஸிருஷ்டிக்காக பரியாலோசனை செய்தது ; மறுபடியும் பூர்வ ஸம்ஸ்காரத்தால் ஆகாசம் வாயு முதலியவைகளை சிருஷ்டித்து, பிறகு தேஜஸை சிருஷ்டித்து, ஜலத்தை சிருஷ்டித்து, அன்னமென்ற பிருதிவியையும் சிருஷ்டித்தார்.

50–53. மறுபடியும் அந்தக்காரணமான பிரஹ்மம் அந்த ஐந்து பூதங்களில் ஒவ்வொன்றையும் இரண்டுவிதம் செய்து, ஒரு பாகத்தை மறுபடியும் நான்காகப் பிரித்து, அவைகளை மற்றவைகளுக்குக் கொடுத்தும், அவைகளிலிருப்பதை தானும் பெத்துக் கொண்டும், கிரமமாக ஒவ்வொரு பூதங்களுக்கும் பாதிசொந்த பாகமும், பாதி மற்ற பூதங்களின் பாகமாக இந்த காரணம் பஞ்சீகரணம் செய்தது.

54. இப்படி எல்லா பூதங்களையும் பஞ்சீகரணம் செய்து, அந்தக் காரணமான பிரஹ்மம் அண்டங்களையும் புவனங்களையும் செய்தது.

55. காலபாகத்தாலும், பிராணி கர்மவசத்தாலும் அண்டஜம், ஸ்வேதஜம், ஜாரஜம், உத்பீஜம் எல்லாவற்றையும் செய்தது.

56. பிரஹ்மம் எல்லாவிடத்திலும் சித்ரூபமாய் பின்தொடர்ந்து தனித்தனி நாமங்களையும், ரூபங்களையும் பூர்வ கல்பங்கள் போல் செய்கிறார்.

57. இந்த எல்லா ஜகத்தும் தானே ஸத்யமாயிருப்பதாக விளங்கினாலும் காரணத்திற்கு வேறாக இல்லை.

58–59. நெருப்பில் காணப்படுகிற சிகப்பு வுருவம் தேஜஸி னுடைய ரூபம், வெண்மை அப்புனுடைய ரூபம், கறுப்பு பிருதிவி யின் ரூபம்; இந்த ரூபங்களுக்கு வேறாக நெருப்பு என்பது ஒரு பொழுதும் இல்லை; 'நெருப்பு' என்ற பெயருடைய விகாரம் வாக்கு மாத்திரம்தான்.

60–62. இந்த மூன்று ரூபங்கள்தான் ஸத்யம், நெருப்பு ஸத்யமன்று; சூரியனுடைய சிகப்பு ரூபம் தேஜஸின் ரூபம், வெண்மை அப்பின் ரூபம், கருப்பு பூமியின் ரூபம்; இந்த மூன்று ரூபங்களைத் தவிர சூரியன் என்பது இல்லை; பிராந்தியால் அவி வேகிகள் 'ஆதித்யன்' என்று சொல்லுகிறார்கள்.

இவ்விதமே சந்திரன், மின்னல் விஷயங்களிலும் அறிய வேண்டியது.

63. குடம் சுவர் முதலிய இருப்புகளும், பூதங்களும், புவனங்களும் எல்லாம் பிரஹ்மத்தை தவிர வேறாகவில்லை; பிரஹ் மமே எப்பொழுதும் ஸத்.

64. முன், முன் பிரமையால் உண்டான வாஸனையாலும், அதன் பலத்தாலும் தேக இந்திரிய கூட்டத்தில் 'நான்' என்கிற புத்தி திருடமாக உண்டாகிறது.

65. பூததன்மையுடையதாலும், பூதாம்சங்களால் எப்பொ ழுதும் போஷிக்கப்படுவதாலும் தேகாதி கூட்டம் அஹமர்த்தம் ஆகாது.

66. மண்ணாலும் ஜலத்தாலும் சுவர் எப்படி நிர்மாணிக் கப்பட்டு அவைகளால் போஷிக்கப்படுகிறதோ, அப்படியே புஜித்த பூதாம்சங்களால் தேகாதிகள் போஷிக்கப்படுகின்றன.

67. ஆதலால் தேகாதி கூட்டத்தில் 'நான்' 'எனது' என்ற புத்தியை செலுத்தாமல், ஸாக்ஷிசைதன்யத்தில் வித்வான் கள் அகம் புத்தியை செலுத்தவேண்டும்.

31

68. தயிரிலிருந்து கடைவதால் எப்படி வெண்ணெய் உண்டாகிறதோ அப்படியே புத்தி முதலிய பாவங்கள் பூதங்களிலிருந்தும் உண்டாகின்றன.

69. பூதஸம்பந்தமான தேகாதிஸங்காதத்தை விட்டு, ஸர்வ ஸாக்ஷியாகிய சித்ரூபத்தில் அஹம் புத்தியை செலுத்தவேண்டும்.

70. அன்னத்தால் போஷிக்கப்படாமலிருக்கும் பொழுது படித்தது விளங்குகிறதில்லை; ஆதலால் புத்தி அன்னத்தின் காரியம் என்பதில் ஸந்தேகமில்லை.

71. ஆதலால் விவேகி அன்ன காரியமான புத்தியைவிட்டு ஸர்வ ஸாக்ஷியாகிய சித் ரூபத்தில் அகம் புத்தியை செலுத்த வேண்டும்.

72–74. தேகாதி கூட்டத்தில் நான், எனது என்ற புத்தியை விட்டு, ஸ்வாத்மாவான சித் ரூபத்தில் இவன் எப்பொழுது அடங்குகிறுனே அப்பொழுது இவன் லயமடைந்தவனுகிறுன்; துக்காதிதோற்றம் இல்லை; இந்த தேகிக்கு ஸ்வாத்மஸுக பிராப்தி மாத்திரம் உளது. ஆதலால், புத்திசாலி தேகாதிகளில் செலுத்தாமல் அஹம் புத்தியை ஸர்வஸாக்ஷியாகிய சித் ரூபத்தில் செலுத்தி அதை அனுபவத்திற்கு கொண்டுவரவேண்டும்.

75–76. ஸாக்ஷியால் அறியப்பட்டதெல்லாம் கேவலம் பிரஹ்மமே; அந்த ஸத்யமான பூர்ண சைதன்யமே 'நீ' என்பதற்கு பொருள். எது 'நீ' என்ற சப்தத்திற்கு அர்த்தமாக விளங்குகிறதோ, அதே 'நான்' சப்த அர்த்தமும்; 'அஹம்' சப்த அர்த்தமே, 'நீ' சப்த அர்த்தம்.

77. 'நீ' 'நான்' என்ற சப்தங்களுக்கு லக்ஷ்யார்த்தம் ஸாக்ஷாத் பரமான பிரத்யக் சைதன்யம்; 'அது' என்பதற்கு லக்ஷ்யார்த்தம் இந்த பிரத்யக் சைதன்யமே, ஸந்தேகமில்லை.

78. 'தத்வமஸீ' என்ற ச்ருதி 'நீ' 'நான்' என்ற சப்தங்களுக்கு வாச்சியார்த்தமாகிய தேகாதி வஸ்துக்களைச் சொல்லவில்லை.

**79.** வாச்சியார்தத்திலுள்ள விருத்தாம்சங்களை நீக்கி, அவி ருத்தமில்லாத சித்ரூபத்தை லக்ஷ்யமாகக் கூறுகிறது.

**80–82.** 'தத்' அர்த்தத்திலும், 'த்வம்' அர்த்தத்திலும் இருக்கிற ஐக்கிய விருத்த அம்சங்களை நீக்கி, காரணமுதலிய வாச்சியார்த்தத்திலிருக்கிற கேவலம் சித்ரூபத்தை லக்ஷ்யமாய்ச் சொல்லி, பிறகு 'த்வம்' அர்த்த ஐக்கியத்தைச் சொல்லுகிறது; 'தத்' 'த்வம்' அர்த்த லக்ஷ்யமான ஸ்வதஸித்தமான சின்மாத் திரமான பரமாத்மாவின் ஏகத்வம் வாக்கியார்த்தம். இதைத் தவிர மற்றதெல்லாம் வாக்கியார்த்தமன்று.

**83.** (ஸ்வபிரகாசமான பிரஹ்மத்திற்கு ஏகத்வ ஞானம் உண்டாகிறதென்றால் பங்கம்வருமேயெனில்) இந்த வாக்யம் ஐக்ய ஞானத்தை உண்டாக்கிறதில்லை; இந்த ஞானத்தால் (ஏகத்வ மனோ விருத்தியால்) வியாவஹாரிக அக்ஞானம் பாதிக்கப்படு கிறது (நிவிருத்திக்கப்படுகிறது).

**84.** எப்பொழுதும் ஞானமும் ஏகத்வமும் ஸ்வபாவமாக வே இருக்கிறது; ஆதலால் வாக்கியம் ஞானத்தை உண்டு பண்ணுகிறதில்லை, அக்ஞானத்தை பாதிக்கிறது.

**85.** வாஸ்தவத்தில் அக்ஞானமுமில்லை; சித் பிரகாசத் திற்கு அது விரோதியல்லாத படியால்; ஆதலால் நன்கு யோஜிக் கும்பொழுது வாக்கியம் அக்ஞான பாதகமுமன்று.

**86.** முன்சொல்லப்பட்ட ஏகத்வமும் ஸ்வயமாகவே விளங்க யோக்யதையுடையதா யிருக்கிறது (வேறு பிரமாணம் வேண்டிய தில்லை); பிரமாணங்கள் ஸாக்ஷியாலே பிரகாசமாகிறபடியால், அதில் சூரியபிரகாசத்திற்கு முன் தீபபிரகாசம்போல, சக்தியுள்ள தாக ஆகின்றன.

**87.** வியவகாரிக அக்ஞானமும் உண்மையாகப் பார்த் தால் பிரஹ்மமே; அக்ஞானம் என்கிற வார்த்தையும் அர்த்த ஸத் பாவமே.

88. ஸத்திற்கே ஸத்பாவம், அஸத்திற்கில்லை; சூக்ஷ்மமாய் பார்க்கும் கால்; ஸத் அஸத் பக்ஷத்திலிருந்து நிர் முக்தம் என்ற பேச்சும், அர்த்தம் விளங்கும்பொழுது, விளங்குகிறதில்லை; பிரகாசிக்கிற வஸ்துவானது கேவலம் பிரஹ்ம வஸ்துவே.

89. பிரகாசஸம்பந்தத்தால் பிரகாசமில்லை என்ற வார்த்தையும் அஸங்கதமே.

90. ஸம்பந்தி என்று ஒன்று ஸத்தாயிருந்தால் ஸம்பந்தம் ஏற்படும்; ஸத்பாவமிருக்கில் ஸம்பந்திரூபம் கேவலம் பிரஹ்மமே.

91. நிரூபிக்கக் கூடாத ரூபத்தால் அதற்கு ஸத்பாவம் என்றால், அந்த ரூபம் கேவலம் பிரஹ்மமே.

92. பிரஹ்மத்தைத்தவிர மற்றதுக்கு ரூபமிருந்தால் ரூபத்தாலும் அது பிரஹ்ம ரூபமே ஆகிறது.

93–95. அக்ஞானத்திற்கு பிரஹ்ம ரூபமல்லாமல், வேறு ரூபமென்றால், இந்த வேறு ரூபம் பிரஹ்ம ரூபத்திற்கு பின்னமா, அபின்னமா? பின்னா பின்னமா? பின்ன மென்றால், ரூபத்திற்கு பேதமாயிருப்பதால் மலடி மகன்போல் அது அரூபமாகும், அபின்ன மென்றால், அந்த ரூபமே; இந்த இரண்டு தோஷத்தாலும் பின்னா பின்னம் ஆகாது.

96. ஆகையாலேயே நிரூபிக்கக்கூடாத ரூபத்திற்கு ஸத்பாவம் (இருப்பு) என்ற வார்த்தையும் வீண் வார்த்தைதான்.

97–99. ஆகையால் இந்த அக்ஞானம் எப்பொழுதும் பிரகாசமான பிரஹ்மமே; இதெல்லாம் அக்ஞானமயம் என்று சொல்லுவதும் வீண் வார்த்தை; சிவனில்லாமல் அக்ஞானத்திற்கு இருப்பு இல்லை; ஆதலால் அக்ஞானம், அக்ஞானகாரியம் எல்லாம் ஒன்றாகிய பிரஹ்மமே, வேறென்று மன்று என்று என்னுடைய நிச்சயமான தீர்மானம். இதெல்லாம் இந்த ஆத்மாவென்று ச்ருதியும் சொல்லுகிறது.

100–106. ச்ருதி இந்த அர்த்தம் தன் ஸ்வபாத்தால் ஆகின்றதென்று கருதி அதில் பிரவேசிக்கிறது; (அப்படியிருந்தாலும்)

கேட்பவனுடைய சித்தம் பரிபாக மில்லாததுமன்றி வருத்தப் பட்டு, வசமன்றி ச்ருதி சில ஸமயத்தில், பிரம்மத்திற்கு வேருக வும், அன்யார்த்தத்தை சொல்லுகிறது ; ஸாத்ய ஸாதன ஸம்பந் தத்தைச் சொல்லுதலும், பலத்தைச்சொல்லுவதும், ஜகத் விசித் திரத்தை கூறுவதும், தர்மாதர்மத்தைச் சொல்வதும், வர்ணுசிரம விபாகம், அதன் தர்மங்களைச் சொல்வதும், சோபன சோபனங் களைக் கூறுவதும், பூதபௌதிகங்களைச் சொல்வதும், சப்தபேதங் களைச் சொல்வதும், அனர்த்தங்களைச் சொல்வதும், ஆத்மாவைத் தவிர மற்றவைகளுக்கு ஸத்பாவத்தை (இருப்பை)ச் சொல்வதும், அவைகளுக்கு மித்யாத்வத்தை (இல்லாமலிருக்குந் தன்மையை)ச் சொல்வதும், மாயை, அதனுல் பந்தனம் முதலியவைகளைச் சொல்வதும், குரு சிஷ்யகதை சொல்வதும், பிரஹ்ம வித்தியை சொல்வதும், சாஸ்திர நிர்தேசமும், தர்க்கப்பேச்சும், இன்னு மற்றுமுள்ள குதர்க்க பேச்சும் பரம் பிரஹ்மத்திற்கு தனிப்பட்ட பொருளாக ஸாத்வீயான ச்ருதி சொல்லுகிறது ; பிரஹ்ம பரமாகச் சொல்ல வில்லை.

**107–108.** கேட்பவனுடைய சித்தபரிபாகத்திற்கு தக்க வாறு படிப்படியாக, மனிதர்களின் நன்மையைக் கருதி, ச்ருதி யானது வருத்தத்துடன் கொஞ்சம் கொஞ்சமாக உபதேசித்து, மறுபடியும் பக்வாதிகாரிகளுக்கு ‘ இது எல்லாம் ஆத்மாவென்று ’ பரமாத்வைதத்தைச் சொல்லுகிறது.

**109.** ஜகத் ஜீவ ஈசுவராமுதலிய விசித்திர மகிமையன்னி யில் கேவலம் சிதாநந்த பிரஹ்மாத்ம ஐக்கியத்தை ச்ருதி சொல் லுகிறது.

**110.** ஜகத் ஜீவன் ஈசுவரன் முதலியவையெல்லாம் கேவ லம் பிரஹ்மமென்ற பூர்ணஞானம், பரமாத்வைதத்தை யறிந்தரா கும்.

**111–112.** இதைத்தவிர மற்றஞானம் அக்ஞானமாகும்; விசாரணையினுலும் இதே அர்த்தம், விசாரிக்காமலிருந்தாலும்

இதே அர்த்தம், ஒருக்காலும் விசேஷமில்லையென்ற ஞானம் கிடைப்பதரிது.

113. ஸ்வபாவத்திலே எது, எப்படியெப்படி விளங்குகிற தோ, அப்படியப்படியே ஸ்வயமாகவே சிவன் விளங்குகிறார், வேறொன்றுமில்லை.

114. எப்படியெப்படி தோற்றமோ அது சம்புவென்ற நிச்சய ஞானம் பரமாத்வைத ஞானமாகும்.

115. எப்படியெப்படி விளங்குகிறதோ அது சிவனே யென்று பார்க்கிறவன் அப்படியப்படியே யத்னமன்றி மகாதேவ னை பஜிக்கிறான்.

116. மனிதனுக்கு வஸ்துக்களில் எப்படி எப்படி விளக்க மோ அப்படியப்படி சிவனேயென்று அநுஸந்தானம் செய்வது ஸ்வபாவபூஜையாகும்.

117. எல்லாவற்றையும் சிவரூபமாகயறிகிறவன் தத்வவித்; அசிவமாக கொஞ்சமேனும் அறிந்தால் அவன் மோகமடைந்த வன்.

118. சிவனுக்கு வேறாக கொஞ்சமேனும் அறிகிறவன் அதமன்; அந்த மனிதனாகிய பசு சிவாபராதஞ்செய்கிறவன்.

119. ஸ்வபாவமாக எல்லாம் சிவரூபமாக எவனுக்கு விளங்குகிறதோ அவன் ஸ்வேச்சையான ஆசாரமுடையவனும், நல்ல ஆசாரமுடையவனுமாவான்; அவன் சிவனை அர்ச்சிப்பவனா வான்.

120. எப்படியெப்படி விளக்கமோ அதெல்லாம் சம்புவின் அர்ச்சனம் என்ற யத்ன மில்லாத ஞானத்தால் பரமேச்வரன் பூஜிக்கப்படுகிறான்.

121. ஆத்ம தேவனுடைய கிரீடை ஜகத் ஆகாரமென்றும், கிருபையால் ஆத்மாவால் ஆத்மாவை புஜிக்கிறான் என்ற ஞானம் பிரஹ்ம ஞானமாகும்.

122. இந்திரியாகார ஆபாஸமும், விஷயாகார தோற்றமும் வெளியாட்டாக தேவன் புஜிக்கிறான் என்ற ஞானம் அர்ச்சனமாகும்.

123. பவபயத்தைப்போக்கும் பாவனையற்ற இந்த பரமாத்வைத ஞானம் சிவ பிரஸாதத்தால் அடையப்படும்.

124. எப்படி கோட்டானுக்கு சூரிய பிரகாசம் விளங்குகிறதில்லையோ அப்படி பரமாத்வைத விக்ஞானம் மனிதர்களுக்கு விளங்குகிறதில்லை.

125. ருத்ர பிரஸாதத்தாலும், சிரத்தையாலும், தைரியத்தாலும், தேசிக கடாக்ஷத்தாலும், கர்மஸாம்யமாகும் பொழுது இந்த விக்ஞானம் விளங்கும்.

126. வெகு பிரகாரமாகவும், பலதடவைகளாகவும் முக்திகளுக்காக ச்ருதி இந்த அர்த்தத்தை சிரமத்துடன் சொல்லுகிறது.

127. சிவனே உள்ளது, வேறொன்றுமில்லை என்ற நிச்சயமானது எப்பொழுதும் ஸித்தாந்தமாகும், மற்றதெல்லாம் பூர்வ பக்ஷங்களாகும்.

128. இதுவே வேதார்த்தம், மற்றதன்று, இது ஸத்யம், என்று மழுவைக்காய்ச்சி கையில் தாங்குவேன்.

129. இதுவே ஸத்யமான அர்த்தம், மற்றதல்லவென்று உங்களுக்கு நம்பிக்கை வரும்பொருட்டு, சிவனைத்தொட்டு மூன்று தரஞ்சத்தியம் செய்கிறேன்.

130. இதுவே வேதார்த்தம், இல்லாவிடில் எனது தலை இங்கு கீழேவிழக்கடவது.

131. இதுதான் ஸத்யமான அர்த்தம், உங்கள் நம்பிக்கையின் பொருட்டு தேவன் (சிவன்) இவ்விடத்தில் எழுந்தருளுவார்.

132. ஸூதர் :—இவ்விதம் ஸர்வஹிதான பகவான் பிரஹ்மன் சொல்லிவிட்டு, தண்டம்போல் பூமியில் விழுந்து நமஸ்கரித்து பக்தியால் பரவசமானார்.

**133–134.** இந்த சமயத்தில் சசிசேகரரும், நீலகண்டரும், முக்கண்ணுடையவரும், ஸாம்பரும், கருணா நிதியுமான ஸ்ரீமான் சங்கரன் குணமூர்த்திகளான பிரஹ்மா விஷ்ணு மகேச்வரர்களால் உபாஸிக்கப்பட்டவராய் அந்த தேவ ஸந்நிதியில் தோன்றினார்.

**135.** விமலமாயும், திவ்யமாயும், சிவார்ஹமாயும், தங்கமயமாயும், அத்புதமாயுமுள்ள தேவர்களால் கொண்டுவரப்பட்ட ஆஸனத்தில் ஸுகமாய் பகவான் உட்கார்ந்தார்.

**136.** விச்வஜகத் கர்த்தாவான விஷ்ணுவும் அளவற்ற தேஜஸையுடைய சிவனுடைய காரியத்தையறிந்து அவ்விடம் வந்தார்.

**137.** அடிக்கடி அங்கு புஷ்பவிருஷ்டி உண்டாயிற்று; ஸநாதனமான முனிகளால் சுத்தவேத வசனங்கள் சொல்லப்பட்டன; சோபனமான பக்திஜனங்களால் பூஜைசெய்யப்பட்டது.

**138.** படமுதலிய வாத்தியங்களால் உச்ச, மந்த, மிருது, தீவ்ரமான சப்தங்கள் கோஷிக்கப்பட்டன; தாள ஞானமுதலியவர்களாலும், பேரிவாத்தியம் தெரிந்தவர்களாலும் நல்ல கோஷம் உண்டாயிற்று.

**139.** அப்ஸரஸ்களால் நர்த்தனம் செய்யப்பட்டது; காயனர்களாலும், கவிகளாலும் கீதம் முழங்கப்பட்டது; சிவகடாக்ஷம் பெற்ற ஸ்தானம் இப்படியிருந்தது.

**140.** முனிகள் ஆச்சரியமடைந்து சிலர் சிரத்தையால் தலையால் நர்த்தனஞ் செய்தார்கள்; சிலர் சிரத்தையால் முஷ்டியுத்தம் செய்தார்கள்.

**141.** சிலர் தலையால் இடிக்கிறதும், சரணத்தாலும், கையாலும் அடிக்கிறதும், தண்ட, கயிர் சிவிகை முதலியவைகளால் சிலர் அடிக்கவும் செய்தார்கள்.

**142.** சிலர் பந்தனத்தையும் சிலர் மோசனத்தையும் செய்தார்கள்.

**143.** சிலர் ஒருவருக்கொருவர் ஆலிங்கனம்செய்துகொண்டும், சிலர் வேகமாய் ஓடிக்கொண்டும், சிலர் அடித்துக்கொண்டும் இருந்தார்கள்.

**144–145.** பார்வதியோடுகூடிய சிவனும் எல்லாவற்றையும் பார்த்து, சந்தோஷப்பட்டு, எல்லோரையும் நிவாரணம் செய்து, விஷ்ணுவையும், பிரஹ்மனையும், எல்லா தேவர்களையும் பிரியத்துடன் பார்த்து, ச்ருதி பிரமாணத்தாலேயே நிச்சயிக்கப்பட்ட ஸத்ய அர்த்தத்தை சொன்னர்; லோகத்தின் நன்மைக்காக சொல்லப்பட்டபடியால் மகாதேவன் எப்பொழுதும் ஸுராஸுரர்களால் பூஜிக்கத்தகுந்தவர்.

**146–171.** ஈசுவரன் :—எல்லாம் நானே! நீரூபணம் செய்தாலும், செய்யாவிட்டாலும் கொஞ்சம் கூட வேறு இல்லை; இதுதான் வேதத்தின் பரமமான முடிவு; என்னுடைய அனுபவமும் அதுவே, ஸந்தேகமில்லை.

நான் எப்பொழுதும் கீழும், மேலும், முன்னும், பின்னும், வலப்பக்கமும், இடப்பக்கமும், மேலும், குறுக்கும் இருக்கிறேன்.

பரோக்ஷமாகவும், அபரோக்ஷமாகவும், ஆத்மரூபமாகவும், அநாத்ம ரூபமாகவும் நான் இருக்கிறேன். ஜீவரூபமாகவும், ஈசரூபமாகவும், அக்ஞானரூபமாகவும், விக்ஞானரூபமாகவும், சம்ஸாரரூபமாகவும், கைவல்யரூபமாகவும், சிஷ்யாதிரூபமாகவும், குருமுதலியரூபமாகவும், வேதாதிரூபமாகவும், ஸ்மிருதி முதலிய ரூபமாகவும், புராணரூபமாகவும், கல்பாதிரூபமாகவும், பிரமாத ரூபமாகவும், பிரமாண, பிரமேய, பிரமிதிரூபங்களாகவும், கர்த்தா, கிரியை ரூபமாகவும், அதற்கு ஹேதுரூபமாகவும், பலரூபமாகவும், போக்தரு, போக, ஹேது, போக்யஸ்வரூபங்களாகவும், புண்ய, பாப, ஸுக, துக்கஸ்ரூபங்களாகவும். ருத்ர, விஷ்ணு, பிரஹ்ம, தேவபேதங்களாவும், மர்த்ய, திரியக், பூச்சி, புழு, விருக்ஷ, செடி, கொடி, திரணபேதங்களாகவும், காலம், கடம், படம், சுவர், அன்னம், பானம், வனம், கிரி, நதி, நதம்,

சமுத்ரம், தட, தடாகம், ஆகாசம், நக்ஷத்திரம், கிருஹங்கள், மேகம், மின்னல், யக்ஷ, ராக்ஷஸ, கந்தர்வ, ஸித்த, அண்டம், லோகம், தேசம், கிராமம், கிரஹம், மடம், கடம், பிராகாரம், புரம், புரீ, ஆகாசாதி, சப்தாதி, சரீரம், பிராண, ச்ரோத்ரம், பாதாதி, மனஸ், புத்தி, அகங்காரம், சித்தம், ஸங்காதம், ஜன்மாதி, ஜகத், ஸ்வப்ன, ஸுஷுப்தி, துரீய, திருசிய, திருஷ்டா, ஸாக்ஷி, ஸர்வ ஸ்வரூபபேதங்களாக நானே இருக்கிறேன்.

172. 'இருக்கிறது, இல்லை' என்றவார்த்தைகளால், சொல்லப்பட்டதும், 'விளங்குகிறது' என்ற சப்தத்தால் சொல்லப்பட்டதும் 'விளங்கவில்லை' என்ற சப்தத்தால் சொல்லப்பட்டதும் என்ரூபமே என்பதில் ஸந்தேகமில்லை.

173. சப்தத்தால் விஷயீகரிக்கக்கூடியதும், கூடாததுமாயிருக்கிறது நானே; புத்திவிஷயத்திலும் இப்படியே.

174. ச்ருதி எவனுக்கு நித்யசுத்த புத்தமுக்தத்தன்மை நித்யமாயிருப்பதாகச் சொல்லுகிறதோ, அவனுடைய ஸத்யசுக போத பூர்ணஸ்திதி என்னுடையது என்பதில் ஸந்தேகமில்லை.

175. 'அஹம்' ஞானம், 'இதம்' என்றதும் என் சித்சரீரமே, வேறன்று என்று என்னுடைய நிச்சயம்.

176. எல்லாம் நானே! என்ரூபத்தைத்தவிர வேறொன்றுமில்லை என்று வேதாந்தவாக்கியங்களால் நிச்சயம் செய்யப்பட்டிருக்கிறது; பிரஹ்மனும் இந்த ஸத்யம் சொல்லப்பட்டது.

177. இவ்விஷயத்தில் ஸம்சயபுத்தியுள்ளவன் நாசமடைவான்; பரமார்த்த தர்சனத்திலிருந்து விலக்கப்பட்டவனுவான்; இதில் நிச்சயபுத்தியுடையவன் ஸம்ஸாரகஷ்டத்திலிருந்து முக்தியடைவான்.

178–179. ஸூதர்:—ஸாம்பரும், ஸம்ஸாரமோசகருமான மஹாதேவர் இப்படி சொல்லிவிட்டு, ஆதாவுடன் பிரஹ்மனையும், விஷ்ணுவையும் ஆலிங்கனஞ்செய்து, சுத்தமனதால் எல்லாதேவர்

களையும் கடாக்ஷித்து, 'உங்களுக்கெல்லாம் நன்மையுண்டாகும்' என்று சொன்னார்.

180. தேவர்களும் கருணா நிதியான தேவதேவனை ஸந்தோஷத்துடன் பத்ரபுஷ்பங்களால் பூஜித்தார்கள்.

181. விச்வஜகத்கர்த்தாவான விஷ்ணு விச்வேச்வருடைய பாதகமலத்தை தன் தலையில் வைத்துக்கொண்டு பரவசமானார்.

182. பிரஹ்மனும் சிவனுடைய இருபாதகமலங்களையும் தன் தலையில் வைத்துக்கொண்டு பரவசமானார்.

183. ஸாம்பரும், ஸம்ஸாரமோசகருமான மகாதேவன் தன்னுடைய பரமமான ஐச்வர பாவத்தைக்காட்டிக்கொண்டு நர்த்தனஞ் செய்தார்.

184. கருணைக்கடலான மகாதேவியும் ஈசுவரனைப்பார்த்து, பரமபிரீதியுடன் கரதாளம்போட்டாள்.

185. விஷ்ணு, பிரஹ்மன், தேவர்கள், அங்குவந்திருந்த எல்லா ஜனங்களும் ஸந்தோஷமுடையவர்களாய் தங்கள் பலத்திற்கு தக்கபடி நர்த்தனம்செய்தார்கள்.

186. மகாநந்த ஸமுத்ரமாகிய தேவதேவனும் எல்லோரையும் பார்த்து ஸந்தோஷப்பட்டவராய் அவ்விடமே மறைந்து விட்டார்.

187. பிரஹ்மனை ஆலிங்கனம் செய்து எல்லாதேவர்களை கடாக்ஷித்து, பிரஸன்னராய் லக்ஷ்மியுடன் வைகுண்டம் சென்றார்.

188. பிரஹ்மனும் ஆச்சரியமடைந்தவராய், எல்லா தேவர்களையும் பார்த்து அவசராய், கேவலம் சிரத்தையாலேயே மறுபடியும் சொல்லத்தொடங்கினார்.

189. பிரஹ்மன்:—எல்லா வித்யைகளும் ஸாக்ஷாத் ஸம்ஸாரத்தில் பிரவிருத்திக்கச்செய்யும்; ஆத்மவித்யையே ஸம்ஸார இருளை நாசம்செய்யும்.

190. ஆத்மவித்யை இல்லாதவனுக்கு சோக ஸமுத்ரமே கதி; ஆத்மனிஷ்டனுக்கு மோக்ஷமே என்பதில் சந்தேகமில்லை.

**191.** பிராணியானவன் எங்கு வேறொன்றைப் பார்க்கிருனே, அப்படியே அன்யத்தைக் கேட்கிருனே, வேறொன்றை அறிகிருனே அது அல்பம்; எது அல்பமோ அது நாசமடையும்.

**192.** எங்கு வேறொன்றைப்பார்க்கிறதில்லேயோ, கேட்கிறதில்லேயோ, அறிகிறதில்லேயோ அது 'பூமா' (பெரிது, அல்பமன்று).

**193.** எது பூமாவோ அதுதான் ஸுகம், அதுவே உத்தம கைவல்யம்; அல்பத்தில் ஸுகமில்லே; ஆதலால் மகா அத்வைதத்தைக் கைக்கொள்ளவேண்டும்.

**194.** இந்த அத்வைத பரனுக்கு நாசமுமில்லே, ஜன்மமுமில்லே; போக்குவரவில்லே; பந்தமில்லே, விடுதலே இல்லே.

**195.** நெய்யின் தடிப்புப்போலவும், ஸ்வப்னபிரபஞ்சதோற்றம்போலவும் எல்லாம் ஆத்மாவாகவேதானே இந்த பிரஹ்மத்தில் லயமடைகிறது.

**196.** இந்த அதிசோபனமானதெல்லாம் கிருபையால் சொல்லப்பட்டது; தேவதேவனுடைய சரணபிரஸாதத்தாலன்றி என்னல் சொல்லமுடியாது.

---

## அத்தியாயம் 6.

---

### (தஹரோபாஸன விவரணம்).

**1.** பிரஹ்மன்:—இந்த பிரஹ்மபுரத்தில் (வித்யாதிகாரி சரீரத்தில்) அல்பபரிமாணவுடைய தாமரை வீடு (இடம், ஹிருத்புண்டரீகம்) இருக்கிறது; அதின் மத்தியில் அல்பமான ஆகாசமிருக்கிறது.

**2.** அந்த ஆகாசமே சச்சிதானந்த சிவன்; அவன் முமுக்ஷுக்களால் தேடத்தக்கவர், ஸங்கோசமன்னியில் (ஹிருத்புண்

டரீகத்தால் உண்டான பரிச்சேதத்தை நீக்கி ஸ்வபாவமான அகண்டரூபத்துடன்) அறியத்தக்கவர்.

3. தன்னை வெளிப்படுத்தவந்த (தனக்கு பிரகாசமாயிருக்கிற) அந்தக்கரணத்தின் பரிச்சேதத்தால் (ஸங்கோசத்தால்) ஆத்மாவுக்கு ஸங்கோசத்தோற்றம் ஏற்படுகிறது; ஸ்வரூபமாக ஆத்மாவுக்கு ஸங்கோசம் இல்லை (எல்லை, பிரிவு இல்லை); எப்பொழுதும் சித்ரூபம் எங்கும் வியாபித்திருப்பதல்லவோ!

4. எல்லாம் ஸாக்ஷிக்கு ஞானத்திற்கு விஷயமானரூபமாயும், அக்ஞானத்திற்கு விஷயமான ரூபமாயும் விளங்குகிறது; அந்த சிதாத்மகமான சாக்ஷி எப்பொழுதும் ஸ்வயமே விளங்குகிறது; ஆதலால் அது எப்பொழுதும் ஸர்வவியாபியா யிருக்கிறது.

5. ஜடமாயிருக்கிற இந்த ஜகத் தானாக பிரகாசிக்க சக்தியற்றதாயிருக்கிறதன்றோ! சித்ஸம்பந்தபலத்தால் பிரகாசிக்கிறதே தவிர வேறுவிதத்தால் இல்லை.

6. ஆதலால் விளங்கக்கூடியவைகளையெல்லாம் வியாபித்து அதை பிரகாசம் செய்விக்கிறவர் சிவனே; அவரே ஸ்வயமே வியாபி; வியாபிக்காதவரன்று; வேறொன்றின் (அந்தக்கரணத்தின்) ஸம்பந்தத்தால் சங்கோச (எல்லை) முள்ளவராக காணப்படுகிறார்.

7. இந்த வெளி ஆகாசம் எந்தமட்டும் வியாபகமோ, அந்தமட்டும் உள்ளிருக்கிற தஹராகாசம் வியாபகமாயிருக்கிறது; ஆகாசம், பூமி இவ்விரண்டும் இந்த உள் ஆகாசத்திலே அடங்கி யிருக்கின்றது.

8–9. அக்னி, வாயு, சூர்யன், சந்திரன், நக்ஷத்திரங்கள், மின்னல், இன்னும் எது 'இருக்கிறது' என்றதன்மையால் பிரகாசிக்கிறதோ அதுவும், எது 'இல்லை' என்றதன்மையால் பிரகாசிக்கிறதோ அதுவும், இவையெல்லாம் அதில் ஒடுங்கியிருக்கின்றன;

ஆதலால் எல்லாவற்றிற்கும் இருப்பிடமாகிய (ஆச்ரமாயிருக்கிற) சம்பு ஸ்வபாவமாகவே ஸர்வவியாபியாயிருக்கிறார்.

**10–11.** இந்த மேலான வியாபிதான் ஆத்மா; எப்பொழுதும் எல்லாபாபங்களாலும் தொடப்படாதவன்; இந்த ஸாக்ஷி ம்ருத்யு, ஜரை, சோகமற்றவர்; அப்படியே ஸத்ய ஸங்கல்பமுமுற்றவராயு மிருக்கிறார்.

**12.** எப்படி பூமியில் காமத்தினால் ஸம்பாதிக்கப்பட்ட பலன்கள் நாசமடைகின்றனவோ, அப்படியே பரலோகத்திலும் புண்யபலன்கள் நாசமடைகின்றன.

**13.** எவன் பரமாத்மாவை யறிந்துகொள்ளாமல் எல்லாக் கர்மங்களை செய்கிறானோ அவன் எல்லா லோகங்களிலும் இஷ்டப்படி போகிறவன் அன்று.

**14.** எவர்கள் பரமாத்மாவை யறிந்து கிரியைகளை செய்கிறதுபோல இருக்கிறார்களோ அவர்கள் எல்லாலோகங்களிலும் இஷ்டப்படி நடக்கிறவர்களா யிருக்கிறார்கள்.

**15–16.** எப்படி பொற்பொருளை புதைத்திருக்கின்ற இடத்தின் ஞானமற்றவர்கள் அடிக்கடி அந்தவிடத்தின்மேல் சென்றுகொண்டிருந்தாலும் நிதியை அறிகிறதில்லையோ, அப்படி ஸுஷுப்தி தசையில் ஸ்வப் பிரகாசமான பிரஹ்மலோகத்தை இந்த பிரஜைகள் அடைந்தபோதிலும், மோகத்தாலே (அக்ஞானத்தால்) அதை அறிகிறதில்லை; ஆச்சரியம். மோகத்தின்பெருமை இப்படி இருக்கிறது.

**17.** ஸம்ஸார மோசகராயிருக்கிற இந்த சிவன் எல்லோருடைய ஹிருதயத்திலும் அவிசேஷமாய் (வித்தியாஸமன்னியில்) இருந்துகொண்டு ஸாக்ஷியாக யிருப்பதால் இவருக்கு 'ஹிருதயம்' என்ற பெயர் சொல்லப்படுகிறது; எவன் இதையறிகிறானோ அவன் ஸ்வர்க்கலோகமடைவதில் ஸந்தேகமில்லை.

**18–20.** எவன் இந்த சரீரத்திலிருந்து கிளம்பி (ஸ்தூல ஸூக்ஷ்மசரீராபிமானம்விட்டு) ஸுஷுப்தியில் பரம் ஜ்யோதி

ஸ்வரூபமான சிவனை அடைகிருனே, அவன் ஸ்வபாவமாகவுள்ள தனது ரூபத்தையே யடைகிருன்; இதுதான் ஆத்மா, வேறு அன்று என்று ஸத்யமாய் என்னுல் சொல்லப்படுகிறது; இதுவே அமிருதம்; இதுவே ஸாக்ஷாத் அபயமான பிரஹ்மம்.

21–22. இந்த தஹராகாச ஆத்மா லோகங்கள் நெறிதவ ராமலிருக்க கெட்டியான அணை (வரம்பு) யாயிருக்கிறது; இந்த மகேச்வரனை அஹோராத்திரிகள் தாண்டுகிறதில்லை (மீருகிற தில்லை), மிருத்யுவும் ஜரையும் தாண்டுகிறதில்லை; சோகமும், நல்லகாரியமும், கெட்டகாரியமும் அப்படியே தாண்டுகிறதில்லை;

23. இவரிடமிருந்து எல்லாபாபங்களும் திரும்புகின்றன; இந்த பாபசம்மந்தமற்றது தான் ஸ்வயம் பிரகாசமான பிரஹ்ம லோகம்.

24. ஆதலால் இந்த அணையைத்தாண்டுகிறவன் (அடைகிற வன், அறிகிறவன்) குருடனுயினும் பார்க்கிறவனுகிருன் (ஸுஷுப்தியில்); துன்பப்பட்டவன் துன்பப்படாதவனுகிருன், (ஸம்ஸாரத்தில்) கட்டுப்பட்டவன் கட்டுப்படாதவனுவான்.

25. இந்த தஹராகாசமென்ற பரமேச்வரன் தேஹாதிவிசேஷங்களைவிட வேருகத்தனிப்பட்டவன்; நித்தியமாயுள்ளவன்.

26. மனிதர்களுக்கு ஜாகிரத், ஸ்வப்ன, ஸுஷுப்தி என்ற அவஸ்தைகள் யாது விளங்குகின்றனவோ அவைகட்கும் வேருக ஸ்வயம் பிரகாசமான சாக்ஷியாயிருக்கிருர்.

27. அவரிடத்தில் அத்யஸ்த (கற்பிக்கப்பட்ட) ரூபமாக இவை சில வேளைகளில் பிரகாசிக்கின்றன, சில வேளை பிரகாசிக்கிறதில்லை.

28. சரீரமுடையவனுக்கு (சரீராபிமானிக்கு) தன்னுலறியப்பட்ட சரீரத்துடன் பிரிய அப்பிரியங்களின் ஸம்பந்தம் ஸம்சயமில்லாமல் இருக்கிறது.

29. வித்யையால் சரீரமற்றவனுயிருப்பவனை (ஞானத்தால் தான்வேறு, சரீரமன்று என்றறிந்து சரீராபிமானமில்லாதவனை) பிரியா பிரியங்கள் தொடுகிறதில்லை; இது ஸத்யம் ஸந்தேகமில்லை.

30. எவர் இந்த தஹராகாசமோ அவரே நாமரூபங்களின் நிர்மாணகர்த்தா (உண்டாக்குகிறவர்), அவரே சாச்வதமான பிரஹ்மம்.

31. இவரே அமிருதம், இவரே எல்லா தேகிகளுக்கும் ஆத்மா அவரைக்காட்டிலும் வேறாக பரமாவது, அபரமாவது இல்லை.

32. அவரே எல்லாரூபமாக விளங்குகிறார், விளங்காமலு மிருக்கிறார்; ஆச்சரியம்! இந்த ருத்ர தேவனுடைய பூர்ணத்தை யார் அறிவார்கள்!

33–36. எப்படி மண் தன் விகாரங்களான கடமுதலிய வைகளில் அந்தந்த ரூபமாகவிருக்கிறதோ, எப்படி ஜலம் தனது விகாரங்களில் அததன் ஸ்வரூபமாகவிருக்கிறதோ, எப்படி அக்னி தன்னுடைய விகாரங்களில் அத்ன் தன் ரூபமாயிருக்கிறதோ, எப்படி வாயு தன் விகாரங்களில் அந்தந்த ரூபமாயிருந்ததோ அப்படி எங்கும் அந்த ஸாக்ஷி அந்தந்த ரூபமாயிருக்கிறது.

37. எங்குமுள்ள ஆகாசம் எப்படி தனது ரூபத்தோ டேயே யிருக்கிறதோ, அப்படி ஸர்வாத்மகமான ஸாக்ஷி ஸாக்ஷி ரூபமாகவே இருக்கிறது.

38. கடாகாசபேதத்தால் பேதமடைந்திருந்தாலும் ஆகா சம் எப்படி பேதமடையாததோ, அப்படி ஈசானன் பின்னப் பட்டதாக காணப்பட்டாலும் பின்னப்படாதவர்.

39. மகாதேவன் விபாகமில்லாமலும், விபாக முள்ளதாயும் விளங்குகிறான்; அப்படியில்லாவிட்டால் அவர் எப்படி மகா தேவர் ஆவார்.

40. மகாதேவர் மஹாதேவரே; இல்லாவிடில் இவர் மஹா னுயிருக்கமாட்டார்; அப்படியிருக்க மகாதேவரே எல்லாம் வேறென்றுமன்று.

41. எந்தெந்த ரூபத்தால் எது விளங்குகிறதோ, எது விளங்காமலிருக்கிறதோ, அந்தந்த ரூபத்தால் சிவனே விளங்கு கிறான்.

42. விளங்கும் ரூபத்தால் சிவனே விளங்குகிறான் என்ற புத்தி, பரமான சிவை, ஸம்வித் (ஞானம்); வேறொன்றுமல்ல வென்பதில் ஸந்தேகமில்லை.

43. ஸத்ய சித்கனமான சிவன் 'அஹம்' என்று எப்பொழுதும் பிரகாசிக்கிறார்; 'இதம்' என்ற சரீரத்துடன் ஒரு வஸ்துவும் வேறாக தனிப்பட்டு இல்லை; இத்தாலேயே மனிதனுக்கு பந்தமுமில்லை, மோக்ஷமுமில்லை.

44. எல்லாம் சிவன் என்று எப்பொழுது விளக்கமுண்டாகிறதோ அப்பொழுது கொஞ்சம்கூட ஜனன மரணமில்லை; புத்திசாலி இந்த என் வசனத்தை ஹிருதயத்தில் எப்பொழுதும் வைத்துக்கொண்டிருக்கவேண்டும்.

45. பரமசிவனான பரமேச்வரன் பிரஸாதம் செய்தால் இந்த மலமற்ற பரமானுபூதி உண்டாகும்; வேறு உபாயக் கூட்டங்களாலும், ஹரியாலும், என்னாலும், வேறொருவராலும் உண்டாகாது.

46. ஸ்வதந்திரராகிய பரமசிவன் இந்த ஞானத்தை மனிதனுக்கு உண்டாகும்படி செய்தால், அது இவனை மலமற்ற பரமபதத்திற்கு போகும்படி செய்யும்; சிவன் அப்படி செய்யாவிட்டால் பந்தமடைவான்.

47. சூர்யனுடைய கிரணங்களால் இராக்காலத்து இருளானது சீக்கிரத்தில் நாசமடைகிறது; கோரமான பவகாரணமான உள் இருள் (அக்ஞானம்) சிவனாகிய சூரியனுடைய காந்தியால் நாசமடைகிறது; வேறொன்றும் இல்லை.

48. ஹரி, நான், இன்னுமுள்ள ஸுராஸுரர்கள் எல்லாம் பரமசிவ பிரபையால் தள்ளிவிடப்பட்டிருக்கிறோம் (அவ்வளவு அல்பம்); அகிலமான பகலிலுள்ள வேறு பிரகாசங்கள் சூரிய பிரபையால் மங்கியிருப்பதுபோல; பரமசிவன் ஸ்வயமே பிரகாசிக்கிறவன்.

49. சிவசரண ஸ்மரணத்தாலும் பூஜையாலும் தனது அக்ஞானத்திலிருந்து மனிதன் விடுபடுகிறான்; பிறப்பு இறப்பு நாசத்திற்கு காரணம் இந்த சரண ஸ்மரணத்தை தவிர வேறில்லை.

50. பரமசிவனே நமக்கு எல்லாத்துக்கும் காரணம்; நமக்கு எல்லாம் அவரே; நமக்கு ஸ்வரூப பூதரும், பிரமாண பூதரும் அவரே.

51. பரமசிவன் எல்லா ஆகமங்களிலுமிருப்பவர்; பரமானுபவத்தால் அடையக்கூடியவர்; பரமானுபூதிரூபர் அவரே, பரமானுபவம் கொடுப்பவரும் அவரே!

52. பரமசிவ ஸமுத்திரத்தில் நான், ஹரி, எல்லா தேவர்கள், மனிதன், பசு, மிருகமுதலியவை திரைகளாக விருக்கிறோம்; மலமற்ற புத்தியுடையவர்களாலும், வேத வேதாந்த நிஷ்டர்களாலும் ஹ்ருதய குகையிலிருக்கிற இவரை அறியமுடியும்.

53. கெட்ட புருஷர்கள் மாயாபலத்தால் ஹரியை சிவனுக்கு ஸமானமாகச் சொல்லுவார்கள்; சிலர் மோகத்தால் எனக்கு ஸமானமென்று சொல்லுவார்கள்; இந்த சிவஸம்பந்தமாயையைக் கடப்பது அறிது.

54. மினுமினுப்பூச்சி சண்ட சூரியனுக்கு ஸதிருசமானால் ஹரி சம்புவுக்கு ஸமானமாவர்; கிம்பாக விருக்ஷம் சந்தன மரத்திற்கு ஸமானமானால் நான் ஈசனுக்கு ஸமானமாவேன்; அக்ஞானம் ஞானத்திற்கு ஸமானமானால் மனிதர்கள் தேவனுக்குத் துல்யமாவார்கள்; நான் என்ன சொல்வேன்! ஆச்சரியம்! இந்த மோகத்தின் கொடுமை!

55. ஆதலால் சிவனாலேயே இந்த ஜகத்தெல்லாம் இருக்கிறது, வேறொன்றுமில்லை; சிவஸ்வபாவத்தால் எல்லாம் சிவம், அவருடைய பிரபாவத்தால் ஜகத் விசித்திரமாயிருக்கிறது.

56. தத்வதிருக் எல்லாம் அத்வயம் என்று எப்பொழுதும் பார்க்கிறான்; மோகமடைந்த புருஷன் கடம் சுவர் என்று கஷ்டங்களைப் பார்க்கிறான்.

57. இந்த பரமஞான ஸ்வபாவத்தால் ஜகத் பரம் என்று விளங்குகிறது; 'இதம்' இது ஜகத் என்று எல்லா ஜந்துக்களுக்கும் திரடமான தோற்றம்; விமல சித்தனுடைய இந்த ஞானம் பவத்தைத் தாண்டிவைக்கும்.

58. அவிவேகிகளான ஜந்துக்களின் அக்ஞான நிவிருத்தியும்பொருட்டு சந்தோக்ய ச்ருதியிலிருக்கிற இந்த விக்ஞானம் என்னுல் மகேசுவரன் கட்டளையால், கருணையுடன் சொல்லப்பட்டது.

---

## அத்தியாயம் 7.

---

### (வஸ்து ஸ்வரூப விசாரம்).

1. பிரஹ்மன் :—(இந்த அத்யாயத்தில் முண்டகோபநிஷத் அர்த்தம் சொல்லப்படுகிறது).

பரமாயும், ஸாக்ஷாத் நாசமற்றதும், நாசமுள்ள வஸ்துக்களுக்கெல்லாம் அதிஷ்டானமானதும் (ஆதாரம்), தனக்கு ஸமானமற்றதும், வாக்குக்கும் மனஸுக்கும் எட்டாததுமான (ஆத்ம) தத்வம் இருக்கிறது.

2. அதை நன்ருய் அறிந்தால் காணப்படுகிறதெல்லாம் அறிந்ததாக ஆகும்; அது எல்லாவற்றிற்கும் ஆத்மாவாயிருப்பதால் ஸ்வயமாக பேதமற்றது.

3–4. இரண்டு வித்யைகள் அறியதக்கன ; பராவும், அபராவும் ; அதில் அபரா வித்யை இந்த ரிக்வேதம், யஜுர்வேதம், ஸாம அதர்வண வேதங்கள், சிக்ஷை, கல்பம், வியாகரணம், நிருக்தம், சந்தஸ், ஜ்யோதிஷம், அநாத்ம விஷயங்களான அக்னிஹோத்ர முதலிய புத்திகளும், ஆகும்.

5. பரவித்யை, ஸாக்ஷாத் சம்பு பிரஸாதமடைந்த பிராக்ஞர்களால் திருடமாய் எதனுல் அந்த பரமான அக்ஷர வஸ்து அடையப்படுகிறதோ அதுவாகும்.

**6-7.** (அந்த அக்ஷரவஸ்து எது வென்றால்) எது பார்க்கக் கூடாததோ, கிரகிக்கக்கூடாததோ, காரணமற்றதோ, ரூபமற்றதோ, கண், காது, கால், கையற்றதோ, நித்யமாயும் விபுவாயும், ஸர்வவியாபியாயும், ஸூக்ஷ்மமாயும், நாசமற்றதாயும், பூதங்களுக்கெல்லாம் காரண பூதமாயுமிருக்கிறதோ, எதை தீமான்கள் ஸ்வாத்மரூபமாக எங்கும் பார்க்கிறார்களோ, அது தான் அந்த அக்ஷரவஸ்து.

**8-9.** எப்படி சிலந்திபூச்சி சிருஷ்டித்து, சுருக்கிக்கொள்ளுகிறதோ, பூமியில் ஓஷதிகள் எப்படி உண்டாகின்றனவோ, ஸத்தாயிருக்கிற புருஷனிடமிருந்து மயிர் லோமங்கள் எப்படி உண்டாகின்றனவோ, அப்படி இந்த அக்ஷர வஸ்துவிலிருந்து இந்த விச்வம் உண்டாகிறது; அதுயெல்லாம் ஸ்வப்பனத்திற்கு ஸதிருசம்.

**10.** பிரஹ்மம் தபஸால் (ஸிருஷ்டி ஆலோசனை ஞானத்தால்) கொஞ்சம் விருத்தியாகிறது (நிர்விகல்பமாயிருந்த ஸத் கொஞ்சம் கல்பனையோடு சேர்ந்ததாய் ஆகிறது); அதிலிருந்து அன்னமும் (அவ்யாகிருதம், யோக்ய பிரபஞ்ச நிதானம்), அன்னத்திலிருந்து பிராணனும், மனஸ்,' ஸத்யம் (பூதங்கள்) லோகங்கள், கர்மங்கள், அமிருதம் இவைகளெல்லாம் கிரமமாக உத்பத்தியாகின்றன.

**11-12.** எவர் ஸர்வக்ஞரோ, ஸர்வவித்தோ, எவருக்கு தபஸ் ஞானமயமோ, அவரிடமிருந்து நாம ரூபம் அன்னத்தை முன்னிட்டுக்கொண்டு ஸத்யம் போல் ஹிரண்யகர்ப்பர் உண்டானார்; (ஆனால்) அது ஸ்வப்ன பிரபஞ்சத்திற்கு ஸமானமே.

**13-14.** அந்த அக்ஷரவஸ்து ஸத்யமானது அதை ஒருவன் யறிந்தால் முக்தியடைவான்; கர்மத்தால் ஸம்ஸாரத்தை நாசஞ் செய்யும் அதனடைவு இல்லை.

ஹே! தேவர்களே! இந்த யக்ஞங்களெல்லாம் அதிருடங்களும், தெப்பக்கட்டைகளுமானவைகள்.; இவைகளால் பரமான

ச்ரேயஸ் (மோக்ஷம்) உண்டாகுமென்று நினைக்கிற ஜனங்கள் மூடர்கள் ; எப்பொழுதும் மிருத்யுவையும் ஜரையையும் அடைவார்கள்.

**15–18.** இவர்கள் கர்மநிஷ்டர்கள், தாங்கள் புத்திசாலிகளும் பண்டிதர்களென்றும் நினைக்கிறமூடர்கள்; வித்வான்களன்று ; அவர்களுக்கு பரகதி கிட்டாது; குருடனால் வழிகாட்டப்பட்ட குருடனைப்போலிருக்கிறார்கள் ; இந்த கர்மத்தில் பிரியமுள்ள ஜனங்கள் அக்ஞானகிணற்றில் விழுகிறவர்களே ; கர்மநிஷ்டர்களான அவர்கள் மோகத்தால் கிருதார்த்தர்களென்று எண்ணுகிறார்கள்; கர்மம் நாசமடைந்தபிறகு விழுகிறவர்களே ஞானமில்லாமல் அவர்களுக்கு உத்தமகைவல்யம் கிடையாது.

**19.** இஷ்டாபூர்த்தம் உயர்ந்தது என்று நினைக்கிறமனிதர்களும் மூடர்களே ; அவர்களுக்கு மோக்ஷம் இல்லை யென்பதில் ஸந்தேகமில்லை.

**20.** அனேககோடி ஜன்மங்களில் ஸித்திபெற்றும் ச்ரௌத ஸ்மார்த்த கர்மங்கள் செய்துகொண்டிருக்கிறவர்கள் ஜகத் அநித்யம் என்று அறிந்து வைராக்யம் அடைகிறார்கள்.

**21–22.** ஞானத்தால் ஸம்ஸார நாசம், கர்மத்தால் இல்லையென்று அறிந்து, மறுபடியும் ச்ரோத்திரியனும் பிரஹ்மநிஷ்டனுமான குருவை பிரியத்துடன் அடையவேண்டும்; குரு அவனுக்கு பரவித்யையைக் கொடுக்கிறார்.

**23.** நன்றாக எரிகிற அக்னியினின்றும் எப்படி நெருப்புப் பொறிகள் உண்டாகி லயமடைகின்றனவோ அப்படியே சிவன் என்ற நாசமற்றவஸ்துவில் பதார்த்தங்களெல்லாம் உண்டாகி லயமடைகின்றன.

**24.** திவ்யமான, உருவற்ற புருஷன் உள்ளும் வெளியுமிருக்கிறான் ; உத்பத்தியற்றவன்; பிராணனற்றவன் ; மனதற்றவன் ; மாயைக்கும் ஜீவனுக்கும் மேல்பட்டவன்.

**25.** இவரிடமிருந்து பிராணன், மனஸ், இந்திரியங்கள், ஆகாசம், வாயு, அக்னி, அப்பு, எல்லாம் தாங்கும் பூமி, எல்லாம் உண்டாகின்றன.

**26.** இந்த ஸத்யரான சங்கரருக்கு சிரஸ் அக்னி (தேவலோகம்), சந்திரனும் சூர்யனும் நேத்திரங்கள், திக்குகள் காதுகள், வேதங்கள், வாக்கு, வாயு பிராணன், விச்வம் ஹிருதயம், பாகம், பூமி.

**27.** எவருக்கு (தேவலோகமாகிய) அக்னியை உண்டாக்க சூரியன் ஸமித்தாக விருந்தாரோ, அந்த அக்னியினின்றும் ஸோமனும், அதிலிருந்து மழையும், அதிலிருந்து பூமியிலிருக்கிற தான்யம் முதலியவைகளும் உண்டாகி மனிதன் ஸ்திரீயிடம் வீரியத்தை செலுத்தி (அவளிடமிருந்து) அநேகவிதமாக பிரஜைகள் உண்டாக்கப்படுகிறார்கள். (பஞ்சாக்னி வித்யை சொல்லப்படுகிறது).

**28.** அந்த புருஷனிடமிருந்து ரிக், யஜுஸ், ஸாமம் விருதங்கள், யக்ஞங்கள், கிருதுக்கள் (யாகங்கள்) தக்ஷிணை ஸம்வத்ஸரம் (காலம்) எஜமானன், சூர்யனும் சந்திரனும் ஸஞ்சரிக்கிற லோகங்கள் எல்லாம் உண்டாயின.

**29.** அவரிடமிருந்து அநேக தேவர்கள், ஸாத்யர்கள், மனிதன், பசு, பக்ஷிகள், பிராண அபானங்கள், நெல், அரிசி, தபஸ், சிரத்தை, ஸத்யம், பிரஹ்மசரியம், விதிகள் எல்லாம் உண்டாயின.

**30.** அவரிடமிருந்து ஏழுபிராணங்களும், (காதுமுதலிய ஏழுதுவாரங்களின் வழியாகவருகிற) ஏழுதேஜஸ்களும், ஏழு ஹோமங்களும் (விஷயஞானங்கள்) ஏழு லோகங்களும் (இந்திரிய ஸ்தானங்கள்) இவைகளெல்லாம் சீக்கிரமாக முன்னிருந்ததுபோல ஸ்வப்னத்திற்கு ஸமானமாக உண்டாயின.

**31.** அவரிடமிருந்து ஸமுத்திரம், பர்வதம், நதி, எல்லா செடிகள், ரசங்களும் உண்டாயின;

இந்த புருஷன் எல்லாவற்றிற்கும் ஆத்மா, ஸர்வஸாக்ஷி, பரமாத்மா, நித்யானந்தன், புராணன், பூர்ணனுயிருக்கிறார்.

32. இவைகளெல்லாம் புருஷனே, வேறொன்றுமில்லை அவரைத்தவிர ஸத்யமாகத் தோன்றுகிறதெல்லாம் வேறல்ல; இதுதான் என்னுடையதும், விஷ்ணு, சிவனுடையதுமான தீர்மானம்; இதில் ஸந்தேகமில்லை; ச்ருதியின் தீர்மானமும் யுக்தமன்றோ!.

33. ஐயோ! இந்த மனிதர்கள் பரமசிவஞானமில்லாமல் விஷயமாயையால் மரணம் துக்கம் முதலிய ஸமுத்திரத்தில் விழுகிறார்கள்; பரசிவவித்யாபலத்தால் ஜனனக்கடலை தாண்டவேண்டும்; இந்த சிவஞானம் சிவபாத ஸேவைபலத்தால் உண்டாகவேண்டும்.

34. புத்தி குஹையிலிருக்கிற இந்த அக்ஷரத்தை நரன் அறிந்தால் அவித்யா முடிச்சையறுத்துக்கொண்டு சிவனையடைவான்.

35. இதுதான் அக்ஷரமான பிரஹ்மம்; இவரே பிராணன், வாக், மனஸ், அமிருதம், ஸத்யம், என்று புத்திமான்களால் அறியத்தக்கது.

36. தனுசு பிரணவம், ஆத்மா அம்பு, பிரஹ்மம் லக்ஷ்யம் (குறிப்பு) என்று சொல்லப்படுகிறது; ஏகாக்ரசித்தமுள்ள புருஷனுல் அந்தக்குறிப்பு அறியப்படவேண்டியது; பிறகு சரம்போல் லக்ஷ்ய மயமாகிவிடவேண்டியது.

37. இவ்விடத்தில் குறிப்பு நாலுபக்கத்திலும் வியாபித்திருக்கிறது; சரமும் நான்குபக்கத்திலும் பரவியிருக்கிறது; குறியை பிளக்கிறவனும் எங்குமிருப்பவன்; பிளக்கப்பட்ட லக்ஷ்யமும் அப்படியே என்பதில் ஸந்தேகமில்லை.

38. ஆத்மாவை கீழ்அரணிக்கட்டையாகச் செய்து, பிரணவத்தை மேல் அரணியாக வைத்து, தியானமாகிற கடைதல் செய்.

வதால் மறைந்திருக்கிற அக்னியைப்போல இந்த தேவனைப் பார்ப்பான்.

39. எவரிடத்தில் தேவலோகம், அந்தரிக்ஷம், பூமி, மனஸ், பிராணன் இவையெல்லாம் கோற்கப்பட்டிருக்கின்றனவோ அவர் ஒருவரையே பிராக்ஞன் அறியவேண்டியது.

40. எப்பொழுதும் பிரஹ்ம விஷயமாகவே வார்த்தை சொல்லவேண்டும், மற்றவார்த்தைகளை விட்டுவிடவேண்டும், இது தான் மோக்ஷத்திற்கு ஸேது (கரை, எல்லை).

41. ஸர்வக்ஞரும், ஸர்வவித்தும், எவருக்கு இந்த பூமி மகிமையோ அவருமான சிவன் திவ்யமான ஹிருதய புண்டரீக ஆகாசத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறார்.

42. எல்லோருடைய ஹிருதய கமலத்திற்குள் மனோமயனையும் பிராணனையும் சரீரத்தையும் நடத்திக்கொண்டும் இருக்கிறான். ஸ்வபாவத்தில் ஆனந்த சரீரமுடைய இவரை அறிவதால் புத்திமான்கள் விடுதலையடைகிறார்கள்.

43. அந்தப் பராபரனைப் பார்த்தவுடன் மனிதனுடைய ஹிருதய முடிச்சுகள் அறுபட்டுப்போகின்றன, ஸந்தேகங்கள் நீங்குகின்றன, கர்மங்களெல்லாம் நாசமடைகின்றன.

44. ஸ்வர்ணமயமான உயர்ந்த உறையில் கலங்கமற்ற பிரஹ்மம் ஜ்யோதிகளுக்கெல்லாம் ஜ்யோதியாக விருக்கிறது, அதை ஆத்ம வித்துக்கள் அறிவார்கள்.

45. இந்த சிதாத்மக மாயிருக்கிறதும் ஸ்வயம் பிரகாசமுள்ள சங்கரரிடத்தில் ஸூர்யன், சந்திரன், நக்ஷத்திரங்கள், மின்னல், நெருப்பு இவைகளெல்லாம் பிரகாசிக்கிறதில்லை.

46. ஸ்வபாவமாக பிரகாசிக்கிற அவனுக்குப்பிறகு எல்லாம் பிரகாசிக்கின்றன; ஆதலால் அவருடைய பிரகாசத்தால் இது எல்லாம் விளங்குகிறது.

47. அவரிடத்தில் சூர்ய சந்திரன் பிரகாசிக்கிறதில்லை; காற்று வீசுகிறதில்லை; எல்லா தேவர்களும் செல்லுகிறதில்லை;

எப்பொழுதும் தானே இருப்பாகவுள்ள களங்கமற்ற தேவன் தானே பிரகாசிக்கிறான்.

48. இந்த அமிருதமான பிரஹ்மமே முன்னே, பின்னேயும், வலது பக்கத்திலும் இடது பக்கத்திலும் இருக்கிறது.

49. இந்த சரீரத்தில் ஜீவன், ஈசன் என்று சொல்லப்படும் இரண்டு பக்ஷிகள் கூடியிருக்கின்றன; அவைகளுள் ஜீவன் கர்ம பலத்தை அனுபவிக்கிறான்; மகேச்வரர் அனுபவிக்கிறதில்லை.

50. அந்த மகேச்வரன் கர்மபலத்தை புஜிக்காமலே ஸாக்ஷியாக விளங்குகிறான்; அவர்களுடைய பேதம் மாயையால் கற்பிக்கப்பட்டது.

51. எப்படி கடாகாச மகாகாச பேதத்தால் ஆகாசம் கற்பிக்கப்பட்டிருக்கிறதோ, அப்படியே சிவனும் பரனென்றும், ஜீவனென்றும் கற்பிக்கப்பட்டிருக்கிறார்.

52. யதார்த்தத்தில் சிவனே ஸாக்ஷாத் சைதன்யம்; அந்த சித்தே எப்பொழுதும் ஜீவனுமாம்; சித் சித்ரூபத்தால் பேதமாகாது; பேதமானால் சித்திற்கு சித்துத்தன்மை போய்விடும்.

53. சித் ஜடரூபத்தால் பேதப்பட்டால் அந்த பேதம் ஜடத்திலேயே; சித் எப்பொழுதும் ஒரே ரூபமுள்ளதன்றோ!

54. இப்படி தர்க்கத்தாலும் பிரமாணத்தாலும் சித்திற்கு ஒரே தன்மை நிச்சயிக்கப்பட்டிருந்தாலும், பாபிகளுக்கு, விபரீதமான புத்தியுண்டாகிறது.

55-56. சுத்தமனதுடைய மகாத்மாவுக்கு ருத்ர பிரஸாதத்தால் இந்த சித் ஏகத்வஞானம் உண்டாகிறது; இவ்விதஞானத்தால் சோக மோகமற்றவனாகிறான்; கேவலம் பரமானந்த சிவனையடைகிறான்.

57. சிவஸ்தானமாகிய இந்த சரீரத்திலிருந்தாலும், தன் மாயையால் துக்க ஸமுத்திரத்தில் மூழ்கி மோகத்துடன் சோகப்படுகிறான்.

**58–60.** தன்னைக்காட்டிலும் வேருகத்தோன்றுகிற ஈசனை தானகவே நினைத்தும், ஸர்வலோக அதிஷ்டானமான ஸத்ய சித்கனமே நான் என்று நிச்சயம் செய்தவன் சோகம் நீங்கினவனுவான். இந்த சின்மாத்திர ஸாக்ஷியின் மகிமையை எப்பொழுது அறிகிருனே அப்பொழுது சோகமற்றவனுகிருன்.

**61–64.** ஹிரண்யகர்ப்பருக்கு காரணராயும், எப்பொழுதும் பூர்ணராயும், ஸ்வர்ண நிறமுள்ளவரும், பார்க்காமலே பார்த்துக்கொண்டிருக்கிறவரும், கர்த்தாவாக விளங்குகிறவருமான மகேச்வரனை அநேககோடி கல்பங்களில் ஸம்பாதிக்கப்பட்ட புண்யராசிகளாலும், தர்க்கத்தாலும், ச்ருதிபிரமாணத்தாலும், பரமேச்வர பிரஸாதத்தாலும் எப்பொழுது வித்வான் சிரத்தையுடன் பார்க்கிருனே அப்பொழுது புண்யபாபங்களை உதறி, ஸகல காரணங்களினின்றும் பற்றுதலற்று, எல்லாரூபங்களாலும் பரமாத்வைத லக்ஷணமுடைய ஈசுவர ஸாம்யத்தை யடைகிருன்; இதில் ஸந்தேகப்படக்கூடாது.

**65.** சிவனுக்கும் ஜீவனுக்கும் சின்மாத்திரமே எப்பொழுதுமுள்ள ரூபம்; இப்படியிருக்க பேதமில்லாத சித்மாத்திரத்தில் ஸாம்யம் எப்படி பொருந்தும்?

**66.** உபாதியுடைய ரூபத்தில் அவரிருவர்களுக்கும் ஸாம்யம் என்ருல், அப்பொழுதும் ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் ஸமத்தன்மை பொருந்ாது.

**67.** கடாகாசத்திற்கு மகாகாசத்தின் தன்மை எப்படி ஒருவிதத்தாலும் பொருந்தாதோ அப்படி ஜீவனுக்கும் சிவனுக்கும் ஸாம்யம் ஏற்படாது.

**68.** அப்படி ஸாம்யம் ஏற்பட்டாலும், அது கர்மத்தினுலா அல்லது ஞானத்தினுலா? வேறுவிதமாகவிருக்காது.

**69.** கர்மத்தால் எனில் விநாசம் ஏற்படும்; கர்மஸாத்யம் நச்வரமன்ருே! வித்யையால் என்ருல் ஸாம்யம் முந்தியே இருக்கிறது.

70. முந்தியே ஸித்தித்துள்ளதை ஞானம் ஞாபகப்படுத்துமேதவிர இல்லாததை ஒருக்காலும் உத்பத்திசெய்யாது.

71. இப்படியிருப்பதால் சிவஜீவர்களுக்கு, ஸர்வ ஆத்மத் தன்மையால், முந்தியே ஸாம்யம் இருக்கவேயிருக்கிறது.

72. முந்தியே ஏகத்வமும், (ஸத்யம் ஞான முதலிய) லக்ஷண ஏகத்வமும் இருக்கிறது. இவ்விதம் சிவன் பேதமற்றிருந்தாலும் அவித்யையால் பேதமுள்ளவன்போல் இருக்கிறுர்.

73. ஞானத்தால் அந்த அவித்யை நசிப்பதால் ஸ்வ ஸாம்யத்தை யடைகிறுன்; வேறு விதமாயன்று; ஆதலால் ஜீவ சிவனுடைய ஸாம்யம் ஸாக்ஷாத் ஐக்கியமேதவிர வெறென்றுமன்று.

74. இவ்விதமாக ஜீவன் திருடமாக தனது ரூபமான சிவனைப்பார்த்தால் தனதாத்மாவிலேயே எப்பொழுதும் பிரியத்தையும் கிரீடையையும் மற்றுமுள்ளவைகளையும் (தியான பூஜை) செய்கிறுன்.

75–76. சிவனும் ஸத்யஸுகமாயுமிருக்கிற தன்னிடமே வெறி சேஷ்டைகளெல்லாம் இருப்பதாக அறிகிறுன்; எல்லாம் ஆத்மாவாகவே விளங்கும். எல்லாம் ஆத்மாவால் சிவன் என்று எப்பொழுது அறிகிறுனே அப்பொழுது அவன் பயமற்றவன்; அவன் முக்தனுகிறுன் முக்தன் என்றும் சொல்லமுடியாது, பத்தனுயிருந்தாலன்றோ முக்தனுவான்!

77. இந்த ரூபமான உயர்ந்த ஞானம் ஸத்யத்தாலும், தபஸாலும், பிரஹ்மசர்யாதி தர்மங்களாலும், வேதோக்தவழியாலும் அடையத்தகுந்தது.

78. சரீரத்துக்குள் தன்னுடையதும், ஈசுவரஸம்பந்தமான ஸ்வயம்பிரகாச ரூபத்தை பாபமற்றவர்களே பார்க்கிறுர்கள், மற்ற மாயையால் மூடப்பட்ட ஜனங்கள் பார்க்கமாட்டார்கள்.

79. இந்த ஞானமுள்ள சிரேஷ்டமான யோகிக்கு ஓரிடமும் போகுதல் இல்லை, அவன் பூர்ண ரூபனுயிருப்பதால்.

80. ஏகமாயும் ஸம்பூர்ணமாயுமிருக்கிற ஆகாசம் ஓரிடமும் போகிறதில்லை; அதுபோல ஆத்மஞானி ஓரிடமும் போகிறதில்லை.

81. இதை கண்ணால் கிரகிக்கமுடியாது, வாக்காலும் வேறு இந்திரியங்களாலும், தபஸாலும், கர்மத்தாலும் அறியமுடியாது; சுத்த அந்தக்கரணமுடையவன் ஞான பிரஸாதத்தால் இந்த நிஷ் கலமான ஈசனுடைய ரூபத்தைப் பார்க்கிறான்.

82. பரமேச்வரரான ஸாம்பமூர்த்தியின் தியானத்தால் இந்த நிஷ்கலஞானம் உண்டாகிறது, வேறு காரணத்தாலன்று.

83. எவரிடத்தில் ஐந்துவிதமாக பிராணன் வைக்கப்பட் டிருக்கிறதோ அந்த ஸர்வாச்ரயமான இந்த ஆத்மா ஸூக்ஷ்மமா யிருந்தாலும் கூர்மையுள்ள புத்தியால் அறியப்படவேண்டும்.

84. சுத்தமுள்ள புத்தியுடையவன் தனது சித்தத்தால் எந்த எந்த லோகத்தை இச்சிக்கிறானோ, எப்பொழுதும் எவை களை இச்சிக்கிறானோ அவை முழுவதையும் ஜயிக்கிறான்.

85. ஆதலால் ஈசுவரனும் பவதாரகனுமான ஆத்மஞானி யை ஐச்வரியத்தை விரும்புகிறவன் சரீரத்தாலும் பொருளாலும் அர்ச்சிக்கவேண்டியது.

86. இந்த ஆத்மா படிப்பினாலாவது, புத்தியினாலாவது, வெகுசாக கேட்பதினாலாவது அடையமுடியாது; இவன் எவ னைக் கோருகிறானோ அவனால் (ஆத்மாவால்) அடையத்தக்கவன்; அவனுக்கு இந்த ஆத்மா தன் ரூபத்தை விளக்கிக் காட்டுகிறார்.

87. இந்த ஆத்மா பலமற்றவனால் அடையமுடியாதது; சோம்பலுள்ளவனாலும் அடைய முடியாதது; வேறு குறிப்புள்ள தபஸாலும் முடியாதது; இவைகளால் யத்னம் செய்கிற புத்தி மானுடைய இந்த ஆத்மா தேஜோரூபமான பிரஹ்மத்தை அடை கிறது.

88. இந்த ஆத்மாவை நல்ல ஞானத்தாலடைந்து, ரிஷிகள் அந்த ஞானத்தால் திருப்தியடைந்து, நிச்சயமுள்ளவர்களாயும்,

சோகமற்றவர்களாயும், சாந்தமுள்ளவர்களாயும் ஆகி, எங்கு முள்ளதை எல்லாப் பிரகாரத்தாலும் அடைந்து, விவேகிகளாக விருந்துகொண்டு, இந்த தீரர்கள் ஸமாகித மனதுடன் எல்லாமா யிருக்கும் பிரஹ்மத்தை பிரவேசிக்கிறார்கள்.

89. வேதாந்த ஞானத்தால் நிச்சயம் செய்யப்பட்ட பொரு ளுள்ளவர்களும், ஸன்யாஸ யோகங்களால் யத்தனித்து சுத்த மான மனதுடையவர்களுமானவர்கள் எல்லோரும் அக்ஞான நாசகாலத்தில் பராமிருதமான ஞானத்தால் பிரஹ்ம லோகத்தில் (பிரஹ்மத்தில்) ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுபடுகிறார்கள்.

90. (வித்வானுடைய முக்திஸமயத்தில்) பிராணன் முதலிய பதினைந்து கலைகளும் தங்கள் பிரதிஷ்டையை (காரணத்தை) அடைகின்றன (அதில் லீனமாகின்றன); எல்லா (இந்திரியங்க ளுக்கு அனுக்கிரகம் செய்கிற) தேவர்களும் தங்கள் தங்கள் பிரதி தேவதைகளை யடைகின்றன; கர்மங்களும் (அநாரப்த கர்மங்களும்) விக்ஞானமயனும் (புத்தி உபாதி விசிஷ்ட கர்த்தாத் மாவும்) எல்லாம் நாசமற்ற பரத்தினிடத்தில் ஒன்றாக ஆகின்றன.

91. எப்படி நதிகள் பிரவாகித்துக்கொண்டு நாம ரூபங் களைவிட்டு ஸமுத்திரத்தில் அற்றுப்போகின்றனவோ (மறைந்து போகின்றனவோ) அப்படி வித்வான் நாம ரூபமற்று பராத்பர மான பிரஹ்ம புருஷனை யடைகிறான்.

92. அந்த பரபிரஹ்மத்தை யறிந்தால், அந்த ஞானத்தால் பிரஹ்மமாகவே ஆகிறான்; ஸம்சயமில்லை.

93. இப்படி நிச்சயமாய் ஸ்வானுபவத்துடன் அறிகிற வித் வானுடைய குலத்தில் பிரஹ்மத்தை யறியாதவன் இருக்கமாட் டான்.

94. சோகத்தையும், பாபத்தையும் தாண்டுகிறான்; அவனு டைய ஹிருதயத்திலுள்ள அவித்யா வாஸனா முடிச்சுகள் நாச மடைகின்றன; அந்த பிராக்ஞன் அமிருதனாகிறான் இது ஸத்யம்.

95. சோகமோகக் கூட்டத்தை பேதிக்கிற சோபனமான இதெல்லாம் என்னால் சொல்லப்பட்டது; வேதப் பிரமாணத்தை

கைக்கொண்டவனுக்கு ஸத்யசுகபோதவஸ்துவை கொடுக்கக் கூடிய இந்த ஞானம் உடனே விளங்கும்.

---

## அத்தியாயம் 8.

---

### (தத்வ வேதன விதி).

1. பிரஹ்மன் :—(இந்த அத்யாயத்தில் கைவல்யோபநிஷத்தின் அர்த்தம் சொல்லப்படுகிறது).

சிவன் ருத்ரன் முதலிய பெயருடைய ஸாக்ஷாத் பரமான தத்வம் ஒன்றிருக்கிறது ; அது அவசியமாய் புத்திமான்களால் வெகு சிரமத்துடன் அறியத்தகுந்தது.

2. அந்த வித்யை யதிகளால் ஸேவிக்கப்படவேண்டியது ; அது ரஹஸ்யமானது; வெகு சோபனமானது, சீக்கிரத்தில் பாபத்தை போக்கடிப்பது, மனிதர்களுக்கு பரபிரஹ்மத்தை யளிப்பது.

3. இந்த பராவித்யை மிகுந்த சிரத்தையாலும், சிவபக்தியாலும், தியானத்தாலும், யோகத்தாலும் அடையத்தக்கது, கர்மத்தால் அன்று ; பிரஜையாலும், பொருளாலும் அடைய முடியாது ; இவைகளின் தியாகத்தால் முடியும்.

4–5. (பரவித்யை உத்பத்தியின் அஸாதாரண காரணம் சொல்லப்படுகிறது) எவர்கள் வேதாந்த மகா வாக்ய சிரணவத்தால் உண்டான வித்யையால் நிச்சயிக்கப்பட்ட அர்த்தமுடையவர்களோ அந்த யதிகள் சுத்த மனதினல், சீக்கிரத்தில் இந்த பிரஹ்மத்தை யறியக்கூடிய சரீரத்திலேயே, அக்ஞான நாசகாலத்தில் பரமான ஞானத்தால் எல்லோரும் மோக்ஷமடைகிறார்கள்.

6–13. ஆதலால் வித்யையை யடையும்பொருட்டு புத்திசாலியான முமுக்ஷு ஏகாந்த ஸ்தலத்தை கைக்கொண்டு, ஸுகாஸனனாயும், மகாசீலனாகவும் கழுத்து சிரஸு தேகம் இவைகளை நேரே ஸமமாக நிறுத்தி, பஸ்மம் பூசிக்கொண்டு, எல்லா இந்திரி

பங்களையும் நிரோதம் செய்து தன் குருவை பக்தியுடன் நமஸ் கரித்து, சுத்தமானதும், நிர்மலமானதுமான ஹிருதய கமலத்தை சிந்தித்து, அதன் மத்தியில் நித்தியம் சோம்பலன்னியில் நிர்மல மான ஈச்வரனை தியானிக்கவேண்டும்; அந்த ஈசுவரன் அனந்தன், சுத்தன், நாசமற்றவன், அவ்யக்தன், சிந்திக்கக் கூடாதவன், சிவம், பிரசாதம், அமிருதன், வேதயோனி, ஆதிமத்யாந்தமற்ற வன், ஏகன், விபு, ரூபமற்றவன், ஸத் சித் ஆநந்தன், அத்புதன், பரமேச்வரன், உமாஸஹாயன், 'ஓம்' என்றதற்கு பொருள் பிரபு, ஸாக்ஷி, முக்கண்ணன், நீலகண்டன், பிரசாந்தமாயிருப்ப வன்.

இவ்விதம் தியானமுள்ளவன் ஸாக்ஷாத்முனி; இந்த ஆத்ம வித்யையால் பூதயோனியும், எல்லாத்துக்கும் ஸாக்ஷியும், மாயை க்கு மேல்பட்டதுமான பரவஸ்துவை யடைகிறான் என்பதில் ஸந்தேகமில்லை. இது ஸத்யம்.

**14–16.** இவ்விதம் தியானிக்கப்பட்டவர் ஸம்சார மோச கரான சிவன் என்று அறியவேண்டும்; அவர் பிரஹ்மா, சிவன், இந்திரன், அக்ஷரன், பரமன், ஸ்வராட், அவரே விஷ்ணு, பிராணன், காலம், அக்னி, சந்திரன், அவரே இருந்தது இருக்கப் போகிறதெல்லாம், அவரே வித்யை, அவித்யை அவரைத்தவிர வேறொன்றும் சிறிதுமில்லை; அவரை அறிந்தால் மிருத்யுவை தாண்டுவான் மோக்ஷத்திற்கு வேறுவழியில்லை.

**17.** எல்லா பூதங்களிலும் காரணத்தன்மையுடன் இருக் கும் ஆத்மாவையும், ஆத்மாவில் கார்யத்தன்மையோடு கல்பிக்கப் பட்ட எல்லா பூதங்களையும் எவன் அறிகிறானோ அவன் பரமான பிரஹ்மத்தை அடைகிறான், வேறுகாரணத்தாலன்று.

**18.** ஆத்மாவை (கீழ்) அரணியாகவும், பிரணவத்தை மேல் அரணியாகவும் வைத்து தியானமாகிய கடைவதினால் பண்டிதன் பாபத்தை எரிக்கிறான்.

**19–21.** இந்த பகவான் ஈசன் ஆத்மபூதமான மாயையால் மோகமடைந்தவன் போலிருந்துகொண்டு தன்னுடையஸ்வதந்தர

பலத்தால் இந்த சரீரத்தை அடைந்து மறுபடியும் எல்லாவற்றை யும் செய்கிறான்.

தனது மாயையால் ஜாகிரத் என்ற இந்த அவஸ்தையை கல் பித்துக்கொண்டு, ராஜபுத்திரர் முதலியவர்கள்போல கேவலம் அதில் கிரீடையாக இந்த ஹரன் அன்ன பானங்களாலும் ஸ்திரீ களாலும் திருப்தியடைகிறான்.

22. அப்படியே ஸ்வப்ன காலத்தில் ஜீவத்தன்மையோடு விளங்குகிற சம்பு தன்னாலேயே நிர்மாணிக்கப்பட்ட ஸுகதுக் கங்களான போகங்களை யனுபவிக்கிறான்.

23. எல்லாம் லீனமாயிருக்கும் ஸுஷுப்தி காலத்தில், அக்ஞானத்தால் சூழப்பட்டு, திருச்யங்களற்றவனாய் ஸ்வரூப மகானந்தத்தை புஜிக்கிறான்.

24. மறுபடியும் பூர்வ கர்மயோகத்தால், ஜீவத்தன்மை யோடு பிரகாசித்தவனாய், ஜாகிரத்தசையையாவது, ஸ்வப்னத்தை யாவது அடைகிறான்.

25. இந்த மூன்று புரங்களும் (ஸ்தானங்களும்) இந்த புரு ஷனுடைய போகத்திற்காகவே ஏற்பட்டிருக்கின்றன; இவ ருடைய போகம் எப்பொழுதும் கிரீடையே ஒழிய துக்கத்தின் பொருட்டு ஒரு பொழுதும் ஏற்படாது.

26. விச்வத்திற்கு மேல்பட்டவனும், மகாநந்தனும், ஸ்வ தந்திரனும், உபதிரமற்றவனும், எல்லா தோஷங்களால் ஸம்பந்தப் படாதவனுமான, இந்த ஹரன் எப்படி துக்கமுள்ளவனாவான்.

27. கர்மத்தை புஜிக்கிற ஜீவன் சிவனுக்கு வேறு அன்று; பேதமில்லாததால்; சித்திற்கு சேத்யமான கர்ம பலம் (மித்யை) யானதால் அர்ஹமன்று.

28. ஆதலால் ஸர்வஜகத் ஸாக்ஷியான சித்ரூப பரமேசு வரன் கிரீடையாக இந்த போகத்தையடைய அர்ஹனாயிருக்கிறார்.

**29.** இந்த மூன்று ஸ்தானங்களும் சம்புவுக்கு ஒருக்காலும் துக்கத்திற்காக ஏற்படா; கிரீடா உத்யானவனமாக விளங்குகிறது; மகேச்வரன் விசாரணைக்கு இடமன்று.

**30.** இந்த சம்புவின் மூன்று ஸ்தானங்களும் பேதமாக காணப்படவில்லை; சம்புவே அப்படி விளங்குகிறார், பரமேச்வரரைவிட வேறு பிரகாசிக்கவில்லை.

**31.** எவன் ஜாகிரத் ஸ்வப்ன ஸுஷுப்தி என்ற அவஸ்தாரூபமாக விளங்குகிறாரோ அவர் கிரமமாக விச்வ தைஜஸ பிராக்ஞ என்ற பெயருடையவர்.

**32.** ஜாகிரத் அவஸ்தா ஸாக்ஷியான விச்வன் ஸ்தூலத்தை புஜிக்கிறவன்; ஸ்வப்னவஸ்தா ஸாக்ஷியான தைஜஸன் விவிக்தமான (ஸூக்ஷ்மமான) விஷயங்களை புஜிக்கிறான்; பிராக்ஞன் ஆனந்தத்தை புஜிக்கிறான்; சாக்ஷி கேவலம் ஸுகலக்ஷணமுடையவன்.

**33.** இந்த மூன்று ஸ்தானங்களில் போக்யத்தையும், சொல்லப்பட்ட போக்தாவையும், இந்த இரண்டையும் எவன் பிரஹ்மமென்று அறிகிறானோ அவன் புஜித்தாலும் இவைகளுடன் ஸம்பந்தப்படுகிறதில்லை.

**34.** ஏகத்தன்மையை அறிகிறவன் ஆயிரம் அச்வமேதம் செய்தாலும் நூறு பிரஹ்மஹத்திசெய்தாலும் பற்றுதலடையான்.

**35.** ஜீவரூபன்போல் இருந்துகொண்டு இந்த மூன்று ஸ்தானங்களிலும் கிரீடைசெய்கிறவன் ஜீவனல்ல, எப்பொழுதும் சம்பு, இது ஸத்யம், ஸந்தேகமில்லை.

**36–37.** அவரிடமிருந்து ஸத்யம்போல் எல்லாம் விசித்திரமாக உண்டாயிற்று; அஸத்தியங்களுக்கு ஸாக்ஷியானபடியால் அவர் ஸத்யம்; ஸாக்ஷித்தன்மை யிருப்பதால் சித்; பிரேமைக்கு இருப்பிடமானதால் ஸுகம்; பேதாபாவத்தால் அத்வைதம்; அவரிடமே இந்த மூன்று ஸ்தானங்களும் லயமடைகின்றன.

38. ஆதலால் இவர் ஜீவனன்று; ஜீவனைப்போல விளங்குகின்ற அவர் கேவலம் பிரஹ்மமே; அக்ஞானத்தால் ஜீவரூபமாய் விளங்குகிறார், இயற்கையாக இல்லை.

39. இந்த பிரஹ்மத்தினிடமிருந்து பிராணன், மனஸ், ஸர்வேந்திரியங்கள், ஆகாசம், வாயு, அக்னி, ஜலம், பூமி எல்லாம் உண்டாயின.

40. 'தத்' என்ற ஸர்வாத்மாவாயும், மகத்தான விச்வத்திற்கு இருப்பிடமாயும், அதிஸூக்ஷ்மமாயும், நித்யமாயுமுள்ள பரம் பிரஹ்மம், 'த்வம்' சப்தத்தின் அர்த்தம்.

41. எது 'த்வம்' சப்தத்தின் லக்ஷ்யார்த்தமோ அது 'தத்' சப்தார்த்தமே. 'தத்' 'த்வம்' சப்தங்கள் ஸ்வத ஸித்தமான சின்மாத்திரத்தில் முடிவடைகின்றன.

42. இந்த இரண்டு பதங்களின் லக்ஷ்யார்த்தத்தில் கல்பித பேதமானது மாயா அவித்யா உபாதி பேதத்தாலேயே ஒழிய வாஸ்தவத்திலில்லை.

43. ச்ருதி எப்பொழுதும் ஸ்வதஸித்தமான ஏகத்தன்மையின் அக்ஞானத்தை நீக்கி, அதிகாரிகளுக்கு ஸ்வத ஸித்தமான ஏகத்தன்மையை ஞாபகப்படுத்துகிறது.

44. எது ஜாக்ரத ஸ்வப்ன ஸுஷுப்தி முதலிய பிரபஞ்சத்தன்மையோடு விளங்குகிறதோ அந்த பிரஹ்மம் தான் என்று அறிந்தால் எல்லா பந்தங்களிலிருந்தும் விடுதலையடைவான்.

45. எவன் திருடமாக பிரஹ்மத்தை தனதாத்மாவாக அறிகிறானோ அவனுடைய ஸ்வானுபவமும் இயற்கையாகவே இவ்விதமாகவே (மேற் சொல்லியபடியே) பின்பற்றிவரும்.

46. மூன்று ஸ்தானங்களிலும் போக்யம் எதுவோ, போக்தா எவனோ, போகம் எதுவோ இவைகளுக்கெல்லாம் விலக்ஷணமுள்ளவன் ஸாக்ஷி; 'அஹம்' நான் சித்மாத்திரன், ஸதாசிவனாயிருக்கிறேன்.

47. என்னிடமிருந்தே எல்லாம் உண்டாகி, இருந்து, லய மடைகிறது ; அந்த அத்வயமான பிரஹ்மம் நான்.

48. நான் அணுவைக்காட்டிலும் சிறியவன் ; அப்படியே மஹான், விச்வம், சுத்தன், புராதனன், புருஷன், ஈசன், ஹிரண் மயன், சிவனும் நானே.

49. நான் கைகால் அற்றவன், நினைக்கக்கூடாத சக்தியுள் ளவன், கண்ணில்லாமல் பார்க்கிறேன்; காதில்லாமல் கேட்கிறேன்; விவிக்த ரூபனான நான் அறிகிறேன் ; என்னை யறிகிறவன் வே ெருருவனுமில்லை ; நான் எப்பொழுதும் சித்தே.

50. பற்பல வேதங்களால் நானே அறியப்பட்டவன், வே தாந்தம் செய்தவனும், வேதத்தை யறிந்தவனும் நானே; புண்ய பாபம் எனக்கில்லை ; ஜன்ம, நாசம், தேகேந்திரிய புத்திகள் எனக்கில்லை.

51. பூமியும், ஜலமும், நெருப்பும் காற்றும் ஆகாசமும் எனக்கில்லை; நான் எப்பொழுதும் 'அஹம்' என்றும் இயற்கை யால் 'இதம்' இது என்றும் விளங்குகின்றேன்.

52. எப்பொழுதும் விளங்காத ரூபமாகவும், விளங்குகிற ரூபமாகவும், அப்படியே விளக்க ரூபமாகவும் விளக்கமற்ற ரூப மாகவும், ஸர்வரூபமாகவும் நான் பிரகாசிக்கிறேன்; அதனல் நான் புராதனனான தேவனாயிருக்கிறேன்.

53. இவ்விதம் ஹிருதய குகையிலிருப்பதும், நிஷ்கலமும், அத்வயமுமான பரமாத்ம ரூபத்தையறிந்து ஸமஸ்த விளக்கமும் ஸத் அஸத் இல்லாததுமான சுத்தமான பரமாத்ம ரூபத்தை வித் வான் அடைகிறான்.

54. ஆதலால் முமுக்ஷு எப்பொழுதும் குருபதேசத்தா லும் தர்க்கவழியாலும் சிவனை சிந்திக்கவேண்டும்.

55. சிரேஷ்டமான கைவல்யோபநிஷத் பரமகிருபையால் சொல்லியது, மிகதேஜஸ் உள்ளவர்களாலும், ஹரி பிரஹ்மன் முதலியவர்களாலும் ஆதரிக்கப் படுகிறது ; அதிசோபனமான

ப்ரஹ்மாபரோக்ஷத்திற்காக என்னால் சொல்லப்பட்டது; அதி பக்தியுடன் அதிகாரிகளுடைய இந்த கொள்கையை அறியுங்கள்.

---

## அத்தியாயம் 9.

---

### (ஆனந்த ஸ்வரூப கதனம்).

1. ப்ரஹ்மன் :—(இந்த அத்யாயத்திலும் அடுத்த 10-வது அத்யாயத்திலும் ப்ரஹதாரண்யக உபநிஷத் அர்த்தம் சொல்லப் படுகிறது. இதில் ஸம்பூர்ண உபதேச ரூபமான மைத்ரேயீ ப்ராஹ்மணம் சொல்லப்படுகிறது).

ப்ரத்யக்காக விருக்கிறவன் (ஜீவன்) பரம ப்ரியத்திற்கு இருப்பிடத்தன்மையாகக் காணப்படுவதால், பராநந்த ஸ்வரூப லக்ஷணமுடைய சிவனாக ஆகிறான்; மிகப் பிரேமைக்கு இருப் பிடமான ஆனந்தம் ஸாக்ஷாத் ஆனந்தமேயாம் (ப்ரஹ்மமே).

2–3. மனைவிக்கு பதிப்ரியனாகிறான் என்பது பதியின் காமத்தின் பொருட்டல்ல, ஆனால் தனது காமத்தின் பொருட்டே யாம்; ஆதலால் தானே மிகப் பிரிய முள்ளது.

4. அப்படியே மனைவியின் காமத்தின்பொருட்டு பதி பிரி யமாயிருக்கிறதில்லை; ஆனால் தனது காமத்தின் பொருட்டுத்தான்; ஆதலால் தானே மிகப் பிரியமுள்ளது.

5–13. அப்படியே புத்திரர்கள், ப்ராஹ்மண ஜாதி, க்ஷத் திரிய ஜாதி, வித்தம், லோகங்கள், தேவர்கள், வேதங்கள், பூதங் கள், ஸர்வம்—எல்லாம் அவைகளின் காமத்தின் பொருட்டு பிரி யங்களாகிறதில்லை, ஆனால் தனது காமத்தின் பொருட்டே; ஆத லால் தானே மிகப் பிரியமுள்ளது.

14–15. ஆதலால் ஸுக ரூபமாயும் ஸுகத்தை லக்ஷண மாகவுடைய இந்த ஆத்மா, ஸுகத்தை இச்சிப்பவர்களால், கர் மங்களை விலக்கி, எப்பொழுதும் பார்க்கத்தகுந்தவன், கேட்கத்

தகுந்தவன், அப்படியே ஆலோசிக்கத் தகுந்தவன், தியானிக்கத் தகுந்தவன்; இந்த தர்சன சிரவண மனனமுதலியவைகளால் ஆத்மா அறியப்பட்டால் எல்லாம் ஆத்மாவிற்கு அபேதமாக அறியப்படும்; ஸம்சயமில்லை.

**16–17.** துக்கராசி நசிக்கும் பொருட்டு பரமாத்வைத ஞானியாகவேண்டும்; அந்த ஞானத்தால் ஸம்ஸாரம் நசிக்கும்; ஸ்வத ஸித்தமான அத்வயானந்தம் தானே விளங்கும்.

**18–19.** எவனொருவன் தன்னைக்காட்டிலும் வேறு என்று தன் பிராஹ்மண ஜாதியை அறிகிருனே அவனை இந்த பிராஹ்மண ஜாதி வெளியே தள்ளிவிடுகிறது (சுகதுக்கத்திற்கு காரணமாக் குகிறது); க்ஷத்ரிய ஜாதியும், லோகங்களும், தேவர்களும், வேதங்களும், பூதங்களும் பசுவான அவனை விலக்குகின்றன. தன் ரூபத்தைக் காட்டிலும் வேருக கொஞ்சமேனுமிருக்கிறதென்று பார்த்தால் நாசமடைவான்.

**20–22.** பிரஹ்ம க்ஷத்ரிய முதலிய பேதங்களால் விளங்கும் இந்த வர்ணங்களும், ஆச்ரமங்களும், ஸகல ஸங்கர ஜாதிகளும், தேவ கந்தர்வமுதலியவர்களும், பூதங்களும், புவனங்களும், 'இருக்கிறது, இல்லை' என்று சொல்லப்படும் அர்த்தங்களும், வேறு யிருக்கிறதும், மாயை, அவித்யை, தமஸ், மோஹ முதலிய பேதங்களும், எல்லாம் ஆத்மாவே; வேறொன்றுமல்ல; வேறு என்கிற புத்தியே ஸம்ஸாரம்.

**23.** நிர்விகல்பமான பரதத்வத்தில், ஞானமூலமாக, புத்தியின் ஒழிவு (இளைப்பாறுதல்) ஸம்ஸார நாசமாகிய மோக்ஷம்; புருஷனுக்கு இதைக்காட்டிலும் மேலானது ஒன்றுமில்லை.

**24.** தோன்றுகின்ற எல்லாம், விசேஷமன்னியில், பிரஹ்மம் என்று எந்த புருஷன் அறிகிருனே அந்த ஜகத் குருவான அவனை எப்பொழுதும் சிரஸால் நமஸ்கரிக்கிறேன்.

**25–28.** வேதங்கள் அனேகவிதமாக விளங்குகின்றன; அப்படியே ஸ்மிருதிகளும், புராணங்களும், புத்த, ஆர்ஹத,

சைவ, வைஷ்ணவ, பிரஹ்மாகமங்களும், மற்றுமுள்ள கீழ்ப்பட்ட ஆகமங்களும், கேவல லௌகிக புத்தியும், பல ஸ்தூல ஸூக்ஷ்ம தர்க்கங்களும், ஸாதாரண ஜனங்களுக்கு ஒன்றுக்கொன்று விரோதமாகத் தோன்றும். புத்திமான்களோ இவைகளின் அவிரோதத்தில் காலத்தைச் செலுத்துகிறார்கள்; காலம் ஸித்தித்தாலும் அவிரோதம் ஸித்திக்காது.

**29.** ஆதலால் மனஸுக்கு மலகாரணமாயிருப்பதால் இவையெல்லாவற்றையும் நீக்கி எந்த எந்த வஸ்துக்களெந்த எந்த ரூபமாகப் பிரகாசிக்கின்றதோ அந்தந்த ரூபமாக (அவைகளின் அதிஷ்டானமான) பரமசிவத்தையே யெல்லாவற்றிலும் பார்க்கத்தக்கது.

**30–31.** புழு வண்டு முதலியன மதியுடையன வாகும், அவற்றைக்காட்டிலும் பசுவினது புத்தி அதிகம், அதைக்காட்டிலும் நரர்கள், அவரினும் சிலர் விசேஷ வறிவுடையவர்; இவர்களைக்காட்டிலும் கந்தர்வர்கள், பிதிருக்கள், முதலியவர்கள் ஒருவருக்கொருவர் தாரதம்மியத்தால் அறிவினால் வேறு வேறாக மேன்மையுடையவர்களாக இருக்கின்றார்கள்.

**32–33.** தேவர்களான நீங்கள் கீழ்ச்சொல்லி யிருக்கின்ற எல்லார்களிலும் மிகவும் பிரக்ஞையுடையவர்கள், உங்களைக்காட்டிலும் நானும், என்னைக்காட்டிலும் விஷ்ணுவும், அவரைக்காட்டிலும் குணமூர்த்தியான சங்காரும் மிகப்பிரக்ஞையுடையவர்கள்; ஸாம்பரும் ஸநாதனருமாயிருக்கும் சிவன் எல்லாரினும் மேலான பிரக்ஞையுடையவர்.

**34.** அவர்தான் ஸாக்ஷாத் ஸர்வக்ஞன், அவரைக்காட்டிலும் வேறொன்றுமில்லை; ஆகையால் இந்த ச்ருதி ஸ்மிருதி முதலிய லக்ஷணமான அனாத்ம வித்யைகளை விலக்கி எல்லாம் பிரஹ்மமென்று பார்க்கவும்.

**35.** இந்த விஷயத்தில் சிரமமோ கொஞ்சம்; பயனோ (பெரிதான) இவ்விடமே முக்தி; அப்படியிருந்தும் மனிதர்கள் பாமாத்வைதத்தை இச்சிக்கிறார்களில்லை.

36–44. (இந்த விஷயத்தில்) ஒருபொழுதும் சித்தத்தில் கொஞ்சமேனும் பயமுண்டாகிறதில்லை, அப்படியிருந்தும் இதை இச்சிக்கின்றார்களில்லை ; தன் ஸ்வரூபத்திற்கு வேறாக பிரமாணமும், விரோதமுமில்லை, தர்க்கமுமில்லை, அப்படியிருந்தாலும் இச்சிக்கிறார்களில்லை ; சுருதி ஸ்மிருதி புராணங்கள் ஆத்மாவுக்கு ஏகத்தன்மையைக் கூறுகின்றன, அப்படியே அவைகளை அனுஸரித்த தர்க்கமும் அத்வைத ஞானத்தையே அடையும்படி செய்கிறது ; சைவாகமங்களில் பரமேச்வரன் அத்வைதத்தையே சொல்லியிருக்கிறார் ; நாராயணன், நான், மற்றுமுள்ள யோகிகள் எல்லோரும் இந்த அத்வைதத்தையே சொல்லுகிறார்கள் ; இப்படியெல்லாம் இருந்தாலும் இந்த பரமாத்வைதத்தை இச்சிக்கிறார்களில்லை.

45. சுத்த ஞானமுடையவர்களின் நிஷ்டையும் அத்வைத விஷயமே, அப்படியிருந்தும் இச்சிக்கிறதில்லை.

46. பிராந்தர்களான சிலர் விசேஷமாக த்வைதத்தை ஆசிரயித்துக்கொண்டு அத்வைதம் ஸாமான்யம் என்று சொல்லுகிறார்கள் ; அவர்களுக்கு அறிவு இல்லை.

47. சிலர் எல்லாவற்றிலும் த்வைதத்தையே கூறுகிறார்கள்; அவர்கள் மனிதர்களல்ல, புழுக்கள் பக்ஷிகளுமல்ல ; (அசேதனமான) கடங்களாவார்கள்.

48. விசேஷமன்னியில் எல்லாம் மகேச்வரன் என்று பார்க்கிறவனே ஸாக்ஷாத் ஞானி, அவனே சிவன், அவன் கிடைப்பது அறிது.

49. ஜகத் என்ற தோற்றம் வியவகாரத்திலும் பரமார்த்தத்திலும் பரத்தைக்காட்டிலும் பரம் என்ற புத்தி ஒருவருக்கும் உண்டாகிறதில்லை; (ஆனால்) சசிதர ஸ்மரணத்தால் அது ஸித்தியாகும்.

50. ஜகத் சங்கர ஸம்பந்தமான் பிரகாசமென்று மதிமான்களுடைய கருத்தென்று என் தீர்மானம்; இந்த விமலமான புத்தி சிவஸ்மரணையால் உண்டாகும்.

51. ஜகத்தின் தோற்றத்தை வைத்துக்கொண்டு (அது இருப்பதாக அபேக்ஷித்து) ச்ருதி பிரிய ஹேதுவான கர்மத்தை இங்கு கூறுகிறது; (அதனால் ஜகத் ஸத்யமாகாது); ஜகத் தோற்ற மில்லை; ச்ருதியும் பிரியகரமான கர்மத்தை சார்ந்தில்லை; யதார்த்த மாக ஒன்றுமில்லை.

52. இந்த விமல புத்தியுண்டானால் அவன் சிவனே; அந்த மகானுக்கு ஒரு கர்மமுமில்லை; கர்மமிருந்தால் அந்த மனிதன் பசுவே.

53. இந்த பரமயோகிக்கு பிறப்பு மரணமில்லை, போக்கு வருதலில்லை; மலம் விமலமில்லை; அறிவு என்பதுமில்லை; இதெல் லாம் சிவமாக வெகு தெளிவாக விளங்கும்.

54. எல்லா ஸந்தேகங்களையும் விட்டுவிட்டு, தோன்றுகிற ஜடமான இந்த ஜகத் எல்லாம் குரு உபதேசத்தால் சிவன் என்று பார்க்கவேண்டும்; அந்தப் பார்வையையும் சிவனுகப் பார்க்க வேண்டும்.

55. பார்வையையும் சிவனுகப்பார்த்து, கேவலமான பார் வையையும் விலக்கி, ஸ்வபாவத்துடனிருப்பவனுகி, தனது சித் தன்மையுடன் மிஞ்சி நிற்கிறுன்; இப்படி சித்ரூபமாக மிஞ்சுகிற தும் பரமார்த்தமாகவில்லை.

56. அந்த மகானுடைய நிஷ்டை (ஸ்திதி) என்னுல் சொல்லமுடியாது; சிவன், முனிகள், நாராயணன், வேதம், பரா சக்தி, பரன் இவர்களாலும் முடியாது. இவர்களெல்லாம் அதில் மௌனத்தை யடைகிறுர்கள். வித்வானுடைய நிஷ்டை அத் தகையதல்லவா!

57. எல்லாம் கருணையால் சொல்லப்பட்டது; வேதமே எல்லா அர்த்தத்தையும் போதிக்கிறது; என்னுடைய வசனம் அதற்கு உள் அடங்கியதே.

## அத்தியாயம் 10.

---

### (ஆத்மாவின் பிரஹ்மத்தன்மையைக்கூறல்).

1. பிரஹ்மன்:—(இந்த அத்யாயத்தில் பிரஹதாரண்யகத்தி லுள்ள யாக்ஞவல்கியரை உஷஸ்தர் கேட்ட பிரச்னம் சொல்லப் படுகிறது; இதற்கு உஷஸ்த பிராஹ்மணம் என்று பெயர்).

எல்லாவற்றிற்கும் உள்ளும், ஸாக்ஷியாயும், ஸ்வயம் பிரகாச முள்ளதாயுமுள்ள பிரத்யக் ஆத்மா ஒருவர் இருக்கிறார்; அவரே பிரஹ்மம், ஸம்பூர்ணர், ஸ்வாநுபவத்தால் அறியத்தக்கவர்.

2. அவர் பிராண அபான பேதங்களுக்கு இருப்பையும் விளக்கத்தையும் கொடுப்பவர்; அவருடைய ஸன்னிதி மாத்திரத் தால் எல்லாம் சேஷ்டையைச் (அததின் காரியங்களைச்) செய்கி றது.

3. அவர் இந்த சேஷ்டைகளில் ஸம்பந்தப் படாதவராய், நிஷ்கிரியனாய் இருக்கிறார்; அவர்தான் எல்லாவற்றிற்கு உள்ளிருப் பவர், ஸாக்ஷாத் ஆத்மா, வேறொருவருமில்லை.

4. அவரே 'அஹம்' என்ற சப்தத்தின் அர்த்தம், அவர் தேகமன்று; இந்த தேகம் காணப்படுவதால் இதை பார்க்கிறவர் அவரே.

5. இவர் பிராணன் முதலியவைகளுமன்று; இவையெல் லாம் பார்க்கிறவர் அவர்.

6. திருஷ்டிக்கு திருஷ்டாவும், ச்ருதிக்கு ச்ரோதாவும், மனஸுக்கு மந்தாவும், புத்திக்கு விக்ஞாதாவும் அந்த பரனான ஆத்மாவே.

7. இவரைத்தவிர மற்றதெல்லாம் நச்வரம்; பரமார்த்தமாக இன்னதென்று நிரூபிக்கும்பொழுது (இவையெல்லாம்) ஸத்ய மன்று; நன்கு விசாரிக்கும் கால் அவரே ஸத்யம்; வேறொன் றும் ஸத்யமன்று.

8. எப்படி எல்லாம் பிருதிவியில் குறுக்கும் நெடுக்கும் கோர்க்கப்பட்டிருக்கிறதோ அப்படியே ஜலத்தில் எல்லாம் கோர்க்கப்பட்டிருக்கிறது; ஸந்தேகமில்லை.

9-17. ஜலம் வாயுவிலும், வாயு அந்தரிக்ஷத்திலும், அந்தரிக்ஷம் கந்தர்வலோகத்திலும், கந்தர்வலோகம ஆதித்ய லோகங்களிலும், ஆதித்ய லோகங்கள் சந்திர லோகங்களிலும், இவை நக்ஷத்திர லோகங்களிலும், இவை தேவ லோகங்களிலும், இவை இந்திர லோகங்களிலும் இவை பிரஜாபதி லோகங்களிலும், இவை பிரஹ்ம லோகங்களிலும், இவை விஷ்ணு லோகங்களிலும், இவை ருத்ரலோகங்களிலும், இவை ஈச்வரலோகங்களிலும், இவை ஸதாசிவ லோகங்களிலும், இவைகளெல்லாம் பிரஹ்மமென்ற பரசிவ லோகங்களிலும் கிரமமாக கோர்க்கப்பட்டிருக்கின்றன; இப்படி எல்லாம் ஸாக்ஷி ஸ்வரூபமாகவும், மிகவும் எல்லாவற்றிற்கும் உள்ளிருப்பதுமான பிரத்யக் ஆத்மாவில் அத்யாஸமாக ஓதப்ரோதமாய் இருக்கின்றன.

18. ஸர்வாதிஷ்டானமான ஸ்வயம் பிரகாசமுள்ள பிரத்யகாத்மா ஒன்றிலும் இப்படி இல்லை; அந்த ஸாக்ஷி ஸத்ரூபராயிருக்கிறார்.

19. எதனிடத்தில், நன்றாய் நிரூபிக்குங்கால், எல்லாம் அத்யஸ்த (கல்பித) ரூபமாக விருக்கிறதோ அவரே எல்லாம், வேறொன்றுமில்லை.

20. எந்த ஆத்மா ஸ்வயமாக ஸத்தாக வேறொன்றின் உதவியில்லாமல் விளங்குகிறாரோ அவரே எல்லோரின் அந்தர்யாமி, வேறொருவருமன்று.

21-22. பிருதிவிக்குள்ளிருந்து அதை எவர் நடத்துகிறாரோ, அந்த பிருதிவீ எவரை அறிகிறதில்லையோ அவரே நமக்கும் பூமிக்கும் பராமிருதமான அந்தர்யாமி.

23-25. அப்புகளிலும், அக்னி, அந்தரிக்ஷம், வாயுமுதலிய சேதன அசேதனமுள்ள எல்லாவற்றிலும் இப்படியே யிருந்துகொண்டிருக்கிறவர் ஸாக்ஷாத் அந்தர்யாமி.

26. இவர் காணப்படாவிட்டாலும் காண்கிறவர், கேட்கப் படாவிட்டாலும் இவரே கேட்கிறவர்; நினைக்கக் கூடாவிட்டாலும் இவரே நினைப்பவர், இவரே புத்தியால் அறிகிறவர்.

27. நசிக்கக்கூடிய சூர்யன், சந்திரன், அக்னி முதலிய தேவர்களிடத்தில் தனது பிரகாசத்தால் அந்தக்கரண ஸாக்ஷியாக (ஜாக்கிராவஸ்தையில்) விளங்குகிறார்.

28. இந்த தேவன் சித்த வியாபாரமற்ற ஸுஷுப்தியில் அந்த சித்த அபாவத்தை தனது பிரகாசத்தாலே அறிகிறார்.

29. தோற்றம் மறைப்பு அற்ற ஸ்வயம்பிரகாசமான ஆத்மா பாவம் அபாவமான எல்லாவற்றையும் எப்பொழுதும் அறிகிறான்.

30. பாவம் (இருக்கிறது) அபாவம் (இல்லை) என்றதால் அறியக்கூடிய எல்லாவற்றையும் அறிகிறவன் இவனே; நன்கு விசாரிக்கும்பொழுது வேறொருவருமில்லை.

31. இப்படி த்வைதத்தை (த்வைதமாக தோன்றுவதை) எவன் தனதாத்மாவாக அறிகிறானோ அந்தயோகி த்வைதத்தை பார்த்துக்கொண்டிருந்தாலும் (த்வைதமாக) பார்க்கிறவனல்ல.

32. திருஷ்டாவினுடைய பார்வைக்கு நாசமில்லை; பார்க்கப்படுகிறதே நசிக்கிறது; அது த்வைதம்; திருஷ்டாவுக்கு திருச்யம் இல்லை, திருஷ்டா கேவலமாயிருக்கிறான் (ஸமாதி ஸுஷுப்திகளில்).

33. இதுதான் இவனுக்கு உயர்ந்த ஸம்பத்; பரமகதி; பரமலோகம், பரமஸுகம்.

34. பாம்பு விடப்பட்ட சட்டையை மறுபடியும் எப்படி தனது ஆத்மாவாக பார்க்கிறதில்லையோ அப்படி வித்வான் தேகத்தில் 'அஹம்' நான் என்கிற புத்தியை செலுத்துகிறதில்லை.

35. ஸர்வாதாரமாயும், ஸ்வதஸித்தமாயும், நிர்மலமாயும் பரானந்தமாயுமுள்ள சிவனிடத்தில் கொஞ்சம்கூட பல (நாநா) வென்பது இல்லை.

36–37. இங்கு பலதைப்பார்க்கிறவன் மிருத்யுவுக்கு மேல் பட்டமிருத்யுவை யடைவான்; ஆகையால் முமுக்ஷுக்களால் அத்யஸ்தமான (கல்பிக்கப்பட்ட) அக்ஞானம், அதன்காரியம் எல்லாவற்றையும் ஆத்மரூபமாக ஒன்றாகவே, என்ன சிரமப்பட்டினும், அறியவேண்டும்; இந்த ஆத்மா அப்பிரமேயன், விரஜன், மஹான் எப்பொழுதும் உள்ளவன்.

38. தீரன் அவனையே அறிந்து ஞானத்தை யடையவும்; பிராஹ்மணன் வெகுசப்தங்களை சிந்திக்கவேண்டாம்; ஏனெனில் இது வாக்கின் வீண்காரியம்.

39. இவரே ஜன்மநாசமற்ற மஹானாகிய ஆத்மா; ஸ்வதந்திரன், ஸர்வலோக ஈசானன்.

40. இந்த உயர்ந்தபுத்தியுள்ளவன் ஸாது காரியத்தால் சுத்தனாகான், கெட்டகர்மத்தால் கீழ்த்தனமடையான்.

41. இவரே ஸர்வேசுவரன், பூதாதிபதி, பூதபாலன், லோகங்கள் மாறுபடாமல் இருக்கச் செய்கிறவன்.

42–43. இவரே ஸேது (கரை), தரிக்கிறவர்; இவரையே உத்தம பிராஹ்மணர்கள் வேதவாக்கியத்தாலும், யக்ஞத்தாலும், தானத்தாலும், தபஸாலும், புஜிக்காமலிருப்பதாலும் அறிய இச்சிக்கிறார்கள். இவரை அறிந்தவனே முனி, மற்றவனன்று.

44. 'இதன்று, இதன்று' என்று நிச்சயிக்கப்பட்ட ஸர்வஸாதகமான இவரே அந்த ஆத்மா; அவன் எப்பொழுதும் கிருகிக்கிற ஸ்வரூபமுடையவன், அவன் கிருகிக்கப்படுகிறதில்லை.

45. அவரே உருவழிக்கும் ஸ்வபாவமுள்ளவர், இவர் உருவை அழிக்கமுடியாது; ஸங்கமற்ற ரூபமுள்ள பகவான், ஸங்கப்படுகிறதில்லை.

46. இதுதான் பிராஹ்மணனுடைய நித்யமகிமை; இது கர்மத்தால் விருத்தி யடைகிறதுமில்லை, குறைகிறது மில்லை. அவரே பதத்தையறிந்தவன். பாபகர்மத்துடன் அவனுக்கு ஸம்பந்தமில்லை.

47. ஆதலால் வித்வான் பிரஹ்ம ஞானலாபத்தின்பொருட்டு சாந்தனும், தாந்தனும், ஸத்யவாதியாகவும், கர்மத்யாகியாகவும் இருந்து எப்பொழுதும் வித்யாஹேதுவான ஸர்வவேதாந்த ஸித்தமானதை அடையவேண்டும்.

48. சங்கரஞானத்தில் பிரியமுள்ளவன் திருபுண்டரம், உத்தூளனத்தை ஆசரிக்கவேண்டும்; சிவாதி நாமங்களைஜபிக்கவேண்டும்; ஹரனை பூஜிக்கவேண்டும்.

49–50. கையிலிருக்கிற பில்வபழம்போல் நிச்சயமாய் இந்த ஸாதனங்களுடன் இந்த எல்லா ஜகத்து சிவரூபமென்று அறிகிற பிரஹ்மநிஷ்டனை பாபம் அணுகாது.

51. இப்படி ஸ்வாத்மபூதமான பிரஹ்மத்தை யறிந்து தன்னுடைய அர்த்தம் எல்லாவற்றையும் தனது தேசிகேந்திரனுக்கு கொடுக்கவேண்டும்

52–55. இப்படி அமிருதத்துவத்தை யளிக்கும் குருவை மாதா பிதாவைப்போல் நினைத்து அவருக்கு த்ரோஹம் செய்யக்கூடாது; அவருடைய சரீரத்தை சிவசரீரமாகவும், பூஜையை சிவபூஜையாகவும், நாமகீர்த்தனத்தை சிவகீர்த்தனமாகவும் அவருக்கு செய்யும் தீங்கை சிவனுக்கு செய்த கெடுதலாகவும் எண்ணவேண்டியது; ஆதலால் வித்வான் எப்பொழுதும் சிரத்தையுடன் வித்யாகோசமான குருவை யடையவேண்டும்.

56. என்னால் எல்லாம் கிருபையால் சொல்லப்பட்டது. பிரஹ்ம நிஷ்டனுக்கு செய்யவேண்டியது ஒன்றுமில்லை; ஸ்மரிக்கவேண்டியது ஒன்றுமில்லை. எப்பொழுதும் பிரஹ்மமே ஸ்வயமாக பிரகாசிக்கிறது.

---

## அத்தியாயம் 11.

---

### (பிரஹ்மத்தின் ஸர்வசரீரஸ்திதி).

1. பிரஹ்மன்:—(இந்த அத்யாயத்தில் கடோபநிஷத், ச்வேதாச்வதரோபநிஷத்களின் அர்த்தம் சொல்லப்படுகிறது).

அறிவதற்கு முடியாததாயும், வெகு ரஹஸ்யமாயும், எங்கும் பிரவேசித்ததாயும், புத்திகுகையில் இருப்பதாயும், பரமாயுமுள்ள ஸாக்ஷாத் பரமதத்வம் ஒன்றிருக்கிறது.

2–3. அதை யறிந்த மகாதீரன் ஸந்தோஷம் துக்கம் இவைகளை விலக்குகிறான்; அது தர்ம முதலியவைகளைக் காட்டிலும் உயர்ந்தது; நடந்தது, நடக்கப் போகிறதைக் காட்டிலும் மேலானது; எந்த பரமபதத்தை வேதங்கள் சொல்லுகிறதோ, எல்லா தபஸ்களும் எதை உத்தேசித்து செய்யப்படுகின்றனவோ, எதை இச்சித்து முமுக்ஷுக்கள் பிரஹ்மசர்யத்தை கைப்பற்றுகிறார்களோ அது சிவனே.

4. இதுவே நாசமற்ற பிரஹ்மம்; இதுவே நாசமற்ற பரம்; இந்த அக்ஷரத்தை (பிரணவத்தை) அறிந்து எவன் எதை இச்சிக்கிறானோ அவனுக்கு அது உண்டாகும்.

5. இந்தப் பிடிப்பு (பிரணவம்) சிரேஷ்டமானது, பரமானது; இந்தப் பிடிப்பையறிந்தால் பிரஹ்மலோகத்தில் மகிமையடைவான்.

6. (இந்த பரப்பிரஹ்மம்) ஜனிக்கிறதில்லை, மரிக்கிறதில்லை; மேதாவீ, இது ஒருகாரணத்தாலும் உண்டானதல்ல, அதனின்றும் ஒன்றும் உண்டாகவில்லை; ஜன்மமில்லாதது, நித்தியமுள்ளது, சாச்வதமானது, புராணன், ஹிம்ஸிக்கக்கூடிய சரீரத்தில் ஹிம்ஸிக்கப்படாதவன்.

7. இவனை கொல்லுகிறவன் என்றாவது, கொல்லப்படுகிறவன் என்றாவது நினைக்கிறவர்கள் அறியாதவர்கள் இது கொல்லுகிறதுமில்லை கொல்லப்படுகிறதுமில்லை.

8. இது அணுவைக்காட்டிலும் சிறியது, மகத்தைக் காட்டிலும் பெரியது; இந்த ஆத்மா ஜந்துக்களின் ஹிருதயத்தில் இருக்கிறது; இதை காமமற்றவன் ஸாக்ஷாத் கரிக்கிறான்; மனமுதலிய தாதுக்களின் பிரஸாதத்தால் இதுனுடைய மகிமையையறிந்தவன் சோகமற்றவனாவான்.

9. இருந்துகொண்டே தூரம்போகும்; படுத்துக்கொண்டிருந்தே எங்கும் போகும்; அந்த ஸாக்ஷாத் மகாதேவனை என்னையற்ற மற்றவர்கள் எவர்கள் அறியமுடியும்.

10. சரீரங்களில் சரீரமற்றதும், அநித்யங்களில் இருக்கப்பட்டதும், மகாந்தமாயும் விபுவாயுமுள்ள ஆத்மாவை யறிந்து தீரன் துக்கப்படமாட்டான்.

11. இந்த ஆத்மா படிப்பாலாவது, மேதையாலாவது, பல கேள்விகளினுலாவது அடையக்கூடியவனன்று; எதை இவன் கோருகிருனே அதாலேயே அடையக்கூடியது; இந்த ஆத்மா தன்னுடைய நிஜரூபத்தை விளக்கிக்காட்டுகிறது.

12. இந்த ஞானம் விரக்தியில்லாதவனுலாவது, கெட்டநடையுள்ளவனுலாவது, அசாந்தனுலாவது, ஏகாக்ரமனதில்லாதவனுலாவது, சாந்தமற்ற மனஸுள்ளவனுலாவது அடையமுடியாது.

13. எவனுக்கு பிரஹ்ம க்ஷத்திரியன் இரண்டும் அன்னமோ அவனை இப்படியென்று அறிகிறவன் தேவனுவது மனிதனுவது எங்கு இருக்கிருன்.

14. தன் கர்மத்தாலுண்டான இந்த சரீரத்தில் கர்மபலத்தைப் புஜித்துக்கொண்டு, புத்தி குகையிலிருந்து, நிழலும் வெயிலும் போல (பரஸ்பர விலக்ஷணமுடைய) ஜீவன் என்றும் சங்கரன் என்றும் இருவர்கள் இருப்பதாக பிரஹ்ம வித்துக்கள் சொல்லுகிருர்கள்.

15. ஜீவன் கர்மபலத்தைப்புஜிக்கிருன்; சிவன் புஜிப்பிவிக்கிருன்; தோற்றத்தால் விரோததர்மமுடையவர்கள், அவர்களுடைய பேதம் உபாதியால் உண்டானது (வாஸ்தவமன்று).

16–17. ஆத்மாவை ரதத்திலிருப்பவனுகவும், சரீரத்தை ரதமாகவும், புத்தியை ஸாரதியாகவும், மனஸை கடிவாளமாகவும், இந்திரியங்களை குதிரைகளாகவும், விஷயங்களை வழிகளாகவும் அறியவேண்டும்.

இந்திரிய மனதுடன் சேர்ந்த ஆத்மாவை போக்தாவென்று அறியவேண்டும்.

18. எந்த மர்த்தியன் ஆத்மாவை அறியாமலிருக்கிறானோ, அப்பொழுது அடக்கப்படாத மனசுடன் கூடியவனாகிறான்; அவனுக்கு இந்திரியங்கள், ஸாரதிக்கு கெட்டகுதிரைகள் போல வச்யப்படமாட்டா.

19. இவ்விதமே ஆத்மா ஞானமுள்ளவனுக்கு இந்திரியங்கள் வசப்படுகின்றன, ஸாரதிக்கு நல்லகுதிரைகள்போல.

20. மனஸை அடக்காமலும் எப்பொழுதும் சீலமில்லாத ஞானமற்ற மர்த்தியன் அந்த பரமபதத்தை யடையான், ஸம்ஸாரமடைவான்.

21. மனஸை அடக்கி எப்பொழுதும் சீலமுள்ள ஞானி அந்தபதத்தை யடைவான் மறுபடியும் ஜனிக்கமாட்டான்.

22. எந்த நரன் ஞானஸாரதியையும் மனமாகிய கடிவாளத்தையும் உடையவனோ அவன் ஸம்ஸார முடிவையடைகிறான்; அதுதான் விஷ்ணுவின் பரமபதம்.

23. விஷ்ணுவின் பரமபதமே எல்லாருடைய பரமபதம், அது அத்வைதம், சிவன், ஸாம்பவிக்ரஹம்.

24. ருத்ர விஷ்ணு பிரஹ்மன் முதலிய தேகிகளுக்கு மஹாதேவன் இல்லாவிடில் எது பரமபதமாகும்.

25. இந்திரியங்களைவிட சப்தாதி விஷயங்கள் ஸூக்ஷ்மங்களாக விருக்கின்றன; அவைகளைவிட மனஸ் ஸூக்ஷ்மம்; மனதைவிட புத்தி ஸூக்ஷ்மம்; புத்தியைவிட மகானுயிருக்கிற ஆத்மா (மகத்) ஸூக்ஷ்மமானது.

26. மகத்தைக்காட்டிலும் அவ்யக்தம் (மாயை) ஸூக்ஷ்மம்; அதைக்காட்டிலும் புருஷன் ஸூக்ஷ்மம்; புருஷனைவிட ஸூக்ஷ்மம் ஒன்றுமில்லை; அதுதான் எல்லை, பரமானகதி.

**27.** புருஷன் என்பது ஸத்யாதி லக்ஷணமுடைய ஸம்பூர்ணரும், ஸாம்பமூர்த்திதாருமான சிவன்; வேறு ருத்ரன், விஷ்ணு, பிரஹ்மன் அன்று.

**28.** எல்லா பூதங்களிலும் ரஹஸ்யமாயுள்ள இந்த ஆத்மா விளங்குகிறதில்லை; ஸூக்ஷ்ம தரிசிகளால் கூர்மையான புத்தியால் ஸூக்ஷ்மமாக அறியப்படுகிறது.

**29.** பிராக்ஞன் மனதில் வாக்கை அடக்கவேண்டும்; மனதை ஞான ஆத்மாவிலும், விக்ஞானத்தை மஹத்திலும், அதை சாந்த ஆத்மாவிலும் அடக்கவேண்டும்.

**30.** எது அசப்தமோ, அரூபமோ, ஸ்பர்சிக்கக்கூடாததோ, நாசமற்றதோ, ரஸமற்றதோ, நித்யமோ, கந்தமற்றதோ, ஆதி அந்தமற்றதோ, மகத்தைவிட உயர்ந்ததோ, விகாரமற்றதோ, அத்தகைய பிரஹ்மாத்மாவை நிச்சயித்து மிருத்யு முகத்திலிருந்து (அவித்யாகாமகர்ம லக்ஷணமுள்ள ஸம்ஸாரத்திலிருந்து) விடுதலையடைகிறான்.

**31.** மகேசன் ச்ரோத்திரயமுதலிய இந்திரியங்களை (வெளி சப்தாதி விஷய பிரகாசத்தின் பொருட்டு) பகிர் முகங்களாக சிருஷ்டித்து, அவைகளை ஹிம்ஸித்தார்; ஆதலால் புருஷன் இந்திரியங்களால் வெளி விஷயங்களை பார்க்கிறான், ஆத்மரூபத்தை அறிகிறதில்லை; இப்படியிருந்தாலும் ஏதோ ஒரு தீரன் மோக்ஷத்தை இச்சித்தவனாக (விஷயங்களிலிருந்து) திருப்பப்பட்ட இந்திரியங்களுடையவனாய் பிரத்யக் ஆத்மாவை பார்க்கிறான்.

**32.** பாலர்கள் (அக்ஞ ஜனங்கள்) பாகிய காம்மியமான விஷயங்களை அனுஸரிக்கிறார்கள்; அவர்கள் (காமிகள்) மிருத்யுவின் பாசத்தை, அக்ஞானத்தால், அடைகிறார்கள்; விவேகிகளோ அமிருதத்தன்மையுடைய ஆத்மாவையறிந்து, காமங்களில் கட்டுப்படாதவர்களாய், நித்யமான ஆத்ம தத்வத்தை யடைகிறார்கள்.

**33.** எந்த விக்ஞானத்தால் ரூபரஸகந்தசப்த ஸ்பர்சமைதுனங்களை விஸ்பஷ்டமாய் அறிகிறானோ, அவைகளை சின்மாத்திர

பிரகாசமான ஆத்மாவால் அறிகிறான்; இந்த லோகத்தில் அறிய வேண்டியது என்ன மிச்சமிருக்கிறது (எல்லாம் ஆத்மாவால் அறியப்படுவ தாகவே இருக்கிறது, மிச்சமில்லை).

34. எவனால் ஜாகிரத் ஸ்வப்ன ஸுஷுப்தி என்ற ஸ்தானம் அறியப்படுகிறதோ அந்த மகாந்தமா யிருக்கிற பரமாத்மாவை அறிந்து தீரன் துக்கப்படுகிறதில்லை.

35. எவன் ஜாகரத்முதலிய மூன்றையும் சிதாத்மாவாக அறிகிறானோ, அவனைக்காட்டிலும் இந்த மூன்று ஸ்தானங்களும் பேதமாகவிரா.

36. சைதன்ய மாத்திரமானவும், ஸ்வயம் பிரகாசமான பகவான் சிவனே இந்த மூன்று ஸ்தானங்களாக விளங்குகிறார், விளங்காமலுமிருக்கிறார்.

37. இங்கும், பரத்திலும் இருக்கிற தத்வம் ஏகமான, ஸத்தே, அதைத் தவிர வேறுயில்லை; எவன் வேறாக ஒரு தேவனைப்பார்க்கிறானோ அவன் மிருத்யுவுக்குமேல் மிருத்யுவை அடைவான்.

38. எப்படி ஒன்றான அக்னி லோகத்தை யடைந்து, (கட்டைமுதலிய) ஒவ்வொரு ரூபத்தையுமடைந்து அததற்கு பிரதி ரூபமாக ஆகிறதோ, அப்படி ஸர்வபூத அந்தராத்மா ஒன்றாயிருந்தாலும் ரூபந்தோறும் பிரதிரூபமாகவும், வெளியில் தனது ரூபமாகவும் (வேறாகவும்) காணப்படுகிறார்.

39. ஒரே வாயு லோகத்தில் ரூபந்தோறும் பிரதி ரூபமாகிறதுபோல அந்தராத்மா ரூபந்தோறும் பிரதி ரூபமாகவும் வேறாகவும் காணப்படுகிறார்.

40. ஸர்வலோகத்திற்கு கண்ணாயிருக்கிற சூரியன் எப்படி சக்ஷுஸ் ஸம்பந்தமானதும், பாஹ்யமானதுமான தோஷங்களால் ஸம்பந்தப்படுகிறதில்லையோ அப்படி ஏகமான அந்தராத்மா லோகதுக்கத்தால் பற்றுதலடைகிறதில்லை.

41. முக்யமாயும், ஸ்வதந்திரனும், ஸர்வபூத அந்தராத்மாவான எவர் ஒரு ரூபத்தை பலதாகசெய்கிறாரோ அந்த ஆத்மாவிலுள்ளவரை எவர்கள் அனுபவிக்கிறார்களோ அந்த தீரர்களுக்கே சாச்வதமான ஸுகமுண்டு, மற்றவர்களுக்கில்லை.

42. எவரால் நித்யங்களான ஆகாசாதிகளும், தேவ மனுஷ்ய சேதனர்களும், ஸ்வபிரகாசமான அவரிடத்திலேயே பலவாகவிருந்து, மோகத்தால் பலதாக விளங்குகின்றனவோ, அந்த ஆத்மாவையறிகிறவர்களுக்கு சாச்வதமான சாந்தியுண்டு, மற்றவர்களுக்கில்லை.

43 நிர்தேசிக்கக்கூடாத பரமஸுகத்தை இது என்று எண்ணுகிறார்கள் ; அதை எப்படியறியமுடியும், அது விளங்குகிறதோ, விளங்கவில்லையோ !

44. சூர்யன், சந்திரன், அக்னி, நக்ஷத்திரம் முதலிய மகான்கள் எவரிடம் ஒருபொழுதும் பிரகாசிக்க வில்லையோ, பிரகாசிக்கிற அவரையே இவர்கள் பின்பற்றி பிரகாசிக்கிறார்கள் ; பிரகாசம் இவருடையதேதவிர வேறொருவருடையதுமன்று.

45. இந்த (ஸம்ஸார) அரசமரமானது மேலானதை (பிரஹ்மத்தை) மூலமாகவும், கீழானதை (ஸ்வர்க நரகதிர்யக் முதலியவைகளை) சாகைகளாக உடையது ; இந்த அச்வத்தம் (அஸ்திரமானது) ஆதியற்றது ; இதற்கு மூலமெதுவோ அதே சுத்தம், பிரஹ்மம், அமிருதம் என்று சொல்லப்படும்.

46. அந்த பிரஹ்மத்தில் எல்லா லோகங்களும் ஆசிரயித்திருக்கின்றன ; அதை ஒன்றும் மீறுகிறதில்லை ; இதுதான் அது (பிரஹ்மம்).

47. இந்த எல்லா ஜகத்தையும் அந்த சிவன் பிரேரிப்பிக்கிறான் ; இந்த பெரிய பயமான வஜ்ரத்தை அறிந்து நரன் மோக்ஷமடைகிறான்.

48. இவரிடமிருக்கிறபயத்தால் அக்னி தபிக்கிறான், சூரியன் தபிக்கிறான், இந்திரனும், வாயுவும், மிருத்யுவும் ஓடுகிறார்கள்.

**49.** இந்த சரீரத்தில் ஈச்வரனை அறிய சக்தியற்ற நான் எல்லா லோகங்களிலும் சரீரமடையும்பொருட்டு ஏற்படுவான்.

**50.** எப்படி மனிதன் நிர்மலமான கண்ணாடியில் தன்னுடைய ரூபத்தைப்பார்க்கிறானோ அப்படி இந்த தேகத்தில் கேவலம் பிரஹ்மத்தைப்பார்க்கிறான்.

**51–52.** ஜன்மநாசமுள்ள இந்திரியங்களின், பரமாத்மாவைவிட வேறாயிருக்குந் தன்மையையறிந்து, அவைகளின் ஜன்மநாசங்களை அனாத்மரூபமாகவறிந்து, பிறகு அனாத்மரூபமாக அறியப்பட்டதை ஸ்வானுபவத்தால் கேவலம் ஆத்மாவாகவறிந்த தீரன் சோகமடையான்.

**53–54.** இந்திரியங்களைவிட மனதும், மனதைவிட ஸத்வமும், ஸத்வத்தைவிட மஹத்தும், மஹத்தைவிட அவ்யக்தமும், அவ்யக்தத்தைவிட ஸாக்ஷாத் வியாபகமாயும், லிங்கமற்றதாயுமுள்ள பரம் உத்தமம்; இந்த பரத்தையறிந்தால் அமிருதத்வம் கிடைக்கும்.

**55.** இவருடைய ரூபம் முன் நிற்கிறதில்லை, இவரை ஒருவரும் கண்ணால் பார்க்கிறதில்லை; ஹிருதயத்திலிருக்கிற ஸங்கல்ப முதலியவைகளைச் செய்கிற புத்தியினால், மனனத்தால் நிச்சயிக்கப்பட்ட ஆத்மா அறிவதற்கு சக்தியுள்ளவர்.

**56.** இவ்விதமாக பாவாபாவ விசேஷலோகத்திற்கு காரணமும் ஸாக்ஷாத் ஸச்சித் ஆனந்த ரூபமுள்ள பிரஹ்மத்தை ச்ருதியாலும் யுக்தியாலும் மனிதர்கள் அறிகிறார்கள்; ஞானயோகத்தாலேயே முக்தர்களாகிறார்கள். (இதுவரை கடோபநிஷத் அர்த்தம்).

**57.** (இனி ச்வேதாச்வேதரோப நிஷத் அர்த்தம் சொல்லப்படுகிறது).

வித்யையால் அறியப்படுவதும் வேத ஸித்தமுமான பிரஹ்மத்திற்கு சிந்திக்கக்கூடாத ஒரு சக்தி யிருக்கவேயிருக்கிறது; அந்த (மாயா) சக்தியால் ஸத்யாநந்த அஸங்போத ரூபமான அத்வயம் ஸத்பின்னமாக (பேதயுக்தமாக) ஆகிறது.

58. பிரஹ்மத்திற்கு ஜீவரூபம் ஒன்று; மற்றொன்று போக்யமான விச்வம் ரூபம் (ஜகத்); (பிரஹ்மத்திற்கு போக பிரதான ஈசுவரரூபம்) மற்றொன்று; பரத்துக்கு சுத்த ரூபம் சர்வ சாஸ்திரத்தில் சொல்லிய பிரக்ஞாமாத்திர ரூபம்.

59. எல்லோருக்கும் உத்பத்தியாயிருப்பதும் எல்லோருக்கும் ஸ்திதியாயிருப்பதுமான வெகு விஸ்தாரமுள்ள பிரஹ்மத்தால் நிர்மாணிக்கப்பட்ட இந்த ஸம்ஸார சக்கிரத்தில் ஜீவன் (போகபிரதனான ஈச்வரனால்) பிரமிக்கச் செய்யப்படுகிறான் மனிதன் பிரேரிக்கிறவராயிருக்கிற பிரஹ்மாத்மாவை யுக்தியால் அறிந்து அமிருதத்தன்மை யடைகிறான்.

60. பரசிவனும் ஜீவனும் தோற்றத்தால் பின்னங்கள்; ச்ருதியாலும் யுக்தியாலும் அனுபவத்தாலும் அபின்னங்களாயிருக்கின்றன; மாயை இந்த போக்தாவுக்கு போக ஹேதுவாயிருக்கிறது; பராத்மா இந்த ரூபங்களால் விச்வரூபனாயிருந்தாலும் அகர்த்தாவாயிருக்கிறார்.

61. இந்த மாயை நசிக்கிறவஸ்து, ஜீவபாவமடைந்த பிரஹ்மரூபம் அக்ஷரம் (நாசமடையாதது); இந்த ஒரே தேவன் மாயையால் பின்னமாக விளங்குகிறான். அவரை தியானிப்பதாலும், யோஜிப்பதாலும், தத்வபாவத்தாலும் கடைசியில் விச்வமாயா நிவிருத்தி உண்டாகிறது.

62. அந்த தேவனையறிந்தால் எல்லா பாசங்களும் நாசமாகின்றன, கிலேசங்கள் குறைந்தால் ஜன்ம மிருத்யு நாசமாகும்; அவருடைய தியானத்தால் மூலமாயா நாசத்தால் விச்வைச்வரியமான கைவல்யரூபத்தையடைகிறான்.

63. ஆத்மாவிலிருக்கப்பட்ட இந்த பரத்தை எப்பொழுதும் அறியவேண்டும்; அதற்குமேல் அறியவேண்டியது ஒன்றுமில்லை; போக்தா, போக்யம், பிரேரிதாரம் மூன்று விதமாக இந்த பிரஹ்மமே இருக்கிறதென்று அறியவேண்டும்—என்று எல்லாம் சொல்லப்பட்டது.

64. காரணமான அரணிக்கட்டையிலிருக்கும் அக்னியின் ஸ்வரூபம் எப்படி காணப்படவில்லையோ, அதற்கு குறியான உஷ்ணமுதலியன நசிக்கிறதில்லையோ, அது மறுபடியும் எப்படி அரணிக்கட்டையால் கிரகிக்கப்படுகிறதோ, அப்படி தேகத்தில் பிரணவத்தால் இரண்டும் (பர, அபர ரூபம்) கிரகிக்கப்படுகின்றன.

65. தனது தேகத்தை அரணியாகச்செய்து, பிரணவத்தை மேல் அரணியாக்கி தியானமாகிய கடைதலால் உள்ளேயிருக்கிற தேவனை யறியலாம்.

66. எள்ளில் எண்ணெய் போலவும், தயிரில் வெண்ணெய் போலவும், மணலில் ஊற்று ஜலம் போலவும், அரணிக்கட்டையில் அக்னி போலவும், இந்த ஆத்மா ஸத்யத்தாலும் தபஸாலும் அறிய முயற்சி செய்கிறவனால் தனது ஆத்மாவில் கிரகிக்கப்படுகிறது.

67. க்ஷீரத்தில் நெய்போல இருக்கிற ஸர்வவியாபியான இந்த ஆத்மாவை தன் வித்யை தபஸ்களின் மூலமென்று அறிகிறவன் உபநிஷத்பரமான பிரஹ்மத்தை யடைகிறான்.

68. யக்ஞதானமுதலிய புண்யங்களால் யோகஸித்தி உண்டாகிறது; யோகத்தால் ஞானம் உண்டாகிறது; ஞானத்தால் முக்திகிடைக்கிறது, கர்மத்தால் அன்று.

69. அத்யாசிரமிகளாயிருக்கிற சாந்தர்களால் பிரஹ்ம ஞானம் சொல்லப்படவேண்டியது; சாந்தமற்றவனுக்கும் புத்திரனில்லாதவனுக்கும் இதை ஒருபொழுதும் சொல்லக்கூடாது.

70. 'அக்னி' என்ற முதலிய மந்திரங்களால் பஸ்ம தூளனமும், திருபுண்டர தாரணமும் அத்யாசிரமம் என்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள்.

71. எவனுக்கு தேவனிடத்தில் பரமான பக்தி யிருக்கிறதோ, தேவனிடத்தில் போல குருவிடத்திலும் பக்தியிருக்கிறதோ அந்த மகானுக்கு இப்பொழுது சொல்லப்பட்ட அர்த்தங்களெல்லாம் பிரகாசிக்கும்.

72. என்னுல் ச்ருதிவசனத்தால் கிருபைகொண்டு எல்லாம் சொல்லப்பட்டது ; இதையறிந்தால் தனது மோகத்தைத்தாண்டி பிரியரூபமான சிவனை யடைகிருன்.

---

அத்தியாயம் 12.

---

(சிவனுக்கு அஹம் புத்தி ஆசிரயத்தன்மை).

1. பிரஹ்மன் :—வெகு ஸாரமான ஸாக்ஷாத் ஸர்வ சாஸ்திரார்த்த ஸங்கிரஹம் (சுருக்கம்) சொல்லுகிறேன் ; இந்த வெகு சோபனமான விஷயத்தை சிரத்தையுடன் கேளுங்கள்.

2. 'அஹம்,' நான் என்ற சப்த, புத்திக்கு பரமான ஓர் பிடிப்பு (ஆதாரம்) எல்லோருக்கும் நமக்கும் இருக்கிறது ; அது பரமான ஞானம் ; அதுவே ஆத்மா, ஸந்தேகமில்லை.

3. அத்தகைய அவன், உண்மையில் ஸாக்ஷாத் சிவனுயிருந்தாலும், தனது அவித்யையால் தன்னுடைய சிவத்தன்மையை அறியாமல் ஸம்ஸாரி போல விளங்குகிருன்.

4–6. (அந்த ஆத்மா) வேதத்தில் சொல்லிய மார்க்கத்தாலும், குருபரம்பரை கிரமத்தாலும், திடமான மோக்ஷ இச்சையையடைந்து, மறுபடியும் சாந்தி முதலிய ஸாதனங்களுடன் கூடியவனுய், சிவ பக்தியாலும், குருபாதத்தில் நமஸ்கரித்து, வேதாந்த மகாவாக்கிய சிரவணத்தாலும், அப்படியே மனனத்தாலும், அப்படியே பரமாத்மாவின் தியானத்தாலும் பிரத்யக்பிரஹ்ம ஐக்ய ஞானமடைந்து பரமசிவனை யடைகிருன்.

7. பிரத்யக் ஆத்மாவை (தேகத்தில் பிரிவுபட்டதுபோலிருக்கும் ஆத்மாவை) சிவரூபமாக அறிந்தால் மாத்திரம் தனது பூர்ணத்தன்மையை யடைகிருன்; அந்த பிரத்யக் ஆத்மா த்வந்துவமற்றவன், 'அகம்' சப்தத்தால் குறிப்பிடப்பட்டவன்.

8. 'அஹம்' என்ற சப்தார்த்தம் சிவரூபமாக விளங்கும் பொழுது, இந்த பரமான ஞானத்தால், அவித்யை லயமடைகிறது.

9. இந்த பரவித்யையால் அவித்யை நிவிருத்தியானுல் கேவலம் பிரஹ்மம் தான் மிச்சப்பொருள்; பாவமுமில்லை அபாவமுமில்லை (வியாவிஹாரிகமாக இருக்கிறது என்ற பதார்த்தமுமில்லை, மலடிமகன்போல் இல்லை என்ற பதார்த்தமுமில்லை).

10. ஹே! தேவர்காள்! வியவஹார திருஷ்டியால் அவித்யை என்றும், அதன் நிவர்த்தியென்றும் சொல்லப்படுகிறது; தத்வதிருஷ்டியாலோ அவித்யையுமில்லை, அதன் நிவர்த்தியுமில்லை.

11. பிரஹ்மரூபமாகவே கேவலம் பிரஹ்மம் பிரகாசிக்கிறது; ஜகத்ரூபமாகக்கூட பிரஹ்மமே பிரகாசிக்கிறது.

12. வித்யை அவித்யை என்ற பேதத்தாலும், பாவம் அபாவம் என்ற பேதத்தாலும், குரு சிஷ்யன் என்ற பேதத்தாலும் பிரஹ்மமே பிரகாசிக்கிறது.

13. எல்லாம் பிரஹ்மமென்ற ஞானம் பிரஹ்மத்தை அடைவதற்கு ஸாதனம்; ஜகத் மாயை என்ற ஞானம் பலமடைவதில் அக்ஞானமாக முடியும் (மாயையும் பிரஹ்மமாகவிருக்க அதை வேறான மாயையாக கொள்வதால்).

14. அப்படியிருந்தாலும் இந்த ஞானம் (பிரஹ்மத்திற்கு பேதமாக சொல்லப்பட்ட மாயா ஞானம்) பராமாத்வைத ஞானம் டைவதில் உபகாரஞ்செய்யும்; அந்த எண்ணத்தால் ச்ருதி (பேதமாக) சொல்லுகிறது.

15. ச்ருதி (கர்மகாண்டத்தில்) ஜகத்தை, அது தோன்றுகிற பிரகாரம் ஸத்யமென்று அங்கீகரித்து, சில வேலையில் நரர்களின் க்ஷேமத்திற்காக தயவுடன் சொல்லுகிறது.

16. ஸத்ய தன்மையுடன் ஜகத்தின் விளக்கம் ஸம்ஸாரத்தில் பிரவிருத்திக்கச் செய்யும்; அஸத்யத்தன்மையுடன் விளக்கம் ஸம்ஸாரத்தை நிவர்த்திக்கச் செய்யும்.

17. ஆதலால் ஸம்ஸார நாசத்தின்பொருட்டு வெகு நிர்மலமான ச்ருதி சிலபொழுது இந்த எல்லா ஜகத்தும் மாயை என்று சொல்லுகிறது.

18. வெகு பக்வமுடைய சித்தமுடையவனுக்கு, அவனுடைய சித்தபாகத்துக்கு தக்கபடி, எல்லாம் பிரஹ்மம் என்று ஆதரவுடன் கல்யாணீயாகிய ச்ருதி சொல்லுகிறது.

19. தத்வத்தை யறியுங்கால் சுத்தமான கேவலம் பிரஹ்மமே காணப்படுகிறது; வித்யையுமில்லை, அவித்யையுமில்லை, ஜகத்துமில்லை, வேறொன்றுமில்லை.

20. ஆதலால் மேலான நிர்வாணத்திலிருக்கிற பரயோகிக்கு எப்படியெப்படி இந்த ஜகத் விளங்குகிறதோ அதெல்லாம் சிவனே வேறில்லை.

21. முன்னிருந்த அனுஸந்தானத்தை (வாஸனையைப்) பற்றியே, இது (எப்படியெப்படி இந்த ஜகத் விளங்கிறதோ அதெல்லாம் சிவனேயன்றி வேறில்லை என்பது) சொல்லப்படுவதேயன்றி, யதார்த்தமாக அன்று.

22–23. சிவ நிர்வாண நிஷ்டனுக்கு பரமார்த்தத்தில் இப்படி இப்படி விளங்குகிறதென்று ஒன்றும் கிடையாது; கேவலம் தன் ரூபத்தால் அப்படியப்படி தோன்றுகிறதென்று அலையற்ற ஸமுத்ரம்போல தானுகவேயிருக்கிறுன்; வேறுவிதமாகவில்லை.

24–25. இந்த பரயோகியின் உயர்ந்த ஸ்திதியை (இருப்பை) அவனும் அறிகிறதில்லை (அந்தக்கரண முதலியவை வித்யையால் நசித்துப் போனபடியால்), ஹரியும், மகேச்வரனும் நானும், வேதமும், ஸ்மிருதிபுராணங்களும் அறியமாட்டா.

26. அந்த யோகியினுடைய உயர்ந்த ஸ்திதி, அது எப்படியிருக்கிறதோ அப்படியே கேவலமாயிருக்கிறது (அதற்கு ஸமானம் அதுதான்).

27–28. இந்த ரூபமான பரா நிஷ்டை இயற்கையாகவே சிவனுக்கு இருக்கிறது; சிவப்பிரஸாதத்தால் விஷ்ணுவுக்கும், எனக்கும், மற்றவர்களுக்கும் இருக்கிறது; மகேச்வரன் கேள்விக்கு உட்பட்டவரன்று; அவ்விதமாகவே ஸநாதனரான மஹாதேவர் இருக்கிறுர் அன்றே?

**29.** இவ்விதமான பரம நிஷ்டை குருகடாக்ஷத்தாலும் கர்ம பலன் ஸமமாயாகும் பொழுதும் சிரமமன்றியில் ஸித்தியாகும் என்பதில் ஸந்தேகமில்லை.

**30.** தேவதேவனான சிவனை தேசிகராக எண்ணவேண்டியது; எப்போழுதும் ஆதரவுடன் ஸர்வ பிரயத்தனத்துடன் அவரிஷ்டத்தை செய்யவேண்டும்.

**31.** தனக்கிஷ்டமில்லாவிட்டாலும் குருவால்சொல்லப்பட்டதை செய்யவேண்டும்; குரு இஷ்டப்படி செய்தால் பரநிர்வாண மடைவான்.

**32–33.** தன்னுடைய ஆச்ரமம், ஜாதி, கீர்த்தி, அதிர்ஷ்டம், லோக நிந்தை, பந்து புத்திராதி ஸங்கமம், கிரஹக்ஷேத்ர தனஹானி, கிலேசம், சுகம் இவைகளை கவனியாமல் சோம்பலன்னியில் குருவின் இஷ்டத்தை எப்பொழுதும் செய்யவேண்டியது.

**34.** குரு பிரீதியானால் சிவன் பிரஸன்னராக விளங்குவான்; குரு தேகத்தில் மகாதேவன் எப்பொழுதும் ஸாந்நித்யமாகவிருக்கிறார்.

**35.** குருவுக்கு இஷ்டமில்லாததை மோகத்தாலும் செய்யக்கூடாது. செய்தால் கோரமான நரகத்தில் மகாப் பிரளயம் வரையில் வெந்துபோவான்.

**36.** சிவன் கோபமடைந்தால் குரு ரக்ஷிப்பார்; குரு கோபித்தால் ரக்ஷிப்பவர் ஒருவருமில்லை; ஆதலால் குரு இஷ்டத்தை காயத்தாலும் மனஸாலும் செய்ய வேண்டியது.

**37.** குருவென்றவர் ஆத்மாவுக்கு வேறில்லை; இதுஸத்யம், ஸந்தேகமில்லை; ஆத்மலாபத்தைவிட மேலான லாபம் இல்லவேயில்லை, ஸந்தேகமில்லை.

**38.** அனாத்மரூபமான தேகமுதலியவைகளைக் கொடுக்கும் பிதா குருவன்று, துக்கத்துக்கு ஹேதுவானதைக் கொடுப்பவன் பிதா.

**39.** அஷ்ட ஐச்வரியம், கந்தர்வாதி பதம், ஸார்வபௌமம் இவைகளைக் கொடுப்பவனும் குருவன்று, அவன் கிலேசத்தைக் கொடுப்பவன்.

**40.** மந்திர, தந்திர, லௌகிக உபாயம் இவைகளைக்கொடுப் பவனும் அவ்விதமே குருவன்று.

**41–42.** எவரொருவர் ஸத்யமாகத் தோன்றுகிறதெல்லாம் அஸத்யரூபமென்று நிச்சயித்து, பரசேதனமான ஆத்மாவை ஸர் வஸாக்ஷியாக பிரித்துக்காட்டி, நீ ஏதோ அதுதான் இது என்று, வேதாந்த விளக்கத்தால் தனது நிஜமான சிவத்தன்மையை அறி யச்செய்கிறாரோ அவர்தான் ஸாக்ஷாத்குரு, மற்றொருவருமன்று.

**43.** திருச்ய ரூபமாயிருக்கப்பட்ட இதெல்லாவற்றையும் திருக் ரூபமாக லயப்படுத்தி, அந்த திருக்ரூபம் பிரஹ்மம் என்று உபதேசிக்கிறவர் குரு, வேறு புருஷனன்று.

**44.** கிருபையால் பரமாத்வைத ஞானத்தை எவன் அளிக் கிறானோ அந்த ஸாக்ஷாத் குரு சிவனே என்பதில் ஸந்தேகமில்லை.

**45.** இத்தகைய வேதாந்த கமலத்திற்கு ஸூர்யரான தேசி கரை போக மோக்ஷத்தின் பொருட்டு எல்லா யத்தனத்துடன் ஸந்தோஷப்படுத்த வேண்டியது.

**46.** ஸங்கிரகமாய் எல்லா வேதாந்த வாக்கியங்களின் அர்த் தம் என்னால் சொல்லப்பட்டது ; எனக்கு பரமேச்வரன் உபதே சித்தார்.

**47.** ஸர்வக்ஞரும், ஸர்வவித்தும், ஆப்தகாமரும், கிருபா கரனும், ஸர்வதோஷமற்றவனுமான ஈசுவரன் எனக்கு ஸத்யத் தைச் சொன்னார்.

**48.** அவர் எனக்கு சொன்னபடியே உங்களுக்கெல்லாம் சொன்னேன், இது ஸத்யம், ஸந்தேகமில்லை.

**49.** ஸ்வ பிரகாச ரூபரும், ஸ்வத ஸித்தருமான சிவனுக்கு எல்லாம் கையிலிருக்கிற நெல்லிக்கனிபோல் பிரத்யக்ஷமன்றோ ! இதில் ஸந்தேகமில்லை.

50. வேதங்களுக்கு வேறுவிதமாய் அர்த்தம் சொல்லுகிற வர்கள் மூடர்களும், மூர்க்கர்களும் ஆவார்கள் ஸந்தேகமில்லை.

51. நான் சொன்ன வழியில்லாமல் அர்த்தம் சொல்லுகிற வர்கள் பிடிப்பில்லாத பாழுங்கிணற்றில் விழுவார்கள் என்பதில் ஸந்தேகமில்லை.

52. வேதார்த்தம் பரமாத்வைதம், வேறு அன்று ; அப்படி யில்லாவிட்டால் இவ்விடத்திலேயே என் தலை கீழே விழும், ஸந்தேகமில்லை.

53. வேதவாக்கியங்களின் அர்த்தம் வேறு என்ற ஸந்தே கத்துடன் நிச்சயிக்கப்படாத அர்த்தமுடையவர்களானால் உங்கள் தலை கீழே விழும்.

54. இதற்குமேல் சொல்லவேண்டியது ஒன்றுமில்லை, என் னால் சொல்லப்பட்டது ஸத்யம், சம்புவின் பாதத்தைத் தொடு கிறேன்.

55–57. ஸூதர் : – இப்படி தேவர்களுக்கு சொல்லிவிட்டு மகாதேஜரான பிரஹ்மன் பிரத்யக் பூதமாயும், பரானந்தராயும் பார் வதீபதியாயும், பரமாத்வைத ரூபமாயும், பவரோகத்திற்கு மருந் தாயுமிருக்கிற ஈச்வரனை ஸ்மரித்து, நமஸ்கரித்து, மறுபடியும் ஸ்துதித்து பக்தியினால் பரவசமானார்.

தேவர்களும் திரியம்பகரான ஸாம்பரை ஸ்மரித்து, தண்டம் போல் பூமியில் விழுந்து நமஸ்கரித்து ஸந்தோஷத்தால் பரவச மடைந்தார்கள்.

58. மகா கருணையுள்ள மகாதேவரும் தேவியுடன் அவ் விடமே ஆவிர்பவித்தார் (தோன்றினார்).

59. விஷ்ணுவும் லக்ஷ்மீயுடன், அசேஷ நாயகரான பகவா னைப்பார்க்க அங்கு வந்தார்.

60. அப்பொழுது முதலில் புஷ்பவர்ஷம் உண்டாயிற்று ; ஸ்வஸ்தி முதலிய வாக்குகள் உண்டாயின ; அவ்விடத்தில் பக்தி

யுடன் கூடிய விஷ்ணுவாலும் லக்ஷ்மீயாலும் சிவன் பூஜிக்கப் பட்டார்.

61. சசிசேகரரான சங்கரரும் அம்பிகையுடன் அங்கே ஸ்வரூபஞான பிரியத்தால் நர்த்தனம் செய்தார்.

62–65. ஸர்வலோக மாதாவும் பாபநாசகரமான ஞானத்தையளிப்பவருமான சிவை ஸ்வானுபூதசகிதமான கடாக்ஷத்தால் பிரஹ்மன் இந்திரன் முதலிய இவர்களைப்பார்த்து, கேவலம் கருணாபலத்தால் இந்த தேவர்களை ஞானமடையும்படி செய்தாள்; ச்ருதி மஸ்தகத்திலிருந்து உண்டான ஞானமாகிற போதத்தால் விஷயீகரிக்க தகுந்தவரும் நர்த்தனஞ் செய்கிற சிவனையும் சிவையையும் பிரஹ்மன் முதலான தேவர்கள் தங்கள் மாம்ஸக் கண்களாலேயே பார்த்தார்கள்; பவபாசத்தை அறுக்கும் பஞ்சாக்ஷரத்தால் மறுபடியும் அந்த மகானைப் பூஜித்து, ஆதரவுடன் ச்ருதிவாக்யங்களால் கஷ்ட பவபந்தனமற்றவர்களாக ஸ்தோத்திரஞ் செய்தார்கள். அசுபத்தை அபகரிக்கும் சிவன் "ஹே! தேவர்களே! உங்களுக்கு இஷ்டஸித்தி உண்டாகிவிட்டது" என்று, திருவாய் மலர்ந்தருளினர்.

66. சரணாகத பிரியையும், பந்தத்திற்கு காரணமான மலத்தை நாசஞ்செய்கிறவளுமான சங்கரீயும் மிகப்பிரியத்துடன் "என்னுடைய பிரஸாத பலத்தால் ஞானமடைந்தீர்கள்" என்று திருவாக்களித்தாள்.

67. கேசவரும் தேவர்களைப்பார்த்து, "இந்த அத்புதரும், பிரபுவும், ஸர்வவேத சிரஸான வேதாந்தத்திற்கும் எட்டாதவருமான சம்பு உங்களிடம் பிரீதியடைந்தார்" என்று சொன்னர்.

68–70. தேவனும் காருண்ய ரஸத்தால் உருகிய மனதுடன் பிரஹ்மன் முதலிய எல்லா தேவர்களையும் பார்த்து சொன்னதாவது "இந்த அதிசோபனமானதும், எனக்கு அனுகூலமானதுமான இந்த கீதையை (பிரஹ்மகீதையை) எந்த த்விஜன் படிக்கிருனே அவன் பந்தத்திலிருந்து விடுபட்டவனாய் என்னையே யடை

கிறுன்; அவனுடைய வாக்கில் பரசிவை எப்பொழுதுமிருக்கிறுள்; சூரியனுக்கு ஸமானமான தேஜஸுடனும் லக்ஷ்மீக்கும் முகுந்தனுக்கும் ஸமானமாகவும் எப்பொழுதும் இருக்கிறுன்; இந்த பிரஹ்மகீதையென்ற கீதையானது ச்ருதியுடன் கூடியதாயும் எல்லா கீதைகளுக்கும் உயர்ந்ததாகவு மிருக்கிறது; வேதநிஷ்டர்களான த்விஜச்ரேஷ்டர்களால் வேதரூபமான இந்த கீதை படிக்கத்தக்கது; சூத்ர முதலியவர்களால் படிக்கத்தகுந்ததல்ல.''

**71.** இப்படி பரமசிவன் அருள்செய்து, சிஷ்டர்களின் அசுபங்களை நீக்குகிறவரும், திருபுரத்திற்கு சத்துருவானவரும், பக்தர்களுக்கு மலமற்ற ஸுக ஞானத்தை அளிக்கிறவருமான நாதன் அவ்விடத்திலேயே ஞானுநந்தத்துள்ளே திரோதானஞ் செய்தருளினுர்.

**72.** ஸகல ஜகத் விசித்திரத்துடன் கூடிய அந்த தேவியும் கருணையுடன் பிரஹ்மன் முதலிய தேவர்களை கடாக்ஷித்து, பிரீதியுடையவளாக பரமஸுக ஞானரூபமான தேவி அவ்விடத்திலேயே ஸ்புரண ஸுகத்தில் மறைந்துவிட்டாள்.

**73.** லக்ஷ்மீயுடன் விஷ்ணுவும் தேவர்களை ஆச்வாஸப்படுத்தி, மகிழ்ந்தவராய் வைகுண்டமடைந்தார்; பிரஹ்மனும் ஆத்மவித்யையுடன் கூடிய தேவர்களை விட்டு ருத்ரத்தியான நிஷ்டரானுர்.

**74.** எல்லா தேவர்களும் பக்தியுடன் தண்டம்போல் பூமியில் விழுந்து பிரஹ்மனை நமஸ்கரித்து ஸந்தோஷமுடையவர்களாக ஸத்ய போதத்திலேயே இருப்பவர்களாக தங்கள் தங்கள் இருப்பிடம் சென்றுர்கள்.

**75.** இவ்விதமாக உங்களால் பிரஹ்ம கீதை ஸாக்ஷாத் ஞானத்துடனும் பக்தியுடனும் கேட்கப்பட்டது; இது என்னிடத்தில் சிரத்தைபக்தியுடைவனுக்கு எப்பொழுதும் உபதேசிக்கத்தக்கது; இந்த பரிசுத்தமான கீதை மற்றவர்களுக்கு உபதேசிக்கத்தக்கதன்று.

76. இவ்விதமாக பரசிவனுடைய பக்தியால் ஞானமடைந்த ஸூதர் ஸூகன சிவதத்வத்தை அடையச்செய்யும் கீதையை, க்ஷேமத்தைக்கருதி, முனிக்கூட்டத்திற்கு உபதேசித்து நிர்வாணரூபமான பரதத்வத்தை ஞானத்தால் பார்த்து மௌனமடைந்தார்.

77. முனிகளும் ஸமஸ்த ஹிதத்தைத்தரும் பரஞானமுள்ள குருவை (ஸூதரை) நமஸ்கரித்து, ஹ்ருதயத்திலிருக்கும் 'நான்' என்ற பதத்தில் லக்ஷ்யப்பொருளை பரதத்வமாகவே உணர்ந்தார்கள்.

ப்ரஹ்மகீதை முற்றிற்று.

---

# யக்ஞவைபவ கண்டம்.

## உபரிபாகம்.

# ஸூதகீதை.

---

### அத்தியாயம் 1.

---

(ஸூதகீதி).

**1–3.** (நைமிசாரண்யத்திலுள்ள) முனிகள் ஐச்வரமாயும், பரமானந்தமாயும் ஸத்யசித்கனமாயும், ஆத்மாவாகவே பார்த்துக் கொண்டும், அலைகளற்ற ஸமுத்ரம்போலிருப்பவரும், நிர்விகல்பரும், சம்பூர்ணரும், மலர்ந்தமுகத்துடனும் சிறிப்புடனுமிருக்கிறவரும், தன்னுடைய காந்தியால் வேறொருசூர்யனைப்போல ஜகத்தைப் பிரகாசித்துக்கொண்டும் இருக்கிற ஸூதரை தண்டம் போல் விழுந்து நமஸ்கரித்து, கூப்பியகைகளுடையவர்களாக, ஸந்தோஷத்துடன் ஸ்தோத்திரம் செய்தார்கள்.

**4–11.** ஹே! பகவானே, சம்பு பிரஸாதத்தால் கிடைத்த ஞானமுள்ளவரே, சம்பு பக்தியில் சிறந்தவரே, சம்பு பக்தர்களுக்கு நன்மையைச் சொல்லுகிறவரே வேதவேதாந்த பத்மகண்டத்திற்கு சூரியனே, வியாஸருடைய ஞானதீபத்திற்கு வர்த்தியாயிருப்பவரே, புராணமுத்து மாலைகளுக்கு கயருக விருப்பவரே, எங்களுடைய ஸம்ஸாரவிருக்ஷத்திற்கு கோடாலியாக விருப்பவரே, எல்லோருக்கும் கிருபாசமுத்திரமாய் நன்மையளிக்கிறவரே, தோஷமற்றவரே, ஞானத்துடன்கூடியவரே, மனிதர்களுக்கு தாயைப்போலிருப்பவரே, வியாசசிஷ்யரே, தர்மிஷ்டரே, பிரஹ்மநிஷ்டரே, எல்லா ஜந்துக்களுக்கும் ஸமமாயிருப்பவரே, ஸாரபூதமாயிருப்பவரே, ஸாக்ஷாத் ஸத்யத்தை ஆசிரயத்தவர்களுக்கு ஸத்யபூதமாயிருப்பவரே, எங்களுடைய குருவே, ஆத்மாவை யறியும்படி செய்பவரே உமக்கு நமஸ்காரம்.

12. இவ்விதம் கோத்ரரிஷிகள் ஸர்வஹித பிரதான ஸூதரை ஸ்தோத்திரம் செய்து, ஸர்வலோகநன்மையைக் கருதி ஸூதகீதாவிஷயமான கேள்வியைக்கேட்டார்கள்.

13. அந்த ஸூதரும் ஸ்வபாவமானதும் பரமுமான ஸ்வரூபானுபவத்திலிருந்து கிளம்பி எல்லோருக்கு நன்மைசெய்வதில் பிரியமுள்ள தனது குருவாகிய வியாஸரை தியானம்செய்தார்.

14–15. இந்தச் சமயத்தில் ஸத்யவதீ புத்திரரும், பஸ்மத்தால் பூசப்பட்ட அங்கங்களை யுடையவரும், நெற்றியில் திருபுண்டரம் தரித்தவரும், கிருஷ்ணாஜனம்தரித்தவரும், உத்தரீயத்துடனிருப்பவரும், தண்டம் ருத்திராக்ஷம் தரித்தவருமான வியாஸர் தானாகவே பிரஸன்னமானார்.

16–17. கருணைக்கடலும், குருக்களுக்கெல்லாம் குருவான வ்யாஸரைப்பார்த்து, தன்னுடைய சிஷ்யர்களுடன் ஸூதர் அவரை நமஸ்கரித்து பிரஸன்னமான இந்திரியமனதுடன் அவருக்கு உத்தமமான ஆஸனம் கொடுத்து தக்கபடி பூஜித்தார்.

18. ஸர்வக்ஞரும், ஸத்யவதீஸுதருமான அந்த வியாசபகவான் தன்னுடைய சிஷ்யரைப்பார்த்து கம்பீரமான வாக்குடன் சொன்னார்.

19. 'ஆஸ்திகனும், என் சிஷ்யனுமான ஹே! ஸூத! உனக்கு ஸம்பூர்ணமான நன்மையிருக்கட்டும்! உனக்கும், இவர்களுக்கும் என்னால் என்ன ஆகவேண்டியது, அதை பாபமற்றவனே! எனக்குச் சொல்.

20. புராணிக உத்தமரான ஸூதர் இந்தவியாஸ வசனத்தைக்கேட்டு லோகத்திற்கு ஹிதமான மதுரமான வார்த்தையைச் சொன்னார்.

21–22. ஸூதர்:—இங்கு இருப்பவர்கள், சுத்தர்களும் ஸத்யதர்மர்களுமான முனிகள்; அவர்களுக்கு என் கீதையை கேட்பதில் மிகுந்த சிரத்தையிருக்கிறது; தங்களுடைய க்ருபை

யிருந்தால்தான் அதைச்சொல்லமுடியும்; தங்களுக்கு இஷ்டமிருந்தால் 'சொல்' என்று எனக்குக் கட்டளையிடவும்.

**23–25.** இந்த ஸூதவசனத்தைக்கேட்டு கருணாநிதியான வியாஸபகவான் 'உன்னுடைய கீதையை கேட்கவிரும்புகிற இந்த சுபர்களுக்குச் சொல்' என்று உத்திரவுகொடுத்து, சிஷ்யனை ஆலிங்கனம்செய்து, அவருடைய ஹிருதயத்தைத் தொட்டு, ஸர்வேச்வரரான ஸாம்பனைத் தியானித்து, இவரை கிருபையுடன் பார்த்து, அவருடைய ஹிருதயத்தில் மகாதேவரை திரடமாக ஸ்தாபித்து, அவருடைய உச்சியை முகர்ந்துவிட்டு குரு சென்றார்.

**26–28.** ஸூதரும் மறுபடியும் திரியம்பகரான ஸாம்பனை தியானித்து, தண்டம்போல் நமஸ்கரித்து, ஸத்குருவாகிய வியாஸரை ஸ்மரித்து, கைகூப்பி, ஆதிமந்திரமாகிய ஷடக்ஷரத்தை ஜபித்து, சிரத்தையுடன் முனிசிரேஷ்டர்களைப் பார்த்து, அவர்களால் நமஸ்கரிக்கப்பட்டவராக, நிர்மலமான தன்னுடைய கீதையைச் சொல்லத்தொடங்கினர்.

---

## அத்தியாயம் 2.

---

### (ஆத்மாவால் ஸிருஷ்டியைக் கூறுதல்).

**1.** ஸூதர்:—ஹே! பாக்கியவந்தர்களான பிரஹ்ம நிஷ்டர்களே! கவனத்துடன் கேளுங்கள்; வேதஸம்மதமாயும், வெகு ரஹஸ்யமானதுமான விக்ஞானத்தைச் சொல்லுகிறேன்.

**2.** பசு, பாசங்களுக்கு வேறாகவும், ஸ்வதஸித்தமாகவும், ஸத்யஞான ஸுக அத்வயமாகவுமுள்ள, இந்த ஜகத்திற்கெல்லாம் கர்த்தாவாக, ஒருவர் இருக்கிறார்.

**3–5.** ஆகாசமுதலிய பூதங்கள் ஐந்து, அவைகளின் குணமாகிய சப்தாதிகள் ஐந்து, கர்மேந்திரியங்கள் ஐந்து, ஞானேந்திரியங்கள் ஐந்து, பிராணாதி வாயுக்கள் பத்து, மனஸ் புத்தி அஹங்காரம் சித்தம் என்று நான்கு, இவைகளுக்கெல்லாம் காரண

மாயிருக்கப்பட்ட அவித்யை ஒன்று (இந்த முப்பத்திநாலும்) பாசங்கள்; முப்பத்தி ஐந்தாவதான ஜீவன் பசுவாவான்; இந்த எல்லா ஜகத்திற்கும் கர்த்தாவான, பசுவுக்கு வேருன, பரமான சிவன் பசுபதியாவான்.

6. அக்ஞான உபாதியால் பின்னங்களான ஜீவர்களெல்லாம் எப்பொழுதும் பசுக்கள்; இந்த ஜீவர்களின் அக்ஞானம் ஸ்வபாவ மாகவே அனுதியாயிருக்கிறது.

7. ஸம்ஸாரியான ஜீவன் அக்ஞனுயிருப்பதால் அக்ஞானமே ஸம்ஸார பீஜமாயிருக்கிறது; ஞானத்தால் அதற்கு நிவிருத்தியுண் டாகிறது, பிரகாசத்தால் இருள் நீங்குவதுபோல.

8. அக்ஞான ஆகாரபேதமான, கேவலம் அவித்யையினு லேயே பசுக்களாகிய ஜீவர்களின் பேதம் கற்பிக்கப்படுகிறது; ஸ்வபவமாக இல்லை.

9. அக்ஞான ஆகார பேதமான மாயையால் பரமாத்ம லக்ஷணமுடைய ஸர்வக்ஞ ஈசுவர பேதம் கற்பிக்கப்படுகிறது.

10. எப்படி (ஒரே) ஆகாசம் கட உபாதியால் கடாகாச மென்றும், மகாகாசம் என்றும் பின்னமாக விளங்குகிறதோ அப் படியே ஒரே பரமசிவன் சொல்லப்பட்ட உபாதிகளால் ஜீவாத்ம பரமாத்மா பேதத்தால் கற்பிக்கப்படுகிருன்.

11. எப்படி (சொல்லப்பட்ட அவத்யோபாதி ஆகாரம் பல வாயிருப்பதால்) ஜீவர்கள் அநேகமாக கற்பிக்கப்படுகிருர்களோ, அப்படியே (மாயோபாதி குணங்கள் பலவாயிருப்பதால்) பரமான ஈசுவரனும் நாநாவாக கற்பிக்கப்படுகிருன்.

12. பேதங்களான ஜீவர்களுக்குள் எப்படி ஏற்றக்குறைவு கற்பிக்கப்படுகிறதோ அப்படியே பரத்திலும் ஏற்றத்தாழ்வு கற் பிக்கப்படுகின்றது.

13. (விசித்திரமான) தேகேந்திரியாதி கூட்டத்தின் வாஸ னுபேதத்தால் பேதிக்கப்பட்ட அவித்யையே ஜீவபேதத்திற்கு காரணம்; வேறென்றுமில்லை.

14. குணங்களுடைய வாஸனு பேதத்தால் பேதிக்கப்பட்ட மாயை பரவஸ்துவின் பேதத்திற்கு காரணம்.

15. மும்மூர்த்திகளுக்குள் எவருக்கு ஸம்ஹாரத்தின்பொருட்டு மாயையிலுள்ள ஸத்வம் சரீரமோ, தமஸ்குணமோ அவர் ருத்ரர்.

16. அவ்விதமே எவருக்கு, லோகரக்ஷணையும்பொருட்டு, தமஸ் சரீரமோ, ஸாத்வீகம் குணமோ அவர் விஷ்ணு.

17. உத்பத்தியின்பொருட்டு எவருக்கு ரஜஸ் சரீரமோ அவரே பிரஹ்மன்.

18. ருத்திரனுடைய விக்ரகம் வெண்மை, விஷ்ணுவின் ஆகாரம் கருப்பு, பிரஹ்மனுடைய விக்ரகம் சிகப்பு என்று புத்தி முக்தியின்பொருட்டு சிந்திக்கவேண்டியது.

19. மொத்தமாக ஸத்வகுணத்தால் உண்டாகிறது வெண்மையென்றும், ரஜோகுணத்தால் சிகப்புயென்றும், தமோகுணத்தால் கருப்புயென்றும் அறியவேண்டியது.

20. (விசுத்தஸத்வ உபாதியினுல் மறைபடாத ஞானமிருப்பதால் பரதத்வத்திற்கு இந்த பேதமில்லையென்று மதித்து) வேதங்களும் ஸ்மிருதிகளும் பரதத்வம் ஒன்று என்ற புத்தியால் பிரஹ்மன், விஷ்ணு, ஈசுவரர்களை (ஒரே) பரதத்வமாகச் சொல்லுகின்றன.

21. எல்லாப் புராணங்களும், பாரதமுதலியவைகளும் பரதத்வம் ஒன்று என்ற தாத்பரியத்தையே கூறுகின்றன.

22. பிரஹ்மவிஷ்ணுவாதி ரூபத்தால் பிரஹ்விஷ்ணுவாதிகளாகிருர்களேதவிர பரம் தத்வம் ஆகமாட்டார்கள்.

23. அப்படியிருந்தாலும் ருத்திரன் உயர்ந்தவரென்று சொல்லப்படுகிறது; ஏனெனில் அவர் உத்தமமான ஸத்வத்தை தனது சரீரமாக நினைக்கிருர்.

24. ரஜஸ் தமஸைக்காட்டிலும் ஸத்வம் உத்கிருஷ்டமன்றோ! ஸத்வத்தால் ஸுகம், ஞானம் மற்றுமுள்ள பரம் அடையப்படுகிறது.

25. ருத்ரனுக்கே பரதத்வ பிரகாசம் மிகுதியாய் உள்ளது; பிரஹ்ம விஷ்ணு முதலிய தேவர்களுக்கு அப்படியில்லை.

26. ருத்திரன் எப்பொழுதும் தன்னைப் பரதத்வமாகவே நினைக்கிறான்; மற்ற தேவர்கள் அப்படி நினைப்பதில்லை.

27. தங்களை ஹரி பிரஹ்மாதி ரூபமாக ஹரி பிரஹ்மாதிகள் எண்ணுகிறார்கள்; ருத்ரன் அப்படி எண்ணுகிறதில்லை.

28. ருத்ரன் கார்யார்த்தமாக எப்பொழுதாவது தன்னை ருத்ரரூபமாக நினைக்கிறான்; பிரஹ்ம விளக்கம் அல்பமாயிருப்பதால் மற்ற தேவர்கள் அப்படி நினைப்பதில்லை.

29. பிரஹ்ம விஷ்ணு முதலிய தேவர்கள் சீக்கிரத்தில், யத்னமன்றி தங்கள் தங்கள் ரூபமாகவே தங்களை எண்ணுகிறார்கள், ஒருவரும் தத்வரூபமாக நினைக்கிறதில்லை. ருத்ரன் அப்படியல்ல.

30. பிரஹ்மா விஷ்ணு முதலிய தேவர்கள் சீக்கிரத்தில் தங்கள் ரூபத்தை யறிகிறார்கள்; தத்வரூபமாக எப்பொழுதாவது சிரமப்பட்டு எண்ணுகிறார்கள். ருத்ரன் அப்படியல்ல.

31. ருத்திரனுக்கு தத்வபுத்தி ஸ்வதஸித்தமாயிருக்கிறது. அவர்களுக்கு ஹரி பிரஹ்மாதி புத்தி ஸ்வபாவமாயிருக்கிறது.

32. ஹரி பிரஹ்மாதி தேவர்களை பூஜிப்பவர்களுக்கு சீக்கிரத்தில் பரபிராப்தி கிட்டாது, கிரமமாக கிடைக்கும்.

33. ருத்ரனை பூஜிக்கிறவர்களுக்கு சீக்கிரம் பரபிராப்தியுண்டு, கிரமமாக இல்லை.

34. இதர தேவர்களைவிட ருத்ர ரூபத்தினாலேயே ருத்ரன் சிரேஷ்டன்; இப்படி நிச்சய புத்தியிருந்தால் முக்தி கிடைக்கும்.

35. ருத்திரனைவிட குணாபிமானிகளான பிரஹ்மாதி தேவர்கள் மேலானவர்களென்ற புத்தி ஸம்ஸாரத்திற்குக் காரணமாகும்.

36. பாதத்வத்தைவிட ருத்ரன், விஷ்ணு, பிரஹ்மன் சிரேஷ்டன் என்ற நிச்சயபுத்தி ஸம்ஸார காரணமாகும்.

37. ருத்ரன், விஷ்ணு, பிரஹ்மன், ஸ்வராட், ஸ்மராட், இந்திரன் இவர்கள் பாதத்வம் என்ற ஞானம் மனிதர்களுக்கு முக்திக்கு காரணமாகும்.

38. (ராஜபுருஷனை) மந்திரியினிடத்தில் ராஜபுத்தி தோஷமாகாது, பலனுண்டாக்கும்; ஆதலால் எல்லாவிடத்திலும் பிரஹ்மபுத்தி முக்யம்; இதில் ஸந்தேகமில்லை.

39. அப்படியிருந்தாலும், ருத்ரனிடத்தில் பாதத்வ புத்தி வைப்பது வெகு சிரேஷ்டம்; பாஸ்பூர்த்தி அல்பமாயிருப்பதால் மற்றவைகளில் அப்படியன்று.

40–42. ருத்திரனுக்கு உள் (சரீரம்) ஸத்வமும், வெளி (ஸம்ஹாரத்தின்பொருட்டு) தமஸுமாம்; விஷ்ணுவுக்கு உள்ளே தமஸும், வெளியில் ஸத்வமும், பிரஹ்மனுக்கு உள்ளும் வெளியும் ரஜஸாக விருக்கிறது; இந்த ஸத்வகுணத்தை யபேக்ஷித்து மோஹத்தால் மனிதர்கள் ஹரி சிரேஷ்டமென்றும், ஹரன் சிரேஷ்டமென்றும் விவாதம் செய்கிறார்கள். ஸத்வமில்லாததால் பிரஹ்மனை மேன்மையாக நினைப்பதில்லை; ஆஹோ! இது மோகத்தின் கொடுமை!

43. ச்ரௌத ஸ்மார்த்த காமங்களை அநேக ஜன்மங்களில் செய்து ஸித்திபெற்றவர்களுக்கே ஹரியைவிட ஹரன் சிரேஷ்டன் என்ற புத்தியுண்டாகிறது.

44. மகாபாபிகளான மனிதர்களுக்கு ஹரனைவிட ஹரி சிரேஷ்டன் என்ற புத்தியுண்டாகிறது; அவர்களுக்கு எப்பொழுதும் ஸம்ஸாரமே உளது.

45. நிர்விகல்பமான பாதத்வத்தில் எவர்களுக்கு சிரத்தையிருக்கிறதோ அவர்களுக்கு யத்னமில்லாமலே முக்திஸித்திக்கும்.

46. நிர்விகல்பமான பாதத்வத்துக்கு பாசிவன் என்று பெயர்; அவர் ஸாம்பரும், முக்கண்ணுடையவரும், அர்த்த சந்திரனை தலையிலுடையவருமாக விருக்கிறார்.

47. தனது ஆத்மதத்வமாகிய ஸுகவிளக்கத்தின் ஸந்தோஷத்தால் தாண்டவத்தில் பிரியமுள்ளவராயிருக்கிறார்; குணமூர்த்திகளான ருத்ர விஷ்ணு பிரஹ்மாவால் உபாஸிக்கத்தக்கவர்.

48. இத்தகைய பரமான மூர்த்தி எவருக்கு விசேஷமாக எப்பொழுதுமிருக்கிறதோ அவரே ஸாக்ஷாத் பரமான தத்வம்.

49. பிரஹ்மன் விஷ்ணு முதலியவர்களை மோகத்தால் பரமாய் எண்ணினால் முக்திகிட்டாது, பரமபதமும் கிடையாது.

50. ஆதலால் எவருக்கு இந்த சிரேஷ்டமான ரூபம் விசேஷமாக விருக்கிறதோ அவரே சிவன், ஸத்சித் ஆனந்தன், உண்மையான தத்வம், மற்றதல்ல.

51. பிரஹ்மன் விஷ்ணு ருத்திரன் தனித்தனியா யிருந்தாலும் அவர்கள் பரமாத்ம பாகத்தில் சேர்ந்தவர்கள், ஜீவக்கூட்டத்திலிருப்பவர்களன்று.

52. ஜீவர்கள் அவித்யோபாதியால் தோன்றினவர்கள், மாயோபாதியாலன்று; மாயோபாதியுடைய சைதன்யம் பரமாத்மாவே, வேறன்று.

53. மாயாகார்ய குணத்தால் புரிவடைந்த பிரஹ்ம விஷ்ணு மஹேச்வரர்கள் மாயோபாதியுடைய பரவஸ்துவைச் சார்ந்தவர்கள், ஜீவக்கூட்டத்திலிருப்பவர்களன்று.

54. பரமாத்மவிபாகம் பிரஹ்மாதிகளுக்கு ஸமமாயிருந்தாலும் ருத்ரன் உயர்ந்தவனென்பதில் ஸந்தேகமில்லை.

55. விசேஷரூபமிருப்பதால் ருத்ரனை பிரஹ்மாவும் விஷ்ணுவும் தங்கள் ஐச்வரியங்களுடன் ஸேவைசெய்கிறார்கள்.

56. ருத்ரன் தன் ரூபத்தாலாவது, தனது ஐச்வரியத்தாலாவது பிரஹ்மனையும் விஷ்ணுவையும் அப்படி ஸேவிக்கிறதில்லை.

57–58. கிருபையாலும், லோகத்திற்கு நன்மையைக் கருதியும் தனதாத்மாவினாலும் ஐச்வரியங்களாலும் ருத்ரன் ஏதோ ஒரு ஸமயம் விஷ்ணு பிரஹ்மா முதலானவர்களுக்கு ஸேவை செய்கி

ளூர்; அப்படி பிரஹ்மனுல் விஷ்ணுவும், விஷ்ணுவால் பிரஹ்மனும் இந்திரனும் ஸேவிக்கப்படுகிறதில்லை.

59. மனிதர்கள் இவ்வளவுமட்டும் பிடித்துக்கொண்டு ருத்ரன், விஷ்ணு, பிரஹ்மனே, மாயையால் மோகமடைந்து, ஸமமாக விருப்பதாக எண்ணுகிறுர்கள்.

60–61. இவர்களுக்கு சிலர் மிகச் சிரமப்பட்டு ஸாம்யத்தை விரும்புகிறுர்கள்; ஹரனைக்காட்டிலும் ஹரியினுடைய மேன்மையைக் கருதுகிறுர்கள்; ருத்திரனுடன் மற்றவர்களுக்கு ஸாம்யத்தை விரும்புகிறுர்கள்; இவர்கள் மகாபாபத்துடன் ஸம்பந்தப்பட்டவர்கள், நரக ஸமுத்திரத்தை யடைவார்கள்.

62. ருத்ரனைவிட மற்றவர்களுக்கு மேன்மையைக் கருதுகிறவர்கள் எப்பொழுதும் கொடிய நரகத்தில் வருத்தப்படுவார்கள்.

63. சிலர் அத்வைதத்தை ஆசிரயித்துக்கொண்டு, பூனை விருதத்தை யனுஷ்டித்தவர்களாக (கண்ணை மூடிக்கொண்டு) மோகமடைந்து ருத்திரனுடைய ஸாம்பத்தை மற்றவர்களுக்குக் கருதுகிறுர்கள்.

64. தேகரூபத்தால் ஒன்ருக விருந்தாலும், சிரஸுக்கும் பாதத்திற்கும் ஸாம்யம் எப்பொழுதுமில்லையன்றே!

65. எப்படி துவாரமாயிருப்பது காரணம்பற்றி வாய்க்கும் அபானத்திற்கும் ஸாம்யம் நேராதோ அப்படி பிரஹ்ம புத்தியால் ஒன்ருயிருந்தபோதிலும் எல்லாவற்றிற்கும் ருத்ரசாம்யம் பொருந்தாது.

66-67. சங்கரனைவிட விஷ்ணு பிரஜாபதி இந்திரன் முதலியவர்கள் உயர்ந்தவர்களென்று ச்ருதி ஸ்மிருதி புராண வாக்கியங்கள் சொல்லுகின்றனவாகத் தோன்றுகிறது; அது அவர்களின் தத்வ ஸ்வரூபத்தால் சொல்லப்பட்டது.

68–69. விஷ்ணு பிரஜாபதி இந்திரர்களைக்காட்டிலும் ருத்ர மேன்மையைக்கூறும் வாக்கியங்கள், அவருடைய ஸ்வரூபத்தா

லும், தத்வரூபத்தாலும் மேன்மையைச் சொன்னதாக நினைக்க வேண்டும்; இப்படி விஷ்ணு முதலிய தேவர்களுக்கு இல்லை; இதுதான் உண்மை.

70. அதிகமாகச் சொல்வதில் என்ன விருக்கிறது! திருமூர்த்திகளின் விபூதிகளான (அம்சங்களான) ஜீவர்கள் சிரேஷ்டர்கள்; திருமூர்த்திகள் இவர்களைவிட சிரேஷ்டர்கள்.

71-72. இவர்களுக்குள் ருத்திரன் சிரேஷ்டன்; அவனைவிட இந்த மும்மூர்த்திகளுக்கும் காரணமான மாயி (மாயையை யுடையவன்) பரனான சிவன் சிரேஷ்டர்; இந்த மாயாவிசிஷ்டனான சிவனைக்காட்டிலும் ஸர்வக்ஞரும், ஸாம்பரும், ஸத்யாதி லக்ஷணமுடையவருமான ஸாக்ஷாத் சிவன் சிரேஷ்டன் என்பதில் ஸந்தேகமில்லை. இந்த சிவனைக்காட்டிலும் உயர்ந்தது ஒன்றுமில்லை.

73. நான் சிவஸ்வரூபத்தை நன்றாய் விசாரித் துணர்ந்து சுருக்கமாகச் சொல்லுகிறேன்; சிவனுக்கு வேறாக விளங்குவதெல்லாம் சிவனே என்பதில் ஸந்தேகமில்லை.

74. வேதவாக்கியத்தால் சிவனுக்கு வேறாக விளங்குவதையெல்லாம் சிவனாகவே யறிகிறவன் அவன் பரமதத்வத்தை யறிந்தவன் என்பதில் ஸந்தேகமில்லை.

75. வேதாந்த வாக்கியத்தால் எவன் எல்லாம் ஸாக்ஷாத் சிவன் என்று அறிகிறானோ அவன் முக்தன் என்பதில் ஸந்தேகமில்லை.

76 விளங்குகிற இந்த ஜகத்தெல்லாம் எவன் விளக்க மாத்திரமென்று அறிகிறானோ அவன் விளக்கமே ரூபமான தேவேசனை அடைகிறான் என்பதில் ஸந்தேகமில்லை.

77. தர்க்கத்தாலும், ச்ருதி பிரமாணத்தாலும், ஸ்வானுபவத்தாலும் தோன்றுகிறதெல்லாம் சம்புவென்று அறிகிறவன் பரமார்த்தத்தை யறிந்தவன்.

78. விளங்குகிறவைகளெல்லாம் பிரஹ்மமென்று அறிகிறவன், ஜகத்ரூபமாக பார்த்துக்கொண்டிருந்தாலும் அவர் அப்படிப் பார்க்கிறவன் அல்ல (ஜகத் மித்யையானபடியால்).

79. விளங்குகிறதும், விளங்காததும், இருக்கிறதும் இல்லாததும் (எல்லாம்) பரசிவன் என்ற வேதாந்த வாக்கியத்தின் முடிவு அடைவது கஷ்டம்.

80. இப்படி ச்ருதியில் சொல்லப்பட்டபடி கிருபையால் என்னால் உங்களுக்குச் சொல்லப்பட்டது; இதை முழுவதும் மனதில் வைத்திருந்தால் உங்களுக்கு பரமகதி இவ்விடத்திலேயே ஸித்திக்கும்.

---

## அத்தியாயம் 3.

---

### (ஸாமான்ய ஸ்ருஷ்டி).

1. ஸூதர்:—சேதனு சேதனங்களான இந்த எல்லா ஜகத்தும் ஸத்ய, பரானந்த, பிரகாச லக்ஷணமுடைய சிவனிடமிருந்து வெளிப்பட்டது.

2. சிவனே அத்வீதீயன், விகாரமற்றவன், மலமற்றவன்; அப்படியிருந்தாலும் (தனது ஆசிரயமாகிய மாயையால்) இந்த எல்லா சராசரங்களையும் படைக்கிறுன்.

3. (இந்த லோகத்தில்கூட) மணி மந்திர ஔஷதங்களின் ஸ்வபாவ சக்தியை அறிய முடியவில்லை; இந்த விபுவான பரமாத்மாவின் ஆச்சரியமான சக்தியைப்பற்றி சொல்லவேண்டுமா!.

4–5. எல்லாப் பிரமாணங்களைவிட உயர்ந்ததும், நித்தியமானதும், ஸாத்வீயான ச்ருதி ஆத்மாவிற்கு அத்வைதத்தையும், நிர்மலத்தையும், நிர்விகாரத்தையும் லக்ஷணமாகச் சொல்லுகிறது; அதுபோலவே சேதனு சேதனங்களுக்கு பிறப்பு, இருப்பு, லயத்தையும் சொல்லுகிறது. இந்திரியங்களுக்கு மேற்பட்ட விஷயஞானத்தில் ச்ருதியே நமக்கு பிரமாணமன்றோ.

6. ச்ருதி யொன்றாலேயே அறியக்கூடிய ஸூக்ஷ்ம விஷயத்தில் தர்க்கம் என்னசெய்யும்; தர்க்கம் பிரத்யக்ஷ முதலிய பிரமாணங்களுக்கு உதவியாயிருக்குமேயன்றி, ஸ்வதந்திரம் அதற்கு எப்பொழுதுமில்லை.

7. நித்தியமான இந்த ச்ருதி சம்புவினிடமிருந்து பிரகாச மடைந்தது என்பதில் ஸந்தேகமில்லை; சிலர் இது சங்கரனல் செய்யப்பட்டதென்று சொல்லுகிறுர்கள்.

8. அது அனுதியாயிருப்பதால் உயர்ந்த பிரமாணமா யிருக்கிறது; அதற்கு தன்னுலாவது, வேறென்றினுலாவது தோஷம் கிடையாது.

9. ஸூக்ஷ்மமாய் விசாரித்தால் வேதத்திற்கு ஸ்வத தோஷமில்லை; அப்படியிருந்தால் அதையொட்டிய வியவஹாரங்களுக்கு லோபமே வரும்.

10–14. மற்றென்று இல்லாததால் பரதோஷமும் இல்லை; ஆப்த வாக்கானபடியால் (வேண்டிய சிநேகிதர் முதலிய வாக்கைப்போல) ஸ்வதமாக தோஷமுடையதாயினும் வேதம் பிரமாணம் என்று சிலர் சொல்வது வெறும் வார்த்தையே; ஸ்வத தோஷமுள்ளது மற்றென்றின் சேர்க்கையால் எப்படி பிரமாண மாகும்; எதன் ஸம்பந்தத்தால், எந்த பாவம் (இருப்பு), எவனுக்கு ஸித்திக்கிறதோ, அந்த பாவம் அவனுக்கு பிராந்தியேயன்றி, ஸ்வ பாவமன்று; செம்பருத்தியின் சிகப்பு நிறம் ஸ்படிகத்தில் நன்ருக விளங்குகிறது; அப்படி விளங்கினுலும் அதற்கு சிகப்பு நிறம் பிராந்தியாலேயே தவிர வாஸ்தவத்தில் இல்லை; விசாரிக்குங்கால், செங்கல்லில் நெருப்பினுல் உண்டான சிகப்பு நிறமானது நெருப்பின் அம்சத்தினுடையதே தவிர கல்லினுடையதன்று.

15. ஒன்றில் மற்றென்றின் தர்மத்தின் தோற்றம் பிரமமென்று எண்ணப்படுகிறது; ஆப்தவசனத்தை அபேக்ஷித்து வேதத்திற்கு ஒரு பொழுதும் பிரமாண்யம் ஸித்திக்காது.

16. வேதத்தின் ஸ்வதஸித்தமான பிரமாணத்தன்மை, ஆப்தனில்லாத விஷயத்தில் கூடும்பொழுது, மறைந்து, தன் நாசத்தின் பொருட்டேயாகும்.

17. (இவ்விதம் நித்யமாயிருப்பதால் ச்ருதிக்கு பிரமாணத் தன்மை ஏர்ப்படுத்தி, ஸர்வக்ஞான ஈஸ்வரனுல் சொல்லப்பட்டதென்ற கக்ஷியாலும் அதற்கு அத்தன்மை பொருந்தும்).

ச்ருதி சங்கரனால் சொல்லப்பட்டதென்று என்னும் பக்ஷத்தில், அதற்கு பிரமாணத்தன்மை ஜாஸ்தியாகும், மகேச்வரன் ஆப்தர்களுக்குள் மேலானவனன்றோ!.

**18.** ஸர்வதோஷமற்றவரும், வெகு கருணையுடையவரும், ஸர்வக்ஞரும், சுத்தருமான ஈசுவரனுக்கு எப்படி தோஷம் கற்பிக்கப்படும்.

**19.** எல்லா தோஷமுடையவனும், கருணையற்றவனும், கெட்டவனும், அல்பக்ஞனுமான ஜீவனிடத்திலல்லவோ சிநேகமற்றதன்மை காணப்படுகிறது.

**20.** எவரை நினைப்பதாலேயே மலமுள்ள ஜீவன் நிர்மலனாகிறானோ அவர் எவ்விதம் மலமுடையவராவார்.

**21.** ஆதலால் இருகக்ஷிகளாலும் வேதம் பிரமாணம் என்பதில் ஸந்தேகமில்லை; (ஆனால்) பரமார்த்தமாக, வேதம் அனாதி (ஆதியற்றது, நித்தியமுள்ளது); சிவன் அதை பிரகாசப் படுத்துகிறவர் (விளங்கச்செய்கிறவர், தன்புத்தியால் உண்டாக்கினவர் அன்று).

**22.** இந்த விளக்கஞ்செய்வதை உத்தேசித்து, சிவன் வேதத்தைச் செய்தார் என்று சொல்லப்படுகிறது. ஆதலால் வேதத்தில் சொல்லப்பட்டதே உண்மையாகும்.

**23.** (ஆதலால் ச்ருதிசொல்லியபடி) பரமசிவன் அத்விதீயன் என்றும், அப்படியிருந்தாலும் அவராலேயே எல்லாம் நிர்மாணிக்கப் பட்டதென்றும் என்னால் சொல்லப்பட்டது. அந்த ஜகத்தெல்லாம் அவரே! (சேத்யமான ஜகத் சித்தினிடத்தில் அத்யஸ்தமாயிருக்கிறது; ரஜ்ஜு ஸர்ப்பத்தில் அத்யஸ்தமானது அதிஷ்டானத்தை தவிர வேறல்லவென்று அறியப்படுகிறது; அதுபோல மாயா நிர்மிதமான விச்வரூபமான ஜகத் பரமசிவனே).

**24–25.** சிவன் சித்ரூபன்; சராசரமான ஜகத்தெல்லாம் சேத்யங்கள் (சித்திற்கு விஷயங்கள்; சித்தால் அறியப்பட்டவைகள்); அப்படியிருக்க விருத்த தர்மத்துடன் கூடிய அந்த ஜகத்

எப்படி சம்புவாகும்; இது முதலிய சோதனைக்கு (விசாரணைக்கு) இடமில்லை; (ஏனெனில்) எவ்விடத்தில் வேதவிரோதமிருக்கிறதோ அங்குதான் விசாரிக்கவேண்டியது (இவ்விஷயத்தில் ச்ருதி விரோதமில்லாதபடியால் சோதனை வேண்டியதில்லை).

26. (கர்மத்தில் பிரவிருத்தியைக் கூறும்) ஏவுதலைக்கூறும் பிரமாணமுடைய தர்மத்தில் சோதனைக்கு இடமில்லை; அப்படியே (உத்பத்தி விதிரூபமான) வேதவாக்கியத்தால் அறியக்கூடிய சிவத்தினிடத்தில் கேள்விக்கிடமில்லை.

27. வியாதிக்கும் மருந்துக்கும் பாத்யபாதக பாவம் (நாசமடைவது, நாசஞ்செய்வது என்ற தன்மை) எப்படி சாஸ்திரத்தினுல் அறியப்படுகிறதோ, அப்படியே இந்த அர்த்தமும் சாஸ்திரத்தால் அறியப்படுகிறது, வேறொன்றாலும் அன்று.

28. ஈசுவர ஸ்வரூபவிஷயத்திலும், ஜகத் ஸிருஷ்டி விஷயங்களிலும், மற்றுமுள்ள இந்திரியங்களுக்கு எட்டாத விஷயங்களிலும் நமக்கு ச்ருதியே பிரமாணம்.

29. அல்லது, விருத்தமானவைகளை கூட்டிவைக்கக்கூடிய ஒரு சக்தி தேவதேவனுக்கு இருக்கிறது; அந்த மாயை என்ற சக்தியால் எல்லாம் இசைக்கப்படுகிறது.

30. உண்மையில் அந்த மாயை தத்வபூதமான பரமேச்வரனுல் ஸித்தியானவள் (அவரிடம் ஆசரித்தவள், பாதந்திரை); அந்த சேர்க்கக்கூடாததை சேர்பிவிக்கும் அவளுல் அவருக்கு எல்லாம் அடையப்படுகிறது.

31. துர்கடத்தைச் செய்யக்கூடிய அந்த மஹாமாயை இருக்கட்டும்; வேத பிரமாணத்தினுல் கைகூடியதை யெல்லாம் கொள்ளவேண்டியதே.

32. சோதனைக்கிடமில்லாத வேதார்த்தத்தில் விசாரணை செய்பவன் கீழேவிழுவான் (நரகமடைவான்); ஆதலால் எல்லாம் விட்டு வேதத்தை ஆசரியக்கவேண்டும்.

**33.** ரூபத்தைப் பார்ப்பதில் எப்படி கண் விசேஷமான (முக்ய) காரணமோ அப்படி தர்மமுதலிய ஞானத்திற்கு வேதம் அஸாதாரணகாரணம்.

**34.** ரூபத்தைப் பார்ப்பதற்கு எப்படி கிராணம் (முகர்ந்து பார்பது) காரணமன்றோ அப்படியே தர்மாதிபுத்திக்கு தர்க்கம் காரணமன்று.

**35–36.** ஆதலால் வேதத்தில் சொல்லிய பிரகாரமாகவே மகேச்வரன், அத்விதீயனாகவும், ஸ்வயம் சுத்தனாகவு மிருக்கிறார். அப்படி யிருந்தாலும் இங்க ஜகத் அவரிடமிருந்தே வெளிக்கிளம்பி, மறைபடுகிறது; அவரே ஸகலமான ஜகத்தும்; அவருடைய வைபவத்தை அறியவும், என்னால் சொல்லவும்முடியாது.

**37.** (எவனொருவன் தன்னை அவ்விதமான பரசிவத்தன்மையுடையதாக அறிந்து, ஸர்வஜகத் ஸ்வரூபத் தன்மையும் அறிகிறானோ) அந்த ஸாக்ஷாத் ஸர்வரூபமாகவிருக்கிற ஸாஹஸமுள்ளவனால் அறியவும் சொல்லவும் முடியும்; வேறொரு மனிதனால் முடியாது.

**38.** எப்படி அக்னியால் சுடப்பட்டு இரும்பு பிரகாசிக்கிறது போலும், தகிக்கிறதுபோலுமிருக்கிறதோ அப்படியே சிவனால் பிரகாசிக்கப்பட்ட வேதம் எல்லாவற்றையும் சொல்லுகிறது போல் விளங்குகிறது.

**39.** இரும்பு அவயவங்களுடன் சேர்ந்து எப்படி அக்னி தகிக்கிறதோ அப்படி வேதங்களுடன் சேர்ந்து சிவன் எல்லா அர்த்தங்களையும் ஸாதிக்கிறான்.

**40.** அப்படியிருந்தும் தர்மாதிவஸ்துக்களில் வேதமன்றியில் தான் ஸ்வயமாக பிரமாணமாகிறதில்லை; வேதமும் அவரன்றி பிரமாண மாகிறதில்லை.

**41.** ஆதலால் மகேச்வரனால் பிரகாசமடைந்த வேதம் எல்லா வஸ்துக்களிலும் பிரமாணமாகும்; இல்லாவிடில் ஜடமாகிய சப்தம் எப்படி இந்திரியங்களுக்கு எட்டாத விஷயத்தில் உதவியாயிருக்கும்.

**42–45.** மேருமலைச்சாரலில் தபஸ்செய்து, ஜகத் குருவான சம்புவை தரிசித்து, அவருடைய பிரஸாதத்தால் இந்த அர்த்தம் என்னால் அறியப்பட்டது; அவர் ஆக்ஞையால் இந்த ஸம்ஹிதை என்னால் சொல்லப்பட்டது; நான் அல்பனாயிருந்தாலும், நீங்களெல்லோரும் மகான்களாயிருந்தாலும் நான் உங்களுக்கு குருவானேன்; அது சிவாக்ஞை; ஒருவராலும் தடுக்கமுடியாது. சிவனுடைய ஆக்ஞாவலியால் விஷ்ணு பிறந்து மரிக்கிறான்; பிரஹ்மன், ஸ்வராட் விராட் எல்லாம் அவ்விதமே; பிரஹ்ம விஷ்ணுமுதலானவர்கள் கெடுதலான ஒட்டகமாகவும், கழுதையாகவும், மரங்களாகவும் ஆனார்கள்.

**46.** ஆதலால் எனக்கு குருத்தன்மையும், உங்களுக்கு சிஷ்யத்தன்மையும் நேர்ந்ததில் ஸந்தேகமில்லை; சங்கரன் ஸ்வதந்தரன் அன்றோ.

**47–49.** மகாதேவனுடைய பக்தர்களும், அவர்களுக்கு பக்தர்களுமான மானிடர்கள் ஸ்வதந்திரர்களாக விருக்கும்பொழுது அந்த மகேச்வரன் விஷயத்தில், கேள்வியேன்.

ஸ்வதந்திரத்தால் அமிருத்தத்தைத்தள்ளி விஷம் சிவனால் புஜிக்கப்பட்டது; பிரஹ்மனுடைய தலையும், விஷ்ணுவுடைய தலையும் அவரால் சேதிக்கப்பட்டன; அவர் பிரஸாதத்தால் உள்ளங்கை வில்வப்பழம்போல என்னால் எல்லாம் அறியப்பட்டது.

**50.** பிரஸாதபலத்தால் என்னால் ஸாக்ஷாத் ஸத்யார்த்தம் சொல்லப்பட்டது; பிரஸாதமில்லாமல் எவர்தான் சொல்ல சக்தியுள்ளவராவர்.

**51.** ஆதலால் எல்லாவற்றையும் விட்டு விட்டு, பரமசிரத்தையுடன் என்னால் சொல்லப்பட்ட வேதஸம்மதமான பரமாத்வைதத்தை அறியவேண்டும்.

**52.** ஞானத்தாலன்றி மற்றொன்றால் முக்தி இல்லை; ஆதலால் நீங்களும் அத்வைத ஞானிகளாக விருங்கள்.

**53.** பரமார்த்த ஞானம் ஸ்வானுபவத்தாலும், ச்ருதி, ஸ்மிருதி புராணங்களாலும், வேதவிரோதமில்லாத தர்க்கத்தாலும் ஸித்தித்திருக்கிறது.

**54.** பரமாத்வைத விக்ஞானத்தை இருக்கிறபடி (ச்ருதி சொல்லியபடி) கிருகிக்கவேண்டியது; இந்த ச்ருதி வாக்யத்தாலுண்டானதை வேறு தர்க்கங்களால் பாதிக்கக்கூடாது.

**55–56.** பரமாத்வைதத்தை விட்டு மோகமடைந்த சிலர் பேதத்தைக் கற்பிக்கிறார்கள்; அப்பொழுது ஸத்தான சம்பு இரண்டுள்ளவனாக ஆகுவான்; இவர்கள் வேதார்த்தமான மகாத்வைதத்தை அறிகிறார்களில்லை; வேதஸித்தமான மகாத்வைதத்தை எவனால் அறியமுடியும்.

**57.** சிலர் பரமாத்வைத லக்ஷணமுடைய தேவனை பின்ன பின்னத்தன்மையோடு கற்பிக்கிறார்கள்; அது சரியன்று.

**58.** பேதாபேத பக்ஷத்திலும் பேதாம்சம் பிரமாணஸித்தமில்லாதபடியால் மித்தையே; பேதத்தை நிரூபிக்கமுடியாததாலும் (பிரமாணமில்லாதபடியால்); அதைச் சார்ந்த தர்மி முதலியவைகளை நிரூபிக்கமுடியாததாலும் இந்த கக்ஷி சரியன்று.

**59.** ஆதலால் ஈச்வரனைத்தவிர மற்றொன்றும் கொஞ்சம் கூடயில்லை; ச்ருதியும் இரண்டாவதிருந்தால் பயம் உண்டாகிறதென்று கூறுகிறது.

**60.** ஏகத்வத்தை அறிகிறவனுக்கு மோகம் ஏது! சோகம் ஏது! என்று ச்ருதி அத்வைதத்தைச் சொல்லுகிறது.

**61.** (இந்த ச்ருதியின்) வாக்யார்த்தம் ஏகத்தன்மையே, வேறன்று; பேதத்தைக்கருதினால் (இவைகளிலுள்ள) ஸ்துதியும், நிந்தையும் விரோதமாகையால் ச்ருதி விரோதப்படும்.

**62.** கேவலம் சுத்தமுள்ள சித்தமுடையவர்களுக்கும், சிவனுடைய கருணைபலத்தால், சிரத்தையுடன் வேதத்தால் பரமாத்வைதம் விளங்கும்.

63. சிவபக்தனுக்கே, பிரஸாதமிருதியால், பரமாத்வைதம் உண்மையாக விளங்கும்; வேறு காரணத்தால் விளங்காது.

64. பிரஸாத மில்லாதவனுக்கு பரமாத்வைதம் விளங்காது; தேவனுடைய பிரஸாதம் அடைவது வெகு கஷ்டம்.

65. வேதவழியாலேயே, மற்றவழியிலுள்ள வாதங்களை நீக்கி, சிவஸ்வரூபமாகிய பரமாத்விதீயத்தை, மோக்ஷத்தை இச்சிக்கிறவன் ஆசிரயிக்கவேண்டியது.

---

## அத்தியாயம் 4.

---

### (விசேஷ ஸ்ருஷ்டி கதனம்).

1. ஸூதர்:—(சிருஷ்டிக்கு) முன் ஜகத் கர்த்தாவானவர் தனது மாயையுடன் (ஸ்வதந்திரமில்லாத மாயையுடன்) அபேதமாகவும், பூர்வகல்ப வாஸனைகளுடன்கூடின ஈசுவரனுகவிருந்தார்.

2. காலகர்மங்களை யனுஸரித்து தனக்கு வேருகாத தன்னுடைய மாயையால் தனக்கே பேதத்தைக் இந்த பிரபு கற்பிக்கிருர்.

3. ஒருபொழுதும் கற்பிக்கப்பட்ட இந்த பேதமானது அபேதத்தைப் பாதிக்கிறதில்லை; கற்பிதங்கள் வஸ்துக்கள் அல்லாததால் ஈச்வரனுடன் விரோதமின்மையும் ஸித்திக்கிறது.

4–5. மேலும் பூர்வகல்ப வாஸனு பலத்துடன் கூடியவராய், ஜகத் சிருஷ்டியை யோஜித்தவராய் முன்போல் ஸத்வாஜஸ்தமோ குணங்களையுடைய தனது சக்தியான மாயையால் ருத்ரன் விஷ்ணு பிரஹ்மனை ஸிருஷ்டித்து அந்தர்யாமியாக அவர்களுக்குள் ஹரன் பிரவேசித்தார்.

6–9. இவர்களுக்குள் பரத்துக்கு அபேதமாக, பரதத்வத்தைப்போலவே சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரத்தை ருத்ர ரூபத்துடனேயே செய்கிருர்; விசேஷமாக சராசரமான ஸர்வஜகத்தையும் ஸம்ஹாரஞ் செய்கிருர்;

விஷ்ணுவும் பாத்துக்கு கேவலம் அபேதமாக விஷ்ணு ரூபத்தால் சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரத்தைச் செய்கிறுர்; விசேஷமாக சராசரமான ஜகத்தைக் காப்பாற்றுகிறுர்.

பிரஹ்மனும் பாத்துக்கு அபேதமாயிருந்து சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் செய்தாலும், விசேஷமாக முன் எல்லா ஜகத்தையும் பலவிதமாக சிருஷ்டிக்கிறுர்.

**10–14.** சப்தமுதலான பூதசிருஷ்டியும் பரமான சிவனுலேயே உண்டாகிறது (பிரஹ்மனுல் அன்று); எல்லோருடைய அந்தக்கரணங்களின் ஸம்ஷ்டி சிருஷ்டியை (ஹிரண்யகர்ப்பரை) பிரதானமாக திருமூர்த்திகளுக்குள் ஹரனே செய்கிறுர்; அப்படியே பிராணனுடைய ஸமஷ்டி சிருஷ்டியையும், எல்லா ஞானேந்திரிய ஸமஷ்டி சிருஷ்டியையும், எல்லா கர்மேந்திரிய ஸமஷ்டி சிருஷ்டியையும் பிரதானமாக ஹரனே செய்கிறுர்; இதில் ஸந்தேகமில்லை.

**15–16.** அப்படியிருந்தாலும் பரமான தத்வமானது மும்மூர்த்திகளுக்கும் காரணம், (அதனுல்) பிரஹ்ம விஷ்ணு மகேச்வரர்களுடைய சிருஷ்டிகளை உபகரிக்கிறது; (ஆதலால்) உபசாரமாக இவர்களும் சிருஷ்டிக்கிறவர்களென்று சொல்லப்படுகிறுர்கள்.

**17.** ஸமஷ்டிகளிலிருந்து வ்யஷ்டிகள் உண்டாகின்றன; முன் கல்பம்போல ஸமஷ்டிகளில் தேவதைகள் உண்டாகிறுர்கள்.

**18–19.** ஸமஷ்டி வ்யஷ்டி ரூபங்களுக்கு விஷ்ணு பாலகர்; ருத்ரன் இவைகளுக்கு ஸம்ஹர்த்தா; வேறு ரூபத்துடன், பூர்வ கல்பம்போல், அந்தக்கரண ஸமஷ்டியில் எந்த தேவதை உண்டாருரோ அவருக்கு ஹிரண்யகர்ப்பர் என்று பெயர்.

**20.** பிராண ஸமஷ்டியிலுண்டானவர் ஸூத்ராத்மா எனப்படுவர்; ச்ரோத்ர முதலிய ஸமஷ்டிகளில் திக், வாயு, சூரியன், வருணன், பிருதிவீ என்ற தேவதைகள் உண்டாகிறுர்கள்.

**21.** பாதம் கைமுதலியவைகளில் திருவிக்ரமன், இந்திரன் முதலியவர்கள் உண்டாகிறுர்கள்.

**22.** கிரமமாக, ஸமஷ்டியில் உண்டான தேவதைகள் வியஷ்டி பூதமான இந்திரியங்களுக்கு ஏவுதல்செய்கிற தேவதைகளாக விருக்கிறார்கள்.

**23–25.** வாயுதேவதை த்வக்குக்கும் (மேல் சதைக்கும்), திக்தேவீ காதுக்கும், முகர்தலுக்கு பிருதிவீ தேவியும், வாக்குக்கு அக்னியும், உபஸ்தத்திற்கு பிரஜாபதியும், பாயுவுக்கு மித்திரனும், பாதத்திற்கு திருவிக்கிரமனும், கைக்கு இந்திரனும் அபிமானி தேவதைகளாக விருக்கிறார்கள்; சிவன் எல்லாவற்றிற்கு நியாமகன்.

**26–27.** அந்தக்காணம், மனஸ், புத்தி, அஹங்காரம், சித்தம் என்று நான்கு விதமாக விருக்கிறது; சந்திரன், பிரஹஸ்பதி காலாக்னிருத்ரர், சிவன் இவர்கள் கிரமமாக அவைகளுக்கு தேவதைகள்.

**28.** பூர்வ கல்பத்தில் எப்படியோ அப்படியே ஆகாசமுதலிய ஸ்தூலபூதங்கள் ஸூக்ஷ்மபூதங்களினின்றும் உண்டாகின்றன.

**29–30.** சேதனமுடைய சரீரிகளின் போகத்திற்காக அண்டபேதங்களும், லோகபேதங்களும் சேதனங்களும், அசேதனங்களும், மற்றுமுள்ள பூதங்களும் உண்டாகின்றன; எல்லா போக்தாக்களும் பசுக்கள்; பரமான சிவன் போஜயிதா (போகத்தைச் செய்விப்பவர்).

**31.** ஸுகதுக்காதி ஸம்ஸாரமாகிய இந்த எல்லாபோகமும், ஸ்வப்னத்தில்போல, தேவதேவனுடைய மாயையால் கற்பிக்கப் பட்டது.

**32.** மாயையால் கற்பிக்கப் பட்டதெல்லாம் விசாரிக்கும் பொழுது மாயையேயன்றோ! காரணத்தைத்தவிர காரியம் வேறன்று என்று ஏற்பட்டிருக்கிறதல்லவோ!

**33.** மாயையும் காரணமாக கற்பிக்கப்பட்டிருக்கிறது; உண்மையாய் பார்க்கும்பொழுது அதிஷ்டானத்திற்கு வேறாக மாயையில்லை.

**34.** வியவகார திருஷ்டியால் மாயாகல்பனே ஏற்பட்டிருக்கிறது, உண்மையாக இல்லே; உண்மையில் பரமாத்வைதமான பிரஹ்மமேயுளது, வேறென்றுமில்லே.

**35.** ஸாக்ஷாத் பிரஹ்மமே மாயாரூபத்தன்மையோடு விளங்குகிறது; ஜகத்ஜீவ முதலிய ரூபமாகவும் விளங்குகிறது; இந்த தேவனுடைய வைபவம் ஆச்சரியமானது.

**36.** பிரஹ்மத்தின் ஸ்வரூபத்திற்கு வேருக ஒன்றுமில்லே; அப்படியிருந்தும், தனக்கு வேருக விளங்குகிறது; தைவவைபவம் ஆச்சரியமானது!

**37–38.** ஜகத்தாகப் பார்க்கிறவன் பந்தப்படுகிருன், முக்தியடைகிறதில்லே; ஸ்வானுபவத்தால் இதெல்லாம் பிரஹமமென்றறிகிறவன் கோரஸம்ஸாரத்திலிருந்து உடனே முக்தியடைகிருன், ஸந்தேகமில்லே.

**39–40.** இதெல்லாம் பரம் பிரஹ்மமென்று பிரமாண தர்க்க அனுபவங்களாலும் குருபதேசத்தாலும், ஈசுவர பிரஸாதத்தாலும் அறிந்து, ஞானபிரகாச பாகுல்யத்தால் ஞானத்தையும் ஆத்மாவாகவே நினேத்து, கேவலம் ஆத்மாவாக நிற்பவன் பந்தத்திலிருந்து விடுதலேயடைகிருன்; வேதார்த்தத்தை எவன் இவ்விதம் அறிகிருனே அவனும் விடுபடுகிருன்.

**41.** இவ்விதமாகப் படிப்படியாய் அத்வயமான ஆத்மாவை யறிகிறவன் இந்த எல்லா ஜகத்தையும் பார்த்துக்கொண்டிருந்தாலும் (ஜகத்தாக) பார்க்கிறவனன்று.

**42.** விளங்குகின்ற இந்த எல்லா ஜகத்தையும் விளக்கமான பரமபதம் என்று, வேதாந்த பிரமாணத்தாலறிகிறவன் அப்பொழுதே முக்தியடைகிருன்.

**43.** இவ்விதமாக அத்வைதமான ஆத்மாவை பாராமலே பார்க்கிறவனுக்கு ஜகத்ரூபமாய் பிரகாசிப்பதும் கேவலம் ஆத்மாவே.

44. மகாயோகியானவன் இவ்விதமறிந்து, ஜகத் தோன்றி னுலும், நிச்சலமாக, விளங்குகிற தெல்லாவற்றையும் ஆத்மாவாக அறிகிருன்.

45. விளங்காததை நிஷேதம் செய்கிருன் (தோற்றமில்லாததை ஆத்மாவாக கிரகிப்பதில்லை); (பாவ, அபாவங்களின்) ஸித்தியும் அஸித்தியும் அதை அங்கீகாரம் செய்கிறவனுக்கும், நிஷேதிக்கிறவனுக்குமேயன்றி, சின்மாத்திரரூபனுன இந்த ஆத்மாவிற்கில்லை.

46. இந்த மகாயோகிக்கு ஸாக்ஷாத் பிரகாசாத்மாவாக கேவலமாயிருப்பதே ஸ்திதியாகும் (இருப்பாகும்); ஞானம், அக்ஞானம், ஜகத் இது ஒன்றும் தோன்ருது.

47. 'பிரகாசாத்மாவாக ஸாக்ஷாத் இருப்பு' என்று சொல்லுகிறதும் நான் மோகத்தால் சொல்லுகிறேன்; அதுவும் அதனிடத்தில் காணப்படுகிறதில்லை.

48. அவனுடைய ஸ்திதி என்ஞல் அறியவும், சொல்லவும் முடியாது; சிரத்தையினுல் பிராந்த புத்தியால் கொஞ்சம் அலப்பப்படுகிறது.

49. இவ்விதமாக ரஹஸ்யமானதும், எல்லா உபநிஷத்துகளிலுள்ளதும், ஹரனுடைய தாமரைக்கண்ணுல் கடாக்ஷிக்கப்பட்டதுமான விஷயம் என்ஞல் சொல்லப்பட்டது; இதை அறிந்தவன் வேதவித்தேயாவான்.

---

## அத்தியாயம் 5.

---

### (ஆத்ம ஸ்வரூப கதனம்).

1. ஸூதர்:—ஹே! முனிகளே! பக்தர்களாகிய உங்களுக்கு உத்தமமானதும், வெகு ரஹஸ்யமானதும், வேதத்தாலுண்டானதுமான விக்ஞானத்தைச் சொல்லுகிறேன்.

2. ருத்ரன், விஷ்ணு, பிரஹ்மன் முதலான எல்லா சேதனர்களும் தனக்குத்தானுகவே 'அஹம்' என்றும், 'இதம்' இதுவென்றும் சொல்லுகிருர்கள்.

3. வெளிப்பதார்த்தங்களில் 'இது' என்கிற புத்தியும், தன் ஆத்மாவிடத்தில் 'அஹம்' நான் என்கிற புத்தியும் எல்லா ஜனங்களுக்கும் பிரஸித்தமாயிருக்கிறது; இந்த விஷயத்தில் ஒருவருக்கும் விவாதமில்லை.

4. இது என்ற கடமுதலிய வஸ்துக்களில் ஆத்மாவற்ற தன்மையும், 'நான்' என்பதில் ஆத்மத்தன்மையும் ஸ்வபாவமாக எல்லாமனிதர்களுக்கும் ஸித்தித்திருக்கிறது.

5. இப்படி எல்லா ஜந்துக்களுக்கும் அனுபவம் ஸ்தாபிதமாக விருக்கிறது; இவ்விஷயத்தில் பிராந்தர்கள்கூட விவாதம் செய்கிறதில்லை.

6–7. இப்படி விஷய வியவஸ்தை ஏற்பட்டிருக்கும் பொழுது, புத்திசாலிகளான, ஸம்ஸார விஷ விருக்ஷத்தை அடியோடு வெட்டியெறிய இச்சையுள்ளவர்களால் ஸ்வபாவமாய் எங்கு எங்கு 'இது' என்ற புத்தி தோன்றுகிறதோ அங்கு அங்கு அனாத்மத் தன்மையை அறிந்துகொள்ளவேண்டியது.

8. எங்கு எங்கு 'அஹம்' நான் என்ற புத்தி காணப்படுகிறதோ அங்கு அங்கு ஆத்மத்தன்மையை அறியவேண்டும்.

9. சரீரத்தில் எல்லோராலும் 'இது' என்கிற புத்தியும், அப்படியே 'நான்' என்கிற புத்தியும் காணப்படுகிறது; ஆதலால், இவை பேதங்களான விஷயங்களைப் பற்றி இருக்கவேண்டும்.

10. 'இது' என்பது சரீரத்தை ஒட்டியும், 'அஹம்' என்பது ஸாக்ஷாத் சித் ஆத்மாவை ஒட்டியும் இருப்பதில் ஸந்தேகமில்லை.

11. 'இது' என்ற சரீரத்தில் 'நான்' என்று உண்டாகிற புத்தியானது பிராந்தியே; ஒன்று இல்லாததில் அது இருக்கிறது என்று கிரகிக்கிறது பிராந்தியன்றோ.

12. அசித்ரூபமுள்ள (சரீர) பிண்டம் அகம் புத்தியின் ஆதாரமாயிருக்காது; மண் பிண்ட முதலியவைகளில் இந்த அகம் விருத்தியின் ஆலம்பனம் காணப்படாததால்; ஆதலால் இந்த தேகம் அநாத்மாவே.

13–14. இந்திரியங்கள், பிராணன், மனஸ் இவைகளெல்லாம் அசித் ஆனபடியால் 'அகம்' என்பதாகச் சொல்லமுடியாது; புத்தியைப்பற்றி அசித்தன்மைதான் கொள்ளவேண்டியது; புத்திக்கு ஜன்ம நாசம் காணப்படுகிறது; அசித் ரூபமான சுவர் முதலிய வைகளுக்கன்றோ ஜன்ம நாசமுண்டு.

15. 'அகம்' புத்தியை, அகங்காரமும் சித்தமும் அசித்தானபடியால் ஆலம்பனமாகக் கொள்ளமுடியாது.

16. எல்லா ஸுகதுக்க முதலிய புத்திகள் ரூபமாக 'அகங்காரமே' விவர்த்தமாய் விகாரமடைகிறது; ஆதலால் சரீரம்போல அதுவும் அநாத்மாதான்.

17. பால் முதலியவைகளில், மாறுபாடு அடையும் தன்மையால், அசேதனத்தன்மை லோக பிரஸித்தமன்றோ.

18. ஆதலால் 'அகம்' என்ற புத்திக்கு சித்ரூபமான ஆத்மா அர்த்தமாகிறது; 'இதம்' புத்திக்கு அசித் ரூபமான அனாத்மா அர்த்தமாகிறது.

19–20. இருந்தாலும் புத்திவிருத்தி ஸம்பந்தமாக ஸ்வயம் பிரகாசமானபிரத்யக் ஆத்மா கடகுட்யம்போல் புத்தி விருத்திக்கு அதீனமாக (உள்பட்டு, அதனால் பிரகாசிக்கப்பட்டு) விளங்குகிறதில்லை; (பின் எவ்விதம் விளங்குகிறதென்றால்) ஸ்வச்சமான விருத்தியை யடைந்து (அதாவது புத்தி விருத்தி அதை விஷயீகரிக்கப் போகும்பொழுது), அந்த புத்திவிருத்திக்கு ஸாக்ஷியாக விருந்து கொண்டு, விருத்தியால் நீக்கப்பட்ட அக்ஞானத்தை அந்த தேஜஸால் விழுங்கிவிடுகிறது.

21. விருத்திக்குள் பிரவேசித்த சைதன்ய ஸம்பந்தத்தால், விருத்தியானது ஜடரூபமான கடமுதலியவைகளை தனது ரூபம் போல் விளங்கச் செய்கிறது.

22. ஆதலால் 'அகம்' என்ற புத்தி விருத்திக்கு அர்த்தமாயிருந்தாலும் (விஷயமாயிருந்தாலும்) கடம்போல் அநாத்மா ஆகாது; ஸ்வயம் பிரகாச ரூபத்தால் ஸாக்ஷாத் ஆத்மாவாகவே ஆகும்.

**23.** எதன் ஸம்பந்தத்தால் 'அகம்' விருத்திபுத்தி தன்மை யுடையதாக விளங்குகிறதோ, ஸ்வயம்பிரகாசமான அது எப்படி அந்த புத்திக்குள்பட்டு பிரகாசிப்பதாக ஆகும்.

**24.** ஸ்வதஸித்தமான சைதன்யத்தால் விளங்கப்பட்டு 'அகம்' விருத்தி பிரகாசிக்கிறது; அந்த சைதன்ய ஸம்பந்தத்தால் பிரத்தியயம் (அறிவானபுத்தி விருத்திபோல்) போல பிரகாசிக்கிறது.

**25.** அகம் புத்தி உருவத்தின் ஸம்பந்த பிராந்தி மாத்திரத்தால் ஆத்மா கர்த்தா வென்றும் போக்தா, ஸுகி, துக்கி, ஞாதா வெனவும் பிரகாசிக்கிறது.

**26.** சித்மாத்திரத்தை தவிர வேறு சரீரம் ஆத்மாவிற் கில்லை; சித்ரூபமே தனது அக்ஞானத்தால் வேறுவிதமாக விளங்கிறது.

**27.** எல்லா தேகங்களிலும் 'நான்' என்ற ரூபமுள்ள புத்தி எது விளங்குகிறதோ அதற்கு சித்ரூபமான ஆத்மாவே அர்த்தமாகிறது, வேறு அன்று.

**28.** 'பசு' என்ற புத்திக்கு எப்படி கேவலம் பசுத்தன்மை அர்த்தமாகுமோ, அப்படி 'அகம்' புத்திக்கு கேவலம் சத்ரூப ஆத்மாவே அர்த்தமாகும்.

**29.** எப்படி வியக்தி ஸம்பந்தரூபமாய் (தனித்தனியாக விருக்கிற பசுக்களில்) பசுத்தன்மை வெவ்வேறாக காணப்படுகிறதோ அப்படி அகங்கார ஸம்பந்தத்தால் சித்ரூபமாக விளங்குகிறது.

**30.** 'பசு' என்ற சப்தம் ஒன்றாயிருந்தாலும், வியக்தி பேதத்தால் எப்படி பல அர்த்தங்களுடன் கூடுகிறதோ அப்படி 'அகம்' என்ற சப்தம் ஒன்றாயிருந்தாலும் வியக்தி பேதத்தால் பின்ன அர்த்தங்களில் சேருகிறது.

**31–32.** எப்படி தோற்றத்தால் 'கோ' சப்தத்திற்கு அர்த்தம் கோ வியக்தி (மாட்டின் ஆகாரம்) யோ, உண்மையால், 'பசுத்தன்மை' யே அர்த்தமோ, அப்படி தோற்றத்தால் 'அகம்' சப்த அர்த்தமானது, அகங்காரத்தை (அகங்காரவிருத்தியை),

குறிக்கிறது, உண்மையில் அப்படியல்ல, உண்மையாகப்ரத்யக் ஆத்மாவையே குறிக்கிறது; இதுதான் எல்லாத்துக்கும் ஸாத கமானது.

33. ஸாக்ஷியான ப்ரத்யக் ஆத்மா ஒன்றுயிருந்தாலும் அந் தக்காண பேதத்தால் வெவ்வேருக விருக்கும்தன்மை ஏற்படு கிறது.

34. ருத்ரன், விஷ்ணு, ப்ரஹ்மன் முதலிய எல்லாசேதனர் களும் சின்மாத்திர ஆத்மாவில். தத்வமாக, 'அகம்' சப்தத்தை உபயோகிக்கிருர்கள்.

35-36. ஸுஷுப்தியிலிருந்து வெளிவந்தவன் 'நான் தூங்கினேன்' என்று, ஸுஷுப்தி காலத்திலுள்ள ஆத்மாவில் 'அகம்' சப்தத்தை உபயோகிக்கிறுன்; ஸுஷுப்தியில் தேகாதி விசேஷ ஆகார விளக்கம் இல்லை; ஸுஷுப்திக்கு கேவலம் சை தன்யம் ஸ்வயமாக ஸாதகமாய் விளங்குகிறது.

37. ஆதலால், சின்மாத்திர ப்ரத்யக் ஆத்மாவிடத்தில் 'அகம்' சப்த ப்ரவிருத்தி யிருக்கிறது; உபாதியுடன் கூடிய ஆத்மாவில் ப்ரவிருத்தியில்லை.

38. எப்படி 'இரும்பு சுடுகிறது' என்று சொல்லும் பொழுது கேவலம் அக்னி சுடுகிறதோ, இரும்பு சுடுகிறதில்லை யோ, அப்படி 'அகம்' சப்தம் சைதன்ய வாசகமாகும்.

39. தோற்றத்தால் அக்னிஸம்பத்தால் எப்படி இரும்பு சுடுகிறதாக சொல்லப்படுகிறதோ அப்படி சித்ஸம்பந்தத்தால் அகங்காரம், 'அகம்' சப்த அர்த்தமாக சொல்லப்படுகிறது.

40. ப்ராந்த புத்தியுடையவர்களுக்கு சைதன்யத்தால் ப்ர காசமடைந்த அகங்கார சம்பந்தத்தால் தேகாதிகளில் 'அகம்' சப்தம் எப்படி உபயோகிக்கப்படுகிறதோ அப்படி அகங்காரவிரு த்தியிலும் 'அகம்' சப்தம் உபயோகிக்கப்படுகிறது.

41-42. இப்படி விவேகத்தால் ஸாக்ஷிக்கு விஷயமான ப்ராணன் தேகாதிபூர்வமான அந்தக்காண ஆத்மாவை, தனது ஆத்மாவிற்கு வேருக பிரித்து, ஸத்யமானந்த அத்வைதமும்,

ஸ்வயம்பிரகாச லக்ஷணமுடையதுமான ஸர்வஸாக்ஷியான ஆத்மாவை அகமர்த்தமாக சிந்திக்கவேண்டும்.

43. ருத்ரவிஷ்ணு பிரஹ்மன் முதலிய எல்லா சேதனர்களும் ‘நானே பரம் பிரஹ்மம்’ என்று ஆத்மாவையே சொல்லுகிறார்கள் (அகங்காரத்தை யல்ல).

44. அவர்களும் அத்வைதசின்மாத்திரத்தை ‘நான்’ என்றதற்கு அர்த்தமாக நன்றாய் அங்கீகரித்து ‘நான் அத்வைத பிரஹ்மம் என்று’ சொல்லுகிறார்கள், தேகத்தால் அன்று.

45. சின்மாத்திரமா யிருப்பதே எங்குமுள்ளதாயும், ஸத்யமாயும், ஸம்பூர்ணஸுகமாயும், அத்வயமாயும், ஸாக்ஷாத் பிரஹ்மமென்றும், வேறொன்றுமில்லையென்றும் தத்வவித்துக்களின் ஸ்திதியாம்.

46. சாஸ்திரமும் சிரத்தையுடன் ஸத்யசித் ஆனந்த அனந்தமான கேவலம் சுத்த வஸ்து பிரஹ்மமென்று கூறுகிறது.

47. இந்த பிரத்யக் ஆத்மாவே அத்வைதமாயும், எல்லாவற்றிற்கும் எப்பொழுதும் சாக்ஷியாயும், ஸத்யஞானசுகலக்ஷணமாயும், எப்பொழுது மிருக்கிறான்.

48. ஆதலால் ஸ்வானுபூதி ஒன்றிற்கே விஷயமான இந்த பிரத்யக் ஆத்மாவே சாஸ்திரஸித்தமானபரம் பிரஹ்மம், பாமார்த்தமாக வேறொன்றுமன்று.

49. இவ்விதமாக தர்க்கத்தாலும், வேதபிரமாணத்தாலும் ஆசார்ய உபதேசத்தாலும் சிவாத்ம ஐக்யத்தை அறிந்துகொள்ளாத மனிதன் பிரமையால் ஸம்ஸாரத்தில் விழுகிறான்.

50–53. உயர்ந்த பிரஹ்மவித்தான முனி யார் எனில், சாஸ்திர ஆசார்ய உபதேசத்தாலும் சாஸ்திர அனுஸாரமான தர்க்கத்தாலும், ஸ்திரமாக ஆத்மாவை ஸர்வஸாக்ஷியாக நன்றாய் நிச்சயித்து; எல்லாவற்றையும், பாக்கியன்னியில், தனது ஆத்மாவுக்கு அன்யமாக விளங்குவதை தனது ஆத்மமாத்திரமாக அறிந்து மறுபடியும், அத்வயமாகிய தனது ஆத்மாவை சுத்தப்பிரஹ்மம் என்று ஸ்வயமாகவும் அனுபவத்தாலும் நிச்சயித்து ; விகாரமற்ற

தும் அத்வயமான தனது சின்மாத்திரத்தில் இந்த நிச்சயத்தை கலந்து (லயப்படுத்தி); இந்த கலந்ததையும் (லயத்தையும்) கேவலமான சித்ரூபமாக அறிந்து, தானுகவே நிற்கிறவன் (பிரஹ்மவித் சிரேஷ்டனுவான்).

54. இத்தகைய வேதஸம்மதமானதும், ஸ்வானுபவமான பரமான நிஷ்டை (இருப்பு, ஸ்திதி) கேவலம் தேசிகனுடைய கடாக்ஷத்தால் உண்டாகிறது.

55. இந்த தேசிககடாக்ஷமும் யத்னமின்றி பரமேச்வர பிரஸாதத்தால் ஸித்திக்கிறது ; என்று சொல்லப்பட்டது ஸத்யம்.

56. ஸத்யம், ஸத்யம், மறுபடியும் ஸத்யம் ; (வலது) கையைத்தூக்கிக்கொண்டு சொல்லப்படுகிறது ; மகேச்வருடைய பிரஸாதத்தால் எல்லோருக்கும் எல்லாஸித்தியும் உண்டாகிறது.

57. சம்புவின் கிருபை உண்டானுல் எல்லாம் சம்புவாக தானே விளங்குகிறது ; வேறுவிதமாக, விளங்காது இதுஸத்யம்.

58. எப்பொழுது எல்லாம் தானுகவே சம்புவாக விளங்குகிறதோ அப்பொழுது ஸாம்பனுடைய பிரஸாதம் இருப்பதில் ஸந்தேகமில்லை, இதுஸத்யம்.

59. எப்பொழுது கொஞ்சமேனும் சிவனுக்கு வேருக விளங்குகிறதோ அப்பொழுது சங்கரனுடைய ஞானம் உண்டாகவில்லை யென்று என்னுடைய தீர்மானம்.

60. சிவனுக்கு வேருக எல்லாம் தோன்றினுலும், தத்வ திருஷ்டியால் ஸ்திரமாயறிந்தவன் எல்லாம் சிவம் என்று அறிகிருன்.

61. எப்பொழுதும் சிவரூபமாகவாவது, பிரபஞ்சரூபமாகவாவது, ஜீவருபமாகவாவது எது எது விளங்குகிறதோ அது பிரஹ்மமென்று சிந்திக்கவேண்டும்.

62. எல்லாரூபமாகவும் சம்புவே எப்பொழுதும் விளங்குகிருர் என்ற ஞானமுடையவர்கள் சங்கரஞானிகளுக்குள் சிரேஷ்டர்கள்.

63. எல்லாம் சம்புரூபமாக எவனுக்கு விளங்குகிறதோ அவனுக்கு கொஞ்சம்கூட வைதிக, தாந்திரக, லௌகிக காரியம் ஒன்றுமில்லை.

64. விளங்குகின்ற ரூபமாய் எல்லாம் சிவன் என்று சிந்தித்துக்கொண்டு லோகோபகாரமாக யோகி சஞ்சரிக்கிருன், வேறு விதமாகவில்லை.

65. தள்ளத்தக்கதும் கொள்ளத்தக்கதுமான எதையும் தனது ரூபத்திற்கு வேருக மகாயோகி பார்க்கிறதில்லை; எல்லாம் ஸ்வாத்மாவாக விளங்குகிறது.

66. பரமார்த்தமறிந்தவன் சண்டாளன் வீட்டிலாவது, விப்ரனுடைய கிரகத்திலாவது பக்ஷ்ய போஜ்ய வித்யாஸத்தை கொஞ்சங்கூட கவனிக்கிறதில்லை.

67. எல்லாம் சிவன் என்று சிந்தித்துக்கொண்டு இஷ்டப் படி யோகி இருப்பான்; மகாயோகி இவ்விதமுள்ளவன், இவனை தடுப்பவன் எவன்?.

68–69. நிறம்பசொல்வதில் என்ன பிரயோஜனம்? தேசிக னுடைய கடாக்ஷத்தாலும், ருத்ர பிரஸாதத்தாலும், அப்படியே பராசக்தியின் கிருபையாலும், ச்ருதி பக்தி பலத்தாலும், புண்ய பரிபாக பலத்தாலும், எல்லாவற்றையும் ஸ்வயமாகவே சிவரூப மாக பார்க்கிருன்.

70. எல்லாம் சிவன் என்ற சங்கர ஞானம் சோகமோகத் தைப் போக்கடிக்கும்; இதுவே வேதார்த்தம், வேறு அன்று ஸத்யமாய் சொல்லப்படுகிறது.

71. மனிதர்களுக்கு ச்ருதியில் பக்தியும், குருபக்தியும், சிவபக்தியும் இந்த ஸத்ய வித்யைக்கு ஸாதனம் என்று ஸத்யமாய் என்னுல் சொல்லப்படுகிறது.

72. எவனுக்கு படிப்படியாக ஸ்திரமாய் இந்த விக்ஞானம் உண்டாகிறதோ அவனுக்கு பரமான முக்தி ஸித்தமென்று ஸத்ய மாய் சொல்லுகிறேன்.

73. எப்பொழுதும் நித்ய முக்தனுயிருக்கப்பட்டவனுக்கு ஸம்ஸாரம் பிராந்தியால் உண்டாகிறது; ஆதலால் ஸம்ஸார நாசம் ஞானத்தாலேயே உண்டாகிறது, கர்மத்தாலன்று.

74. இந்த ஞானலாபத்தின்பொருட்டு, ஸமாஹிதனுய் வேதோக்த மார்க்கத்துடன் ஸாக்ஷாத் மகா கருணையுடைய குருவை ஆசிரயிக்கவேண்டும்.

---

## அத்தியாயம் 6.

---

### (ஸர்வ சாஸ்திரார்த்த ஸங்கிரகம்).

1. ஸூதர்:—பரம ரஹஸ்யமான எல்லா சாஸ்திரத்தின் அர்த்த சுருக்கத்தைச் சொல்லுகிறேன்; இதையறிந்தால் த்விஜனை மர்த்தியன் புவியில் மறுபடியும் ஜனிக்கான்.

2. ஸத் சித் ஆனந்த லக்ஷணமுள்ள ஸாக்ஷாத் பரமமான தத்வம் எல்லோருக்கும் நமக்கும் ஸ்வதமாக ஆத்மாவாக விருக்கிறது.

3. மகாத்மர்களா யிருக்கப்பட்ட தேவர்களாலும் இது, ஸூக்ஷ்மமாக யிருக்கிறபடியால், அறிகிறதற்கு கஷ்டமானது; ருத்ரன் தனதாத்மாவாக விளங்கும் அதை எப்பொழுதும் பார்த்துக்கொண்டிருக்கிறார்.

4. விஷ்ணு எப்பொழுதாவது கொஞ்சம் அந்த தத்வத்தைப் பார்க்கிறார்; அப்படியே பிரஹ்மனும் கொஞ்சம் எப்பொழுதாவது பார்க்கிறார்.

5. திருமூர்த்திகளுக்கும் பரமமான பிரஹ்மாத்ம ஐக்கிய விஷயமான எந்த ஞானம் உண்டோ, அதற்கு ஸாதகமான தத்வம் ஸாக்ஷியாகவிருப்பதால் கோசரமாக மாட்டாது (விஷயமாக யறியமுடியாது).

6. கேவலம் அந்த பரதத்வத்தின் பிரஸாதத்தால் தேவர்கள்கூட அதை அறிகிறார்கள்; அப்பொழுதும் பிரஹ்மமே ஸாதகமாயிருக்கிறது.

7. ஆதலால் பிரஸாதமடையும் பொருட்டு பரம சிரத்தை யுடன் ஹிருதய புண்டரீக மத்யத்திலிருக்கும் பரமதத்வத்தை தியானம் செய்யவேண்டியது.

8. திருமூர்த்திகளில் ருத்ரன் எப்பொழுதும் பிரீதியுடன் பரமகாரணரான சிவனை ஸாம்ப மூர்த்தியாகவே தியானிக்கிறார்.

9–11. திருமூர்த்திகளில் விஷ்ணுவும், பிரஹ்மனும், பிரஹ்ம விஷ்ணு மகேசுவரர்களுடைய விபூதி (ஐச்வரிய) ரூபர்களான தேவர்களும் பிரீதியுடன் இந்த பரமகாரணமான சிவனை ஸாம்ப மூர்த்தி ஆத்மாவாக தியானிக்கிறார்கள்.

12. ஸத் சித் ஆனந்த லக்ஷணமுள்ள ஸாம்பருடைய மூர்த்தியானது (ரூபமானது) நெய்க்கட்டிபோல சிவனுக்கு பேதமாக வில்லை (நெய்க்கு பேதமில்லாததுபோல); அந்த மூர்த்தி எப்பொழுதும் சிவனே.

13. பிரஹ்ம விஷ்ணு மகேசன் முதலியோர் சிவத்யான பரர்களாயிருந்தாலும் பரமாத்ம விபாகத்தில் சேர்ந்தவர்களே யன்றி ஜீவக்கூட்டத்தில் சேர்ந்தோர் அன்று.

14. பிரஹ்ம விஷ்ணு மகேச்வரர்களுடைய அவதார விசேஷங்களும் பரமாத்ம ஸம்பந்தமே ஒழிய ஜீவக் கூட்டத்தில் சேர்ந்த தன்று.

15. பரதத்வமான பரம் பிரஹ்மம், ஜீவாத்ம பரமாத்மாக்களின் உபாதி பேதத்தால் இரண்டாக விருப்பதாக இருக்கிறது.

16. ஜீவர்கள் புண்யபாபத்தால் சூழப்பட்டும், ராகத்வேஷ மலத்தால் பூசப்பட்டும், ஜன்ம நாசத்தால் இழிவு அடைந்தும் எப்பொழுதும் தன்வசமற்ற ஸம்ஸாரிகளாக விருக்கிறார்கள்.

17. பிரஹ்ம விஷ்ணு மகேச்வரர்களுக்கும், அப்படியே அவர்களின் அவதார விசேஷங்களுக்கும் புண்யபாபமில்லை.

18. பரதத்வத்தின் கட்டளையினால், ஜீவர்களின் நன்மையைக் கருதியும், இவர்களின் ஆவிர்பாவமும் (அவதார விளக்கமும்) திரோபாவமும் (மறைவும்) ஏற்பட்டிருக்கிறது.

19. ஸம்ஸாரிகளான ஜீவர்களால் முக்தியையும் புக்தியையும் உத்தேசித்து பிரஹ்ம விஷ்ணு ஹரர்களின் அவதாரங்கள் எப்பொழுதும் உபாஸிக்கப்பட வேண்டியவைகளாயிருக்கின்றன.

20. உபாஸிக்கப் படவேண்டிய தன்மையில் ஸமமாயிருந்தாலும் ஹரியைக்காட்டிலும் ஹரன் சிரேஷ்டர், ஸமமுமன்று, குறைவுமன்று; இதில் ஸந்தேகத்திற்கிடமில்லை.

21. ஹரனை, விஷ்ணுவுக்கும் பிரஹ்மனுக்கும் ஸமமாகவாவது, குறைவாகவாவது நினைக்கிறவர்கள் நரகாக்னியில் எரிந்து போவார்கள்.

22. ஹரனை ஹரி பிரஹ்மாதி தேவர்களைவிட மேலாக நினைப்பவர்கள் மகா கோரமான ஸம்ஸாரத்திலிருந்து முக்தியடைவார்களென்பதில் ஸந்தேகமில்லை.

23. முக்கியமாய் முமுக்ஷுக்களான யோகிகளால் எப்பொழுதும் ஹிருதய கமல மத்தியில் மூர்த்தித்வாரமாக பரதத்வத்தை தியானிக்க வேண்டியது.

24. ஹரி பிரஹ்ம முதலிய காரிய பூதங்களான தேவதைகள் அப்பிரதானமாக (முக்கியமில்லாமல், ஸாமான்யமாக) தியானிக்கத்தக்கவர்கள், முக்கியமாய் அன்று.

25. எல்லா ஐச்வரியங்களுடன் கூடியவரும், ஸர்வகாரணரும், ஸர்வேச்வரரும் சம்புவே தவிர விஷ்ணுவுமன்று, பிரஹ்மனுமன்று.

26. ஆதலால் முமுக்ஷுக்களால் முக்யமாய் அந்தக் காரணமான பிரஹ்மமே தியானிக்கத் தக்கது; கோடி காரியத்திலாழ்ந்த பிரஹ்ம விஷ்ணு மகேச்வரர்கள் தியானிக்கத்தக்கவர்களன்று.

27. எல்லா தேவர்களின் சிவத்தன்மையும் தங்கள் தங்கள் விபூதியை அபேக்ஷித்தே ஒழிய எப்பொழுதும் பர பிரஹ்மத்தைப்போல அன்று.

28. ஸம்பூர்ணமான சிவங்கரத்தன்மை பரமாத்மாவும், ஜகத்காரணரும், ஸாம்பமூர்த்தியை யுள்ளவருமான சிவனுக்கே உள்ளது.

29. ஆதலாலே பரமேச்வரரைத்தவிர பாக்கிதெய்வங்களை விட்டுவிட்டு அந்த சிவங்கரரான சிவனே முக்கியமாய் தியானிக் கத்தகுந்தவர்.

30. ஸாக்ஷாத் அம்பிகாபதியான பரசிவத்திற்குள்பட்டே (அதற்கு தாழ்வாக) எல்லாதேவர்களும் தியானிக்கத்தக்கவர்கள்; ஒருபொழுதும் முக்கியமாகவில்லை.

31. ஸர்வவேத உத்தமமானதும், ஸாத்வீயுமான அதர்வசி கோபநிஷத்தும், ஐதரேயமுதலிய மற்றுமுள்ள ச்ருதியும் இந்த அர்த்தத்தையே முடிவாகவுடையன.

32. எப்படி எல்லாவற்றைக்காட்டிலும் ஸாக்ஷாத் பரம் பிரஹ்மம் உயர்ந்ததோ (பிரதிஷ்டையுள்ளதோ) அப்படி அதர் வண வேதம் எல்லா ச்ருதிகளுக்கும் மேலானது.

33–35. (வைகரீ ரூபமாய் வெளிப்பட்ட) தாரம் (பிரண வம், துக்கத்திலிருந்து கடத்துகிறபடியால் தாரம்) ஒரு பெரிய விருக்ஷம்; (அதற்கு 'அ'காரம், 'உ'காரம், 'ம'காரம், பிந்து, நா தம், சக்தி, சாந்தம் என ஏழு அவயவங்கள் உள); (இதே பிரண வம் மூலாதாரத்தில் பராவாக் ரூபமாக இருந்து, இந்த விருக்ஷத் திற்கு) இந்த தாரமே கந்தம் (மூலம், கீழ்வேர்); பிந்து என்று சொல்லப்பட்ட அவயவமே கந்தத்தின் சக்தி (ஸாமர்த்தியம்); அகாரமுதலிய ஐம்பது வர்ணங்களும் இந்த பிரணவ மரத்திற்கு கொம்பு இலைகள்;

இந்த திருஷ்டாந்தம்போல, சகல ச்ருதிக்கும் பிரணவமே கந்தம் (மூலம்); ச்ருதி ஜாதி சக்தி (பிரணவத்திற்கு அதை உண் டாக்குகிற ஸாமர்த்தியம்; அதர்வண வேதம் விருக்ஷம்; ருக், யஜுஸ், ஸாமம் என்ற மூன்று வேதங்களும் ஸ்கந்த சாகைகள்; ஸ்மிருதி புராணங்கள் இலைகள்; கல்ப ஸூத்ர முதலிய அறு அங்கங்களும் வெளி ரக்ஷணைக்காக ஆவரணம் (வேலி); தர்க்கங் கள் வேலிக்கு வெளிவேலி; பரசிவரூபமான ஞானம் புஷ்பம்; பரமுக்தி பலம் என்று எண்ணப்படுகிறது.

36. வெகுவாய்ச் சொல்வதில் என்னபயன்; மற்ற தெய்வங்களை விட்டு மங்களத்தைச் செய்யக்கூடிய சிவனே புக்தி முக்தியின்பொருட்டு தியானிக்கத்தக்கவர்.

37. சுருக்கமாக வெகு ஸாரமானதெல்லாம் சொல்லப்பட்டது; நீங்கள் எப்பொழுதும் யத்னத்துடன் சிவத்யானம் செய்யவும்.

---

## அத்தியாயம் 7.

---

### (ரஹஸ்ய விசாரம்).

1. ஸூதர்:—ஹே! விப்ரர்களே! விஸ்தாரமன்னியில் சுருக்கமாக ரஹஸ்யத்தைச் சொல்லுகிறேன்; உத்தமமான ஸர்வஸித்தியடைய சிரத்தையுடன் கேளுங்கள்.

2. எல்லா தேகங்களிலும் (அந்தந்த தேகாவயவமான இந்திரியங்களை நியமனத்திற்காக, அதத‌தற்கு அபிமானிகளான) தேவதைகள் இருக்கிறார்கள்; இதற்கெல்லாம் காரணமான பரதத்வமும் இருக்கிறது.

3. பஞ்ச பூதங்களாலமைக்கப்பட்டதும், ஸ்தூலமானதும், ஆறு கோசங்களுள்ளதுமான (த்வக், அஸ்ருக், மாம்ஸம், மேதஸ் அஸ்தி, மஜ்ஜையென்ற ஆறு கோசங்கள்), இந்த தேகத்தில் பிரதிவி முதலிய கிரமமாக (பிரஹ்மன், விஷ்ணு, ஈசு, ருத்ரன், ஸதாசிவன் என்ற) ஐந்து தேவர்கள் அதிஷ்டானமாக விருக்கிறார்கள்.

4. (பரபிரஹ்மத்தின் காரியபூதமான குணமூர்த்திகளான) காரிய பிரஹ்மன் பிருதிவியிலும், காரியவிஷ்ணு ஜலாம்சத்திலும், காரியருத்ரன் அக்னி பாகத்திலும், பரமான ஈசுவரன் வாயு அம்சத்திலும், சரீரத்தின் ஆகாச அம்சத்தில் ஸாக்ஷாத் ஸதாசிவனும் எப்பொழுதும் இருக்கிறார்கள்.

5. சரீரத்தின் வெளிபாகத்தில் விராட் ஆத்மா எப்பொழுதும் இருக்கிறார்.

6–12. உள்பாகத்தில் (ஸூக்ஷ்ம சரீரத்தில்) ஸ்வராட் ஆத்மாவும், மத்தியில் (காரண சரீராபிமானி) ஸம்ராட் ஆத்மாவும் இருக்கிறார்கள் (இருக்கிறதாக தியானிக்க வேண்டியது); ஞானேந்திரியமென்ற ச்ரோத்திரமுதலியவைகளில் கிரமமாக திக், வாயு, சூரியன், வருணன், பிருதிவீ என்ற தேவதைகளும், கர்மேந்திரியங்களான பாதமுதலியவைகளில் கிரமமாக திருவிக்ரமன், இந்திரன், அக்னி, பிரஜாபதி, மித்ரன் என்ற தேவதைகளும், பிராணனில் ஸூத்ராத்மாவும், அந்தக்காணத்தில் பகவான் ஹிருண்யகர்பரும், அந்தக்காண அவஸ்தா பேதங்களான மனஸில் சந்திரனும், புத்தியில் பிரஹஸ்பதியும், அகங்காரத்தில் காலாக்னி ருத்ரரும், சித்தத்தில் சிவனும், ரோமங்களில் கெட்ட தேவதைகளும், அஸ்திகளில் பூதபிரேதங்களும், ஸ்நாயுவில் பிசாச ராக்ஷஸர்களும், மஜ்ஜையிலும் த்வக் மாம்ஸ ரக்தத்திலும் பிதிரு கந்தர்வர்களும் இருக்கின்றார்கள்.

13. திருமூர்த்திகளில் ஒருவரான பிரஹ்மனுடைய கோரமான (பயங்கரமான) சரீரம் ஜந்துக்களில் உள்பாகமான வலது கண்ணிலும், சூர்யனுக்கு வெளிபாகத்திலும் இருக்கிறது (இருக்கிறதாக தியானிக்கவேண்டும்).

14. அவருடைய சாந்தமான சரீரம் இடைக்கண் உள்பாகத்திலும், சந்திரனுக்கு வெளியிலும் இருக்கிறது.

15. திருமூர்த்திகளுள் விஷ்ணு எப்பொழுதும் கண்டத்தில் (கழுத்தில்) இருக்கிறார்; உள்ளே சாந்த சரீரமும், வெளியில் கோரதனுவுமிருக்கின்றன.

16. ருத்ரன் எப்பொழுதும் ஹிருதயத்திலிருக்கிறார்; உள்ளே சாந்த சரீரமுடையவராகவும், வெளியில் கோரதனுவுடையவராகவுமிருக்கிறார்.

17. எல்லாவற்றிற்கும் காரணமானதும், ஸத்யாதி லக்ஷணமுடையதுமான பிரஹ்மம் மகாஸ்தானமாகிய பிரஹ்ம ரந்திரத்தில் (தலை உச்சி ஓட்டையில்) எப்பொழுதுமிருக்கிறார்.

18. (அந்த பிரஹ்மத்தின் ஸ்வரூப பூதமான சேத்யத்திற்கு பிரதியோகியான) சித்சக்தி தேகமத்தியத்தில் (மூலாதாரத்தில்) ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது; (ஸத்வ ரஜஸ் தமோகுணமுள்ள) மாயாசக்தி பிரஹ்ம ரந்திரத்திற்கு கீழ் லலாட (நெற்றி) முன்பாகத்தில் இருக்கிறது.

19. நாதரூபமான பராசக்தி (சப்த பிரஹ்மமான சக்தி) லலாட மத்தியில் இருக்கிறது; பிந்து ரூபமான சக்தி கீழ்பாகமான புருவமத்தியிலிருக்கிறது.

20. பிந்து மத்தியத்தில் ஜீவாத்மா ஸூக்ஷ்ம ரூபமாகவும், ஹிருதயத்தில் ஸ்தூலரூபமாகவும், நடுவில் மத்யம ரூபமாயும் இருக்கிறான்.

21. ஸர்வ வித்யைகளையும் அளிக்கும் பிரஹ்ம பத்னியான ஸரஸ்வதீதேவீ எப்பொழுதும் நாக்கு நுனியிலிருக்கிறாள்,

22. விஷ்ணுபத்னியான மகாலக்ஷ்மீ அனுஹதத்தில் (ஹிருதய மத்திய ஸ்தானத்தில்) எப்பொழுதும் இருக்கிறாள், ருத்ர பத்னியான பார்வதீயும் ருத்ரனுடனிருக்கிறாள்.

23. ஸாக்ஷாத் ஸாம்பரும், ஸநாதனரும், ஸத்யாதி லக்ஷணமுடையவரும், சுத்தரும், எல்லா தேவர்களாலும் நமஸ்கரிக்கப்பட்டவருமான சிவன் எங்கும் இருக்கிறார்.

24. நல்ல ஞானமுள்ளவர்களுடைய தேகத்தில் இந்த தேவர்களெல்லாம் பிரத்யக் ஆத்மாவாகவும், தேவதா ரூபமாகவும் விளங்குகிறார்கள்.

25. வேதமார்க்கத்திலிருப்பவர்களும், சுத்தமானவர்களுமானவர்களின் (அக்ஞானிகளின்) தேகத்தில் தேவதா ரூபமாக விளங்குவார்கள், பிரத்யக் ஆத்மாவாக விளங்கார்கள்.

26. தாந்திரர்களின் சரீரத்தில் இந்த தேவதைகள் எல்லாம் இருக்கிறார்கள்; (ஆனால்) சுத்தியில்லாதபடியால் விளங்குகிறார்களில்லை.

27. அக்ஞானிகளான ஜனங்களின் சரீரத்தில் எல்லா தேவர்களும் மறைந்தேயிருக்கிறார்கள்.

28. ஆதலால் போகமோக்ஷ மிச்சிப்பவன் விசேஷமாக தேவதாமயமான தனதும் பிறருடையதுமான சரீரத்தை பூஜிக்க வேண்டும்.

29. மனிதன் (ஒருவனை) மோகத்தாலாவது அவமானம் செய்யக்கூடாது; அப்படி பிரமாதத்தால் செய்தால் பவஸமுத்திரத்தில் விழுவான்.

30. கெட்டவனாயிருந்தாலும், மூர்க்கனாயிருந்தாலும் தேவதாத்மாவாக பூஜிக்கவேண்டியது; தேவதா ரூபமாக பார்த்தால் பவபந்தத்திலிருந்து விடுதலையுண்டு.

31. மோஹத்தால் கூட பிரியமற்றவார்த்தையை பேசக்கூடாது; பிரமாதத்தால் அப்படிச்செய்கிறவனை இந்த பரமான தேவதைகள் நாசஞ்செய்வார்கள்.

32. சரீரத்தில் அஸ்திர சஸ்திர நகத்தால் காயமாவது, ரக்தம் வெளிவரும்படியாவது செய்யக்கூடாது; அப்படி செய்தால் கீழேவிழுவான்.

33. தன்தேகத்திலாவது மற்றவர்களின் தேகத்திலாவது அடையாளங்கள் செய்யக்கூடாது; சக்கிரமுதவியவைகளால் அவ்விதம் செய்தால் கீழே விழுவான் என்பதில் ஸந்தேகமில்லை.

34. சுருக்கமாக எல்லா சாஸ்திரங்களின் ரஹஸ்யம் என்னால் சொல்லப்பட்டது; தேவதாரூபமான சரீரத்தை நீங்கள் பஜியுங்கள் (எல்லா சரீரங்களிலும் தேவதாமயத்தன்மையை சிந்திக்கவேண்டும்).

---

## அத்தியாயம் 8.

---

### (ஸர்வவேதாந்த சங்கிரகம்).

1. ஸூதர்:—இனி சுருக்கமாக ஸர்வவேதாந்த ஸங்கிரஹத்தைச்சொல்லுகிறேன்; இதை யறிந்தால் மனிதன் நிர்வாணமடைவான்.

2. ஸத்யாதி லக்ஷணமுடைய சிவன் பாதத்தைக்காட்டிலும் பரமான தத்வம்; அவருடைய அஸாதாரணமான (விசேஷ) மூர்த்தி, அம்பிகையுடன் எப்பொழுது மிருப்பதே (அர்த்த நாரீச்வரர்; சிவசக்தியாத்மகமான பரசிவஸ்வரூபம்).

3. ஸ்வஸ்வரூபமஹாநந்தத்தால் சந்தோஷமடைந்த தாண்டவபிரியர், சிவன் என்ற நாமங்களெல்லாம் இவருடையபெயர்களே.

4. பிரஹ்ம விஷ்ணு ருத்திரர்கள் பாதத்வத்தின் விபூதிகள் (மகிமைகள்) ; பிரஹ்மனேயும் விஷ்ணுவையும் விட ருத்ரன் மேலானவர்.

5. ஸம்சாரகாரணம் மாயை ; அவள் எப்பொழுதும் ஸத்தைக்காட்டிலும் வேறுலக்ஷணமுடையவள் (ஸத்தன்று); அவளுக்கு ஸத்பாவம் தோற்றத்தால் மட்டும் தான், பிரமாணத்தால் அறியப்போனுல் அவளுக்கு இருப்பு இல்லை.

6. அவளும் வாஸ்தவத்தில் பிரஹ்மத்திற்கு வேறாகவிருப்பதாக காணப்படவில்லை ; தத்வஞானத்தால் மாயைக்கு பாதம் (நாசம்) ஏற்படுகிறது; கர்மத்தால் இல்லை.

7. வேதாந்த வாக்கியத்தா லுண்டாகிறதும், பிரஹ்மாத்ம ஐக்கியத்தை விஷயஞ்செய்வதுமான ஞானம் தேவபிரஸாதத்தாலும், குருகடாக்ஷத்தாலும், சக்திவிழுவதாலும், வேதாந்த வாக்கியத்தாலும் அதிகாரிகளுக்கு உண்டாகிறது.

8–10. ஞான இச்சைக்கு காரணம், தானம், பற்பல யக்ஞங்கள், தபஸ், வேதம் வேதாந்தம், புராணம், ஸ்மிருதி, பாரதம், வேதாகமங்கள் இவைகளின் படிப்பும், படிப்பிவிப்பதுமாம் ; வேதார்த்த மறிவதில் முயற்சியும், வேதபாஹ்ய விஷயத்திலும் எல்லா லோகவியவஹாரங்களில் உபேக்ஷயும் ஞான இச்சைக்குக் காரணம்.

11–15. சாந்தி தாந்தி முதலிய தர்மங்கள் ஞானத்திற்கு அங்கங்கள் ; ஸமஸ்தமான ஞானங்கங்களிலும் பக்தியுடன் விந

கத்தில் சிவார்ச்சனமும், சிவபிரதிஷ்டையும், சிவஸ்தலதரிசனமும், சிவபக்தர்களைப்பூஜிப்பதும், சிவபக்தியும், காது, கழுத்து, அல்லது கையில் ருத்ராக்ஷம் பக்தியுடன் தரிப்பதும், 'அக்னி' என்ற மந்திரத்தால் பஸ்மம் பூசிக்கொள்வதும் நெற்றிமுதலிய விடங்களில் திருபுண்டாம் தரிப்பதும், வேதவேதாந்தநிஷ்டரான கருணையுடைய குருவினுடைய சிஷ்ருஷையும் உயர்ந்ததென்று சொல்லப்படுகின்றது.

16–18. சின்மந்திரம், பதமந்திரம், ஹம்ஸ மந்திரம், ஷடக்ஷரம், பிரணவம் இவைகளின் மனோஜபம் உயர்ந்தது; அவிமுக்தம் (காசி) என்றஸ்தானமும், வியாக்ரபுரமும், சோபனமான தக்ஷிண கைலாஸமும் மேலானவை; வேறுமார்க்கத்தில் சொல்லப்பட்ட ஆசாரத்தைவிட ஸ்மார்த்ததர்மம் மேலானது; ஸ்மார்த்தத்தைவிட ச்ரௌததர்மம் மேலானது; ச்ரௌததர்மத்திற்கு மேலானது ஒன்றையும் காணவில்லை.

19. இந்திரியங்களுக்கு மேற்பட்ட பரமகாரணமான சிவ விஷயத்திலும் தர்மமுதலியவைகளிலும் ச்ருதியே எப்பொழுதும் பிரமாணம்; ஸ்மிருதி அந்த ச்ருதியை பின்பற்றி யிருக்கிறது.

20. எல்லா தர்மத்திற்கும் ஆஸ்திக்யம் (வேதத்திலும் தெய்வத்திலும் நம்பிக்கை) வேராக (மூலமாக) விருக்கிறது; இந்த மூலத்திற்கும் நிந்திக்கப்பட்ட கர்மங்களை விடுதலே காரணமாயிருக்கிறது.

21. 'சிவனே எல்லாம்' என்ற ஞானம் எல்லா ஞானத்தைக்காட்டிலும் மேலானது; அதற்கு சமானமாகவாவது, மேலாகவாவது ஒன்றும் காணப்படவில்லை.

22. வெகு சிரத்தையுடன் சொல்லவேண்டியதெல்லாம் என்னால் சொல்லப்பட்டது; இதற்குமேல் சொல்லக்கூடியது ஒன்றிருப்பதாக எனக்குத் தெரியவில்லை.

23. இவ்விதம் ஞானிகளான முனிகளுக்கு சொல்லிவிட்டு ஸூதபகவான் ஸர்வேச்வரரான ஸாம்பனை தியானித்துக்கொண்டு, பக்தியால் பரவசமானுர்.

24. பிறகு பரசிவபக்தியால் ஆத்மரூபமாக சத் சித் ஆனந்த பூர்ணமான பரசிவத்தை அனுபவித்து, கருணாநிதியாக ஸூதர் முனிக்கூட்டத்தைப்பார்த்து லோகிதரூபமான அறியவேண்டிய தை கொஞ்சம் சொல்ல ஆரம்பித்தார்.

25. ஸர்வவித்தும் குருக்களுக்கெல்லாம் குருவான ஸர்வேச்வரனுமான சம்பு, ச்ருதிமார்க்கத்திலிருந்து நழுவின மனிதர்களுக்கே தந்திரம் என்றும், ச்ருதிமார்க்கத்தில் இருப்பவர்களுக்கு அதில் (தந்திரத்தில்) ஒன்றுமில்லை யென்றும் சொன்னுர்; இதில் ஹிதகரமானதும், எல்லாம் பூர்ணமாகவும், ஸத்யமும் சொல்லப்பட்டது.

26. ச்ருதியும் மனிதர்களுக்கு வர்ணதர்மத்தை சொல்லியிருக்கிறது; கருணையுடைய பரகுருவான ஈசனும் தந்திரங்களில் ச்ருதிமார்க்கத்தி லில்லாதவர்களுக்கு வர்ணதர்மத்தை சொல்லியிருக்கிறுர்; அதை ச்ருதிமார்க்கத்தி லிருப்பவர்கள் ஸேவிக்கக்கூடாது.

27–28. ச்ருதியில் சொல்லியதுபோல தந்திரத்திலும் ஆச்ரமங்கள் சொல்லப்பட்டிருக்கிறது; விஷ்ணுவும் ச்ருதி மார்க்கத்தில் இல்லாதவர்களுக்கு தன்னுடைய தந்திரத்தில் சொல்லியிருக்கிறுர்; பிரஹ்மனும் அப்படியேசொல்லி யிருக்கிறுர்; இவையெல்லாம் ச்ருதிமார்க்கத்திலிருப்பவன் அனுஷ்டிக்கவேண்டியதில்லை; ச்ருதிமார்க்கத்திற்கு ஸமானம் ஒன்றுமில்லை ஸத்யமாய் என்னுல் சொல்லப்படுகிறது.

29. ச்ருதிமார்க்கத்தில் உள்ளவர்களுக்கு வேதோக்த பூஜையும், இல்லாதவர்களுக்கு தந்திரபூஜையும் சொல்லப்பட்டிருக்கிறது.

30. இவ்விதமே ச்ருதியில் சொல்லப்பட்ட லிங்கம் வேத மார்க்கத்தில் உள்ளவர்களாலும், தந்திரங்களில் சொல்லியது தந்திரர்களாலும் தரிக்கப்படவேண்டியது.

31. சிவாகமத்தில் சொல்லிய ஆசிரமநிஷ்டன் திரிபுண்டர லிங்கத்தை எப்பொழுதும் தரிக்கவேண்டியது; அதற்கு சொல்லப்பட்ட மந்திரத்துடன் நெற்றியில் பஸ்மத்தால் தரித்துக் கொள்ளவேண்டியது.

32. விஷ்ணுவாகமத்தில் சொல்லிய ஆசிரம நிஷ்டர்கள் ஊர்த்துவபுண்டரத்தையும், திருசூலரூபமாவது, நான்குமுகமுடைய ரூபமாவது மண்கட்டியால் நெற்றியில் எப்பொழுதும் தரிக்கவேண்டியது.

33. அப்படியே பிரஹ்மாகமத்தைப் பின்பற்றியவர் மண்டலாகாரமாக பஸ்மத்தாலாவது, மண்ணாலாவது, சந்தனத்தினாலாவது தரிக்கவேண்டியது.

34. புத்தாகமஸ்தர்கள் அச்வத்தபத்ரத்திற்கு ஸமமாக ஹரி சந்தனத்தால் தரித்துக்கொள்ளவேண்டியது.

35. (ஜைனர்கள்) பஸ்மத்தாலாவது, மண்ணாலாவது மூன்று ஊர்த்துவபுண்டரம் லலாடத்திலும், மார்பிலும், கைகளிலும் தரிக்கவேண்டியது.

36. எல்லா ஆகமநிஷ்டர்களும் வெண்ணிறமான பஸ்மத்தால் திரியக் திரிபுண்டரம் தரித்தால் சோபனமாயிருக்கும்.

37. சிவாகமத்தை சார்ந்தவர்கள் திருயக் திருபுண்டரம் ஒன்றே தரிக்கவேண்டியது.

38. வேதோக்த மார்கத்திலிருப்பவர்கள் லலாடத்தில் வேதமந்திரத்துடன் திருயக்திருபுண்டரம் தரிக்கவேண்டியது.

39. மோஹத்தாலாவது வேறுவிதமாய்ச்செய்தால் நரகமடைவான்.

40. சங்கு, சக்கரம், கதை முதலிய அடையாளங்கள் விஷ்ணு தாந்திரிகளால் செய்யப்படவேண்டியது, மற்றொருவரும் செய்யக்கூடாது.

41. தந்திரத்தில் தீக்ஷைபெற்றவர்களுக்கு இந்த அடையாளம் தரிப்பதுகிரமமாய் உபயோகமாயிருக்கும்.

42. தந்திரங்களில் வேறுபுண்டரதாரணம் கிரமமாக உபயோகப்படும்.

43. வேதமார்க்கத்திலுள்ளவர்கள் பிரமையாலும் அடையாளங்கள் செய்துகொள்ளக்கூடாது.

44. அவர்கள் லலாடத்தில் மோகத்தாலேனும் வேறுபுண்டரம் தரிக்கக்கூடாது.

45. தந்திரோக்தமான பிரதிஷ்டைசெய்யப்பட்ட தேவதைகள் வைதிகர்களாலும் சேவிக்கத் தகுந்தவர்கள்.

46. எங்கும் தேவதாரூபம் சுத்தமே; தந்திரபூஜை தாந்திரீகர்களுக்குதான் கேவலமாயுள்ளது.

47. தந்திரதீக்ஷைபெற்றவன் வைதிகமார்கத்தைத் தொடக்கூடாது; வைதிகர்களும் தந்திரதீக்ஷையை தொடக்கூடாது.

48. ராஜாவும் எல்லாவைதிகர்களையும், தாந்திரர்களையும் கலப்பன்றியில் ஸ்தாபனம் செய்யவேண்டியது.

49. அன்னபானவஸ்திரங்களால் எல்லோரையும் ராஜா ரக்ஷிக்கவேண்டியது; விசேஷமாக வைதிகர்களையும், ஞானிகளையும் ரக்ஷிக்கவேணும்.

50. ச்ருதியிலும் ஸ்மிருதியிலும் சிவஞானத்திற்கு ஸமானமான ஞானம் இல்லாததுபோல தந்திரர்களுக்குள் வைதிகனுக்கு ஸமானமில்லை.

**51–56.** எப்படி காசிக்கு ஸமானமான க்ஷேத்திரமில்லையோ, ஷடக்ஷரத்திற்கு ஸமானமான மந்திரமில்லையோ, பாகீரதீ நதிக்கு ஸமானமானதில்லையோ, அன்னத்திற்கு ஸமானமான பேஜ்யமில்லையோ அப்படி வைதிகனுக்கு ஸமானமாய் இல்லை. தேவதேவனான மகாதேவன் எப்படி எல்லோராலும் பூஜிக்கப்படுகிறரோ அப்படி வைதிகமார்க்கஸ்தன் எல்லோராலும் பூஜிக்கத் தகுந்தவன்.

**57.** சூரியனில்லாவிடில் எப்படி ஜகத் அந்தகாரத்தையடையுமோ அப்படி வைதிகமல்லாத ஜகத் அந்தமாய்விடும்.

**58.** பிராண இந்திரயமுதலியதற்ற சரீரம் எப்படி புழுக்களுக்கு இரையாகுமோ அப்படி வைதிகமில்லாத ஜகத் வியர்த்தமாய் போகும்.

**59.** ஆச்சரியம்! வைதிக மகிமையை என்னால் சொல்ல முடியாது; வேதமொன்றே அந்த பெருமையைக் கூறுகிறது.

**60.** ஸ்மிருதி புராணங்கள், பாரதமுதலியவை வைதிக மகிமையை எப்பொழுதும் கூறுகின்றன.

**61.** எல்லா தாந்திரிகர்களும் வேதத்தில் சொல்லியதை ஸ்வீகரிக்கிறார்கள்; தந்திரத்தில் சொல்லியதால்மட்டும் ஜீவிக்கிறதில்லை; வேதமே எப்பொழுதுமுள்ளது.

**62.** இப்படி சொல்லிவிட்டு ஸூதபகவான் தனது குருவான வியாஸரை ஸ்மரித்து, வசமற்றவராய் தண்டம்போல் பூமியில் விழுந்தார்.

**63.** இந்த சமயத்தில் ஸத்யவதீ புத்ரரான வியாஸரும் சிஷ்யனுடைய ஸ்மிருதியான அங்குசத்தால் இழுக்கப்பட்டவராக தானகவே அங்கு தோன்றினர்.

**64–65.** அவரைப்பார்த்து எல்லாமுனிகளும் தழைதழைத்த பேச்சுடனும், சேஷ்டையன்றியும் பூமியில்விழுந்து நமஸ்கரித்து, ஸ்தோத்திரம்செய்து, வன்ய புஷ்ப பலங்களால் பூஜித்தார்கள்.

66. கருணைக்கடலான பகவானும் முனிகளைப்பார்த்து மதுரமான வாக்கியத்தை சொல்லத்தொடங்கினர்.

67. வியாஸர்:—முனீந்திரர்களுக்கு மங்களமிருக்கட்டும்! ஒருபொழுதும் அமங்களம்வேண்டாம்! என்ன பாக்கியம்! என்னால் வர்ணிக்க முடியவில்லை.

68–75. பாக்கியவந்தர்களான முனிகளே! கேளுங்கள்! முன்காலத்தில் பிரபுவான ருத்ரனுடைய கிருபையால் எல்லா புராணங்களுக்கும் நான் கர்த்தாவானேன்; என்னுடைய பிரஸாதத்தால் இந்த ஸூதரும் ருத்ரபக்தரானர்; ருத்ரனுடைய ஆக்ஞா பலத்தாலும் அவருடைய கருணையாலும் புராண ஸம்ஹிதை கர்த்தாவாகவும், தேசிகராகவும் சீக்கிரத்தில் ஆனர்; முன்செய்த புண்யத்தால் நீங்களும் சிவாக்ஞையால் ச்ருதி அர்த்தங்களை ஸூதரிடம் கேட்டீர்கள்; ருத்ர பிரஸாதத்தால் எதுதான் முடியாது; கேவலம் சம்பு ஆக்ஞையால் வேதார்த்த ஞானம் ஸம்பூர்ணமாய் என்னால் அடையப்பட்டது; வேதாந்த வாக்கியார்த்த நிச்சயம் செய்வதில் ஸமர்த்தானேன்; ஸூத்ர ஆரம்பத்திலும் பிரவிருத்திக்கப்பட்டிருக்கிறேன்; தேவதேவனுடைய ஆக்ஞையால் உங்களுக்கும் ஞானவிஷயத்தில் குருவுக்கு குருவானேன்; நீங்களும் வேதஸித்தமான சிவஞானத்தில் சிரத்தையுடன் எப்பொழுதும் நிலைபெற்றிருங்கள்.

76. பகவான் வியாஸர் இப்படிச்சொல்லிவிட்டு தன்னுடைய சிஷ்யனை தூக்கியெடுத்து, ஆலிங்கனம்செய்து, தேவேசனை ஸ்மரித்து, நமஸ்கரித்துவிட்டுச் சென்றார்.

77. மறுபடியும் ஸர்வக்ஞரான ஸூதர் தன்னுடைய சிஷ்யர்களை கடாக்ஷித்து கம்பீரமான வாக்குடன் 'உங்களுக்கு மங்களமிருக்கட்டும்' என்று சொன்னர்.

78. என்னுடைய பரமான கீதை எவனால் படிக்கப்படுகிறதோ அவனுக்கு ஆயுஸ், ஆரோக்கியம், ஐச்வரியம், ஞானம் எல்லாம் உண்டாகும்.

**79.** சிவப்பிரஸாதம் சுலபமாய் கிடைப்பதில் ஸந்தேகமில்லை; மனிதர்களுக்கு குருத்தன்மையும் உண்டாகும்.

**80–82.** ஸர்வலோக மாதாவின் பக்தியாலும் அவளுடைய கிருபையாலும், குரு பிரஸாதத்தாலும், சிவப்பிரஸாதத்தாலும், விநாயக, ஷடானனர் பிரஸாதத்தாலும் எல்லா வேதங்களையும் கடைந்து இந்த யக்ஞவைபமென்றது என்னால் செய்யப்பட்டது; இதில் பரமான முக்தி ஸ்திரமாயிருப்பதில் ஸந்தேகமில்லை.

**83.** இந்த சிரேஷ்டமான யக்ஞவைபவ கண்டத்தை படிக்கிறவன் ஸத்யஞான ஸுலக்ஷணமுடைய சிவனை ஸத்யமாக சீக்கிரத்தில் அடைவான்.

**84.** என்னால் சொல்லப்பட்ட இந்த சிரேஷ்டமான கீதை எல்லா துக்கத்தையும் போக்கடிக்கும், முக்தியைக் கொடுக்கும், சிவப்பிரஸாதமளிக்கும், ஸமஸ்த வேதஸாரமுள்ளது; மிகச் சோபனமாய் நிர்மாணிக்கப்பட்டிருக்கிறது; மகத்தான அனுபவமுள்ளவர்களால் ஆதரிக்கப்படுகிறது.

**85.** இந்த ஸம்ஹிதை விஷயத்தில் ஏதாகிலும் விருத்தப்பட்டால் அது அநர்த்தமாகும்; ஞானத்திற்கு பிரயோஜனப்படாது; ச்ருதி பிரமாண ரூபம் இந்த ஸம்ஹிதை; பெரியோர்களுக்கு எப்பொழுதும் ச்ருதியே பிரமாணம்.

**86.** இந்த ஸம்ஹிதையை படிக்கிறவன் ஜன்மமடையமாட்டான், பரமான சங்கரனையடைவான்; ஆதலால் தனது மோக்ஷத்தின்பொருட்டு ச்ருதி பிரமாணமாகப் படிக்கவேண்டும்.

**87.** இந்த ஸம்ஹிதையை பிரியத்துடன் கேட்கிறவன் மறுபடியும் ஜனிக்கமாட்டான், சங்கரனை யடைவான்; பரமான அத்வய அனுபவமும் உண்டாகும்; வாக்கில் சிவையும் தாண்டவம் செய்வாள்.

**88.** ஸத்யபூர்ண லக்ஷணமுடையதும், தத்வமர்த்த விபவமும், ஸநாதனரும், ஸத்ஸ்வரூபமும், அசுபத்தை நசிக்கச்செய்ப

வரும், பக்தியாலடையப்படுகிறவரும், நிர்மலமான சிவனை எப்பொழுதும் நமஸ்கரிக்கிறோம்.

89. எவன் நிர்மலமான அனுபூதியோ, எப்பொழுதுமுள்ளவனோ, வேதபிரமாணத்தால் அறியக்கூடியவனும், கேசவாதி ஜனங்களால் ஸேவிக்கப்பட்டவருமான சிவையை நமஸ்கரிக்கிறேன்.

90. வேதபத்ம நிகரத்திற்கு சூரியனும், தேவதேவனுக்கு ஸமானமானவரும், கருணாநிதியும், குருவுமான வியாஸரை நமஸ்கரிக்கிறோம்.

91. எந்தமகாபுருஷர்கள் வேதவேதாந்த தனத்தையுடையவர்களோ, சிவாபிமான மொன்றால் பாபமற்றவர்களோ பவசர்ப்பவேகத்தைத் தடுக்கின்ற அவர்களை நான் சிரஸாலும், வாக்காலும் மனஸாலும் நமஸ்கரிக்கிறேன்.

ஸூதகீதை முற்றிற்று.

நான்காம் கண்டம் முற்றிற்று.

---

சூதஸம்ஹிதை முற்றிற்று.

ஓம் தத் ஸத்.


ஸமஸ்து.

